உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# திருப்புகழ்

(விரிவுரையுடன்)

ஐந்தாம் தொகுதி

## குன்றுதோருடல்

ஐந்தாவது படைவீடு

(முற்பகுதி)

*[கயிலைமலை, ஸ்ரீசைலம், திருவேங்கடம், திருத்தணிகை, வள்ளிமலை, திருக்கழுக்குன்றம், பேறைநகர், மயிலம், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, இரத்னகிரி ஆகிய பதின்மூரு ஸ்தலங்கள்.]*

உரையாசிரியர் :
கிருபானந்தவாரியார்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

வானதி முதற் பதிப்பு : நவம்பர், 1988

திருநாவுக்கரசு தயாரிப்பு

## சமர்ப்பணம்

இத் திருப்புகழ் உரைவள நூலினை எம் பரமகுருநாதர் அருணகிரி நாதப் பெருந்தகைக்கு அர்ப்பணிக் கின்றேன். அவர் இதனை இன்னும் இனிதாக்கி ஆறுமுகப் பெருமானது அடிமலர்கட்கு அணிவிப்பாராக.

கிருபானந்தவாரி

விலை ரூ. ·/-

குருகுலம் பிரிண்டர்ஸ், வேதாரண்யம்.

உ

முருகா

# முன்னுரை

முருகப்பெருமான் ஒருவரையே பாடும் பரமபதிவிரத திலேயையுடைய பரமகுருநாதராகிய அருணகிரிநாதர் உலகம் உய்யப் பாடிய தெய்வத் தமிழ் திருப்புகழாகும்.

இது பிறவிப் பிணியை மாற்றும் மருந்தென உணர்க.

அருணகிரிநாதர், மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூர்கம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறுதாரங்களேயும் ஆறுபடை வீடுகளாக அமைத்துப் பாடியருளினர்.

குன்றுதோருடல், விசுத்தி என்ற ஐந்தாவது படைவீடு ஆகும். அதி அற்புதமான சந்தங்களே யுடையதாய் பரமவேத வேதாந்த நுண்பொருள்களே யுடையதாய் திகழ்வது இப்பாடல்கள்.

இப்பாடல்களுக்கு திருவருள் துணை புரியச் சிறியேன் உரை எழுதி வெளியிட்டேன். அந்த நூல் இப்போது கிடைப்பது அரிதாகிவிட்டது.

தமிழையும் சைவத்தையும் இரு கண்களாகக் கொண்டு பல காலமாக, நல்ல நூல்களே வெளியிடு கின்ற நற்பணியை மேற்கொண்ட சென்னை வானதி பதிப்பகம் திரு ஏ. திருநாவுக்கரசு அவர்கள் இப்போது இந்தக் குன்றுதோருடல் என்ற பகுதியை அச்சிட்டு அடியார்க்கு அமுது விருந்தாக வழங்குகின்ருர்.

இந்த நூல் ஐந்தாம் படைவீட்டுத் திருப்புகழ் முற்பகுதியாக வெளிவருகின்றது.

இது முருகனடியார்க்கு பவப்பிணியை மாற்றும் அருமருந்தாகும்.

இதனை ஏனேரும் வானேரும் போற்றப் பெரு வாழ்வு பெற்று உய்வார்களாக.

அன்பன்,

கிருபானந்தவாரி.

# உள்ளுறை

# பாட்டு முதற் குறிப்பு அகராதி



பக்கம்

## வரலாறுகள்



அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருத்தணி

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழ் விரிவுரை

## குன்றுதோறாடல்

### கயிலைமலை

1

தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும்ப ழித்த சிவ மருளூறத்
தீதும்பி டித்தவினை யேதும்பொடித்துவிழ
சீவன்சி வச்சொருப மெனதேறி

நானென்ப தற்றுயிரொ டுனென்ப தற்றுவெளி
நாதம்ப ரப்பிரம வொளிமீதே
ஞானஞ்சு ரப்பமகி ழாநந்த சித்தியொடெ
நாளுங்க ளிக்கபத மருள்வாயே

வானந்த ழைக்கஅடி யேனுஞ்செ ழிக்க அயன்
மாலும்பி ழைக்க அலை விடமாள
வாருங்க ரத்தனெமை யாளுந்த கப்பன்மழு
மானின்க ரத்தனருள் முருகோனே

தானந்த னத்ததன னாவண்டு சுற்றிமது
தானுண்க டப்பமல ரணிமார்பா
தானங்கு றித்துஎமை யாளுந் திருக்கயிலை
சாலுங்கு றத்திமகிழ் பெருமாளே.

#### பதவுரை

அலைவிடம் மாள = கடலில் தோன்றிய ஆல்கால விடத்தின் வலிமை யழிய, வாரும் கரத்தன் = வாரி யெடுத்த திருக்கரத்தை யுடையவரும், எமை ஆளும் தகப்பன் = அடியேங்களாகிய எங்களை ஆட்கொள்ளும் பரம பிதாவும், மழு மானின் கரத்தன் = நெருப்பையும் மானையும் ஏந்திய திருக்கரத்தை யுடையவரும் ஆகிய சிவபெரு

மான், வானம் தழைக்க = விண்ணுலகம் தழைத்து ஓங்கும் பொருட்டும், அடியேனும் செழிக்க = அடியேன் சிவநலம் பெற்று இன்புறுதற் பொருட்டும், அயன் மாலும் பிழைக்க = பிரமதேவரும் நாராயண மூர்த்தியும் சூரபன்மனால் அழியாது உய்யும் பொருட்டும், அருள் = பெற்றருளிய, முருகோனே = முருகக் கடவுளே! தானந்தனத்த தனனு = தானந் தனத்த தனனு என்று ரீங்காரஞ் செய்து, வண்டு சுற்றி = வண்டானது வட்டமிட்டு, மது தான் உண் = தேனைப் பருகுகின்ற, கடப்பமலர் = கடப்ப மலரை, அணி மார்பா = தரித்துக் கொள்ளுகின்ற திருமார்பை யுடையவரே! எமை ஆளும் = அடியேங்களை ஆட்கொள்ளுகின்ற, தானம் குறித்து = இடமாகக் குறித்து, திருக்கயிலைசாலும் = தெய்வீகமுள்ளகயிலைமலைமேல்எழுந்தருளியுள்ள, குறத்தி மகிழ் = வள்ளிநாயகியார் உவக்கின்ற,பெருமாளே = பெருமையின் மிக்கவரே! தேன் = நல்ல தேன், உந்து முக்கனிகள் = உயர்ந்த மா பலா வாழை என்ற மூவகைப்பட்ட பழங்கள், பால் = ஆவின் பால், செம் கருப்பு = சிவந்த கரும்பு, இளநிர் = இளநீர், சீரும் = இவைகளின் இனிமைகளின் சிறப்பையும், பழித்த = தனது ஒப்புயர்வற்ற தனிப் பெரும் இனிமையால் தாழ்மைப் படுத்துகின்ற, சிவம் அருள் ஊற = மேலான சிவத்தின் திருவருள் ஊற்றெடுத்துப் பெருகவும், தீதும் பிடித்தவினை ஏதும் = நன்மையோடு தீமையும் கலந்த வினைகள் முழுவதும், பொடித்து விழ = தூள்பட்டு ஒழியவும், சீவன் சிவசொருபம் என தேறி = இந்த ஜீவன் சிவவடிவாக விளங்குகின்றது என்பதைத் தெளிந்தும், நான் என்பது அற்று = அசங்காரத்தை யொழித்தும், உயிர் ஒடு ஊன் என்பது அற்று = உயிர்ப்பற்று உடற்பற்று என்ற இரண்டையும் ஒழித்தும், வெளி நாதம் பரப்பிரமம் ஒளிமீது = பரவெளியிலுள்ள அருள் நாதத்தோடு கூடிய பரஞ்ஜோதியில், ஞானம் சுரப்ப = சிவஞானம் பெருகிவரவும், மகிழ் ஆநந்த சித்தி ஓடு = உள்ளத்திலும் உணர்விலும் தித்திக்கின்ற சிவானந்த மோட்சத்தில், நாளும் களிக்க = அடியேன் எந்நாளும் மகிழ்ந்திருக்குமாறு, பதம் அருள்வாயே = தேவரீருடைய திருவடியைத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

கடலில் தோன்றிய ஆலாலவிடத்தின் கொடிய வலிமை கெட அதனை வாரியெடுத்த திருக்கரத்தை யுடையவரும், அடியேங்களை யாட்கொள்ளும் பரமபிதாவும், மழுவையும் மானையும் ஏந்திய திருக்கரத்தினருமாகிய சிவபெருமான், பொன்னுலகம் செழிப்புற்று ஓங்குமாறும், அடியேன் உய்ந்து ஈடேறுமாறும், மாலயனாதி வானவர் மாயாமல் பிழைக்குமாறும் பெற்றருளிய முருகக் கடவுளே! "தானந்த னத்த தனனு" என்று ஒலிசெய்து வண்டுகள் வட்டமிட்டு தேனைப் பருகுகின்ற கடப்ப மலர்மாலையைத் தரித்துக் கொண்டிருக்கின்ற அழகிய திருமார்பை யுடையவரே! அடியேங்களை

ஆட்கொள்வதற்குத் தக்க இடமாகக் குறித்து திருக்கயிலாய மலையின்மீது எழுந்தருளியுள்ள வள்ளிநாயகியார் மகிழ்கின்ற பெருமிதமுடையவரே! சிறந்த தேன், உயர்ந்த மா, பலா, கதலி என்ற முக்கனிகள், பால், செங்கருப்பஞ்சாறு, இளநீர் முதலியவைகளின் இனிமையைத் தனது இணையற்ற உயிரினும் உணர்விலும் இனிக்கும் பெருஞ்சுவையால் பழிக்கும் சிவத்தின் திருவருட்பெருக்கு உண்டாகவும், நன்மையும் தீமையும் ஆகிய வினைகள் முழுவதும் துகள்பட்டொழியவும், சீவன் சிவ வடிவு என்பதைத் தெளிந்தும், அகங்காரத்தை ஒழித்து உயிர்ப்பற்று உடற்பற்று என்ற இரண்டையும் ஒழித்து பரவெளியில அருள்நாதத்தோடு கூடிய பரஞ்சோதியில் சிவஞானம் பெருகி வரவும் உவட்டாத இன்பத்துடன் கூடிய முத்தியில் என்றும் நிலைத்து மகிழவும் தேவரீருடைய திருவடியைத் தந்தருள்வீர்.

## விரிவுரை

**தேனுந்து முக்கனிகள்......சீரும் பழித்த சிவம் :—**

சிவத்தைச் சிந்தித்து திருவருள் மயமாகி நிற்கும்போது அளவிட்டுச் சொல்லவும் எழுதவும் இத்துணைத்தென்று நினைக்கவும் முடியாத ஓர் இன்ப உணர்ச்சி உண்டாகும். அவ்வநுபவ இன்பத்தைப் பிறரறியக் கூறற்பாற்றோ?

"அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே" —அநுபூதி.

இன்ப நாயகனும் இறைவனை மெல்ல மெல்ல நினைக்கத் தொடங்கும்போது இணையற்ற ஓர் தனிப் பரமானந்தம் அரும்பும். அவ்வினிமையைச் சுவைத்தறிந்தவர்க்குக் கரும்பு துவர்க்கும்; தேன் புளிக்கும்; பிற கசக்கும். தொடக்க இன்பமே இங்ஙனமாயின் அதன் முதிர்ச்சியில் உண்டாகும் இனிமையின் திறத்தை அளவிடற்பாலார் யாவர்? எழுதுவது எங்ஙன்?

கரும்பு என்பது சந்தத்தை ஒட்டி வலித்தல் விகாரம் பெற்று கருப்பு என வந்தது.

இளநீரை உலையாக வைத்து அதில் நல்ல ஆவின் பாலையும் முப்பழச் சாற்றையும் பிழிந்துவிட்டு கருப்பஞ் சாற்றையுங் கூட்டி பதத்தில் இறக்கி வடித்தெடுத்த கொம்புத தேனையும் விட்டுக் குழைத்துச் செய்த ஒரு மது வர்க்கம் மிகவும் இனிமையாக இருக்கும். ஆனால், நுனி நாவில் மட்டுந்தான் இனிக்கும். அதை எடுத்துக் கண்ணிலும் காதிலும் மூக்கிலும் விட்டால் இனிக்குமா? இன்பத்தை யளிக்குமா? துன்பத்தையே தரும். அந்த மதுவர்க்கத்தை முதுகில் மார்பில் வைத்தால் இனிக்குமா? இவ்வளவு பாடுபட்டு முயன்று செய்த அது நாவின் நுனியில் மட்டுமே இனிக்கும்.

இறைவன் தியானத்தாலுண்டாகும் ஒப்பில்லாத சிவ அமுது நாவிற்கும், கண்ணிற்கும், காதுக்கும், பிற உறுப்புகட்கும் உள்ளத்திலும் உணர்விலும் உயிரிலும் கலந்து தெவிட்டா இனிமையைத் தந்து பிறவி நோயையும் போக்கும்.

> பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
> விரும்புங் குமரனை மெய்யன்பினால் மெல்ல மெல்லவுள்ள
> அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே
> கரும்புந் துவர்த்துச் செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.
>
> —*கந்தரலங்காரம்*

**தீதும் பிடித்த வினை :—**

*தீதும்* என்றதில் வந்த உம்மை எச்சவும்மை. அதனால் நன்மையும் எனவருவித்துப் பொருள் கூறப்பட்டது நல்வினை தீவினை இரண்டுங் கெட்டாலன்றி பிறவி யறாது. நல்வினை பொன்னாற் செய்த விலங்கும், தீவினை இரும்பாற் செய்த விலங்கும் போலும். விலங்கு என்னுந் தன்மையால் இரண்டும் ஒன்றுதானே ? ஆதலால் இருவினையும் அறவேண்டும்.

> "இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
> ஏகபோகமாய் நீயு நானுமாய்
> இறுகும்வகை பரம சுகம் அதனையருள்"
>
> —*(அறுகுநுனி)* திருப்புகழ்.

**சீவன் சிவச்சொரூபம் :—**

*சீவன் சிவன்* எனத் தெளிதல் என்றதனால் சீவனே சிவன் என எண்ணி பாழ்ங்கும்பியில் விழக்கூடாது. சீவன் சிற்றறிவும் சிறுதொழிலும் மலப்பிணிப்பு முடையது. சிவம் பேரறிவும் பேராற்றலும் மலரகிதமும் உடையது எனவே சீவனைச் சிவனாக எண்ணுவது பொருந்தாது. பின் அதன் கருத்து என்னையோவென ஆராயின், சிவோகம் பாவனையால் சிவமாந் தன்மையை யடைதலாம். சீவனைச் சிவமாகப் பாவித்தல் மலத்தினின்றும் விடுபடுதற் பொருட்டாம்.

**நானென்பதற்று :—**

நான் என்ற தற்போதம் அறவே அழிந்தாலன்றி மேற் கூறிய இன்பந்தோன்றாது. நான் செய்கின்றேன்; நான் அநுபவிக்கின்றேன் என்ற எண்ணங்கள் அணுத்துணையுமின்றி நீங்கவேண்டும்.

> "யானாகிய என்னை விழுங்கி வெறுந்
> தானாய் நிலைநின்றது தற்பரமே" —*அநுபூதி.*

> "நானென தன்மை நழுவியே எவ்வுயிர்க்குந்
> தானென உண்மைதனைச் சாருநாள் எந்நாளோ"

"நானுன தன்மை யென்று நாடாமல் நாடஇன்ப
வானுகி நின்றனே நீ வாழி பராபரமே"

"நானென்னு மோரகந்தை எவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானு வாகித்
தான்வந்து தொடரும்; இத்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமை எவர் சாற்ற வல்லார்"

என்னுந் தாயுமான அடிகளாரது நல்வாக்குகளேச் சிந்தித்துச் சித்தந்தெளிக.

**உயிர் ஊனென்பதற்று:—**

உயிர்ப்பற்று, உடற்பற்று; இவற்றை அகப்பற்று புறப் பற்று என்பர். இப்பற்றுகளைப் பற்றறப் போக்கிப் பற்றற்ற அப்பரமபதியைப் பற்றி நின்ருர்க்கே ஆராவமுதின் பேரா இன்பங் கிடைக்கும்.

"பாராசை யெல்லாம் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே"
"பற்றற் றிருக்குநெறி பற்றிற் கடல் மலையுஞ்
சுற்ற நினைக்கு மனஞ் சொன்னேன் பராபரமே"
பற்றிய பற்றற உள்ளே-தன்னைப்
பற்றச் சொன்னுன் பற்றிப் பார்த்த இடத்தே
பெற்றதை ஏதென்று சொல்வேன்—சற்றும்
பேசாத காரியம் பேசினுன் தோழி.
பற்றெழிந்து சிந்தைப் பதைப்பொழிந்து தானேதான்
அற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே. —தாயுமானுர்.

**வெளிநாதம் பரப்பிரம ஒளிமீதே :—**

சிதாகாசத்தில் அருள்நாதத்துடன் கூடிய சிவவொளியில் கலந்து அவ்வநுபவத்தில் தோன்றும் மெய்ஞ்ஞானத்தைக் குறிப்பிடுகின்ருர்.

**வானம் தழைக்க :—**

இடவாகு பெயராகக் கொண்டு வானத்திலுள்ள தேவர் கள் தழைத்து ஓங்கவும் என்றும் பொருள் கொள்ள லாம்.

**அடியேனும் செழிக்க :—**

எந்தை கந்தவேளைச் சிவபெருமான் நெற்றிக்கண்ணி னின்றுந் தோற்றுவித்ததற்குக் காரணம் மூன்று என்றனர். 1. தேவலோகம் தழைத்தல்; 2. அடியார்கள் உய்தல்; 3. மாலயன் மாணாது வாழ்தல்.

**அலைவிட மாள :—**

அலை—கடல்; அலையையுடைய கடலென ஆகுபெயராகக் கொள்ளப்பட்டது. இனி தேவர்கட்கு அலைவைத் தந்த விடமெனக் கொள்ளினும் பொருந்தும். மாள—வலிகெட.

**மழுமான் :—**

தாருகவனத்து இருடிகள் சிவபெருமானைப் பகைத்து அவரைக் கொல்லும் பொருட்டு அபிசார வேள்வியைச் செய்து மழுவையும் மானையும் அனுப்ப, அவற்றைச் சிவபெருமான் திருக்கரங்களில் தாங்கியருளினார்.

**திருக்கயிலை :—**

கயிலாய மலை என்றும் திருக்கயிலாய மலை என்றும் இரண்டு உண்டு. ஒன்று இமயமலையில் உள்ளது. மற்றொன்று மேலுலகத்தில உள்ளது. இதன் விரிவை சிவரகஸ்யத்தில் காணலாம்.

### கருத்துரை

சிவ புதல்வரே! கடம்பரே! கயிலைமலைக் கடவுளே! சிவ அமுது உண்டு பற்றற்று சிவாநுபவத்தில் அழுந்தி முத்தி இன்பத்தில் என்றும் மகிழ்ந்து இருக்க அருள்புரிவீர்.

### 2

நகைத்து வுருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தி லதிமோகம்
நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து மொழியாலுந்
திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி யெடுத்து வரவேசெய்
திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் விழுவேனோ
பகைத்த அரக்கர் சிரத்தை யறுத்து
படர்ச்சி கறுத்த மயிலேறிப்
பணைத்த கரத்த குணத்த மணத்த
பதத்த களத்த தனமாதை
மிகைத்த புனத்தி லிருத்தி யணைத்து
வெளுத்த பொருப்பி லுறைநாதா
விரித்த சடைக்கு ளொருத்தி யிருக்க
மிருகத்தை யெடுத்தோர் பெருமானே.

## பதவுரை

பகைத்த அரக்கர் = பகை கொண்டு வந்த அசுரர்களின், சிரத்தை அறுத்து = தலைகளை அறுத்து, படர்ச்சி கறுத்த மயில் ஏறி = படர்ந்துள்ள கருநிறம் படைத்த மயிலின் மீது ஆரோகணித்து, பணைத்த கரத்த = பருமைத் தன்மையுடையதும், குணத்த மணத்த = குணமான நன்மணம் பொருந்தியதும், பதத்த கனத்த = பக்குவநிலை யெய்தி பெருமை பெற்றதும் ஆகிய, தன மாதை = தனங்களையுடைய குற மகளை, மிகைத்த புனத்தில் இருத்தி அணைத்து = சிறந்த தினைப்புனத்தில் வைத்துத் தழுவி, வெளுத்த பொருப்பில் உறை நாதா = வெள்ளி மலையில் வாழ்கின்ற தலைவரே! விரித்த சடைக்கு உள் = விரித்துள்ள சடாபாரத்தினுள், ஒருத்தி இருக்க = கங்காதேவி உறைய, ம்ருகத்தை எடுத்தொர் = மானைக் கரத்தில் ஏந்திய சிவபெருமானுக்கு உரிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! நகைத்து உருக்கி = புன் சிரிப்புச் செய்து மனத்தை உருகச் செய்து, விழித்து மிரட்டி = நன்கு விழித்துப் பார்த்து மிரளுமாறு செய்து நடித்து = பொய்ம்மையாக அன்புள்ளாரைப்போல் நடித்து, விதத்தில் அதிமோகம் நடத்து = விதவிதமாக அதிக மோக மயக்கத்தைஊட்டுகின்ற,சமத்தி = சாமர்த்தியத்தைக் காட்டி, முகத்தை மினுக்கி = முகத்தை மஞ்சள் முதலியன இட்டு மினுக்கி, நலத்தில் அணைத்து = நலமிக்க படுக்கையிடத்தில் தழுவி, மொழியாலும் = பேச்சின் திறத்தினாலும், திகைத்த வரத்தில் = திகைக்கச் செய்து கேட்ட வரத்தின்படி, அடுத்த பொருள் கை திரட்டி = கிடைத்த பொருள்களைச் சேகரித்துக்கொண்டு, எடுத்து வரவே செய் = எடுத்துக் கொண்டு வருமாறு செய்கின்ற, திருட்டுமுலை பெண் = கரவுடைய தனங்களைப் படைத்த விலைமாதரின், மருட்டு வலைக்குள் = மயங்கச் செய்யும் ஆசைவலைக்குள்ளும், தெவிட்டு கலைக்குள் = நிறைந்த காம நூல்களிலும், விழுவேனோ = அடியேன் விழக் கடவேனோ?

## பொழிப்புரை

பகைத்து வந்த சூராதி யவுணர்களின் தலைகளை யறுத்து, நீல நிறம் படர்ந்துள்ள மயிலின் மீது ஏறி, பருத்தும், குணமான நல்ல மணங் கமழப்பெற்றும், பக்குவப்பட்டுப் பெருமை பெற்றும் விளங்கும் தனங்களை யுடைய வள்ளி நாயகியை, சிறந்த திணைப்புனத்தில் வைத்துத் தழுவி மணஞ் செய்து கொண்டு, திருக்கயிலாய மலையில் எழுந்தருளியுள்ள தலைவரே! விரித்த சடைமுடையில் கங்காதேவி யிருக்குமாறு செய்து, மானையேந்திய சிவபெருமான் மகிழும் பெருமிதமுடையவரே! சிரித்து மனத்தை உருக்கி, விழித்துப் பார்த்து அச்சத்தைத் தந்து; அன்புள்ளவரைப்போல நடித்து, விதம் விதமாக அதிக மோகத்தைத் தருகின்ற சாமர்த்தியத்தைக் காட்டி, முகத்தை

மினுக்கி, நலமிகுந்த படுக்கைத்தலத்தில் தழுவி, இனிய பேச்சினாலும், திகைக்கச் செய்து அவர்கள் கேட்ட வரத்தின்படி கையில் கிடைத்த பொருள்களைத் திரட்டிக் கொணர்ந்து வரும் படிச் செய்கின்ற திருட்டுத்தனமான கொங்கையை யுடைய பெண்களின் மருட்சியைத் தரும் ஆசை வலையிலும், காமக் கலைக்குள்ளும் அடியேன் விழக்கடவேனோ?

## விரிவுரை

**நகைத்து :—**

பொதுமகளிர், ஆடவரைக் கண்டு காரணம் இன்றியே முல்லையரும்பு போன்ற பற்கள் சிறிது தோன்றப் புன்னகை புரிவர். அந்நகை விடம்போல் ஆடவரை மயக்கும்.

**உருக்கி :—**

ஆடவருடைய திண்ணிய மனதை உருக்கிவிடுவார்கள்.

"அங்கார ஸத்ருஸீநாரீ க்ருதகும்ப ஸம : புமாந்"

"பெண்கள் நெருப்புக்குச் சமம். ஆண்கள் நெய்க் குடத்திற்குச் சமம்" என்று நாரதபரிவ்ராஜகம் என்ற உபநிடதம் கூறுகின்றது. (நெருப்பு அருகில் உள்ள குடத்தில் உள்ள நெய் உருகும்—நெய் மனதிற்கு உவமை.)

**விழித்து மிரட்டி :—**

தம்மை விரும்பிய ஆடவர்களை அம்மகளிர் கண்களை உருட்டிப் பார்ப்பர். அப் பார்வையால் ஆண்கள் "இவள் நம்மை வெறுத்து விடுவாளோ" என்று எண்ணி அஞ்சுவர்.

**கடித்து விதத்தி லதிமோகம் நடத்து சமத்தி :—**

பொருளையே விரும்பி, உள்ளத்தில் அன்பு சிறிதேனும் இன்றி, ஆழ்கடல் போன்ற அன்புள்ளாரைப் போல் நடிப்பார்கள்.

"உம்மைக் காண்கின்ற போதெல்லாம் என் உடம்பில் மின்சார உணர்ச்சி பாய்கின்றது" "ஆ! உமது சொல் தேன் போல் தித்திக்கின்றது", "நீர் தொட்டால் அமுதம்போல் உடம்பு குளிர்கின்றது" என்பது போன்ற சொற்களைக் கொஞ்சி மழலை மொழியால் கிளிபோல் அசைந்து மொழிந்து, எத்தனை எத்தனையோ விதத்தில் ஆடவர்க்கு மோகத்தை யுண்டாக்குவார்கள்.

காட்டுத் தீயைப்போல் ஆசைத் தீயை வளர்ப்பதில் மிக்க சாமர்த்தியம் உள்ளவர்கள்.

**முகத்தை மினுக்கி :—**

தங்கள் முகத்தை மஞ்சள் முதலிய சாதனங்களால் நன்கு மினுக்குவார்கள். முகத்தை ஒரு முறை ஆடவர் கண்டவுடன் காந்தத்தைக் கண்ட ஊசிபோல் ஈர்க்கப்பெறுவர்.

**மொழியாலும் :—**

கண் முகம் நடிப்பு இவைகளால் மயக்குவதேயன்றி தேன் போன்ற இனிய சொற்களாலும் மயக்கத்தைப் புரிவர்.

**திகைத்த வரத்தில் அடுத்த பொருள்கை திரட்டி எடுத்து வரவேசெய் :—**

மேலே கூறிய சாகசங்களால் ஆடவர் திகைப்புறுவர். அம் மகளிர் கேட்ட கேட்ட வரங்களை நல்கி, அவர்களை மகிழ்விக்கும் பொருட்டு தங்கள் கரத்தில் கிடைத்த பொருள்களையெல்லாம் திரட்டிக் கொணர்ந்து தருமாறு செய்வார்கள்.

**மருட்டு வலைக்குள் :—**

மயக்கத்தைச் செய்யும் வலைக்குள் அகப்பட்டு மயங்குதல் கூடாது.

மாதர் யமனும் அவர்தம் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம்—ஓத அதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு. —திருப்போரூர்ச்சந்நிதிமுறை.

**தெவிட்டு கலைக்குள் :—**

இன்பத்தைத் தெவிட்ட வைக்கின்ற காம சாத்திரங்கள். கலை என்ற சொல் ஆடையையுங் குறிக்கும்.

**வெளுத்த பொருப்பு :—**

வெண்மையான மலை. வெள்ளி மலை. திருக்கயிலாயம். இம் மலை கோடி கோடி சூரிய ஒளிபோன்று தகதக என்று விளங்கா நிற்கும்.

அண்ணல் வீற்றிருக்கப் பெற்றதாகலின்
நண்ணு மூன்றுலகும் நான்மறைகளும்
எண்ணில் மாதவம் செய்யவந் தெய்திய
புண்ணியம் திரண்டுள்ளது போல்வது. —பெரிய புராணம்

**விரித்தசடைக்குளொருத்தியிருக்க மிருகத்தை எடுத்தொர் :—**

உமாதேவியாருடைய விரல்களில் இருந்து தோன்றிய கங்கை உலகங்களையெல்லாம் அழிக்குமாறு பெருகித் திரண்டு பெரு வெள்ளமாய் வந்தபோது சிவபெருமான் அக் கங்கையைத் தமது சடை முடியில் ஒரு உரோமத்தில் அடக்கி அகில உலகங்கட்கும் அருள் புரிந்தார்.

கங்கையை முடித்த தன்மை சிவபெருமானுடைய பேராற்றலைக் குறிப்பது ஆகும். மானையேந்தியது—துள்ளி ஓடும் நமது மனமாகிய மானை இறைவன் அடக்கிப் பிடித்து அருளும் தன்மையை உணர்த்துவதாகும். இத்தகைய ஒரு மானை ஏந்திய பெருமான் மகிழுகின்ற பெருமையை யுடையவர் முருகவேள்.

## கருத்துரை

கயிலாய மலையுறையுங் கந்தவேளே! மாதர் மயக்குரு வண்ணம் அருள் செய்.

## 3

பனியின் விந்துளி போலவே கருவினுறு
மள்வி லங்கொரு சூசமாய் மிளகுதுவா
பனைதெ னங்கனி போலவே பலகனியின் வயிருகிப்
பருவ முந்தலை கீழதாய் நழுவி நில
மருவி ஒன்பது வாசல்சேர் உருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறி னுடனுடி

மனவி தந்தெரி யாமலே மலசலமொ
டுடல்ந கர்ந்தழு தாறியே அணைமுலையின்
மயம யின்ரெரு பாலனு யிகமுடைய செயல்மேவி
வடிவ முன்செய்த தீமையா லெயுமுனையும்
அறம றந்தக மீதுபோய் தினதினமு
மனம ழிந்துடல் நாறினே னினியுனது கழல்தாராய்

தனன தந்தன தானனு தனதனன
தினன திந்தன தீததோ திகுததிகு
தகுத குந்ததி தாகுதோ எனமுழவு வளைபேரி
தவில்க ணம்பறை காளமோ டிமிலை தொனி
யினமு ழங்கெழு வேலைபோ லதிரபொரு
சமர்மு கங்களின் மேவியே விருதுசொலு மவுணோர்கள்

சினம ழிந்திட தேர்கள்தோ லரிபரிகள்
குருதி யெண்டிசை மூடவே அலகைநரி
சிறையி னங்கிளி கூரவே நகையருளி விடும்வேலா
சிவன்ம கிழ்ந்தரு ளானைமா முகன்மருவி
மனம கிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்
திகழ்குறிஞ்சியின் மாதுமால்மருவு புகழ் பெருமாளே.

## பதவுரை

தனன தந்தன தானனு தன தனன தினன திந்தன தீததோ திகு ததிகு தகுத குந்ததி தாகுதோ என=தனன...தாகுதோ என்ற ஒலிக்

குறிப்புடன், முழவு = முரசு வாத்தியமும், வளை = சங்கும், பேரி = பேரி வாத்தியமும், தவில் = தவிலும், கணம்பறை = கூட்டமானபறைகளும், களமோடு = எக்காளம் என்ற வாத்தியமும், இமிலை தொனி இனம் முழங்கு = இவைகள் ஒலிக்கும் ஒலிவகைகள் முழக்கஞ் செய்து, எழுவேலைபோல் அதிர = ஏழுகடல்களைப்போல் பெரிய ஓசையை உண்டாக்க, பொரு சமர் முகங்களில் மேவியே = போர்க்களங்களில் நின்று, விருதுசொலும் அவுணர்கள் = தம் பெருமைகளைக் கூறிக் கொள்கின்ற அசுரர்களின், சினம் அழிந்திட = கோபமானது அழிய வும், தேர்கள் = தேர்கள், தோல் = யானை, அரிபரிகள் = வலிமையுடைய குதிரைகளின், குருதி எண்திசை மூடவே = உதிரமானது எட்டுத்திசை களிலும் பெருகி மறைக்கவும், அலகை = பேய்கள், நரி = நரிகள், சிறை இனம் = பறவைகள், களிகூரவே = மகிழ்ச்சியடையவும், நகை அருளி விடும்வேலா = புன்னகைபூத்து வேலாயுதத்தை விடுத்தவரே! சிவன் மகிழ்ந்து அருள் = சிவபெருமான் மகிழ்ந்து அருளிய, ஆனைமாமுகன் மருவி = பெருமையுடைய யானைமுகங் கொண்ட விநாயகர் உடனிருந்து, மனம் மகிழ்ந்து அருள்கூர = திருவுள்ளம் மகிழ்ந்து அருள் பாலிக்க, ஒரு கயிலை மகிழ் = ஒப்பற்ற திருக்கயிலாய மலையில் மகிழ்கின்றவரே! திகழ் குறிஞ்சியின் = சிறந்த மலை நிலத்தில், மாது மால் மருவுபுகழ் = வள்ளி நாயகி அன்பு கொள்கின்ற புகழ் மிகுந்த, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! பனியின் விந்துளிபோலவே = பனிபோலச் சுக்கிலம் துளியளவு, கருவின் உறும் அளவில் = கருவிற் சேர்ந்த அளவில், அங்கு ஒரு சூசம்ஆய் = அவ்விடத்தில் ஒரு அறிகுறி யாய், மிளகு = மிளகின் அளவாகவும், துவர் = பிறகு பாக்கின் அள வாகவும், பனை = பனம் பழம் அளவாகவும், தெனங்கனிபோலவே = தேங்காய் போலவும் வளர்ந்து, பலகனியின் வயிறு ஆகி = பலாப்பழம் போல் வயிறு பெருத்து, பருவமும் தலைகீழதாய் நழுவி = பிறக்க வேண்டிய காலம் வந்தவுடன் தலைகீழாக நழுவி, நிலமருவி ஒன்பது வாசல் சேர் உருவம் உள = பூமியில் பிறந்து ஒன்பது வழிகள்கொண்ட உருவமுள்ள, பதுமையின் செயல் போலவே = ஒரு பொம்மையைப் போல் கிடந்து, வளிகயிறின் உடன் ஆடி = பிராணவாயு என்ற கயிற்றின் உதவியால் ஆடி, மன = (மன்ன), இப்பூமியில் பொருந்தி யிருக்க, விதம் தெரியாமலே மல சலமொடு = இப்படிப் போகின்றது என்று உணர்ச்சியில்லாமலேயே மலம் சலம்பட்ட, உடல் நகர்ந்து = உடம்புடன் தவழ்ந்து, அழுது ஆறியே = அழுதும் அழுகை ஓய்ந்தும், அனைமுலையின் மயம் அயின்று = தாயின் முலை மயமாகியபாலைப்பருகி, ஒரு பாலனாய் = ஒரு பாலகனாய், இகமுடைய செயல் மேவி = இப்பிறப் பிற் செய்ய வேண்டிய செயல்களைச் செய்து, வடிவம் முன்செய்ததீமை யால் எயும் = இந்த வுருவம் முற்பிறப்பிற் செய்த தீமை காரணமாகப் பொருந்தும், உனையும் அற மறந்து = தேவரீரையும் அறவே மறந்து

அக மீது போய் = பாவம் மேலும் மேலும் வளர, தின தினமும் மனம் அழிந்து = நாள்தோறும் மனம் உடைந்து அழிபட்டு,உடல் நாறினேன் = உடம்பு நிலைகுலைந்து கெடுகின்றேன், இனி உனது கழல் தாராய் = இனி உமது திருவடியைத் தந்தருள்வீராக.

## பொழிப்புரை

தனன தந்தன தானனு தனதனன தினன திந்தன தீததோ திகுத திகு தகுத குந்ததி தாகுதோ என்ற ஒலிகளை உண்டாக்கி, முரசு, சங்கு, பேரி, தவில், பறைகள், எக்காளம், திமிலை முதலிய வாத்தியங்கள் ஏழு கடல்களைப்போல் ஒலிக்க, போர்க்களத்தில் வந்து தற்பெருமை கூறிய அசுரர்களின் கோபம் அழியவும், யானை வலிய குதிரைகளின் உதிரமானது எண்திசைகளையும் மூடவும், பேய்கள் நரிகள் பறவைகள் களிப் புறவும், புன்னகை புரிந்து வேலாயுதத்தை விடுத்தருளியவரே! சிவபிரான் மகிழ்கின்ற விநாயகப் பெருமான் உடன் இருந்து மகிழ்ந்து அருள்பாலிக்க, ஒப்பற்ற கயிலைமலையில் மகிழும் பெருமிதமுடையவரே! அழகிய குறிஞ்சி நிலத்தில் வாழும் வள்ளியம்மையின் மீது காதல் கொள்ளும் புகழ் வாய்ந்த பெருமிதம் உடையவரே! பனியின் துளிபோன்ற விந்து வானது கருவில் உற்று, மிளகு, பாக்கு, பனம்பழம், தேங்காய் போல் சிறிது சிறிதாக வளர்ந்து, அதனுல் தாயின் வயிறு பலாப்பழம் போல் ஆக, கரு முற்றியபின் தலைகீழாய் நழுவிப் பூமியில் பிறந்து ஒன்பது ஓட்டைகளையுடைய ஒரு பதுமை போல் பிராணவாயு என்ற கயிற்றினுல் ஆடி இப்பூமியில் பொருந்தி, மலசலத்துடன் தவழ்ந்து, அழுதும் அழுகை ஓய்ந் தும், தாய் முலைப்பால் குடித்து ஒரு குழந்தையாய் இப்பிறப் பிற் செய்யும்படி விதித்த செயல்களைச் செய்து, முற்பிறப்பிற் செய்த தீமை காரணமாக உருவம் பொருந்தும்; தேவரீரை அறவே மறந்து பாவம் மென்மேல் வளர, நாள்தோறும் மனம் உடைந்து அழிபட்டு உடல் உருக்குலைந்து நிற்கும் அடியே னுக்கு உமது திருவடித் தாமரையைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**பனியின் விந்துளி போலவே :—**

உயிர்கள் தாம் செய்த நல்வினை தீவினைப் பயன்களாகிய புண்ணிய பாவங்களை ஒளியுலகிலும் இருள் உலகிலும் அனு பவிக்கின்றன. உயிர்கள்—சிற்றறிவுடையன; வினை—சடம்; ஆதலால் வினைகளை அந்தந்த உயிர்களுக்குத் பேரறிவும் பேராற்றலும் படைத்த ஒரு பரம்பொருள் ஊட்டுகின்றது.

எனவே செய்வான், செய்வினை, வினைப்பயன், அதனை ஊட்டுவான், என்ற நான்கினையும் நன்கு உரைப்பது சைவ நூல் ஒன்றேயாகும்.

செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக் கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை யென
உய்வகையால் பொருள் சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்.
—பெரிய புராணம்.

இவ்வண்ணம் வினைப்பயனை நுகர்ந்தபின் கலப்பான வினைப்பயனை நுகர்தற் பொருட்டு இறையாணையால் அவ்வுயிர்கள் மழை வழியாக இப்பூதலத்தைச் சேர்கின்றன. காய் கனி மலர் நீர் தானியம் இவற்றில் கலந்து நிற்கின்றன. அவற்றையுண்ட ஆணிடம் நியதியின்படி சேர்ந்து அறுபது நாள் கருவுற்றிருந்து பெண்ணிடம் சேர்கின்றன. அப்படி அக்கரு ஆணிடம் இருந்து பெண்ணிடம் சேர்கின்றபோது அது ஒரு புல்லின் மீதுள்ள பனித் துளிபோன்ற சிறிய அளவுடையதாக இருக்கின்றது என்பதை "அறுகுநுனிபனியனைய சிறிய துளி" என்கின்றார் அடிகளார் திருவிடைமருதூர்த் திருப்புகழில்.

பனித்துளி போன்ற விந்து எனக் கொண்டு கூட்டிப் பொருள் செய்க.

**கருவிலுறுமளவில் அங்கொரு சூசமாய் :—**

உயிர் விந்தின்மூலம் கருவில் உற்றபின் அக் கருப்பைக்குள் வளர்ச்சி பெறுகின்றது.

சூசம்—சூசகம், அறிகுறி. கருவின் அறிகுறியாகத் தாயின் உடம்பில் பச்சை நரம்பு தோன்றுதல். தனத்தின் கண் கருமையுறுதல் முதலியன உண்டாகும்.

**மிளகு துவர் பனை தெனங்கனிபோலவே :—**

கருவானது மிளகின் அளவாகவும், பாக்கின் அளவாகவும், பனம்பழத்தின் அளவாகவும் தேங்காயின் அளவாகவும் வளர்ச்சியுற்றுப் பருத்து நிற்கும்.

**பலகனியின் வயிருகி :—**

தாயின் கருவுற்ற வயிறு பலாப்பழம்போல் காட்சியளிக்கும்.

**பருவமுந் தலை கீழதாய் நழுவி :—**

தாயின் உதரத்தில் இருந்த குழவி ப்ரசூதவாயு பிடர் பிடித்து உந்த, தலைகீழாய்த் திரும்பி வந்து பிறக்கும்.

**நிலமருவி :—**

பூமியில் வந்து சேரும். அப்போது அளவற்ற வேதனையுற்ற அக்குழவி அழுது துன்புறும்.

**ஒன்பது வாசல்சேர் உருவமுள பதுமையின் செயல்போல் :—**

ஒரு பதுமைக்கு ஒன்பது துவாரம் அமைத்தது போன்ற உருவம் பெற்று அக்குழவி காட்சியளிக்கும்

**வளிகயிறினுட்டுடி மன :—**

கயிறுகளைக் கட்டியாட்டும் பொம்மலாட்டம் போன்றது மனித வாழ்வு. மரப்பொம்மைக்கு நிரம்பக் கயிறுகளைக் கட்டி அசைத்து ஆட்டுமாப்போல், இந்த மாமிசப் பொம்மைக்கும் பிராணவாயு என்ற கயிற்றைக் கட்டி வைத்துள்ளது. அதனால் ஆட்டமடைந்து நிலவுலகில் பொருந்தி வாழ்கின்றது.

மன்ன என்ற சொல் மன என்று வந்தது.

**விதந்தெரியாமலே மலசலமொ டுடல் நகர்ந்து :—**

இன்னபடி போகின்றது என்ற விவரம் தெரியாமலேயே மலமும் சலமும் வெளிப்பட, அவற்றுடன் மெல்ல நகர்ந்து அக் குழவி தவழ்ந்து செல்லும்.

**அழுதாறியே :—**

அக்குழவி குவா குவா என்று அழுது மீண்டு ஆறுதல் அடையும்.

**அனைமுலையின் மயமயின்று :—**

குழவி கருவுற்றபோதே அதன் நலத்துக்கென இறைவன் அமைத்த தனங்களில் பால் சுரந்தும், அது பிறர் கண்ணுக்குப் புலப்படாமல் கரந்தும் நிற்கும். குழவி அத் தாய்ப் பாலைக் குடித்து வளரும்.

**ஒரு பாலனுய் இகமுடைய செயல்மேவி :—**

ஒரு பாலகனுய் வளர்ந்து இப்பிறப்பில் செய்யும்படி விதித்த செயல்களைச் செய்து உலாவும்.

**வடிவ முன்செய்த தீமையால் எயும் :—**

எயும்—ஏயும்; பொருந்தும். இந்த வடிவமானது முற் பிறப்பிற் செய்த தீமை காரணமாக வந்து பொருந்தும்.

ஆன்மாக்களின் கன்மங்கள் பல திறப்பட்டனவாதலின், உருவங்களும் பல திறப்பட்டிருக்கின்றன.

**உனையு மற மறந்து :—**

இந்த உடம்பையும், உடம்பில் கண் காது மூக்கு நாக்கு முதலிய உறுப்புக்களையும் உணவுப் பொருள்களையும் ஒளிப் பொருள்களையும் அமைத்துக் கருணையால் வழங்கிய இறைவனை நினைப்பதுவே புண்ணியங்கட்கெல்லாம் மேலான தலையாய புண்ணியமாகும். இங்ஙனம் நினைப்பது நன்றியுணர்வின் பாற்பட்டதென உணர்க. எல்லையற்ற உதவிகளைப் புரிந்துள்ள இறைவனது திருவருளை மறப்பதுவே கழுவாயில்லாத பாவமாகும். நன்றி மறப்பதாகும்.

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு. —திருக்குறள்

எனவே "இறைவனை அறவே மறந்து" என்றார்.

**அகமீதுபோய் :—**

அகம்—பாவம். பாவமானது மேல் மேல் வளரத் தீமை களைப் புரிந்து.

**தினதினமும் மனமழிந்துடல் நாறினேன் :—**

நாளும் நாளும் உள்ளம் உலைந்து உடம்பு உருக்குலைந்து விட்டேன்.

**இனி உனது கழல் தாராய் :—**

"சேய் பிழையைத் தாய் பொறுப்பது போல் இறைவனே, சிறியேன் பிழையைப் பொறுத்து இனி அடிமையேன் உய்யும்பொருட்டு உமது திருவடிகளைத் தந்தருளுவீர்" என்று அருணகிரிநாதர் உள்ளங்குழைந்து உருகி வேண்டுதல் புரிகின்றார்.

**தனன......விருதுசொலும் அவுணோர்கள் :—**

பல வகையான வாத்தியங்கள் ஏழுகடல்போல் ஒலிக்க, தங்கள் வீரத்தின் பெருமையைக் கூறி வீரமுழக்கம் புரிகின்ற அசுரர்கள்.

**தோல் அரிபரிகள் :—**

தோல்—யானை. அரி—வலிமை. யானைகளும், வலிமை யுள்ள குதிரைகளும் மாண்டழிந்தன.

**குருதி எண்டிசை மூடவே :—**

உதிர வெள்ளம் ஆறுபோல் எட்டுத் திசைகளிலும் பெரு கிப் பூமியை மறைத்தது.

**சிறையினங் களிகூறவே :—**

சிறை—இறக்கை. சிறகுடன் பறக்கும் காக்கை, கழுகு பருந்து முதலிய பறவைகள், அசுரங்களின் பிணங்களின் பிணங்களை யுண்ணலாம் என்று எண்ணி மகிழ்ந்தன.

சிறை—சிறைச்சாலை. சூரபன்மனால் சிறையில் கிடந்த தேவர்கள், சித்தர்கள், அரம்பையர்கள் முதலியோர்கள், அசுரர் கள் மாண்டதனால், நமக்குச் சிறைவாசம் ஒழிந்தது என்று கருதி உவகையுற்றார்கள் என்றும் கொள்ளலாம்.

**சிவன் மகிழ்ந்தருள் ஆனைமா முகன் :—**

மூத்த மகனிடம் பிதாவுக்கும் இளைய மகனிடம் தாய்க்கும் அதிக விருப்பம் அமைவது உலகியல் ஆதலின் சிவபெருமான் மகிழ்கின்ற விநாயகர் என்றனர்.

**மருவி மனமகிழ்ந்தருள் கூர :—**

விநாயகர் முருகரிடம் அமர்ந்து மிக்க அன்புடன் தழுவி மகிழ்கின்றார். முருகவேளுக்கு அருள் புரிகின்றார்.

## கருத்துரை

திருக்கயிலை மேவும் சிவகுமாரா! உன் திருவடி தருவாய்.

## 4

புமியதனிற் ப்ரபுவான
புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட
அடிமைதனக் கருள்வாயே
சமரிலெதிர்த் தசுர்மாளத்
தனியயில்விட் டருள்வோனே
நமசிவயப் பொருளோனே
ரசதகிரிப் பெருமாளே.

### பதவுரை

சமரில் எதிர்த்த = போர்க்களத்தில் எதிர்த்து வந்த, சூர்மாள = சூரபன்மன் மாண்டொழிய, தனி அயில் = ஒப்பற்ற வேற்படையை, விட்டு அருள்வோனே = ஏவி அருளியவரே! நமசிவயபொருளோனே = "நமசிவய" என்ற தூல ஐந்தெழுத்தின் மெய்ப் பொருளாக விளங்குபவரே! ரசதகிரி = வெள்ளிமலையாகிய திருக்கயிலைமலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! புமி அதனில் = இப் பூமண்டலத்தில், ப்ரபு ஆன = தனிப்பெருந்தலைவராக விளங்குபவரும், புகலியில் வித்தகர் போல = சீகாழிப் பதியில்திருவவதாரஞ்செய்தவருமாகிய ஞானசம்பந்தப் பெருமானைப் போல், அமிர்த கவி தொடை பாட = இறப்பை நீக்கி மரணமிலா வாழ்வினை வழங்கும் தேவாரப் பாடலைப் போல் அடியேனும் பாடுமாறு, அடிமை தனக்கு = தேவரீருடைய அடிமையாகிய நாயேனுக்கு, அருள்வாயே = திருவருள் புரிவீர்.

### பொழிப்புரை

போர்த்தலத்தில் எதிர்த்து வந்த சூரபன்மன் மாயுமாறு இணையில்லாத ஞானசக்தியை விடுத்தருளிய விமலரே! "நமசிவய" என்ற பஞ்சாக்கரத்தின் உட்பொருளாக விளங்குபவரே! வெள்ளியங்கிரியில் எம்மை உய்விக்கும் பொருட்டு எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பூமண்டலத்தின் தனிப்பெருந் தலைவராம், உலகிலுள்ள உயிர்கட்கெல்லாம் புகலிடமாகிய சீகாழிப் பதியில் திருவவதாரம் செய்த ஸ்ரீஞான சம்பந்த மூர்த்தியைப்போல் இறப்பை நீக்கும் அமிர்தம் போன்ற தேவார அருட்பாக்களைப் பாடுமாறு அடிமையேனுக்குத் திருவருள் புரிவீர்.

### விரிவுரை

**புமியதனிற் பிரபு :—**

பூமி என்பது புமி எனக் குறுகி நின்றது. பூவுலகிற்கு ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளே தலைவர். அவரை ஒப்பாரும்

மிக்காருமில்லை. பெருந் தலைவர் என்பதற்கு அடையாளம் சிவிகை, சின்னம், விருது இவைகள் இருத்தல் வேண்டும். ஏனைய தலைவர்கள் இவைகளைத் தாமே தயார் செய்து கொள்வார்கள். நம் சம்பந்தத் தலைவருக்குச் சிவபெருமானே சிவிகை, சின்னம், முதலியவைகளைத் தந்தருளினார். அவ்வரலாறு கீழ்வருமாறு :

**திருஞான சம்பந்தருக்குச் சிவபெருமான் முத்துச் சிவிகை அருளியது**

பாலருவாயராகிய நம் திருஞானசம்பந்த நாயனார் திருப்பெண்ணாகடத் திருத்தூங்கானை மாடம் என்னுந் திருத்தலத்தைத் தொழுது, திருவரத்துறை என்னும் அரும்பதியை வணங்க விரும்பிச் செல்லும்போது, இதற்கு முன்னரெல்லாந் தமது திருத்தாதையாரது தோளின்மேலமர்ந்தருளும் நியமமொழிந்து, தமது பாதபங்கயம் சிவந்து வருந்த, மெல்ல மெல்ல நடந்து சென்று மாறன்பாடி என்னுந் திருத்தலத்தை யடையும்போது அப்பரம குரு மூர்த்தியின் திருவடித் தளர்வினைக் கண்டு வருந்தினன் போல் சூரியன் மேற்கடலில் வீழ்ந்தனன் வெம்பந்த நீக்கும் நம் சம்பந்தப் பிள்ளையார் அன்றிரவு அப்பதியில் திருவஞ்செழுத்தை யோதித் தங்கினார். திருவரத்துறையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் சம்பந்தப் பெருமானுடைய திருவடியின் வருத்தத்தைப் பொறுதவராய் ஏறுதற்கு முத்துச் சிவிகையும், மணிக்குடையும், கூறியூதக் குலவு பொற் சின்னங்களும் அமைத்துக் கொடுக்கத் திருவுளங் கொண்டு, அவ்வூர் வாழும் மேலோர் கனவிற் றோன்றி, "ஞான சம்பந்தன் நம்பால் வருகின்றான்; அவனுக்குத் தருமாறு முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் நம் திருக்கோயிலில் வைத்திருக்கின்றோம். நீங்கள் அவைகளை அவன்பால் கொண்டு கொடுங்கள்" என்று பணித்தருளினார்.

> **ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான்**
> **மான முத்தின் சிவிகை மணிக்குடை**
> **ஆன சின்னம் நம் பாற் கொண் டருங்கலைக்**
> **கோன வன்பால் அணைந்து கொடுமென.** —பெரிய புராணம்.

அவர்கள் ஆலமுண்ட அண்ணலின் திருவருளையும் திருஞான சம்பந்தருடைய பெருமையையும் உன்னி உள்ளத்தில் உவகையும் வியப்பும் எய்தி, நீராடி விடியற்காலை திருக்கோயிலின் திருக்கதவந் திறந்து பார்க்க அவைகள் அவ்வாறிருக்கக் கண்டு மிகவும் விம்மிதமுற்று, அவைகளை எடுத்துக் கொண்டு, திருஞான சம்பந்தப் பெருமானை எதிர்கொண்டு சென்றனர். சிவபெருமான் ஞானசம்பந்தர் கனவிலும் சென்று, "குழந்தாய்! முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் உனக்குத் தந்தனம். அவைகளைக் கொண்டு நம் பதிகள் தோறும் வருக" என்று கட்டளை யிட்டருளினார்.

சம்பந்த அடிகள் கண் துயிலுணர்ந்து எந்தையாரது எளிவந்த வான்கருணையை உன்னி உள்ளம் உவந்து, நீராடி திருவரத் துறைக்கு வருவாராயினர். அவ்வூர் வாசிகள் எதிர்கொண்டு திருவடியில் வீழ்ந்து பணிந்து பாம்பணிந்த பரமனது கட்டளையை விண்ணப்பித்தனர். சம்பந்த மூர்த்தி அவைகள் இறைவன் திருவருள் மயமாதலால் சோதிமுத்தின் சிவிகையை வலம் வந்து நிலமுறப் பணிந்து அச்சிவிகையின் ஒளி வெண்ணீறு போன்று விளங்கலால் அதனையுந் துதித்து, அச்சிவிகை திருவருள் வடிவாதலின் திருவஞ்செழுத்தையோதி எல்லா வுலகமும் ஈடேற அதன்மீது எழுந்தருளினர். முத்துச் சின்னங்கள் முழங்கின; அடியவர் அரகர முழக்கஞ் செய்தனர். முத்துக் குடைகள் நிழற்றின; வேதங்கள் முழங்கின; புங்கவர் பூமழை பொழிந்தனர்.

> பல்குவெண் கதிர்ப் பத்திசேர் நித்திலச் சிவிகைப்
> புல்கு நீற்றொளி யுடன்பொலி புகலி காவலனர்
> அல்கு வெள்வளை யலைத்தெழு மணிநிரைத் தரங்கம்
> மல்கு பாற்கடல் வளர்மதி யுதித்தென வந்தார்.
>
> —பெரிய புராணம்.

இதுவேயுமன்றி, அரசன் எதனையும் தனது ஆணையால் நடாத்துவான். "இது என் ஆணை" என்று கட்டளையிடுவான்; அதேபோல் நம் அருட்பெருந் தலைவரும் "ஆணை நமதே" என்று கூறுமாறு காண்க.

> "நடுவிருளாடு மெந்தை நனி பள்ளியுள்க
> வினை கெடுதல் ஆணை நமதே"
>
> —(திருநனிபள்ளி) தேவாரம்.

> "ஆனசொன் மாலையோது மடியார்கள் வானில்
> அரசாள்வர் ஆணை நமதே"—(கோளறுபதிகம்) தேவாரம்.

**புகலி :—**

புகலி என்பது சீகாழிக்குரிய பன்னிரண்டு பேர்களில் ஒன்று. ஊழி பெயரினும், உலகம் அழியினும் அழியாத அத் தோணிபுரமே தங்கட்குத் தஞ்சமாகத் தேவரும் மற்று யாவரும் புகுவதால் அப்பதிக்குப் புகலி என்ற திருப்பெயருண்டாயிற்று.

**வித்தகர் :—**

வித்தகம்—ஞானம். ஞானமுடையோர் வித்தகர்.

**அமிர்தகவி :—**

திருஞான சம்பந்தருடைய தேவாரம் அமிர்தகவி. அமிர்தம் இறப்பை நீக்கும்; சம்பந்த மூர்த்தியின் தேவாரமும் இறப்பை நீக்கும். சான்று பின்வருமாறுகாண்க.

### திருஞானசம்பந்தர் விடம் தீர்த்தது

நமது திருஞானசம்பந்தம் பெருந்தகையார் திருச்செங் காட்டங் குடியினின்றும் திருமருகலை யடைந்து இறைவனை வணங்கி அங்கிருக்கும் நாளில், ஒரு வணிகன் வழிப்போக்க னாய் ஒரு கன்னிகையை அழைத்துக் கொண்டு வந்து கோயி லின் பக்கலின் ஒரு மடத்திலே இரவில் கண் துயிலும்போது பாம்பு தீண்டி இறந்தான். அக்கன்னி அவனைப் பாம்பு தீண்டி யுந் தான் தீண்டாமல் இருந்து வருந்தி அழுது புரண்டு அரற் றினாள். பற்பல முயற்சிகள் செய்தும் விடம் தீர்ந்து அவன் பிழைத்தானில்லை அதனைக் கண்ட அப்பெண் பெரிதும் வருந்தி விடியற்காலையில், அன்னையையும் அத்தனையும் விட்டுப் பிரிந்து உன்னைத் துணைபற்றித் தொடர்ந்து வந் தேன். நீ பாம்பின் வாய்ப்பட்டு மாண்டனை; என்னைத் தமிய ளாக்கிச் சென்றனை. என் துன்பத்தை யகற்றி என்னைக் காக்க வல்லார் யாவர்? என் துன்பத் தீயை அணைக்கும் கருணை மேகத்தை எங்கு சென்று தேடுவேன். வணிககுல மணியே! யானும் இறந்து உன்னுடன் வருவேன்" என்று வாய்விட்டுப் புலம்பி, திருக்கோயிற் றிருவாயில் திசையை நோக்கி "அடிய வர்களாய அமரருய்ய ஆலமுண்ட நீலகண்ட நின்மலனே! மாலயன் காணாத மணிவிளக்கே! வெந்து சாம்பரான மதனனை இரதிதேவி வேண்ட உய்வித்து உதவிய கருணைக் குன்றமே! பாலனுக்காகக் காலனை யுதைத்த பரம்பரனே! அருட்கொண் டலே! இந்த விடக்கொடுமை நீங்குமாறும், ஏழையேன் உய்யு மாறும் இன்னருள் புரிவாய்! மருகற் பெருமானே! மாசிலா மணியே!" என்று,இறைவனைக் கூவி முறையிட்டாள். இத் துதியுடன் கூடிய அழுகுரல் காலையில் கண்ணுதலை வணங்க வருகின்ற கவுணியர்கோன் (சம்பந்தர்) திருச்செவியில் வீழ்ந் தது. அக்கருணைக் கடலின் உள்ளம் உருகியது. ஓடினார்; கண் டார்; கழிபெருங் கருணை வள்ளலாகிய அவர் உள்ளத்தில் பெருகிய அருள் வெள்ளத்தினால் அம்மடமங்கையைக் குளிர் வித்தார். "அம்மா! அஞ்சாதே; நினக்குற்ற துயர் யாது? கூறுக" என்றார்.

அம்மடவரல் கண்ணருவிபாய அப்பரம குருமூர்த்தியின் பாதபங்கயத்திற் பணிந்து கைகுவித்து நின்று "அண்ணலே! அடிமையேன் வைப்பூரில் வாழும் தாமன் என்னும் வணிக னுடைய மகள். இங்கு இறந்த இவர் என் பிதாவினுடைய மருகர். என்னுடன் தோன்றிய என் மூத்தோர் ஆறு பெண் களையும் இவருக்குத் தருவதாகச் சொல்லிச் சொல்லி இவரை ஏமாற்றி வேறிடத்தில் பொருள் நிரம்பப் பெற்றுக் கொடுத்து விட்டனர். என்னையும் இவருக்கென்று சொல்லி வைத்திருந்து பிறகு ஒரு தனவந்தனுக்குத் தர முயன்றார் அதனால் இவர் தளர்ந்து உள்ளம் உடைந்து போனார். இவருடைய ஆறாத துயரைக் கண்டு இவருடன் யான் பெற்றோரை விட்டுப் போந்

தேன். இவர் ஈண்டு அரவந் தீண்டி மாண்டார். கவிழும் கலத்துள் நின்ருர்ப்போல் மயங்கியழும் இப்பாவியைக் காக்குங் கடவுளாகத் தேவரீர் வந்தருளினீர்'' என்று தன் துன்பத்தையும் வரலாற்றையுஞ் சொன்ஞள். அதனைக் கேட்ட ஆளுடைய பிள்ளையார் அருள் சுரந்து,

"சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே'' —தேவாரம்.

என்ற "அமிர்த கவித்தொடை''யைப் பாடி விடந்தீர்த்தருளிஞர். உடனே வணிகன் உயிர் பெற்றெழுந்தான். எழுந்து சம்பந்தப் பெருமான் சரணமலரில் வீழ்ந்தான். அம்மடமங்கையும் வீழ்ந்தாள். இன்பக் கடலில் ஆழ்ந்தாள் அவ்விருவருக்கும் மணம் புரிவித்து இல்வாழ்வு செய்யும் நல்வாழ்வு தந்தருளிஞர்.

"புகலியில் வித்தகர்போலே அமிர்தகவித் தொடை பாட அடிமைதனக் கருள்வாயே'' என்றதன் குறிப்பு, ஞான சம்பந்தர் பதிஞருயிரம் பதிகம் பாடி யருளிஞர்; அதுபோல் பதிஞருயிரம் திருப்புகழ் பாட அருள் புரிவீர் என்பது. தேவாரம் அமிர்தகவியாஞற்போல திருப்புகழும் அமிர்தகவியாயிற்று.

"எம் அருணகிரிநாதர் ஓதும்
பதிஞருயிரந் திருப்புக ழமுதுமே''—*வரகவி மார்க்கசகாயதேவர்.*

**சமரிலெதிர்த் தசுர்மாள :—**

சமரில் எதிர்த்த சுர் மாள எனப் பதம் பிரிக்க. சூர் என்றது சுர் எனக் குறுகி நின்றது. சூர்—சூரபன்மன்.

" சூர்மா மடியத் தொடுவே லவனே " —அநுபூதி.

**நமசிவய :—**

## பஞ்சாக்கர விளக்கம்

இது தூல பஞ்சாக்கரம். இறுதியில் வந்த யகரம் தமிழில் நான்காம் வேற்றுமையாம். நம—நமஸ்காரம்; சிவய—சிவனுக்கு, எனப் பொருள்படும். ந—என்னும் எழுத்து மும்மலங்களையும் தத்தம் தொழில்களில் ஏவிப் பாகம் வருவித்தற் பொருட்டு அவற்ருேடு உடஞய் நின்று உயிரை மறைத்தலால் திரோத சத்தி என்றும் திரோதமலம் என்றும் கூறப்படும் சிவ சத்தியையும், ம—என்னும் எழுத்து உயிரைக் கட்டி நிற்கும் ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களையும், சி—என்னும் எழுத்து செம்பொருட் கடவுளையும், வ—என்னும்

எழுத்து அம்முழுமுதற் கடவுளோடு நெருப்பிற் சூடுபோல் உடனாய் நிற்கும் திருவருளையும், ய—என்னும் எழுத்து உயிரையும் உணர்த்தும்.

உயிரைத் திரோத சத்தியால் மலத்தைக் கெடுத்து அருளைக் கொடுத்து சிவம் தன்னோடு அத்துவிதமாக்கிக் கொள்ளும் என்பது அம்மந்திரத்தின் திரண்ட கருத்து. இன்னும் இதன் விரிவை நல்லாசிரியரை யடுத்துக் கேட்டுத் தெளிந்து ஜபித்து உய்வுபெறுக.

**ரசதகிரி :—**

ரசதம்—வெள்ளி. ரசதகிரி—வெள்ளிமலை.

## கருத்துரை

சூரையட்ட வேலாயுதரே! நமசிவயப் பொருளாயுள்ளவரே! திருக்கயிலை மலையில் எழுந்தருளியவரே! திருஞானசம்பந்தரைப் போல் அமிர்தகவியைப் பாட அருள்புரிவீர்.

## 5

முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் தொடைத்து ரத்ந
 முலைக்கச் சவிழ்த்த சைத்து முசியாதே
முழுக்கக் கழப்பி யெத்தி மழுப்பிப் பொருட்ப றித்து
 மொழிக்குட் படுத்த ழைத்து மளிமீதே

நகைத்திட் டழுத்தி முத்த மளித்துக் களித்து மெத்த
 நயத்திற் கழுத்தி றுக்கி யணைவார்பால்
நடுக்குற் றவர்க்கு மெத்த மனத்தைப் பெருக்க வைத்து
 நயத்துத் தியக்கி நித்த மழிவேனோ

செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க
 திமித்தித் திமித்தி தித்தி யெனஆடும்
செகத்துக் கொருத்தர் புதர நினைத்துத் துதித்த பத்த
 ஜனத்துக் கினித்த சித்தி யருள்வோனே

மிசைத்துத் திடத்தொடுற்று அசைத்துப்பொறுத்தரக்கன்
 மிகுத்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய
மிசைக்குற் றடுத்த மற்ற பொருப்பைப்பொடித்திடித்து
 மிதித்துத் துகைத்து விட்ட பெருமாளே.

## பதவுரை

**செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க திமித்தித் திமித்தி தித்தி என**=செகக்க......தித்தி என்ற வண்ணம் ஒலியுண்டாகுமாறு,

ஆடும் = திருடனம் புரிகின்ற, செகத்துக்கு ஒருத்தர் புத்ர = உலகில் ஒப்பற்றவராய் விளங்கும் சிவபெருமானுடைய குமாரரே! நினைத்து துதித்த = ஒருமைப்பட்ட உள்ளத்துடன் நினைத்துத் துதி செய்கின்ற, பத்த ஜெனத்துக்கு = அன்பர்களின் திருக்கூட்டத்துக்கு, இனித்த சித்தி அருள்வோனே = இனிய திருவருட்பேற்றை அருள்புரிபவரே! மிசைத்து = மேற்சென்று, திடத்தொடு உற்று = உறுதியுடன் நெருங்கி, அசைத்து பொறுத்து = அசைத்து பாரத்தைத் தாங்கி, அரக்கன் = இராவணன், மிகுத்து பெயர்த்து எடுத்த = நான் என்ற அகந்தை அதிகரித்து பேர்த்து எடுத்த, கயிலாயமிசைக்கு உற்று = திருக்கயிலாய மலைமீது எழுந்தருளியிருந்து, அடுத்து மற்ற பொருப்பை = அதன் அருகில் இருந்த கிரவுஞ்சம் என்ற மலையை, பொடித்து இடித்து = பொடியாம்படி இடித்து, மிதித்து துகைத்து விட்ட = அடக்கித் துவையல் செய்துவிட்ட, பெருமாளே = பெருமையிற்சிறந்தவரே! முகத்தை பிலுக்கி = முகத்தை நன்கு ஒழுங்கு செய்து, மெத்த மினுக்கி தொடைத்து = மிகவும் மினுக்கித் தொடைத்து, ரத்ன முலை கச்சு அவிழ்த்து அசைத்து = மணிமயமான தனத்தின் மீதுள்ள ரவிக்கையை அவிழ்த்து அசையச் செய்து, முசியாதே = சற்றும் இளைக்காமல், முழுக்க கழப்பி = காலம் முழுவதும் போக்கியும், எத்தி = வஞ்சித்தும், மழுப்பி = தாமதப்படுத்தியும், பொருள் பறித்து = வந்தவர்களிடம் பணத்தைப் பறித்து, மொழிக்கு உட்படுத்து = அவர்களை இனிய மொழிகளால் மயக்கி வசமாக்கி, அழைத்து அமளிமீதே = அழைத்துக் கொண்டு போய் படுக்கையின் மேல், நகைத்து இட்டு அழுத்தி = புன்னகை புரிந்து தழுவி, முத்தம் அளித்து களித்து = முத்தந்தந்து மகிழ்ந்து, மெத்த நயத்தில் கழுத்து இறுக்கி அணைவார்பால் = மிகவும் நயமாகக் கழுத்தை இறுக்கி அணைந்திடும் போது மாதர்களுக்கு, நடுக்கு உற்று = அஞ்சி நடுங்கி, அவர்க்கு மெத்த மனத்தை பெருக்க வைத்து = மிகவும் அவர்கள்பால் மனதை ஆசைபெருகுமாறு வைத்து, நயத்து தியக்கி நித்தம் அழிவேனோ = அம்மகளிரிடம் நயந்து வேண்டியும் அதனால் கலக்க மடைந்தும் தினந்தோறும் அடியேன் அழியக் கடவேனோ?

## பொழிப்புரை

செகக்கச்செகக்க செக்கதரிக்க தரிக்க தக்க திமித்தித்திமித்தி தித்தி என்ற ஒலியுடன் திருநடம் புரிகின்றவரும், உலகத்தின் ஒப்பற்றவரும் ஆகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! ஒருமைப்பட்ட உள்ளத்துடன் துதி செய்கின்ற அன்பர்களின் திருக்கூட்டத்துக்கு இனிய திருவருட் பேற்றினை அருள் புரிகின்றவரே! உறுதியுடன் மேற்சென்று அசைத்து பாரத்தைப் பொறுத்து இராவணன் அகந்தை மிகுந்து பேர்த்து எடுத்த திருக்கயிலாய மலையின் மீது எழுந்தருளியிருந்து, அதனை

அடுத்துள்ள கிரவுஞ்ச மலையை இடித்துப் பொடி செய்து, அடக்கித் துவையலாக்கிவிட்ட பெருமிதம் உடையவரே! முகத்தை நன்கு கழுவி மினுக்கித் துடைத்து அலங்கரித்து இரத்ன மணி மயமான தனத்தின் ரவிக்கையை அவிழ்த்து அசைத்து, சற்றும் இளைக்காமல், காலம் முழுவதும் போக்கியும், வஞ்சித்தும், தாமதப்படுத்தியும், பொருள் பறித்து இனிய மொழிகளால் வந்தவர்களை வசமாக்கி அழைத்துக்கொண்டு போய்ப் படுக்கையின் மீது, புன்னகை செய்து தழுவி, முத்தமிட்டு மகிழ்ந்து, மிகவும் நயமாகக் கழுத்தை அழுந்த அணைந்துகொள்ளும் விலைமாதர்களுக்கு அஞ்சி நடுங்கியும், அவர்கள் பால் மனதை வைத்து ஆசை பெருகி, அவர்களை நயந்து வேண்டியும், அவர்களால் கலக்கமுற்றும் தினந் தோறும் அடியேன் அழியலாமோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முன்னுள்ள நான்கு அடிகளிலும் இருமனப் பெண்டிரின் மாயச் செயல்களைக் கூறி, அம் மயக்கமற வேண்டும் என்று, இறைவன்பால் அடிகளார் வேண்டுகின்றனர்.

**ஆடும் செகத்துக் கொருத்தர் :—**

கண்ணாடியில் காணும் நிழல் அசையும் பொருட்டுத் தான் அசைவது போல், அகில உலகங்களும் ஆடுதல் பொருட்டு இறைவன் இடையறாது ஆடுகின்றார். அனவரத ஆனந்தத் தாண்டவம் எனப்படும். சிவலிங்கம் அகர உகரமாகும்.

> "எட்டிரண்டும் இதுவாம் இலிங்கமென
> எட்டிரண்டும் வெளியா மொழிந்த குரு முருகோனே"
> —(கட்டிமுண்ட) திருப்புகழ்.

இந்த சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்ட ஐந்தெழுத்தே நடராஜ உருவம்.

> எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
> நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
> சிவாயநம வென்னும் திருவெழுத்தஞ் சாலே
> அவாயமற நின்றாடு வான். —உண்மை விளக்கம்.

புளியைக் கண்டவர்க்கு நாவில் நீர் ஊறுமாப்போல், அம்பலவாணருடைய அருட்கூத்தைக் கண்டார்க்குக் கண்ணீர் பெருகும்; ஆணவ இருள் விலகும். ஆனந்த அமுதம் ஊற்றெடுக்கும்.

> புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்
> களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்

துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குன் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே. —திருமந்திரம்

அப்பரமபதியே அகில உலகங்கட்கும் தலைவர். பசுபதி; அவரே ஒருவர்; ஒப்பற்றவர்.

"உலகுயிர்க்கெலாம் பசுபதி ஒரு முதல்" என்று அரிச்சந்திர காவியம் பேசுகின்றது.

**நினைத்துத் துதித்த பத்தர் :—**

இறைவனை அநேகர் நினைக்கின்றார்கள். ஆனால் பொன்னையும் பொருளையும் நிலபுலங்களையும் பிறவற்றையும் நினைத்த வண்ணம் இறைவனையும் நினைக்கின்றார்கள். வேறு எந்த நினைப்பும் இன்றி ஒருமைப்பட்ட உள்ளத்துடன் நினைக்க வேண்டும் அவ்வண்ணம் நினைத்து, அத்தியானத்தில் ஊற்றெடுத்த பேரின்ப வெள்ளம் பொங்கி வழியும்போது துதிகள் வெளிப்படும்.

**பத்த ஜெனத்துக் கினித்த சித்தியருள்வோனே :—**

அடியார் குழாங்கட்கு இனிமையான இஷ்ட சித்திகள் அனைத்தும் முருகவேள் பன்னிரு கரங்களாலும் வழங்குவார்.

**மிசைத்துத் திடத்தொடுற்று அசைத்துப் பொறுத்தரக்கன் மிகுத்துப் பெயர்த்தெடுத்த கயிலாய :—**

## இராவணன் சாபம் பெற்றது

பிரமதேவருடைய புதல்வர் புலத்தியர். புலத்தியருடைய புதல்வர் விச்சிரவசு. விச்சிரவசு என்பவருடைய மகன் குபேரன்.

விச்சிரவசு என்ற அந்தண முனிவரிடம் கேகசி என்ற அரக்க மகள் நெடுநாள் பணிவிடை புரிந்தாள்.

மாலி, சுமாலி, மாலியவான் என்ற மூன்று அசுர வேந்தர்களில் நடுப்பிறந்த சுமாலியின் மகள் கேகசி.

இவள் புரிந்த பணிவிடையை மெச்சி என்ன வரம் வேண்டும் என்றார் விச்சிரவசு. அவள் புத்திரவரம் கேட்டாள்.

அந்த அரக்கியின்பால் விச்சிரவசு என்ற முனிவருக்குப் பிறந்தவர்கள் தசக்கிரீவன், கும்பகர்ணன், வீடணன், சூர்ப்பணகை என்ற நால்வரும்.

தசக்கிரீவன் தன் தமையனாகிய குபேரனுடன் போர் புரிந்து அவனுடைய புஷ்பக விமானத்தைக் கவர்ந்து கொண்டான்.

அவ்விமானம் ஊர்ந்து விண்மிசை சென்றான். திருக்கயிலாய மலைக்கு மேல் விமானம் செல்லாமல் தடைபட்டது. "செல்" "செல்" என்று செலுத்தினான்.

திருக்கயிலாயமலைத் திருவாயிலைப் பொற்பிரம்பு தாங்கிக் காவல் புரிகின்ற திருநந்திதேவர் நகைத்து, "தசக்கிரீவா! இது சிவமூர்த்தி எழுந்தருளியுள்ள திருக்கயிலாயமலை. இது தேவர்களும் மூவர்களும் கதிர் மதியாதி கோள்களும் விண்மீன்களும் வலம் வரத்தக்க பெருமையுடையது; நீ வலமாகப் போ" என்று கூறி அருளினார்.

தசக்கிரீவன் அகந்தையால் சினந்து, "குரங்குபோல் முகம் உடைய நீ எனக்குப் புத்தி புகட்டுகின்றனையா?" என்றான்.

திருநந்திதேவர் சிறிது சீற்றங் கொண்டு, "மூடனே! என்னைக் குரங்குபோல் என்று கூறிப் பழித்தபடியால உனது நாடு நகரங்களும் தானைகளும் குரங்கினால் அழியக் கடவது" என்று சாபமிட்டனர். இதைக் கேட்டுந் திருந்தாத அக்கொடிய அரக்கன் விமானத்தை விட்டு இறங்கி, வெள்ளி மலையைப் பேர்த்து அசைத்தான். உமாதேவியார் "பெருமானே! மலையசைகின்றதே" என்று வினவியருளினார். சிவமூர்த்தி "தேவி! ஒரு மூட அரக்கன் நம மலையைப் பேர்த்து அசைக்கின்றான்" என்று கூறி, ஊன்றிய இடச் சேவடியின் பெருவிரல் நகத்தால் ஊன்றி யருளினார்.

அவன் அப்படியே மலையின் கீழ் அகப்பட்டுக்கொண்டு என்பு முறிந்து உடல் நெரிந்து "ஓ" என்று கதறி அழுதான்.

> " அஞ்சுமேயுடன் கானகம் ஒன்றுமே
> அரக்கனைப் பொரும் கானகம் ஒன்றுமே "
> (கானகம் = கால்நகம்)

சிவமூர்த்தி நகம் ஒன்றால் அடர்க்க அகப்பட்டு அழுத இராவணனை, ஸ்ரீராமர் எழுபது வெள்ளம் வானரங்கள் புடைசூழப் பத்து நாள் போரிட்டு அழித்தார்.

ஓ என்று கதறியழுததனால் இராவணன் என்ற பேர் உண்டாயிற்று.

## கருத்துரை

கயிலைமலை மேவு கந்தவேளே! மாதர் மயக்கற அருள் புரிவாய்.

## 6

திருநில மருவிக் காலி னிருவழி யடைபட் டோடி
 சிவவழி யுடனுற் றேக பரமீதே
 சிவசுட ரதனைப் பாவை மணமென மருவிக் கோல
 திரிபுர மெரியத் தீயி னகைமேவி

இருவினை பொரியக் கோல திருவரு ளுருவத் தேகி
 யிருள்கதி ரிலிபொற் பூமி தவசூடே
 இருவரு முருகிக் காய நிலையென மருவித் தேவ
 ரிளையவ னெனவித் தார மருள்வாயே

பரிபுர கழலெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்
 பழமறை பணியச் சூல மழுமானும்
 பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக் கோவு
 பரியினை மலர்விட் டாடி அடியோர்கள்

அரஹர வுருகிச் சேசெ யெனதிரு நடனக் கோல
 மருள்செயு முமையிற் பாக ரருள்பாலா
 அலரணி குழல்பொற் பாவை திருமக ளமளிப் போரொ
 டடியவர் கயிலைக் கான பெருமாளே.

### பதவுரை

பரிபுர கழல் = திருவடியில் உள்ள சிலம்பின் ஓசையும்வீரக்கழலின் ஒலியும், எட்டு ஆசை செவிடுகள் பட = எட்டுத் திசைகளும் செவிடு படவும், முத்தேவர் = பிரமன், திருமால், உருத்திரன் என்ற மூன்று மூர்த்திகளும், பழமறை பணிய = பழமையான வேதங்களும் பணிந்து போற்றவும், சூல மழு மானும் பரிவொடு சுழல = சூலமும் மழுவும் மானும் அன்புடன் சுழலவும், சேடன் முடி நெறு நெறு என = ஆதி சேடனுடைய பணமகுடங்கள் நெறு நெறு என்று முறியவும், கோவு பரியினை மலர் விட்டு ஆடி = பசுவாகிய வாகனத்தில் திருவடி மலரை வைத்திருத்தலை விடுத்து நடனஞ் செய்து, அடியோர்கள் = அடியவர் கள், அரஹர உருகி சேசெய என = அர அர என்று கூறியும் உள்ளம் உருகியும் ஜெய ஜெய என்று போற்றி செய்ய, திரு நடனகோலம் அருள் செய்யும் = திரு நடனக் காட்சியை அருளிச் செய்து, உமையின் பாகர் அருள் பாலா = பார்வதி பாகராம் பரமசிவன் அருளிய திருக் குமாரரே! அலர் அணி குழல் பொன் பாவை = மலரை முடிந்த கூந்தலையுடைய அழகிய பாவையும், திருமகள் = திருவின் (இலக்குமி யின்) மகளுமாகியவள்ளிநாயகியின், அமளிபோரொடு = படுக்கையின் போருக்கும், அடியவர் = அடியாரிடத்தும், கயிலைக்கு ஆன = கயிலை

மலையிடத்தும் விருப்பங்காட்டும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! திருநிலம் மருவி=ஒளிவீசும் மேலைப் பெரு வெளியிடத்தையடைந்து, காலின் இரு வழி அடைபட்டு ஓடி=பிராணவாயு செல்லும்படியான இடைகலை பிங்கலை என்ற வழிகள் அடைபடும்படி ஓட்டி, சிவ வழியுடன் உற்று=சிவநெறியில் நிலைத்து நின்று, ஏகபரம் மீதே=தனித்து நிற்கும் அம் மேலிடத்தே, சிவசுடர் அதனை=சிவ சோதியை, பாவைமணம் என மருவி=பாவைக் கலியாணம்போல் கூடி, கோல திரிபுரம் எரிய தீயின் நகை மேவி=அழகிய ஆணவம் கன்மம் மயை என்ற மும்மலங்களும் எரியுமாறு தீயைக் கக்கும்படி புன்னகை புரிந்து, இருவினை பொரிய=நல்வினை தீவினை என்ற இரு வினைகளும் பொரிந்து சாம்பராகுமாறு, கோல திருவருள் உருவத்து ஏகி=அழகிய உமது திருவருளாம் வடிவில் ஈடுபட்டு,இருள் கதிர் இலி பொன்பூமி தவசுவணடே=இருளும் ஒளியும் இல்லாத அழகிய இடமாகிய தவத்தின் நெறியில்,இருவரும் உருகி=தேவரீரும் அடியேனும் குழைந்து ஒன்றுபட்டு, காயம் நிலை என மருவி=அவ்வாறு ஒன்றுபட்ட அருளுருவம் நிலையாகப் பொருந்தி, தேவர் இளையவன் என வித்தாரம் அருள்வாயே=தேவர்கள் அடியேனை இவன் இளையோன் என்று வியந்து கூறுமாறு விசித்திரமான பெரும் பேற்றினை அருள்வீராக.

## பொழிப்புரை

திருவடியில் விளங்கும் சிலம்பும் வீரக்கழலும், எட்டுத் திசைகளும் செவிடுபடுமாறு ஒலி செய்யவும், அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகளும் பழமையான வேதங்களும் பணிந்து போற்றவும், சூலமும் மழுவும் மானும் அன்போடு சுழலவும், ஆதிசேடனுடைய பணாமகுடங்கள் நெறு நெறு என்று முறியுமாறும், பசுவாகிய வாகனத்தை விடுத்து, நடனம் புரிந்து அடியார்கள் அரஹர செய செய என்று கூறி ஒலிக்கவும், திருநடனக் கோலத்தை யருள் செய்த உமை யொருபாகராம் சிவபிரானுடைய புதல்வரே! மலர் முடித்த அழகிய பாவைபோன்ற இலக்குமியின் மகளாகிய வள்ளி பிராட்டியின் படுக்கையின் இன்ப ஆடலிலும் அடியாரிடத்தும் திருக்கயிலாய மலையிலும் அன்பு கொண்ட பெருமிதம உடையவரே! ஒளி நிலத்தை யடைந்து இடா பிங்கலா என்ற இரு நாடிகளின் வழியே செல்லும் பிராணவாயுவை மாற்றி சிவநெறியில் நின்று, தனிமையான மேலிடத்தில் நின்று, சிவ சோதியை பாவை மணம்போல் அடைந்து, மும்மலங்கள் எரியுமாறு நெருப்பெழ நகைபுரிந்து, நல்வினை, தீவினைகளை எரித்துச் சாம்பராக்கி, அழகிய உமது திருவருளாம் உருவில் ஒன்றுபட்டு இருளும் ஒளியும் இல்லாத அழகிய இடத்தில் தவநெறியில் சென்று, தேவரீரும் அடியேனும் குழைந்து ஒன்ருகி, அத் தூய வடிவு நிலைத்து நிற்க அததுவிதமுற்று,

தேவர்கள், இவன் இளையோன் என்று புகழுமாறு விசித்திர மான தெய்வீகத்தை அருள்புரிவீர்.

**விரிவுரை**

**திருநில மருவி :—**

திரு—ஒளி. ஞான ஒளி வீசுகின்ற மேருவெளியில் ஏறி நிற்றல்.

"சுடர் பட்டி மண்டபமொ டாடி" —(கட்டிமுண்ட) திருப்புகழ்.

**காலி னிருவழி யடைபட் டோடி :—**

கால்—பிராணவாயு. பிராணவாயு இடை, பிங்கலை என்ற இரு நாடிகள் வழியே சென்று மீளுகின்றது. அங்ஙனஞ் செல்ல விடாமல் அந்த இரு வழிகளை அடைத்துவிட்டால், அவ் வாயு இரு நாடிகட்கும் இடையேயுள்ள வெண்மையாக வும், தாமரை நூல்போல் மென்மையாகவும் உள்ள சுழுமுனை நாடி வழி சென்று மேலைப் பெருவெளியை யடையும்.

**சிவ வழியுடனுற்று :—**

சிவயோக நெறியையடைந்து மூச்சைப் பிடித்துத் துருத்தி போல் கும்பித்து நிறுத்திச் செய்வது அடயோகம்.

திருவருள் தியானத்தினுல் பிராணன் தானே அடங்கச் செய்வது சிவயோகம்.

"அனித்த மான ஊனுளு மிருப்பதாகவே நாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்திலே குவால்மூலி புசித்து வாடு மாயாச
அசட்டுயோகி யாகாமல் மலமாயை
செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தையாகி யான்வேறென் உடல்வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியா மனோதீத
சிவச் சொரூப மாயோகி என ஆள்வாய்"
—திருப்புகழ்.

**ஏகபரமீதே :—**

ஏகம்—தனி; பரம்—மேல். கருவி கரணங்கள் யாவுங் கழன்று, முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து அப்பாலைக் கப்பாலாயுள்ள ஏகாந்தமான மேலிடத்தே ஆன்மா நிற்றல்.

"தன்னந்தனி நின்றது தானறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ ?" —அநுபூதி.

" ஏகாந்தமான பெரு வெளியானது " —அருட்பா.

" ஏகாந்த சுகந்தரு பாசாங்குச சுந்தரி"
—தேவேந்திரசங்கவகுப்பு.

"வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியை"
—அலங்காரம்.

**சிவசுடரதனை :—**

ஏகாந்த பெருவெளியில் தானே தனித்து நின்று விளங்கும் சுயஞ்சோதியைக் காணுதல்.

"தழைந்த சிவசுடர் தனை என மனதினில்
அழுந்த வுரை செய வருமுக நகையொளி
தழைந்த நயனமும் இருமலர் சரணமும் மறவேனே"
—(குரம்பை) திருப்புகழ்.

**பாவை மண மென மருவி :—**

சிறுமியர்கள் சிறு பிராயத்தில் பொம்மைக் கல்யாணம் புரிந்து மகிழ்வர் அதுபோல் இறைவனை யடைகின்ற முழு பக்குவம் இல்லையெனினும், பாவைக்குத் திருமணம் செய்து அச் சிறுமியர் மகிழ்வது போல் சிறியேன் இறைவனுடன் ஒன்றி இன்புறுவேன்.

**திரிபுரமெரியத் தீயி னகைமேவி :—**

திரிபுரம் என்பது மும்மலத்தைக் குறிக்கும்.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறிவாரே. —திருமந்திரம்.

ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று மலங்களும் வெந்து பொடியாகுமாறு ஞானமாகிய தீபபொறி சிந்தச் சிரித்தல்.

**இருவினை பொரிய :—**

பிறவிக்குக் காரணம் வினை. வினை நல்வினை, தீவினை எனப்படும். உணவு விளைகின்ற இடம் வயல். வயல், நன்செய், புன்செய் என்ற இரு பிரிவினையுடையது. நன்செய் நல்வினை; புன்செய் தீவினை. இந்த இருவினையால்தான் பிறவித் தொடர் விடாது சூழ்ந்து வருகின்றது.

"விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழல் என்றருள்வாய்" —அநுபூதி.

நல்வினை— பொன் விலங்கு; தீவினை— இரும்பு விலங்கு. இரண்டும் விலங்குதானே. ஆதலால் ஞானத் தீயினால் இந்த இரு வினைகளும் எரிந்து, பொரிந்து, கரிந்து சாம்பாராகுமாறு செய்துவிட்டால் பிறப்பு நீங்கிவிடும்.

தாவரும் இருவினைச் செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர்" —கம்பர்

"இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
ஏகபோகமாய் நீயுநானுமாய்
இறுகும்வகை பரமசுகம் அதனையருள் இடைமருதில்
ஏகநாயகா" —(அறுகுநுனி) திருப்புகழ்.

**கோல திருவரு ளுருவத்தேகி :—**

இறைவனுக்கு நம்போல் என்பு, தோல், நரம்பு இவைகளால் ஆன உடம்பு இல்லை ஆன்மாக்களுக்கு அருளும் பொருட்டு திருவருளே திருமேனியாகக் கொள்கின்றான். அத்தகைய அழகிய திருவருளுருவில் ஒன்றுபட்டு நிற்றல். அப்புடன் உப்பு ஒன்றுதல் போல.

**இருள் கதிரிலி பொற்பூமி தவளூடே :—**

ஆருதாரத்திற்குமேல் உள்ள சகஸ்ராரத்தில் சூரியனும் சந்திரனும் இன்றி, இருளும் பிறவற்றால் வரும் ஒளியும் இன்றி சுயம்பிரகாசமாய் விளங்கும்.

"ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரிலாத
நாடண்டி" —திருப்புகழ்.

**இருவரு முருகி :—**

ஆன்மாவும் பரமான்மாவும் குழைந்து ஒன்றுடன் ஒன்று பிரிவறக் குழைந்து ஒன்றாகி நிற்கும் நிலை. இறைவனை நினைக்கின்ற போது உள்ளம் உருகும். உணர்வு உருகும். இதற்கு மேற்பட்ட நிலை என்பு உருகும்.

அன்புள் ளுருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன்தானே. —திருமந்திரம்.

இதற்கு மேற்பட்ட நிலை உயிர் உருகுவது. உயிர்க்குயிராய் இறைவன் விளங்குகின்றான். தங்கத்தின் மீது இரத்தின மணி இருக்கின்றது. தங்கம் உருகியவுடன் அதில் இருந்த மணி அத் தங்கத்தில் பதிந்து விடுகின்றது. அதுபோல உயிர் உருகியவுடன் உயிர்க்குயிராயிருந்த சிவம் உயிருடன் ஒன்றிவிடுகின்றது.

"சீவனெனச் சிவனென்ன வேறில்லை" —திருமந்திரம்.

**காய நிலையென மருவி :—**

அவ்வாறு ஒன்றிய அத்திருவள் நிலை என்றும் அழியாது ஒன்றுபோல் இருக்கும்.

**தேவர் இளையவன் என :—**

என்றும் இளையோனும் முருகனுடன் ஒன்றி யான் இளமையுடன் இருப்பதைக் கண்ட தேவர்கள், "இவன் என்றும் இளையோனாய் விளங்குகின்றான்" என்று புகழ்வார்கள்.

**வித்தாரம் அருள்வாயே :—**

விசித்திரமான பேரின்பப் பெருவாழ்வு. அருணகிரிநாதர் இத் திருப்புகழில் இணையற்ற சிவாத்துவிதச் செம்பொருளை வேண்டுகின்றார்.

**பரிபுர கழலெட்டாசை செவிடுகள் பட :—**

நடராஜப் பெருமான் திருநடனம் புரிகின்றபோது, அப் பெருமானுடைய திருவடியில் விளங்கும் சிலம்பும்வீரக்கழலும் கிண் என்று ஒலிக்கின்றபோது, எண் திசைகளும் செவிடுபடு கின்றன. ஆசை—திசை.

' அணங்கார் பாகனை ஆசைதோறும் ' —கம்பர்.

**முத்தேவர் பழமறை பணிய :—**

இறைவனுடைய நடன தரிசனத்தைக் கண்டு மூவர்களும், முதுமறைகளும் புகழ்ந்து போற்றுகின்றன.

**சூல மழு மானும் பரிவொடு சுழல :—**

இறைவன் சுழன்று ஆடுவதனால் அவருடைய திருக்கரங் களில் உள்ள சூலமும், மழுவும், மானும் அசைந்து சுழன்று ஆடுகின்றன.

**சேடன் முடி நெறு நெறென :—**

இறைவன் நடனஞ் செய்யும்போது, அதனைத் தாங்கும் ஆற்றல் பெறாத ஆதிசேடனுடைய பணாமகுடங்கள் முறிவு பெறுகின்றன.

**கோவு பரியின மலர்விட்டாடி :—**

கோ—பசு. இறைவன் பசுவையும் வாகனமாகக் கொள் கின்றார்.

' பசுவேறும் எங்கள் பரமன்' —சம்பந்தர்.

**அடியோர்கள் அரஹர வுருகிச் சேசெயென :—**

சிவபெருமான் திருநடனஞ் செய்வதைத் தெரிசித்த அமரர் கள் ஆனந்த மேலிட்டு ஹர ஹர என்றும், ஜெய ஜெய என்றும் ஒலித்து இறைஞ்சி இன்புறுவர்.

## கருத்துரை

திருக்கயிலை மேவுந் திருமுருகா! சிவாத்துவிதப் பெரு வாழ்வைத் தந்தருளுவாய்.

## ஸ்ரீ சைலம்

### 7

ஒருபது மிருபது மறுபது முடனறு
முணர்வுற இருபத முளநாடி
உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு வொளிபெற விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெற அருள் புரிவாயே

பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி யிளையோனே

பெருமலை யுருவிட அடியவ ருருகிட
பிணிகெட அருள்தரு குமரேசா
பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே.

### பதவுரை

பரிவுடன் அழகிய பழமொடு=அன்போடு நல்ல பழங்களுடன், கடலைகள்=கடலை வகைகள், பயறொடு=பயறுடனே, சில பணியாரம்=சிலவகைப்பட்ட பணியாரங்கள் முதலியவைகளை, பருகிடு=உண்ணுகின்ற, பெருவயிறு உடையவர்=பெருவயிற்றினை யுடையவரும், பழமொழி எழுதிய=பழமையான மொழியாகிய மகாபாரதத்தை மேருமலையில் எழுதியருளிய, கணபதி இளையோனே=விநாயகப் பெருமானுக்குத் தம்பியே! பெருமலை உருவிட=பெரிய கிரவுஞ்சமலை ஊடுருவவும், அடியவர் உருகிட=அடியார்கள் உள்ளம் உருகவும், பிணிகெட அருள்தரு=அடியார்களின் பிறவி நோய் தொலையவும் திருவருள் புரிகின்ற, குமரஈசா=குமாரக் கடவுளே! பிடியொடு களிறுகள் நடைஇட=பெண்யானைகளுடன் ஆண்யானைகள் உலாவவும், கலை திரள்=கலைமான்களின் கூட்டம், பிணை அமர்=பெண்மான்களுடன் விரும்புகின்ற, திருமலை=திருப்பருப்பதத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! ஒருபதும் இருபதும்

*அறுபதும் உடன் அறும்=ஒரு பத்தும் இருபதும் அறுபதும் அவையுடன் ஆறும் கூடிய தொண்ணூற்றாறு தத்துவங்களின், உணர்வு உற=உண்மையையுணர்ந்து, இருபதம் உளம் நாடி= தேவரீருடைய இரண்டு திருவடிகளை உள்ளத்தில் தியானித்து, உருகிட=அதனால் உள்ளம் உருக, முழுமதி நழல் என ஒளிதிகழ்= பூரண சந்திரனது தீப்போன்ற ஒளிவீசும், வெளியொடு ஒளிபெற விரவாதே=பரவெளியின் ஒளிபெறுமாறு அதில் அடியேன் கலந்து கொள்ளாமல், தெருவினில் மரம் என=தெருவில் மரம்போல் நின்று, எவரொடும் உரை செய்து திரிதொழில்=யாரோடும் பேசிப் பேசித் திரிகின்ற தொழிலை, அவம் அது புரியாதே=அடியேன் மேற்கொண்டு வீணாக அலையாது, திருகமள் மருவிய=இலட்சுமி தேவியின் புதல்வி யாகிய வள்ளி நாயகி தழுவுகின்ற, திரள்புய=திரண்ட புயங்களை யுடையவரே! அறுமுக=ஆறுமுக சுவாமியே! தெரிசனை பெற அருள் புரிவாயே=தேவரீரது அருட்காட்சிபெற அடியேனுக்கு அருள் புரிவீர்.*

## பொழிப்புரை

அன்புடன் இனிய பழங்கள், கடலைகள், பயறு சிலவகை யான பணியாரங்கள் இவைகளை உண்ணுகின்ற பெருவயிற் றினை யுடையவரும், பழமொழியான மகாபாரதத்தை எழுதிய வருமாகிய கணபதியின் தம்பியே! பெரிய கிரவுஞ்ச மலை ஊடுருவவும், அடியார்கள் உள்ளம் உருகவும், அவர்களின் பிறவிப்பிணி நீங்கவும் அருள் செய்கின்ற குமாரக் கடவுளே! பெண் யானையுடன் ஆண் யானைகள் உலாவவும், ஆண் மான் களுடன் பெண் மான்கள் விரும்பவும் விளங்குகின்ற, திருப் பருப்பதத்தில் வாழும் பெருமிதம் உடையவரே! தொண்ணூற் றாறு தத்துவங்களின் உண்மையை யுணர்ந்து, தேவரீருடைய திருவடியை உள்ளத்தில் தியானித்து உள்ளம் உருகவும், முழு நிலாவின் ஒளிபோல் திகழும் பரவெளியின் அருள் ஒளி யைப் பெறவும் விரும்பாமல், வீதியில் மரம்போல நின்றும் கண்டவருடன் பேசித் திரியும் பயனற்ற தொழிலைச் செய்யா மல், இலக்குமி தேவியின் புதல்வியாகிய வள்ளிபிராட்டி தழுவுகின்ற திரண்ட புயாசலங்களையுடையவரே! ஆறுமுகப் பெருமானே! உமது தெரிசனையை அடியேன் பெறுமாறு திருவருள் புரியவேணும்.

## விரிவுரை

**ஒருபதுமிருபது மறுபது முடனாறு முணர்வுற :—**

ஒருபது, இருபது அறுபது, ஆறு (10+20+60+6) ஆக 96 தத்துவங்கள். தத்துவங்களின் தன்மையுணர்வது தத்துவ தரிசனை எனப்படும்.

ஆன்ம தத்துவம் 24, வித்தியா தத்துவம் 7. சிவ தத்துவம் 5. ஆக 36. மண் நீர் தீ காற்று வெளி என்ற ஐம்பூதங்களின் தன்மைகள் ஐயைந்து 25. வாயுக்கள் 10. நாடிகள் 10. கன்மங்கள் 5. அகங்காரம் 3. குணம் 3. வாக்குகள் 4. ஆக 60. ஆக மொத்தம் 96.

**இருபதம் உளநாடி :—**

நான் என்ற அகங்காரம் அற்ற இடம் ஒரு திருவடி; எனது என்ற மமகாரம் அற்ற இடம் ஒரு திருவடி. இந்த அகங்காரம் மமகாரம் அற்ற அதீத நிலையில் நிற்றலே திருவடித் தியானமாகும்.

**உளநாடி உருகிட :—**

இறைவனை நினைந்து நினைந்து உள்ளம் அழலிடைப்பட்ட மெழுகுபோல் உருகுதல் வேண்டும் உள்ளம் உருகிய அடியார்களின் இருவினை இருளை முருகன் நீக்கியருள் புரிவான். அன்றியும் அவர்கள் எண்ணிய எண்ணங்களை நிறைவேற்றி வைப்பான்.

"உருகு மடியவர் இருவினை யிருள்பொரும்
உதய தினகர இமகரன் வலம் வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே"
—(பகிர நினைவொரு) திருப்புகழ்

"முருகன் மறவாதவர் நினைப்பவை முடிக்குமவன்
உருகு மடியார் இருவினைத் தொகையறுக்குமவன்"
—பூதவேதாள வகுப்பு.

**முழுமதி தழலென ஒளிதிகழ் வெளியொடு ஒளிபெற :—**

சிவயோகத்தால் பிரமரந்திரங் கடந்து சென்ற இடத்தில் ஆயிரம் ஆயிரம் சந்திரர்கள் உதித்தாலன்ன தண்ணிய ஒளி திகழும். அந்த வெளியில் மகிழ்ந்து அருட்காட்சியில் திகழ்ந்து மகிழ்வார்.

"தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி யருள்வாயே"— (ஐங்கரனை) திருப்புகழ்.

"பலகோடி வெண்மதி போலவே வருவாயே"
—(மதனேவிய) திருப்புகழ்.

**தெருவினில் மரமென எவரொடும் உரை செய்து திரிதொழில் அவமது புரியாதே :—**

மரம் தன்னையும் அறியாது. தன்னை வைத்தவன் யார்? தண்ணீர் வார்த்து வளர்க்கின்றவன் யார்? என்பதையும் அறியாது நிற்கும். அதுபோல், ஆன்ம இலக்கணம் யாது?

ஆன்மாவாகிய நமக்குத் தலைவன் யாவன்? அப்பரமனை யடையும் வழி யாது? உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்ன? என்பனவற்றையுணராது, நடக்கின்ற மரம் போல் திரிந்து, கண்ட மக்களுடன் வீண் பேச்சுக்களைப் பேசி அவத் தொழிலைப் புரிகின்றனர்.

**திருமகள்மருவிய :—**

திரு—இலக்குமிதேவி. இலக்குமியின் புதல்வி வள்ளி நாயகி.

திருமாலின் கண்மலரில் பிறந்த சுந்தரவல்லி, முருக வேளின் கட்டளைப்படி தொண்டை நன்னாட்டில் வள்ளிமலையில் தவஞ் செய்து கொண்டிருந்தார். அங்கு நாராயணர் சிவ முனிவராகப் பிறந்து தவஞ் செய்து கொண்டிருந்தார். மகா லட்சுமியே மானாக வந்து உலாவினாள். அம்மானை அம் மாதவர் விரும்பி நோக்கினார். அம்மான் வயிற்றில் சுந்தரவல்லி கருவாகி, வள்ளிக்குழியில் பிறந்தாள். வள்ளிக்குழியில் பிறந்த படியால் வள்ளியென்ற நாமம் பெற்றாள்.

திருமாலின் அவதாரமாகிய உபேந்திரன் நம்பியாகப் பிறந் தான். நம்பிராஜன் வள்ளிக்குழியில் கிடந்து அழுது கொண் டிருந்த வள்ளி பிராட்டியைக் கொண்டு போய் இனிது வளர்த் தான்.

**பரிவுடன் அழகிய பழமொடு :—**

பரிவு—அன்பு. அன்புடன் அடியார்கள் நிவேதிக்கின்ற நல்ல கனிகளை கணபதி உண்டு அவர்கட்கு அருள் புரிவார்.

**கடலைகள் :—**

நிலக்கடலை, வேர்க்கடலை, குண்டுக் கடலை என்ற பலவகை யான கடலைகள்.

அன்றி, கடலை கள் எனப் பதச்சேதம் புரிந்து, கடலையும், கள்—தேனையும் என்றும் பொருள் கொள்ளலாம்.

**பெருவயிறுடையவர் :—**

அகில உலகங்களையும் தமது வயிற்றினுள் அடக்கியவர் என்ற குறிப்பை விநாயகருடைய பெருவயிறு உணர்த்து கின்றது.

**பழமொழி எழுதிய கணபதி :—**

பழமொழி—மகாபாரதம். வியாச முனிவர் பாட உலகம் உய்யும்பொருட்டு விநாயகமூர்த்தி வடமேருகிரியில் தமது ஞானமாகிய கோட்டினால் எழுதியருளினார்.

> "இலகுகடலைகற் கண்டு தேனொடும்
> இரதமுறு தினைப் பிண்டி பாகுடன்
> இனிமையினுகருற் றெம்பிரா னொரு கொம்பினாலே

எழுதென மொழியப் பண்டுபாரதம்
வடகன சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய பவளக் குன்று" —(அலகிலவுணரை) திருப்புகழ்.

பிணிகெட அருள்தரு குமரேசா :—

அடியார்களுடைய உடற்பிணிகளையும் உயிர்ப்பிணியாகிய பிறவி நோயையும் அகற்றும் மருத்துவ மன்னர் முருகவேள். அதனால்,

"பவரோக வயித்தியநாதப பெருமாளே"

என்கின்றார் திருத்தணித் திருப்புகழில்.

திருமலை :—

திருமலை என்பது திருப்பருப்பதம் என்ற திருத்தலம். இது ஸ்ரீசைலம் எனவும் வழங்கும். அரிய திருத்தலம். சிலாதனர் செய்த வேள்வியில் திரு நந்திதேவர், திரு அவதாரம் புரிந்த இடம். இங்குள்ள சுவாமி மலலிகார்ச்சுனர். பன்னிரு ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று. ஸ்ரீசைலத்தின் சிகரத்தைத் தெரிசித்தவர்க்கு மறுபிறப்பு இல்லை என்று சிவாகமம் கூறுகின்றது.

"ஸ்ரீசைல சிகரம் த்ருஷ்ட்வா புனர்ஜன்ம நவித்யதே"

மிகுந்த புண்ணியம் புரிந்தவர்க்கே இத்திருத்தலத்தைத் தெரிசிக்கும் பேறு கிடைக்கும் மூவர் தேவாரங்களும் பெற்றது.

## கருத்துரை

திருப்பருப்பதம் மேவிய திரு முருகா! உமது தெரிசனையைத் தந்து அருள்வாய்.

## திருவேங்கடம்

## 8

கறுத்ததலை வெளிறு மிகுந்து
மதர்த்தஇணை விழிகள் குழிந்து
கதுப்பிலுறு தசைகள் வறண்டு செவிதோலாய்க்
கழுத்தடியு மடைய வளைந்து
கனத்தநெடு முதுகு குனிந்து
கதுப்புறுப லடைய விழுந்து தடுநீர்சோர்

உறக்கம்வரு மளவி லெலும்பு
குலுக்கிவிடு மிருமல் தொடங்கி
உரத்தகன குரலு நெரிந்து தடிகாலாய்
உரைத்தநடை தளரு முடம்பு
பழுத்திடுமுன் மிகவும் விரும்பி
உனக்கடிமை படுமவர் தொண்டு புரிவேனோ
சிறுத்தசெலு வதனு ளிருந்து
பெருத்ததிரை யுததி கரந்து
செறித்தமறை கொணர நிவந்த ஜெயமாலே
செறித்தவளை கடலில் வரம்பு
புதுக்கியிளை யவனோ டறிந்து
செயிர்த்தஅநு மனையு முகந்து படையோடி
மறப்புரிசை வளையு மிலங்கை
யரக்கனொரு பதுமுடி சிந்த
வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே
மலர்க்கமல வடிவுள செங்கை
அயிற்குமர குகை வழிவந்த
மலைச்சிகர வடமலை நின்ற பெருமானே.

## பதவுரை

சிறுத்த செலு அதனுள் இருந்து=சிறிய மீன் செதிளில் மீனுருவங் கொண்டு, பெருத்த திரை உததி கரந்து செறித்த=பெரிய அலைகளுடன் கூடிய கடலின்கண் ஒளித்து வைத்த, மறை கொணர நிவந்த=வேதங்களைக் கொணரும் பொருட்டுத் தோன்றிய, ஜெயமால்=வெற்றியுடைய திருமாலும், ஏ செறித்து=கணையைச் செலுத்தி, அ வளை கடலில் வரம்பு புதுக்கி=அந்த வளைந்த சமுத்திரத்தில் அணையைப் புதுக்கி, இளையவனோடு=இலக்குவனோடு, அறிந்து செயிர்த்த=இராவணனுடைய நிலையை அறிந்து சீறிய, அநுமனையும் உகந்து=அநுமனுடன் மகிழ்ந்து, படைஓடி=படையைச் செலுத்தி, மறப்புரிசை வளையும் இலங்கை=வீரம் பொருந்திய மதில்கள் சூழ்ந்துள்ள இலங்கையில் வாழ்ந்த, அரக்கன்=இராவணனுடைய, ஒருபது முடி சிந்த=பத்துத் தலைகளும் அற்று விழுமாறு, சிலை வளைத்த=வில்லை வளைத்த, விஜயமுகுந்தன்=சிறந்த வெற்றியுடையவரும் ஆகிய முகுந்தனுடைய, மருகோனே=திருமருகரே! மலர்க்கமல வடிவு உள செம் கை=தாமரை மலர் போன்ற வடிவுடைய சிவந்த திருக்கரத்

தில், அயில் குமர = வேல் ஏந்திய குமாரக் கடவுளே! குகை வழி வந்த = குகை வழியேவந்து, மலை சிகர வடமலை நின்ற = மலையாகிய சிகரங்களையுடைய திருவேங்கட மலையில் நிற்கும், பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! சறுத்த தலை வெளிறு மிகுந்து = கறுத்த மயிருடன் இருந்த தலை வெண்மை நிறத்தை மிகுதியாக அடைந்து, மதர்த்த இணைவிழிகள் குழிந்து = செழித்த இருகண்களும் குழிவிழுந்து ஒடுங்கி, கதுப்பில் உறு தசைகள் வறண்டு = கன்னங்களில் இருந்த சதைகள் வற்றி, செவி தோலாய் = காதுகள் தோலாய் மெலிய, கழுத்து அடியும் அடைய வளைந்து = கழுத்தின் அடிப்பாகம் முழுதும் வளைந்து, கனத்த நெடு முதுகு குனிந்து = பருத்திருந்த நீண்ட முதுகு குனிந்து குறுக, கதுப்பு உறு பல் அடைய விழுந்து = தாடையில் இருந்த பல் யாவும் விழுந்து ஒழிய, உதடு நீர் சோர் = உதடுகளில் சொள்ளு ஒழுக, உறக்கம் வரும் அளவில் = தூக்கம் வரும் சமயத்தில், எலும்புகுலுக்கி விடும் இருமல் தொடங்கி = எலும்புகளைக் குலுக்கித் தள்ளும்படி இருமல் வரவும், உரத்த கன குரலும் நெரிந்து = வலிமையும் உறுதியும் கொண்ட குரல் நெரிபட்டு அடங்க, தடிகாலாய் = கைத்தடி கால் போல் உதவ, உரத்த நடை தளரும் = உரம் உள்ள நடை தளர்ந்து போகும், உடம்பு பழுத்திடுமுன் = இந்த உடம்பு முதுமையடைவதற்குமுன், மிகவும் விரும்பி = மிகுந்த அன்புவைத்து, உனக்கு அடிமைபடும் அவர் தொண்டு புரிவேனே = தேவரீருக்கு அடிமை பூண்டுள்ள தொண்டர்களுக்கு அடியேன் தொண்டு புரியமாட்டேனே?

## பொழிப்புரை

சோமுகன் என்ற அரக்கன், பெரிய அலைகள் வீசுகின்ற கடலில் வேதங்களை மறைத்து வைத்தபோது, மீன் உருவங் கொண்டு, அவ்வேதங்களைக் கொணர்ந்தவரும், வெற்றியுடைய திருமாலும், கடலின்மீது கணை தொடுத்து, அணைகட்டி, இலக்குமணனோடு இருந்து, இராவணனது தன்மையை அறிந்து சீற்றமடைந்த அநுமனை மகிழ்ந்து, படைகளைச் செலுத்தி, வீரம் பொருந்திய மதில்கள் சூழ்ந்த இலங்கையில் வாழ்ந்த இராவணனுடைய பத்துத் தலைகளும் அற்று விழும்படி, கோதண்டத்தை வளைத்த, சிறந்த வெற்றி படைத்தவரும் ஆகிய நாராயணமூர்த்தியின் திருமருகரே! தாமரை மலர் போன்ற வடிவுள்ள திருக்கரத்தில் வேலையேந்திய குமாரக் கடவுளே! குகை வழியே வந்து, மலையாகிய சிகரத்தையுடைய திருவேங்கட மலைமீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! கருமையான தலைமயிர் நரைத்தும், செழித்த இருகண்கள் குழிந்தும், கன்னத்தில் உள்ள சதைகள் வற்றியும், காதுகள் தோலாகித் தொங்கியும், கழுத்தின் அடிப்பகுதி முழுதும் வளைந்தும், நீண்டு வலிமையாயிருந்த முதுகு கூனலாகியும், தாடையில் உள்ள பற்கள் உதிர்ந்தும், உதட்டில் எச்சில் நீர்

ஒழுகியும், தூக்கம் வரும்போது, எலும்புகள் அப்படியே குலுங்குமாறு இருமல் வந்தும், உரத்த—வலிய குரல் நடுங்கியும் தடி ஊன்றியும், நடை தடுமாறியும், உடம்பு முதுமைப் பருவத்தை யடையுமுன்னர், தேவரீருடைய திருத்தொண்டர்கட்கு அடியேன் மிக்க அன்புடன் தொண்டு செய்ய மாட்டேனோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் இளமை நிலையாமையைப் பற்றி அடிகளார் அழகாக எடுத்து உரைக்கின்றார். நரை திரை மூப்பு ஆகிய இவைகளால் இந்த உடம்பு பெருந் துன்பம் எய்தும்.

**மிகவும் விரும்பி உனக்கடிமை படுமவர் தொண்டு புரிவேனோ?:—**

இறைவனுடைய திருத்தொண்டர்கட்கு மிகுந்த நேசத்துடன தொண்டு புரிவதே முத்தி பெறுவதற்கு எளிய வழியாகும். தொண்டர்க்குத் தொண்டு புரிவோர் எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவர்.

இறைவனுக்குத் தொண்டு புரிவது ஒரு மடங்கு பயனும் தொண்டர்க்குத் தொண்டு செய்வது இருமடங்கு பயனும் விளைவிக்கும். ஏனெனில், தொண்டர் உள்ளத்தில இறைவன் உறைகின்றான் ஆதலின் இருமடங்காகின்றது. மானக் கஞ்சாற நாயனாரைப்பற்றிக் கூறவந்த சேக்கிழார் பெருமான், அவருடைய அடியாரின் அடித்தொண்டினைக் கூறும் திறங் காண்க.

> பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின்
> அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
> தணிவில்பெரும் பேறுடையார் தம்பெருமான் கழல்சார்ந்த
> துணிவுடைய தொண்டர்க்கே ஏவல்செயுந் தொழில்பூண்டார்.
>
> —பெரியபுராணம்.

**சிறுத்தசெலு......கொணர நிவந்த:—**

செலு—மீன் சிறை.

சோமுகன் என்ற அரக்கன் பிரமதேவர்பாலிருந்த வேதங்களை அவர் அறியாவண்ணம் கவர்ந்து சென்று கடலில் ஒளித்து வைத்தான். திருமால் கடலில் மீனாக அவதரித்து சோமுகனைக் கொன்று, நான்கு வேதங்களையும் கொணர்ந்து பிரமதேவர் பால் தந்து அருள் புரிந்தார்.

**ஏ செறித்தவனை கடலில் வரம்பு புதுக்கி :—**

ஸ்ரீராமர் * திருப்புல்லணையில் சாய்ந்து ஏழு நாட்கள் வருணனை வழிபட வேண்டி மனம் ஒருமைப்பட்டுக் கிடந்தார். வருணன் வெளிப்படாமை கண்டு வெகுண்டு கடல்மீது பாணத்தை விடுத்தார். கடல் வெந்தது. வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து, ஸ்ரீராமரைத் தஞ்சம் புகுந்து, "பெருமானே! புறக்கடலில் இரு பெரிய திமிங்கலங்கள் புரிந்த போரை மாற்றிச் சமாதானஞ் செய்யும் கருமத்தில் ஈடுபட்டிருந்தேன். அதனால் நீங்கள் நினைத்ததை உணர்ந்தேனில்லை. மன்னித்தருள்க. கடலில் அணைகட்ட அடியேன் உதவுகின்றேன்" என்று கூறி வேண்டிக்கொண்டான்.

பின்னர், ராமர் "நளன்" என்ற வானர வீரனைக் கொண்டு, ஏனைய வானரங்கள் மலைகளைக் கொணர்ந்து கொடுக்கச் சேது பந்தனம் புரிந்தார்.

**குகைவழி வந்த மலைச்சிகர வடமலை :—**

முருகப்பெருமான் ஒரு சமயம் ஒரு திருவிளையாடலையுன்னி, உமையம்மையாருடன் பிணங்கி, கயிலாய மலையை விடுத்து நீங்கி, பாதலம் போய் அங்கிருந்து, ஒரு குகை வழியே வந்து, திருவேங்கட மலையில் தங்கினார். இதனை, கந்தபுராணம் வழிநடைப் படலத்தில் கச்சியப்ப சிவாச்சாரியர் கூறுகின்றார்.

> அண்ட மன்னுயிர் ஈன்றவளுடன் முனிவாகித்
> தொண்டகங் கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
> மண்டு பாதலத் தேகியே ஓர்குகை வழியே
> பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்.

## கருத்துரை

திருவேங்கடமலை மேவும் திருமுருகா! அடியேன் தொண்டருக்குத் தொண்டு செய்ய அருள்செய்.

---

* இராமர் திருப்புல்லணையில் இருந்த திருத்தலம் திருப்புல்லாணி என்று இப்பொழுது அழைக்கப்படுகிறது. இராமநாதபுரம் அருகே உள்ளது.

## 9

கோங்கிள நீரிளக வீங்குப யோதரமும்
வாங்கிய வேல்விழியும் இருள்கூரும்
கூந்தலு நீள்வளைகொள் காந்தளு நூலிடையும்
மாந்தளிர் போல்வடிவும் மிகநாடிப்

பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு
தீங்குட னேயுழலும் உயிர்வாழ்வு
பூண்டடி யேனெறியில் மாண்டிங னே நரகில்
வீழ்ந்தலை யாமலருள் புரிவாயே

பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுநியும்
வேங்கையு மாய்மறமின் னுடன்வாழ்வாய்
பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக
பாண்டிய னீறணிய மொழிவோனே

வேங்கையும் வாரணமும் வேங்கையு மானும்வளர்
வேங்கட மாமலையி லுறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றுதுதவு பெருமாளே.

### பதவுரை

பாங்கியும் = தோழியும், வேடுவரும் = வேடர்களும், ஏங்கிட = திகைக்கும்படியாக, மாமுநியும் = சிறந்த தவமுநிவராகவும், வேங்கையும் ஆய் = வேங்கை மரமாகவும் வடிவங்கொண்டு, மறமின் உடன் வாழ்வாய் = மின்னல்போன்ற வடிவுடைய வேடர் மங்கையாகிய வள்ளி பிராட்டியுடன் வாழ்பவரே! பாண்டவர் தேர் கடவும் = பாண்டுமகனாகிய அர்ச்சுனருடைய தேரைச்செலுத்திய, நீண்டபிரான் மருக = நெடியவராகிய திருமாலின் மருகரே! பாண்டியன் நீறு அணிய = கூன்பாண்டியன் திருநீறு அணியும்படி, மொழிவோனே = "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத்தைப் பாடியவரே! வேங்கையும் = புலியும், வாரணமும் = யானையும், வேங்கையும் = வேங்கை மரமும், மானும் வளர் = மானும் வாழ்ந்து வளர்கின்ற, வேங்கட மாமலையில் உறைவோனே = பெருமை மிக்க திருவேங்கட மலையில் வாழ்கின்றவரே! அடியர் வேண்டியபோது = அடியார்கள் வேண்டிய போது, வேண்டிய போகம் அது = அவர்கட்கு விரும்பிய சுகங்களை, வேண்ட = அவர்கள் விரும்பிக் கேட்டபோது, வெறாத உதவு பெருமாளே = வெறுக்காமல் வழங்குகின்ற பெருமையிற் சிறந்தவரே! கோங்கு = கோங்கின் அரும்பு, இளநீர் = இளநீர் என்ற இரண்டும்,

இளக = தோல்வியடையுமாறு, வீங்கு பயோதரமும் = பருத்து வளர்ந்துள்ள தனங்களும், வாங்கிய வேல் விழியும் = செலுத்தப்பட்ட வேல் போன்ற கண்களும், இருள் கூரும் கூந்தலும் = இருள் மிகுந்த கூந்தலும், நீள் வளைகொள் காந்தளும் = பெரிய வளையல்கள் அணிந்துள்ள காந்தள் மலர்போன்ற கரங்களும், நூல் இடையும் = நூல்போன்ற மெல்லிய இடையும், மாந்தளிர்போல் வடிவும் = மாந்தளிர்போன்ற மேனியும் ஆகிய இவைகளை, மிக நாடி = மிகவும் விரும்பி, பூ கொடியார் கலவி = மலர்க்கொடி போன்ற மாதர்களின் சேர்க்கையை, நீங்க அரிது ஆகி = விடுவதற்கு முடியாதவனாகி, மிகு தீங்கு உடனே உழலும் = மிகுந்த தீச்செயல்களோடு திரிகின்ற, உயிர் வாழ்வு பூண்டு = உயிர் வாழ்க்கையை மேற்கொண்டு, அடியேன் நெறியில் மாண்டு = அடியேன் அந்த அவநெறியிலேயே கிடந்து இறந்து, இஙனே நரகில் வீழ்ந்து அலையாமல் = இங்ஙனம் நரகிலே விழுந்து அலையாமலிருக்க, அருள் புரிவாயே = திருவருளைப் புரிவீராக.

## பொழிப்புரை

தோழியும், வேடர்களும் திகைக்குமாறு, வேங்கை மரமாகி நின்றும், தவமுனிவராக வந்தும், வள்ளிபிராட்டியை மணந்து வாழ்பவரே! அர்ச்சுனப் பெருமானுடைய தேரைச் செலுத்திய நெடியவராம் திருமாலின் திருமருகரே! கூன் பாண்டியன் திருநீறு தரிக்குமாறு "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத்தைப் பாடியருளியவரே! புலியும், யானையும், வேங்கை மரமும், மானும் வாழ்ந்து வளர்கின்ற திருவேங்கட மலையில் உறைபவரே! அடியார்கள் வேண்டிய சுகங்களை அவர்கள் விரும்பியபோதெல்லாம் வெறுக்காமல் வழங்கியருளும் பெருமிதம் உடையவரே! கோங்கின் அரும்பும், இளநீரும் நாணுமாறு பருத்து வளர்ந்துள்ள தனங்களும், செலுத்திய வேல் போன்ற கண்களும், இருள் மிகுந்த கரிய கூந்தலும், பெரிய வளையல்கள் தரித்துள்ள காந்தள் மலர் போன்ற கரங்களும், நூல் போன்ற மெல்லிய இடையும், மாந்தளிர் போன்ற மேனியும் ஆகிய இவைகளை மிகவும் விரும்பி மலர்க்கொடி போன்ற பெண்களின் சேர்க்கையை விட முடியாதவனாகி, தீமையுடனே திரிகின்ற உயிர் வாழ்க்கையைக் கொண்டு, அடியேன் அத் தீ நெறியிலேயே நின்று இறந்து, இவ்வண்ணமே நரகில் விழுந்து அலையாத வண்ணம் அருள் புரிவீராக.

## விரிவுரை

**கோங்கு :—**

கோங்கின் அரும்பு தனத்திற்கு உவமையாக விளங்கும்.

**வாங்கிய வேல் :—**

வாங்குதல்—செலுத்துதல். இந்தப் பொருளில் வேல் வாங்கு வகுப்பு என வருவதைக் காண்க.

"கால் வாங்கி நிற்கும் களிறருள் கிழத்தி கழுத்தில் கட்டும்
நூல் வாங்கிடாதன்று வேல் வாங்கி பூங்கழல்நோக்கு! நெஞ்சே."
—அலங்காரம்.

**காந்தள் :—**

காந்தள் என்பது ஒரு மலர். இது குறிஞ்சி நிலத்தில் மலர்வது. சிவப்பாகவும் அழகாகவும் இருக்கும். முருகனுக்கு உரிய மலர்.

"சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணரி மிலைந்த சென்னியன்"
—திருமுருகாற்றுப்படை.

இம் மலர் மகளிரது கரத்துக்கு உவமையாகும்.

"மென்காந்தள் கையேற்கும் மிழலையாமே"
—சம்பந்தர் தேவாரம்.

இங்கே காந்தள் என்பது உவமையாகு பெயராக கரத்தைக் குறிக்கின்றது.

**பாங்கியும் வேடுவரும் எங்கிட :—**

வள்ளி பிராட்டியை மணஞ் செய்யும்பொருட்டு முருகவேள் வள்ளிமலையில் வேங்கை மரமாகவும், விருத்த வேதிய முனிவராகவும் ஆனார். அப்போது, வள்ளிநாயகியின் தோழியும், வேடுவர்களும் 'ஆ' என்று திகைத்து நின்றார்கள்.

**பாண்டவர் தேர் கடவு நீண்ட பிரான் :—**

திருமால் இராமாவதாரம் எடுத்தபோது சூரியகுமாரனாகிய சுக்ரீவனுக்கு உதவியாக நின்று இந்திரகுமாரனாகிய வாலியை வதைத்தார். அதற்கு நேர்மாறாக, கிருஷ்ணாவதாரத்தில் இந்திர குமாரனாகிய அர்ஜுனனுக்கு உதவியாகத் தேர் ஓட்டி, சூரிய குமாரனாகிய கர்ணனை வதைத்தார்.

திருமால் நெடியவர். ஆதலால் அவருக்கு நெடியோன் என்று ஒரு பேருண்டு.

"உவணபதி நெடியவனும்" —(கரிய குழல்) திருப்புகழ்.

**வேண்டிய போதடியர் வேண்டிய போகமது வேண்ட வெருதுதவு :—**

முருகவேள் தன்னை நினைக்கின்ற அடியார்கள், எதனை எதனை எப்போது எப்போது விரும்பி வேண்டுவார்களோ, அதனை அதனை அவ்வப்போது, மறுக்காமல்—வெறுக்காமல், வழங்குவர்.

## கருத்துரை

திருவேங்கடமலைமேவும் திருமுருகா! அவலநெறி சென்று அருநரகிடை உழலாவண்ணம் காத்தருள்.

## 10

சாந்தமில் மோகவெரி காந்திய வாவனில
  மூண்டவி யாதசம யவிரோத
சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுலகர்
  தாந்துணை யாவரென மடவார்மேல்

ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு
  தோய்ந்துரு காஅறிவு தடுமாறி
ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன்வசம்
  யான்தனி போய்விடுவ தியல்போதான்

காந்தளி னானகர மான்தரு கானமயில்
  காந்தவி சாகசர வணவேளே
காண்டகு தேவர்பதி யாண்டவ னேசுருதி
  யாண்டகையே யிபமின் மணவாளா

வேந்தகு மாரகுக சேந்தம யூரவட
  வேங்கட மாமலையி லுறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
  வேண்டவெ றுதுதவு பெருமாளே.

### பதவுரை

காந்தளின் ஆனகர = காந்தள் மலரைப் போன்ற திருக்கரத்தை யுடையவரே! மான்தரு = மானால் தரப்பட்ட, கானமயில் = காட்டில் வாழ்ந்த மயிலைப் போன்ற சாயலையுடைய வள்ளியம்மையாருடைய, காந்த = கணவரே! விசாக = விசாக நட்சத்திரத்திலே அனற் பிழம் பாக வெளிப்பட்டவரே! சரவண = சரவண தடாகத்தில் தோன்றின வரே! வேளே = எல்லோராலும் விரும்பத்தக்கவரே! காண்தகு தேவர் பதி ஆண்டவனே = பார்ப்பதற்குத் தகுதியான (பேரழகுடைய) பொன்னுலகத்தை (அசுரரிடமிருந்து மீட்டு) ஆட்கொண்டவனே! சுருதி ஆண் தகையே = வேதங்களால் துதிக்கப்பெற்ற சிறந்த வீரரே! இபமின் மணவாளா = தெய்வயானை யம்மையாருடைய கொழுநரே! வேந்த = அரசரே! குமார = என்று மகலாத இளமையுடையவரே! குக = ஆன்மாக்களின் இதய குகையில் உறைபவரே! சேந்த = சேந்தரே! மயூர = மயில்வாகனத்தை யுடையவரே! வடவேங்கட மா மலை யில் = தமிழ் நாட்டிற்கு வட எல்லையாகவுள்ள திருவேங்கடம் என்னும் பெருமை தங்கிய திருமலையில், உறைவோனே = எழுந்தருளி யவரே! அடியர் = திருவடிக்குத் தொண்டு பூண்ட அடியவர்கள்

வேண்டிய போது=விரும்பிய சமயங்களிலெல்லாம், வேண்டிய போகம் அது=விரும்பிய போகபாக்கியங்களை, வேண்ட=அவர்கள் விரும்பிக்கேட்க, வெருது உதவும்=வெறுக்காமல் வழங்கியருள் புரிகின்ற, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! சாந்தம் இல்= பொறுமை சிறிதுமில்லாத, மோக எரி காந்தி=மோகத்தினு லுண்டாகிய நெருப்பு மிகவும் வெப்பத்தைச் செய்யவும், அவா அனிலம் மூண்டு=ஆசையாகிய பெருங்காற்று மிகுந்து வீசவும், அவியாத=ஒருபோதும் ஓயாத, சமய விரோத="என் சமயம் மெய்; உன் சமயம் பொய்" என்று வாதிட்டு போராடிப் பகை கொள்ளச் செய்யும், சாம்கலை=அழிகின்ற சாத்திரமாகிய, வாரிதியை=பெருங்கடலை, நீந்த ஒணாது=கடக்க முடியாது, உலகர் தாம் துணை ஆவர் என= உலகிலுள்ள மனைவிமக்கள் தமர் நண்பராதியோர் ஆவிக்குத்துணை செய்வர் என்று நம்பியும், மடவார்=பெண்களுடைய, மேல் ஏந்து= உடலில் தாங்கிக்கொண்டிருப்பதும், வார்=இரவிக்கையுடன் கூடியதும், மூளரி=தாமரை மொட்டைப்போல்இருப்பதும், சாந்து அணி= சந்தனக் கலவை தரித்துக்கொண்டிருப்பதுமாகிய, இளமார்பின் ஒடு தோய்ந்து=தனங்களுடன் கலந்து, உருகா=உள்ளம்உருகி, அறிவு தடுமாறி=புத்தி தடுமாற்றத்தை யடைந்து, ஏங்கிடவும்=ஏக்கத்தை யடைந்தும் உள்ள அடியேனுடைய, ஆர் உயிரை=அருமையான ஆவியை வாங்கிய காலன் வசம்=பற்றிய காலனுடைய வசப்பட்டு, யான் தனி போய் விடுவது=அடியேன் துணையின்றி தனித்து நரக லோகத்திற்குப் போய்விடுவது, இயல்போ தான்=தகுதியாகுமோ?

## பொழிப்புரை

காந்தள் மலர் போன்ற திருக்கரங்களை யுடையவரே! மான் பெற்ற மயில் போன்ற வள்ளி பிராட்டியாருடைய மகிணரே! விசாகரே! சரவணப் பொய்கையில் தோன்றியவரே! யாவராலும் விரும்பப்படுகின்றவரே! பார்க்கத்தக்கதாகிய தேவலோகத்தைச் சூராதியவுணரிடமிருந்து மீட்டுகாப்பாற்றியவரே! வேதங்களால் துதிக்கப்பெற்ற சிறந்த வீரரே! தெய்வயானை யம்மையாருடைய கணவரே! எப்பொருட்கு மிறைவரே! என்று மிளையவரே! ஆன்மாக்களுடைய உள்ளக் குகையில் உறைபவரே! சேந்தரே! மயில் வாகனரே! வட திசையிலுள்ள திருவேங்கட மாமலையில் வாழ்பவரே! அடியார்கள் வேண்டியபோதெல்லாம் வேண்டிய போகங்களை வேண்டும்போது வெறுக்காமல் வழங்கியருள் செய்கின்ற பெருமித முடையவரே! பொறுமை என்பது சிறிதுமில்லாமல் மோகமாகிய தீ மூண்டு வெப்பத்தை யுண்டு செய்யவும், ஆசையாகிய சண்ட வாயு வீசவும், ஒருபோதும் ஓயாத விரோதத்தை யுண்டுபண்ணும் அழிகின்ற சமயக் கலைகளாகிய

கடலைக் கடக்க வொண்ணாது; (என உணராது அதில் சுழன்றும்) உலகிலுள்ள மனைவி மக்கள் சுற்றம் நண்பராதியோரை உயிர்க்குத் துணையென எண்ணியும், கச்சணிந்து களபங்களை யணிந்து தாமரை மொட்டை யொத்து இருக்கும் பெண்களுடைய இளமுலைகளிற் கலந்தும், (காமாக்கினியால்) உள்ளம் உருகியும், அறிவு தடுமாற்றத்தை யடைந்தும் அடியேன் ஏங்கியிருக்கும் வேளையில் எனது அருமையான ஆவியைக் காலன் வந்து பற்றிக்கொண்டு செல்ல, அடியேன் அவன் வசப்பட்டுத் தனியே நரகக் குழியை நாடிச் சென்றுவிடுவது தக்கதாமோ?

## விரிவுரை

**சாந்தமில் :—**

சாந்தம்—பொறுமை; மனிதனுக்குச் சிறந்த அணிகலன் பொறுமையேயாம். தவமென்னும் பைங்கூழைச் செய்வதற்கு பொறையென்னுந் தண்ணீர் இன்றியமையாததாம். பொறுமையின்றி பிறர் குற்றத்தைக் கண்டு சினங்கொண்டால் பல நாள் பாடு பட்டுச் செய்த தவம் ஒரு கணத்தில் அழிந்து போம். பொறையின்றி கோபத்தினால் கௌசிக முனிவன் பல்லாயிர மாண்டுகள் வருந்திச் செய்த நற்றவத்தை வறிதாக்கினன். இவ்வரிய கருத்தை நம் வள்ளுவர், "பட்டினி கிடந்து தவம் செய்வோர் மிகவும் பெரியவர்; ஆனால் அவர் பிறர் கூறும் கடுஞ்சொல்லைக் கேட்டுப் பொறுக்குஞ் சாந்த சீலருக்குப் பின்னிற்பவர்தான்.

> "உண்ணாது நோற்பார் பெரியர்; பிறர்சொல்லும்
> இன்னாச்சொல் நோற்பாரின் பின்"

"உண்ணாது நோற்பாரினும் பெரியர் பொறுமை யுடையரே" என்று மிக அழகாக உபதேசிக்கின்றார்.

"சாந்தமுலேக சௌக்யமுலேது" (சாந்தமில்லை அதனால் சௌக்யமில்லை). என்கிறார் தியாகய்யர் அவர்கள். இதன் ஆழத்தையும் அருமையும் சிந்தித்தால் சாந்த சீலர்களாக வாழ்வார்கள்.

**மோக எரிகாந்தி :—**

மோகம்—இது உட்பகை ஆறில் ஒன்று. இதைப் பெருந் தீயாக உருவகப் படுத்தினார்.

**அவா அனிலம் :—**

மோகமாகிய தீயை வளர்ப்பதற்கு ஆசையாகிய காற்றும் துணை செய்கின்றது. அதனால் மோகத்தீ மிகவும் மூண்டெரிய ஆரம்பித்து விட்டது. "ஆசையாகிய பெருங்காற்றூடு" என்றார் தாயுமானார்.

**அலியாத சமய விரோத சாங்கலை :—**

சமய சாத்திரங்கள் ஒன்றோடொன்று பகைத்து நிற்பன. அச்சமய வெறி கொண்டோரும் ஒருவரை யொருவர் தாக்கி உள்ளும் புறம்பும் பகைத்து அமைதியின்றி அலைந் துழல்வர்.

"கலைகொடு பவுத்தர்காம கருமிகள் துருக்கர்மாய
கபிலர்பக ரக்கணுதர் உலகாயர்
கலகமிடு தர்க்கர் வாம பயிரவர் விருத்தரோடு
கலகலென மிக்க நூல்கள் அதனாலே
சிலுகி எதிர் குத்தி வாது செயவொரு வர்க்குநீதி
தெரிவரிய சித்தியான உபதேசந்
தெரிதர விளக்கி ஞான தரிசன மளித்துவீறு
திருவடி யெனக்கு நேர்வ தொருநாளே"
—திருப்புகழ்

பல்லத்த மார்க்கா வல்லர்க்கர் மூர்க்கர்
கல்விக்கலாத் தலையலாமோ"
—(வெல்லிக்கு வீக்கு) திருப்புகழ்

"சினமுடன் தர்க்கித்துச் சிலுக்கொண்
டறுவருங் கைக்குத்திட் டொருவர்க்குந்
தெரிவருஞ் சத்யத்தை" —(புன மடந்தை) திருப்புகழ்

"சகர சங்க சாகர மென முழங்கு வாதிகள்
சமய பஞ்ச பாதக ரறியாத"—(நிகரில்பஞ்ச) திருப்புகழ்

**உல்கர் தாந்துணை யாவரென :—**

என்றுந் துணையாக நின்று நல்லருள் புரியும் இறைவனைத் துணை கொள்ளாது, "நாய்வாலைப் பற்றிக் கொண்டு நதியின் வெள்ளத்தைக் கடக்க நினைந்தவனைப் போல்" உலகிலுள்ள மனைவி மக்கள் முதலியோரை நான் துணையென்று எண்ணவும், அவர் என்னைத் துணை யென்றெண்ணவும் நின்று முடிவில் வறிதே அழிகின்றேன் என்று குறிப்பிடுகின்றார்.

**பரன் தனி போய்விடுவ தியல்போதான் :—**

உடம்போடு கூடியிருந்தபோது அறத்தையும் அருந்தவத்தையுஞ் செய்யாதோர் காலன் வசப்பட்டுப் போகும்போது தனித்துச் செல்வர் எனக் குறிப்பிடுகின்றார்.

**காந்தளி னுனகர :—**

காந்தள்—கார்த்திகைப்பூ. இப்பூவைக் கரத்திற்கு உவமையாகக் கூறுவது மரபு. திருவீழிமிழலையில் மேகம்,

முழங்குகின்றது; பல மயில்கள் அம்மேகத்தைக் கண்டு மகிழ்ந்து தோகையை விரித்து ஆடுகின்றன; வண்டு கள் இன்னிசை பாடுகின்றன; கொன்றை மலர்கள் உதிர்கின்றன; காற்றினுல் உதிர்ந்த மலர்கள் ஆங்கு பூத்திருக்கும் காந்தண் மலரில் வீழ்கின்றன. அது பெரிய சதிர் போல் இருக்கின்றது; மேகமென்னும் ஒருவன் மத்தளம் வாசிக்க, வண்டு என்னும் நட்டுவன் பாட, மயில்கள் என்னும் பெண்கள் சதிராட, அதற்குப் பரிசாக கொன்றை மரங்கள் தம்மிடம் பூத்துள்ள தங்கக் கட்டிகள் போன்ற மலர்களை வீச, அப்பொற் கட்டிகளை காந்தள் மலர்களாகிய கரங்கள் வாங்குகின்றன. என்ன அழகிய வர்ணனை? என்னே இயற்கையின் அமைப்பு? அதன் தாண்டவம் இப்படி என்றும் ஓவாது நிகழ்கின்றது. இதனை நம் இயற்கை யாசிரிய ராகிய திருஞான சம்பந்தர் கூறுமாறு காண்க.

"வரைசேரு முகின்முழவ மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன்இதழிதர மென்காந்தள் கையேற்கு மிழலையாமே"

**மான் தருகான மயில் :—**

மான் வயிற்றிலே ஒரு மயில் பிறந்தது! என்றார்; அந்தப் பதங்கள் என்ன அழகாக அமைந்திருக்கின்றன என்பதனை அன்பர்கள் உற்றுப் பார்த்து மகிழ்க. பல முறை சொல்லி இன்புறுக. மான் என்பது இலக்குமி; மயில் என்பது வள்ளி யம்மை; உவம ஆகுபெயராக இரண்டும் நிற்கின்றன; இனி வள்ளிமலையில் தவம் புரிந்து கொண்டிருந்த திருமாலின் அவதாரமாகிய சிவ முனிவருக்கு முன்னே இலக்குமி தேவி மான் வடிவு தாங்கிவர, அம்முனிவர் கண்ணுற் புணர, மான் கருக்கொண்டு உலகீன்ற அன்னையாகிய பச்சைப் பசுங் குழ வியை வள்ளிக் குழியில் ஈன்றது என்ற வரலாற்றையும் அது குறிப்பிடுகின்றது.

"மாமுனிவன் புணர் மானுதவுந் தனி
மானை மணஞ் செய்த பெருமாளே"
—(பார நறுங்குழல்) திருப்புகழ்

**சேந்த :—**

செம்மைப் பண்புடையவன்.

**வேங்கட மாமலையி லுறைவோனே :—**

தற்போது விஷ்ணு ஸ்தலமாக விளங்குகின்ற திருவேங் கட மலை முருக க்ஷேத்திரமுமாகும்.

## வடவேங்கடம்

திருவேங்கடம் என்னும் வானமளாவிய வளமலி மாமலை தமிழ் நாட்டிற்கு வடவெல்லையாகத் திகழ்வது.

"வடவேங்கடம் தென் குமரி யாயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து" —பனம்பாரனார்

இத்தகைய திருமலையில் பண்டைக் காலத்தில் திருமால் கோயிலும் திருமுருகன் கோயிலும் இருந்திருத்தல் வேண்டும். அருணகிரிநாதரே இரண்டையுங் கூறுகின்றார். "திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே" என்று முருக க்ஷேத்திரமாகவும், "உலகீன்ற பச்சை யுமையணன் வடவேங்கடத்தி லுறைபவன் உயர்சார்ங்க சக்ர கரதலன் மருகோனே" என்று திருமால் திருத்தலமாகவும் கூறுகின்றனர். இதனை நுனித்து நோக்க அம்மலையில் திருமாலும் திருவேலிறைவனும் திருக்கோயில் கொண்டிருக்கின்றனர் என்பது விளங்குகின்றது.

இதுவேயுமன்றி ஆழ்வாராதிகளும் அங்குள்ள திருமாலைப் பாடியருளியதாலும், கந்தபுராணம் வழிநடைப் படலத்தில்,

" அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன் முனிவாகித்
தொண்டகங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டுபாதலத் தேகியே யோர் குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்"

என வருவதனாலும் இரு கடவுளரும் கோயில் கொண்டு இருந்தனரெனத் தோன்றுகின்றது.

திருப்பதி மலையின் மேலுள்ள சுவாமி புஷ்கரணி, வில் வார்ச்சனை, "பாலாஜி" என்னும் வழக்கு இவைகளும் முருக க்ஷேத்திரம் என்பதனை வலியுறுத்துகின்றன. பல மாறுதல்கள் உண்டாவது உலக வழக்கே யாதலின் முருகனாலயம் மறைந்தோ மாறியோ போய்விட்டது.

**வேண்டிய போதடியர்......வெருதுதவு :—**

முருகக் கடவுள் அன்பர்கள் விரும்பிய அனைத்தும் விரும்பிய போதெல்லாம் வெறுக்காமல் தரும் வள்ளல்.

"யார் வேண்டினாலுங் கேட்ட பொருளீயும்
த்யாகாங்க சீலம்போற்றி" —(நாகாங்க) திருப்புகழ்

"வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே"
—(கோங்கை முகையு) திருப்புகழ்

"அடியவ ரிச்சையி லெவை யெவை யுற்றன
அவை தருவித் தருள் பெருமாளே"
—(கலகலெனச்சில) திருப்புகழ்

என்ற அமுத வாக்குகளை உன்னுக.

## கருத்துரை

வள்ளி மணவாள! விசாகா! சரவண! வடவேங்கடத்தில் வாழும் வள்ளால்! மோகாசையால் வாடி வறிதே அடியேன் காலன் வசப்பட்டு மடியாவண்ணம் ஆட்கொள்வீர்.

## 11

வரிசேர்ந்திடு சேல்கய லோவேனு
முழைவார்ந்திடு வேலையு நீலமும்
வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள் வலையாலே
வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போல்நிற மாகிய வடிவாலே
இருள் போன்றிடு வார்குழல் நீழலில்
மயல் சேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே
எனதாந்தன தானவை போயற
மலமாங்கடு மோகவி காரமு
மிவை நீங்கிட வேயிரு தாளினை யருள்வாயே
கரிவாம்பரி தேர்திரள் சேனையு
முடனுந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்
கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்
திரைநீண்டிரை வாரியும் வாலியும்
நெடிதோங்கும் ராமர மேழொடு
தெசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்
சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே.

## பதவுரை

கரி = யானைகளும், வாம் பரி = தாவுகின்ற குதிரைகளும், தேர் = தேர்களும், திரள் சேனையும் உடனும் = திரண்ட சேனைகளும்கொண்ட

வணங்கிய, துரியோதனன் ஆதிகள் = துரியோதனன் முதலியவர்கள், களம் மாண்டிட = போர்க்களத்தில் இறந்து போமாறு, ஒரு பாரதம் அதில் ஏகி = ஒரு பாரதப் போரில் ஈடுபட்டு. கன பாண்டவர் = பெருமை மிக்க அர்ச்சுனனுடைய, தேர் தனிலே = தேரில் பூட்டிய, எழு பரி தூண்டிய சாரதி ஆகிய = ஏழு குதிரைகளைத் தூண்டிச் செலுத்திய பாகனும், கதிர் ஓங்கிய நேமியனும் அரி = ஒளி மிகுந்த சக்ராயுதத்தையுடைய அரியும். ரகுராமன் = ரகுராமரும், திரை நீண்டு இரை வாரியும் = அலைகள் நீண்டு ஒலிக்கும் சமுத்திரமும், வாலியும் = வாலியும், நெடிது ஓங்கு மராமரம் ஏழொடு = நீண்டு ஓங்கிய ஏழு மராமரங்களும், தெசமாம் சிரராவணனார் முடி பொடி ஆக = பத்துத் தலைகளையுடைய இராவணனுடைய முடிகளும் தூளாகுமாறு, சிலை வாங்கிய = வில்லை வளைத்த, நாரணனார் = நாராயண மூர்த்தியுமாகிய திருமாலின், மருமகனும் குகனே = திருமருகராகிய குகக் கடவுளே! பொழில் சூழ்தரு = சோலைகள் சூழ்ந்துள்ள, திருவேங்கட மாமலை மேவிய = திருவேங்கட மாமலை மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! வரிசேர்ந்திடு சேல் கயலோ எனும் = வரிகள் படர்ந்துள்ள சேல் மீனோ? கயல் மீனோ என்று சொல்லத்தக்கதும், உழை = மான் போன்றதும், வார்ந்திடு வேலையும் = நீண்ட கடல் போன்றதும், நீலமும் = நீலோற்பலம் போன்றதும், வடு = மாவடு போன்றதும், வாங்கிடு வாள் = செலுத்துகின்ற வாளாயுதம் போன்றதுமான, விழி மாதர்கள் = கண்களையுடைய பொதுமாதர்களின், வலையாலே = வலை வீசுகின்ற சூழ்ச்சியாலும், வளர் கோங்கு இளமாமுகை ஆகிய = வளர்கின்ற கோங்கின் இளமொட்டு போன்ற, தனவாஞ்சையிலே = தனங்களின் மீது உள்ள ஆசையாலும், முகமாயையில் = முகத்தின் மீதுள்ள மாயையாலும், வளமாம் தளிர்போல் நிறம் ஆகிய வடிவாலே = வளப்பமுள்ள மாந்தளிர் போன்ற நிறம் படைத்த அவர்களது வடிவத்தாலும், இருள் போலன்றிடு = இருள்போன்ற, வார் குழல் நிழலில் = நீண்ட கூந்தலின் நிழலாலும், மயல் சேர்ந்து = மயக்கங் கொண்டு, இடு பாயலின் மீதுஉற = விரித்த படுக்கையின் மீது சேர்ந்து, இனிது ஆம் கனி வாய் அமுது ஊறல்கள் = இனிமையானகொவ்வைக் கனிபோன்ற வாயிதழ் அமுத ஊறலை, பருகாமே = உண்ணாமல், எனது ஆம் தனது ஆனவை போய் அற = எனது எனது என்னும் ஆசைகளானவை என்னைவிட்டு அற்றுப் போக, மலம்ஆம்கடுமோக விகாரமும் = அசுத்தமாகிய கடிய மோக விகாரங்களாகிய, இவை நீங்கிடவே = இக் குற்றங்கள் நீங்குமாறு, இருதாளினை அருள்வாயே = இரண்டு திருவடிகளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

யானை, தாவுகின்ற குதிரை, தேர், திரண்ட சேனை ஆகிய நால்வகைப் படையுடன் கூடிய துரியோதனனுதியர் போர்க்களத்தில் மாண்டொழியுமாறு, ஒப்பற்ற பாரதப் போரில் ஈடுபட்டுப் பெருமை மிக்க அர்ச்சுனனுடைய தேரில் ஏழு குதிரைகளைத் தூண்டிச் செலுத்திய பார்த்தசாரதியும், ஒளி மிகுந்த சக்ராயுதத்தையுடையவரும், பாவத்தைப் போக்குபவரும், ரகு குலத்தில் வந்தவரும், அலைகள் நீண்டு ஒலிக்கும் கடலும், வாலியும் நீண்டு வளர்ந்த மராமரங்கள் ஏழும், பத்துத் தலைகளையுடைய இராவணனது முடிகளும் பொடியாகுமாறு வில்லை வளைத்த நாராயணரும் ஆகிய திருமாலின் திருமருகராம் குக மூர்த்தியே! சோலைகள் சூழ்ந்த திருவேங்கட மாமலைமீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வரிகள் படர்ந்த சேல் மீனோ? கயல் மீனோ? என்று சொல்லத்தக்கதும், மான் போன்றதும், நீண்ட கடல் போன்றதும், நீலோற்பலம் போன்றதும், மாவடு போன்றதும், செலுத்தத்தக்க வாள் போன்றதுமாகிய கண்களையுடைய மாதர்களின் வலை வீச்சினாலும், வளர்கின்ற கோங்கின் இளம்மொட்டு போன்ற தனங்களின் மீதுள்ள ஆசையாலும், முகத்தின் மாயையாலும், வளமான மாந்தளிர் போன்ற மேனியாலும், கரிய நீண்ட கூந்தலின் நிழலாலும், மயக்கங் கொண்டு விரித்த படுக்கையின் மீது சேர்ந்து, இனிய கனிபோன்ற வாயிதழ் ஊறல்களைப் பருகாமல், எனது எனது என்னும் ஆசைகள் என்னை விட்டு விலகவும், தூய்மையில்லாத கடிய மோக விகாரமானது நீங்குமாறும் தேவரீரது இரண்டு திருவடிகளை அருள்வீராக.

## விரிவுரை

முன்னே உள்ள ஒன்பது வரிகளிலும் பெண்மயலின் தன்மையைச் சுவாமிகள் கூறினார்கள்.

**எனதாந் தனதானவை போயற :—**

தனது—சிநேகம். எனது எனது என்று பொருள்களில் பற்று வைக்கின்ற பற்று அற்று ஒழிதல் வேண்டும். பற்று அற்றாரே வீடுபேறு அடைவர்.

> யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
> குயாந்த வுலகு புகும். —திருக்குறள்

**மலமாங் கடு மோக விகாரமும் :—**

மலம்—அழுக்கு. மனதிலே மலினத்தையுண்டாக்குவன ஆசாபாசங்கள்.

**கரிவாம் பரி :—**

வாம்—வாவுதல்—தாவுதல். தாவியோடுகின்ற குதிரைகள்.

**பரி தூண்டிய சாரதி :—**

கண்ணபிரான் அர்ச்சுனனுடைய தோழமைக்காகத் தேர்ப் பாகனாகி அவனுடைய தேரைச் செலுத்தி அவனுக்கு வெற்றியை யுண்டாக்கினார்.

### கருத்துரை

திருமால் மருகரே! திருவேங்கடமலையில் வாழும் குக மூர்த்தியே! உலக மயல் நீங்கத் திருவடியை யருள்வீர்.

### 12

சரவண பவநிதி யறுமுக குருபர
சரவண பவநிதி யறுமுக குருபர
சரவண பவநிதி யறுமுக குருபர எனவோதித்
தமிழினி லுருகிய அடியவ ரிடமுறு
சனனம ரணமதை யொழிவுற சிவமுற
தருபிணி துளவர மெமதுயர் சுகமுற அருள்வாயே

கருணைய விழிபொழி யொருதனி முதலென
வருகரி திருமுகர் துணைகொளு மிளையவ
கவிதைய முதமொழி தருபவ ருயிர்பெற அருள்நேயா
கடலுல கினில்வரு முயிர்படு மவதிகள்
கலகமி னையதுள கழியவும் நிலைபெற
கதியு முனது திருவடி நிழல் தருவது ஒருநாளே

திரிபுர மெரிசெயு மிறைபவ ரருளிய
குமரச மரபுரி தணிகையு மிகுமுயர்
சிவகிரி யிலும்வட மலையிலு முலவிய வடிவேலா
தினமுமு னதுதுதி பரவிய அடியவர்
மனதுகு டியுமிரு பொருளிலு மிலகுவ
திமிரம லமொழிய தினகர னெனவரு பெருவாழ்வே

அரவணை மிசை துயில் நாரணி நெடியவர்
மருகனெ னவெவரு மதிசய முடையவ
அமலிவி மலிபரை உமையவ ளருளிய முருகோனே
அதல விதலமுதல் கிடுகிடு கிடுவென
வருமயி லினிதொளிர் ஷடுமையில் நடுவுற
அழகி னுடனமரு மரகர சிவசிவ பெருமானே.

## பதவுரை

திரிபுரம் எரிசெய்யும் இறையவர் = முப்புரங்களை எரித்த சிவ பெருமான், அருளிய குமர = பெற்றருளிய குமாரக் கடவுளே! சமரபுரி = திருப்போரூரிலும், தணிகையிலும் = திருத்தணியிலும், மிகும் உயர் சிவகிரியிலும் = மிகவும் உயர்ந்த சிவகிரியிலும், வட மலையிலும் உலவிய = திருவேங்கட மலையிலும் உலவுகின்ற, வடி வேலா = கூரிய வேலாயுதரே! தினமும் = நாள் தோறும், உனது துதி பரவிய அடியவர் = தேவரீருடைய புகழைக் கூறும் அடி யார்களின், மனது குடியும் = உள்ளக் கோயிலில் குடி கொண் டும், இரு பொருளிலும் இலகுவ = அருட்செல்வம் பொருட் செல்வம் என்ற பொருள்களிலும் விளங்குபவரே! திமிர மலம் ஒழிய = இருண்ட ஆணவமாகிய மலம் ஒழிய, தினகரன் எனவரு = ஞானசூரியன் என்னும்படி வருகின்ற, பெருவாழ்வே = பெரிய வாழ்வே! அரவு அணைமிசை துயில் = பாம்பணையில் அறிதுயில் புரி கின்றவரும், நரகரி = நரகாசுரனைக் கொன்றவரும், நெடியவர் = நீண்ட வடிவுள்ளவரும் ஆகிய திருமாலின், மருகன் என வரும் அதிசயம் உடையவ = மருகர் என்று கூறுமாறு வந்துள்ள அதிசய மூர்த்தியே! அமலி = மலம் அற்றவரும், விமலி = மலம் இல்லாதவரும், பரை = பெரியவரும் ஆகிய, உமையவள் அருளிய = உமாதேவியார் தந்தருளிய, முருகோனே = முருகக் கடவுளே! அதல விதல முதல் கிடுகிடுகிடு என வரும் = அதலம் விதலம் முதலிய ஏழுவுலகங்களும் கிடுகிடுகிடு என்று நடுங்க வருகின்ற, மயிலினில் இனிது ஒளிர் = மயிலின் மீது இனிதாக ஒளி செய்பவரே! ஷடுமையில் நடு உற = ஆறுகோண சக்கரத்தின் நடுவில், அழகினுடன் அமரும் = அழகுடன் பொருந்தியுள்ள, அர ஹர சிவ சிவ = ஹர ஹர, சிவ சிவ! பெரு மாளே = பெருமையிற் சிறந்தவரே! சரவணபவ = சரவணபவ! நிதி = நிதியே! அறுமுக = ஆறுமுகக் கடவுளே! குருபர = குருபர! சரவண பவ = சரவணபவ! நிதி = நிதியே! அறுமுக = ஆறுமுகக் கடவுளே! குருபர = குருபர! சரவணபவ = ச ர வ ண ப வ, நிதி = நிதியே! அறுமுக = ஆறுமுகக் கடவுளே! குருபர = குருபர! என ஓதி = என்று பலமுறை ஓதி, தமிழினில் உருகிய = தமிழ்க் கவிகளில் உள்ளம் உருகிய, அடியவர் இடம் உறு = அடியார்களுக்கு உற்ற, சனன மரணம் அதை ஒழிவு உற = பிறப்பு இறப்பு என்பவை நீங்கு தலையடையவும், சிவம் உற = சிவப்பேறு அடையவும், தருபிணி துள = வினைகள் தருகின்ற துன்பமானது துள்ளி ஓடவும், எமது உயிர் சுகம் உற = எங்களின் உயிர் இன்பம் அடையவும், வரம் அருள்வாயே = வரத்தை வழங்குவீர், விழி பொழி கருணைய = கண்களினின்றும் பொழிகின்ற கருணையைக் கொண்டவரே! ஒருதனி முதல் எனவரு = ஒப்பற்ற தனிப்பெருந் தலைவன் என வந்த கரி திருமுகர் துணை

கொளும் இளையவ = யானையின் திருமுகத்துடன் விளங்கும் விநாயக மூர்த்தியைத் துணையாகக் கொண்ட இளையவரே! கவிதை அமுத மொழி தருபவர் = கவிதைகளாகிய அமுத மொழியை வழங்குபவர்களுடைய, உயிர் பெற அருள் நேயா = உயிர் நற்கதி பெற அருள் புரிகின்ற நேசமுடையவரே! கடல் உலகினில் வரும் = கடல் சூழ்ந்த உலகில் தோன்றும், உயிர் படும் அவதிகள் = உயிர்கள் அடைகின்ற துன்பங்களும், கலகம் = கலக்கங்களும், இனையது உள கழியவும் = இன்னும் இத்தகையவாய் உள்ள வேதனைகளும் நீங்குதலையும், நிலை பெற கதியும் = நிலைபெறுமாறு நற்கதிபெறுதலையும், உனது திருவடி நிழல் தருவதும் = உமது திருவடி நிழல் தருவதும் ஆகிய, ஒருநாளே = ஒரு நாள் எனக்குக் கிடைக்குமோ?

## பொழிப்புரை

முப்புரங்களை எரித்த சிவபெருமானுடைய புதல்வரே! திருப்போரூரிலும், திருத்தணிகையிலும் மிகவுயர்ந்த மகிமையுள்ள சிவகிரியிலும், திருவேங்கட மலையிலும் உலாவுகின்ற வடிவேலவரே! தினந்தோறும் உமது புகழைப் பரவுகின்ற அடியார்களின் உள்ளத்தில குடிகொண்டு, அருட்செல்வம் பொருட் செல்வம் என்ற இரு செல்வங்களிலும் விளங்குபவரே! இருள் மயமான ஆணவமலம் நீங்க ஞான சூரியனாக வருகின்ற பெருவாழ்வே! பாம்பணையில் அறிதுயில் கொண்டவரும் நரகாசுரனை வதைத்தவரும் நெடியவருமாகிய நாராயணரது திருமருகன் என்று கூறும் அதிசயம் உடையவரே! மலாகிதராகிய பராசக்தியாம் பார்வதி தேவி பெற்ற முருகக் கடவுளே! அதல விதல முதலிய உலகங்கள் கிடு கிடு என்று நடுங்குமாறு வருகின்ற மயிலினில் ஒளிர்கின்றவரே! ஆறு கோணத்தின் நடுவில் அழகுடன் அமர்கின்றவரே! ஹரஹரா! சிவசிவா! பெருமிதம் உடையவரே! 'சரவணபவ! நிதியே! ஆறுமுகா! குருபர! சரவணபவ! நிதியே! ஆறுமுகா! குருபர! சரவணபவ! நிதியே! ஆறுமுகா! குருபர!' என்று தமிழினில் துதி செய்து உருகும் அடியார்களின் பிறப்பு இறப்பு நீங்கவும், சிவப்பேறு பெறவும், நோய்கள் துள்ளி ஓடவும், எமது உயிர் இன்பமுறவும் அருள்புரிவீர்; கண்களில் பொழிகின்ற கருணையுடையவரே! ஒப்பற்ற தனிப்பெருந் தலைவராம் யானை முகவரது துணையை நாடும் இளையவரே! கவிதையாம் அமுத மழை பொழிகின்றவருடைய உயிர் நற்கதி பெற அருள்பவரே! கடல் சூழ்ந்த உலகினில் தோன்றுகின்ற உயிர்கள் படுகின்ற துன்பங்கள் கலக்கம் முதலிய இடர் அகலவும், நிலைபெறவும், நற்கதியும் தேவரீருடைய திருவடி நிழல் தருவதுமாகிய நாள் ஒன்று அடியேனுக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

**சரவணபவ :—**

சரம்—தர்ப்பை; வனம்—காடு. பவன்—வெளிப்பட்டவன். ரகரத்தின் பின்வரும் னகரம் ணகரமாகத் திரியும் என்பது வியாகரண விதி; அதனால் சரவனம் என்பது சரவணம் என்று ஆயிற்று.

**நிதி :—**

இறைவன் என்றும் அழியாத சேமநிதி.

**தமிழினில் உருகிய அடியவர் :—**

தமிழ்—இனிமையான மொழி. இனிய தமிழில் இறைவனைத் துதிசெய்தால் உள்ளம் உருகும்.

**சனன மரணமதை யொழிவுற :—**

பிறப்பிறப்பில்லாத பெருந்தகை முருகன்; அப்பெருமான் அடியாரது பிறப்பிறப்பினை யொழித்து அருள் புரிவான்.

**சிவமுற :—**

சிவத்துடன் இரண்டறக் கலக்கும் அத்துவித முத்தி.

**கருணைய விழி பொழி :—**

முருகவேளின் கண்கள் கடல்போல் கருணை பொழியும்.

"கருணை பொழி கமல முகமாறும்" —(ஒருவரையு) திருப்புகழ்.

"மறுவறு கடலென மருவுபனிரு விழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்" —கொலுவகுப்பு.

**கடலுலகினில் வரும் உயிர்படும் அவதிகள் கழியவும் :—**

"முருகா! உலகில் உள்ள எல்லாவுயிர்களும் கவலையற்று வாழவேண்டும்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

**சமரபுரி :—**

திருப்போரூர். இத்தலம் திரிபுராதிகளின் தந்தையான தாரகன் என்ற அவுணனுடன் முருகவேள் போர் புரிந்த இடம்.

**தினமுமுனது துதிபரவிய அடியவர் மனது குடிபுகும் :—**

சதா இறைவனைப் பராவும் உத்தம அடியார்களின் உள்ளக் கோயிலில் அப்பரமபதி வீற்றிருக்கின்றான்.

"நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" —அப்பர்.

"அடியவர் சிந்தை வாரிச நடுவினும் உறைபவ"
—(கொந்துவார்) திருப்புகழ்.

ஷடுமையில் நடுவுற :—

ஆறக்கரங்களும் அடங்கிய ஆறு கோணமாகிய யந்திரத்தின் இடையில் முருகன் ஒளிமயமாக விளங்குபவன்.

## கருத்துரை

திருவேங்கடத்துறையுந் தேவனே! உன் திருவடி நிழல் பெற அருள்வாய்.

## 13

நெச்சுப் பிச்சிப் புட்பத் தட்பக்
கச்சிக் கச்சுற் றறன்மேவி
நெறித்து வெறித்து இருட்டை வெருட்டிய
நிரைதரு மருமலர் செருகிடு பரிமள
நிறையுறை மதுகர — நெடிதாடி

நிச்சிக் கச்சப் பட்டுச் சிக்கற்
றுப்புக் கொப்புக் குயர் வாகி
நெளித்த சுளித்த விழைக்கு ளழைத்துமை
நிகரென வகருவு முகுபுகை தொகுமிகு
நிகழ்புழு கொழுகிய — குழன்மேலும்

வச்ரப் பச்சைப் பொட்டிட் டப்பொட்
டுக்குட் செக்கர்ப் ப்ரபை போல
வளைத்த தழைத்த பிறைக்கு முறைக்குமன்
மதசிலை யதுவென மகபதி தனுவென
மதிதில தமும்வதி — நுதல்மேலும்

மச்சச் செச்சைச் சித்ரச் சத்ரப்
பொற்பக் கத்திச் சையணுகி
மனத்தி னனைத்து மனைத்த துணைப்பத
மலரல திலைநிலை யெனமொழி தழியமெய்
வழிபட லொழிவினை — யருள்வாயே

நச்சுத் துச்சொப் பிச்சுக் குட்டத்
துட்டக்கட்டத் தசிகாண
நடத்தி விடத்தை யுடைத்த படத்தினில்
நடநவில் கடலிடை யடுபடை தொடுமுகில்
நகைமுக திருவுறை — மணிமார்பா

நத்தத் தைச்சக் ரத்தைப் பத்மத்
 தைக்கைப் பற்றிப் பொருமாய
 னரிக்கு மரிக்கு மெரிக்கும் விருப்புற
 நசிதரு நிசிசர ருடகுட லிடல்செய்த
 நரகரி யொருதிரு மருகோனே

கச்சுத் தச்சிப் பொற்கட் டிட்டுப்
 பட்டுக் குட்பட் டமுதாலுங்
 கருப்பி ரசத்து முருச்செய் துவைச்சிடு
 கனதன பரிமள முழுகுப னிருபுய
 கனகதி வியமணி யணிமார்பா

கைச்சத் திக்குக் கெற்சித் தொக்கப்
 பட்சிக் கக்கொட் டசுராதி
 கறுத்த நிறத்த அரக்கர் குலத்தொடு
 கறுவிய சிறியவ கடவைகள் புடைபடு
 கடவட மலையுறை பெருமாளே.

## பதவுரை

*நச்சு து*=விடத்தை உண்ட வீமசேனன், *சொப்பிச்சு*= இறவாமல் சோபித்து விளங்கவும், *குட்டத்து உள் தாக்கு*=நீர் நிலையினுள் தங்கும்படி, *அட்டத்து*=குறுக்கே வைத்திருந்த, *அசி காண*=வாள் முனைகள் அப்பீமன் காணும்படியும், *நடத்தி*='அவனுக்கு அருள் புரிந்தும், *விடத்தை உடைத்த*=நஞ்சுடைய காளிங்கன் என்னும் பாம்பின், *படத்தினில்*=பணுமகுடத்தின்மீது நின்று, *நட நவில்*= நடனம் புரிந்தும், *கடல் இடை அடுபடை தொடு*=சமுத்திரத்தை வற்றச்செய்யும் பாணத்தைத் தொடுத்த, *முகில்*=நீலமேக வண்ணரும், *நகைமுக திரு உறை*=சிரித்த முகத்தையுடைய இலக்குமி தேவி உறைகின்ற, *மணிமார்பன்*=அழகியமார்பினரும், *நத்தத்தை*= சங்கையும், *சக்ரத்தை*=சக்ராயுதத்தையும், *பத்ம கை பற்றி*= தாமரை போன்ற திருக்கரத்தில் ஏந்தி, *பொரு மாயன்*=போர் புரிகின்ற மாயத்தில் வல்லவரும், *நரிக்கும்*=நரிக்கும், *அரிக்கும்*= வாளுக்கும், *எரிக்கும்*=நெருப்புக்கும், *விருப்பு உற*=விருப்பமுண்டாகுமாறு, *நசிதரும் நிசிசரர் உடகுடல் இடல் செய்த*=அழிவைச் செய்யும் அசுரர்களது குடலை உணவாகத் தந்தருளிய, *நரகரி*=நரகாசுரனைக் கொன்றவரும் ஆகிய திருமாலின், *ஒரு திரு மருகோனே*=ஒப்பற்ற அழகிய மருகரே! *கச்சு தச்சு*

பொன் கட்டிட்டு=அழகிய இரவிக்கையைத் தைத்து முடியிட்டுக் கட்டி, பட்டுக்கு உட்பட்டு=பட்டுத்தாவணிக்கு உட்பட்டதாய், அமுதாலும்=அமுதம் நிறைந்து அசைவதாய், கருப்பு இரசத் தும் உருச் செய்து வைச்சிடும்=கரும்பின் சாற்றினால் செய்து அமைத்ததாய் விளங்கும், கனதன=(வள்ளி நாயகியின்) பருத்த கொங்கைகளின், பரிமள முழுது பன் இருபுய=நறுமணத்தில் முழுகும் பன்னிரண்டு புயங்களையுடையவரே! கனக திவிய மணி அணி= பொன்னில் அழகாகப்பதித்த இரத்தின மணிகளைத்தரித்த,மார்பா= மார்பினரே! கை சத்திக்கு=கையில் விளங்கும் வேலாயுதமானது, கெற்சித்து=ஆரவாரித்து, ஒக்க பட்சிக்க=முழுவதும் உண்ணும்படி, கொட்டு அசுர ஆதி=வாத்தியத்தை முழக்கிக்கொண்டு வந்த அசுரர் தலைவனும் சூரபன்மனை, கறுத்த நிறத்த அரக்கர் குலத்தொடு=கரிய நிறமுடைய அரக்கர் கூட்டத்துடன், கறுவிய சிறியவ=கோபித்த இளம் பூரணரே! கடவைகள் புடைபடு கட=வழிகள் பக்கங்களில் உள்ள காடுகள் சூழும், வடமலை உறை=வடவேங்கடமலையில் வாழ் கின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! நெச்சு பிச்சி புட்ப தட்ப=நெய் பொருந்தியுள்ள பிச்சிப்பூவின் குளிர்ச்சியைக் கொண்ட தாயும், கச்சி கச்சுற்று=ஒழுங்காய் கட்டப்பட்டதாயும், அறல் மேவி=கருமணலை நிகர்த்தும், நெறித்து=சுருண்டும், வெறித்து= மணமுடையதும், இருட்டை வெட்டிய=தனக்குள்ள கருநிறத்தால் அச்சுறுத்தியதும், நிரைதரு மருமலர் செருகிடு=வரிசையாய் வாசனை யுள்ள மலர்கள் சொருகியுள்ள, பரிமள நிறை உறை=நல்ல வாசனை யில் நிரம்ப உறைகின்ற, மதுகரம் நெடிது ஆடி=வண்டுகள் நெடு நேரம் மொய்த்து மகிழவும், நிச்சிக்கு (நிசிக்கு) அச்சப்பட்டு= இரவுக்கு பயத்தையளித்து, சிக்கு அற்று=சிக்கல் இல்லாததும், ஒப்புக்கு ஒப்புக்கு உயர்வு ஆகி=சமானமின்றி அலங்காரத்தில் உயர்வு அடைந்து, நெளித்த சுளித்த=வளைவும் சுருளும் உடைய தாய், விழைக்குள் அழைத்து=விருப்பத்தைத் தந்து அழைப்பதாய், மை நிகர் என=மையை ஒத்ததாய், அகருவும் உகுபுகை தொகு மிகு=அகிலின் புகையின் தொகுதி மிகுந்து, நிகழ் புழுகு ஒழுகிய குழல் மேலும்=விளங்குகின்ற புனுகு சட்டம் கமழ்கின்றதும் ஆகிய கூந்தலின் மீதும், வச்ரப்பச்சை பொட்டுஇட்டு=வஜ்ரம்போல் ஒளி தரும் பச்சைப் பொட்டினை நெற்றியில் இட்டு, அப்பொட்டுக்கு உள்=அந்தப் பொட்டின் இடையில், செக்கர்ப்ரபைபோல=சிவந்த பிரபைபோல, வளைத்த தழைத்த பிறைக்கு முறைக்கு மன்=வளைவும் செழிப்பும் உள்ள நிலாப்பிறைக்கு ஒப்பாக உறைவதாய், மத சிலை அது என=மன்மதனுடைய வில்லென்று சொல்லத்தக்கதாய், மகபதி தனு என=இந்திரவில் என்னும்படியும், மதி திலதமும் வதி=வளைந்த பிறைச்சந்திரனைப் போன்ற திலகம் உள்ள, நுதல் மேலும்=நெற்றி யின்மீதும்,மச்ச=உடம்பிலுள்ள மச்சங்களின் மீனம், செச்சை சித்ர=

சிவந்த விசித்திரமான, சத்ர பொன் பக்கத்தில்=அதிசயிக்கத்தக்க அழகிய உடற் பக்கங்களிலும், இச்சையனுகி=விருப்பங் கொண்டவனாய், மனத்தின் அனைத்தும் அணைத்த=மனதில் நினைத்தவை யாவையும் தரவல்ல, துணைபதமலர் அலது=இரண்டு மலரடியன்றி, இலை நிலை என மொழிதழிய=நிலை வேறு இல்லையென்னும் மொழிகளைத் தழுவிய, மெய்வழிபடல் ஒழிவனை=உண்மையான வழிபாடு செய்வதை ஒழித்த, அடியேனுக்கு அருள்வாயே=அடியேனுக்கு அருள் புரிவீராக.

## பொழிப்புரை

நஞ்சினையுண்ட பீமன் அவ்விடத்தால் அழியாது நலம் பெறவும், நதியில் நாட்டியிருந்த வசிகளை அவன் கண்டு அதனின்றும் தப்பித்து அவன் பிழைக்க அருளியும், விஷம் கக்குமாறு காளிங்கன் என்ற பாம்பின் படத்தின்மீது நடித்தும், சமுத்திரத்தின்மீது கணையைச் செலுத்தியும் அருளிய நீலமேக வண்ணரும் புன்னகையுடைய திருமுகம் படைத்த திருமகள் வாழும் திருமார்பினரும் சங்கு சக்கரங்களை தாமரைபோன்ற கரங்களில் ஏந்திப் போர்புரியும் மாயாவல்லபரும், நரிகட்கும் வாளுக்கும் நெருப்புக்கும் அரக்கர்களின் குடலை உணவாக இட்டவரும் நரகாசுரனைக் கொன்றவருமாகிய ஒப்பற்ற திருமாலின் திருமருகரே! கச்சணிந்து அமுதம் நிறைந்து கரும்பின் இரசத்தினது உருவாகிப் பருத்த வள்ளிநாயகியின் தனங்களின் நறுமணத்தில் முழுகும் பன்னிரு தோள்களையுடையவரே! பொன்னில் பதித்த சிறந்த மணிகளை யணிந்த திருமார்பினரே! கைவேல் ஆரவாரஞ் செய்தும் முற்றும் உண்ணுமாறு வாத்திய ஒலியுடன் வந்த அசுரர் தலைவனும் சூரனைக் கருநிறமுடைய அரக்கர் குலத்துடன் கோபித்து அழித்த இளம் பூரணரே! வழியுடன் கூடிய காடுகள் சூழ்ந்த திருவேங்கடமலையில் வாழும் பெருமிதம் உடையவரே! தேன் பொருந்திய பிச்சி மலரின் குளிர்ச்சியைக் கொண்டதாய், கச்சிதமாக முடிந்ததாய், கருமணலை ஒத்ததாய், சுருண்டு மணமுள்ளதும் இருளை அச்சுறுத்தியும் வாசனை மலர்களை வரிசையாகச் சொருகியுள்ளதாய் நறுமணத்தில் வாழ்கின்ற வண்டுகள் மொய்த்து மகிழவும், இரவை பயப்படுத்திச் சிக்கலில்லாததாய் அலங்காரத்தில் மென்மேலும் உயர்ச்சி யடைந்ததாய் நெளிவும் சுருளும் உற்றதாய் விருப்பத்தைத் தந்து அழைப்பதாய், அஞ்சனமைக்கு ஒப்பு எனும்படி அகில் புகையின் தொகுதி மிதந்த புனுகு சட்டம் கமழ்கின்றதாய் விளங்கும் கூந்தலின் மீதும், பச்சைப் பொட்டு இட்டு அதன் நடுவில் சிவந்த பிரபை போல வளைத்த செழிப்புள்ள பிறைக்கு ஒப்பாக உறைவதாய் மன்மதன் வில்லையும் வானவில்லையும் ஒத்து சந்திரனை நிகர்ந்த திலகம் அமைந்துள்ள நெற்றியின் மீதும், உடம்பிலுள்ள மச்சங்களின் மீதும் அழகிய அதிசயமான சிவந்த உடம்பின் பக்கத்திலும்

ஆசையுற்று, மனதில் நினைத்ததை யாவும் தருகின்ற உமது திருவடி மலரன்றி வேறு நிலையான பொருள் இல்லையென்று சொல்லுகின்ற மொழிகளைத் தழுவிய உண்மையான வழிபாடு செய்வதை விடுத்த அடியேனுக்குத் திருவருள் புரிவீராக!

## விரிவுரை

இத்திருப்புகழில், முதல் இரண்டு அடிகளில் விலைமகளிரின் கூந்தலழகை விரிவாக அடிகள்ார் கூறினார்.

மூன்றும் அடியில் அம்மகளிரின் நெற்றியின் பொட்டின் அழகைக் கூறினார்.

**மனத்தினைத்து மணைத்த துணைப்பதம் :—**

இறைவனுடைய திருவடி, அடியார்கள் மனதில் நினைத்தவை யணைத்தும் தரவல்லது.

> "மறவாதவர் நினைப்பவை முடிக்குமவன்"—பூதவேதாள வகுப்பு
> "அருள் நெறியில் உதவுவதும் நினையுமவை
> முடிய வருவதும் அடியர்பகைகோடி சாடுவதும்"
> —சீர்பாத வகுப்பு

**மலரலதிலைநிலை யெனமொழி தழியமெய் வழிபடல் :—**

எம்பெருமானுடைய சரணமலரன்றி வேறு நிலைத்த பொருள் இல்லை. அப்பரமனது பாதமே நிலைபேறுனது.

> தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
> கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே.
> கண்டேன் அவர்தம் பதத்தொலைவுங் கண்டனலுல்
> தொண்டேன் சிவனே நின் தொல்பதமே வேண்டுவனே"

என்று இந்திரகுமாரன் சயந்தன் கூறுவதைக் காண்க.

**நச்சித்துச் சொப்பித்து :—**

துரியோதனன் வீமசேனனுடைய ஆற்றலைக் கண்டு அழுக்காறு கொண்டான். உணவில் நஞ்சு கலந்து அவனை உண்பித்தான். அவன் கண்ணபிரானுடைய கருணையால் பிழைத்தான்

**குட்டத் துட்டக் கட்டத் தசிகாண நடத்தி :—**

ஆற்றில் இரும்பு வசிகளை நட்டு துரியோதனன் பீமனை அதில் குதிக்குமாறு செய்தான். அவன் வஞ்சனையறியாத பீமன் அதில் குதிக்கும் பொருட்டு ஓடி வந்தான். கண்ணன் அந்த இடத்தில் வண்டு வடிவாக இருந்தார். வீமசேனன்

சீவகருணையுள்ளவன். ஆதலினால் வண்டுகள் உள்ள இடத்தில் குதித்தால் வண்டுகள் மாயும் என்று கருதி அதனைத் தாண்டிக் குதித்தான். நீந்தி வரும்போது நீரில் உள்ள இரும்பு வசிகளைக் கண்டு தெளிந்தான். இவ்வாறு கண்ணபிரான் அவனுக்கு அருள் புரிந்தார்.

**விடத்தை யுடைத்த படத்தினில் நடநவில் :—**

யமுனா நதியில் காளிங்கன் என்ற பாம்பு அவ்வப்போது நஞ்சினைக் கக்கிப் பலரையும் கொன்றது. பகவான் கண்ணன் அங்கு சென்று மக்களின் வருத்தத்தை மாற்றும் பொருட்டு அம் மாநதியில் குதித்து, பாம்பினுடன் போர்புரிந்து வென்று அப் பாம்பின் படத்தின்மீது திருவடிவைத்து நடனம் புரிந் தருளினார்.

காளிங்கன் என்பது மனம் அது ஐந்து புலன்களின் வழியே நஞ்சினைக் கக்கிக் கொடுமை புரிகின்றது. அந்த ஐம்புலன்களாகிய ஐந்து தலைகளுடன் கூடிய மனமாகிய காளிங்கனை அடக்கி அறிவு என்ற கண்ணன் ஆனந்தநடனம் புரிகின்றான்.

**கடலிடையடுபடை தொடுமுகில் :—**

இராமாவதாரத்தில் வருணனை வழிவிட வேண்டியும் அவன் வந்து உதவாமையால, அக்கினிக் கணையைக் கடலின் மீது ஏவி, கடலை நடுங்குமாறு செய்தார்.

**நத்தத்தை :—**

நத்து—சங்கு. திருமால் பாஞ்சஜன்யம் என்ற அரிய சங்கத் தைத் திருக்கரத்தில் ஏந்தியுள்ளார். அதன் மூலம் பிரணவ நாதத்தையுண்டாக்குவார்.

**சக்ரத்தைப் பத்மத்தைக் கைப்பற்றி :—**

திருமால் கொடிய அரக்கர்களைக் கொன்று உத்தமரை உய் விக்கும் பொருட்டு தாமரைக் கரத்தில் சக்ராயுதத்தைத் தாங்கி யுள்ளார். பத்மத்தை—என்ற சொல்லில் அத்து ஐ என்ற இரண்டும் சாரியை.

**நரிக்கும் அரிக்கும் எரிக்கும் விருப்புற நசிதரு நிசிசரருடகுடல் இடல் செய்த :—**

திருமால் கொடியவர்களான அரக்கர்களைச் சக்ராயுதத் தால் கொன்று, அவர்களுடைய கொழுத்த குடர்களை நரிக்கும் வாளுக்கும் நெருப்புக்கும் விருந்து வைத்தருளினார்.

**நரகரி :—**

நரகன் என்ற அரக்கனைக் கொன்றவர் நரகரி.

**கைச்சத்திக்குக் கெற்சித் தொக்கப் பட்சிக்க :—**

முருகவேள் சூராதியவுணர்களின் குலத்தைக் கொன்று வேலாயுதத்துக்கு விருந்து வைத்தருளினார்.

## கருத்துரை

திருமாலின் திருமருகரே! திருவேங்கடமலை நாதரே உமது திருவடியில் வழிபடுமாறு திருவருள் புரிவீர்.

## திருத்தணிகை

## 14

அரகர சிவனரி அயனிவர் பரவிமு
    னறுமுக சரவண பவனேயென்
றநுதின மொழிதர அசுரர்கள் கெடஅயில்
    அனலென எழவிடு மதிவீரா
பரிபுர கமலம தடியிணை யடியவர்
    உளமதி லுறவருள் முருகேசா
பகவதி வரைமகள் உமைதர வருகுக
    பரமனை திருசெவி களிகூர
உரைசெயு மொருமொழி பிரணவ முடிவதை
    உரைதரு குருபர உயர்வாய
உலகம னலகில உயிர்களு மிமையவ
    ரவர்களு முறுவர முநிவோரும்
பரவிமு னநுதின மனமகிழ் வுறவணி
    பணிதிகழ் தணிகையி லுறைவோனே
பகர்தரு குறமகள் தருவமை வனிதையு
    மிருபுடை யுறவரு பெருமாளே.

### பதவுரை

அரகர சிவன் = பாவங்களைப் போக்க வல்லவராகிய சிவனும், அரி = நாராயணரும், அயன் இவர் = பிரமாவும் ஆகிய இம்மூவர்களும், பரவி = போற்றி நின்று, முன் = உமது திருமுன்னிலையில், அறுமுக = ஆறுமுகக் கடவுளே! சரவணபவனே என்று = சரவணபவனே என்று கூறி, அநுதினம் மொழிதர = நாள்தோறும் துதிக்க, அசுரர்கள் கெட = சூராதியவுணர்கள் அழியுமாறு, அனல் என எழ அயில் விடு = அக்கினிபோல் செல்ல வேலாயுதத்தை விடுத்தருளிய, அதிவீரா =

*மிகுந்த வீரமூர்த்தியே! பரிபுர கமலம் அது=சிலம்பு அணிந்த தாமரை மலர்போன்ற, அடி இணை=இரு திருவடிகளையும், அடியவர் உளம் அதில் உற=அடியார்களின் உள்ளத்தில் பொருந்துமாறு, அருள்=அருள்புரிகின்ற, முருக ஈசா=முருகக் கடவுளே! பகவதி= ஆறுகுணங்களையுடையவரும், வரைமகள்=மலையரசன் புதல்வியும் ஆகிய, உமை தரவருகுக=உமாதேவியார் அருளவந்த குகமூர்த்தியே! பரமனது இரு செவி களிகூர=பரமசிவத்தின் இரண்டு செவிகளும் மகிழ்ச்சிகொள்ளும்படி, உரைசெயும் ஒருமொழி=எல்லோராலும்புக ழப்பெற்ற ஒரு மொழியாகிய, பிரணவ முடிவு அதை=பிரணவமந்தி ரத்தின் முடிவுப் பொருளை, உரைதரு குருபர=உபதேசித்த மேலான குருநாதரே! உயர்வு ஆய உலக மன்=சிறப்பு பொருந்திய உலகத் தில் நிலை பெற்றுள்ள, அலகில உயிர்களும்=கணக்கற்ற உயிர்களும், இமையவர் அவர்களும்=தேவர்களும், முறுவர=முணு முணுக்கும் படி, முநிவோரும்=முனிவர்களும், பரவிமுன்=திருமுன் நின்று துதி செய்து, அநுதினம் மனம்மகிழ் உற=நாள்தோறும் மனம் மகிழ்ச்சி யடையுமாறு, அணி=அழகியதும், பணி திகழ்=வாசுகி என்ற நாகம் வழிபட்டதுமாகிய, தணிகையில் உறைவோனே=திருத் தணிகையில் உறைகின்றவரே! பகர்தரு குறமகள்=புகழப்பெறும் வள்ளியம்மையும், தரு அமை வனிதையும்=கற்பகமரத்தின் கீழ் வளர்ந்த தெய்வயானை யம்மையும், இருபுடை உறவரு=இருபக்கங் களிலும் பொருந்த எழுந்தருளியிருக்கும், பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே!*

## பொழிப்புரை

பாவங்களை அழிக்கவல்ல அரனும் அரியும் அயனும், திரு முன் நின்று, "ஆறுமுகக் கடவுளே! சரவணபவனே" என்று நாள்தோறும் கூறி துதி செய்ய, சூராதி யவுணர்கள் அழியு மாறு அக்கினி எழுந்தது போல் செல்ல வேலாயுதத்தை விடுத் தருளிய மிகுந்த வீரமூர்த்தியே! சிலம்பு அணிந்த தாமரை மலர்போன்ற இருதிருவடிகளை அடியார்களின் உள்ளத்தில் பொருந்த அருளும் முருகக் கடவுளே! மலையரையன் மகளாக வந்த பகவதியாகிய உமையம்மை யருள வந்த குகப்பெரு மானே! பரமசிவத்தின் இரண்டு செவிகளும் மகிழும்படி, யாவரும் புகழ்கின்ற ஒப்பற்ற மொழியாகிய பிரணவ மந்திரத் தின் முடிவுப் பொருளை உபதேசித்த சிறந்த குருமூர்த்தியே! சிறந்த இவ்வுலகில் நிலை பெற்ற எண்ணில்லாத உயிர்களும் முணுமுணுக்க முனிவர்களும் துதி செய்து திருமுன் தினந் தோறும் உள்ளம் மகிழுமாறு, அழகியதும், நாகராஜன் வழிபட்டதுமாகிய திருத்தணிகை மலைமீது வசிக்கின்றவரே! புகழ்பெற்ற வள்ளி நாயகியும், கற்பக மரத்தின் கீழ் வளர்ந்த



திருத்தணிகை - மலையும், தெப்பக்குளமும்

தெய்வயானையம்மையும் இருபுறத்தில் பொருந்த எழுந்தருளி யுள்ள பெருமிதம் உடையவரே!

## விரிவுரை

அரகர :—

அர—பாவங்களை நீக்குபவர்.

சிவபெருமானுடைய திருநாமங்களில் சிறந்தது அரநாமம். ஹர ஹர என்று கூறுவோர் இடர் நீங்கப் பெறுவர். சபைகளில் அடியார்கள் ஹர ஹர என்று முழக்கம் புரிவர்.

"அரன் நாமமே சூழ்க வையகமுந் துயர் தீர்கவே"

என்கின்றார் திருஞானசம்பந்தர்.

"வருசிவனடியவர் ஹரஹர எனமுறை
வழங்கு கடல்போல் முழங்க ஒருபால்" —கொலுவகுப்பு

இறைவன் நமக்கு நாவைத் தந்தான். மென்மையுடையதாகவும், ஈரமுள்ளதாகவும் தந்தான். இன்னும் ஒரு பெரிய உபகாரம், நாவை நரம்பு வைக்காமல் படைத்தான். ஏன்? நரம்பு உள்ள பகுதிகளாகிய கை, கால், கழுத்து இவைகளில் சுளுக்கு ஏற்படும். நாவில் நரம்பை வைத்தால் பேசும்போது சுளுக்கிக் கொள்ளும். நாக்கு சுளுக்கிக் கொண்டால் பேச்சு அப்படியே தடைபட்டுவிடும். நமது கை கால்கள் ஓயாமல் வேலை செய்வதில்லை. நாக்கு மட்டும் சதா மனைவியுடன், மக்களுடன், நண்பர்களுடன், வேலைக்காரர்களுடன் பேசிக் கொண்டேயிருக்கும். நரம்பிருந்தால் தினம் 2, 3 முறையாவது சுளுக்கிக் கொள்ளும். சுளுக்கிக் கொண்ட நாவை விளக்கெண்ணெய் தடவிவிட வேண்டிவரும். ஆதலால் பேசுவதற்கு என்று அமைத்துக் கொடுத்த நாவை நரம்பின்றி படைத்துக் கொடுத்தான் பரமன்.

அவன் கொடுத்த நாவினால் அவனையே யில்லையென்று கூறி நன்றி கொன்ற பாவத்துக்கு ஆளாகின்றார்கள் சிலர்.

இனி அவன் தந்த நாவினால் அவனுடைய நாமத்தை நவிலாமல் நன்றி மறந்த பாவத்துக்கு ஆளாகின்றார் பலர்.

நன்றி மறப்பது வேறு; நன்றி கொல்வது வேறு.

"நன்றி மறப்பது நன்றன்று"
"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" —திருக்குறள்.

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்

ஆக்கைக்கே யிரைதேடி யலமந்து
காக்கைக்கே யிரையாகிக் கழிவரே. —அப்பர்

"கல்லினோடு எனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லைநீர்புக நூக்க என் வாக்கினால்
நெல்லு நீர் வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன் அன்றே" —அப்பர்

ஆதலால் ஹர ஹர என்று அன்பர்கள் கூறி துன்பத்தி னின்றும் விலகி இன்பத்தை எய்துவார்களாக.

**சிவன் :—**

சிவம்—நன்மை. நன்மையே செய்கின்ற பரம் பொருள் சிவம். "சிவம் சாந்தம் சதுர்த்தம்" என்று சுருதி முழங்கு கின்றது.

**அரி :—**

பாவத்தைப் போக்குபவர் நாராயணர். அதனால் அரி யெனப் பெற்றார்.

**அயனிவர் பரவிமுன் அறுமுக சரவணபவனேயென்றநுதின மொழிதர :—**

அயன் அரி அரன் என்ற மும்மூர்த்திகளும் முருகனைத் துதிக்கின்றார்கள். மூவர்க்கு முதல்வன் முருகன எனவுணர்க.

"படைத் தளித்தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரானே"
—(கனைத்த) திருப்புகழ்

" மூவர் தேவாதிகள் தம்பிரானே "—(வாரிமீதேயெழு) திருப்புகழ்

"உலகொரு தாளான மாமனும்
உமையொரு கூறான தாதையும்
உரைதரு தேவா சுராதிபர் பெருமாளே"
—(இருகுழைமீதோடி) திருப்புகழ்.

மூவருந்தேவரும் முருகப்பெருமானுடைய திருச்சந்நிதியிற் சென்று சூரசங்காரத்தின் பொருட்டு துதிசெய்து வேண்டிக் கொண்டார்கள்.

**பரிபுர கமலம தடியிணை யடியவ ருளமதி லுறவருள் முருகேசா :—**

தன்னை நினைந்து நினைந்து உருகும் உத்தம அடியார் களுடைய திருவுள்ளத்தில் முருகன் தனது திருவடியை வைத்து அருள் புரிவார்.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பும் என
திதயமு மணக்கும் இருபாதச் சரோருகனும்."
—வேடிச்சி காவலன் வகுப்பு

**பகவதி :—**

பகம்—ஆறு. ஆறு குணங்களையுடையவள் பகவதி. அவை இறைவனுடைய அருட் குணங்களாகும்.

**முறுவர :—**

முறுவரல்—முணுமுணுத்தல். வழிபாட்டில் தாம் முந்து தற்கில்லையே என்று முணுமுணுத்தல்.

"அறுகெடுப்பார் அயனும் அரியும்
அன்றிமற் றிந்திரனோ டமரர்
நறுமுறு தேவர்கணங்க ளெல்லாம்
நம்மிற் பின்பல்ல தெடுக்க வொட்டோம்"

என்ற திருவாசகத்தில் இச்சொல் பயின்றுள்ளதால் அறிக

**பரவிமு னனுதினம் மனமகிழ் வுறவணி :—**

உலகில் உள்ள சகல உயிர்களும், தேவர்களும், முனிவர்களும், திருத்தணிகை மலையில் வந்து முருகனை நாள்தோறும் துதி செய்து வழிபடுகின்றனர்கள்.

**பணிதிகழ் தணிகை :—**

திருப்பாற்கடல் கடைந்தபோது வாசுகி என்ற நாகராஜன் கயிறாக இருந்தான். அதனால் அவன் உடம்பு புண்ணாகியது. வாசுகி திருத்தணி மலைக்கு வந்து முருகவேளைப் பூசித்து நோய் நீங்கப் பெற்றான்.

"விஷஐந்து தலையரவு தொழுகின்ற தணிமலை"

—(முலைபுளக) திருப்புகழ்.

**பகர்தரு குறமகள் தருவமை வநிதையும் இருபுடை யுறவரு பெருமாளே :—**

வள்ளியும் தெய்வயானையும் வலமும் இடமும் விளங்க முருகவேள் திருத்தணியில் எழுந்தருளியிருக்கின்றார். வள்ளி—இச்சாசக்தி; தெய்வயானை—கிரியாசக்தி.

நமக்கு வேண்டிய நலன்கள் இரண்டு. இக பரம் ஆகும். இகத்தில் உள்ள நலன்கள் அனைத்தும் இம்மண்ணுலகில் தோன்றி வளர்ந்த வள்ளியம்மையார் மூலம் அப்பன் அருளுவான். பரத்துக்குரிய நலன்கள் அனைத்தையும் விண்ணுலகில் தோன்றி வளர்ந்த தெய்வயானையம்மையாரைக்கொண்டு அருளுவான். மூன்றாவது நலமாகிய முத்திப் பேற்றினை வேலைத் தாங்கிய விமலன் தானேயருளுவான்.

இப்பாடல் துதிமயமானது. வேண்டுதல் ஒன்றும் இல்லாதது தனதன தனதன என்ற குறில் எழுத்துக்களால் ஆன நடையுடைய பாடல்.

### கருத்துரை

மூவர் தொழும் முருகா! சூரனையடக்கிய வீரனே! சிவகுரு நாதா! தணிகேசா!

## 15

இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை யறுத்திடு மெனவோதும்
இசைத்தமிழ் நடத்தமி ழெனத்துறை விருப்புட
னிலக்கண இலக்கிய கவிநாலுந்

தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
தலத்தினில் நவிற்றுத லறியாதே
தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு
சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ

கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்
களிப்புட னொளித்தெய்த மதவேளைக்
கருத்தினில் நினைத்தவ னெருப்பெழ நுதற்படு
கனற்கணி லெரித்தவர் கயிலாயப்

பொருப்பினி லிருப்பவர் பருப்பத வுமைக்கொரு
புறத்தினை யளித்தவர் தருசேயே
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
பொருப்பினில் விருப்புறு பெருமாளே.

### பதவுரை

கருப்பு வில் வளைத்து = கரும்பு வில்லை வளைத்து, அணி மலர் கணை தொடுத்து = அழகிய மலர்க்கணைகளைத் தொடுத்து, இயல் களிப்புடன் = இயல்பாகவுள்ள செருக்குடன், ஒளித்து எய்த = ஒளித்திருந்து கணைகளைச் செலுத்திய, மதவேளை = வலிமை மிகுந்த மன்மதனை, கருத்தினில் நினைத்து = திருவுள்ளத்தில் நினைத்த மாத்திரத்தில், அவன் நெருப்பு எழ = அவன் தீயில் வேகுமாறு, நுதல் படு கனல் கணில் எரித்தவர் = நெற்றியில் உள்ள நெருப்புக் கண்ணால் எரித்த வரும், கயிலாய பொருப்பினில் இருப்பவர் = கயிலாய மலையில் எழுந்தருளியிருப்பவரும், பருப்பத உமைக்கு ஒரு புறத்தினை அளித்தவர் = இமயமலையில் வளர்ந்த உமாதேவியாருக்கு இடப் பாகத்தைத் தந்தவரும் ஆகிய சிவபெருமான், தரு சேயே = தந்த

பாலகரே! புயல் பொழில்=மேகந்தவழும் சோலைகளும், வயல்பதி நயம் படும்=வயல்களும் ஊர்களும் சிறந்துள்ள, திருத்தணி பொருப்பினில் விருப்பு உறு=திருத்தணிகை மலை மீது விருப்பங்கொள்ளும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! இருப்பு அவல்=இருப்பாக இருந்து வழிக்கு உதவுகின்ற அவல் போன்ற, திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்=திருப்புகழானது அன்போடு ஓதுகின்ற அடியார்களின், இடுக்கினை அறுத்திடும்=துன்பங்களை அறுத்து ஒழிக்கும், என ஓதும்=என்று கூறுகின்ற, இசை தமிழ்=இசைத்தமிழ், நட தமிழ்=நாடகத் தமிழ், துறை என=அகப்பொருள் துறைகள் என்னும் வகையில், இலக்கண இலக்கிய=இலக்கணம் பொருந்தி இலக்கியத்தின் பாற்படும், கவி நாலும்=ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால்வகைக் கவிகளையும், விருப்புடன்=அன்புடன், தரிப்பவர்=உள்ளத்தில் தரிப்பவர்களும், உரைப்பவர்=பேசுபவர்களும், நினைப்பவர்=எண்ணுகின்றவர்களுமாகிய அடியார்களை, மிக சகதலத்தினில் நவிற்றுதல் அறியாதே=இவ்வுலகில் மிகவும் சொல்லி போற்றுகின்ற தன்மையை அடியேன் அறியாமல், தனத்தினில்=தனங்களினாலும், முகத்தினில்=முகப் பொலிவாலும், மனத்தினில் உருக்கிடும் சமர்த்திகள்=மனதில் உருகச் செய்யும் சமர்த்திகளுடைய, மயக்கினில் விழலாமோ=மயக்கமாகிய பள்ளத்தில் அடியேன் விழக்கடவேனோ?

## பொழிப்புரை

கரும்பு வில்லை வளைத்து அழகிய மலர்க் கணைகளைத் தொடுத்து இயல்பாகவுள்ள செருக்குடன் ஒளிந்திருந்து எய்த வலிய மன்மதனை நெற்றியில் உள்ள நெருப்புக் கண்ணால் நினைத்த மாத்திரத்தில் நெருப்பினில் வேகுமாறு எரித்தவரும், கயிலாய மலையில் வீற்றிருப்பவரும், இமாசலத்தில் வளர்ந்த உமாதேவியாருக்கு இடப்பாகந் தந்தவருமாகிய சிவபெருமான் பெற்ற இளம் பாலகரே! மேகந் தவழும் சோலைகளும், வயல்களும், ஊர்களும் இனிது செழித்துள்ள திருத்தணிகை மலை மீது விருப்புடன் உறையும் பெருமிதம் உடையவரே! இருப்பாக இருந்து உதவுகின்ற அவல் போன்ற திருப்புகழானது அன்புடன் ஓதுகின்ற அடியார்களது துன்பங்களை நீக்குகின்றது என்ற உண்மையை எடுத்துக் கூறுகின்ற இயல் இசை நாடகம் என்ற முத்தமிழ்களை இலக்கண இலக்கியத்துடன் நான்கு கவிகளால் அன்புடன் உள்ளத்தில் தரிப்பவர்களும், வாக்கால் பாடுபவர்களும், மனத்தால் நினைப்பவர்களுமாகிய அன்பர்களை இவ்வுலகில் பாராட்டிப் புகழ்வதை அறியாதபடி, தனத்தாலும் முகத்தாலும் மயக்கி உள்ளத்தை உருக்குகின்ற ஆற்றல் படைத்த பொதுமாதர்களின் மயக்கமாகிய படுகுழியில் அடியேன் விழலாமோ? (விழக் கூடாது)

## விரிவுரை

**இருப்பவல் திருப்புகழ் :—**

அய்லூர் செல்பவர்கள் இருப்பாக அவல் கொண்டு போவார்கள். அதனால் அதற்கு யாத்திரைத் தர்ப்பணம் என்று பேர் அமைந்தது. பசி வந்த போது அவலை நனைத்து, பாலும் சீனியும், கலந்தும், அல்லது சிறிது உப்பும் எலுமிச்சம் பழ ரசமும் கலந்தும் பல்வேறு வகையில் பக்குவஞ் செய்தும் உண்டு பசியாறலாம். வழிக்கு மிக மிகப் பயனுடையதாக இருந்து உதவுவது அவல்.

இதுபோல் திருப்புகழ் ஆவி பிரிந்து போகும் அத்தொலை யாத தனிவழிக்குத் துணையாக இருந்து உதவும். அதனால் இருப்பவல் திருப்புகழ் என்று அருளிச் செய்தார்.

இரும்பு அவல் போன்ற கடினமானது திருப்புகழ் என்று கூறுவாரும் உளர்.

நெடுநாள் கெடாமல் நின்று யாத்திரையில் உதவுவது அவல். அதுபோன்றது திருப்புகழ்.

**விருப்பொடு படிப்பவர் இடுக்கினையறுத்திடும் :—**

திருப்புகழை அன்போடு ஓதுபவர்களின் துன்பங்களை, அத்திருப்புகழே அழித்து ஒழிக்கும். அத்துணை மகிமை வாய்ந்தது எம்பிரானுடைய திருப்புகழ்.

**எனவோதும்...... அறியாதே :—**

திருப்புகழின் பெருமையைக் கூறுகின்றவர்கள்—முத்தமிழில் வல்லவர்கள்—ஆசு கவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்ற நான்கு வகைக் கவிகளில் வல்லவர்கள். முருகனுடைய நாமத்தைத் தரித்தும் நினைத்தும் உரைத்தும் வருகின்ற அந்த அடியார்களை அணுகும் தன்மையறியாமல் கெடுகின்றேன் என்கின்றார் அடிகளார்.

**தனத்தினில் முகத்தினில் மனத்தினிலுருக்கிடும் :—**

விலைமகளிர் தமது தனங்களாலும், அழகிய முகவசீகரத்தாலும் இளைஞர்களுடைய உள்ளத்தை உருக்குவார்கள்.

**சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ :—**

ஆடவரை வசஞ்செய்ய வல்ல அம்மகளிருடைய மயக்கமாகிய படுகுழியில் விழுந்து கெடுவது கூடாது.

**கருப்புவில்......எரித்தவர் :—**

மன்மதன் சிவபெருமானுடைய மோனநிலையைக் கலைக்கும் பொருட்டு கயிலையில் சென்று தனது வில்லை வளைத்து ஒளித்திருந்து மலர்க்கணைகளைச் சொரிந்தான்.

நெருப்புக் கண்ணால் அக் காமனை ஒரு கணத்தினில் சிவபெருமான் எரித்து நீறாக்கினார்

ஆசையை அறிவால் அடக்கவேணும். அறிவுக் கண் நெற்றிக் கண். அதிலிருந்து வந்த நெருப்பு ஞானவொளி. அதனால் ஆசையை உண்டாக்கும் அதிதேவதையை அழித்து விட்டார்.

**கயிலாயப் பொருப்பினிலிருப்பவர் :—**

வெள்ளி மலையில் வீற்றிருப்பவர் சிவபெருமான். அது தூய வெண்மையானது. தூய்மையில்தான் இறைவன் இருப் பான்.

**உமைக்கொரு புறத்தினை யளித்தவர் :—**

பார்வதிக்கு இடப்பாகந் தந்தவர். அர்த்தநாரீச்சுவரர்.

**புயற்பொழில் வயற்பதி......விருப்புறு பெருமாளே :—**

வளமையான பொழில், மேகந்தவழ்கின்ற உயர்ந்த வள முடைய திருத்தணியில் விருப்போடு எம்பிரான் எழுந்தருளி யிருக்கின்றார்.

## கருத்துரை

திருத்தணி முருகா ! மாதர் மயக்கில் விழாது, திருப்புகழடி யாரைப் போற்ற அருள் புரிவாய்.

## 16

உடலினூடு போய்மீளு முயிரினூடு மாயாத
உணர்வி னூடு வானூடு முதுதீயூ
டுலவை யூடு நீரூடு புவியி னூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத தனிஞானச்
சுடரி னூடு நால்வேத முடியினூடு மூடாடு
துரிய வாகு லாதீத சிவரூபம்
தொலைவி லாத பேராசை துரிச றுத வோர்பேதை
தொடுமு பாய மேதோசொ லருள்வாயே
மடல றுத வாரீச அடவி சாடி மாறுன
வரிவ ரால்கு வால்சாய அமராடி
மதகு தாவி மீதோடி உழவ ரால டாதோடி
மடையை மோதி யாறூடு தடமாகக்
கடல்பு காம காமீனை முடுகி வாளை தான்மேவு
கமல வாவி மேல்வீழு மலர்வாவிக்
கடவுள் நீல மாறுத தணிகை காவ லாவீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

## பதவுரை

மடல் அறுத=இதழ்கள் நீங்காத, வாரீசஅடவிசாடி=தாமரைப் பூவின் காட்டை அழித்து, மாறுன வரி வரால் குவால் சாய அமர் ஆடி=தனக்குப் பகையாக அங்கிருந்த வரிபடர்ந்த வரால் மீன் கூட்டங்கள் தோற்றுப் பின்வாங்கி ஓடும்படி போர்புரிந்து, மதகு தாவி மீது ஓடி=தான்செல்லும் வழியில் இருந்த நீர்பாயும் மதகைத் தாவித் தாண்டி மேலே ஓடி, உழவரால் அடாது ஓடி=வயலில் உழுப வர்கள் தன்னை வருந்தாதபடி விலகி, ஓடி, மடையைமோதி=வழியில் உள்ள நீர்மடைகளைத் தாக்கி, ஆறு ஊடு தடமாக=ஆற்றின் வழியே வழியாகச் சென்று, கடல்புகா=கடலில் புகுந்து, மகாமீனை முடுகி= அங்குள்ள பெரிய மீனை விரைந்து ஓடும்படித் தாக்கி, வாளை= வாளை மீன், தான் மேவு கமலவாவிமேல் வீழும்=தான் முன் இருந்த தாமரைக்குளத்தில் வந்து வீழும், மலர் வாவி=இத்தகைய அந்த மலர்ச்சுனையில், கடவுள் நீலம் மாறுத=தெய்வமணமுள்ள நீலோற் பல மலர் மலர்வது என்றும் தவறுத, தணிகை காவலா=திருத்தணி கைக்கு அரசே! வீர=வீரமூர்த்தியே! கருணை மேருவே=கருணையில் மேரு போன்றவரே! தேவர் பெருமாளே=தேவர்கள் போற்றும் பெருமையில் மிகுந்தவரே! உடலினூடு=உடல் உள்ளும், போய் மீளும் உயிரினூடும்=உடலில் சென்று மீளுகின்ற உயிரினூடும், மாயாத உணர்வினூடு=அழியாத உணர்ச்சியுள்ளும், வானூடு= ஆகாயத்துள்ளும், முது தீயூடு=முற்றிய தீயினுள்ளும், உலவை ஊடு=காற்றினுள்ளும். நீருடு=தண்ணீரினுள்ளும்,புவியினூடு=மண் ணினுள்ளும், வாது ஆடு ஒருவரோடும் மேவாத=சமயவாதம் புரிகின்ற எவரிடத்திலும் காணக்கிடைக்காத, தனிஞானசுடரினூடும் =ஒப்பற்ற ஞான ஒளியினுள்ளும், நால்வேத முடியினூடும்=நான்கு வேதங்களின்உச்சியிலும்,ஊடாடும்=ஊடாடுகின்றதும், துரிய=துரிய மாய் நிற்பதும், ஆகுல அதீத=துன்பங்கள் கடந்த நிலையில் உள்ளது மாகிய, சிவரூபம்=சிவரூபத்தை, தொலைவு இலாத பேர் ஆசை= முடிவில்லாத பேராசையும், துரிசு அறுத=குற்றமும் நீங்காத, ஓர் பேதை=ஒரு மூடனுகிய அடியேன், தொடும் உபாயம் ஏதோ= அடைதற்கு உரிய வழி எதுவோ? சொல் அருள்வாயே=அந்த உபதேச மொழியைச் சொல்லி அருள்புரிவீராக.

## பொழிப்புரை

வாளை மீனுனது மதகு வழியாகத் தாவிக் குதித்துச் சென்று, இதழ்களுடன் கூடிய தாமரைக் காட்டையழித்தும், தனக்கு மாறுபட்ட வரிவரால் கூட்டங்கள் தோற்றுப் போகு மாறு போர் செய்தும், வயலில் உழுபவர்கள் தன்னை வருந் தாதபடி விலகி ஓடியும், வழியில் உள்ள நீர் மடைகளைத்

தாக்கியும், ஆற்றின் வழியே சென்று, கடலில் புகுந்து அங்கே வாழும் பெரிய மகர மீனை ஓடும்படிச் செய்தும், தான் வாழும் தாமரைக் குளத்துக்குத் திரும்பிவந்தது; இத்தகைய தணிகை மலையின் மீதுள்ள மலர்ச் சுனையில் தெய்வமணம் மாறாத நீலோற்பல மலர் தவறாது மலரும். இந்தப் பெருமையையுடைய தணிகை மலைக்கு அரசே! வீரமூர்த்தியே! கருணையில் மேரு போன்றவரே! தேவர் போற்றும் பெருமிதம் உடையவரே! உடலினுள்ளும், உடலில் சென்று மீளுகின்ற உயிரினுள்ளும், அழியாத உணர்வினுள்ளும், விண்ணினுள்ளும், முற்றிய தீயினுள்ளும், காற்றினுள்ளும், நீரினுள்ளும் மண்ணினுள்ளும் சமயவாதம் புரிகின்ற எவரிடத்திலும் காணக் கிடையாத ஒப்பற்ற ஞான ஒளியினுள்ளும், நான்கு வேதங்களின் முடிவிலும், ஊடாடுகின்றதும், துரியமாய் நிற்பதும், துன்பங் கடந்த நிலையில் உள்ளதுமான சிவரூபத்தை, பேராசையும் குற்றமும் நீங்காத மூடனாகிய அடியேன் அடைவதற்கு உரிய வழி எதுவோ? அந்த உபதேச மொழியை உபதேசித்து அருளுவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழில் அருணகிரிநாத சுவாமிகள் முருகனிடம் உபதேசம் புரியுமாறு வேண்டுகின்றார்.

**உடலினூடு......நால்வேத முடியினூடும் ஊடாடும் :—**

சிவ ரூபமானது, மண் முதலான ஐம்பெரும் பூதங்களினுள்ளும், உயிர் உணர்விலும் அறிவினுள்ளும் கலந்திருக்கின்றது.

**வாதாடுமொருவரோடு மேவாத தனி ஞானச்சுடர் :—**

கல்வி பயில்வது மனம் அடங்குவதற்காகவேயாகும். அங்ஙனம் அடக்கம் பெறாது, கல்வி பயின்று, "என் சமயம் பெரியது, என் சமயம் பெரியது" என்று வீணே தர்க்கம் புரிந்து வாணாளை வீணாளாக்கும் சமயவாதிகளின் அறிவில் ஞான ஒளி வீசாது.

**துரியம் :—**

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்றையும் கடந்தது துரியம். அத் துரிய நிலையில் உணரப்படுவது சிவரூபம்.

> "துரியநிலை யேகண்ட முத்தரித யாகமலம்
> அதனில்விளை யாநின்ற அற்புதசு போத சுக
> சுயபடிகம்" —(சுருதிமுடி) திருப்புகழ்.

**ஆகுலாதீத சிவரூபம் :—**

ஆகுலம்—துன்பம்; அதீதம்—அப்பாற்பட்டது. சிவரூபமானது துன்பத்திற்கு அப்பாற்பட்டது. சிவனருள் பெற்ற

வர்க்கே துன்பம் கிடையாது. 'இன்பமே எந்நாளும் துன்ப மில்லை' என்கின்றார் அப்பர் பெருமான்.

**தொலைவிலாத பேராசை :—**

பற்று, அவா, ஆசை, பேராசை என்று நான்கு வகை எழுச்சிகள் மனதில் எழும்.

1. உள்ள பொருளில் வைத்திருக்கும் பிடிப்பு பற்று எனப் படும்.
2. இன்னும் அது வேண்டும், இது வேண்டும் என்று கொழுந்து விடுகின்ற நினைவு அவா எனப்படும்.
3. பிறர் பொருளை விரும்பி நிற்பது ஆசையாகும்.
4. எத்தனை வந்தாலும் திருப்தியின்றி நெய்விட, நெய் விட எரிகின்ற நெருப்பின் தன்மை போல் சதா உலைந்து அலைந்து மேலிடுகின்ற விருப்பத்துக்குப் பேராசை என்று பெயர்.

**பற்று :—**

எந்தப் பொருளின் மீதும் பற்றின்றி நின்றவர்க்கே பிறப்பு அறும்.

> பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
> நிலையாமை காணப் படும். —திருக்குறள்

> 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' —திருவாய்மொழி.

**அவா :—**

உள்ளது போதும் என்று அமையாமல், இன்னும் அது வேண்டும், இது வேண்டும் என்று விரும்புவோர் துன்பத்தை யடைவார்கள். இந்த அவாவே பெருந்துயரை விளைவிக்கும்; பிறப்பைக் கொடுக்கும்.

> அவாவென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து.
> அவாவில்லார்க்கு இல்லாகுந் துன்பம் அஃதுண்டேல்
> தவாஅது மேல்மேல் வரும். —திருக்குறள்.

அவா என்ற ஒன்று ஒருவனுக்குக் கெடுமாயின் அவன் வீடு பேறு எய்திய போதுமட்டுமன்றி இம்மையிலும் இடை யறாத இன்பத்தையடைவான்.

> இன்பம் இடையறா தீண்டும், அவாவென்னுந்
> துன்பத்துள் துன்பங் கெடின். —திருக்குறள்

**ஆசை :—**

பிறர் பொருளின் மீது வைப்பது ஆசையாகும். இது பற்றினும், அவாவினும் கொடியது.

பிறனுடைய மண்ணை விரும்புவது மண்ணாசை. மண்ணாசையால் மடிந்தவன் துரியோதனன். பிறனுடைய மனைவியை விரும்புவது பெண்ணாசை; பெண்ணாசையால் பெருங்கேடு அடைந்தவர்கள் இராவணன், இந்திரன், சந்திரன், கீசகன் முதலியோர்கள்.

**பேராசை :—**

உலகமெல்லாம் கட்டியாள வேண்டும். தொட்டன எல்லாம் தங்கமாக வேண்டும். கடல் மீது நம் ஆணை செல்ல வேண்டும். விண்ணும் மண்ணும் நம்முடையதாக வேண்டும் என்று எண்ணி, ஒரு கட்டுக்கடங்காது, கங்கு கரையின்றி தலைவிரித்து எழுந்து ஆடுகின்ற அசுர தாண்டவமே பேராசை.

கொடும் கோடை வெய்யிலில் ஒருவன் குடையும் செருப்பும் இன்றி நடந்து சென்றுகொண்டிருந்தான். அவ்வழியில் ஒருவன் பாதரட்சை அணிந்துகொண்டு குடையும் பிடித்துக்கொண்டு குதிரை மீது சென்றான். அவனைப் பார்த்து நடந்து போனவன், "ஐயா! வணக்கம் குதிரைமேல் போகின்ற உனக்குப் பாதரட்சை எதற்காக? எனக்குத் தந்தால் பெரும் புண்ணியம்" என்றான்.

கேட்டவன் வாய் மூடுவதற்கு முன் குதிரை மீது சென்றவன் பாதரட்சையைக் கழற்றிக் கொடுத்தான்.

'ஐயா! குதிரையில் செல்வதனால் நீர் சீக்கிரம் வீட்டுக்குச் சென்று விடலாம். நான் நடந்து போகின்றவன். ஆதலால் தயவு செய்து தங்கள் குடையைத் தாருங்கள்" என்றான்.

குதிரைமேல் போகின்றவன் சற்றும் சிந்தியாமல் இரக்கத்துடன் குடையைக் கொடையாகக் கொடுத்தான்.

நடப்பவன் மனம் மிக்க மகிழ்ச்சியடைந்து, "ஐயா! தங்கள் தரும குணம் பாராட்டுதற்கு உரியது. நிரம்ப நன்றி. பெருங் கருணை புரிந்து குதிரையைக் கொடுங்கள்" என்றான்.

குதிரை மீது இருந்தவன் 'அப்படியா!' என்று சொல்லி பளிச்சென்று இறங்கிக் குதிரையை அடிக்கும் சவுக்கினால் அவனைப் பளீர் பளீர் என்று அடித்தான். அடிபட்டவன் சிரித்தான்.

"நான் அடிக்கின்றேன்; நீ சிரிக்கின்றாய்; என்ன காரணம்" என்று கேட்டான்.

"இவ்வாறு கேட்டு நான் அடிபடவில்லையானால் என் ஆயுள் உள்ளவரை என் மனதில் ஒரே கொந்தளிப்பு இருந்திருக்கும். செருப்பைக் கேட்டவுடன் கொடுத்தார்! குடையைக் கேட்டவுடன் கொடுத்தார்! குதிரையைக் கேட்டிருந்தால் கொடுத்திருப்பார். கேளாமல் போய்விட்டோமே" என்று

எண்ணி எண்ணி வருந்துவேன். இப்போது கேட்டேன்; நீர் குதிரையைக் கொடுக்காமல் சவுக்கடி கொடுத்தீர். சவுக்கடி பட்டது பெரிதன்று, சந்தேகந் தீர்ந்தது பெரிது" என்று கூறி அவனை வணங்கி விட்டுச் சென்றான். இதற்குத்தான் பேராசை யென்று பேர்.

ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல்லாங் கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநாள் இருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர்எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதும்நான் நான்எனக் குளறியே
ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல மனதற்ற
பரிசுத்த நிலையையருள் வாய்
பார்க்கும்இட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே.

ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தான் நிறுத்தினால் ஆகாதோ.

ஆசையெனும் பெருங் காற்றூடிலவம் பஞ்செனவுமன தலையுங்காலம்
மோசம் வரும் இதனாலே கற்றதும் கேட்டதுந் தூர்ந்துமுத்திக்கான
நேசமும்நல் வாசமும்போய்ப் புலன் நாயிற் கொடுமை பற்றி நிற்பர்
அந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே! நிராசையின்றேல் தெய்வம்
உண்டோ.

—தாயுமானார்

"பேராசை யெனும் பிணியில் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ" —கந்தரநுபூதி

"கடவுளுக்கும் நமக்கும் எவ்வளவு தூரம்?" என்று ஒரு சீடன் ஆசிரியனைக் கேட்டான். ஆசிரியர் "ஆசையாகிய சங்கிலி எவ்வளவு நீளம் உளதோ அவ்வளவு தூரத்தில் கடவுள் இருக்கின்றார்" என்றார்.

சங்கிலி பல இரும்பு வளையங்களுடன் கூடி நீண்டுள்ளது. ஒவ்வொரு வளையமாகக் கழற்றி விட்டால் அதன் நீளம் குறை

யும். அதுபோல் பலப்பல பொருள்களின் மீது வைத்துள்ள ஆசைச் சங்கிலி மிகப் பெரியதாக நீண்டுள்ளது. ஒவ்வொரு பொருளின் மீதும் உள்ள ஆசையைச் சிறிது சிறிதாகக் குறைக்க வேண்டும். முற்றிலும் ஆசை அற்ருல் அப்பரம் பொருளை அடையலாம்.

> "ஆசா நிகளம் துகளாயின பின்
> பேசா அநுபூதி பிறந்ததுவே" —கந்தரநுபூதி

**துரிசருத வோர் பேதை :—**

துரிசு = குற்றம். ஆசையால் கோபமும், கோபத்தால் மயக்கமும் வரும். காமம், வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங் களும் நீங்கிஞல்தான் பிறவி நீங்கும்.

> "காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றன்
> நாமம் கெடக்கெடும் நோய்" —திருக்குறள்

பேதை—அறிவில்லாதவன். மேதையில்லாதவன் பேதை; பேதை வாதையடைவான்.

**தொடுமுபாயம் ஏதோ சொலருள்வாயே :—**

மேலே கூறிய சிவரூபத்தை யடைகின்ற வழி யாது? அதை உபதேசித்தருளும்.

**மடலருத வாரிச......மளர்வாவி :—**

இந்த மூன்று அடிகளில் திருத்தணியில் தாமரைக் குளத் தில் வாழும் வாளை மீனின் ஆற்றல் கூறப்படுகின்றது.

திருத்தணியில் குளத்தில் வாழுகின்ற வாளை மீன் மதகு வழியே சென்று, தாமரைக் காட்டை அழித்து, மதகுகளை உடைத்தும், வரால் மீன்களை விரட்டியும், கடலில் சென்று பெரிய மகர மீன்களைத் தோல்வியுறச் செய்தும், ஆற்றின் வழியே மீண்டு முன்பிருந்த குளத்தில் வந்து சேருமாம். இத்துணை வலிமை வாளை மீனுக்கு உண்டு என்று குறிப்பிடு கின்ருர்.

வீரவாகு தேவர் தூது சென்று வழியில் அரக்கர்களைக் கொன்று கடல் நடுவில் உள்ள வீரமகேந்திரஞ் சென்று, போர் புரிந்து வெற்றியுடன் மீண்டதையும் இது குறிப்பிஞல் புலப் படுத்துகின்றது.

**கடவுள் நீல மாருத தணிகை :—**

திருத்தணிகை மலைமீது தெற்கு ரதவீதியின் தென்புறத் தில் இந்திர நீல சுனை இன்றும் இருக்கின்றது. அச்சுனையில் இந்திரன் தேவலோகத்து நீலோற்பலக் கொடியை வைத்து வளர்த்தான். அங்கு காலை, உச்சி, மாலை என்ற முப்போதும்

தப்பாது மூன்று மலர்கள் மலரும். அதனை எடுத்து மூன்று வேளைகளிலும் இந்திரன் கந்தவேளை வழிபட்டான். செங்கழுநீர் மலரும் அதில் மலர்ந்தது. அதனால் அந்த மலை கல்லாரகிரி எனப் பேர் பெற்றது.

'கன் மலிந்த கழுநீர்க் குன்றம்' என்று அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார். நீலோற்பலம் மலர்வதால் இது நீலகிரி எனப் பெற்றது.

"நீலகிரி மருவு குருபதி" —சீர்பாதவகுப்பு
"அனவரத நீலமலர் முத்தெறி சுனைப் புனலில்
அருவிகுதிபாய்தரு செருத்தணி" —பூதவேதாளவகுப்பு
"நீள் சுனை தினமும் உற்பலம் மலர் திருத்தணி" —ஞானவேழவகுப்பு
"இந்த்ர நீலச் சிலம்பினன்" —புயவகுப்பு
"சேர்ப்பது மாலைய நீலோற்பலகிரி" —கந்தரந்தாதி

காலைப் போதினில் ஒருமலர்; கதிர்முதிர் உச்சி
வேலைப் போதினில் ஒருமலர்; விண்ணெலாம் இருள்சூழ்
மாலைப் போதினில் ஒருமலர்; ஆகஇவ் வரைமேல்
நீலப் போதுமுன்று ஒழிவின்றி நிற்றலும் மலரும்.

கருணை மேருவே :—

முருகவேள் கருணையில் மேருமலை போல் உயர்ந்தவர். மேருவரையின் மேம்பட்ட தவத்தான் என்று சுந்தரரைச் சிவபெருமான் குறிப்பிடுகின்றார்.

## கருத்துரை

தணிகை நாயகா! ஆசையற்று அடியேன் சிவரூபத்தைப் பெற உபதேசித்தருள்.

## 17

உடையவர்க ளேவ ரெவர்களென நாடி
உளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேரு கிரியளவு மான
தெனவுரமு மான மொழிபேசி
நடைபழகி மீள வறியவர்கள் நாளை
நடவுமென வாடி முகம்வேறாய்
நலியுமுன மேயு னருணவொளி வீசு
நளினஇரு பாத மருள்வாயே

விடைகொளுவு பாகர் விமலர்திரி சூலர்
விகிர்தர்பர யோகர் நிலவோடே
விளவுசிறு பூளை நகுதலையொ டாறு
விடவரவு சூடு மதிபாரச்
சடையிறைவர் காண உமைமகிழ ஞான
தளர்நடையி டாமுன் வருவோனே
தவமலரு நீல மலர்சுனைய நாதி
தணிமலையு லாவு பெருமாளே.

## பதவுரை

விடை கொளுவு பாகர்=இடபவாகனத்தைச் செலுத்துபவர்; விமலர்=மலம் இல்லாதவர்; திரி சூலர்=முத்தலைச் சூலத்தையுடையவர்; விகிர்தர்=உயர்ந்தவர்; பரயோகர்=மேலான யோகத்தினர் நிலவோடே=சந்திரனோடு; விளவு=விளாமரத்தின் இளந்தளிர்; சிறு பூளை=சிறிய பூளைச் செடியின் மலர், நகு தலையொடு=பல்லோடு கூடிய வெண்தலை, ஆறு=கங்கையாறு, விட அரவு=விடத்துடன் கூடிய பாம்பு, சூடும்=இவைகளைத் தரித்துள்ள, அதிபார சடை இறைவர் காண=அதிகபாரமுள்ள சடை முடியுடைய சிவபெருமான் கண்டுகளிக்கவும், உமை மகிழ=உமாதேவியார் பார்த்து மகிழவும், ஞான தளர் நடை இடா முன் வருவோனே=ஞானத் தளர் நடையிட்டு அவர்கள் முன் வருபவரே! தவமலரும்=மிகுதியாக மலர்கின்ற, நீலமலர் சுனை=நீலோற்பலச் சுனையுடையதும், அநாதி=ஆதியில்லாததுமாகிய, தணிமலை உலாவு=திருத்தணிகை மலையின் மீது உலாவுகின்ற, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! உடையவர்கள்=செல்வம் படைத்தவர்கள், ஏவர் எவர்கள் என நாடி=எவர்கள் எவர்கள் என்று தேடி, உளமகிழ=அவர்கள் மனம் மகிழும் பொருட்டு, ஆசு கவி பாடி=அவர்கள் மீது ஆசு கவிகளைப் பாடியும், உமது புகழ் மேருகிரி அளவும் ஆனது என=உங்களுடைய புகழ் மேருகிரியின் அளவுபோல் உயர்ந்தது என்று கூறியும், உரமும் ஆன மொழி பேசி=வலிமையான துதி மொழிகளைப் பேசியும், நடை பழகி=நடந்து நடந்து பழகியும், வறியவர்கள் மீள=தரித்திரர்களாகவே மீளும்படி, நாளை நடவும் என=அச்செல்வர்கள் "நாளைக்கு வா நாளைக்கு வா" என்றே கூற, வாடி முகம் வேறாய்=அதனால் அகம் வாடி முகம் களைமாறிச் சோர்ந்து, நலியும் முனமே=வருந்து முன்னதாகவே, உன் அருணஒளிவீசும்=உமது சிவந்த ஒளி வீசுகின்ற, நளின இருபாதம் அருள்வாயே=தாமரை போன்ற இரு பாதங்களையும் அருள்புரிவீராக.

## பொழிப்புரை

இடபவாகனத்தைச் செலுத்துபவரும், மலமில்லாதவரும் முத்தலைச் சூலத்தை யேந்தியவரும், உயர்ந்தவரும், பரமயோகியும், சந்திரன், விளவின் இலை, சிறிய பூளை மலர், பல்லுடன் கூடிய வெண்தலை, கங்கையாறு, நச்சுப்பாம்பு, இவைகளைத் தரித்துள்ள மிகுந்த பாரமான சடை முடியுடையவருமாகிய சிவபெருமான் கண்டு களிக்குமாறும், உமையம்மையார் பார்த்து மகிழுமாறும் அவர்களது திருமுன்னே, ஞானத்தளர் நடையிட்டு வருகின்றவரே! மிகுதியாக நீலோற்பலமலர் மலர்கின்றதும், தொடக்கம் இல்லாததுமான திருத்தணிகை மலையின் மீது உலாவுகின்ற பெருமிதம் உடையவரே! செல்வம் படைத்தவர்கள் எவர்கள் எவர்கள் என்று தேடிக்கொண்டு போய், அவர்கள் மனம் மகிழும்படி, ஆசு கவிகள் பாடியும், உங்களது புகழ் மேருகிரிபோல் அளவில்லாதது என்று வலிமையான துதிமொழிகளைக் கூறியும், ஓயாது நடந்து நடந்து சென்றும், பழையபடியே தரித்திரர்களாகவே வரும்படி "நாளை வா, நாளை வா" என்று அத் தனவந்தர் கூற, அதனால் அகமும் முகமும் வாடி வருந்துதற்கு முன்னரேயே, சிவந்த ஒளி வீசுகின்ற தாமரை போன்ற உமது திருவடிகளைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**உடையவர்க ளேவ ரெவர்களென நாடி :—**

தமிழ் படித்த புலவர்களில் பலர் தமிழுக்குத் தலைவனை இறைவனைப் பாடாமல், கேவலம் அழிகின்ற செல்வம் படைத்த மனிதர்களைப் பாடித் திரிந்தார்கள். காமதேநுவின் பாலைக் கமரில் (நில வெடிப்பில்) கொட்டுவதுபோல் அரிய தமிழை அற்பர்களிடம் கொட்டி அலைவது பாவம்; இந்த அவல நிலையைக் குறித்து அருணகிரி சுவாமிகள் இத்திருப்புகழில் இரங்கிக் கூறியருளுகின்றார்கள். தேனை வண்டுகள் நாடித்தேடிச் செல்வதுபோல், புலவர்கள் பெருந்தனவந்தர்கள் எவர்கள் எவர்கள் என நாடித் தேடிச் செல்வார்கள்.

**உளமகிழ :—**

செல்வர்கள் மனம் மகிழுமாறு அவர்களை இந்திரன் சந்திரன் என்று புகழ்ந்து பேசுவார்கள்.

**ஆசுகவி பாடி :—**

கவிகள் நான்கு; ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, விஸ்தார கவி. விரைந்து பாடுகின்றது ஆசுகவி எனப்படும்.

"நாலுகவி த்யாகா" —அநுபூதி

"ஆசுகவி முதலமொழிவன் நிபுண மதுப முகரித மவுன
முகுள பரிமள நிகில கவிமாலை" —சீர்பாத வகுப்பு

உமது புகழ் மேருகிரியளவு மானதெனவுரமுமான மொழிபேசி :—

ஒரு காசுங் கொடுக்க மனமில்லாத—அடுத்த வீட்டுக்குந் தெரியாத—பரமலோபியைப் பார்த்து, "நீர் பெரிய கொடையாளி; கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கையையுடையவர்; அள்ளி வழங்குகின்ற வள்ளல்; பரமதாதா; தங்களின் புகழ் மேருகிரி போல் உயர்ந்தது; மேருகிரிவரை பரவியுள்ளது" என்று புகழ்ந்து கூறுவார்கள்.

"மேருவரையில் மேம்பட்ட தவத்தான்

என்று சங்கிலியார் கனவில் சுந்தரரைப்பற்றிக் கூறியருள் வதையும் இங்கு நினைவு கூர்க.

கடை பழகி :—

ஒன்றுங்கொடாத அவ் வுலோபியர்களது வீட்டை நாடி ஓயாது நடந்து நடந்து கடை பழகுவார்கள் புலவர்கள்.

இறைவனுடைய திருக்கோயிலை வலம் வராத பாவி களுடைய கால்கள், அவமே வஞ்சகலோப மூடர்களின் வாசல் தோறுஞ் சென்று சென்று நடந்து அயர்ச்சி யடைகின்றன.

மீள வழியவர்கள் நாளை நடவுமென வாடி முகம் வேறாய் :—

இவ்வாறு பாடிப்பாடி யலைகின்ற புலவர்கள் மறுபடியும் தரித்திரர்களாக இருக்கும்படி, அப்பெருஞ்செல்வர்கள், "நாளை வா; நாளை வா" என்று தவணை கூறுவார்கள்.

அதனால் புலவன், அகம் வாடி, முகம் வெளுத்து வருத்த முற்றுத் தடுமாற்றம் அடைவான்.

நச்சிநீர் பிறன் கடை நடந்துசெல்ல நாளையும்
உச்சிவம் எனும் உரை யுணர்ந்து கேட்ப தன்முனம்
பிச்சர்நச் சரவரைப் பெரியசோதி பேணுவார்
இச்சைசெய்யும் எம்பிரான் எழில்கொள்காழி சேர்மினே.

—திருஞானசம்பந்தர்

உன் அருணவொளி வீசு நளின இருபாத மருள்வாயே :—

முருகப்பெருமானுடைய திருவடிகள் ஞானமேயாகும். ஞானத்தின் ஒளி செம்மையானது. ஞானப் பிரகாசம் என் பார்கள்.

"வள்ளல் தொழு ஞானக் கழலோனே"

—(துள்ளுமதவேள்) திருப்புகழ்.

என்று வரும் திருப்புகழ் அடியாலுங் காண்க.

தாமரை மலரில் தேன் துளிப்பதுபோல், முருகப்பெருமானுடைய திருவடிகளில் கருணை துளிக்கின்றது.

"கருணை கூர்ப்பன கழல்களார்ப்பன காலமேல் வீழேன்"
—(கவடு கோத்தெழு) திருப்புகழ்.

**விடைகொளுவு பாகர் :—**

உலகமெல்லாம் அழிந்தபோது, அறம் ஒன்று மட்டும் அழியாது விடை வடிவாகச் சென்று சிவபெருமானை அடைந்தது. இறைவன் அதன்மீது ஆரோகணித்தருளினர். அகில உலகங்களையுந் தாங்கும் சிவபெருமானை அறந் தாங்குகின்றது

தரிப்பது (தாங்குவது), தர்மம் (அறம்): பாகன்—செலுத்துபவன். தேர்ப்பாகன் என்ற சொல்லாட்சியாலும் உணர்க. விடையைச் செலுத்துபவன் விடைப்பாகன்.

"மெய்யா விமலா விடைப்பாகா" —சிவபுராணம் (திருவாசகம்)

**விமலர் :—**

செம்புக்குந் தங்கத்துக்கும் என்ன வேற்றுமை? களிம்பு ஒன்றுதான். களிம்பு உள்ளது செம்பு; களிமபு இல்லாதது தங்கம்.

அதுபோல் சிவனுக்கும் சீவனுக்கும் உள்ள வேற்றுமை யாது? மலம் ஒன்றுதான். மலம உள்ளவன் சீவன். மலம் இலலாதவன் சிவன் அநாதிமல பெத்தன்—ஆன்மா. அநாதி மல முத்தன்—இறைவன். எனவே, ஆன்மா—சமலன். இறைவன்—விமலன்.

**திரிசூலர் :—**

சிவபெருமான் திருக்கரத்தில் திரிசூலம் விளங்கும். அது இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்று சக்திகளைக் குறிக்கும்

**விகிர்தர் :—**

விகிர்தர்—உயர்ந்தவர். எல்லாத் தேவர்கட்கும் சிறந்தவர் சிவமூர்த்தி ஒருவரேயாவர். தேவதேவர், மகாதேவர்.

**பரயோகர் :—**

சிவபெருமான் சிறந்த யோகீச்சுரர்; "பரமனே பரமயோகீ" என்று அப்பர் பெருமானும, "மறைபாடும் பரமயோகீ" என்று திருஞானசம்பந்தரும் கூறுகின்றனர்கள்.

'பற்றிலார்க்கே வீடருள் பரமயோகீ" —திருவிளையாடற் புராணம்.

**சிறுபூளை :—**

பூளைப்பூ சிவபெருமானுக்கு உகந்தது',
மூளும் வெஞ்சினந் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
பூளை சூடிதன் நகையினில எயில் பொடிந்தனபோல

ஆறு மைந்தரா றயுதருஞ் சாம்பரா யவிர்ந்தார்
கேகை விகண்ட நல் வேந்தனுக் குரைத்தனா வேய்கள்.

—கம்பராமாயணம்.

ஒரு தலை :—

சிவபெருமான் அநேக பிரம சிரங்களை மாலையாக அணிந்திருக்கின்றார்.

அத்தலைகள் பல்லுடன் கூடியவை. அவை அகங்காரத்தால் கெட்டோம் என்று சிரிப்பது போல் இருக்கும். "நான் சிருட்டிக் கர்த்தா' என்று எண்ணித் தருக்குற்றான் பிரமன். அவன் தலையை நகத்தால் கிள்ளியருளினார் சிவனார், எத்தனையோ பிரமகற்பங்கள் கற்பங்கள் தோறும் வந்த பிரமாக்களின் சிரங்களை மாலையாகக் கோத்து அணிந்திருக்கின்றார்: அதைக் கண்டவர் அகங்காரங் கொள்ளாதிருக்கும் பொருட்டு என்க.

அதிபாரச் சடையிறைவர் :—

இறைவனுடைய சடைமுடி அப்பெருமானுடைய துறவையும், இறைமைத் தன்மையையுங் குறிக்கின்றது.

ஞானத் தளர் நடையிடாமுன் வருவோனே ;—

என்றும் இளையோனாகிய முருகவேள், அம்மையும் அப்பனுங் கண்டு களிக்க, அவர்கள் திருமுன் தளர்நடையிட்டு உலாவுகின்றார்.

அவ்வண்ணம் தளர்நடையிடுவதனால், ஏழு உலகங்களும் அசைகின்றன; ஆதிசேடனுடைய ஆயிரம் பணமகுடங்களும் நெறுநெறு என்று நொறுங்குகின்றன மகா மேருகிரி இடிந்து விழுகின்றது. இமையவர்கள் தங்கள் பொன்னகரில் குடி புகுகின்றார்கள் அசுரர்கள் வயிற்றல் எரி புகுகின்றது

' இமையவர்கள் ஊரிலிறை குடிபுகுத நிருதர் வயி
றெரிபுகுத உரகர்பதி அபிஷேகமாயிரமும்
எழுபிலமு நெறு நெறென முடியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்"

—சீர்பாத வகுப்பு.

தவமலரும் :—

தவ—மிகுதி. திருத்தணி மலையில் நீலோற்பலச் சுனையில் மிகுதியாக நீலோற்பல் மலர்கள் மலர்கின்றன. அதனால் அம்மலை நீலகிரி எனப் பேர் பெற்றது.

நீலகிரி மருவுகுருபதி" —சீர்பாத வகுப்பு.

கருத்துரை

திருத்தணியாண்டவனே! உனது திருவடி தந்தருள்செய்

## 18

உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது
முள்ளவே தக்துறைகொ டுணர்வோதி
உள்ளமோ கத்திருளை விள்ளமோ கப்பொருளை
உள்ளமோ கத்தருளி யுறவாகி

வையமே ழுக்குநிலை செய்யுநீ திப்பழைய
வல்லமீ துற்பலச யிலமேவும்
வள்ளியா நிற்புதிய வெள்ளில்தோய் முத்தமுறி
கிள்ளிவீ சுற்றுமலர் பணிவேனோ

பையரா வைப்புனையு மையர்பா கத்தலைவி
துய்யவே ணிப்பகிர திகுமாரா
பையமால் பற்றிவளர் சையமேல் வைக்குமுது
நெய்யனே சுற்றியகு றவர்கோவே

செய்யுமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு
கையமால் வைத்ததிரு மருகோனே
தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே

### பதவுரை

பை அராவை புனையும்=படத்தையுடைய பாம்பை யணிகலமாக அணிந்த, ஐயர் பாக தலைவி=தலைவராகிய சிவபெருமானுடைய இடப் பாகத்தில் எழுந்தருளியுள்ள பிராட்டியாகிய உமா தேவியார், துய்ய வேணி பகிரதி=பரிசுத்தமான சடையில் இருக்கும் கங்கை இந்த இருவர்கட்கும், குமாரா=புதல்வரே! பையமால்பற்றி வளர்=மெல்ல அன்பு பற்றி வளர்ந்த, சைய மேல் வைக்கும்=வள்ளிமலை மேல் வைத்த, முது நெய்யனே=முதிர்ந்த நேயனே! சுற்றிய குறவர் கோவே=சூழ்ந்து நின்ற குறவர்கட்குத் தலைவரே! மால் செய்யும் வெற்பு உருவ=மயக்கத்தைச் செய்யும் கிரவுஞ்சமலை உருவிச் செல்லும்படி, வெய்ய வேல் சுற்றி விடு கைய=வெப்பமான வேலாயுதத்தை சுழற்றிவிட்ட கரத்தரே! மால் வைத்த திரு மருகோனே=அன்பு வைத்த இலக்குமி தேவிக்கு மருகரே! தெய்வ யானைக்கு இளைய=தெய்வத்தன்மையுடைய கணபதிக்குத் தம்பியே! வெள்ளை யானை தலைவ=ஐராவத யானைக்கு அதிபரே! தெய்வ யானைக்கு இனிய=தெய்வயானை யம்மையாருக்கு இனிமையானவரே! பெருமாளே=பெருமை மிகுந்தவரே! உய்யஞானத்து நெறி எப்பொழுதும் கை

*விடாது = பிறவித் துன்பத்தினின்றும் உய்யும் பொருட்டு ஞான வழியை அடியேன் எக்காலத்திலும் கைவிடாது பற்றி, உள்ள வேத ஆறை கொடு = உள்ள வேத நூல்களைக்கொண்டு, உணர் ஓதி = உணர்வுடன் ஓதி, உள்ள மோகத்து இருளை விள்ள = எனக்குள்ள மயக்க இருள் நீங்க, மோக பொருளை உள்ள மோகத்து அருளி = விருப்பம் வைக்க வேண்டிய ஞானப் பொருளைக் கருதும்படியான விருப்பத்தைத் தேவரீர் அடியேனுக்கு அருள் செய்து, உறவு ஆகி = தேவரீரிடத்தில் நட்பு வைத்து, வையம் ஏழுக்கும் நிலை செய்யும் நீதி = ஏழுலகங்களையும் நிலை நிறுத்திக் காக்கும் நீதியனே! பழைய வல்லமீது = பழமையான திருவல்லத்திலும், உற்பல சயில மேவும் = நீலோற்பல கிரியிலும் வீற்றிருக்கும், வள்ளியா = கருணையனே! நின் புதிய வெளவில் தோய் முத்த முறி கிள்ளி வீசுற்று = உம்மை புதிய வில்வ மரத்திலுள்ள மகிழ்ச்சி தரும் கொழுந்து இலைகளைக் கிள்ளி வீசிப் பூசித்து, மலர் பணிவேனோ = மலரடிகளைப் பணியமாட்டேனோ?*

## பொழிப்புரை

படத்தையுடைய நாகாபரணத்தை யணிந்த சிவபெருமானுடைய இடப்பாகத்தில் உள்ள உமாதேவியாருக்கும், தூய சடைமுடியில் உள்ள கங்காதேவிக்கும் குமாரரே! மெல்ல விருப்பம் பற்றி வளர்ந்த வள்ளிமலை மீது முதிர்ந்த நேயம் கொண்டவரே! சூழ்ந்துள்ள குறவர்கட்குத் தலைவரே! மயக்கத்தைச் செய்யும் கிரவுஞ்சமலையை உருவும்படி வெப்பமாகிய வேலைச் சுழற்றி விடுத்த கரத்தினரே! அன்பு வைத்த இலக்குமி தேவிக்கு மருகரே! தெய்வத் தன்மையுடைய விநாயகருக்கு இளையவரே! ஐராவத யானைக்கு அரசரே! தெய்வயானையம்மைக்கு இனியவரே! பெருமிதம் உடையவரே! பிறவித் துன்பத்திலின்றும் அடியேன் உய்யும்பொருட்டு ஞான நெறியை எந்நாளும் கைவிடாது பற்றி உள்ள வேத நூல்களை உணர்வுடன் ஓதி, எனக்குள்ள மயக்க இருள் நீங்க, விருப்பத்தக்க மெய்ப்பொருளைக் கருதும் விருப்பத்தை அடியேனுக்கு அருள் புரிந்து, உம்மை உறவு கொண்டு, ஏழுலகங்களையும் நிலை நிறுத்திக் காக்கும் நீதிபனே! பழமையான திருவல்லத்திலும் நீலோற்பல கிரியான திருத்தணிகையிலும் வாழும் கருணையனே! உம்மை புதிய வில்வ மரத்திலுள்ள மகிழ்ச்சி தரும் கொழுந்து இலைகளைக் கிள்ளி வீசிப பூசித்து உமது மலரடிகளைப் பணியமாட்டேனோ!

## விரிவுரை

**உய்ய ஞானத்து நெறி கைவிடாதெப்பொழுதும் :—**

ஆன்மாவுக்கு உள்ள எண்ணில்லாத துன்பங்களில் தலையாய துன்பம் பிறவி நோய். பிறவி நீங்கினாலன்றி துயரங்கள்

நீங்கா. எனவே ஆன்மாக்கள் பெரிதும் முயன்று பெறவேண்டியது பிறவாமையே.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" —திருக்குறள்.

அதினின்றுந் தப்புதற்கு ஞான மார்க்கத்தை எப்போதும் விடாதுபற்றி ஒழுகுதல் வேண்டும். ஞானமார்க்கம்—உண்மை நெறி.

**உள்ள வேதத்துறை கொடுணர்வோதி :—**

வேதம—அறிவுநூல். வித் என்ற பகுதியடியாகப் பிறந்தது வேதம் என்ற சொல். வித்—ஞானம். ஞானத்தைத் தருவது வேதம்.

அதனால் திருஞானசம்பந்தர் "வேதநெறி தழைத்தோங்க" இறைவனை நோக்கி அழுதருளினார்.

சத்தியத்தைப் பேசு (சத்யம் வத) என்று வேதம் முழங்குகின்றது. வேதத்தைக் குரு முகமாக நியமத்துடன் இருந்து ஓதுதல் வேண்டும். 'ஓதுவதொழியேல்' என்கின்றார் ஔவையார்.

**உள்ள மோகத் திருளை விள்ள :—**

ஆன்மாவுக்கு உள்ள மோகமாகிய இருள் நீங்க. விள்ள—நீங்க. ஞானமாகிய விளக்கொளி எய்தியவுடன் மோகமாகிய இருள் நீங்குகின்றது.

**மோகப் பொருளை உள்ள மோகத்தருளி :—**

மோகம்—விருப்பம். விரும்பக்கூடிய பொருளாகிய பரம் பொருளை, நினைக்கும் விருப்பத்தையருளி.

இடையறாது இறையாகிய மெய்ப்பொருளைத் தியானிக்க வேண்டும்.

**வைய மேழுக்கு நிலை செய்யு நீதி :—**

ஏழுலகங்கட்கும் நிலை பெற வைக்கும் நீதியாக நிற்பவர் முருகவேள்.

**ஏழுலகம் :—**

அதல, விதல, சுதல, தராதல, ரசாதல, மகாதல, பாதாள.

**மேல் ஏழுலகம் :—**

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், சனலோகம், தபோலோகம், சத்யலோகம். (மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா, பிரமரந்திரம்) இந்த ஏழுலகங்களும் நிலைநிற்க நீதியை எம்பிரான் செலுத்துகின்றான்.

**பழைய வல்லம் :—**

திருவல்லம் என்பது ஒரு சிவத்தலம். இது தொண்டை நாட்டில் உள்ள 32 தலங்களுள் ஒன்று. தேவாரம், திருப்புகழ்ப் பாடல்கள் பெற்றது. சேக்கிழார் பெரிய புராணத்தில் பாராட்டியிருக்கின்றார். நீவா நதிக்கரையில் விளங்கும் அருமையான திருத்தலம். வில்வவனநாதர் தநுர்மத்யாம்பாளுடன் எழுந்தருளியுள்ளார்.

காட்பாடி புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே எட்டு மைல். திருவலம் என்ற தனியே ரயில் நிலையம் உண்டு.

இங்கிருந்து வள்ளிமலை 8 கல் தொலை. பழமையான திருத்தலம். பலர் இங்கு தெரிசித்து வினைகள் தீர்ந்து நலம் பெறுகின்றார்கள்.

**உற்பல சயிலம் :—**

உற்பலம்—நீலோற்பலம். நீலோற்பலம் நித்தம் மலரும் பெருமையுடையது திருத்தணிகை மலை.

**வள்ளியா :—**

கருணையுடையவனே.

**நிற்புதிய வெள்ளில் தோய் முத்தமுறி கிள்ளி வீசுற்று மலர் பணிவேனே:—**

புதிய, வில்வமரத்தில் உள்ள மகிழ்ச்சியைத் தருகின்ற இளம் இலைகளை எடுத்து எம்பிரானுடைய இணையடிகளில் அர்ச்சித்து அஞ்சலி செய்தல் வேண்டும்.

**பையராவைப்புனையு மையர்பாகத் தலைவி :—**

பை—பாம்பின் படம். படம் எடுத்து ஆடும் பாம்புகளை ஆபரணமாக அணிந்தவர் சிவபெருமான.

தாருகவனத்து முனிவர்கள் அபிசார வேள்வி செய்து சிவபெருமானைக் கொல்லும்பொருட்டுக் கொடிய அரவுகளை ஏவினார்கள். கருணை வடிவாய இறைவன் கொல்ல வந்த பாம்புகளைத் தாம் கொல்லாது அணிகலமாக அணிந்து அவைகட்கு அருள் புரிந்தார்.

"வீம்புடை வன்முனிவர் வேள்விசெய்து விட்டகொடும்
பாம்பினைத்தும் தோள்மேல பரித்தனையே" —திருஅருட்பா

இத்தகைய கருணைக் கடலாகிய இறைவனுடைய இடப்பாகத்தில அமர்ந்த அம்பிகைக்கும் கங்கைக்கும் முருகர் புதல்வர்.

**பையமால் பற்றி வளர் சையமேல் வைக்கு முதுநெய்யனே :—**

வள்ளியம்மையார் பிறந்து வளர்ந்த வள்ளிமலை மீது முருகப் பெருமான் மிகுந்த அன்பு கொண்டார்.

பைய—மெல்ல. மால்பற்றி வளர் சையம்—அன்பு கொண்டு வளர்கின்ற மலை. நெய்யன்—நேயன்.

**செய்யுமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு கைய :—**

மால்—மயக்கம். தன்பால் வந்தார்க்கு மயக்கத்தைச் செய்கின்ற மலை கிரவுஞ்சம். அதில் வீரவாகு முதலியோர் மயங்கித் துன்புற்றார்கள். ஐயன் வேல் அதனைப் பிளந்து அழித்தது.

**தெய்வயானைக்கிளைய :—**

தெய்வத்தன்மையுடைய கணபதிக்குத் துணைவர்.

**வெள்ளையானைத் தலைவ :—**

இந்திரன் தெய்வயானையம்மையை முருகப் பெருமானுக்குக் கல்யாணம் புரிந்து தந்தபோது வெள்ளையானையைச் சீதனமாகத் தந்தான்.

> "பெண்கரியுடன் நிலை பெறுகென்றிந்திரன்
> வெண்கரி தன்னையும் விசாகற் கீந்து" —தணிகைப் புராணம்.

**தெய்வயானைக் கினிய :—**

தெய்வயானையம்மைக்கு எப்போதும் இனியராயிருக்கின்றவர்.

## கருத்துரை

திருத்தணி முருகா! உமது பதமலரை வில்வத்தால் வழிபட அருள் புரிவாய்.

## 19

எத்தனைகலாதி சித்தங் கெத்தனைவி யாதி பித்தங்
 கெத்தனைச ராச ரத்தின் செடமான
எத்தனைவிடாவெருட்டங்கெத்தனை வலாண்மைபற்றங்
 கெத்தனைகொ லூனை நித்தம் பசியாறல்
பித்தனையனை கட்டுண் டிப்படி கெடாமல் முத்தம்
 பெற்றிடநி னைச னத்தின் செயலான
பெற்றியுமொ ராது நிற்குந் தத்துரு திரநிற்கும்
 பெத்தமுமொராது நிற்குங் கழல்தாராய்
தத்தனத னைத னத்தந் தத்தனத் தனத்தந்
 தத்தனத னைத னத்தந் தகுதீதோ

தக்குகுகு டுடு டுட்டுண் டிக்குகுகு டீகு தத்தந்
தததனத ஞென ஞுர்த்துஞ் சதபேரி
சித்தர்கள்நி டாதர் வெற்பின் கொற்றவர்சு வாமி பத்தர்
திக்குகளோர் நாலிரட்டின் கிரிசூழச்
செக்கணரி மாக னைக்குஞ் சித்தணிகை வாழ்சி வப்பின்
செக்கர்நிற மாயி ருக்கும் பெருமாளே.

### பதவுரை

தத்தனத ஞெத னத்தந் தத்தனத ஞெத னத்தந் தத்தனதனுத னந்தந் தகுதீதோ தக்குகுகு டுடு டுட்டுண் டிக்குகுகு டீகு தத்தந் தததனத ஞென ஞுர்த்துஞ் சதபேரி=தத்தன ...... தனுனனுர்த்னு என்று ஒலிக்கின்ற நூற்றுக் கணக்கான முரசு வாத்தியங்களின் ஒலியுடன, சித்தர்கள்=சித்தர்களும், வெற்பின் நிடாதர்=மலைகளில் வசிக்கும் வேடர்களும், கொற்றவர்=அரசர்களும், சுவாமி பத்தர்=இறைவனடியார்களும், ஓர் நால் இரண்டின் திக்குகள்=எட்டுத்திசைகளிலிருந்தும் வந்து, கிரிசூழ=மலையை வலம்வர, செக்கண் அரிமா கனைக்கும்=சிவந்த கண்களையுடைய சிங்கம் ஒலி செய்யும், சித்தணிகை வாழ்=ஞானத்தணிகை யம்பதியில் வாழ்கின்ற, சிவப்பின் செக்கர் நிறமாய் இருக்கும்=மிகச் சிவந்த நிறத்துடன் விளங்கும், பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! எத்தனை கலாதி=எத்தனை கலகச் சண்டைகள்; சித்து அங்கு எத்தனை=மாய வித்தைகள் எத்தனை, எத்தனை வியாதி=எத்தனை நோய்கள்; பித்து அங்கு எத்தனை=பைத்தியச் செயல்கள் எத்தனை? சர அசரத்தின் செடம் ஆன=இயங்குதிணை நிலைத்திணைப் பொருள் கொண்ட இவ்வுலகில் எடுத்த உடல்கள் எத்தனை; எத்தனை விடாவெருட்டு=நீங்காத அச்சம் தரும் செயல்கள் எத்தனை? அங்கு எத்தனை வல் ஆண்மை=அங்கே வலிமையுடைய ஆண்மைச் செயல்கள் எத்தனை? பற்று அங்கு எத்தனை=அங்கே ஆசைகள் எத்தனை; (கொல்=அசை) ஊனை நித்தம் பசி ஆறல்=புலால் உண்டு பசியாறுஞ் செயல்கள் எத்தனை, பித்து அலையன் நான்=பித்தம் பிடித்தவன் போன்ற அடியேன், அகட்டு உண்டு=வயிற்றில் உண்டு, இப்படி கெடாமல்=இவ்வண்ணம் கெடாமல், முத்தம் பெற்றிட=பிறவியினின்றும் விடுதலையைப் பெற்றிட, நிஞானத்தின் செயல் ஆன பெற்றியும்=உமது பக்குவஞானத்தின் செயல்களான பெற்றியையும், ஒராது நிற்கும்=யாரும் உணர்தற்கு அரிதாய் நிற்பதும், தத்த குரு தார நிற்கும்=பரவிப் பிரகாசிக்கின்ற ஒளி மயமான பிரணவப் பொருளாய் நிற்பதும், பெத்தமும் ஒராது நிற்கும்=பாச பந்தத்தால் அறிதற்கரியதாய் நிற்பதும் ஆகிய உமது, கழல் தாராய்=திருவடியைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

தத்தன தனதனத்தந் தத்தன தன தனத்தந் தத்தனதன தனத்தந் தகுததோ தக்குகுகு டுடு டுட்டுண் டிக்குகுகு டிகு தத்தந் தத்தனதனன னுர்த்து என்று ஒலிக்கின்ற நூற்றுக் கணக்கான வாத்தியங்களுடன், சித்தர்களும், மலைவாழ் வேடர்களும், மன்னவர்களும், இறைவனடியார்களும் எட்டுத் திசைகளிலிருந்தும் வந்து மலையை வலம் வந்து பணிய விளங்குவதும், சிவந்த கண்களுடன் கூடிய சிங்கம் ஒலி செய்வதும் ஆகிய ஞானத் தணிகைமலை மீது மிகச் சிவந்த வடிவுடன் வாழும் பெருமிதம் உடையவரே! எத்தனை கலகச் சண்டைகள; எத்தனை மாய வித்தைகள்; எத்தனை நோய்கள்; எத்தனை பைத்தியச் செயல்கள்; அசையும் உயிர்கள்; அசையாத வுயிர்கள் வாழும் இவ்வுலகில் எடுத்த உடல்கள் எத்தனை; எத்தனை நீங்காத அச்சம் தரும் செயல்கள்; எத்தனை பேராற்றலான செயல்கள்; எத்தனை ஆசைகள்; புலால உண்டு பசியாறும் செயல்கள் எத்தனை; இவைகட்கு ஆளான அடியேன், பித்தம் பிடித்தவன் போன்ற நான் வயிற்றில் உண்டு இவ்வாறு கெடாமல் பிறவியினின்றும் விடுதலை யடைந்து உய்யுமாறு உமது அடியார் கூட்டத்தின் செயல்களான தன்மையையும் யாரும் உணர்தற்கு அரிதாக நிற்பதும். பரவி ஒளிர்கின்ற ஒளி மயமான பிரணவப் பொருளாய் நிற்பதும், பாச பந்தத்தால் அறிதற்கரிதாய் நிற்பதுமான உமது திருவடியைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**எத்தனை கலாதி :—**

மனித வாழ்வில் நிகழும் நிகழ்ச்சிகளை இப்பாடலில் கூறுகின்றார்.

கலாதி—கலகம். மொழிச் சண்டைகள், நிறச்சண்டைகள், மதச் சண்டைகள், சாதிச் சண்டைகள், சமயச் சண்டைகள் முதலிய அநேகச் சண்டைகள். சண்டையிட்டு மண்டையுடைபட்டு வருந்துவார்கள்.

"சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
சாத்திரச் சண்டையிலே கோத்திரக் குப்பையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற வுலகீர்" —இராமலிங்கர்.

**சித்தங் கெத்தனை :—**

சித்து அங்கு எத்தனை; சித்து—சித்துபோல் செய்யும் மாய வித்தைகள்; பிறர் வியக்குமாறு ஒருபுறம் உள்ள பொருளை மற்றொரு புறம் வருமாறு செய்து காட்டுகின்ற செயல்கள்.

**வியாதி பித்தங் கெத்தனை :—**

வியாதிகள் எண்ணில்லாதன.

பித்து அங்கு எத்தனை. பித்தம் பிடித்த செயல்கள் எண்ணைல்லாதன. பித்தம் பிடித்தவன் வேண்டாத பொருள் களான கண்ணாடித் துண்டுகள், பிஞ்சான் உடைசல்கள், வெற்றுக் காகிதங்கள் இவைகளை உயர்ந்த பொருள்கள் போல் வைத்துப் போற்றுவான். அதுபோல் துன்பத்தைத் தரும் செயல்களை இன்பச் செயல்களாக எண்ணி உழலுவர்

**எத்தனை சராசரத்தின் செடமான :—**

இயங்கும் திணை, இயங்காத திணை என்ற சராசரத்தில் உள்ள உடல்கள எத்தனையோ எடுத்தன.

**எத்தனை விடா வெருட்டு :—**

நீங்காத அச்சத்தைத் தரும் செயல்கள் எண்ணற்றன; பிறா கண்டு நடுங்கககூடிய கொடுமைகள்,

**அங்கு எத்தனை வலாண்மை :—**

அவ்விடத்தில் வல்ய ஆற்றல்கள் பல.

**எத்தனை கொல் ஊனை நித்தம் பசியாறல் :—**

பலப்பல உயிர்களைக் கொன்று தின்று பசியாறுகின்ற தீமைகள் பல.

**பித்தனையனுன் :—**

பித்து அனையன் நான்—பித்தம் பிடித்தவனைப் போன்ற அடியேன்.

**அகட்டுண்டு :—**

அகடு—வயிறு; வயிற்றில் உண்டு. உண்பதுவே தொழி லாக வாழ்வது.

**இப்படி கெடாமல் முத்தம் பெற்றிட :—**

இவ்வாறு அடியேன் வீணே அழியாத வண்ணம், விடு தலையைப் பெறுமாறு அருள் புரிக.

**நிஜசனத்தின் செயலான பெற்றியும் :—**

நின சனம்—நினது அடியார் கூட்டம் திருத்தொண்டர் களின் அன்பு நெறிச் செயலகளைத் தந்தருள்க.

**தத்த குருதார நிற்கும் :—**

குரு—ஒளி. தாரம்—பிரணவம்; பரவி ஒளிமயமாய் விளங் கும் பிரணவப் பொருளாய் நிற்பதும் ஆன தன்மையைத் தந்தருள்க.

**பெத்தமு மொராது நிற்கும் கழல் தாராய் :—**

பெத்தம்—கட்டுப்பாடு; பாசபந்தத்தால் அரிதற்கரிதாய் நிற்பதுமான உமது பாததைத் தந்தருள்க.

**தத்தன......சதபேரி :—**

திருத்தணிகைக்கு வரும் அடியார்கள் நூற்றுக்கணக்கான ஒலி பேதங்களுடன் கூடிய வாத்தியங்களை வாசித்துக் கொண்டு வருகின்றார்கள்.

**சித்தர்கள் :—**

அட்டமா சித்தியில் வல்லவர்கள்.

**கிடாதர் வெற்பின் :—**

மலையில் வாழுகின்ற வேடர்கள்.

**கொற்றவர் :—**

உலகை யாளுகின்ற மன்னர்கள்.

**சுவாமி பத்தர் :—**

இறைவனை மெய்யன்புடன் வணங்கும் அடியார்கள்.

**திக்குகளொர் நாலிரட்டின் கிரிசூழ :—**

எட்டுத் திசைகளிலிருந்து வந்து மலையை வலம் வருவார்கள்.

**செக்கணரிமா கனைக்கும் :—**

செ கண் அரிமா—சிவந்த கண்ணுள்ள சிங்கம் சிவந்த கண்களைக் கொண்ட சிங்கங்கள் குகையிலிருந்து கர்ச்சிக்கும் படியான மலை திருத்தணிகை.

**திவப்பின் செக்கர் நிறமாயிருக்கும் பெருமானே :—**

முருகன் செம்மேனி யெம்மான.

"செய்யன் சிவந்த ஆடையன்" —திருமுருகாற்றுப்படை.

"கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய் மயிலேறிய சேவகனே" —அநுபூதி

## கருத்துரை

திருத்தணிகேசா ! உமது கழல் தந்து காத்தருள்வாய்.

## 20

எனைய டைந்த குட்டம் வினைமி குந்த பித்த
　　மெரிவ ழங்கு வெப்பு　　　　வலிபேசா
இகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
　　டிரும லென்று ரைக்கு　　　　மிவையோடே
மனைகள் பெண்டிர் மக்கள் தமைநினைந்து சுத்த
　　மதிம யங்கி விட்டு　　　　மடியாதே
மருவி யின்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
　　மயிலில் வந்து முத்தி　　　　தரவேணும்
நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
　　நெறியில் நின்ற வெற்றி　　　　முனைவேலா
நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
　　நெடிய குன்றில் நிற்கு　　　　முருகோனே
தினைவி ளங்க லுற்ற புனஇ ளங்கு றத்தி
　　செயல றிந்த ணைக்கு　　　　மணிமார்பா
திசைமு கன்றி கைக்க அசுர ரன்ற டைத்த
　　சிறைதி றந்து விட்ட　　　　பெருமாளே.

### பதவுரை

*நினை வணங்கு பத்தர் அனைவரும் தழைக்க*=தேவரீரை வணங்குகின்ற அடியார்கள் எல்லோரும் சுகத்துடன் வாழ, *நெறியில் நின்ற*=அருள் தரும் வழியில் நிற்கும், *வெற்றி முனை வேலா*=வெற்றி பெறும் கூரிய வேலாயுதரே! *நிலைபெறும்*=அழியாது நிலைத்து விளங்கும், *திருத்தணியில்*=திருத்தணியிலும், *விளங்கு சித்ர நெடிய குன்றில் நிற்கும்*=அழகுடன் விளங்கும் நெடிய குன்றிலும் எழுந்தருளியிருக்கும், *முருகோனே*=முருகக் கடவுளே! *தினை விளங்கல் உற்ற*=தினைப்பயிர் செழித்திருக்கின்ற, *புன இளம் குறத்தி*=மலைக் கொல்லையில் வசித்த இளம்பருவமுள்ள வள்ளி நாயகியை, *செயல் அறிந்து அணைக்கும்*=அவருடைய அன்புச் செயலை அறிந்து தழுவிய, *அணிமார்பா*=அழகிய திருமார்பை யுடையவரே! *திசை முகன் திகைக்க*=பிரமதேவர் திகைக்குமாறு, *அசுரர் அன்று அடைத்த*=அசுரர்கள் அந்நாளில் தேவர்களை அடைத்த, *சிறை திறந்து விட்ட*=சிறையைத் திறந்துவிட்ட, *பெருமாளே*=பெருமையிற் சிறந்தவரே! *எனை அடைந்த குட்டம்*=அடியேனுக்கு வந்த குட்ட நோய், *வினை மிகுந்த பித்தம்*=வினைக்கு ஈடாக மிகுந்துவரும் பித்தம், *எரி வழங்கு*

வெப்பு=கொதிப்பைத் தருகின்ற வெப்பு நோய், வலி பேசா=வலி சொல்ல முடியா வண்ணம், இகலி நின்றுஅலேக்கும் முயலகன்=மாறு பட்டு துயர்தந்து வருத்தும் முயலகன் என்ற இழுப்பு நோய், குலேப் பொடு=நடுக்க நோயுடன், இருமல் என்று உரைக்கும் இவை யோடே=இருமல் என்று சொல்லப்படும் இந்நோய்களுடனே ஊடாடி, மனைகள்=வீடுகள், பெண்டிர்=பெண்கள், மக்கள் தமை நினைந்து=மக்கள் என்ற இவர்களை நினைந்து, சுத்த மதிமயங்கிவிட்டு மடியாதே=நல்ல அறிவு மயக்கமுற்று அடியேன் இறந்து போகா வண்ணம், மருவி இன்று எனக்கு=நீர் இன்று தோன்றி அடியேனுக்கு, மரகதம் சிறக்கு மயிலில் வந்து=மரகத ஒளிவீசும் பச்சை மயிலின் மீது எழுந்தருளி, முத்தி தரவேணும்=முத்தி நலனைத் தந்தருளவேண்டும்.

## பொழிப்புரை

தேவரீரை வணங்குகின்ற அன்பர்கள் அனைவரும் சுகத்துடன் இருக்கும்படி, அதற்கு உரிய வழியில் நிற்கின்ற வெற்றி பெறும் கூரிய வேலாயுதரே! அழியாத திருத்தணிகையிலும், அழகு விளங்குகின்ற நெடிய குன்றிலும் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளே! தினைப்பயிர் செழிக்கின்ற புனத்தில் வாழ்ந்த இளங் குமரியான வள்ளியம்மையை அவருடைய அன்புச் செயலை யறிந்து தழுவிய அழகிய திருமார்பினரே! பிரமதேவர் திகைக்குமாறு, அசுரர்கள் அந்நாள் தேவர்களை அடைத்த சிறையைத் திறந்து விட்டருளிய பெருமிதம் உடையவரே! அடியேனுக்கு வந்த குட்டநோய், வினையினால் அதிகரித்து வந்த பித்தநோய், கொதிப்பைத் தருகின்ற சுரநோய், சொல்ல முடியாத வலியைத் தருகின்ற மாறுபட்டு வருத்தும் முயலகன் என்ற வலிப்பு நோய், நடுக்க நோய், இருமல நோய் முதலிய நோய்களினால் ஊடாடி, வீடுகள், மனைவிகள், மக்கள் என்ற இவர்களை நினைத்து, நல்ல அறிவு நிலை மயங்கி வீணே அடியேன் இறந்துவிடாத வண்ணம், பச்சை மயிலின் மீது தேவரீர் எளியேன்முன் தோன்றி யருளி முத்தி நலத்தைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**வினையடைந்த குட்டம் :—**

நல்லாறு தெரிந்துணர நம்பரருளாமையால் அப்பர் பெருமான் கொல்லாமை மறைந்துறையும் சமண சமயங் குறுகி அதன் காரணமாகக் கொடுஞ் சூலையை யடைந்ததுபோல், அருணகிரிநாதர் இளமையில் விலைமகளிர் மையலில் உழன்று அதன் பயனாய்த் தொழுநோய் உற்றனர். அதனை இப்பாடலில் கூறி முறையிடுகின்றார்.

**வினைமிகுந்த பித்தம் :—**

முன் செய்த வினையினால் அதிகரித்து வருகின்ற பித்த நோய், பித்தத்தால் வரும் வாந்தி, மயக்கம், கிறுகிறுப்பு, மஞ்சட்காமாலை முதலிய பிணிகள்.

**எரி வழங்கு வெப்பு :—**

வெப்பு—சுரநோய்; இந்நோய் அனலைக் கக்குவது போன்ற வெப்பத்தைத் தந்து துன்புறுத்துவது.

**இகலி நின்றலைக்கு முயலகன் :—**

ஒரு வகையான இழுப்பு நோய்; முசல்வலிப்பு என்பார்கள். கொல்லிமழவன் புதல்விக்கு இந்நோய் வந்து வருத்தியது அவன் திருப்பாச்சிலாச்சிராமம் என்ற சிவத்தலத்தில, எம்பெருமான் திருமுன் குழந்தையை வைத்து வேண்டிக்கொண்டான். அது சமயம் அங்கு எழுந்தருளிய திருஞானசம்பந்தர் திருவுள்ளம் இரங்கித் திருப்பதிகம் பாடியருளினர். முயலகன என்ற நோய் நீங்கியது. அன்றியும் அத்தலத்திலுள்ள நடராசப் பெருமானுடைய திருவடியின் கீழேயுள்ள முயலகனும் மறைந்து விட்டது.

இகல்—மாறுபாடு; இகலி நின்றலைக்கு முயலகன்—மாறுபட்டு நின்று அல்லல்படுத்தும் முயலகன் வலிப்பு.

**குலைப்பு :—**

இது ஒரு வகையான நடுக்க நோய்.

**இருமல் என்றுரைக்கு மிவையோடே :—**

இருமல் முதலிய இத்தனை நோய்கள் வந்து சுற்றி நின்று வருத்தா நிற்ப.

**மனைகள் பெண்டிர் மக்கள் தமை நினைந்து :—**

வீடுகள், மனைவியர். மக்கள் இவர்களை நினைந்து நினைந்து அவர்கள் நலத்துக்காகவே வருந்துவர்.

**சுத்த மதிமயங்கிவிட்டு மடியாதே :—**

"தூய்மையான அறிவு ஆசாபாசங்களால் மயக்கமுற்று அவமே அடியேன் மாளாவண்ணம் முத்தி தரவேணும்" என்று அடிகளார் வேண்டுகின்றார்.

**முத்தி :—**

முத்தி என்ற சொல்லுக்கு பந்தத்தினின்றும் விடுபடுவது என்பது பொருள். நத்தையிலிருந்து விடுபடுவது முத்து எனப் பேர் பெறறது போல கட்டினின்றும் விடுபட்டவர் முத்தர்.

**நினைவணங்கு பத்தர் அனைவருந் தழைக்க நெறியில் நின்ற வெற்றி முனை வேலா :—**

முருகப்பெருமானே பரம் பொருள் என்று உறுதியாக எண்ணி வணங்குகின்ற அன்பர்கள் உய்வதற்கு, உரிய நெறியில் நின்று அப்பரமபதி யருள்புரிவான்.

**நிலைபெறும் திருத்தணியில் :—**

எல்லாம் அழிய நேரினும் எம்பெருமான் விளங்கும் அழகிய திருத்தணிமலை அழியாது நிலைத்து நிற்கும்.

**நெடிய குன்று :—**

திருத்தணிக்கு அருகில் நெடியம் என்று ஒரு மலை உளது.

**சிறை திறந்து விட்ட :—**

பன்னெடுங் காலமாக அமரர்களையும் அமர மாதர்களையும் சூரபன்மன் சிறையில் அடைத்து வைத்திருந்தான். முருகவேள் கருணையினால் சூராதியவுணரை யடக்கி, ஏங்கி ஏங்கி இளைத்து இருந்த இமையவரது சிறைவாசலைத் திறந்து விடுதலை தந்து உதவியருளினார்.

"அரியயன் பிரமாதியர் கால் விலங்கவிழ்க்கும் பெருமாளே"
—(தெருவினில் நடவா) திருப்புகழ்.

## கருத்துரை

திருத்தணிகேசா! அவமே அடியேன் அழியாவண்ணம் முத்தி தந்தருள்.

## 21

ஏது புத்திஐ யாஎ னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றத்தல்கொ லோஎ னக்குநி தந்தைதாயென்

றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவ
ரேச லிற்பட வோந கைத்தவர் கண்கள் காணப்

பாதம் வைத்திடை யாத ரித்தெனை
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
யார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்

பால்மொ ழிக்குர லோல மிட்டிடில
யாரெ டுப்பதெ னுவெ றுத்தழ
பார்வி டுப்பர்க ளோள னக்கிது சிந்தியாதோ

ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
ஒட வெட்டிய பாநு சத்திகை எங்கள்கோவே

ஓத மொய்ச்சடை யாட வுற்றமர்
மான்ம ழுக்கர மாட பொற்கழ
லோசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே

மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே

மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே.

## பதவுரை

ஓதம் உற்று எழு=தண்ணீர் கலந்து எழுகின்ற, பால் கொதித்தது போல=பாலைக் காய்ச்சியவுடன் அது சீறி விரைந்து கொதித்தது போல, எண் திகை=எட்டுத் திசைகளிலிருந்து போர் செய்ய வந்த, நீச முட்டரை=இழிந்த அசுரர்களை, ஓட=இறந்து இயமபுரத்திற்குப் போக, வெட்டிய=கொன்ற, பானு சத்தி கை=சூரியப்ரகாசம் பொருந்திய வேலாயுதத்தைக் கரத்தில் தாங்கிய. எங்கள் கோவே=எங்களுடைய தலைவரே! ஓதம் மொய்=கங்கை பொருந்தி வாழ்கின்ற, சடை ஆட=சடாபாரம் அசைந்து ஆடவும், உற்று அமர்=பொருந்தி இருக்கின்ற, மான் மழு கரம் ஆட=மான்கரமும் மழுக்கரமும் அசைந்து ஆடவும், பொன் கழல் ஓசை பெற்றிடவே=பொன்னுலாகிய வீரக்கழல் இனிது ஒலிக்கவும், நடித்தவர்=ஆனந்தத் தாண்டவம் புரிபவராகிய சிவபெருமான், தந்த வாழ்வே=பெரு வாழ்வே! மா தினை புன மீது இருக்கும்=பெருமை தங்கிய தினைப் புனத்தின் கண் உறைந்த, மை வாள் விழி=மையைத் தீட்டிய வாள் போன்ற கண்களையுடைய, குறமாதினை=வள்ளியம்மையாரை, திரு மார்பு அணைத்த=திருமார்பில் தழுவுகின்ற, மயூர=மயில்வாகனத்தையுடையவரே! அற்புத=அற்புதமான செயல்களைச் செய்பவரே! கந்த கந்தக் கடவுளே! வேளே=எல்லோராலும் விரும்பப்படுகின்றவரே! பூ முடி குழலார் வியப்புற=மலர் சூடுகின்ற பெண்கள் தங்கள்

அழகினால் மோகமூட்டியும் அதனால் மயங்காததைக் கண்டு வியப்புற, நீடு = தவத்தினால் நீடித்து, மாரன் வெற்றிகொள் = மன் மதனை வெற்றிகொண்ட, மெய் தவர் வாழ் = உண்மைத் தவசீலர் கள் வாழ்கின்ற, திருத்தணி மா மலைப்பதி = பெருமை பொருந்திய திருத்தணி மலையில் வாழ்கின்ற, தம்பிரானே = தலைவரே! ஐயா = ஐயனே! எனக்கு ஏதுபுத்தி = அடியேனுக்கு என்ன புத்தி கூறுகின்றீர்? (தாங்கள் என்னை யாட்கொள்ள வில்லையானால்) இனி யாரை நத்திடுவேன் = இனி யாரைப் பற்றுக்கோடாகக் கொள்வேன், அவத்தினிலே இறத்தல் கொலோ = பிறவிப் பயனைப் பெறாமல் வீணே இறந்துவிடுவது தகுதியோ? நீ எனக்கு தந்தை தாய் என்றே இருக்கவும் = நீரே அடியேனுக்குத் தந்தையும் தாயும் என்று இருக்கவும், நானும் இப்படியே தவித்திடவோ = அடியேனும் இப்படியே தவிக்கலாமோ? சகத்தவர் ஏசலில் படவோ = பூவுலகத் தவர் கூறும் பழிச்சொல்லுக்குள்ளாகலாமா? நகைத்தவர் கண்கள் காண = என்னைக் கண்டு முன்னே எள்ளிச் சிரித்தவர்களுடைய கண்கள் காணுமாறு, பாதம் வைத்து = தேவரீருடைய திருவடியை அடியேன் சென்னிமீது வைத்தருளி, இடை ஆதரித்து = நடுவில் அடியேனைக் காப்பாற்றி, என்னை தாளில் வைக்க = அடியேனை உமது திருவடியில் வைப்பதற்கு, நீயே மறுத்திடில் = தேவரீரே மறுத்து விட்டால், பார் நகைக்கும் = உலகம் சிரிக்கும், ஐயா = ஐயனே, தகப்பன்முன் = பிதாவுக்கு முன்னே, மைந்தன் ஓடி = மகன் ஓடி, பால் மொழி குரல் ஓலம் இட்டிடில் = பால் மணம் மாறுத இனிய குரல்கொண்டு "ஓ" என்று ஓலமிட்டால், யார் எடுப்பது என = "இக் குழந்தையை யார் எடுப்பது" என்று, வெறுத்து அழ = வெறுப புற்று அழுமாறு, பார் விடுப்பர்களோ = உலகத்திலே யுள்ளவர் விட்டுவிடுவார்களோ? (விடமாட்டார்கள்), எனக்கு இது சிந்தியாதோ = அடியேன் விஷயத்தில் இந்த நியாயத்தைத் தேவரீருடைய திருவுள்ளம் நினைத்தருளாதோ?

## பொழிப்புரை

தண்ணீரோடு கூடிய பாலை வற்றக் காய்ச்சும்போது அப் பால் எப்படிக் கொதித்தெழுமோ அப்படி எட்டுத் திசைகளிலு மிருந்து சீறி வந்த இராக்கதர்களை உயிர் எமபுரம் ஓட வெட்டிக்கொன்ற சூரியப் பிரகாசமுடைய வேற்படையைக் கரத்தில் ஏந்தியவரே! எங்கள் தலைவரே! கங்கை வாழ்கின்ற சடாபாரம் ஆடவும், பொருந்தியுள்ள மான் மழுக்கரங்கள் ஆடவும், பொன்னாலாகிய வீரக்கழல இனிது ஒலிக்கவும் அந வரத ஆனந்தத் தாண்டவம் புரியும் சிவபெருமான் பெற் றருளிய பெருவாழ்வே! பெருமை பொருந்திய தினைப்புனத் தில் வாழ்ந்த மையெழுதிய வாள்போன்ற திருக்கண்களை யுடைய வள்ளிநாயகியாரைத் திரு மார்பில் தழுவுகின்ற மயில்

வாகனரே! அற்புதமான செயல்களையுடைவரே! கந்தப் பெருமானே! எல்லோராலும் விரும்பப்பட்டவரே! மலரை முடித்துள்ள மாதர்கள் தமது அழகால் மயங்காததைக் கண்டு வியப்புறுமாறு மன்மதனை வென்று நீண்ட தவஞ் செய்யும் மாதவர்கள் வாழும் திருத்தணிகை மலைமேல் எழுந்தருளியுள்ள தலைவரே! அடியேனுக்கு என்ன புத்தி கூறுகின்றீர்? ஐயனே! இனி அடியேன் உம்மையன்றி யாரை அண்டி உய்வு பெறுவேன்? பயனின்றி வீணிலே இறந்துபடுவது தக்கதோ? அடியேனுக்குத் தந்தையும் தாயும் நீரே என்று எண்ணியிருக்க, அடியேன் இப்படி அலைந்து கெடலாமோ? அடியேன் உலகத்தவரால் பழிக்கப்படலாமோ? என்னைக் கண்டு நகைத்தவர்கள் கண்கள் காணுமாறு உமது பாத தாமரையை என் சென்னிமீது வைத்தருளி என்னைக் காப்பாற்றி திருவடியிற் சேர்க்க தேவரீரே மறுத்துவிட்டால் உலகம் கண்டு (என்னையும் உன்னையும்) நகைக்காதோ? ஒரு குழந்தை பிதாவின் முன் சென்று பால்மணமாருத இளங்குரல் கொண்டு அழுதால் யாராவது எடுக்கட்டுமென்று உலகில் அழ விட்டு விடுவார்களோ? ஒருபோதும் விடமாட்டார்கள். இந்த நியாயம் அடியேன் பொருட்டுத் தங்கள் திருவுளத்தில் நினைப்புக்கு வராதோ?

## விரிவுரை

இப்பாடல் அருமையிலும் அருமையானது ஒரு மகன் தன் அருமைத் தந்தையிடம் தன் குறைகளைக் கூறி முறையிட்டு வாதாடுகின்ற முறையில் அமைந்துள்ளது. இப்பாடலை நினைக்குந்தோறும் நெஞ்சமாகிய கல் நெகிழ்ந்து உருகுகின்றது; பாடக் கேட்டவர் ஊனும் உணர்வும் உள்ளமும் உயிரும் ஒருங்கே உருகுகின்றன. அன்பர்கள் சற்று ஊன்றிப் படிப்பார்களாக இதன் அருமைப்பாடும் இதிலுள்ள அன்பு நெறியும் நன்கு விளங்கும். முருக பக்தர்கள் நாள்தோறும் இத்திருப்பாடலைச் சொல்லி முறையிட வேண்டும்.

**ஏது புத்தி ஐயா:—**

பிள்ளைகள் பிதாவிடத்தில் போய் எனக்கு என்ன புத்தி ஐயா! என்று அன்பு கனியக் கேட்பது போல் சுவாமிகள் தமது பரம பிதாவாகிய கந்தப்பெருமானை நோக்கி, "ஐயனே! அடியேனுக்கு என்ன புத்தி கூறுகின்றீர்?" என்று கேட்கின்றார். இந்த ஒரு சொற்றொடரே கல் மனதைக் கரையச் செய்கின்றது.

**இனி யாரை நத்திடுவேன்:—**

"முருகா! இதுகாறும் உம்மையே கதியென்று எண்ணி, பிற தெய்வங்களைக் கனவிலும் நினையாதிருந்த அடியேனை நீர்

கைநெகிழ விட்டுவிட்டால் இனி யாரை அண்டி உய்வு பெறுவேன்" என்கின்றார்.

அவத்தினிலே இறத்தல்கொலோ:—

பெறுதற்கரிய மனிதப் பிறப்பை எடுத்து ஒவ்வொருவரும் இப்பிறவியின் பயனைப் பெறுதற்கு விரைந்து முயற்சிக்க வேண்டும். அப்பயனாவது இனிப்பிறவாமையேயாம். பிறவாப் பெற்றியைப் பெறாமல் வறிதே வாழ்நாளைக் கழித்து அவமே இறந்தொழிவது கூடாது என்று சுவாமிகள் இதனால் விளக்குகின்றனர்.

எனக்கு நீ தந்தை தாயென்றே இருக்கவும்:—

இறைவனைத் தாய் தந்தையாகப் பாவித்து அன்பு செய்வது சற்புத்ர மார்க்கம் எனப்படும்.

"எந்தாயு மெனக் கருள்தந் தையுநீ
சிந்தாகுலமா னவைதீர்த் தெனையாள்" —அநுபூதி.

ஏகத்தவரேசலிற்படவோ:—

"முருகா! உமது திருவடியே கதியென்று இருந்த அடியேனை நீர் ஆட்கொள்ளவில்லையானால், 'அருணகிரி ஓயாமல் முருகா! முருகா! என்று' பாடினான்; முடிவில் அருள் பெறாதொழிந்தான்' என்று உலகத்தவர் ஏசுவார்களே? அந்தப் பழிச் சொல்லுக்கு அடியேன் இலக்காகலாமோ?" என்று சுவாமிகள் நம்மை உருக வைக்கின்றனர்.

நகைத்தவர் கண்கள் காண பாதம் வைத்து:—

அருணகிரிநாத சுவாமிகள் அடியார் குழாங்களோடும் விபூதி உருத்திராக்கச் சின்னங்களுடனும் அரகர முழக்கத்துடனும் திருப்புகழைப்பாடிக்கொண்டு தணிகை மலைக்குச் சென்றனர். அங்கு சில கீழ்மக்கள் சுவாமிகளைக் கண்டு எள்ளி நகையாடினார்கள். அது கேட்ட சுவாமிகள் "சினத்தவர் முடிக்கும்" என்ற திருப்புகழின் முதலிரண்டடியைப் பாடி அவர்களை நீறாக்கிப் பின் மனமிரங்கி பின் இரண்டடியைப் பாடி உய்வித்தனர். அவர்கள் உடனே திருந்தி சுவாமிகள் திருவடியிற் சரண புகுந்து அடிமைகளாயினர். அவர்கள் முன்பு நகைத்தார்களாதலால் நகைத்த அவர்கள் கண்கள் காண திருவடியைச் சென்னிமிசை வைத்து ஆதரிக்குமாறு வேண்டுகின்றனர்.

மறுத்திடில் பார் நகைக்குமையா:—

"முருகா! உம்மையொழிய ஒருவரையும் நம்புகிலா நாயேனை நீர் ஆட்கொள்ள மறுத்துவிட்டால், 'கருணைக் கடவுள் என்று வேதாகமங்கள் கந்தவேளைப் புகழ்வது அத்

தனையும் பொய். அருணகிரி பலகாலும் தொழுது அழுது வழிபட்டும் அறுமுகன் ஆட்கொள்ளவில்லை; ஆதலால் அறுமுகனை வழிபடுதல் வீண் செயல்' என்று தேவரீரையும், 'அருணகிரி இத்தனை காலம் வீணான முயற்சி செய்து முருகா முருகா என்று எய்த் தொழிந்தனன்' என்று என்னையும் உன்னையும் உலகம் பழிக்கும்" என்று சிறிது சுவாமியைக் பேதிக்கின்றார்.

தகப்பன்முன் மைந்தனோடி.........சிந்தியாதோ —

ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னாவிலுனை
ஏவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ

—(ஆறுமுகம்) திருப்புகழ்.

"ஒரு சிறு குழவி தந்தையின் முன்னரோடி பவளவாய் துடிக்கக் கண்ணீர்வடிக்கக் கரமலராற்கண்மலரைப் பிசைந்து இளங்குரலால் அழுதால் எந்த வன்னெஞ்சுடைப் பிதா எடுத்து அணைத்து ஆதரிக்காமல் இருப்பன்? யாரும் உடனே எடுத்து கண்ணீரைத் துடைத்து இன்னுரை கூறி இனிது அணைத்து குழந்தையின் துன்பத்தை யாற்றுவர்; அடியேனுக்குப் பரம தந்தையாக விளங்கும் உமது முன்னே வந்து என் குறைகளைக் கூறி இப்படி முறையிட்டு நிற்கும் என்னை ஆதரித்தற்கு மேற்கூறிய உலக வழக்கு உமது திருவுளத்தில் சற்று சிந்திக்கலாகாதோ?" என்று கூறும் சமத்காரம் சிந்திக்குந்தோறும் சித்தத்தில் தித்திக்கின்றது.

பானு சத்தி :—

நூறு கோடி சூரியர்கள் ஒருங்கே உதித்தால் எத்துணை ஒளியை வீசுமோ அத்துணை ஒளியை வீசும் எந்தையார் திருக்கை வேல்.

"உலாஉதயபானு சதகோடி யுருவான
வொளியாகு மயில் வேலங் கையிலோனே"

—(அவாமருவி) திருப்புகழ்.

"சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி யொளிப்பவலை
அடக்குதழ லொளிப்ப ஒளி ரொளிப்பிரபை வீசும்" —வேல்வகுப்பு

மாரன் வெற்றிகொள்.........மெய்த்தவர் :—

திருத்தணிகைமலை உண்மைத் தவசிகள் பலர்க்கு உறைவிடமாக விளங்குகின்றது. அங்கு வாழும் மாதவர்கள் மதனனை வென்றவர்கள். ஊர்வசி திலோத்தமையைப் போன்ற மகளிர் தமது ஒப்பற்ற அழகைக் கண்டு அத் தவசிகள் சிறிதுங் கலங்காமையைக் கண்டு "அம்மா! இது போன்ற உறுதியுடையவர்களைக் கண்டதேயில்லை" என்று

வியப்புறுகின்றனர். இத்தகைய மெய்த்தவர் பலர் வாழ, எம்பிரான் அம்மலையில் வாழ்கின்றனன்.

## கருத்துரை

நிருதரை மாய்த்த நெடுவேலண்ணலே! நிருத்த மூர்த்தியின் திருக்குமாரரே! வள்ளி கணவரே! தணிகையாண்டவரே! தந்தையாகிய நீர் குழந்தையாகிய என்னை ஆகரித்து ஆட்கொள்வீர்.

## 22

ஓலையிட்டகு ழைச்சிகள் சித்திர
 ரூப மொத்தநி றத்திகள் விற்கணை
 யோடிணைத்தவி ழிச்சிகள் சர்க்கரை யமுதோடே

ஊறியொத்தமொ ழிச்சிகள் புட்குர
 லோடு வைத்துமி ழற்று மிடற்றிகள்
 ஓசை பெற்றது டிக்கொளி டைச்சிகள் மணம்வீசும்

மாலையிட்டக ழுத்திகள் முத்தணி
 வாரழுத்துத னத்திகள் குத்திர
 மால்விளைத்தும னத்தைய ழித்திடு மடமாதர்

மார்ப சைத்தும ருட்டியிருட்டறை
 வாவெனப் பொருள் பற்றி முயக்கிடு
 மாதருக்குவ ருத்தமி ருப்பது தணியாதோ

வேலை வற்றிட நற்கணை தொட்டலை
 மீதடைத்துத னிப்படை விட்டுற
 வீறரக்கன்மு டித்தலை பத்தையு மலைபோலே

மீதறுத்துநி லத்தில டித்து மெய்
 வேத லட்சுமி யைச்சிறை விட்டருள்
 வீர அச்சுத னுக்குந லற்புத மருகோனே

நீலிநிட்களி நிர்க்குணி நித்தில
 வாரி முத்துந கைக்கொடி சித்திர
 நீல ரத்தின மிட்ட அறக்கிளி புதல்வோனே

நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
 நேசமெத்தஅ ளித்தருள் சற்குரு
 நீலமுற்றதி ருத்தணி வெற்புறை பெருமாளே

## பதவுரை

வேலை வற்றிட=கடல் வற்றும்படி, நல்கணை தொட்டு=சிறந்த கணையைச் செலுத்தி, அலை மீது அடைத்து=கடலின்மீது அணை கட்டி, தனி படைவிட்டு உற=ஒப்பற்ற ஆயுதத்தைப் பொருந்தும் படியேவி, வீறு அரக்கன் முடி தலை பத்தையும்=கர்வங்கொண் டிருந்த இராவணனுடைய முடியுடைய பத்துத் தலைகளையும், மலை போலே மீது அறுத்து நிலத்தில் அடித்து=மலைபோல் மேலே அறுத்து நிலத்தில் விழ அடித்துத்தள்ளி, மெய் வேத வட்சுமியை சிறைவிட்டு அருள்=சத்தியவடிவாய வேதலட்சுமியாம் சீதையைச் சிறையினின் றும் விடுவித்தருளிய, வீர அச்சுதனுக்கு=வீரம்பொருந்திய அச்சுத ராமபிரானுக்கு, நல் அற்புத மருகோனே=நல்ல அற்புதமுடைய திருமருகரே! நீலி=நீலநிறமுடையவர், நிட்களி=மாசு இல்லாதவர், நிர்க்குணி=குணங்களைக் கடந்தவர், நித்தில வாரி முத்து நகை கொடி=முத்துக்களுள் கடல் முத்தைப் போன்ற பற்களையுடைய கொடிபோன்றவர், சித்திர நீல ரத்தினம் இட்ட அறக்கிளி=அழகிய சித்திர நீலரத்தினம் பதித்த அணிகலன்களைக் கொண்ட அறம் வளர்த்த நாயகியாகிய பார்வதிதேவியாரது, புதல்வோனே=திருக் குமாரரே! நீறு அது இட்டு நினைப்பவர் புத்தியில்=திருநீற்றினைப் பூசி நினைக்கின்ற அடியார்களின் அறிவில், நேசம் மெத்த அளித்து அருள் =அன்பை நிரம்ப அளித்தருளும், சற்குரு=உண்மை குருநாதரே! நீலம் உற்ற=தினந்தோறும் நீலோற்பல மலர் மலர்கின்ற திருத்தணி வெற்புறை=திருத்தணிமலையின் மீது எழுந்தருளியுள்ள, பெரு மானே=பெருமையின் மிக்கவரே! ஓலை இட்ட குழைச்சிகள்= பொன் ஓலையான குழைகளையணிந்தவர்கள், சித்திரரூபம் ஒத்த நிறத்திகள்=அழகிய வடிவம் வாய்ந்த நிறத்தையுடையவர்கள், வில் கணையோடு இணைத்த விழிச்சிகள்=வில்லம்பு போன்ற கண்களை யுடையவர்கள், சர்க்கரை அமுதோடு ஊறி ஒத்த மொழிச்சிகள்= சர்க்கரை அமுதம் இவற்றினுடன் ஊறிய சுவையுடன் கூடிய பேச் சினையுடையவர்கள், புள் குரலோடு வைத்து மிழற்று மிடற்றிகள்= பட்சியின் குரல் ஒலிக்கும் கண்டத்தினர்கள், ஓசை பெற்ற துடி கொள் இடைச்சிகள்=ஒலி செய்யும் உடுக்கை போன்ற இடையை யுடையவர்கள், மணம் வீசு மாலை இட்ட கழுத்திகள்=வாசனை வீசு கின்ற பூமாலை யணிந்த கழுத்தையுடையவர்கள், முத்து அணி வார் அழுத்து தனத்திகள்=முத்துமணிபதித்த அணிகலன்களும் கச்சும் அழுத்துகின்ற தனங்களையுடையவர்கள், குத்திர மால் விளைத்து= வஞ்சனையையும் மயக்கத்தையும் செய்து, மனத்தை அழித்திடு மட மாதர்=ஆடவரது மனத்தை அழிக்கின்றவர்கள் ஆகிய பொது மகளிர்கள், மார்பை அசைத்து=தமது மார்பினை அசைத்து, மருட்டி =மயக்கத்தை உண்டுபண்ணி, இருட்டு அறை வா என=இருட்

டறைக்குள் வா என்று அழைத்துப்போய், பொருள் பற்றி முயக் கிடும்=பொருளைக் கவர்ந்து தழுவுகின்ற, மாதருக்கு வருத்தம் இருப்பது தணியாதோ=மாதர் பொருட்டு அடியேன் வேதனைப் படுவது தவிராதோ?

## பொழிப்புரை

சமுத்திரம் வற்றும்படி கணையை விடுத்தவரும், அலை மிகுந்த அக்கடலை அணைகட்டினவரும், ஒப்பற்ற பாணத்தை ஏவி, அகங்காரம் உள்ள இராவணனுடைய முடியுடன் கூடிய பத்துத் தலைகளையும் மலைபோல் அறுத்து நிலத்தில் தள்ளியவரும், சத்திவடிவினராகிய வேதலட்சுமியாம் சீதாதேவியைச் சிறையிலிருந்து மீட்டவருமாகிய வீரராகவனுடைய உயர்ந்த அற்புதம் பொருந்திய திருமருகரே! நீல நிறமுடையவரும், மாசில்லாதவரும், குணங்கள் இல்லாதவரும், முத்துக்களுள் கடல் முத்துப் போன்ற டற்களையுடைய கொடி போன்றவரும் அழகிய நீலரத்தினம் அணிந்த தரும நாயகியாரும் ஆகிய உமாதேவியாரது திருப் புதல்வரே! திருநீறு தரித்து தியானம் புரிகின்ற அடியார்களது அறிவினில் மிகுந்த அன்பைவழங்கி யருள்புரிகின்ற சற்குரு நாதரே! நீலோற்பல மலர் மலர்கின்ற திருத்தணி மலையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! பொன்னோலை காதில் அணிந்தவரும், அழகிய வடிவை யுடைய நிறத்தவரும், விற்கணை போன்ற கண்களை யுடையவரும், சர்க்கரை அமுதுடன் ஊறிய சொற்களை யுடையவரும், பறவையின் குரல் ஒலிக்கும் கண்டத்தினரும், ஒலி செய்யும் உடுக்கை போன்ற இடையை யுடையவரும், நறுமணம் வீசும் மலர் மாலை யணிந்த கழுத்தினரும், முத்து மாலையும் இரவிக்கையும் அழுத்திய தனபாரங்களை யுடையவரும், வஞ்சனையும் மயக்கத்தையும் செய்து மனத்தை அழிக்கின்றவருமாகிய பொது மாதர், தமது மார்பினை அசைத்து மயக்கி இருட்டு அறைக்குள் அழைத்துச் சென்று பொருளைப் பறித்துத் தழுவுவர். அம்மாதர் பொருட்டு அடியேன் வேதனைப்படுவது தவிராதோ?

## விரிவுரை

ஓலையிட்ட குழைச்சிகள்:—

நாகரிகம் முதிராத பழங்காலத்தில், பெண்கள் அசோகங் கொழுந்து மாங்கொழுந்து முதலிய கொழுந்துகளைக் கிள்ளிக் காதில செருகிக் கொள்வார்கள். குழை யென்றால் தழை யென்று பொருள். பின்னர் தங்கத்தாலும் மணிகளாலும் காதணிகள் செய்யத் தலைப்பட்டார்கள். அந்தக் காதணிக்குக் குழையென்றே பேர் அமைந்தது.

அன்றியும் பனையோலையைச் சுற்றிக் காதில் அணிந்தார்கள். பின்னர் தங்கத்தால் ஓலைபோல் செய்து அணிந்தார்கள். அதனால் காதணியை ஓலை யென்றே கூறினார்கள்.

**சித்திர ரூபமொத்த நிறத்திகள் :—**

சித்திரம்-அழகு. அழகிய வடிவமும் நல்ல நிறமும் உடையவர்கள்;

**விற்கணையோடிணைத்த விழிச்சிகள் :—**

வில்லிலிருந்து புறப்படும் கணைபோன்ற கூர்மையான கண்கள் படைத்தவர்கள்.

**சர்க்கரை அமுதோடே ஊறியொத்த மொழிச்சிகள் :—**

அம்மகளிர் சர்க்கரையிலும் அமிர்தத்திலும் ஊற வைத்து எடுத்தது போன்ற மிக இனிய மொழிகள் பேசுவார்கள். அம் மொழியின் இனிமையால் அவர்களை நாடிச் செலலும இளைஞர்கள் அப்படியே மயங்கித் தியங்கிவிடுவார்கள்.

**புட்குரல் ஓசைபெற்ற துடிக்கொடிடைச்சிகள் :**

காம மயக்கத்தால் கழுத்தில் பறவையின் ஒலி எழும்.

"ஓர்மிடற்றில் எழும்புள் குகூகுகூ வென" —(ஓலமிட்ட) திருப்புகழ்.

மாதர் இடை துடி (உடுக்கை) போல் சிறுத்து இருக்கும்.

**மாதருக்கு வருத்தமிருப்பது தணியாதோ :—**

மாதருக்கு என்ற சொல்லிற்கு என்றநான்காம் வேற்றுமை உருபு பொருட்டு என்றபொருளில் வந்துளது. மாதர்பொருட்டு வருத்தம் அடைவது அடியேனை விட்டு விலகாதோ? விலகுதல வேண்டும் என்று சுவாமிகள் முருகனிடம் முறையிடுகின்றார்.

**வேலை வற்றிட நற்கணை தொட்டு :—**

இராமர் கடலில் அணைகட்டும் பொருட்டு வருணனை வழி வேண்டினார். அவன் அவர் குறிப்பின் வழி வராதெழிந்ததால் கடலின்மீது பிரமாத்திரம் விட்டார். அதனால் கடல் கொந்தளித்துக் கொதித்துக் கலங்கியது. வருணன் வந்து வணங்கி மன்னிக்குமாறு வேண்டிக்கொண்டான்.

**அலைமீதடைத்து :—**

கடல் மீது அணை கட்டி யருளினார். மற்றவர்கள் செய்ய முடியாத செயற்கருஞ்செயலைச்செய்தார். பிறவிப்பெருங்கடலை யடைத்தார் என்று உணர்க.

**வீறரக்கன் முடித்தலை பத்தையு மலைபோலே :—**

இராவணன் இராஜச குணம். இது தச இந்திரியங்களை யுடையது மெய் வாய் கண் நாசி செவி வாக்கு பாணி பாதம் பாயு உபத்தம் என்ற பத்து இந்திரியங்களையும் அவற்றை யுடைய இராஜச குணத்தையும் இராமர் அழித்தார்.

**மெய் வேத லட்சுமி :—**

சீதா பிராட்டியார் அளவற்ற கற்புடையவர். "சிறை யிருந்தவளின் ஏற்றஞ்சொல்லுவது இராமாயணம்" என்று வைணவப் பூர்வாச்சாரியர்கள் கூறுவார்கள். "அளவில் கற்புடை ஜானகி" என்கின்றான் கும்பகர்ணன்.

"ஜனகனன் புற்றுப்பெற்ற மடப்பெண்
தனி பெருங் கற்புச் சக்ர நடத்தும் தகை"
—(கனகதம்பத்தை) திருப்புகழ்.

**நீலி :—**

சிவபெருமான் நெருப்பான மேனியர். அந்த நெருப்புச் சுடர்விட்டு எரியும்போது அதன் நுனியில்நீல நிறம் விளங்கும். அந்த நீலமே உமாதேவியார்.

**நிட்களி :—**

நிட்களம்—அழுக்கில்லாதவர். அல்லது உருவம் அற்றவர் என்று பொருள்.

**நிர்க்குணி —**

இறைவி அருட் குணங்களை யுடையவர். சத்துவ, ராஜஸ, தாமசம் என்ற முக்குணங்கள் இல்லாதவர்.

**நித்தில வாரி முத்து நகைக் கொடி :—**

நித்திலம்—முத்து. முத்து அநேக இடங்களில் பிறக்கின்றது. அவற்றுள் கடலில் பிறக்கும் முத்து உயர்ந்தது. அம் முத்தைப் போன்ற நகையுடைய, கொடி போன்றவர்

**அறக்கிளி :—**

அம்பிகை காஞ்சிபுரத்தில் முப்பத்திரண்டு அறங்களையும் புரிந்தாள்.

"இச்சைப்படி தன்பேரறம் எண்ணான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி" —வில்லிபாரதம்.

**நீறிட்டு நினைப்பவர் :—**

இறைவனைத் திருநீறு பூசி நிட்டையில் இருந்து பெரியோர்கள் தியானிப்பார்கள். பூசும் நீறுபோல் உள்ளம் மாசிலாத புனிதர்கள்.

மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல உள்ளும் புனிதர்கள்
தேசி னால்எத் திசையும் விளக்கினார்
பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார்.

கருத்துரை

திருத்தணி முருகேசா! திருமால் மருகா! பார்வதி குமாரா! பொதுமகளிரது மயக்கம் அற அருள் புரிக.

## 23

கச்சணி யிளமுலை முத்தணி பலவகை
    கைச்சரி சொலிவர மயல்கூறிக்
  கைப்பொருள் கவர்தரு மைப்பயில் விழியினர்
    கட்செவி நிகரல்குல் மடமாதர்

இச்சையி னுருகிய கச்சைய னறிவிலி
    எச்சமி லொருபொரு ளறியேனுக்
  கிப்புவி மிசைகமழ் பொற்பத மலரிணை
    யிப்பொழு தணுகவு மருள்தாராய்

கொச்சையர் மனையிலி டைச்சியர் தயிர்தனை
    நச்சியெ திருடிய குறையால்வீழ்
  குற்கிரவினியொடு நற்றிற வகையறி
    கொற்றவு வணமிசை வருகேசன்

அச்சுதை நிறைகடல் நச்சர வணைதுயில்
    அச்சுதன் மகிழ்திரு மருகோனே
  அப்பணி சடையரன் மெச்சிய தணிமலை
    அப்பனெ அழகிய பெருமாளே.

### பதவுரை

கொச்சையர் மனையில்=யாதவர்களுடைய வீடுகளில், இடைச்சியர் தயிர்தனை நச்சியெ=கோபிகைகளின் தயிரை விரும்பி, திருடிய குறையால்=களவு செய்த குறையினால், வீழ் குற்கிர வினியொடு=விழுந்து கிடந்த உரலோடு சென்று நல் திறவகை அறி=மருத மரங்களாக நின்றவர்கள் சாபத்தையறிந்து போக்கிய, கொற்ற உவண மிசை வரு=வீரமுள்ள கருடன்மீது வருகின்ற, கேசன்=கேசவனும், அ சுதை நிறைகடல்=அந்த் பால் நிறைந்த கடலில், நச்சு அரவணை துயில்=நஞ்சையுடைய ஆதிசேடன்மீது துயில்கின்ற, அச்சுதன் மகிழ்=அச்சுதனுமாகிய நாராயணர் மகிழ்கின்ற, திருமருகோனே=சிறந்த மருகரே! அப்பு அணி சடை அரன் மெச்சிய=கங்கை நீரைத் தரித்த சடைமுடியுடைய சிவபெருமான் மெச்சிய, தணியமலை அப்பனெ=திருத்தணியில் எழுந்தருளியிருக்கும் அப்பனே! அழகிய பெருமாளே=அழகிய பெருமை மிகுந்தவரே! கச்சு அணி இளமுலை=இரவிக்கையணிந்த இளமையான தனங்களும், முத்து அணி=முத்தாபரணங்களும், பலவகை கை சரி சொலிவர=

பலவகையான கைவளையல்களும் நன்கு ஒலி செய்ய, மயல்கூறி = மயக்கத்தைத்தரும் இனிய மொழிகளைக் கூறி, கை பொருள் கவர்தரு = கையில் உள்ள பொருள்களைக் கவர்கின்ற, மை பயில் விழியினர் = மை நிறைந்த கண்ணினர், கண்செவி நிகர் அல்குல் = பாம்பின் படம் ஒத்த அல்குலையுடைய, மடமாதர் = மடமைக்குணமுடைய பெண்களின்மீது, இச்சையின் உருகிய கச்சையன் = ஆசையினால் உடலும் உள்ளமும் உருகிய தழும்பினன், அறிவிலி = அறிவில்லாதவன், எச்சம் இல் ஒரு பொருள் அடியேனுக்கு = குறைவிலாத நிறைவான ஒரு பொருளையறியாதவனுமாகிய அடியேனுக்கு, இப் புவி மிசை = இந்தப் பூதலத்தின்கண், கமழ் பொன் பத மலர் இணை = தேவரீருடைய அழகிய மணங்கமழ்கின்ற திருவடிகளை, இப்பொழுது அணுகவும் அருள்தாராய் = இப்பொழுதே நான் அணுகும்படியாக உமது திருவருளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

யாதவர்களின் வீட்டில் கோபிகைகளின் தயிரை விரும்பித் திருடிய குறை பாட்டினால் உரலில் கட்டுண்டு சென்று நல்லதொரு செயலைச் செய்த கேசவன், அந்தப்பால் நிறைந்தகடலில் நஞ்சையுடைய அரவணையில் அறிதுயில் கொள்கின்ற நாராயணர் மகிழ்கின்ற திருமருகரே! கங்கா நதியைத் தரித்த சடைமுடியினராகிய சிவமூர்த்தி மெச்சிய திருத்தணிகை மலையில் எழுந்தருளியுள்ள அப்பனே! அழகியபெருமிதம் உடையவரே! இரவிக்கையணிந்த இள முலையும், முத்தாரங்களும், பலவகையான கைவளைகளும் ஒலிசெய்ய, மயக்கத்தை விளைவிக்கும்படியான இனிய மொழிகளைக் கூறி, கைப்பொருள்களைப் பறிக்கின்ற, மையெழுதிய கண்ணினர், பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய மடமாதர்களின் ஆசையினால் உடலும் உள்ளமும் உருகிய தழும்பினனும், அறிவில்லாதவனும், குறைவில்லாத நிறைவான ஒப்பற்ற பொருளை அறியாதவனுமாகிய அடியேனுக்கு, இவ்வுலகில் தேவரீரது மணநாறும் அழகிய திருவடிகளை இப்பொழுதே சேரும்படியாக உமது திருவருளைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**கச்சணி... ...மடமாதர் :—**

இந்த நான்கு வரிகளிலும் விலை மகளிர் தம்பால் நணுகும் ஆடவரை மயக்கி இன்னுரை கூறி பொருள் பறிக்கும் செயல்களைக் கூறுகின்றார்;

**அறிவிலி :—**

அறிய வேண்டியதை அறிவது தான் அறிவு.

எச்சமில் ஒருபொருள் அறியேனுக்கு :—

எச்சம்—குறைவு. குறைவில்லாதநிறைவான பொருள் இறை. அந்த இறையை அறியாதவன்.

இப்புவிமிசை கமழ் பொற்பத மலரிணை இப்பொழு தணுகவும் :—

பெருமானே! இந்தவுலகிலேயே உமது ஞான வாசனைவீசுகின்ற அழகிய இரு திருவடிகளை இப்பொழுதே பெறுமாறு அருள் செய்யும்.

"பின்றையே நின்றது கூற்றம்" என்பது நாலடியார். இன்றைக்கிருந்தார் நாளை யிருக்க மாட்டார்; நேற்றிருந்தார் இன்றில்லை.

ஒருபொழுது வாழ்வதறியார் கருதுவது
கோடியும் அல்ல பிற." —திருக்குறள்.

அடுத்த கணம் வாழ்வது உறுதியில்லை. மனிதன் மனக் கோட்டை கட்டி யுழல்கின்றான்.

வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ இந்த
மலக்கூடென் றறிஞரெலாம வருந்தக்கேட்டும்
அருகணைத்துக் கொளப்பெண்பேய் எங்கே? மேட்டுக்
கடைத்திட வெண் சோறெங்கே? ஆடை யெங்கே?
இருகணுக்கும் வியப்பெங்கே வசதியான
இடம் எங்கே? என்று திரிந்தி¬ளத்தேன் அல்லால்
ஒருகணத்தும் உனைநினைத்த துண்டோ? என்னை
உடையானே எவ்வகைநான் உய்யுமாறே"

என்கின்றார் அருட்பிரகாச வள்ளலார்.

என்னையும் உருக்கும் இந்த அன்புப்பாடல் எத்தனை உருக்கத்தை விளைவிக்கிறது. ஆதலால் இந்த உடம்பிலிருந்து உயிர் எந்த விநாடியிலும் பிரிந்துவிடும். அப்படி அழியுமுன் இப்பொழுதே வந்து எம்பெருமானே! உமது திருவடிகளைத் தந்து உபகரிக்க வேண்டும்.

கொச்சையர் மனைமிசை விடைச்சியர் தயிர் :—

திருமால் துவாபரயுகமுடிவில் தேவகி வயிற்றில் திருவவதாரம் புரிந்து ஆயர்பாடியில் யசோதை மகனாக வளர்ந்தார். முற்பிறப்பில் தாருக வனத்து முனிவர்களாகவும், தண்டக வனத்தில் முனிவர்களாகவும் இருந்து தவஞ் செய்தவர்கள் கோபிகைகள். ஆதலால் அவர்கள் உள்ளங்கவர் கள்வனாக கண்ணபிரான் சென்று, அவர்கள் உள்ளத்தையும் தயிரையும் ஒருங்கே களவு செய்தருளினார்.

இரட்டைப் புலவர்கள் பிள்ளையார் கோயிலுக்குச் சென்று, ஒரு பணமுடிப்பை பிள்ளையார் பின்புறத்தில் வைத்து நீராடச் சென்றார்கள் விநாயகர் புலவர்களிடம் விளையாடக் கருதி அப்பணமுடிப்பை மறைத்தருளினார்.

இரட்டையர்கள் வந்து பார்த்தார்கள் பணமுடிப்பு இல்லை. வறிய புலவர்கட்கு உள்ளம் எப்படியிருக்கும்? உடனே பெருமானைப் பார்த்துப் பாடுகின்றார்கள்.

தம்பியோ பெண்திருடி தாயாருடன் பிறந்த
வம்பனோ நெய்திருடி மாயனும் — அம்புவியில்
மூத்த பிள்ளையாரே முடிச்சவிழ்த்துக் கொண்டீரே
கோத்திரத்தில் உள்ள குணம்.

உள்ளமாகிய பாலில் தீய நினைவுகளாகிய நீர் வற்ற ஞானமாகிய நெருப்பை மூட்டிக் காய்ச்சி, பக்குவமாகிய இளஞ் சூட்டில், ஐந்தெழுத்தாகிய உறை விட்டு, உறுதியாக உறியில் வைத்து, அசையாமல் நிருவிகற்ப சாமாதியில் நிலைத்து நின்று, அன்பு என்ற மத்தையிட்டு அறிவு என்ற கயிற்றைக் கொண்டு கடைந்தால், இறையருளாகிய வெண்ணெய் வெளிப்படும்.

திருடிய குறையால் வீழ் குற்கிரவினியொடு உற்றிற வகையறி ;—

கண்ணபிரான் திருவிளையாடல்

(1) கண்ணபிரான் நித்தம் நித்தம்வெண்ணெய்யும்,பாலும் தயிரும் திருடியதால் யசோதை உரலிலே கட்டும்பொருட்டு தாம்புக் கயிற்றை எடுத்து வயிற்றிலே சுற்றினாள். அது ஒரு சாண் எட்டாதாயிற்று. வேறு ஒரு கயிற்றை முடிந்தாள். அதுவும் எட்டவில்லை. இவ்வாறு பல கயிறுகளை முடிந்தும் கட்ட முடியாது திகைத்தாள். கண்ணபிரான் தாயாருடைய அன்பினைக் கருதி வயிற்றைச் சுருக்கிக் கொண்டார் கட்டிவிட்டாள். உரலில், கயிற்றினால் கட்டுப்பட்ட வயிற்றை உடையவர் என்ற பொருளில் தாமோதரன் என்ற பேர் பெற்றார்.

கட்டுப்பட்ட கண்ணபிரான் ஒரு நல்ல கருமம் புரியத் திருவுளம் பற்றினார்.

(2) நந்தகோபனுடைய வாசலில்இரு மருத மரங்கள் இருந்தன. அவற்றின் இடையே சென்றார். உரல் அதில் நுழைய முடியவில்லை.

பெருமான் திருவடியால் உதைத்தருளினார் அம் மரங்கள் வேருடன் சாய்ந்து வீழ்ந்தன. அம் மரங்களிலிருந்து இரு புண்ணிய உருவங்கள் வெளிப்பட்டன தேவர்கள் பூ மழை பொழிந்தார்கள்.

குபேரனுடைய புதல்வர்கள் இருவர். நளகூபரன் மணிக்ரீவன் என்ற பெயருள்ளவர்கள். பேராற்றல் படைத்தவர்கள். மன்மதனைப் போன்ற வனப்புடையவர்கள். கயிலாய மலையின் சாரலில் சிறிது மதுவுண்டு மயங்கி மனைவியருடன் நிர்வாணமாக நீராடிக் கொண்டிருந்தார்கள். அங்கே நாரத முனிவர் வந்தார். அவரைக்கண்டு பெண்கள் நாணி ஆடையை உடுத்துக்கொண்டார்கள். மது மயக்கத்தால்கந்தருவர் இருவர்களும் ஆடையுடுக்காமலும் நாரதரை எதிர்கொண்டு வணங்காமலும் இருந்தார்கள்.

நாரதர் சீற்றமுற்று, "மூடர்களே! நீவிர்முப்பத்தாறுயிரம் ஆண்டுகள் மருத மரங்களாயிருந்து கண்ணனுடைய கருணைக் கழலின் தொடர்பால் இச்சாபம் நீங்கப் பெறுவீர்கள்" என்று கூறினார். அந்தக் கந்தருவர்கள் நந்தகோபாலனுடைய வீட்டின் வாசலில் மருத மரங்களாய் முளைத்து முப்பத்தாறுயிரம் ஆண்டுகள் நின்றார்கள். ஐயனுடைய தூய்ய சரணம் தீண்டியதால் வெய்ய சாபம் விலகப் பெற்றார்கள். கண்ணபிரானைத் தொழுதார்கள். துதி செய்தார்கள். இந்த அருட்செயலைக் கூறுகின்றார். இதனால் ஆடை யுடுத்ாதவர் மரமாவார்.

அச்சுதை நிறைகடல் நச்சரவணை துயில் :—

சுதை—பால்; பாற்கடலில் பாம்பணையில் பரமன் அறிதுயில் புரிகின்றார்.

அரன் மெச்சிய தணிமலை :—

சிவமூர்த்தி திருத்தணிகை மலையில் முருகவேளிடம் உபதேசம் பெற்று, மிகவும் மகிழ்ந்து நடனம் ஆடியருளினார்.

அரன் —பாவங்களைப் போக்குபவர். வினைகளைத் தணிப்பதனால் அம் மலை தணிமலை யெனப்பட்டது.

## கருத்துரை

திருமால் மருகரே! திருத்தணி முருகரே! உமது திருவடி தந்தருளுவீர்.

## 24

கவடுற்ற சித்தர்சட் சமயப்ர மத்தர்கற்
    கடவுட்ப்ர திஷ்டைபற் பலவாகக்
  கருதிப்பெ யர்க்குறித் துருவர்க்க மிட்கிடர்க்
    கருவிற்பு கப்பகுத் துழல்வானேன்

சவடிக்கி லச்சினைக் கிருகைச்ச ரிக்குமிக்
    கசரப்ப ளிக்கெனப் பொருள்தேடி
  சகலத்து மொற்றைபட் டயல்பட்டு நிற்குநிற்
    சரணப்ர சித்திசற் றுணராரோ

குவடெட்டு மட்டுநெட் டுவரிக்க ணத்தினைக்
    குமுறக்க லக்கிவிக் ரமசூரன்
  குடலைப்பு யத்திலிட் டுடலைத் தறித்துருத்
    துதிரத்தி னிற்குளித் தெழும்வேலா

சுவடுற்ற அற்புதக் கவலைப்பு னத்தினிற்
    றுவலைச்சி மிழ்த்துநிற் பவள்நாணத்
  தொழுதெத்து முத்தபொற் புரிசைச்செ ருத்தணிச்
    சுருதித் தமிழ்க் கவிப் பெருமாளே

### பதவுரை

குவடு எட்டும் அட்டு=மலைகள் எட்டையும் வருத்தி, நெட்டு உவரி கணத்தினை=நீண்ட கடலின் கூட்டத்தை, குமுற கலக்கி=ஒலி செயக் கலக்கி, விக்ரம சூரன்=ஆற்றல் வாய்ந்த சூரபன்மனுடைய, குடலை புயத்தில் இட்டு=குடலைத் தனது புயத்தில் அணிந்து, உடலை தறித்து=அவனுடைய உடலைத் துண்டஞ் செய்து, உருத்து=கோபித்து, உதிரத்தினில் குளித்து எழும் வேலா=அவனுடைய உதிரத்தில் குளித்து எழுந்த வேலாயுதத்தை உடையவரே! சுவடு உற்ற=வள்ளி நாயகியின் பாதச் சுவடுகளையுடைய, அற்புத கவலை புனத்தினில்=அற்புதமான செந்தினைக் கொல்லையில், துவலை சிமிழ்த்து நிற்பவள் நாண=உதிரி மலர்களை மாலையாகக் கட்டி நின்ற வள்ளியம்மை நாணும்படி, தொழுது எத்து=தொழுது புகழ்ந்த, முத்த=அநாதி மல முத்தரே! பொன் புரிசை=அழகிய மதில் சூழ்ந்த, செருத்தணி=திருத்தணியில் எழுந்தருளியிருக்கும், சுருதி தமிழ் கவி=தமிழ் வேதமாகிய தேவாரத்தைத் தந்தருளிய, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! கவடு உற்ற சித்தர்=

மறைத்து வைக்கும் தன்மையுள்ள சித்தர்களும். சட் சமய ப்ரமத்தர்=ஆறு சமயங்களை மேற்கொண்டு வாதிடும் வெறியர்களும், நல் கடவுள் ப்ரதிஷ்டை=இறைவனுடைய திருவுருவங்களைத் தாபிப்பது, பற்பலவாககருதி=பலப்பல வகையாகச்சிந்தித்து, பெயர் குறித்து=உருவத்துக்கு ஏற்ற பெயர்களைச் சூட்டி, உருவர்க்கம் இட்டு=உருவ அமைப்புகளை ஏற்படுத்தி, இடர் கருவில் புக புகுந்து உழல்வான் ஏன்=துன்பமயமான கருவிலே புகுவதற்கு ஏதுவான பிரிவினை உணர்ச்சியுடன் ஏன் உழல்கின்றார்கள்? சவடிக்கு=பொன் சரடில் கோத்த கழுத்தணிக்கும், இலச்சினைக்கு=முத்திரை மோதிரத்துக்கும், இருகை சரிக்கு=இரண்டு கைகளிலும் அணியப் படுகின்ற வளையல்களுக்கும், மிக்க சரப்பளிக்கும்=மேலான வைரத் தாலான கண்டாபரணத்துக்கும், என் பொருள் தேடி=என்று பெண் களுக்குத் தரும்பொருட்டு பணத்தைத் தேடிய மாக்கள், சகலத் தும் ஒற்றை பட்டு=எல்லாவற்றிலும் ஒன்றுபட்டு கலந்தும், அயல் பட்டு நிற்கும்=அவைகளில் கலவாது வேறுபட்டு நிற்கும், நின் சரண ப்ரசித்தி சற்று உணராரோ=உமது திருவடியின் கீர்த்தியைச் சிறிதேனும் உணரமாட்டார்களோ?

## பொழிப்புரை

எட்டு மலைகளையும் வருத்தி நீண்ட கடல்களை ஒலி செயக் கலக்கி, ஆற்றல் நிறைந்த சூரபன்மனுடைய குடலைப புயத்தில் மாலையாகத் தரித்து, அவனது உடலைப் பிளந்து, சினமுற்று அவனுடைய உதிரத்தில் குளித்து எழுந்த வேலாயுதத்தை யுடையவரே! வள்ளியம்மையின் திருவடிச் சுவடுகள் பதிந்த அற்புதமான செந்தினைக் கொல்லையில, உதிரிப் பூக்களை மாலை யாகத் தொடுத்து நின்ற வள்ளி பிராட்டியார் நாணும்படி, அவ ரைத் தொழுது புகழ்ந்து கூறிய அநாதி மலமுத்தரே! அழகிய மதில் சூழ்ந்த திருத்தணிகை மலையின் மீது எழுந்தருளியுள்ள தமிழ் வேதத்தைத் தந்தருளிய பெருமையின் மிகுந்தவரே! உண்மையை மறைத்து வைக்கின்ற சித்தர்களும், ஆறு சமயங் களை மேற்கொண்டு வாதஞ் செய்யும் வெறியர்களும், சிறந்த கடவுளின் உருவத்தை நிறுத்துவது என்று பலபல வகையாக யோசித்து நியமித்து, அம்மூர்த்திகட்குப் பேர் குறிப்பிட்டு உருவ அமைப்பு ஏற்படுத்தி, துன்பத்திற்கு ஏதுவான கருவில் புகுவதற்குரிய பிரிவினை உணர்ச்சிகளால் ஏன் உழல்கின்றார் கள்? சவடி என்ற அணிகலத்துக்கும், முத்திரைமோதிரத்துக் கும், இருகரங்களில் அணிகின்ற வளையல்களுக்கும், மேலான சரப்பளி என்ற ஆபரணத்துக்கும் என்று பணத்தைப் பாடு பட்டுத் தேடி யலைகின்ற மாக்கள், எல்லாவற்றிலும் ஒன்று பட்டும், வேறுபட்டும் நிற்கும் உமது திருவடிப் புகழைச் சிறி தும் அறிய மாட்டார்களோ?

## விரிவுரை

**வெடுற்ற சித்தர்:—**

சித்தர்—அஷ்டமாசித்திகளில் வல்லவர்கள். சித்து ஞானத்துக்குத் தடை.

இனி தங்கட்குத் தெரிந்த சில அரிய பெரிய மணி மந்திர ஔஷதங்களைப் பிறர்க்குச் சொல்லிக் காட்ட மாட்டார்கள். அதனால் நம் பாரத நாட்டில் பலப்பல அரிய செயல்கள் அவமாயின. உலகத்தில் எல்லோரும் இதனை அடையட்டுமே என்ற பரந்த நோக்கம் அந்த சித்தர்களைபால் இலதாயிற்று.

ஞானிகளுக்குச் சித்து நெறி வந்து தொலைவில் கைகட்டி நின்று ஏவல் புரியும். ஆனால ஞானிகள் அதனை மதித்து அதனுடன் விளையாட மாட்டார்கள்.

### சென்னிமலைச் சித்தர்

சென்னிமலை என்ற முருகனுடைய சிறந்த மலையின் மீது ஒரு சித்தர் இருந்தார். படிவழியே தினம் மலைமீது ஏறி வழிபாடு செய்கின்ற ஒரு அடியார் அவர் தினம் பாதிமலையில் வழி ஓரமாக அமர்ந்திருப்பதைக் கண்டார். அவரை வணங்கி "சுவாமி! தினம் இந்த இடத்தில் உங்களைப் பார்க்கின்றேன். மலையை விட்டு நீர் இறங்கி வருவதாகவும் தெரியவில்லை. இங்கேயே இருக்கின்றீரே? உணவுக்கு என்ன செய்கின்றீர்?" என்று பரிவுடன் கேட்டார்.

சுவாமிகள், "அப்பா! எனக்கு என்ன குறை, நான் எதை வேண்டுமாயினும் சாப்பிடுவேன்" என்றார்.

அன்பர், "என்ன? எதை வேண்டுமானாலும் சாப்பிடுவீரா? சுண்ணாம்பைச் சாப்பிடுவீரா?" என்றார்.

"கொண்டு வா; சாப்பிடுகின்றேன்"

அந்த அன்பர் மலையை விட்டிறங்கி அடிவாரம் போய் ஒரு பானை ஓட்டில் சுண்ணாம்பை எடுத்துக்கொண்டு போய் சுவாமிகள் திருமுன் வைத்தார். சுவாமிகள் புன்முறுவல் பூத்தார். "சரி இதனை நான் சாப்பிட வேணுமோ? நல்லது" என்றார். அங்கே செடிகொடிகள் அடர்ந்திருந்தன. சிறிது அந்த செடி கொடிகட்கு உள்ளே நுழைந்தார். ஒரு பச்சிலையைக் கொணர்ந்தார். அந்தச் சுண்ணாம்பில் பிழிந்தார். அது குபு குபு என்று பொங்கியடங்கியது அதனை அந்தச் சித்தர் உண்ண ஆரம்பித்தார். அன்பர், "ஐயோ! இது சுண்ணாம்பு ஆயிற்றே; உடலும் குடலும் வெந்து போகுமே!" என்றார். சித்தர், "இந்தாப்பா, நீயும் சிறிது சாப்பிடு" என்று தந்தார். அது வெண்ணெயாக மாறி விட்டது. சுண்ணாம்பை வெண்ணெயாக மாற்றும் ஆற்றல் படைத்த மூலிகை அவருக்குத் தெரிந்திருந்தது.

அதனை அவர் அனைவருக்கும் அறிவித்திருந்தால் எத்தனை ஏழைகட்குப் பயன்பட்டிருக்கும். தங்கட்குத் தெரிந்ததைப் பிறருக்குக் காட்டக் கூடாது என்று மூடி மூடி வைத்ததனால் பல அதிசயச் செயல்கள் வீணாகி விட்டன.

ஆதலால் இராமலிங்க அடிகளாரும்,

"சந்தோட சித்தர்கள் தம் தனிச்சூதும் காட்டிச்
சாகாத நிலைகாட்டிச் சகச நிலை காட்டி
வந்தோடு நிகர் மனம்போய்க் கரைந்த இடம் காட்டி
மகிழ்வித்தாய் நின்னருளின் வண்மை எவர்க் குளதே"

என்று கூறியருளினார்.

**சட்சமய ப்ரமத்தர் :—**

புறப்புறச் சமயங்கள் 6
புறச் சமயங்கள் 6
அகப்புறச் சமயங்கள் 6
அகச் சமயங்கள் 6

இவ்வாறு அவ்வாறு அவ்வாறு ஆகச் சமயவாதம் அமைதியை நல்காது. ப்ரமித்து—மயங்கி.

"திரமென்று தத்தம் மதத்தையே தாமதச்
செய்கை யொடும் உளற அறிவார்
ஆறு சமயங்கள் தொறும் வேறுவேறாகி விளை
யாடுமுனை யாவரறிவார் ?
அண்ட பகிரண்டமும் அடங்க ஒரு நிறைவான
ஆனந்தமான பொருளே."
—தாயுமானார்

**கற் கடவுட் ப்ரதிஷ்டை பற்பலவாக கருதி :—**

சிறந்த தெய்வத்தின் பல வகையான குணங்களின் சின்னமாக உருவ பேதங்களைச் சிலை செப்பு இவைகளில் வடித்து மந்திர யந்திர பூர்வமாக அவற்றைக் குண்டமண்டல பூஜைகளால் ஆவாகனஞ் செய்து பிரதிஷ்டை செய்வார்கள்.

**கருவிற் புகப்பகுத் துழல்வானேன் :—**

மேலே கூறிய, சித்து மார்க்கமும், சமய வாதங்களும், ஆடம்பரமான ஆராதனைகள் முதலியனவும் பிறவியைத் தொலைக்க மாட்டா. அவைகள் மற்றும் பிறவியையே பயக்கும். அதனால் அடிகளார் இவைகளைக் கண்டிக்கின்றார். அமைந்துள்ள சமயத்தினர்கள் தத்தம் சமயமே மேலானதென்று, தர்க்கமிட்டுப் பேசி வாதஞ் செய்வார்கள். உண்மையை யுணராது மயங்கியுழல்வார்கள்.

பரம்பொருள் ஒன்றுதான். சமயங்கள் தோறும் அப்பரம் பொருளே இருந்து அருள் புரியும்.

எந்தத் தபால் பெட்டியில் கடிதங்களைச் சேர்த்தாலும் அக்கடிதங்கள் அஞ்சல் நிலையத்தை யடைவதுபோல், எந்தக் கடவுளை வணங்கினாலும் சமயாதீதமான பரம்பொருளை அந்த அந்த வழிபாடுகள் சென்றணையும். இந்த நுட்பதைதயறியாத சமயவாதிகள் சமயத்துக்குத் தக்கவாறு பேசித் துன்புறு வார்கள்.

"கலகலகலெனக் கண்டபேரொடு
சிலுகிடு சமயப் பங்கவாதிகள்
கதறிய வெகுசொல் பங்கமாகிய" —(அலகில்) திருப்புகழ்.

"ஆராதன ராடம்பரத்து மாறாது சவாலம்பனத்தும்
ஆவாகன மாமந்திரத்து மடலாலும்
ஆனாதெச மாமண்டபத்தும் வேதாகம மோதுந்தலத்து
மாமாறெரி தாமிந்தனத்து மருளாதே"
—திருப்புகழ்.

கருவிற் புகப்பகுத் துழல்வானேன் :—

"கருவினில் புகுவதற்குக் காரணமான பிரிவினைக் கொள்கைகளைக் கொண்டு இம் மாந்தர் ஏன் இப்படி உழல் கின்றார்கள்" என்று அருணகிரிநாத சுவாமிகள் பரிதாபப்படு கின்றார்.

சவடி :—

பெண்கள் கழுத்தில் அணியும் ஒருவகையான பொன்னா பரணம்.

இலச்சினை :—

இலச்சினை—முத்திரை. தங்கள் பேர் முதலியன பொறித்து அடையாளத்தை யறிவிக்கும் மோதிரம்.

இருகைச்சரி :—

இரு கரங்களிலும் சரிந்திருக்கின்ற வளையல்கள்.

சரப்பளி :—

சரப்பளி என்பது வைரம் பதித்துச் செய்யும் கழுத் தணி.

ஒகைத்து மொற்றைபட் டயல்பட்டு நிற்கும் :—

இறைவன் எல்லாப் பொருள்களிலும் ஒன்றுபட்டிருக்கின் றான். அவைகளின் சுகதுக்கங்கட்கு வேறுபட்டிருக்கின்றான். ஒன்றாகி உடனாகி வேறாகி நிற்பவர் இறைவர்.

ஒரு நாடகத்தில் விளக்கு எரிகின்றது. நாடக பாத்திரங் களில் சந்திரமதி அழுகின்றாள். நாடகம் பார்க்கின்றவர்கள் அழுகின்றார்கள். விளக்கு அழுவதில்லை. சிரிப்பு நடிகன் நடிக் கின்றபோது எல்லோரும் சிரிக்கின்றார்கள். விளக்கு சிரிப்ப தில்லை. விசுவாமித்திரர் வந்து ஆரவாரஞ் செய்யும்போது

எல்லோரும் அஞ்சுகின்றார்கள். விளக்கு அஞ்சுவதில்லை. அந்த விளக்கு நாடகத்தை நடத்தி வைக்கின்றது; சுகதுக்கங்கட்குக் காரணமாக இருக்கின்றது. ஆனால் சுகதுக்கங்களை விளக்கு அடைவதில்லை. அதுபோல் சீவசாட்சியாய் இருந்து அகில உலகங்களையும் நடாத்தி, எல்லாவற்றிலும் கலந்தும், அவற்றிற் கலவாதும் விளங்குகின்றது பரம்பொருள். அத்தகைய பரம்பொருளே முருகன்.

**நிற்சரணப்ரசித்தி சற்றுணராரே :—**

முருகா! உனது திருவடியின் பெருமையை இந்த மக்கள் உணராது உழல்கின்றார்களே! என்ன பாவம்! அந்தோ!

**குடிலைப் புயத்திலிட்டு :—**

"சலத்துவரு மரக்கருடல் கொழுத்துவளர் பருத்தகுடர்
சிவத்த தொடை யெனச்சிகையில் விருப்பமொடுசூடும்"

—வேல் வகுப்பு.

**கவடுற்ற அற்புதக் கவலைத் தினைப்புனம் :—**

வள்ளியம்மையாரது அடிச்சுவடு. அன்றி முருகவேளின் அடிச்சுவடு எனினும் அமையும் கவலை—செந்தினை.

**தொழு தெத்து முத்து :—**

ஏத்து என்ற சொல் எத்து எனக் குறுகியது. இனி எத்து என்றே வைத்துக் கொண்டால் வள்ளிநாயகியைத் தந்திரத்தினால் எத்திக் கொண்டவர் எனப் பொருள்படும்.

முத்த—விடுபட்டவர். அநாதியே மலத்தினின்றும் விடுபட்டவர். அநாதி மலமுத்தர்.

**செருத்தணி :—**

சூராதியவுணருடைய போரின் வேகந் தணிந்தபடியால் இப்பெயர் பெற்றது.

**கருதித் தமிழ்க்கவி :—**

ஞானசம்பந்தரை யதிஷ்டித்து தமிழ் வேதமாகிய தேவாரத்தை வழங்கினார்.

## கருத்துரை

திருத்தணிகேசா! வீணே அலைகின்ற மக்கள் உனது திருவடிப் புகழை அறிந்து உய்வு பெறுக.

## 25

கனைத்த திர்க்குமிப் பொங்கு கார்க்கட லொன்றினாலே
கறுத்த றச்சிவத் தங்கி வாய்த்தெழு திங்களாலே
தனிக்க ருப்புவிற் கொண்டு விழ்த்தச ரங்களாலே
தகைத்தொ ருத்தியெய்த் திங்கு யாக்கைச ழங்கலாமோ

தினைப்பு னத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா
திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே
பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய மங்கைபாகா
படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே.

### பதவுரை

தினைப்புனத்தினை = தினைப்பயிர் விளையுங் கொல்லையை, பண்டு காத்த = முன்னாள் காவல் புரிந்த, மடந்தை கேள்வா = வள்ளி பிராட்டியாரின் கணவரே! திருத்தணி பதி குன்றில் மேல் திகழ் = திருத்தணி என்ற திருத்தலமாகிய மலைமீது திருவுருவந்தாங்கி நின்றருளும், கந்தவேளே = கந்தக்கடவுளே! பனை கர கயத்து அண்டர் = பனைமரம் போன்ற தும்பிக்கையையுடைய வெள்ளையானைக்கு உரியவர்களான தேவர்கள், போற்றிய மங்கை பாகா = வளர்த்த தெய்வயானையம்மையை ஒரு பாகத்தில் வைத்தவரே! படைத்து அளித்து அழிக்கும் த்ரிமூர்த்திகள் = ஆக்கி அளித்து ஒடுக்கும் மும் மூர்த்திகளின், தம்பிரானே = தலைவரே! கனைத்து அதிர்க்கும் = ஒலித்து அதிர்கின்ற, இ பொங்கு கார்கடல் ஒன்றினாலே = இந்தப் பொங்குகின்ற கரிய கடல் ஒன்றினாலும், கறுத்து அற சிவத்த = கோவித்து மிகவும் சிவந்து, அங்கி வாய்த்து எழு திங்களாலே = நெருப்புத்தன்மையைப் பூண்டு உதித்த நிலவினாலும், தனி கரும்பு வில் கொண்டு விழ்த்த = ஒப்பற்ற கரும்பு வில்லையேந்தி மன்மதன் செலுத்திய, சரங்களாலே = அம்புகளாலும், தகைத்த ஒருத்தி எய்த்து = வாட்டமடைந்த தனித்த ஒருத்தியாம் தலைவியாகிய இவள் இளைப்புற்று, இங்கு யாக்கை சழங்கலாமோ = இங்கு உடல் சோர்வு அடையலாமோ?

### பொழிப்புரை

முன்னாள் தினைப்புனங்காத்த வள்ளி நாயகியின் கணவரே! திருத்தணியென்ற திருப்பதியின் மீது திருவுருவுடன் நின்றருளும் கந்தக் கடவுளே! பனைபோன்ற துதிக்கையையுடைய ஐராவத யானைக்கு உரியவரான தேவர்கள் வளர்த்த தெய்வயானையம்மையை ஒரு பக்கத்தில் கொண்டவரே! படைத்துக்

காத்து ஒடுக்கும் மும்மூர்த்திகளுக்குந் தனிப்பெருந் தலைவரே! ஒலித்து அதிர்ந்து பொங்குகின்ற இந்தக் கருங்கடலாலும், கோபித்து மிகச் சிவந்து நெருப்பைப் போல் உதிக்கின்ற சந்திரனாலும், ஒப்பற்ற கரும்பு வில்லை யேந்தி மன்மதன் ஏவுகின்ற மலர்க்கணையாலும், வாடித் தனித்த இவள் இளைத்து இங்கு உடம்பு சோர்வு அடையலாமோ?

## விரிவுரை

இந்தத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. நாயகீ நாயக பாவத்தில் பாடியருளியது. ஆன்மாவை நாயகியாகவும் முருகனாகிய பரமான்மாவை நாயகனாகவும் வைத்து அமைந்த திருப்புகழ்ப் பாடல்கள் பல; அவற்றுள் இது ஒன்று.

**ஒலித்ததிர்க்குமிப் பொங்கு கார்க்கடல் ஒன்றினாலே:—**

நாயகனைச் சேர விரும்பும் நாயகிக்குக் கடலோசை மேலும் மேலும் இன்ப வேட்கையை அதிகப்படுத்தும். மன்மதனுக்கு முரசு கடல். "தொல்லை நெடுநீலக்கடலாலே மெய்யுருகு மான்" என்று வள்ளிமலைத் திருப்புகழ்ப் பாடலிலும் கூறுகின்றார்.

**கறுத்தறச் சிவத்தங்கி வாய்த்தெழு திங்களாலே:—**

பிரிவுத்துன்பத்தை ஒன்றுக்கு ஆயிரமாக அதிகப்படுத்துவது முழுநிலா. காமுகர்க்கு பூரண சந்திரனுடைய அமிர்த கிரணம் நெருப்பையள்ளி வீசுவதுபோல் துன்பத்தைத்தரும். "தினகரனென வேலையிலே சிவந்துதிக்கும் மதியாலே" என்கின்றார் சுவாமிமலைப் பாடலில்.

**தனிக்கருப்புவிற் கொண்டு வீழ்த்த சரங்களாலே:—**

மன்மதன் ஒப்பற்ற கரும்பு வில்லை வளைத்து, சுரும்பு நாண் மாட்டி, அரும்புக்கணை தொடுத்துத் துயரத்தை விளைப்பான்.

**தகைத் தொருத்தி யெய்த்திங்கு யாக்கை சழங்கலாமோ:—**

ஒருத்தியாகிய தனியாது உம்மை மருவாது, இளைத்து வாடி உடல் மெலிவது நியாயமோ! முருகா! நீர் வந்து இவளைத் தழுவி விரகநோயைத் தணித்து ஆட்கொள்ளும்.

**பணைக்கரக் கயத்தண்டர்:—**

யானையின் கை பனைபோல் திரண்டு உருண்டு நீண்டு இருக்கும்.

"பணைக்கைமுக படக்கரட மதத்தவள கசக்கடவுள்" —வேல் வகுப்பு

**படைத்தளித் தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரான்:—**

சூட்சுமத்திலிருந்து உலகைத் தூலமாகச் செய்வது சிருட்டி. அதை நிலைபெறுத்திச் சில காலம் வைத்திருப்பது

இரட்சகம். மீளவும் தூலத்திலிருந்து சூட்சுமத்தில் ஒடுக்கி விடுவது சம்மாரம்.

உலகை இறைவன் நூதனமாக உண்டாக்குவது கிடையாது. உயிர்களின் நன்மைக்காக சூட்சுமத்தைத் தூலமாக்குகின்றான். இந்த முத்தொழில்களையும் முறையே அயன், அரி, அரன் என்ற முத்தேவர்களைக் கொண்டு செய்விக்கின்றான். மூவர்க்குந் தேவர்க்கும் முழுப்பெருந் தலைவன் முருகன்.

"படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா"
—(தடக்கைப்) திருப்புகழ்.

## கருத்துரை

திருத்தணித் தெய்வநாயகனே! ஆன்மாவாகிய இந்த நாயகியை உன்னில் சேர்த்து அருள் செய்ய வேண்டும்.

## 26

கிரியுலாவிய முலைமிசை துகிலிடு
கபட நாடக விரகிக ளசடிகள்
கெடுவி யாதிக ளடைவுடை யுடலினர் விரகாலே
க்ருபையிறுரொடு மணமிசை நழுவிகள்
முழுது நாறிக ளிதமொழி வசனிகள்
கிடையின் மேன்மன முருகிட தழுவிகள்
பொருளாலே
பரிவி லாமயல் கொடுசமர் புரிபவர்
அதிக மாவொரு பொருள்தரு பவரொடு
பழைய பேரென இதமுற அணைபவர் விழியாலே
பகழி போல்விடு வினைகவர் திருடிகள்
தமையெ ணுவகை யுறுகதி பெறும்வகை
பகர் மாமயில் மிசைவர நினைவது மொருநாளே
அரிய ராதிபர் மலரய னிமையவர்
நிலை பெறுதிடர் படவுடன் முடுகியெ
அசுரர் தூள்பட அயில்தொடு மறுமுக
இளையோனே

அரிய கானக முறைகுற மகளிட
கணவஞகிய அறிவுள விதரண
அமரர் நாயக சரவண பவதிற லுடையோனே
தருமநீதியர் மறையுளர் பொறையுளர்
சரிவுறுநிலை பெறுதவ முடையவர்
தளர்விலா மன முடையவர் அறிவினர் பரராஜர்
சகல லோகமு முடையவர் நினைபவர்
பரவு தாமரை மலரடி யினிதுற
தணிகை மாமலை மணிமுடி யழகியல் பெருமாளே.

**பதவுரை**

அரி அர அதிபர் = திருமால் உருத்திரன் என்னுந் தலைவர் மலர் அயன் = தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மதேவர், இமையவர் = தேவர்கள் ஆகிய இவர்கள், நிலைபெறாது இடர்பட = தத்தம் தொழில்களில் நிலைபெற வொட்டாமல் அசுரர்களால் துன்பப்பட, உடன் முடுகியெ = உடனே விரைந்து சென்று, அசுரர் தூள்பட = சூராதியவுணர்கள் பொடிபட, அயில் தொடும் அறுமுக = வேலாயுதத்தை விடுத்தருளிய ஆறுமுகப் பெருமானே! இளையோனே = என்றும் இளையவரே! அரிய கானகம் உறை = அருமையான காட்டில் வாழ்கின்ற, குறமகள் இட கணவ = வள்ளி பிராட்டியின் நாயகரே! அறிவு உள விதரண = ஞானமுள்ள வழங்குந் தன்மையுடையவரே! அமரர் நாயக = தேவர்கட்குத் தலைவரே! சரவணபவ = சரவணப் பொய்கையில் தோன்றியவரே! திறல் உடையோனே = ஆற்றல் படைத்தவரே! தருமநீதியர் = தரும நீதி வாய்ந்தவர்களும், மறைஉளர் = வேதங்களைக் கற்றவர்களும், பொறை உளர் = பொறுமை வாய்ந்தவர்களும், சரிவு உறுநிலை பெறு தவம் உடையவர் = தவறுதல் இன்றி நிலைத்த தவத்தில் உறுதி பெற்றவர்களும், தளர்வு இலாமனம் உடையவர் = தளர்ச்சியில்லாத மன உறுதியுடையவர்களும், அறிவினர் = அறிஞர்களும், பரராஜர் = மேலான அரசர்களும், சகலலோகமும் உடையவர் = எல்லா உலகங்கட்குந் தலைவர்களும், நினைபவர் = நினைந்து போற்றும் அடியார்களும், பரவு தாமரை மலர் அடிஇனிது உற = துதிசெய்கின்ற தாமரை மலர் போன்ற திருவடி இனிது பொருந்த, தணிகை மாமலை மணி முடிஅழகு இயல் = சிறந்த திருத்தணி மலையின் அழகிய உச்சியில் அழகு விளங்க வீற்றிருக்கும், பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! கிரி உலாவிய முலைமிசை துகில் இடு = மலைபோன்ற தனத்தின் மீது ஆடையை அணிந்துள்ள, கபட நாடக விரகிகள் = கள்ளத்தனமாக நடிக்கும் உபாயக்காரிகளும், அசடிகள் = அறிவில்லாதவர்களும், கெடு வியாதி

கள் அடைவு உடை உடலினர் = கெட்ட நோய்கள் இடங் கொண்டுள்ள உடம்பையுடையவர்களும், விரகாலே = தங்கள் சாமர்த்தியத்தாலே, க்ருபையினுறெரொடு மணமிசை நழுவிகள் = தங்கள் மீது கருணை வைத்தவர்களோடு கல்யாணம் செய்து கொள்ளுவேன் என்று கூறி பின்பு அதிலிருந்து நழுவுகின்றவர்களும், முழுதும் நாறிகள் = முழுதும் துர்நாற்றம் வீசுபவர்களும், இதமொழி வசனிகள், = இனிமையாகப் பேசுபவர்களும், கிடையின் மேல் மனம் உருகிட தழுவிகள் = படுக்கை மீது மனம் உருகும்படி தழுவுகின்றவர்களும், பொருளாலே பரிவு இலா மயல் கொடு சமர் புரிபவர் = பொருள் காரணமாக அன்பு இல்லாத மயக்கத்துடன் சண்டை பிடிப்பவர்களும், அதிகமா ஒரு பொருள் தருபவரொடு = அதிகமாக ஒரு பொருளை யார் தருகின்றார்களோ அவர்களுடன், பழைய பேர் என = பழைய உறவினர் போலே, இதம் உற அணைபவர் = இன்பம் உண்டாகும்படி அணைபவர்களும், விழியாலே பகழிபோல் விடுவிலைகவர் திருடிகள்தமை = கண்களை அம்புபோல் செலுத்திக் காரியத்தை வெல்லுகின்ற திருடிகளும் ஆகிய பொது மாதர்களை, எனு வகை = அடியேன் எண்ணுதபடி, உறுதி பெறும் வகை = அடையத்தகூடிய நற்கதியைப் பெறுமாறு, பகர மாமயில் மிசைவர நினைவதும் ஒருநாளோ = அழகிய சிறந்த மயிலின்மீது வருவதைத் தேவரீர் நினைக்கும்படியான ஒருநாள் உண்டாகுமோ?

## பொழிப்புரை

திருமால் உருத்திரன் என்ற தலைவர்களும், தாமரையில் இருக்கும் பிரமதேவரும், மற்ற தேவர்களும், தத்தம் தொழில் நிலைபெற ஒட்டாமல் அசுரர்களால் துன்பப்பட, அவர்களது துன்பம் நீங்கும்படி உடனே விரைந்து சென்று, அசுரர்கள் துகள் படும்படி வேலாயுதத்தை விடுத்தருளிய ஆறுமுகப் பரம்பொருளே! என்றும் இளையவரே! அருமையான வனத்தில் வாழ்ந்த வள்ளி நாயகியின் கணவராகிய ஞானமிகுந்த கொடையாளியே! தேவர்களின் தலைவரே! சரவணபவரே! பேராற்றல் படைத்தவரே! தருமநீதியரும், வேத வித்தகர்களும், பொறுமையுள்ளவர்களும், தவறுதல் இன்றி நிலைத்த தவசீலர்களும, தளர்ச்சியில்லாத மனம் உடையவர்களும், அறிஞர்களும், மேலான அரசர்களும், எல்லாவுலகங்கட்கும் தலைவர்களும், நினைந்து போற்றும் அடியார்களும் துதி செய்கின்ற தாமரை மலர் போன்ற திருவடி இனிது பொருந்தச் சிறந்த திருத்தணி மலையின் மீது உச்சியில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! மலைபோன்ற தனத்தின்மீது ஆடையை அணிந்துள்ள கபட நாடகம் ஆடுகின்ற உபாயக்காரிகளும், அறிவில்லாதவர்களும், கெட்ட நோய்கள் இடங் கொண்டுள்ள உடம்பை யுடையவர்களும், தங்கள் சாமர்த்தியத்தால் தங்கள் மீது கருணை வைத்தவர்களோடு கல்யாணம்

செய்து கொள்ளுவேன் என்று கூறி பின்பு நழுவுகின்றவர்களும்; முழுதும் துர்நாற்றம் வீசுகின்றவர்களும், இனிமையாகப் பேசுகின்றவர்களும், படுக்கையின் மீது மனம் உருகும்படி அணைபவர்களும், பொருள் காரணமாக அன்பில்லாமல் மயக்கத்தோடு சண்டை போடுபவர்களும், நிரம்பப் பணம் தருகின்றவர்களிடம் பழைய உறவினரைப் போல், இன்பம் உண்டாகும்படித் தழுவுகின்றவர்களும், கண்களாகிய அம்புகளை விடுத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்கின்ற திருடிகளும் ஆகிய விலை மாதர்களை அடியேன் நினையாமல், அடையக்கூடிய முத்தி வீட்டைப் பெறுமாறு, அழகிய சிறந்த மயிலின் மீது நீர் வருவதை நினைக்கின்ற ஒருநாள் எனக்குக் கிடைக்குமோ?

## விரிவுரை

இத்திருப்புகழின் முதல் நான்கு அடிகளில் விலை மகளிரின் சாகசங்களை அடிகளார் கூறுகின்றார்.

அரியராதியர் மலரயன் இமையவர் நிலைபெறு திடர்பட :—

நாராயணர், உருத்திரன், பிரமன், இந்திராதி இமையவர் ஆகிய இவர்கள் தங்கள் கருமங்களை ஒழுங்காகச் செய்யாதபடி சூராதியவுணர்கள் துன்புறுத்தினார்கள். மூவரும் தேவரும் துன்புறுவதைக் கண்டு முருகவேள் வேல்விட்டு சூராதியவுணர்களைப் பொடியாக்கிப் பழையபடி மும்மூர்த்திகளையும் தத்தம் தொழிலில் இருத்தி அருள் புரிந்தார்.

அறுமுக :—

(1) கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மேல், கீழ் என்ற ஆறு திசைகளையும் பார்க்கின்ற ஆறுமுகங்களை யுடையவர்.

(2) பராசக்தி, ஆதிசக்தி, ஞான சக்தி, கிரியாசக்தி, இச்சா சக்தி, குடிலா சக்தி என்ற இந்த ஆறு சக்திகளும் ஆறுமுகங்கள் என்க

(3) அ, உ, ம, நாதம், விந்து, கலை என்ற ஆறும் ஆறு முகங்கள் என்ப.

(4) மந்திரம், பதம், வன்னம், புவனம், கலை, தத்துவம் என்ற ஆறு அத்துவாக்களே ஆறுமுகங்கள் என்ப.

(5) ஐசுவரியம், வீரியம், புகழ், திரு ஞானம், வைராக்கியம் என்ற ஆறு குணங்களே ஆறுமுகங்கள் என்ப.

(6) சருவஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அநந்த சக்தி, சுவதந்திரத்வம் என்ற ஆறு அருட் குணங்களே ஆறுமுகங்கள் என்ப.

"ஏவர்தம் பாலுமின்றி எல்லைதீர் அமலன்குள்ள
மூவிருகுணனும் சேய்க்கு முகங்களாய் வந்ததென்ன"

—கந்தபுராணம்.

இளையோனே :—

முருகன் என்றும் இளையவர். அதனால் அவர் குமாரசுவாமி எனவும், பாலசுப்ரமண்யர் எனவும், வட நாட்டாரால் பாலாஜீ எனவும் அழைக்கப்படுகின்றார்.

"என்றும் அகலாத இளமைக்கார" —(சந்தனசவாது) திருப்புகழ்.

அறிவுள விதரண :—

விதரணம்—நன்கொடை. முருகன் ஞானாகரனாக இருந்து தன் அடியார்கட்கு எல்லா நலன்களையும் அருள வல்லான். "யார் வேண்டினாலும் கேட்ட பொருளீயும் தியாகாங்க சீலன்" முருகன்.

"அடியவர் இச்சையில் எவை எவை யுற்றன
அவைதரு வித்தருள் பெருமாளே" —(கலகலென) திருப்புகழ்.

தருமநீதியர் :—

தருமநெறி நின்று நீதி தவறாது ஒழுகுபவர்கள்.

சரிவுறு நிலைபெறு தவமுடையவர் :—

இடையில் அழிந்து போகாத நிலைபெற்ற உறுதியான தவமுடையவர்கள்;

தவம் ஆசையாலும் கோபத்தாலும் அழிந்துவிடும். விசுவாமித்திரர் பல்லாண்டு தவம் செய்தார். காமத்தாலும் கோபத்தாலும் அவருடைய தவம் இடையிடையே அழிந்து விட்டது.

"தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்றடை காமவெகுளி என" என்று அவரே கூறுகின்றார்.

தளர்விலா மனமுடையவர் :—

ஒரு கருமஞ் செய்யும் போது மனத்தில் தளர்ச்சி வரக் கூடாது. விடாப்பிடியாக உறுதியுடன் செய்ய வேண்டும்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சிவத்தைத் தரிசிக்க வேண்டும் என்று திருக்கயிலை மலைக்குச் சென்றார். கால்கள் தேய்ந்தன; கையால் ஊன்றிச் சென்று கைகள் தேய்ந்தன; மார்பில் தவழ்ந்தார். திருமேனியுந் தேய்ந்தது. அப்போதும் அவருடைய மனந் தளரவில்லை. மன உறுதி மேலும் வலுப்பட்டது. அங்கே சிவபெருமான் ஒரு மாதவ வேதியராகத் தோன்றி, "நீர் எங்கு செல்கின்றீர்?" என்று கேட்டார். "ஐய! நான் கயிலை மலைக்குச் செல்லுகின்றேன்" என்றார் அப்பர் பெருமான். "அன்பரே! கயிலையங்கிரியை மண்ணுலகத்தோர் அடைய முடியுமோ? அது எளிதன்று அது அமரரும் அடைவதற்கு அரிது. வெப்பத்தால் கொதிக்கின்ற இவ்விடத்திற்கு வந்தீரே? திரும்பிப் போம்" என்றார்.

கயிலை மால்வரையாவது காசினி மருங்கு
பயிலும் மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ ?
அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென விளம்பி.

—பெரியபுராணம்.

இதனைக் கேட்ட அப்பர் பெருமான், "அருந்தவ முனிவரே! என்றிருந்தாலும் ஒருநாள் இவ்வுடல் மாண்டு ஒழியும். ஆதலால் கயிலையில் கண்ணுதற் பெருமானைக் கண்டால் அல்லது திரும்பேன்" என்றார். எத்தனை உறுதி ?

மீளும் அத்தனை உமக்கினிக் கடன் என விளங்கும்
தோளும் ஆகமும் துவளுமுந் நூல்முனி சொல்ல
ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால்
மாளும் இவ்வுடல்கொண்டு மீளேன் என மறுத்தார்.

—பெரியபுராணம்.

இத்தகைய உறுதி யுடையவரே பெரியோர்.

பரவு தாமரை மலரடி வனிதுற தணிகை :—

முனிவர், மறையோர், ஞானிகள், பக்தர்கள், அரசர்கள் முதலிய அனைவரும் துதிசெய்யும் தகைமை வாய்ந்தது திருத்தணி மலை.

## கருத்துரை

திருத்தணி மலை நாயக ! மாதர் வசப்படாது நற்கதி பெற மயில்மிசை வந்தருளி யாட்கொள்வாய்.

## 27

கிறிமொழிக் கிருதரைப் பொறிவழிச் செறிஞரைக்
கெடுபிறப் பறவிழிக் கிறபார்வைக்
கெடுமடக் குருடரைத் திருடரைச் சமயதர்க்
கிகள்தமைச் செறிதலுற் றறிவேதும்

அறிதலற் றயர்தலுற் றவிழ்தலற் றருகலுற்
றறவுநெக் கழிகருக் கடலூடே
அமிழ்தலற் றெழுதலுற் றுணர்நலத் துயர்தலுற்
றடியிணைக் கணுகிடப் பெறுவேனோ

பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலச் சமணரத் தனைபேரும்

பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் புலவோனே

தறிவளைத் துறநகைப் பொறியெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வநற் சுனைமேவுந்
தனிமணக் குவளைநித் தமுமலர்த் தருசெருத்
தணியினிற் சரவணப் பெருமாளே.

## பதவுரை

பொறி உடை=அறிவு உள்ள, செழியன்=பாண்டியனுடைய வெப்பு ஒழிதர=வெப்புநோய் நீங்கவும். பறிதலை=தலைமயிரைப் பறிப்பவரும், பொறி இல்=அறிவில்லாதவருமாகிய, அ சமணர் அத்தனை பேரும்=அந்தச் சமணர்கள் அத்தனை பேர்களும், பொடிபட =அழியவும், சிவமண பொடி பரப்பிய=சிவமணங்கமழும் திருநீற்றைப் பரவச் செய்த, திருபுகலியில்=சீகாழி என்ற தலத்தில் தோன்றிய, கவுணிய புலவோனே=கவுணியர் குடியில் வந்த புலவரே! தறிவளைத்துஉற=தறிபடுதல் சூழும்படி, நகை பொறி எழ= சிரிப்பினால் நெருப்புப் பொறியை எழுப்பி, புரம் எரித்தவர்=முப்புரத்தை எரித்த சிவபெருமானுடைய, திருபுதல்வ=திருக்குமாரரே! நல்சுனை மேவும்=சிறந்த சுனையில் உள்ள, தனிமணம் குவளை நித்தமு மலர்தரு=ஒப்பற்ற நறுமணம் வீசும் குவளை நாள்தோறும் மலரைத் தருகின்ற, செருத்தணியில்=போர்தணிந்த இடமாகிய திருத்தணியில், சரவண=சரவண மூர்த்தியாகிய, பெருமாளே= பெருமையின் மிகுந்தவரே! இதிமொழி இருதரை=பொய் மொழி பேசும் செருக்கு உள்ளவர்களை, பொறிவழி செறிஞரை=ஐம்பொறிகளின் வழியே செல்லுபவர்களை, கெடுபிறப்பு அற=கெட்ட இப்பிறப்பு நற்பிறப்பு ஆகாமல் தொலையுமாறு. விழிக்கிற பார்வை கெடுமட குருடரை=விழிக்கின்ற பார்வையுடைய அறிவில்லாத தீய குருடர்களை, திருடரை=திருடர்களை, சமயதர்க்கிகள் தமை= சமயவாதிகளை, செறிதல் உற்று=அடியேன் நெருங்கிச் சேர்ந்து, அறிவு ஏதும் அறிதல் அற்று=அறிவு ஒன்றும் அறிதல் இல்லாமல், அயர்தல் உற்று=தளர்ச்சியடைந்து, அவிழ்தல் அற்று=உள்ளம் அன்பினால் நெகிழ்தல் இன்றி, அருகல் உற்று=குறைபாடு அடைந்து, அறவும் நெக்கு=மிகவும் கெட்டு, அழிகரு கடலூடே=அழிவு தரும் பிறவிக்கடலுள்ளே, அமிழ்தல் அற்று=அமிழ்ந்து போதல் நீங்கி, எழுதல் உற்று=மேல் எழுதலையடைந்து, உணர்வு நலத்து உயர்தல் உற்று=நல்லுணர்வுபெறும் நலமான வழியில் மேம்பாடு அடைந்து, அடி இணைக்கு அணுகிட பெறுவேனோ=இரு திருவடிகளைச் சேரப் பெறுவேனோ?

## பொழிப்புரை

அறிவுடைய பாண்டியனுடைய சுரநோய் நீங்கவும், தலை மயிரைப் பறிக்கும் அறிவிலிகளாகிய அந்தச் சமணர்கள் எல்லோரும் கழுவில் ஏறியழிபவும் சிவமணங்கமழும் திருநீற்றின் நெறியை எங்கும் பரவச் செய்த—சீகாழியில் வந்த கவுணியப் புலவர் பெருமானே! அழிவு உண்டாகும்படி புன்சிரிப்பினால் நெருப்புப் பொறியை உண்டாக்கி முப்புரத்தை எரித்த சிவபெருமானுடைய திருக்குமாரரே! சிறந்த சுனையிலே உள்ள ஒப்பற்ற நறுமணம் வீசும் குவளை நாள்தோறும் மலரைத் தருகின்ற திருத்தணியில் மேவும் சரவண! பெருமிதம் உடையவரே! பொய்மொழி பேசும் செருக்கு உள்ளவர்களை, ஐம்பொறிகளின் வழியே செல்லுபவர்களை, கெட்ட இப்பிறப்பு நற்பிறப்பு ஆகாமல் தொலையும்படி விழிக்கின்ற பார்வையையுடைய அறிவில்லாத கெட்ட குருடர்களை, திருடர்களை, சமயவாதிகளை அடியேன் நெருங்கிச் சேர்ந்து, அறிவு சற்றும் இல்லாதவனாகி, தளர்ச்சியடைந்து, உள்ளம் அன்பினால் நெகிழ்தல் இன்றி குறைபாடு அடைந்து, மிகவும் கெட்டு, அழிவு தரும் பிறவிக் கடலுள்ளே அமிழ்ந்து போகாமல் நீங்கி, மேலோங்கி, நல்லுணர்வு பெறும் நல்வழியில் மேம்பாடு அடைந்து உமது இரு சரணங்களை அடியேன் அணுகப் பெறுவேனோ?

## விரிவுரை

**கிறிமொழிக் கிருதரை :—**

கிறி—பொய்; கிருது—செருக்கு. பொய்யே பேசுகின்ற செருக்கு. (அகங்காரம்) உள்ளவர்கள். வாய் கூசாமல் ஒருவர் மீது பழிகளைச் சுமத்திப் பொய் கூறுவது. பொய் சொல்லுவது மிகப் பெரிய பாவம்.

நூறு பசுக்களைக் கொன்ற பாவம் ஒரு அந்தணனைக் கொன்றால் வரும்; நூறு அந்தணர்களைக் கொன்ற பாவம் ஒரு பெண்ணைக் கொன்றால வரும்; நூறு பெண்களைக் கொன்ற பாவம் ஒரு குழந்தையைக் கொன்றால் வரும்; நூறு குழந்தைகளைக் கொன்ற பாவம் ஒரு பொய் சொன்னால் வரும்.

ஆனந் தணர்மகளிர் அன்பாம் குழந்தைவதை
மானந் தரும்பிசித வார்த்தையிவை—மேனிரையே
கூறவரும் பாவம் குறையாதொவ் வொன்றுக்கு
நூறதிக மென்றே நுவல். —நீதிவெண்பா.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. —திருக்குறள்.

சூர்ப்பனகையைக் கொடியவள் என்று கூற வந்த கம்பர் பாலைவனத்தைக் காட்டிலும் கொடியவள்; வடவைத் தீயினுங் கொடியவள், ஆலாகலவிடத்தினுங் கொடியவள் என்று கூற வில்லை. "பொய்தங்கு நெஞ்சில் கொடியாள்" என்றார்.

"பொய் வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே" —தாயுமானவர்.

"கனவிலும் பொய் சொல்லாமல்" —பட்டினத்தார்

**பொறிவழிச் செறிஞரை :—**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பொறிகளின் வழி செல்லுகின்றவர்கள் துன்புறுவார்கள்.

சென்ற விடத்தால் செலவிடாது தீது ஒரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.
உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன் என்னும் வைப்புக்கோர் வித்து —திருக்குறள்

**கெடுபிறப்பற விழிக்கிற பார்வைக் ... குருடரை :—**

கெடுதலான இப்பிறப்பு நன்மைக்கு ஆகாதபடி திருட்டு விழி விழித்து, கெடுதியும் அறிவின்மையும் உடைய குருடர் அறிவுக்கண் இல்லாதவர்.

**திருடர் :—**

பிறர் பொருளைக் கவர்பவர்கள்.

**சமய தர்க்கிகள் :—**

தத்தம் மதமே பெரிதென்று வாதம் புரியும் விதண்டா வாதிகள்

கலகலகலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்கவாதிகள்" —(அலகிலவுணரை) திருப்புகழ்.

**செறிதனற்று :—**

முன் கூறிய தகாதவர்களுடன் சேரக் கூடாது. சேர்பவர் முத்தி நெறி சேரார்.

"சேரிடம் அறிந்து சேர்." —ஔவையார்.

**அறிவேதும் அறிதலற்று :—**

அறிவு சற்றும் அறிதலின்றிக் கெடுவர். அறிவையறிவது பொருளாகும்.

அறிவை யறிபவ ரறியும் இன்பந்தனை"—(அகரமுதலென) திருப்புகழ்.
"அறிவா லறிந்துன் இருதாளிறைஞ்சும் அடியார்"
—(விறல்மார) திருப்புகழ்.
"அறிவை யறிவது பொருளென அருளிய பெருமானே"
—(குமரகுருபர குணதர) திருப்புகழ்.

**அயர்தலுற்று:—**

அதனால் வளர்ச்சியின்றித் தளர்ச்சி யெய்தித் தடுமாறுவர்.

**அவிழ்தலற்று :—**

அவிழ்தல்—உள்ளம் நெகிழ்தல்.

"அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டையந் தாள் தொழல் வேண்டும்."
—கந்தரலங்காரம்

"உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை யுணருமவர் அநுபூதியானதுவும்"
—சீர்பாத வகுப்பு.

**அருகலுற்று :—**

அருகல்—சுருங்குதல். அறிவு முதலியன சுருங்கி விடுதல்.

**அறவு நெக் கழிகருக் கடலூடே அமிழ்தலற்று :**

மிகவும் கெடுதலை யடைந்து பிறவிப் பெருங்கடலில் மூழ்கி யழியாமல் நன்னெறிச் சேர்தல.

**எழுதலுற்று :—**

மேல் நிலைக்கு எழுதலை யடைதல்.

**உணர் நலத் துயர்தலுற்று :—**

உணர் நலம் பெற்று மேம்பாட்டை யடைதல்.

**அடியிணைக்கணுகிடப் பெறுவேனோ :—**

முருகனுடைய திருவடியில் இரண்டறக் கலந்து இன்புறுவதே முத்தியாகும்.

**பொறியுடைச் செழியன் வெப்பொழி தர :—**

திருஞானசம்பந்தர்; பாண்டியன் வெப்புநோயைத் தீர்த்தது.

திருஞானசம்பந்த சுவாமிகள் பதினாயிரம் அடியார் குழாத்துடன் மதுரைக்கு எழுந்தருளித் திருமடத்தில் தங்கியிருந்தார்.

பொறாமையால் வெதும்பிய சமணர்கள் தங்கள் மந்திரங்களைக் கூறித் தீயை ஏவினார்கள். அத் தீ திருமடத்திற்குச் செல்லாதாயிற்று.

ஆதிமந்திரம் அஞ்செழுத்தோதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமோ
பூதி சாதனர் மடத்தில் தாம புனைந்த சாதனைகள்
சாதியாவகை கண்டமண் குண்டர்கள் தளர்ந்தார்.

கருணை சிறிதுமில்லாத சமணர்கள் திருமடத்தில் தீவைத்தார்கள் இதனை யறிந்த அடியார்கள் தீயை அகற்றி சீகாழிப் பிள்ளையாரிடம் இதனைத் தெரிவித்தார்கள். குடிகள் செய்த பாவம் அரசனைச் சேரும். குடிகளை நன்னெறியில் நிறுத்தாமை யால் என அறிக.

சிவஞானிகட்கு இட்ட அத் தீ அதிக வேகமாக அரசன் மேல் தாவிச் சென்றது. அருளாளராகிய திருஞான சம்பந்தர் அத்துணை வேகமாகச் சென்று அரசனை அணுதமானுல் பாண்டி மாதேவியின் மங்கல நாண் அகலும் என்றுதிருவுளம் பற்றி,

> " செய்யனே திரு ஆலவாய் மேவிய
> ஐயனே அஞ்ச லென்றருள் செய்யெனைப்
> பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்
> பையவே சென்று பாண்டியற் காகவே."

என்று பாடியருளினுர்.

தீ, வெப்பு நோயாகச் சென்று பாண்டியனைப் பற்றியது. வெப்பு நோயின் வெம்மையால் அருகிலிருந்தவர் உடம்புகளும் கருகின. வாழைக் குருத்துகள் சாம்பலாயின.

சமண முனிவர்கள் மந்திரம் உச்சரித்தனர். வெப்பு நோய் மேலும் அதிகரித்தது. குலச்சிறையாரும், மங்கையர்க்கரசி யாரும் மன்னனை வணங்கி, "இது தீய அமணர் தூய அடி யார்க்குச் செய்த தீங்கின் பயனே யாகும். திருஞானசம்பந்தப் பெருமான் அருளால் இது தீரும்" என்றுர்கள்.

> மீனவன் செவியினூடு மெய்யுணர் வளிப்போர்கூற
> ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திரமும் செல்ல
> ஆனபோதயர்வு தன்னை அகன்றிட அமணராகும்
> மானமில்லவரைப் பார்த்து மாற்றமொன்றுரைக்க லுற்றுன்.

திருஞானசம்பந்தர் என்ற திருமந்திரமானது, உத்தமர்கள் கூறச் செவியில் நுழைந்தபோது மன்னவனுக்குச் சிறிது அயர்வு தீர்ந்தது. அவரை அழைத்து வருமாறு பணித்தான்.

திருஞானசம்பந்தர் அங்கு எழுந்தருளினுர். அவரைத் தரிசித்த மாத்திரத்திலேயே வெப்பு நோய் சிறிது தீர்ந்தது. "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகம் ஓதி திருநீற்றைச் சுவாமிகள் பூசியவுடன் வெப்புநோய் நீங்கி மீனவன் உய்வு பெற்றுன்.

சமணரத்தனை பேரும் பொடிபட :—

'நாங்கள் தோற்றுல் கழுவில் ஏறுவோம்' என்று சமணர் கூறியபடி, அனல் வாதம் புனல் வாதம் புரிந்து தோற்றபடி

யால், குலச்சிறையாரது ஆணையால் எண்ணாயிரம் சமணர் களும் கழுவில் ஏறினார்கள்

பண்புடை அமைச்சனாரும் பாருளோர் அறியும் ஆற்றல்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையில் ஏற்ற
நண்புடை ஞானம் உண்டார் மடத்துத் தீ நாடியிட்ட
எண்பெருங் குன்றத்தெண்ணா யிரவரும் ஏறினார்கள்.

—பெரிய புராணம்.

**சிவமணப்பொடி பரப்பிய திருப்புகலியிற் கவுணியப் புலவோனே :—**

மன்னவனுக்குத் திருஞானசம்பந்தர் திருநீறு வழங்கினார். அவன் அதனை இருகரத்தும் ஏந்தி அணிந்து இன்புற்றான். அதனைக்கண்ட மக்கள் அனைவரும் திருநீறு இட்டு சைவர் களாக ஆனார்கள்.

தென்னவன் தனக்கு நீறு சிரபுரச் செல்வர் ஈந்தார்
முன்னவன் பணிந்து கொண்டு முழுவதும் அணிந்து நின்றான்
மன்னன் நீறணிந்தான் என்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னி நின்றார்கள் எல்லாம் தூயநீறணிந்து கொண்டார்.

—பெரிய புராணம்

**குவளை நித்தமு மலர்த்தரு செருத்தணி :—**

செரு—போர். சூராதி யவுணருடன் செய்த போரின் வேகந் தணிந்தபடியால் செருத்தணி யெனப் பேர்பெற்றது. இத்திருத்தலத்தில் செங்கழுநீர் சுனையில் தினம் தினம் மலர் மலர்ந்து அர்ச்சனைக்கு ஆகும். அற்புதமான அரிய பெரிய திருத்தலம் திருத்தணிகை.

## கருத்துரை

தணிகேசா! பிறவித்துயர் அகல உனது பதமலரைச் சேர அருள் செய்.

## 28

குயிலொன் றுமொழிக் குயினின் றலையக்
கொலையின்ப மலர்க் கணையாலே
குளிருந் தவளக் குலசந்த் ரவொளிக்
கொடிகொங் கையின்முத் தனலாலே
புயல்வந் தெறியக் கடலின் றலறப்
பொருமங் கையருக் கலராலே
புயமொன் றமிகத் தளர்கின் றதனிப்
புயம்வந் தணையக் கிடையாதோ

சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின் றலையப் பொரும்வீரா
தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் திருமார்பா
பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே
பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் கழநிப் பெருமாளே.

### பதவுரை

*சயிலம் குலைய*=கிரவுஞ்சமலை அழியவும், *தடமும் தகர*=மற்றைக் குலமலைகள் பொடிபடவும், *சமன் நின்று அலைய*=இயமன் இங்கும் அங்குமாக அலையவும், *பொரு வீரா*=போர் செய்த வீரமூர்த்தியே! *தருமங்கை*=கற்பகத் தருவின் நிழலில் வளர்ந்த தெய்வயானையம்மை, *வனகுற மங்கையர்*=வனத்தில் வளர்ந்த வள்ளிபிராட்டி யென்ற இருவரது, *மெய்தனம் ஒன்றும்*=திருமேனியின் தனங்கள் பொருந்துகின்ற, *மணி திருமார்பா*=இரத்தினமணிகளுடன் கூடிய அழகிய மார்பினரே! *பயிலும் ககன பிறை*=ஆகாயத்தில் பயில்கின்ற பிறைமதி *தண்பொழிலில் பணியும்*=குளிர்ந்த சோலைகளுக்குக் கீழாக விளங்கும், *தணிகைப் பதி வாழ்வே*=திருத்தணி மலையில் வாழ்கின்றவரே! *பரமன் பணிய*=சிவபெருமான் பணிந்து கேட்க, *பொருள் அன்று அருளில் பகர்*=அன்று அருளுடன் பிரணவப் பொருளை உபதேசித்த, *செங்கழநி*=செங்கழுநீர் மலர்கின்ற தணிகை மலைக்கிறையாகிய, *பெருமாளே*=பெருமையிற் சிறந்தவரே! *குயில் ஒன்று மொழி*=குயிலைப்போன்ற இனிய மொழியையுடைய இவள், *குயில் நின்று அலைய*=குயிலானது ஒருபுறங் கூவி அலைக்கவும், *கொலை இன்ப மலர் கணையாலே*=கொலைபுரியவல்ல இன்பமலராகிய மன்மதனுடைய கணையாலும், *குளிரும் தவள குல சந்த்ர ஒளி*=குளிர்ச்சியும் வெண்மையும் சிறப்பும் பொருந்திய சந்திரவொளியானது, *கொடி கொங்கையின் முத்து அனலாலே*=கொடிபோன்ற இவளுடைய தனபாரங்களின் மீது அணிந்துள்ள முத்துமாலையிற்பட்டு அதன் மூலம் வெளிப்படும் நெருப்பாலும், *புயல் வந்து எறிய*=தென்றல் காற்று வந்து வீசவும், *கடல் நின்று அலற*=சமுத்திர ஒலியாலும், *பொருமங்கையர் உக்க அலரால்*=இவளுக்கு நிகரான மாதர்கள் தூற்றுகின்ற அலர்மொழியாலும், *புயம் ஒன்ற*=உமது திருத்தோளைத் தழுவும் பொருட்டு, *மிக தளர்கின்ற*=மிகவுந் தளர்கின்ற, *தனி*=தனித்த இத்தலைவிக்கு, *புயம் வந்து அணைய கிடையாதோ*=உமது புயாசலம் வந்து அணைப்பதற்குக் கிட்டாதோ?

## பொழிப்புரை

கிரவுஞ்ச மலையழியவும், மற்றைய குலமலைகள் பொடிபடவும், இயமன் இங்கும் அங்கும் அலையுமாறும் போர் புரிந்த வீரமூர்த்தியே! கற்பக மரத்தின்கீழ் வளர்ந்த தெய்வயானையம்மை, வனத்தில் வளர்ந்த வள்ளிபிராட்டியார் என்ற இரு மாதர்களின் தனங்கள் பொருந்துகின்ற இரத்தின மணிகளுடன் கூடிய அழகிய திருமார்பினரே! விண்ணிலபயிலுகின்ற பிறைச் சந்திரன் கீழே நுழையுமாறு உயர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த திருத்தணியில் வாழ்பவரே! சிவபெருமான் பணிந்து கேட்கப் பிரணவப் பொருளை அருளுடன் உபதேசித்த செங்கழுநீர் மலைக்குத் தலைவரான பெருமிதம் உடையவரே! குயில் போன்ற மொழியுடைய இத்தலைவி, குயில் ஒருபுறம் நின்று அலைக்கவும், கொலைபுரியவல்ல இன்ப நீலமலராகிய மன்மதனுடைய கணையாலும் குளிர்ந்த, வெண்மையான சிறந்த சந்திர வொளியானது கொடிபோன்ற இவளது தனத்தின் மீதுள்ள முத்துமாலையில் பட்டு வெளிப்படுகின்ற நெருப்பினாலும், தென்றல் காற்று வந்து எறியவும், கடல் ஓசை துன்புறுத்தவும், இவளுககு ஒப்பான மாதர்கள் கூறும் வசைமொழியாலும், தளர்ந்து உமது புயத்தைச்சேர விரும்பியுள்ள இவளுக்கு உமது திருப்புயம் வந்து தழுவுவதற்குக் கிடைக்காதோ?

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் எழுந்தது.

**குயிலொன்று மொழி :—**

குயில் போன்ற மொழியையுடைய தலைவி. அன்மொழித் தொகையாகத் தலைவியைக் குறிக்கின்றது.

**குயினின்றலைய :—**

தலைவனையடைய விரும்புந் தலைவிக்குக் குயிலோசை கொடுமையாக இருக்கும். அலைக்க என்பது அலைய என வந்தது.

"மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே"

—(துள்ளு மதவேள்) திருப்புகழ்

**கொலையின்ப மலர்க் கணையாலே :—**

இன்பம்போல் மகிழ்ச்சியைத் தந்து கொல்லுகின்ற கணை மன்மனுடைய நீலமலர்.

**குளிருந் தவளக் குலசந்த்ரவொளி :—**

சந்திரனுடைய அமிர்த கிரணம் காமுகர்க்குப் பெரிய வேதனையைத் தரும்.

எஞ்சலில் அமுதினை யார்க்கும் நல்கும் நீ
நஞ்சினை உகுத்திநண் ணலரில் தப்பியே
உஞ்சனன் இவனுயிர் ஒழிப்பன் யானென
வஞ்சினம் பிடித்தியோ மதியமே என்பான். —கந்தபுராணம்.

**புயல் வந்தெறிய —**

தென்றல காற்றும் காமுகர்க்குப் பெருந்துயரத்தை விளை விக்கும்.

வன்றிறல் கொலைஞர்கள் மானில கூவிமான்
ஒன்றறக் கவர்தல்போல் உயிரென் காலினை
இன்றது போலவந் துன்புக் கீர்த்ததால்
தென்றலுக் கியான்செய்த தீதுண்டோ? என்பான்.
—கந்தபுராணம்.

**கடனின்றலற :—**

சமுத்திர ஒலியும் காமுகர்க்குத் துயர் செய்யும.

துன்னலராகிய தொகையினோர் தமைத்
தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டதால
அன்னதும் அன்றியின் றுவிகொள் ளவும்
உன்னிய தோகடலை உறங்கலா தென்பான் —கந்தபுராணம்.

**பொருமங்கையருக்கலரானே :—**

பொரு—சமானம். தனக்கு நிகரான மாதர்கள், அலர் தூற்றுகின்ற வசைச் சொல் கூறுவர்.

'தெருவினில் நடவா மடவார் திரண் டொறுக்கும் வசையாலே''
—திருப்புகழ்

**புயம்வந்தணையக் கிடையாதோ :—**

இவ்வாறு குயிலாலும் மலர்க்கணையாலும், நிலவாலும், புயலாலும், கடலாலும் அலராலும் கவல்கின்ற இத்தலைவிக்கு முருகா! உமது புயம் வந்து தழுவிக்கொள்ளும் பேறு கிட்டாதோ?

''தளர்கின்ற இத் தலைவி உன்னைத் தழுவித் துன்பம் நீங்கி இன்பத்தையடைய அருள் செய்'' என்று நாயகீ-நாயக பாவத்தில் பாடுகின்றார் அருணகிரியார்.

**சயிலங்குலைய :—**

சயிலம் — மலை. சிலா — சிலையின் தொடர்புடையது சைலம். சிலா—சிலை—கல்.

தாரகனுடைய வஞ்சனைக்குத் துணை செய்த கிரவுஞ்ச மலையை முருகன் வேலாயுதத்தால் துகள்படுத்தி யருளினார்.

**தடமுந் தகர :—**

தடம்—மலை. முருகன் வேலின் வேகத்தால் குலமலைகள் எட்டும் தகர்ந்தன.

"வேல் வாங்கி யனுப்பிடக் குன்றங்கள் எட்டும் வழிவிட்டவே"
—கந்தரலங்காரம்.

**பயிலுங்ககனப்பிறை தண்பொழிலிற் பணியும் :—**

சந்திரன் கீழே தாழ்ந்து செல்லுமாறு வானளாவி நீண்டிருக்கின்ற சோலை. இது உயர்வு நவிற்சியணி.

**செங்கழுநி :—**

செங்கழுநீர் என்ற சொல் செங்கழுநி என மருவியது.

### கருத்துரை

திருத்தணிகேசா! உன்னை மருவ விரும்பும் இவனை நீ தழுவிக்கொண்டருள்செய்.

## 29

குருவி யெனப்பல கழுகு நரித்திர
ளரிய வனத்திடை மிருக மெனப்புழு
குறவை யெனக்கரி மரமு மெனத்திரி யுறவாகா
குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை யெனப்பிணி கலக மிடத்திரி
குலைய னெனப்புலை கலிய னெனப்பலர் நகையாமல்
மருவு புயத்திடை பணிக ளணப்பல
கரிபரி சுற்றிட கலைகள் தரித்தொரு
மதன சரக்கென கனக பலக்குட னதுதேடேன்
வரிய பதத்தினி னருவி யிருப்பிட
மமையு மெனக்கிட முனது பதச்சரண்
மருவு திருப்புக ழருள எனக்கினி யருள்வாயே
விருது தனத்தன தனன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி யெனக்குத வெகுதாளம்
வெருவ முகிழ்த்திசை யுரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை யதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு அசுரர் தெறித்திட விடும்வேலா

அரிய திரிப்புர மெரிய விழித்தவ
 னயனை முடித்தலை யரியு மழுக்கைய
 னகில மனைத்தையு முயிரு மளித்தவ னருள்சேயே
அமண ருடற்கெட வசியி லழுத்திவி
 ணமரர் கொடுத்திடு மரிவை குறத்தியொ
 டழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமாளே.

## பதவுரை

விருது=வெற்றிச் சின்னங்கள், தனத்தன தனன தனத்தன விதமி திமித்திமி திமித திமித்திமி விகிர்த டடுட்டுடு ரிரிரி குகு என=இத்தகைய ஓசைகளை யுண்டாக்கி சப்திக்கவும், வெகு தாளம்=அநேக வகையான தாளங்கள், வெருவ முகிழ்த்து=அச்சப்படுமாறு போடவும், இசை உரகன் முடி தலை நெறுநெறு என=புகழ்பெற்ற ஆதிசேடனுடைய பணமகுடங்கள் நெறு நெறு என்று நெரியவும், திசை அதிர=எட்டுத் திக்குகளும் அதிரவும், அடைத்திட=இடமின்றி எங்கும் நெருங்கவும், மீகுதி கெட=அசுரர்களுடைய அக்கிரமங்கள் அழியவும், பொரு அசுரர் நெறித்திட=போர் செய்த இராக்கதர்கள் பிளந்து மாண்டொழியவும், விடும் வேலா=விடுத்தருளிய வேற்படையையுடையவரே! அரிய திரிபுரம் எரிய=அழிப்பதற்கு அரிய முப்புரங்களும் வெந்தொழிய, விழித்தவன்=அனற் பொறி பரக்க நகைத்தவரும், அயனை=தருக்குற்ற பிரமதேவனுடைய, முடி தலை=மணிமகுடத்தோடு கூடிய சிரத்தை, அரியும் மழுக்கையன்=அரிந்த மழுவாயுதத்தை ஏந்திய திருக்கரத்தையுடையவரும், அகிலம் அனைத்தையும்=பூமி முழுவதையும், உயிரும்=உயிர்களையும், அளித்தவன்=ஈன்றருளிய ஜகத் பிதாவுமாகிய சிவபெருமான், அருள் சேயே=பெற்றருளிய திருக்குழந்தையே! அமணர் உடல்கெட=(பல தீங்குகள் புரிந்த) சமணர்களது உடல் பிளந்தழியுமாறு, வசியில் அழுத்தி=(திருஞானசம்பந்தராக வந்து) கழுவில் ஏற்றி, விண் அமரர் கொடுத்திடும் அரிவை=தேவலோகத்தில் வாழ்கின்ற தேவர்கள் தந்த தெய்வயானை யம்மையாருடனும், குறத்தியொடு=வள்ளி பிராட்டியாருடனும், அழகு திருத்தணி மலையில் நடித்து அருள்=அழகுமிக்க திருத்தணி மாமலையின்மீது திருநடனம் புரிந்து அடியேனுக்கு அருள்புரிந்த, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! குருவியென=குருவியைப் போலவும், பலகழுகு=பலவகைப்பட்ட கழுகுகளைப் போலவும், நரி திரள்=நரிக்கூட்டம் போலவும், அரியவனத்து இடை மிருகம் என=செல்லுதற்கு அரிய காட்டுக்குள் வாழும் விலங்குகளைப் போலவும், புழு=புழுவைப் போலவும், குறவை என=குறவை மீனைப்போலவும், கரி=யானையைப் போலவும், மரமும் என=மரத்தைப் போலவும்,

திரி உறவு ஆகா = திரிகின்ற மனிதர்களுடைய சிநேகம் ஒரு போதும் ஆகாது; குமரி கலி துறை முழுகி = இளம் பெண்ணின் மோகத்தா லுண்டாகும் மகிழ்ச்சியாகிய நீர்த்துறையிலே முழுகி, மன துயர் = அதனால் மனத்தில் துன்பமுண்டாகி, கொடுமை என = கண்டவர் இது மிகவும் கொடுமையான வியாதி என்று கூறுமாறு, பிணி கலகம் இட = நோய்கள் வந்து ஒன்றோடொன்று பிணக்குமுற்று போராடவும், திரி குலையன் என = வீணே அலைந்து உழல்கின்றவன் என்றும், புலை கலியன் என = புலாலுண்ணுகின்ற அகங்காரி என்றும் கூறி பரி கசித்து, பலர் நகையாமல் = பலபேர் சிரிக்காமல், மருவு புயத்து இடை = தழுவுகின்ற தோள்களுக்கு நடுவில், பணிகள் அண = பொன்னாபரணங்கள் பொருந்தவும், பல கரி பரி சுற்றிட = அநேக யானைகள் குதிரைகள் முதலிய பரிவாரங்கள் சூழவும், கலைகள் தரித்து = பொற்சரிகை யாடைகளைப் புனைந்தும், ஒரு மதன சரக்கு என = ஒப்பற்ற மன்மதனுடைய வாணிபப் பண்டம் என்று கண்டோர் கூறவும், கனக ப(ல்)லக்கு உடன் அது = பொன்னாலாகிய பல்லக் குடனும் உலாவுகின்ற இடம்ப வாழ்வினை, தேடேன் = அடியேன் விரும்பமாட்டேன் வரிய பதத்தினின் அருவி இருப்பிடம் = வரிவடி வான எழுத்துக்களாகிய சொற்கள் மிகுதியால் தண்ணீரருவிபோல் இடைவிடாது சொரிகின்ற அருவிபோல் விளைவதற்கு உறைவிட மாகிய, உனது பதசரண் = தேவரீருடைய திவ்ய சரணாரவிந்தங்கள், எனக்கு அமையும் இடம் = அடியேனுக்கு அமைந்த பற்றுக்கோடான இடமாம்; (ஆதலால்) மருவு திருப்புகழ் அருள = உமது திருவடியைப் பொருந்தியுள்ள திருப்புகழைப் பாடியருள, எனக்கு இனி அருள் வாயே = அடியேனுக்கு இனியாவது அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வெற்றிச்சின்னங்களானவை, தனத்தன தனன தனத் தன விதமி திமித்திமி திமித திமித்திமி விகிர்தடடுட்டுடு ரிரிரி குகு என்ற ஒலியுடன் ஒலிக்கவும். அநேகவகையான தாளங்கள் அச்சப்படுமாறு சப்திக்கவும், உலகத்தைத் தாங்கி புகழ்பெற்ற ஆதிசேடனுடைய ஆயிரம் பணமகுடங்களும் நெறு நெறு என்று நெறியவும், எட்டுத் திசைகளும் நடுங்க வும், இடமின்றி எங்கும் நெருங்கவும், அவுணர்களாலாகிய அதிக்கிரமங்கள் கெடவும், போர் புரிந்த அசுரர்கள் அழியவும் ஏவிய வேலாயுதத்தை யுடையவரே! ஏனையோர்களால் வெல்லுதற்கரிய மூன்றுபுரங்களும் எரிந்தொழிய நகைத்தருளி யவரும், தருக்குற்ற பிரமனுடைய முடியுடன் கூடிய தலையை நகத்தாற் கிள்ளியெடுத்த மழுவேந்திய திருக்கரத்தினரும், உலக முழுவதையும் உயிர்களையும் பெற்றருளிய உலக தந்தையுமாகிய பரமேசுவரருடைய திருக்குமாரரே! திருஞான சம்பந்தராக வந்து அமணர்களது உடல்கெட கழுக்களில்

ஏற்றி, விண்ணுலகில் வாழுகின்ற விபுதர்கள் தந்த தெய்வ குஞ்சரியம்மையாருடனும் வள்ளியம்மையாருடனும் அழகு மிக்க திருத்தணிகை மலையின்மீது அனவரத ஆனந்தத் தாண்டவம் புரிந்து அடியேனுக்கு அருள்புரிந்த பெருமித முடையவரே! குருவியைப் போலவும், பலவகையான கழுகு களைப் போலவும், நரிக்கூட்டங்களைப் போலவும், சஞ்சரிப்பதற் கரிய காட்டில் வாழும் விலங்குகளைப் போலவும், புழுவைப் போலவும், குறவை மீனைப் போலவும், யானையைப் போலவும், மரத்தைப் போலவும் திரிகின்ற மனிதர்களுடைய சிநேகம் எனக்கு வேண்டாம்; இளம் பெண்களது ஆசைக் கடலில் முழுகி அதனால் மனத்தில் துன்பமுண்டாகி, "கொடுமையான நோய்" என்று பார்த்தவர்கள் வெறுக்கத்தக்க பல நோய்கள் உண்டாகி அவைகள் ஒன்றுக்கொன்று கலகமிட்டுப் போராட வும் திரிகின்ற வீணன் என்றும், புலாலுண்ணுகின்ற தரித் திரன் என்றும் பலர் அடியேனைப் பார்த்து எள்ளி நகையாடா மல் இருக்கவேண்டும், தழுவுகின்ற தோள்களில் பொன்னாபர ணங்கள் பொருந்தவும், பல யானை குதிரை முதலியன சூழ்ந்து வரவும், சிறந்த ஆடைகளை யுடுத்தும் மன்மதனுக்கு ஒப்பற்ற வாணிபப் பண்டம் என்று கூறுமாறு பொன்னுலாகிய பல்லக் குடன் கூடி யுலாவுகின்ற டம்ப வாழ்வையும் அடியேன் விரும்பமாட்டேன்; வரிகளுடன் கூடி எழுத்துக்களாகிய பதங்கள் அருவிபோல் பெருகியோடுவதற்கு இருப்பிடமானது உமது திருவடியே; அத்திருவடிக் கமலமே அடியேனுக்கு இனிது தங்கி இளைப்பாறுதற்குச் சிறந்த உறைவிடம்; ஆத லால் அச் சரணாரவிந்தத்தினை மருவுகின்ற திருப்புகழை அடியேன் பாடி உய்யுமாறு இனியாவது அருள்புரிவீர்.

## விரிவுரை

**குருவியென :—**

மனிதப் பிறப்பு எடுத்ததனால் மட்டும் மனிதர்களாக மாட் டார்கள்; மனிதப் பண்பு இருந்தால்தான் மனிதர்களாக முடியும். மக்கட் பண்பு இல்லாத மனிதர்களெல்லாம் மனித விலங்குகள்.

மனிதர்களுக்குள் பறவையுண்டு; விலங்கு உண்டு; மரமுண்டு; மனிதனுமுண்டு. தேவரும் உண்டு. திருவள்ளுவர் முதலியோர் மனித உடம்பெடுத்த தேவர். "தேவர் குறளும்" என்ற திருவாக்கே இதற்குச் சான்று பகரும். அதாவது எந்த எந்த தன்மைகளைப் பொருந்தி யுளரோ அவரவர் அந்தந்த வகையாகின்றனர்.

> தக்க இன்ன தகாதன இன்னவென்
> றொக்க வுன்னல ராயின் உயர்ந்துள
> மக்களும் விலங்கே; மனுவின் னெறி
> புக்கவேல் விலங்கும் புத்தேளிரே. —கம்பராமாயணம்

ஆதலால், மனிதர்களுக்குள் குருவிகளும் உண்டு; அதாவது குருவியின் தன்மையை யுடைய மனிதர். குருவிகள் ஏரியில் தண்ணீர் உள்ளவரை அங்கேயே அகலாமல் வாழும்; ஏரி நீர் வற்றிவிட்டால் அதிலுள்ள மீன் முதலியவற்றைத் தின்று ஏரியைவிட்டு நீங்கிவிடும். அதுபோல் நம்மிடம் செல்வமுள்ள வரை வட்டமிட்டுக்கொண்டிருந்து வறுமை வந்தபின் திரும்பிக்கூடப் பாராமல் விலகிச் செல்கின்ற மனிதர்கள் குருவிகள்.

கண்ணுவர் ஆசிரமத்தில் இருந்த சகுந்தலையைக் கலந்து நலனுரை கூறி நீங்கிய துஷ்யந்தன், பின்னர் சகுந்தலையைப் பார்த்து, "உன்னைக் கண்டதுமில்லை, கலந்ததுமில்லை" என்று கூறியபோது சகுந்தலை கூறுவதை நோக்குக.

வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் வாழ்வன்றி நல்குரவிற்
றாழ்ந்தாலும் ஒக்கச் சமைந்தான் மனம்நோவ
வீழ்ந்தாடி நீர்துளையும் வெம்பறவை போன்றவர்பால்
ஆழ்ந்தாய் எடுத்தாற்றி யார்காக்க வல்லாரே. —மகாபாரதம்.

கழுகு :—

கழுகு பிணங்களைப் பிடுங்கித் தின்னும். அதுபோல பிறருடைய சொத்தைப் பிடுங்கித் தின்பவரும், செத்துப் போனவைகளைத் தின்பவரும் கழுகுகள்.

நரி :—

குள்ள நரி தந்திரம் மிக்கது. குள்ள நரி ஆடுமந்தைக்கு இரவில் வந்து, ஆடுமேய்ப்பானுடைய தொந்தரவை நீக்கிக் கொள்ளும் பொருட்டு, ஆட்டைக் கத்தவொட்டாமல் ஊட்டியைப் பிடித்து அதன்மேல் சாய்ந்து கொண்டு வாலால் அடிக்கும்; ஆடு பயந்து நரியைத் தூக்கிக்கொண்டு ஓடும். சிறிது தூரம் சென்றபின் ஆட்டைக் கடித்துக் கொன்று தின்னும் அதுபோல் தந்திரமாக வந்து "அங்கே ஒரு அதிசயமுளது" என்று ஏதாவது ஒன்றைச் சொல்லி அழைத்துக் கொண்டு போய் யாருமற்ற இடத்தில் வாயில் துணியை யடைத்துக் கொல்லும் கொடுமையோர் குள்ளநரிகள்.

அரிய வனத்திடை மிருகம் :—

விலங்குகள் புண்ணிய பாவங்களைப் பகுத்துணராது திரியும்; தாய் தங்கை என்ற பகுப்பின்றி வாழும்; ஒன்றையொன்று அடித்துத் தின்னும். அதுபோல் பகுத்துணர்வு இன்றித் திரிந்தும், முறைமை இன்றி ஒழுங்கீனமாக இன்பத்தைத் துய்த்தும், ஆடு கோழி மீன் முதலிய வாயில்லாதவைகளைக் கொன்று தின்றும் திரிகின்றவர்கள் மனித உடம்போடு கூடிய விலங்குகள்.

"விலங்கனேயேன்" —அப்பர்.
"மிருகமதென உயிர் வதைத்த தெத்தனே"
—(சினத்திலத்தினை) திருப்புகழ்.

புழு :—

புழு புண்ணில் இருந்து குடையும் தன்மையையுடையது. அதுபோல் நம்மை அதைக்கொடு இதைக்கொடு என்று குடையும் இயல்புடையவர்கள் புழுக்கள்.

குறவை :—

குறவை என்பது ஒருவகை மீன்; அது சேற்றிலேயே இருக்கும். காமமயக்கமாகிய சேற்றிலும் அநாசாரமாகிய சேற்றிலும் உள்ளவர்கள் குறவைகள்.

கரி :—

யானை மதங்கொண்டு திரியும்; பலநாள் உணவு கொடுத்து வளர்த்த பாகன் ஒருநாள் உணவில் ஒரு கவளத்தை எடுத்துக்கொண்டால் அப்பாகனை யானை கொன்றுவிடும். அதுபோல், செருக்குற்றுத் திரிபவரும், பற்பல நன்றி செய்த நல்லவர்களை ஒரு சிறு தீமையைக் குறித்துக் கொல்லும் தன்மை யுடையவர்களும் யானைகள்.

மரம் :—

மரம் தன்னையும் அறிந்து கொள்ளாது; தன்னையுடைய தலைவனையும் அறிந்து கொள்ளாது. அதுபோல், தன்னையும், தனது தலைவனையும் அறியாது, "கடவுளில்லை; முத்தியில்லை; மறுமையில்லை" என்று பிதற்றித் திரிபவர்கள் மனித மரங்கள்.

"மரம்போல்வர் மக்கட்பண் பில்லாதவர்" —வள்ளுவர்.

இன்னும் மனிதர்களுக்குள் நாய்கள், பேய்கள், எருமைகள், தேள்கள், நாட்டுவாக்காலிகள், புலிகள், பூனைகள் முதலிய பலப்பல வகையுண்டு. அநுபவத்தில் "அவன் எருமையாயிற்றே?", "அவன் நாய்", "அவன் பூனை" என்றெல்லாம் பேசுவது கண்கூடு. அயலுடைமைக்குப் பேயாய்ப் பறப்பவன் பேய்; பிச்சைக்காரன்மேல் வீழ்ந்து அதட்டி குலைக்கின்றவன் நாய்; பிறர் இரகசியம் பேசும்போது ஒற்றுக்கேட்பவன் சுவர்க்கோழி; பிறர் துன்பம் தெரியாதவன் தேள்; நல்ல விஷயத்தில் பதுங்கிப் பின்வாங்குபவன் பூனை; உறுதியில்லாமல் இன்று ஒருகொள்கை, நாளை ஒரு கொள்கையாக மாறுபவன் பச்சோந்தி; சமயம் மாறுபவன் ஆடு. இப்படிப் பலவகையுள. விரிவஞ்சி விடுக்கின்றோம். அன்பர்கள் அவரவர்களைக் காணும்போது இவர் எந்த வகையில் சேர்ந்தவர் என்று ஆய்ந்து நட்பு கொள்ள வேண்டும்.

**குமரிகலித்துறை முழுகி :—**

இளம் பெண்களின் மீதுள்ள ஆசையாகிய துறையில் மூழ்குதல்; மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் மூழ்கினார்; சுந்தரமூர்த்திநாயனார் திருவருட்டுறையில் மூழ்கினார்; சம்பந்தசுவாமிகள் திருத்தோணிபுரந்துறையுள் மூழ்கினார். இன்னும் பல மெய்யன்பர் பூசத்துறையிலும், கடம்பர் துறையிலும், திருவாவடுதுறையிலும், குரங்காடு துறையிலும், சிந்துபூந்துறையிலும், குறுக்குத் துறையிலும் மூழ்கி முத்தி பெற்றனர். அவ்வாறு நற்றுறையில் மூழ்காது "குமரி கலித்துறையில் மூழ்கிக் கேடுற்றேன்" என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றனர்.

**மருவு புயத்திடை.............தேடேன் :—**

பொன்னாபரணங்கள், யானை குதிரை ஆள் முதலிய பரிவாரங்கள், திவ்வியமான உடைகள், ஊர்திகள் முதலியவைகளுடன் டாம்பீகமாகத் திரிவதை வெறுத்துரைக்கின்றனர்.

**வரிய பதத்தினின் அருவி யிருப்பிடம் :—**

வரிவடிவுகள் பெற்றுள்ள எழுத்துக்கள் கூடிச் சொற்களாகின்றன; அச்சொற்கள் அருவிபோல் பிரவாகமாகப் பெருகுகின்றன அவைகட்கு உறைவிடம் இறைவன் திருவடியே.

**திருப்புகழருள எனக்கினி யருள்வாயே :—**

திருப்புகழே எல்லா நலங்களையும் தரவல்லது. முத்தியையும் சித்தியையும் வழங்குவதும் அதுவே. அப் பரமபதியின் பொருள்சேர் புகழ் புரிந்தார்மாட்டு இருள்சேர் இருவினையும் சேரா; திருப்புகழ் படிப்பவர்க்கு பிறவிப் பிணி தானே நீங்கும். ஆதலால், திருப்புகழைப் பாடும் தன்மையை இறைவன்பால் சுவாமிகள் வேண்டுகின்றனர்.

**அயனை முடித்தலை யரியு மழுக்கையன் :—**

பிரமதேவன் "நாம் உலகைப் படைக்கின்றோ" மென்று தருக்குற்றனன். அதனை யுணர்ந்த சிவபெருமான் பிரமனை விளித்து நடுத்தலையை நகத்தாற் கிள்ளி யெடுத்து "நீ உலகினைப் படைத்தியேல் உன் தலையைப் படைத்துக்கொள்" என்றனர் அப் பிரமன், இதுகாறும் தன் தலையைப் படைத்துக்கொள்ளுந் திறனின்றி வாளா இருக்கின்றனன்.

படைப்பானும் காப்பானும் பார்க்கி லருணேசன்
படைப்பானய னென்னற் பாவம் - படைக்கிலயன்
தன்றலையைச் சோணேசன் றானரிந்த போதினிலே
தன்றலையைப் பண்ணறியான் றன். —அருணகிரியந்தாதி.

நல்ல மலரின் மேல் நான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரா லரிந்த தென் றுந்தீபற. —திருவாசகம்

சிவபெருமான் தமது கரத்தில் மழுவாயுதத்தை ஏந்தியிருந்தும், அம் மழுப்படையால் பிரமன் தலையை யறுக்காது, தமது பெருமையும் பிரமனது சிறுமையும் புலப்படுமாறு நகத்தாலேயே கீரை கிள்ளுவதுபோற் கிள்ளி எடுத்தனர் என்ற குறிப்பை விளக்கும்பொருட்டு "மழுக்கையன்" என்ற அருமையான பதத்தையும் சுவாமிகள் அதியற்புதமாக அமைத்தனர்.

**அகிலமனைத்தையும் உயிருமளித்தவன் :—**

மேலே கூறிய அரிய விஷயத்தை அநுவதித்து உலகையும் உயிரையும்பெற்ற ஜெகத்பிதா சிவபெருமானே என்றும் கூறி மேற்போந்த விஷயத்தை நிறுவுகின்றனர்.

**அமணருடற்கெட வசியிலழுத்தி :—**

இது திருஞானசம்பந்தர் சமணரைக் கழுவேற்றிய வரலாறு இதனைத் திருப்புகழ் விரிவுரை ஆறும் தொகுதி "வஞ்சக லோப" என்ற பாடலின் விரிவுரையில் காண்க.

"பெம்மான் முருகன் பிறவான் இறவான்"

என்பது அநுபூதியின் அருள்வாக்கு. ஒரு கடவுள் பிறந்தது என்றால் அது கடவுளாக ஆகமாட்டாது. பிறப் பிறப்பற்றது கடவுள். பிறப்பிறப்பற்ற பெருந்தகையாம் முருகக்கடவுள் ஞானசம்பந்தராக வந்தார் என்பதனுடைய கருத்துதான் யாதோ வெனின், கூறுதும். சுப்ரமண்ய சாரூபம் பெற்றவர்கள் பலர். அவர்கட்கு வேலும் மயிலும் ஆறுமுகமும் பன்னிரு தோள்களும் உண்டு. அவர்கட்கு அபரசுப்ரமண்யர் என்று பேர். அவ்வாறு சாரூபம் பெற்ற அபரசுப்ரமண்ய மூர்த்திகளுள் ஒருவர் பரசுப்ரமண்யமாகிய பெருமானுடைய திருவருள் தாங்கி திருஞானசம்பந்தராகத் திருவவதாரஞ் செய்தனர். அதனைப் பரசுப்ரமண்யத்தின் பேரில் ஏற்றிச் சொல்வது ஆன்றோர் மரபு. எங்ஙனமெனின், அயன் தலையரிந்தது, தக்கன் மகம் அழித்தது முதலியவைகள் ஸ்ரீகண்ட ருத்திரருடைய செயல்கள்; ஸ்ரீகண்ட ருத்திரருடைய செயல்களைப் பரசிவத்தின் செயலாக ஏற்றித் தமிழ் மறைகளாகிய தேவார திருவாசகங்கள் கூறுமாறு கண்டு தெளிக. ஆதலால் மூவருந் தேவருங் காணாத முழு முதற் கடவுளாம் முருகவேள் யோனிவாய்ப்பட்டுப பிறந்தனர்என்று மயங்கற்க.

உக்கிரப் பெருவழுதி, உருத்திரசன்மர் முதலிய அவசரங்கட்கும் இதே நியாயம் என்று உய்த்துணர்க.

**அழகு திருத்தணிமலையில் நடித்தருள் பெருமானே :—**

அருணகிரிநாத சுவாமிகட்குத் திருத்தணிகை மலையில் திருவேலிறைவன் திருநடன தெரிசனங் கொடுத்தருளினார். இதுவேயுமன்றி, சிதம்பரம், திருச்செந்தூர், கொடுங்குன்றம் முதலிய திருத்தலங்களிலும் அருணகிரியார்க்கு நடன தெரிசனங் காட்டி யருளினார் என்பது,

"செந்திலிலு மென்றன்முன் கொஞ்சி நடனங் கொளுங் கந்தவேளே"
—(தண்டையணி) திருப்புகழ்.

என்ற அருமைத் திருவாக்குகளால் புலப்படுகின்றது.

## கருத்துரை

அசுரரை யழித்த வேலாயுதரே! சிவகுமாரரே! தணிகாசலரே! மனிதப் பண்பில்லாதவர் உறவு வேண்டா; அவநெறியிற் புக்கு அலையேன்; டாம்பீக வாழ்வை விரும்பேன்; திருப்புகழைப்பாடி உமது திருவடியைப் புகலிடமாக அருள்புரிவீர்.

## 30

குலைத்துமயிர்க் கலைத்துவளைக்
கழுத்துமணித் தனப்புரளக்
குவித்தவிழிக் கயற்சுழலப் பிறைபோலக்
குனித்தநுதற் புரட்டிநகைத்
துருக்கிமயற் கொளுத்தியிணைக்
குழைச்செவியிற் றழைப்பபொறித் தனபாரப்
பொலித்துமதத் தரித்தகரிக்
குவட்டுமுலைப் பளப்பளெனப்
புனைத்ததுகிற் பிடித்தஇடைப் பொதுமாதர்
புயத்தில்வளைப் பிலுக்கில்நடைக்
குலுக்கிலறப் பசப்பிமயற்
புகட்டிதவத் தழிப்பவருக் குறவாமோ
தலத்தநுவைக் குளித்தொருமுப்
புரத்தைவிழக் கொளுத்திமழுத்
தரித்துபுலிக் கரித்துகிலைப் பரமாகத்
தரித்துதவச் சுரர்க்கமுதற்
பிழைக்கமிடற் றடக்குவிடச்
சடைக்கடவுட் சிறக்கபொருட் பகர்வோனே

சிலுத்தசுரர்க் கெலித்துமிகக்
    கொளுத்திமறைத் துதிக்கஅதிற்
    செழிக்கஅருட் கொடுத்தமணிக் கதிர்வேலா
தினைப்புனமிற் குறத்திமகட்
    டனத்தின்மயற் குளித்துமகிழ்த்
    திருத்தணியிற் றரித்தபுகழ்ப் பெருமாளே.

## பதவுரை

*தல தநுவை குனித்து*=பூதலத்தின் நடுவில் உள்ள மேருமலையை வில்லாக வளைத்து, *ஒரு முப்புரத்தை விழகொளுத்தி*=ஒப்பற்றமூன்று புரங்கள் பொடிபட்டு விழுமாறு எரித்து, *மழுதரித்து*=மழுஆயுதத்தைத் தரித்து, *புலி கரி துகிலை*=புலி யானை இவைகளின் தோலை, *பரமாக தரித்து*=ஆடையாக உடுத்தி, *தவசுரர்கள் முதல் பிழைக்க*=தவஞ்செய்த தேவர்கள் முதலானவர்கள் பிழைக்குமாறு, *மிடற்று அடக்குவிட*=நஞ்சைக் கண்டத்தில் அடக்கிய, *சடை கடவுள்*=சடைமுடியுடைய சிவபெருமானுக்கு, *சிறக்க பொருள் பகர்வோனே*=மகிழ்சிறக்குமாறு பிரணவப் பொருளை உபதேசித்தவரே! *சிலுத்த அசுரர் கெலித்து*=சண்டையிட்ட அசுரர்களை வென்று, *மிக கொளுத்தி*=மிகவும் அவர்களை எதிர்த்து, *மறைதுதிக்க*=வேதம் துதி செய்ய, *அதில் செழிக்க*=அதனால் தேவர்கள் தழைக்க, *அருள் கொடுத்த*=அருள் பாலித்த, *மணிகதிர் வேலா*=தங்கமணிகட்டிய ஒளிசெய்யும் வேலாயுதக்கடவுளே! *தினைபுனமில்*=தினைப்புனத்தில், *குறத்தி மகள் தனத்தில்*=குறமகளாகிய வள்ளிநாயகியின் தனத்தின், *மயல் குளித்து*=மோகத்தில் முழுகி, *மகிழ்*=மகிழுகின்ற, *திருத்தணியில் தரித்த புகழ்*=திருத்தணியில் நிலைத்து உறைகின்ற புகழ்மிகுந்த, *பெருமாளே*=பெருமையில் மிகுந்தவரே! *மயிர் குலைத்து கலைத்து*=கூந்தலை அவிழ்த்துப் பிரித்து, *வளை கழுத்தில் மணிதன புரள*=சங்கு போன்ற கழுத்தில் உள்ள மணிமாலை கொங்கைமேல் புரள, *குவித்த விழி கயல் சுழல*=குவிந்த கண்கள் கயல்மீன் போல் சுழல, *பிறைபோல குனித்த நுதல் புரட்டி*=பிறைமதியைப் போல் வளைத்த நெற்றியை நெறித்து உருட்டி, *நகைத்து*=புன்னகை புரிந்து, *உருக்கி*=ஆடவர் மனத்தை உருகச்செய்து, *மயல் கொளுத்தி*, மோகக் கனலைப் பற்றவைத்து, *இணை குழை செவியில் தழைப்ப*=இணையான தோடுகள் காதுகளில் விளங்க, *பொறி தனபார பொலித்து*=தேமல் படர்ந்த தனங்கள் பொலிவுற்று, *மதம் தரித்த கரி*=மதங்கொண்ட யானை போலவும், *குவட்டு முலை*=குன்று போலவும் உள்ள கொங்கைகள், *பளப்பளென*=பளபள என்று ஒளிசெய்ய, *புனைத்த துகில்பிடித்த இடை*=ஆடையைத் தரித்த பிடியில் அடங்கும் இடையையுடைய, *பொது மாதர்*=பொது மகளிரின், *புயத்தில்*=புயத்தாலும், *வளை*

பிலுக்கில்=வளையலின் பகட்டாலும், நடை குலுக்கில்=நடையின் அசைவாலும், அற பசப்பி=மிகவும் பசப்பி, மயல் புகட்டி=மயக்கத்தை ஊட்டி, தவத்து அழிப்பவருக்கு=தவத்தை அழிப்பவர்களான அம்மாதர்களின், உறவு ஆமோ=உறவு ஆகுமோ? (ஆகாது).

## பொழிப்புரை

பூதலத்தில் நடுவில் விளங்கும் மேரு மலையை வில்லாக வளைத்து, ஒப்பற்ற முப்புரங்கள் பொடிபட்டு அழிய எரித்து, மழுவைத் தரித்து, புலியையும் யானையையும் உரித்து அவற்றின் தோலை ஆடையாகத் தரித்து, தம்முடைய அமரர்கள் உய்யும்பொருட்டு ஆலாகல விடத்தைக் கழுத்தில் நிறுத்திய சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ பிரணவப் பொருளை உபதேசித்தவரே! போர் புரிந்த அசுரர்களை வென்று, அவ்வசுரர்களை நிரம்ப எரி செய்து, வேதம் துதிக்க, தேவர்கள் செழிக்க அருள்பாலித்த மணியுடன் கூடிய வேலையுடையவரே! தினைப்புனத்தில் குறமகளாகிய வள்ளிபிராட்டியின் தனபாரத்தின் மீதுள்ள மயலாகிய நீரில் முழுகி மகிழ்கின்ற திருத்தணி மலையில் நிலைத்து வாழ்கின்ற புகழ் மிகுந்த பெருமிதம் உடையவரே! தலைமயிரை அவிழ்த்துப் பிரித்தும், சங்கு போன்ற கழுத்தில் உள்ள மணிமாலையைத் தனத்தின்மீது புரளவிட்டும் குவிந்த கண்களாகிய கயல்மீனைச் சுழற்றியும், பிறைமதி போன்ற வளைந்த நெற்றியை நெறித்தும், புன்னகை புரிந்தும், ஆடவர் உள்ளத்தை யுருக்கியும், ஆசைத் தீயை ஏற்றியும், ஒன்றுபோன்ற செவியில் தோடுகள் விளங்கவும், தேமல் படர்ந்த கொங்கைகள் பொலியவும், மதயானை போலவும் மலை போலவும் உள்ள அத் தனங்கள் பளபள என்று விளங்கவும், உடுத்த துகிலுடன் கூடிய பிடியில் அடங்கும் இடையுடனும் கூடிய பொது மாதர்களின், புயத்தாலும், வளைகளின் ஒலியாலும் நடையழகின் குலுக்கினாலும், மிகவும் பசப்பி, மோக மயலை ஊட்டி தவத்தை அழிப்பார்கள்; அத்தகைய அம்மகளிருடைய உறவு ஆகுமோ? ஆகாது.

## விரிவுரை

இத்திருப்புகழில் முன்னுள்ள நான்கு அடிகளில் பொது மகளிரின் தன்மைகளைக் கூறியுள்ளார்.

**பொலித்து மதத் தரித்த கரி:—**

இந்த 7-வது வரியை பொலிந்து மதந்தரித்த கரி எனக் கொள்க. பொலிவுற்று மதங்கொண்ட யானை.

**பிடித்த இடை:—**

பிடியில் அடங்கும் சுருங்கிய இடை

தலத்தநுவை :—

தலத்துக்கு நடுவில் உள்ள மேருகிரியை வில்லாக வளைத்து என வருவிக்க. அல்லது தலத்தில் மேருகிரியை வில்லாக என்றும் பொருள் செய்யலாம்.

"மாநிலத்திடை நின்றோங்கிய நெடுநிலைமேரு" —சிலப்பதிகாரம்.
"மாமேரு பூதரத் தநுப்பிடித்து" —(ஆனத) திருப்புகழ்.

பரமாக :—

அம்பரம்— ஆடை

முதற் குறைந்து அம்பரம் என்ற சொல் பரம் என லுந்தது.

தாருகவனத்து முனிவர்கள் பூர்வமீமாம்சக் கொள்கை யுடையவர்கள்.

கர்மாவே பயனைத் தரும். பயனைத் தரத் தனியே கடவுள் வேண்டியதில்லை யென்று கூறும் கொள்கையர்.

"விரதமேபரம் ஆக வேதியரும்
சரதம் ஆகவே சாத்திரங் காட்டினர்"
—திருவாசகம் (போற்றித் திரு அகவல்)

சிவபெருமானைக் கொல்லும் பொருட்டு அபிசார வேள்வி செய்து, புலி, மான், பாம்புகள், துடி, முயலகன், பூதங்கள் இவைகளை ஒன்றன் பின் ஒன்றாக ஏவினார்கள்.

புலியை உரித்து தோலை உடுத்திக் கொண்டார். மழுவையும் மானையும் துடியையும் கரத்தில் தரித்துக் கொண்டார். பூதங்களைச் சேனையாகவும், முயல்கனை மிதித்தும், பாம்புகளை அணிகலமாகவும் கொண்டு அருள் புரிந்தார். கயமுகாசுரனை வதைத்துத் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டார்.

மிடற்றடக்குவிட :—

அமரர்கள் பாற்கடல் கடைந்தபோது விநாயகரை வணங்காமையால் ஆலாகலவிடம் தோன்றியது. அமரர்கள் அனைவரும் நடுங்கி ஒடுங்கிக் கயிலை சென்று சிவபெருமானிடம் முறையிட்டார்கள். பெருமான் அந்தக் கொடிய நஞ்சினைக் கண்டத்தில் தரித்து எல்லாருடைய கண்டங்களையும் தீர்த்தருளினார்.

ஆண்டவன் கழுத்தில் விடத்தைத் தரித்ததால் தேவ மாதர்கள் கழுத்தில் மங்கலநாண் தரித்தார்கள்.

மாலெங்கே ? வேதனுயர் வாழ்வெங்கே ? இந்திரன் செங்
கோலெங்கே ? வானோர் குடியெங்கே ?—கோலஞ் செய்
அண்டங்கள் எங்கே ? அவனியெங்கே ? எந்தைபிரான்
கண்டமங்கே நீலமுறாக் கால். —திருஅருட்பா.

நாலம்வா பரமோபகாரக மிதம் த்வேகம் பசூநாம்பதே
பஸ்யந் குக்ஷிகதான் சராசரகணுன் பாஹ்யஸ்திதான் ரக்ஷிதும்
சர்வாமர்த்ய பலாய நௌஷத மதிஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரளம் களே நகளிதம் நோத்கீர்ணமேவ த்வயா.

(பொருள் : பசூநாம்பதே—பசுக்களுக்கு ஈசனே! குக்ஷிகதான்—வயிற்றை அடைந்தவர்களாயும், பாஹ்யஸ்திதான்—வெளியில் இருப்பவர்களாயுமிருக்கின்ற, சராசரகணுன்—சங்கம ஸ்தாவரங்களின் கூட்டங்களை, ரக்ஷிதும்—காப்பாற்ற, த்வயா-உன்னால், அதிஜ்வாலாகரம்-மிகுந்த ஜ்வாலையைச் செய்கின்றதும், பீகரம்—பயங்கரத்தைச் செய்கின்றதுமான, கரளம்—விஷத்தை, சர்வாமர்த்ய பலாய நௌஷதம்—எல்லாத் தேவர்களுடைய ஓட்டத்துக்கும் நோய்க்கும் மருந்தாயிருக்குமாறு, களே—கழுத்தில், நிக்ஷிப்தம்—வைக்கப்பட்டது; நகளிதம்—உள்ளே விழுங்கப்படவுமில்லை; ந உத்கீர்ணமேவ—வெளியே கக்கப்படவுமில்லை; பரமோபகாரகம்—மேலான உபகாரமாகிய, இதம்—இந்த, ஏகந்து—ஒன்றே, நாலம்வா—உனது அன்பையும் ஆற்றலையும் அறியப்போதாதா? (போதும்).

—சிவானந்தலஹரி,

### கருத்துரை

திருத்தணிகைத் தேவா! மாதர் உறவு நீங்கத் திருவருள் செய்.

## 31

கூந்தல விழ்த்துமு டித்துமி னுக்கிகள்
பாய்ந்தவி ழிக்குமை யிட்டுமி ரட்டிகள்
கோம்புப டைத்தமொ ழிச்சொல்ப ரத்தையர் புயமீதே
கோங்குப டைத்தத னத்தைய ழுத்திகள்
வாஞ்சையு றத்தழு விச்சிலு கிட்டவர்
கூன்பிறை யொத்தந கக்குறி வைப்பவர் பலநாளும்
ஈந்தபொ ருட்பெற இச்சையு ரைப்பவ
ராந்துணை யற்றமு கைக்குர லிட்டவ
ரீங்கிசை யுற்றவ லக்குண மட்டைகள் பொருள்தீரில்
ஏங்கியி டக்கடை யிற்றளி வைப்பவர்
பாங்கக லக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்திலை யெப்படி நற்கதி புக்கிட லருள்வாயே
காந்தள்ம லர்த்தொடை யிட்டெதிர் விட்டொரு
வேந்துகு ரக்கர ணத்தொடு மட்டிடு
காண்டிப அச்சுத னுத்தம சற்குணன் மருகோனே

காங்கிசை மிக்கம றக்கொடி வெற்றியில்
வாங்கிய முக்கனி சர்க்கரை மொக்கிய
கான்கனி முற்கியல் கற்பக மைக்கரி யிளையோனே

தேந்தினை வித்தின ருற்றிட வெற்றிலை
வேங்கைமரத்தெழி லைக்கொடு நிற்பவ
தேன் சொலியைப்புண ரப்புன முற்றுறை
குவைவானந்

தீண்டுக ழைத்திர ளுற்றது துற்றிடு
வேங்கைத னிற்குவ ளைச்சுனை சுற்றலர்
சேர்ந்ததி ருத்தணி கைப்பதி வெற்புறை
பெருமாளே.

## பதவுரை

காந்தள் மலர்த்தொடையிட்டு=சுக்கிரீவனுக்கு காந்தள் மலர் மாலையைச் சூட்டி, எதிர்விட்டு=வாலிக்கு முன்னே போருக்கு அனுப்பி ஒரு குரக்கு வேந்து=ஒப்பற்ற குரங்கரசனாகிய வாலியை, அரணத்தொடும் அட்டிடு=அவன் கவசத்தொடுங்கொன்ற, காண்டிப அச்சுதன்=காண்டீபம் என்னும் வில்லையேந்திய அச்சுதனும், உத்தம சற்குணன்=உத்தமமான நற்குணம் வாய்ந்தவரும் ஆகிய ஸ்ரீராமபிரானுடைய, மருகோனே=திருமருகரே! காங்கிசை மிக்க=உம்மீது விருப்பம் அதிகங் கொண்ட, மறகொடி=வேட்டுவப் பெண்ணாகிய வள்ளியை, வெற்றியில் வாங்கிய=வெற்றி பெற்று ஏற்றுக் கொண்டவரே! முக்கனி=மா, பலா, வாழை என்ற மூவகைப் பழங்களையும், சர்க்கரை மொக்கிய=சர்க்கரையையும் நிரம்பவுண்ணுபவரும், கான்கனி=கானகத்துக் கன்னியாகிய வள்ளியம்மைக்கு, முற்கு இயல்=முன்னர் வந்த, கற்பகம்=கற்பகத்தரு போன்றவரும், மைகரி=கருநிறங்கொண்ட யானை முகவருமான விநாயகரது, இளையோனே=இளையவரே! தேம் தினை வித்தினர்=இனிமையான தினையை விதைத்த வேடர்கள், உற்றிட=வருவதைக் கண்டு, வெற்று இலை வேங்கை மரத்து எழிலைக்கொடு நிற்பவ=வெறும் இலைகளாகவே நிறைந்துள்ள வேங்கை மரத்தின் அழகு விளங்க நின்றவனே! தேன் சொலியை புணர=தேன் போல இனிக்கும் சொற்களை உடைய வள்ளியைச் சேர்வதற்காக, புனம் உற்று உறைகுவை=அந்தத் தினைப் புனத்தைச் சேர்ந்து அங்கு இருந்தவரே! வானம் தீண்டு=ஆகாயத்தைத் தொடுகின்ற. கழை திரள் உற்று அது துற்றிடு=மூங்கிலின் கூட்டத்துக்கு அருகே நெருங்கி நிற்பனவும், வேங்கைதனில்=பொன் போல் ஒளிர்கின்றனவுமான, குவளைசுனை சுற்று அலர் சேர்ந்த=குவளை மலர்கள் சுனையில் சுற்றிலும் மலர்கின்ற தன்மையைச் சேர்ந்த,

திருத்தணிகை பதி வெற்பு உறை=திருத்தணிகைத் தலமாகிய மலையின் மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கூந்தல் அவிழ்த்து முடித்து=கூந்தலின் அழகும் மணமும் மக்கள் காணும் பொருட்டு (வேண்டும் என்றே) அவிழ்த்து முடிக்கும். மினுக்கிகள்=மினுக்குபவர்கள், பாய்ந்த விழிக்கு=பாய்கின்ற கண்களுக்கு, மை இட்டு மிரட்டிகள்=மையையிட்டு மிரட்டுபவர்கள், கோம்பு படைத்த=கோபக் குறிப்புடன் கூடிய, மொழி சொல் பரத்தையர்= வார்த்தைகளைக் கூறுகின்ற பொதுமாதர்கள், புயமீது=தங்களிடம் வந்தவர்களின் தோளின் மீது, கோங்கு படைத்த தனத்தை அழுத்திகள்=கோங்கின் அரும்பு போன்ற கொங்கைகளை அழுத்துபவர்கள், வாஞ்சை உற=அன்பு மிகுதிப்பட, தழுவி=தழுவிக்கொண்டு, சிலுகு இட்டவர்=பின்னர் சண்டையிடுபவர்கள். கூன்பிறை ஒத்த நக குறி வைப்பவர்=வளைந்த பிறை போன்ற நகக்குறியை வைப்பவர்கள், பல நாளும்=பல நாளும், ஈந்தபொருள் பெற=கொடுத்துவந்த பொருளைப் பின்னும் பின்னும் பெறுதற்கு வேண்டி, இச்சை உரைப்பவர்=தங்கள் விருப்பத்தை எடுத்துக் கூறுபவர்கள், ஆம் துணை அற்ற=தங்கட்கு ஆகும் விருப்பம் நிறைவேறும் வழியற்றபோது, அழுகை குரல் இட்டவர்=அழுகைக் குரலைக் காட்டுபவர்கள், ஈங்கிசை உற்ற அவல குணமட்டைகள்=இம்சை செயும் குணம் படைத்த பயனற்ற அறிவிலிகள், பொருள் தீரில்=பொருள் தீர்ந்து போனால், ஏங்கி இட கடையில் தள்ளிவைப்பவர்=மனம் ஏங்குமாறு வீட்டின் வெளிப்புறத்தில் தள்ளிவைப்பவர்கள் ஆகிய பொது மகளிரது, பாங்கு அகல=நட்பு நீங்குமாறு, கருணை கழல் பெற்றிட= உமது கருணைத் திருவடியை அடியேன் பெறும்படி, சந்திலை=தேவரீர் தரவில்லையே! எப்படி நல்கதி புக்கிடல்=அடியேன் எப்படி நல்ல கதியில் புகுதல் உண்டாகும்? அருள்வாயே=அருள் செய்வீராக!

## பொழிப்புரை

சுக்ரீவனுக்குக் காந்தள் மலர் மாலையைச் சூட்டி வாலியுடன் எதிர்த்துப் போர் புரியுமாறு விட்டு, ஒப்பற்ற வானர வேந்தனாகிய வாலியை அவனுடைய கவசத்துடன் அழிக்க, காண்டிபம் என்ற வில்லையேந்திய அச்சுதரும், உத்தமமான நற்குணம் பொருந்தியவருமாகிய ஸ்ரீ ராமபிரானுடைய திருமருகரே! உம்மீது விருப்பம் வைத்த குறமகளாகிய வள்ளியை வெற்றியுடன் ஏற்றருளிய இளையவரே! மா, பலா, வாழை யென்ற முக்கனிகளையும் சர்க்கரையையும் நிரம்ப உண்ணுபவரும், காட்டில் கன்னியாகிய வள்ளியின் முன்னர் வந்தவரும் கற்பகம் போன்றவரும் கரிய யானை முகத்தை யுடையவரும் ஆகிய விநாயகமூர்த்தியின் இளையவரே! இனிய தினையை விதைத்த வேடர்கள் வருவதையறிந்து, தனி வேங்கை மரமாகி அழகாக நின்றவரே! தேன் போன்ற இனிய சொற்களை

யுடைய வள்ளியைச் சேரும் பொருட்டு அந்தத் தினைப் புனத்தை யடைந்து அங்கு இருந்தவரே! விண்ணளவு ஓங்கி யுள்ள மூங்கிலின் கூட்டத்துக்கு அருகில் நெருங்கி பொன் போல் ஒளிர்கின்ற குவளை மலர்கள் சுனையெங்கும் மலர் கின்ற திருத்தணிகை மலையின் மீது வாழ்கின்ற பெருமிதம் உடையவரே! கூந்தலை அவிழ்த்து முடித்து மினுக்குபவர்கள்; பாய்கின்ற கண்களுக்கு மையிட்டு மிரட்டுபவர்கள்; கோபக் குறிப்பான சொறகளைச் சொல்லுகின்ற பொது மாதர்கள்; தம்மை அணுகினவர்களின் தோள்மீது கோங்கின் அரும்பு போன்ற கொங்கைகளை அழுத்துபவர்கள்; அன்பு மிகுதிப்பட தழுவிப் பின் சண்டையிடுபவர்கள்; வளைந்த பிறைபோன்ற நகக்குறி வைப்பவர்கள்; பல நாளும் கொடுத்து வந்த பொரு ளைப் பின்னும் பெறுதற்கு வேண்டி, தங்கள் விருப்பத்தை எடுத்துக் கூறுபவர்கள்; அவ்வாறு தங்கட்கு ஆன விருப்பம் நிறைவேருத போது அழுகைக் குரலைக் காட்டுபவர்கள்; இம்சை செய்யும் பயனற்ற குணமுடைய அறிவிலிகள். பொருள் வரண்டு விட்டால் அவர்கள் ஏற்குமாறு வாயிலுக்கு வெளியே தள்ளி வைப்பவர்கள்; ஆகிய விலைமகளிரது நட்பு நீங்குமாறு கருணையுடைய உமது திருவடியை அடியேன் பெறுமாறு தந்தீரில்லையே? எப்படி அடியேன் நற்கதி புகு வேன்? அருள் புரிவீராக.

## விரிவுரை

**கூந்தலவிழ்த்து முடித்து மினுக்கிகள் :—**

கூந்தலின் வாசனை வெளிப்படும் பொருட்டும், அதன் அழகு தோன்றுமாறும் அதனை அவிழ்த்து அப்படிக் கோதி, அழகாக முடித்து மினுக்குபவர் பரத்தையர்.

**பாய்ந்த விழி :—**

அம்பு வேகமாகப் பாய்வதுபோல், இளைஞர்களின் உள்ளத்தில் பாய்ந்து தைக்கின்ற கண்கள்.

**மையிட்டு மிரட்டிகள் :—**

மையிடுவதனல் கண் மேலும் அழகு பெறும். மை படிந்த கண்ணுல் ஆடவரை மிரட்டிப் பார்த்து வசஞ் செய் வார்கள்.

**கோம்பு படைத்த மொழிச்சொல் பரத்தையர் :—**

கோம்பு—சினக் குறிப்பு, கோபக் குறியுடன் பேசி மென் மேலும் வசஞ் செய்து மயக்குவர்.

**ஈங்கிசை :—**

இம்சை என்ற சொல் ஈங்கிசை என வந்தது.

**உற்றவலக் குணமட்டைகள் :—**

உற்ற அவல குண என்று பிரிக்கவும். அவலம்—பயன் அற்ற குணம்.

**பாங்ககல :—**

பாங்கு—நட்பு. பொதுமகளிரின் நட்பு அகலுமாறு உமது பாதமலரைத் தந்தருள்வீர்.

**காந்தள்மலர்த் தொடையிட்டு :—**

வாலியும் சுக்ரீவனும் போர் செய்தபோது, அடையாளந் தெரியும் பொருட்டு சுக்ரீவனுக்கு மலர்மாலையிட்டு அனுப் பினார் இராமர்.

**காங்கிசை :—**

காங்கிசை—விருப்பம். இது வட சொல்.

**கான்கனி :—**

கன்னி என்பது கனி என வந்தது. காட்டில் வாழ்ந்த வள்ளியாகிய கன்னி.

**வேங்கைமரத் தெழிலைக் கொடு நிற்பவ :—**

முருகன் வேங்கை மரமாக நின்றார். அது காட்டு மரமன்று. கல்வி ஞானமில்லாத வள்ளிக்குக் கல்வி ஞானம் விளையும் பொருட்டு அபர ஞானமேயாகிய மரம்.

> ஆங்கது காலை தன்னில் அடிமுதல் மறைகளாக
> ஓங்கிய நடுவண் எல்லாம் உயர்சிவ நூலதாகப்
> பாங்கமர் கவடு முற்றும் பல்கலையாகத் தானோர்
> வேங்கையின் உருவமாகி வேற்படை வீரன் நின்றான்.

## கருத்துரை

தணிகேசா! மாதர் உறவு அற உன் பாதமலரைத் தந்தருள்க.

## 32

சூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டிமுலை
கோடா லழைத்துமல ரணைமீதே
கோபா விதழ்ப்பருக மார்போ டணைத்துகணை
கோல்போல் சுழற்றியிடை யுடைநாணக்

கார்போல் குழற்சரிய வேவா யதட்டியிரு
காதோலை யிற்றுவிழ விளையாடும்
காமா மயக்கியர்க ளூடே களித்துநம
கானா ருறைக்கலக மொழியாதோ

வீராணம் வெற்றிமுர சோடே தவிற்றிமிலை
வேதா கமத்தொலிகள் கடல்போல
வீறுய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்
வேலா திருத்தணியி லுறைவோனே
மாரோ னிறக்கநகை தாதா திருச்செவியில்
மாபோ தகத்தையருள் குருநாதா
மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு
மாலோ டணைத்துமகிழ் பெருமாளே.

## பதவுரை

**வீராணம்**=வீராணம் என்ற வாத்தியம், வெற்றி முரசோடு= வெற்றி முரசுடன், தவில்=தவில் வாத்தியம், திமிலை=திமிலை என்ற பறை, வேத ஆகமத்து ஒலிகள்=வேதம் ஆகமம் இவற்றின் ஒலிகள்; கடல்போலே=இந்த எல்லா ஒலிகளும் சேர்ந்து கடல் போல, வீறு ஆய் முழக்கவரு=மிகச்சிறப்பாக முழக்கிக்கொண்டு எதிர்த்து வந்த. சூரார் இறக்கவிடும்=சூரர்கள் இறக்குமாறு செலுத்திய, வேலா= வேலாயுதக் கடவுளே! திருத்தணியில் உறைவோனே=திருத்தணிமலையில் உறைகின்றவரே! மாரோன் இறக்க நகை=மன்மதன் இறக்கும்படி சிரித்த, தாதா திரு செவியில்=தந்தையாகிய சிவபெருமானுடைய திருச்செவியில், மாபோதகத்தை அருள்=சிறந்த ஞானோபதேசத்தை அருளிய. குருநாதா=குருநாதரே! மாலோன் அளித்த= திருமால் பெற்ற, வளியார்=வள்ளியம்மையார், மால் களிப்ப=அன்புடன் மகிழ, வெகுமாலோடு அணைத்து மகிழ்=மிகுந்த அன்புடன் தழுவி மகிழ்கின்ற. பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! கூர் வேல் பழித்த விழியாலே மருட்டி=கூரிய வேலாயுதத்தைப் பழித்த கண்களினாலே மயக்குவித்து, முலைகோட்டால் அழைத்து=தனமாகிய மலையினால் வரவழைத்து, மலர் அணை மீதே=மலர்ப்படுக்கையின் மீது, கோபா இதழ் பருக=இந்திர கோபம் என்ற தம்பலப் பூச்சியைப் போல் சிவந்துள்ள அதரத்தைப் பருகும்படி, மார்போடு அணைத்து=மார்புடன் சேர்த்துத்தழுவி, கணைகோல் போல் சுழற்றி= கண்களை அம்புபோல் சுழற்றி, இடை உடை நாண=இடையில் உள்ள ஆடை நெகிழவும், கார்போல் குழல் சரியவே=மேகம் போன்ற கரிய கூந்தல் சரியவும். வாய் அதட்டி=வாய் அதட்டும் சொற்களைக் கூறவும், இரு காது ஓலை இற்று விழ=காதில் உள்ள ஓலைகளும் கழன்று விழவும், விளையாடும்=விளையாடுகின்ற, காமா மயக்கியர்கள் ஊடே= காம மயக்கத்தைத் தருகின்ற பொதுமகளிருடன், களித்து=நான் களிப்புற்று, நம கான் ஊர் உறை கலகம்=இயமனுடைய காடுபோல் அச்சந்தரும் நரகில் சேர்ந்து உறைகின்ற குழப்பம், ஒழியாதோ= அடியேனை விட்டு விலகாதோ?

## பொழிப்புரை

வீராணம், வெற்றி முரசு, தவில், திமிலை, வேதாகம ஓசைகள் இவைகள் கடல்போல் பெருமையுடன் ஒலிக்க, எதிர்த்து வந்த சூராதி யவுணர்கள் மாயுமாறு விடுத்த வேலாயுதரே! திருத்தணிகை மலைமீது எழுந்தருளியிருப்பவரே! மன்மதன் பொடியாகச் சிரித்துப் பார்த்தருளிய சிவபெருமானுடைய திருச்செவியில் சிறந்த ஞானோபதேசத்தையருளிய குருநாதரே! திருமாலின் மகளாகிய வள்ளி நாயகி அன்புடன் மகிழுமாறு மிகுந்த அன்புடன் தழுவி மகிழ்கின்ற பெருமிதம் உடையவரே! கூரிய வேலைப் பழித்த கண்களால் மயக்கி, மலையனைய தனங்களால் அழைத்து, மலர் நிறைந்த படுக்கையின் மீது, தம்பலப் பூச்சியைப் போல் சிவந்த இதழைப் பருக, மார்புடன் இறுகத் தழுவி, கண்களை அம்புபோல் சுழற்றி, இடையின் உடை நெகிழவும் மேகம் போன்ற கரிய கூந்தல் சரியவும், வாய்ச் சொற்களால் அதட்டிப் பேசியும், இரு காது ஓலைகள் கழன்று விழவும் விளையாடுகின்ற காம மயக்கத்தை ஊட்டுகின்ற பொது மாதர்களுடன் களிப்புற்று, இயமனுடைய ஊராகிய காடுபோல் பயங்கரமான நரகில் உறைகின்ற கலக்கம் அடியேனை விட்டு அகலாதோ?

## விரிவுரை

**கோபர இதழ்:—**

கோபம்—இந்திர கோபம். இது சிவந்த பூச்சி. இது பெண்களின் இதழுக்கு உவமிக்கப்படும்.

**கணை:—**

கண்ணிணை என்பது கணையென வந்தது.

**சமன் கானூர் உறைக் கலகம்:—**

சமனுடைய உலகத்தில் உள்ள நரகங்கள் கானகம்போல் அச்சத்தைத் தருவன.

**வீராணம்:—**

வீராணம் என்பது ஒரு வகையான தோற்கருவி.

**வெற்றி முரசு:—**

காட்டில் தன் விருப்பம்போல் திரிகின்ற எருது, வேங்கையைத் தன் வச்சிரம் போன்ற கொம்பினால் குத்திக் கொல்லும் ஆற்றல் படைத்ததாக இருக்கும் அப்படி வேங்கையைக் கொன்ற ஒரு வீர எருது வாழ்நாள் முடிந்து இறந்தபின் அதன் தோலைக் கொண்டு சந்தன மரத்தில் செய்த வாத்தியம் முரசு எனப்படும் அவ்வகை முரசை முற்காலத்து மன்னர்கள் கட்டிலில் வைத்து மலரிட்டுப் பூசிப்பார்கள். பகைவரை வென்றபின் அம்முரசை முழக்குவார்கள். அதற்கு வெற்றி முரசு என்று பெயர்.

"முரசறைய நிசிசரரை வென்றிந்திரற் கரசளித்த பெருமாளே."

(அகரமுதலென) திருப்புகழ்.

**மாரனிறக்க நகை :—**

மாரன்—மன்மதன். இவன் எரிய எம்பெருமான் சிரித்துத் தமது திருவிழியால் சிறிது பார்த்தார். மன்மதன் சாம்பரானான்.

**மாலோனளித்த வளியார் :—**

வள்ளி என்பது வளி என வந்தது.

திருமால் திருப்பாற்கடலில் அரவணையின் மீது பள்ளி கொண்டிருந்தார். தாருகாவனத்தில் சிவபெருமான் முயலகனை மிதித்து ஆடிய திருநடனத்தை எண்ணி எண்ணி இரு கண்களிலும் ஆனந்த நீர் சொரிந்தார்.

கண்களின் அடியில் வருவது அழுகை நீர். அது உப்புக் கரிக்கும்.

கண்களின் நுனியில் வருவது ஆனந்த நீர். அது இனிக்கும்.

திருமாலின் ஆனந்தக் கண்துளியில் இரு பெண்மணிகள் தோன்றினார்கள். அமுதவல்லி, சுந்தரவல்லி என்ற அவ்விருவரும், முருகனை வேண்டி அரும்பெருந் தவஞ் செய்தார்கள். அப்பெருமானுடைய ஆணையின்படி, இளையாளாகிய சுந்தரவல்லி, வள்ளிமலையில் மான் வயிற்றில் தோன்றி வள்ளி பிராட்டியென வளர்ந்து வடிவேலிறையை மணஞ் செய்து கொண்டார்.

## கருத்துரை

தணிகை மேவுந் தனிப்பெருங் கடவுளே! மாதர் வசமாகி நரகிடைப் புகுதாவண்ணம் அருள் செய்யும்.

## 33

கொந்து வார்குர வடியினு மடியவர்
சிந்தைவாரிச நடுவினு நெறிபல
கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா
கொங்கி லேர்தரு பழநியி லறுமுக
செந்தில் காவல தணிகையி லிணையிலி
கொந்து காவென மொழிதர வருசம யவிரோத

தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
சந்தி யாதது தனதென வருமொரு
சம்ப்ரதாயமு மிதுவென வுரைசெய்து விரைநீபச்
சஞ்ச ரீகரி கரமுரல் தமனிய
கிண்கி ணீமுக விதபத யுகமலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

சிந்து வாரமு மிதழியு மிளநவ
சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
செஞ்ச டாதரர் திருமக வெனவரு முருகோனே
செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்
செம்பொ னூபுர கமலமும் வளையணி புதுவேயும்

இந்து வாண்முக வனசமு ம்ருக்மத
குங்கு மாசல யுகளமு மதுரித
இந்த ளாம்ருத வசனமு முறுவலு மபிராம
இந்த்ர கோபமு மரகத வடிவமு
மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
மிந்த்ர நீலமு மடலிடை யெழுதிய பெருமாளே.

## பதவுரை

சிந்து=நீரையும், ஆரமும்=ஆத்திமலரையும், இதழியும்=கொன்றைமலரையும், இள நவ சந்த்ரரேகையும்=இளமையும் புதுமையும் உடைய பிறைச்சந்திரனையும், அரவமும்=பாம்பையும், அணிதரு செம்சடாதரர்=தரித்துள்ள சிவந்த சடையையுடைய சிவபெருமானுடைய, திருமகவு எனவரும்=அழகிய குழந்தை என அவதரித்த, முருகோனே=முருகக் கடவுளே! செண்பக அடவியினும்=செண்பகத்தருக்கள் நிறைந்த வனத்திலும், இதணிலும்=பரண்மீதிலும், உயர் சந்தன அடவியிலும்=உயர்ந்த சந்தனமரங்கள் மிகுந்த வனத்திலும், உறை குறமகள்=வாசம் பண்ணுகின்ற வள்ளியம்மையாருடைய, செம்பொன் நூபுர கமலமும்=சிவந்த பொன்னாலாகிய சிலம்பை யணிந்திருக்கின்ற தாமரை போன்ற திருவடிகளையும், வளை யணி புதுவேயும்=வளையல்களை யணிந்துள்ள புதிய மூங்கிலைப் போன்ற கரங்களையும், இந்து வாள் முக வனசமும்=சந்திரனை யொத்த ஒளிமிக்க திருமுகமலரையும், ம்ருகமத குங்கும அசல யுகளமும்=கஸ்தூரியும் குங்குமப் பூவுந் தரித்துள்ள இரண்டு தனபாரங்

கலையும், மதுரித இந்தள அம்ருத வசனமும்=இனிமை வாய்ந்த யாழ் போலவும் அமிர்தம் போலவும் தித்திக்கின்ற வசனத்தையும், முறுவலும்=இளநகையையும், அபிராம இந்த்ர கோபமும்=அழகிய சிவந்த அதரத்தையும், மரகதவடிவமும்=மரகதம் போன்ற பச்சை வடிவத்தையும், இந்த்ரசாபமும்=வானவில் போன்ற புருவங்களையும், இருகுழையோடு பொரும் இந்த்ர நீலமும்=இரண்டு குழைகளோடு போர் செய்வது போல் நீண்ட நீலமணியனைய கண்களையும், மடல் இடை எழுதிய=மடற்பரியில் எழுதிய, பெருமாளே=பெருமை மிக்கவரே! கொந்துவார் குரவு அடியினும்=பூங்கொத்துகளுடன் நீண்டுள்ள குராமரத்து அடியிலும், அடியவர் சிந்தைவாரிச நடுவினும்=அடியார்களுடைய இதய தாமரை யிடையிலும், நெறிபல கொண்ட வேத நல் முடிவிலும் மருவிய=பல நெறிகளைக் கொண்ட மறைகளில் நல்ல முடிவிலும் விளங்குகின்ற, குருநாத=குருநாதரே! கொங்கில் ஏர் தரு பழநியில் அறுமுக=கொங்குநாட்டில் அழகுபெற்ற பழநியம் பகுதியில் எழுந்தருளியுள்ள ஆறுமுகக் கடவுளே! செந்தில் காவல=திருச்செந்தூரில் விளங்குகின்ற காப்பதில் வல்லவரே! தணிகையில் இணையிலி=திருத்தணியில் மேவுகின்ற இணையில்லாதவரே! கொந்து கா என மொழி தர வரு=கூட்டமாகத் திரண்டு "கா" என்று கதறிய வண்ணமாகத் தருக்கித்துக்கொண்டு வருகின்ற, சமய விரோத தந்த்ர வாதிகள் பெற அரியது=அநேக யுக்திகளைக்கொண்டு விரோதிக்கின்ற சமயவாதிகளால் பெறுதற்கு அரியதும், பிறர் சந்தியாதது=அன்னியர்கள் சந்திக்க முடியாததும், தனது எனவரும் ஒரு சம்ப்ரதாயமும் இது என உரைசெய்து=தனக்கே உரியதாகிய ஒப்பற்ற பரம்பரையாக வரும் பொருள் இது என்று அடியேனுக்கு உபதேசித்து, விரை நீப=வாசனை பொருந்திய கடப்பமலர் மாலை புனைந்ததும், சஞ்சரீகரிகரம் முரல்=வண்டுகள் ஒலிப்பதும், தமனிய கிண்கிணீமுக=பொன்னாலாகிய கிண்கிணிகளைத் தரித்திருப்பதும், இத=இதத்தைச் செய்வதுமாகிய, பதயுகமலர் தந்த=இரு திருவடித் தாமரைகளைத் தந்த, பெரு அருள் கனவிலும் நனவிலும்=தேவரீருடைய பெரிய அருளை அடியேன் கனவிலும்நனவிலும், மறவேனே=மறக்க மாட்டேன்.

## பொழிப்புரை

கங்காநதியையும், ஆத்தி மலரையும், கொன்றை மலரையும், இளமையும் புதுமையும் உடைய பிறைச் சந்திரனையும், பாம்பையும் அணிந்துள்ள சிவந்த சடைமுடியுடைய சிவபெருமானது திருக்குமாரராக வந்த முருகப் பெருமானே! செண்பக வனத்திலும், தினைப்புனத்தில் அமைத்த பரண் மீதிலும், உயர்ந்த சந்தன வனத்திலும் உறைகின்ற வள்ளியம்மையாரது, சிவந்த பொற்சிலம்பு புனைந்த பாதமலரையும், வளையல் அணிந்த மூங்கில் போன்ற கரங்களையும், சந்திரனை

யொத்த ஒளி மிகுந்த திருமுக மலரையும், கஸ்தூரியையும் குங்குமப் பூவையும் தரித்துள்ள மலைபோன்ற இரண்டு தன பாரங்களையும், இனிமையான யாழ் போன்ற அமிர்த வசனத்தையும், இளம் புன்னகையையும், அழகிய சிவந்த அதரத்தையும், மரகத நிறமுடைய உருவத்தையும், வானவில் போன்ற புருவங்களையும் இரண்டு குழைகளுடன் போர் செய்யச் செல்லுவது போல் நீண்ட நீலமணியொத்த கண்களையும், மடல் குதிரையில் எழுதிய பெருமிதம் உடையவரே! பூங்கொத்துக்கள் நிறைந்த நீண்ட குராமர வடியிலும், அடியார்களுடைய இதய தாமரையிலும், பல நெறிகளைக் கூறுகின்ற வேத முடிவிலும் விளங்குகின்ற குருநாதரே! கொங்கு நாட்டில் அழகுடன் திகழும் பழநி மலையில் வாழும் ஆறுமுகக் கடவுளே! திருச்செந்திலம்பதியில் வீற்றிருக்கும் காப்பதில் வல்லவரே! திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள இணையில்லாதவரே! கூட்டமாகத் திரண்டு "கா" என்று கதறிக் கொண்டு தருக்கம் புரிந்து விரோதித்து யுக்தி வாதங்கள் பேசும் சமயவாதிகளால் பெறுவதற்கு அரியதும், அன்னியர்கள் அணுக முடியாததும் பரம்பரையார்க்குத் தனக்கே உரியதாக வருவதுமாகிய உண்மைப் பொருள் இது என்று அடியேனுக்கு உபதேசித்து, கமழ்கின்ற கடப்ப மாலையும் வண்டினங்களின் இனிய ஒலியும், பொன்னாலாகிய கிண்கிணிகளும் விளங்க, உயிர்களுக்கு இதத்தைச் செய்யும் திருவடிகளைத் தந்த தேவரீரது பெரிய திருவருளை அடியேன் கனவிலும் நனவிலும் மறக்கமாட்டேன்.

## விரிவுரை

**கொந்துவார் குரவடியினும் :—**

கொந்து—பூங்கொத்து; வார்—நீளம். குரவு என்பது ஒரு மரம். குராமரத்தின் அடியில் முருகப் பெருமான் எழுந்தருளியிருப்பர். திருவிடைக்கழி என்ற தலத்தில் முருகவேள் குராமரத்தின் கீழ் விளங்குகின்றார் என்பதை அத்தலத் திருப்புகழால் அறிக.

"செழுமலர்ப் பொழிற் குரவமுற்றபொற்
றிருவிடைக்கழிப் பெருமாளே" —(பகருமுத்)

"திருக்குராவடி நிழல்தனி லுறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே"
—(மருக்குலா)

பழநியம்பதியில் இடும்பனுக்கு அருள் புரிந்த மூர்த்தி குராவடிவேலர் எனப்படுவார்.

குராமலர் முருகனுக்கு உகந்த மலர் ஆகும். அடியிற் கண்ட அமுத வாக்குகளால் இதனை அறிக.

"விழைவு குராப்புனை யுங்குமார" —(விரகற) திருப்புகழ்.

"குராப்புனை தண்டையந் தாள் தொழல்வேண்டும்" —அலங்காரம்.

"அடவியில் விளவு தளவளர் துளவு குராமகிழ்
கோடல் பாடலளிமுரல் செச்சைய
லங்கல் செங்கடம்பு நேசித்தணிந்தன" —புய வகுப்பு.

**அடியவர் சிந்தைவாரிச நடுவினும் :—**

வாரி—தண்ணீர். ஜம்—பிறப்பு; தண்ணீரில் பிறப்பதனால் தாமரைக்கு வாரிஜம் என்று ஒரு பேருண்டு. இடையறுது நினைந்து நினைந்து உருகும் அடியவர் உள்ளக்கமலமிசை இறைவன் எழுந்தருளியிருப்பன்.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதையமு மணக்குமிரு பாதச்சரோ ருகனும்"
—வேடிச்சி காவலன் வகுப்பு.

"மருவு மடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமான் காண்"
—(திருமகளுலாவு) திருப்புகழ்.

"துரியநிலையே கண்ட முத்தரித யாகமல
மதனில் விளையாநின்ற புத்தமிர்த போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபதம்" —(சுருதிமுடி) திருப்புகழ்.

**நெறிபல கொண்ட வேத நன்முடிவினும் :—**

வேதத்தில் கர்ம நெறி, பக்தி நெறி, யோக நெறி, ஞான நெறி முதலிய பல நெறிகள் கூறப்படுகின்றன. ஒரு பெரிய ஊர், பெரிய மாளிகை யென்றால் பல வழிகள் இருப்பது இயற்கை. ஆகவே முத்தி வீட்டிற்குச் செல்லும் நெறிகளும் பல. "சேதாமபலதுறை" என்று கந்தரந்தாதியிலும் அடிகள் கூறியருளினார். ஏன்? ஒரு நெறியிருந்தால் என்ன? என்ற வினா எழும். ஒரு பெரிய கலாசாலையில் வகுப்பு ஒன்றாக இருக்க லாமோ? பல வகுப்புக்கள் இருக்க வேண்டும். ஏன்? மாணவர் களது அறிவின் பரிபக்குவத்துக்குத் தக்கவாறு வகுப்புக்கள் பல இருக்க வேண்டும் என்க. அதுபோல ஆன்மாக்களின் பரிபக்குவத்திற்குத் தக்கவாறு நெறிகளும் பல இருத்தல் வேண்டும். வேதம் என்பது அறிவுநூல் எனப்படும். "வித்" என்ற பகுதியடியாக அச்சொல் பிறந்தது.

வேத முடிவு உபநிஷதம். வேத முடிவில் விளங்கும் பரம் பொருள் வெற்றிவேற்பரமன் என்க.

**கொங்கிலோர்தரு பழநி :—**

பழநி கொங்கு நாட்டின் திலகமாக விளங்குவது. கொங்கு—வாசனை. ஞானமணங் கமழ்கின்ற நாட்டில் ஞான

பண்டிதன் எழுந்தருளியிருக்கின்றனன். காசியின் மீறியது பழநியம்பதி. இகபர நலன்களை எளிதில் தரவல்ல தலம் அது. என்றும் ஒன்றுபோல் அடியார்கள் திரளாக வந்து வழிபட்டு வரம் பெறுவர்.

**செந்தில் காவல :—**

திருச்செந்தூர் முருகவேள் சூரசங்காரத்தின் பொருட்டுச் சென்று வீரவாகு தேவரைத் தூது அனுப்பி விட்டுத் தங்கியிருந்த திருத்தலம். கடற்கரையில் இயற்கையழகு கொலு வீற்றிருப்பது போல் கண்டார்களது கண்ணையுங் கருத்தையும் ஒருங்கே கவரவல்லதாய் விளங்குகின்றது.

கடலைக் கடப்பதற்கு இன்றியமையாத கருவியாக இருப்பது தோணி; பிறவிப் பெருங்கடலில் விழுந்து கரை காணாது கலங்கி நிற்கின்ற ஆன்மகோடிகளுக்கு முருகவேளுடைய திருவடியே சிறந்த தோணி (புணை) யாகும். தோணியப்பருடைய புதல்வர் அன்றோ அவர். அவருடைய திருவடி பிறவிக் கடலுக்குப் புணையென்பதை அடிகள் சீர்பாத வகுப்பில் உரைத்தருளினார்.

"உறவு முறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி ஏறவிடும் உறுபுணையும்"
—சீர்பாத வகுப்பு.

தன்னைச் சிந்திக்கும் அடியவர்களைத் தமது திருவடியாகிய ஓடத்தைக் கொண்டு பிறவிப் பெருங்கடலைக் கடக்குமாறு செய்து முத்திக் கரை சேர்த்து அருளுவதனால் அப்பரம பதியை "ஓடக்காரன்" என்றும் அடிகள் அறிவிக்கின்றனர்.

"யாது நிலையற்றலையும் ஏழுபிறவிக்கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக்காரனும்" —வேளைக்காரன் வகுப்பு

எனவே பிறவிப் பெருங்கடலைக் கடக்க எண்ணும் அடியவர்கள் முருகவேளுடைய திருவடியாகிய ஓடத்தில் ஏறுவதற்கு ஒரு துறை முகம் வேண்டும் அல்லவா? அத்துறைமுகந்தான் திருச்செந்தூர் என்று அறிக.

"செந்திலம்பதியாகிய கடற்கரையில் வந்து கந்தவேளாகிய எனது சந்நிதியை அடைந்த மாத்திரத்திலேயே அடியவர்களைப் பிறவிப் பெருங்கடலைத் தாண்ட வைப்பேன்" என்ற குறிப்பை யுணர்த்தும் பொருட்டே ஆறுமுகப் பரமன் "அலைவாய்" என்ற அந்த அரிய தலத்தில் இடையறாது இனிது வீற்றிருக்கின்றான். இதனை, ஆதிசங்கரரும் உரைக்கின்றனர்.

யதா சந்நிதானம் கதாமாநவா மே
பவாம் போதி பாரம் கதாஸ்தே ததைவ

இதி வ்யஞ்சயன் சிந்து தீரே ய ஆஸ்தே
தமீடே பவித்ரம் பராசக்தி புத்ரம். —சுப்பிரமணிய புஜங்கம்.

பெருவேலை யோரத்தி லேபாவ நீக்கும்
பிரசித்தி சேர்சித்தர் வாழ்கந்த வெற்பில்
ஒருசோதி வடிவோடு குகைமேவு செந்தூர்
உயிருக்கொ ருயிர்செம்பொ னடிபற்று வோமே.
(திரு. கு. நடேசக்கவுண்டர் P.O L. மொழி பெயர்ப்பு.)

காவலன்—காப்பதிலே வல்லவன். தொழுது - வழிபடு மடியர் காவற்காரப் பெருமாள் ஆதலின் செந்தில் காவல என்று கூறியருளினூர்.

**தணிகையில் இணையிலி :—**

தணிகை மிகச் சிறந்த திருத்தலம். வள்ளியம்மையாரைத் திருமணம் புரியும் பொருட்டு இறைவன் வந்து தங்கியிருந்த அருமையுடையது.

"புவிக்கு உயிராகிய தணிமலை" என்று அடிகளார் புகல்கின்றனர். வந்து வழிபடும் அடியவர் வினைகளைத் தணியச் செய்யவல்ல மகிமையுடைய திருத்தலம் ஆதலின் இது தணிகை எனப் பெற்றது.

அடிகளார் இத்திருப்புகழில் மூன்று தலங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். பழநி, செந்தில், தணிகையென்பன மனிதனுடைய உடம்பில் எழுபத்தீராயிரம் நரம்புகள் இருக்கின்றன. அவற்றுள் சிறந்தவை பத்து நாடிகள். அவற்றுள் சிறந்தவை மூன்று நாடிகள்; இடை, பிங்கலை, சுழுமுனை என்பன என்று அறிக. இவைகள் சூரிய நாடி, சந்திரநாடி, அக்கினி நாடிகளாகும். இந்த உலகிற்கு இடைநாடி தணிகை; சுழுமுனை நாடி பழநி; பிங்கலை நாடி செந்தில் ஆகும்.

இடை பிங்கலையில் செல்லும் பிராணவாயுவை யோக நெறியினுல் மறித்து சுழுமுனை நாடி வழியாகச் செலுத்துபவர் யோகிகள். சுழுமுனை நாடித்தலம் பழநியாதலின் அது யோகத் தலம் என உணர்க.

**கொந்துகாவென......தந்த்ரவாதிகள் பெற அரியது :—**

சமய வாதிகள் தத்தம் சமயமே சிறந்தது என்று கதறிப் பதறி கலகமிடுவார்கள். அவர்கள் உண்மைப் பொருளை உணராதொழிவர்.

ஆதலினுல் விபரீதத்தை விளைவிக்கும் சமய கலைகளும் போதும் போதும் என்று அடிகள் பிறதொரு பாடலில் கூறுகின்றனர்.

"விபரித சமய கலைகளு மலமலம்" —(அருவமிடை ) திருப்புகழ்.
அலம்—போதும்.

**பிறர் சந்தியாதது :—**

அன்பு நெறியினை யறியாதவர்களைப் பிறர் என்று சுருக்கமாகக் கூறிய அழகு மிகவும் சிறப்புடையது. சிவநெறியே தவநெறியாகும். அத்தெய்வ நெறியே உய்யு நெறியென உணராதார் பிறர் எனப்படுவர் அவர்கள் இத்திருவளர் விளக்கத்தை ஒருபோதும் அணுக இயலாதவர்களாகின்றனர். இவர்களையே மணிவாசகர் "முத்திநெறி யறியாத மூர்க்கர்" என்று மொழிகின்றனர்

**தனதெனவருமொரு சம்ப்ரதாயம் :—**

சிவநெறிக்கே உரியதாகிய தனிமை; வேறு ஒன்றுனும் பொருந்த முடியாதது. அத்தகைமை வழிவழியாக வருவது சந்தானம் என்பா. அதுவே சம்ப்ரதாயம் எனப்படுவது இந்த பரம்பரையைத்தான் வடலூர் இராமலிங்க அடிகள் "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு" என்று இயம்புகின்றனர்.

தங்களாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ?"
—(ஐந்து பூதமு) திருப்புகழ்.

**இதுவென உரைசெய்து :—**

அருணகிரிப் பெருமானுக்கு அறுமுகப் பெருமான் குருமூர்த்தமாக எழுந்தருளி இதுதான் உண்மைப் பொருள் என்று விளக்கமாக உபதேசித்தருளினார். சுவாமிமலைத் திருப்புகழில் அடிகளார் முருகவேளை நோக்கி, "இதுதான் உண்மைப் பொருள் என்று அடிமைக்கு உபதேசிக்க வேண்டும்" என்று முறையிட்டனர்

"கருதி யொரு பரமபொருள் ஈது என்று என்
செவியிணையி னருளி யுருவாகி வந்த என்
கருவினையொ டருமலமு றீறுகண்டு"
—(ஒருவரையும்) திருப்புகழ்.

அதுபடியே கருதுவார் கருத்தறிந்து முடிக்குங் கந்தவேள் அடிகளுக்கு உபதேசித்தருளினார்.

**பதயுகமலர் தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே —**

அருணகிரிநாதருக்கு ஆறுமுகக்கடவுள் வயலூர் என்னுந் திருத்தலத்திலே மயில்மீது காட்சிதந்து பாதகமலத்தைத் தீர்க்கும் பாத கமலத்தைத் தந்தருளினார்.

"வயலி நகரியி லருள் பெறல் மயிலிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனோ"
—(குருவுமடியவு) திருப்புகழ்.

முருகவேள் திருவடி தேவருக்கும் மூவருக்கும் மற்ற யாவருக்கும் எட்டாதது. அத்தகைய அருட்பதம் அருணகிரியாருக்கு எளிதில் கிடைத்தது.

"அரிப் பிரம ரளப்பரிய பதக்கமலம்" —(குறிப்பரிய) திருப்புகழ்.

"சுருதி மறைக ளிருநாலு திசையிலதிபர் முநிவோர்கள்
துகளி லிருடி எழு பேர்கள் சுடர்மூவர்
சொலவின் முடிவின் முகியாத பகுதிபுருடர் நவநாதர்
தொலைவிலுடுவி னுலகோர்கள் மறையோர்கள்
அரிய சமய மொரு கோடி அமரர் சரணர் சதகோடி
அரியு மயனு மொருகோடி யிவர்கூடி
அறிய அறிய அறியாத அடிகள்" —திருப்புகழ்.

"அண்டத்திறைவன் பொன்முடிக்கும் அமலக்கமலன் மணிமுடிக்கும்
அமரர்முனிவர் தலைகளுக்கும் அணியப் பணியக் கிடைக்காத
தண்டைப் பதம்" —திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்.

மறவாமையே பிறவாமைக்கு ஏதுவாகும். ஆதலினால் தான் இறைவன்பால் ஆன்றோர்கள் மறவாத வரத்தை வற்புறுத்தி வேண்டுகிறார்கள். "உன்னை என்றும் மறவாமை வேண்டும்" என்று காரைக்காலம்மையாரும், "மறக்குமாறிலாத" என்று திருஞானசம்பந்தரும், "தினைத்துணைப் பொழுதும் மறந்துய்வெனோ?" என்று அப்பரும், "எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை" என்று சுந்தரரும், "உனதடியிணை எனதுயிருதவி எனவுனை நினைவது மொழிவது மறவேனே" என்று அருணகிரியாரும், "இணையடிகள் மறவாத மனமொன்று மாத்திரம் ஏழையேற் கருளுகண்டாய்" என்று இராமலிங்க அடிகளும் கூறியருளிய ஒருமைப்பாட்டை உன்னுக.

மறத்தல் இறத்தலுக்குச் சமானமாகும்; நினைத்தல் பிறத்தலுக்குச் சமானமாகும். எனவே மறத்தலும் நினைத்தலும் இறப்பு பிறப்பு ஆகும். ஒரு நாளைக்கு நாம் பல முறை மறப்பதும் நினைப்பதுமாக இருக்கின்றோமாதலின் இறந்து இறந்து பிறக்கின்றோம். கணந்தொறும் இறக்கின்றோம்; கணந்தொறும் பிறக்கின்றோம். என்னே கொடுமை? இந்த இறப்பு பிறப்பு நீங்கவேண்டுமாயின் நினைத்தலையும் மறத்தலையும் நீக்கவேண்டும். இதனையே அநுபூதி,

"கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்"

என்று உபதேசிக்கின்றது.

மறக்கின்ற தன்மை இறத்தலொப்பாகும் மனமதொன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப்பாகும் இப்பேய்ப்பிறவி

இறக்கின்ற எல்லைக் களவில்லையே இந்த சன்மஆல்லல்
துறக்கின்ற நாள் எந்த நாள் பரமேநின் தொழும்பனுக்கே.

—தாயுமானார்.

ஆனபடியால் ஆண்டவனுடைய திருவருளைக் கனவிலும் நனவிலும மறவேன் என்று அடிகள் இத் திருப்புகழில் உறுதி பெற அறுதியிட்டுரைக்கின்றனர்.

மடலிடை எழுதிய பெருமானே :—

மணம் இரண்டு வகைப்படும். ஒன்று களவு. மற்றொன்று கற்பு. பண்டைக்காலத்தில் களவு மணம் நிகழ்ந்தபின் கற்பு மணம் நிகழும். தமிழ்க் கடவுளாகிய முருகவேள் இந்த இரு மணங்களுக்கு இலக்கியமாகவே கற்பு நெறியினாலே தெய்வயானையம்மையாரையும், களவு நெறியிலே வள்ளியம்மையாரையும் மணஞ்செய்துகொண்டருள புரிந்தனர்.

களவு என்பது பிறர்க்குரிய பொருளை வெளவுதல் போன்றது அன்று. ஒத்த தலைவனும் ஒத்த தலைவியும் ஊழ்கூட்டத் தனியிடத்திற் சந்தித்து உள்ளமும் உணர்வும் ஒருமைப்பட்டு அன்பு வெள்ளத்தில் திளைத்துப்புணர்தலேயாகும். வேதத்தை மறையென்றாற் போல இம்மணத்தைக் களவு என்று கூறுவர்.

களவெனப்படுவ தியாதென வினவின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்
முளையெயிற் றமர்நகை மடநல் லாளொடு
தளைவாவிழ் தண்டார்க் காமன் அன்னோன்
விளையாட் டிடமென வேறுமலைச் சாரல்
மானினங் குழவியொடு கடிந்து விளையாடும்
ஆயமுந் தோழியு மருவி நன்கறியா
மாயப் புணர்ச்சி யென்மனார் புலவர்.

இக்களவு மணத்தைக் காந்தர்வ மணம் என்றுங் கூறப்படும்.

"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லயாழ்த் துணைமையோ ரியல்பே"

என்ற தொல்காப்பிய சூத்திரத்தினால் அறிக.

இனி மேற்கண்ட சூத்திரத்துள் மன்றல் எட்டு எனப் பட்டதனால், அந்த எட்டு மணத்தின் தன்மையையும் சிறிது விளக்குவாம்.

பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், கந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்று மணம் எட்டாகப் பேசப்படுகின்றது. இவற்றுள் :

1. பிரமம்: ஒத்த கோத்திரத்தவனுய் : நாற்பத்தியெட்டு யாண்டு இளமையில் கழித்த (பிரமசரியவிரத மிருந்த) ஒருவனுக்குப் பன்னிரண்டு யாண்டுடையவளாய்ப் பூப்பு எய்திய ஒருத்தியைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தா முன் அணிகலன் அணிப்பித்து தானமாகக் கொடுப்பது.

"அறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை"

—திருமுருகாற்றுப்படை.

2. பிரசாபத்தியம் : உரிய கோத்திரம் உடைய தலைமகனை அழைத்து அவனுக்குரியார் தந்த பரிசத்திற்கு இரட்டி தம் மகட்குத் தந்து தீ முன் மணஞ்செய்து தருவது.

3. ஆரிடம் : தாம் புரியும் வேள்வியாதி கருமங்களின் பொருட்டு ஒன்று அல்லது இரண்டு, பசு எருது இவைகளைப் பெற்றுக்கொண்டு மகளை மணஞ்செய்து தருவது

4. தெய்வம் : வேள்வியில் வந்த கன்னியைத் தக்க தலைமகனுக்குத் தருவது; அல்லது தம் மகளைவேள்விவேட்பித்துத் தரும் ஆசானுக்குத் தக்கணையாகத் தருவது.

5. ஆசுரம் : கொல் ஏறு கோடல், திரி பன்றி யெய்தல் வில்லேற்றுதல் செய்து வீரத்தால் மிக்க ஒருவனுக்கு மகளைத் தருதல். இவைகளில் கொல் ஏறு தழுவுதல் என்பது முரட்டு எருதை வீரத்தால் அடக்குதல்; இது ஆயர்க்குரியது. மற்ற இரண்டும் அரசர்க்குரியது.

இனி பெண்ணின் தந்தைக்குக் கேட்கும் பொருள் தந்து பெண்ணுக்கும் அணிகலன் புனைந்து தருவதும் அசுர மணமாகும்.

6. இராக்கதம் : பெண் வீட்டாரிடம் தனது வலிமையைக் காட்டி அவர்கள் இணங்காதிருப்பினும் போராடி தலைமகளை வலிதிற் கொள்வது. (இது அரசர்க்கு உரியது).

7. பைசாசம் : துயில்பவளைச் சென்று கூடுதல் பிசாச மணமாகும் இனி வயதில் மூத்தவளைப் புணர்தலும், இழிந்தவளைப் புணர்தலும் இதன் இனமாகும்.

8. காந்தர்வம் : கொடுப்பாரும் கேட்பாரும் இன்றி ஒத்த ஆணும் ஒத்த பெண்ணும் பண்டை ஊழ் கூட்ட தனியிடத்தில் சந்தித்து உள்ளமும் உணர்வும் ஒன்றக் கூடுவது ஆகும்.

இந்தக் காந்தர்வ மணம் மிகவும் இனிமையானது என்க அன்பின் பெருக்கினுல் நிகழ்வது.

தான் களவொழுக்கத்தினுல் எய்திய தலைவியை, இடையில் எய்துதற்குக் காவல் முதலிய தடைகள் நேர்ந்தபோது

தலைவன் பெரிதும் வருந்துவன். தன் ஆற்றாமையைத் தோழியிடம் கூறி வேண்டுவான். அவள் உள்ளம் இரங்கித் தலைவியைக் கூட்டி வைப்பள். ஒருக்கால் அவ்வாறுசெய்திலளாயின், இறுதியாக மடலேறியாவது விரும்பிய கரும்பனைய காரிகையை யடைய முயலும்.

> காமமுழந்து வருந்தினார்க் கேமம்
> மடலல்ல தில்லை வலி. —திருக்குறள்.

**மடலேறுதலாவது :—**

காதலியைப் பெற விரும்பிய காதலன், அவளது உருவத்தையும் பெயரையும் ஒருபடத்தில் எழுதி, தன்னூரையும்பேரையும் அதன்மேல் எழுதி, அப்படத்தைக் கையில் பிடித்துக்கொண்டு, எருக்கம்பூ மாலையைச் சூடிக்கொண்டு, பழுத்தஇலைகளைத் தலையில் சூடி, வாள் போல் கூர்மையாகவுள்ள பனைமடலாற குதிரைபோல் கட்டி அதன் மீது ஊர்ந்து, காதலியின் ஊர்நடுவிற் சென்று, நாற் சந்தியில் நின்று, ஒன்றும் பேசாமல்; பிறர் வசைக்கும் கூசாமல், படத்தில் எழுதிய உருவையே நோக்கி, பகலிரவெனுது, உறுதியுடன் நிற்பன். அவனது காதலின் உறுதியைக்கண்ட காதலியின் உறவினர், உழுவலன்புடைய அவனுக்குத் தமது திருமகளை மணஞ்செய்து தருவர்.

> ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
> தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
> மிகக காமத்து மிடலொடு தொகைஇச்
> செப்பிய நான்கும் பெருந்திணை குறிப்பே.
> —தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல்.

> காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
> வீசின போதுள்ள மீனிழந்தார் வியன் தென்புலியூர்
> ஈசனசாந்தும் எருக்கும் அணிந்து ஓர் கிழிபிடித்து
> பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே.
> —திருக்கோவையார்.

> வாமத்துமைமகிழ் வெங்கைபுரேசர் மணிவரைமேல்
> தாமக்குவிமென் முலைமட்டுவார்குழற் றையல்நல்லாய்
> நாமக்கடலைக் கலம் இவர்ந்தேறுவர் நானிலத்தோர்
> காமக்கடலை மடல்மா இவர்ந்து கடப்பர்களே.
> —திருவெங்கைக்கோவை.

> மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
> குவிமுகிழ் எருக்கம் கண்ணியுஞ் சூடுப;
> மறுகி னார்க்கவும் படுப;
> பிறிதும் ஆகுப: காமங்காழ்க் கொளினே. —குறுந்தொகை.

எனவே முருகவேள் வள்ளியம்மையாரைக் களவொழுக்கத்திஞல் அடைந்து, இடையே தடை எய்தியதாகக் கொண்டு, தோழியிடம் போய் மடலேறுவேன் என்று கூறியருளிய திருவிளையாடல் கந்தபுராணத்துள் வருமாறு காண்க :

தோட்டின் மீதுசெல் விழியினுய் தோகையோ டெனைக்
கூட்டிடா யெனில் கிழிதனில் ஆங்கவள் கோலம்
தீட்டி மாமடல் ஏறிநும் ஊர்தெரு வதனில்
ஓட்டுவேன் இது நாளையான் செய்வதென் றுரைத்தான்.

இந்தளம் :—

இந்தளம் என்பது ஒருவகை யாழ்.

இந்த்ரகோபம் :—

இது ஒரு சிவந்த பூச்சி. இது அதரத்திற்கு உவமையாகப் பேசப்படும்.

இந்த்ர சாபம் :—

இது வர்னவில். புருவங்களுக்கு உவமை.

இந்த்ர நீலம் :—

இந்திர நீலம் என்பது நீலமணி. இது கண்ணிற்கு உவமை.

உவமையாகு பெயராக இம்மூன்றும் முறையே பெண்களின் அதரத்தையும் புருவத்தையும் விழியையும் தெரிவிக்கின்றன.

## கருத்துரை

சிவகுமாரரே! வள்ளி மணவாளரே! குருநாதரே! ஒருவருமுணராத உண்மைப் பொருளை உபதேசித்து திருவடியைத் தந்த அளவற்ற கருணையை ஒருபோதும் மறக்க மாட்டேன்.

## 34

சொரியு முகிலைப் பதும நிதியைச்
சுரபி தருவைச் — சமமாகச்
சொலியு மனமெட் டனையு நெகிழ்விற்
சுமட ருருகுற் — றியல்வாணர்

தெரியு மருமைப் பழைய மொழியைத்
திருடி நெருடிக் கவிபாடித்
திரியு மருள்விட் டுனது குவளைச்
சிகரி பகரப் பெறுவேனோ

கரிய புருவச் சிலையும் வளையக்
கடையில் விடமெத் தியநீலக்
கடிய கணைபட் டுருவ வெருவிக்
கலைகள் பலபட் டனகானிற்

குரிய குமரிக் கபய மெனநெக்
குபய சரணத் தினில்வீழா
உழையின் மகளைத் தழுவ மயலுற்
றுருகு முருகப் பெருமாளே.

## பதவுரை

கரிய புருவ சிலையும் வளைய = கரியபுருவமாகிய வில் வளைய, கடையில் விடம் எத்திய நீல = மன்மதனுடைய கடைசி பாணமாகிய நஞ்சு நிறைந்த நீலோற்பலம் ஆகிய, கடியகணைபட்டு உருவவெருவி = கொடுமையான கணை தாக்கி உருவ அதனால் அச்சத்தையடைந்து, கலைகள் பலபட்டன = மான்கள் பல வாழ்கின்ற, கானிற்கு உரிய குமரிக்கு = கானகத்துக்கு உரிய வள்ளிநாயகிக்கு, அபயம் என = அபயம் என்று உரைத்து, நெக்கு = மனம் நெகிழ்ந்து, உபய சரணத்தினில் வீழா = வள்ளிநாயகியின் இரு சரணங்களில் வீழ்ந்து, உழையின் மகளை = மான்மகளாகிய வள்ளியை தழுவ மயல் உற்று = தழுவும் பொருட்டு மோகங்கொண்டு, உருகு முருக = உருகுகின்ற முருகக் கடவுளே! பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! சொரியு முகிலை = மழை சொரிகின்ற மேகத்தையும், பதும நிதியை = பதும நிதியையும், சுரபி = காமதேனுவையும், தருவை = கற்பகத்தருவையும் சமமாகச் சொலியும் = ஒப்பாகக் கூறியும், மனம் எள்தனையும் நெகிழ்வுஇல் = மனமானது எள்ளளவுகூட இளகி இரங்குதல் இல்லாத, சுமடர் அருகு உற்று = கீழ்மக்களின் அருகில் சென்று. இயல் வாணர் = இயற்றமிழில் வல்ல புலவர்கள், தெரியும் அருமை = தெரிந்து பாடிய அருமையான, பழைய மொழியை = பழமையான பாடல்களில் உள்ள சொற்களை திருடி நெருடி கவிபாடி = திருடியும் சிறிது திரித்துங் கவிகளைப்பாடி, திரியும் மருள் விட்டு = திரிகின்ற மயக்கத்தைவிட்டு, உனது குவளை சிகரி பகர பெறுவேனோ = உமது குவளை மலர்கின்ற மலையாகிய திருத்தணிகையைப் புகழ்ந்து பாடும் பெருமை பேற்றினை அடியேன் பெறமாட்டேனோ?

## பொழிப்புரை

கருமையான புருவமாகிய வில் வளையவும், மன்மதனுடைய கடைசி பாணமாகிய—நஞ்சு மிகுந்த நீலோற்பலமாகிய கொடிய கணைபட்டுத் தொளைபட, அதனால் அஞ்சி, மான்கள் பல வாழும் கானகத்துக்கு உரிய வள்ளிபிராட்டிக்கு அபயம் என்று கூறி உள்ளம் நெகிழ்ந்து, இரண்டு பாதங்களில் வீழ்ந்து, மான் மகளைத் தழுவுவதற்குமோகங் கொண்டு உருகி நின்ற முருகப் பெருமானே! பெருமிதம் உடையவரே! மழை சொரிகின்ற மேகத்தையும், பதுமநிதியையும் காமதேநுவையும், கற்பகத் தருவையும், நிகராகக் கூறியும் மனம் எள்ளளவும் இளகுதல் இல்லாத கீழ் மக்களிடம் போய் இயல் கற்ற தமிழ்ப் புலவர்கள் ஆராய்ந்து அருமையாக முன்னோர்கள் பாடிய பழைய பாடல்களில் உள்ள பழமையான இனிய சொற்களைத் திருடியும், ஒரு சிறிது மாற்றியும் கவிகள் பாடித் திரிகின்ற மயக்கத்தை விடுத்து, தேவரீர் வாழ்கின்ற குவளை மலர் மலர்கின்ற திருத்தணி மலையைப் பாடும் பேற்றினை அடியேன் பெறுவேனோ?

## விரிவுரை

தமிழ் கற்ற புலவர்கள், அருமையான தமிழால், தமிழ்த் தெய்வமாகிய தணிகேசனைப் பாடாமல், காமதேநுவின்பாலைக் கமரில் கொட்டியது போல், ஈயாத உலோபிகளிடம் போய், இனிய கனியமுதம் போன்ற தமிழ்க் கவிகளைப் பாடி உழல்கின்ற பரிதாபத்தைக் கண்டு வருந்தி, அருணகிரிநாத சுவாமிகள் இத்திருப்புகழைப் பாடுகின்றார்.

**சொரியு முகிலை :—**

கைமாறு கருதாது, உலகுக்கு அமுதம் போன்ற மழையைப் பொழிகின்றது மேகம். மேகத்துக்கு உலகிலுள்ளோர் என்ன கைம்மாறு செய்ய முடியும்?

நாம் நன்றி நவில முடியுமா? நமது நன்றியுரையைமேகம் எதிர்பார்க்கின்றதா?

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. —திருக்குறள்.

ஞாலம் தோன்றிய நாள்தொட்டு காலந்தோறும் மழை பொழிந்து சராசரங்கட்கெல்லாம் உதவுகின்ற மேகத்துக்கு நிகரானவனே! என்று கூறிப் புகழ்ந்து பாடுவார்கள்.

**பதுமநிதியை :—**

சங்கநிதி பதுமநிதி என்பன இரு நிதிகள். சங்க வடிவிலும், தாமரை, வடிவிலும் அவைகள் இருக்கும். அவை தம் உருவம் போன்ற பொற்காசுகளை எடுக்குந்தோறும் வழங்கிக் கொண்டேயிருக்கும்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து
தரணியொடு வானளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லாரா கில்" — அப்பர் பெருமான்.

இந்த இரு நிதிகளையும் சிவபெருமான் குபேரனுக்கு வழங்கி யருளினார்.

சுரபி :—

சுரபி—காமதேநு. இது பாற்கடலில் அமுதத்துடன் பிறந்தது. வசிட்டாதி முனிவர்க்கு உதவுவது. இத்தகைய புனிதமான "காமதேனுவே" என்று கூறிப் பாடுவார்கள்.

தருவை :—

தரு—கற்பகத் தரு. இதுவும் அமுதத்துடன் பாற்கடலில் தோன்றியது. எட்டுக் கிளைகளையுடையது. இதில் படரும் கொடி காமவல்லி. நினைத்ததைத் தரும் நீர்மை யுடையது.

சமமாகச் சொரியு மனமெட்டனையு கெகிழ்வில் :—

மேகம், பதுமநிதி, கற்பகம், காமதேனு முதலியவைக்கு நிகரானவன் என்று மிகமிகப் புகழ்ந்து கூறியும் ஒரு எள்ளள வேனும் உள்ளம் உருகாது, கிள்ளியுங் கொடுக்காது மூடர்கள் புலவர்களை விரட்டுவார்கள்.

தெரியுமருமைப் பழைய மொழியைத் திருடி நெருடிக் கவிபாடி :—

பழங்காலத்தில் முன்னோர்கள் பாடிய அருமையான தமிழ்ப் பாடல்களில் உள்ள சில இனிய சொற்களைத் திருடி தமது பாடல்களில் சொருகிக் கொள்வார்கள் சில புலவர்கள். அதனைத்தான் சுவாமிகள் இங்கு கண்டிக்கின்றார்.

"திருடி யொருபடி நெருடி யறிவிலர்
செவியில் நுழைவன கவிபாடித்
திரியு மவர் சிலர் புலவர் மொழிவது
சிறிது முணர்வகை யறியேனே"
—(கருட) திருப்புகழ்.

குவளைச் சிகரி பகரப் பெறுவேனே :—

குவளைச்சிகரி—திருத்தணிகை மலை. குவளைப்பூ தினந் தோறும் மலர்வதனால் இப்பெயர் பெற்றது.

இம்மலையினும் மேம்பட்ட மலை யாண்டும் இல்லை. இதன் பெருமையைத் தணிகைக் கலம்பகம் கூறுகின்றது

தணிகை யென் றொருகால் ஓதில் சாலோக பதவி யெய்தும்
தணிகை யென் றிருகால் ஓதில் சாமீப பதவி யெய்தும்
தணிகை யென்றுரைக்கில் முக்கால் சாரூபம்நண்ணும் செவ்வேன்
தணிகை யென்றுரைக்கின் நாற்கால் சாயுச்யம் அடைவர்தாமே.

**கரிய புருவச் சிலையும் வளைய :—**

புருவம் வில்லைப்போல் வளைந்திருப்பது. அது காமமிக் குடையார்க்குச் சிறிது சிறுத்துத் தோன்றும்.

**கடையில்விட மெத்திய நீல கடியகணை :—**

மன்மதனுக்கு ஐந்து கணைகள். தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம். இவை முறையே உன்மத்தம், மதனம், சம்போகம், சந்தாபம், வசீகரணம் எனவும் பெயர் பெறும். இவற்றின் அவத்தைகள். சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம்.

**உபய சரணத்தினில் விழா :—**

முருகவேள் வள்ளிபதம் பணிந்தான் என்று வருவன எல்லாம் அப்பரமபதியின் அருளாடலேயாகும்.

உலைப்படு மெழுகதென்ன உருகியே ஒருத்தி காதல்
வலைப்படு கின்றான்போல வருந்தியே இரங்கா நின்றான்
கலைப்படு மதியப் புத்தேன் கலங்கலம் புனலில் தோன்றி
அலைப்படு தன்மைத் தன்றே அறுமுகன் ஆடல் எல்லாம்.

—கந்தபுராணம்.

## கருத்துரை

வள்ளி மணவாளா! உமது திருத்தணி மலையைப் பாட அருள் செய்.

## 35

தாக்கம ருக்கொரு சாரையை வேறொரு
சாட்சிய றப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ர வழிககதி தூரனை வேர்விழு தவமூழ்குந்
தாற்பர்ய மற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றுனை யேகரு தாதிகல்
சாற்றுத மிழ்க்குரை ஞானியை நாள்வரை தடுமாறிச்

போக்கிட மற்றவ்ரு தாவனை ஞானிகள்
போற்றுத லற்றது ரோகியை மாமருள்
பூத்தம லத்ரய பூரியை நேரிய் புலையேனைப்
போக்கிவி டக்கட னேநர கோகதி
போய்ப்பெறு கைக்கிலை யோகதி யானது
போர்ச்சுடர் வஜ்ரவை வேல்மயி லா அருள் புரிவாயே

மூக்கறை மட்டைம காபல காரணி
சூர்ப்பந கைப்படு மூளியு தாசனி
மூர்க்க குலத்திவி பீஷணர் சோதரி முழுமோடி
மூத்தவரக்கனி ராவண னேடியல்
பேற்றிவி டக்கம லாலய சீதையை
மோட்டன் வளைத்தொரு தேர்மிசை யேகொடு முகிலேபோய்

மாக்கன சித்திர கோபுர நீள்படை
வீட்டிலி ருத்திய நாளவன் வேரற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே
வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கழு நீர்தரு நீள்சுனை
வாய்த்த திருத்தணி மாமலை மேவிய பெருமாளே.

## பதவுரை

மூக்கறை = மூக்கறுக்கப் பட்டவளும், மட்டை = அறிவில்லாதவளும், மகா பல = பெரிய வலிமையுடையவளும், காரணி = இராவணாதி யவுணர்கள் வதத்திற்குக் காரணமானவளும், சூர்ப்பநகை = சூர்ப்பநகையென்ற பேரை யுடையவளும், படு மூளி = மூளியான கொடியவளும், உதாசனி = அவமதிக்கத் தக்கவளும், மூர்க்ககுலத்தி = மூர்க்க குணமுடைய அசுர குலத்திற் பிறந்தவளும், விபீஷணர் சோதரி = வீபீஷணருக்குத் தங்கையும், முழுமோடி = மடமை நிறைந்தவளும் ஆகிய சூர்ப்பநகை, மூத்த அரக்கன் = மூத்தவனும் அரக்கனுமாகிய, இராவணனேடு = இராவணனிடம், இயல்பு ஏற்றிவிட = சீதையின் அழகின் தன்மைகளை அவன் உள்ளத்தில் புகுத்திவிடலும், கமலஆலய சீதையை = தாமரைக் கோயிலில் வாழும் இலக்குமி யாகிய சீதாதேவியை, மோட்டன் = அறிவில்லாதவனாகிய அந்த இராவணன், வளைத்து = மாயமாகப் போய் எடுத்து, ஒரு தேர் மிசையே கொடு = ஒப்பற்ற தேரின்கண் வைத்துக் கொண்டுபோய், முகிலேபோய் = மேகமண்டலம் வரை சென்று, மா கன = மிகவும்

பெருமை பொருந்தி, சித்திர=சித்திரங்களோடு கூடிய, கோபுரம் நீள்=கோபுரங்கள் நீண்டுள்ள, படைவீட்டில் இருத்திய நாள்=சோலைகளோடு கூடிய அசோக வனத்திலுள்ள மண்டபத்தில் சிறைப்படுத்திய போது, அவன் வேர் அற=அவ் விராவணனுடைய வம்சம் வேருடன் அற்றுப் போக, மார்க்கம் முடித்த=அதற்குரிய வழியை நிறைவேற்றிய, வில்லாளிகள் நாயகன்=வில்வீரர்களுக்கெல்லாம் நடு நாயகமாக விளங்குகின்ற இராகவரது, மருகோனே=திருமருகரே! வாச்சிய மத்தள பேரிகைபோல்=மத்தளம் பேரிகை முதலிய வாத்தியங்களைப் போல் மிகுந்த ஓசையுடன், மறைவாழ்த்த=வேதியர்கள் வேதங்களால் வாழ்த்தவும், கழுநீர் மலர்தரு=செங்கழுநீர் மலரை நாள்தோறும் தருகின்ற, நீள் கனை வாய்த்த=நீண்ட செங்கழுநீர்ச் சுனையை தன்னகத்தே வாய்க்கப்பெற்ற, திருத்தணி மாமலை மேவிய=திருத்தணிகை யென்னும் பெருமை தங்கிய மலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! தாக்கு அமருக்கு=தாக்கிச் செய்கின்ற போருக்கு, ஒரு சாரையை=ஒரு சாரைப் பாம்பு போன்றவனை, வேறு ஒரு சாட்சி அற=அருகில் வேறு ஒருவரைசாட்சியாக வைத்து உண்பிக்காமல், பசி ஆறியை=தனியே இருந்து புசிக்கின்றவனை, நீறு இடு சாஸ்த்ரவழிக்கு=திருநீற்றைத் தரிக்கின்ற சைவாகம சாஸ்திர வழிக்கு, அதிதூரனை=வெகுதொலைவில் உள்ளவனை, வேர் விழு தவமுழ்கும்=மரத்தைத் தாங்கும் வேர்போல் ஆருயிரைத் தாங்கி யருள்கின்ற மெய்த் தவத்தில் முழுகும், தாற்பர்யம் அற்று=நற்பயனை விடுத்து, உழல் பாவியை=வீணில் உழன்று திரிகின்ற பாவியை, நாவலர் போல்=புலவர்களைப்போல் நடித்துக் கொண்டு, பரிவுற்று உனையே கருதாது=அன்புடன் தேவரீரையே நினையாமல், இகல் சாற்று=சண்டை செய்து, தமிழ்குரை ஞாளியை=தமிழ் மொழிகளால் வேறு ஒருவருடன் வாதிட்டு குரைக்கின்ற நாயினை, நாள்வரை தடுமாறி=இந்நாள்வரை தடுமாற்றமடைந்து, போக்கிடம் அற்ற விருதாவனை=வேறு எங்கும் புகலிடம் அற்ற வீணனை, ஞானிகள் போற்றுதல் அற்ற துரோகியை=மெய்யறிவினர் காப்பாற்றுது கைவிட்ட துரோக சிந்தை யுடையவனை, மாமருள் பூத்த=பெரிய மயக்கம் நிறைந்த, மலத்ரய பூரியை=மும்மலங்களுடன் கூடிய கீழ்மகனை, நேர் இயை புலையனை=பறையனுக்குச் சமானமானவனை, போக்கிவிட கடனோ=இத்தகைய பாவியாகிய அடியேனை தேவரீர் தள்ளிவிடக் கடவதோ? கதி நரகோ=அடியேனுக்குப் புகலிடம் நரகந்தானோ? கதி ஆனது போய் பெறுகைக்கு இலையோ=மோக்ஷ உலகத்தில் போய் பேரின்பம் பெறுமாறு இல்லையோ? போர் சுடர்=போர் செய்வதும் ஒளிவிடுவதும், வஜ்ர=வஜ்ஜிரம் போன்றதும், வை=கூர்மை பொருந்தியதுமாகிய, வேல் மயிலா=வேலையும் மயிலையுமுடையவரே! அருள் புரிவாயே=திருவருள் புரிவீர்.

---

## பொழிப்புரை

மூக்கறுக்கப்பட்டவளும், அறிவிலியும், பெரிய வலிமையை யுடையவளும், ராவணாதிகளின் நாசத்திற்குக் காரணமானவளும், கொடிய மூளியும், அவமதிக்கத் தக்கவளும், மூர்க்க குலத்தியும், விபீஷணருடைய தங்கையும், முழு மடமையை யுடையவளுமாகிய சூர்ப்பநகை, தனது மூத்தவனும் அரக்கனுமாகிய இராவணனிடம் சீதாதேவியின் அழகின் தன்மையைக் கூறி அவன் மனதில் புகச் செய்தலும், தாமரைக் கோயிலில் வாழும் இலக்குமியாகிய சீதாபிராட்டியாரை மூடனாகிய இராவணன் வஞ்சனையால் எடுத்து தேர் மிசை வைத்துக்கொண்டு போய் மேக மண்டலம்வரை அளாவியதும் பெருமை மிக்கதும் சித்திரங்களுடன் கூடியதுமாகிய கோபுரங்களால் அழகு செய்கின்ற காவலோடு கூடிய அசோக வனத்தில் சிறைப் படுத்தியபோது, அவனுடைய குலத்தின் வேர் அற்றுப் போகுமாறு செய்தவரும் வில்வீரர்களுக்குள் நடுநாயகமாக விளங்குகின்றவருமாகிய ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் மருகரே! மத்தளம் பேரிகை முதலிய வாத்தியங்களைப் போல் வேதவொலி முழங்குவதும், நாள்தொறும் பூக்கின்ற செங்கழுநீர் சுனையைத்தன்னகத்தேயுடையதுமாகிய பெருமை தங்கிய திருத்தணி மலையின்மீது எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! தாக்குதலோடுகூடிய போருக்கு சாரைப் பாம்புபோல் ஓடி ஒளிபவனும், அருகில் ஒருவரை சாட்சியாக வைத்து உண்பிக்காமல் தனியே பசியாறுபவனும், திருநீறிடுகின்ற சைவ சமய சாத்திரவழிக்கு நீண்ட தூரத்தில் இருப்பவனும், ஆவியைத்தாங்குகின்ற தவநெறியில் முழுகும் நற்பயனின்றி வீணில் உழல்கின்ற பாவியும், புலவர்களைப் போல் நடித்துக்கொண்டு அன்புடன்தேவரீரை உளங்கனிந்து நினையாமல் சண்டையிட்டு தமிழைக் குரைக்கின்ற நாய் போன்றவனும், இந்நாள்வரை தடுமாறி போக்கிடம் வேறில்லாதவனும்,மெய்ஞ்ஞானிகளால் காக்கப்படாத துரோகியும் பெரிய மயக்கம் நிறைந்த கீழ்மகனும், மும்மலங்களால் மூடப்பட்டவனும் புலையனுக்கு நிகரானவனும் ஆகிய அடியேனை கருணாநிதியாகிய தேவரீர் தள்ளிவிடுவது தகுதியோ? தேவரீர் தள்ளிவிட்டால அடியேனுக்குப் புகலிடம் நரகந் தானோ? முத்தியுலகத்திற் புகுந்து பெறுவதற்கு இல்லையோ? போர் புரிவதில் வலலதும் ஒளிவீசுவதும் வஜ்ரம் போன்றதும் கூரியதுமாகிய வேலாயுதத்தையும் மயில வாகனத்தையுமுடையவரே! திருவருள்புரிவீர்.

## விரிவுரை

**தாக்கமருக்கொரு சாரையை :—**

*சாரை - சாரைப்பாம்பு;* சாரைப் பாம்பு நீளமாகவும் பார்க்கப் பயங்கரமாகவு மிருக்கும். ஆனால் ஆளைக் கண்

டால் ஓடியொளியும். நல்லபாம்பு படமெடுத்து ஆளையெதிர்க்கும். பயந்து ஓடுமியல்புடையது சாரைப்பாம்பு. அதுபோல், சமயநிந்தை தெய்வநிந்தை செய்யுமிடங்களில் உயிரைத் துரும்பாக எண்ணி எதிர்க்காமல் ஓடியொளியும் பேடித் தன்மை யுடையவன் என்பது கருத்து.

சாட்சியறப் பசியாறியை :—

"பகடுநடந்த கூழ் பல்லாரோடுண்க" என்றபடி உண்ணும்போது பலரை வைத்துக்கொண்டு சாப்பிட வேண்டும். இயலவில்லையேல் ஒருவரையாவது சாட்சிவைத்து அவரோடு கலந்து உண்ண வேண்டும். அப்படிக்கின்றி கதவடைத்து விட்டுத் தனியே யிருந்து சாப்பிடும் மாக்களைக் கண்டிக்கின்றனர்.

திருச்செந்தூரில் முருகக்கடவுள் சந்நிதியில் சாட்சி போஜனம் செய்விப்பது இன்றும் கண்கூடு.

நீறிடு சாஸ்த்ரவழி :—

சைவசமய நெறி. இதனை யுணர்த்தும் சாத்திரங்கள் பதினான்கு. அந்நெறியாவன :—பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மையையுணர்தலும், அவைகளின் இலக்கணத்தை யுணர்தலும், ஆன்மா கட்டினின்றும் நீங்கி பதியுடன் இரண்டறக் கலத்தலும் ஆம். இவைகளின் விரிவை மேற்கூறிய சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய முதனூல் வழிநூல்களைக் கொண்டு ஆராய்ந்து தெளிக.

காவலர்போல்.........ஞானியை :—

கற்றதனா லாயபயன் கடவுளைக் கருதுவதே. கற்றதுங் கேட்டதுங் கொண்டு கற்பனை கடந்த காரணனைக் கசிந்து உருகி நினைந்து உய்தல் வேண்டும். அவ்வாறு இறைவனை நினைந்து நெஞ்சம் நெகிழாது சிறிது படித்த மாத்திரத்தே தலை கிறுகிறுத்து, தற்செருக்குற்று தன்னைப் போல் படித்தவரிடம் தர்க்கித்து மண்டையை உடைத்து வறிதே கெடும் வம்பரை இடித்துரைக்கின்றனர்.

> கற்றதுங் கேட்டதும் தானே ஏதுக்காகக்
>
> கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால் எம்மான்
>
> குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
>
> குணங்குறியற் றின்பநிஷ்டை கூட அன்றோ. —தாயுமானார்.

சூர்ப்பநகை :—

சூர்ப்பம்—முறம் (சுளகு) முறம் போன்ற நகத்தையுடையவள் ஆதலால் சூர்ப்பணகா எனப்பட்டனள். அது தமிழில் ஐகார ஈறுபெற்று சூர்ப்பணகை என்று வந்து வழக்காற்றில் சூர்ப்பநகை என வழங்குகிறது.

விபீஷணர்சோதரி :—

இராவண சோதரி என்றாலும் சந்தங் கெடாது. தீயவனைத் தீயவனுடைய சோதரி யென்றால்தான் அவளுடைய தீமை நன்கு வலியுறும். தூயவனாகிய வீடணனது சோதரி யென்று நம் சுவாமிகள் கூறியதன் உண்மை யாது? காரணமின்றி அங்ஙனங் கூறார். அக் காரணமும் சிறந்த காரணமாக இருக்க வேண்டும். அதன் வரலாறு வருமாறு.

சங்கசூடணன் வரலாறு

சத்தியவிரதன் என்ற ஒரு பேரரசனுக்கு சங்கசூடணன் என்ற அருமந்த மைந்தன் இருந்தான். அவன் எல்லா நற்குணங்களும் அமையப் பெற்றவன். ஆனந்தகுரு என்பவரிடம் கல்வி பயின்று வந்தான். ஆனந்த குருவுக்கு சுமுகி என்ற ஒரு பெண்ணிருந்தாள். அவள் சங்கசூடணனிடம் காதல் கொண்டிருந்தாள். அது சங்கசூடணனுக்குத் தெரியாது; அவனுக்குக் கல்வியிலேதான் கருத்து இருந்தது. தூய உள்ளமுடைய சங்கசூடணன் ஒரு நாள் முன்னிரவில் தனக் கேற்பட்ட ஐயத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டுக் குருவின் இருக்கை புகுந்தான். குரு அங்கில்லை; சுமுகி தனித்திருந்தாள். தன் கருத்தை அவனிடம் வெளிப்படுத்தினாள். சங்கசூடணன் "நீ எனக்குத் தங்கை; குருவின் மகளாகிய உன்னை நான் மனத்தாலும் தீண்டேன் இப்பிறப்பில் மட்டுமன்று; இனி வரும் பிறப்பிலும் நீ எனக்குத் தங்கையே." என்று மறுத்துவிட்டுப் போயினான். சுமுகி அவன் தன்னைக் கற்பழித்தானென்று பழி மூட்டினாள். அதனைக் குருவாகிய அவள் பிதா நம்பி அரசனிடம் கூறினார். அரசனும் சீறி மகனைக் கானகத்தில் கற்பாறைமீது கிடத்தி கைகாலைத் துணிப்பித்தான். சங்கசூடணன் தரும தேவதையை நினைந்து புலம்பினான். அவனுடைய அலக்கணைக் கண்டு பூமியைப் பிளந்துகொண்டு ஆதிசேடன் வெளிப்பட்டு, "நின்னை இப்படிப் பழிமூட்டி இடர் செய்த சுமுகியை மறுபிறப்பில் நான் இடர்செய்வேன்" என்று ஆறுதல் கூறி மறைந்தான். அந்த உத்தமகுணம் நிறைந்த சங்கசூடணன் விபீஷணனாகப் பிறந்தான்; அந்த சுமுகி சூர்ப்பநகையாகப் பிறந்தாள். ஆதிசேடன் இலக்குவனாகப் பிறந்து சூர்ப்பநகையை உறுப்பறுத்து இடர்ப்படுத்தினன். இந்த உயர்ந்த உள்ளீட்டைப் புலப்படுத்த "விபீஷணர் சோதரி" என்று கூறியருளினார்.

இராவணனோ டியல்பேற்றிவிட :—

சூர்ப்பநகை மூக்கறுக்கப்பட்டு இராவணனிடம் சென்று சீதையின் இயல்புகளைக் கூறி அவனை அடியோடு கெடுத்தனள். அதனால் அவளே இராவணனுடைய அழிவிற்குக் காரணம்.

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநாசம் பெற முடிக்கு மொய்ம்பினன்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்வினை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனன். —கம்பர்

இவள் இராவணனிடம் சீதையின் இயல்பு கூறுமாறு காண்க.

காமரு முரலும் பாடல் கள்ளெனக் கனிந்த வின்சொல்
தேமலர் நிரந்த கூந்தற் றேவர்க்கு மணங்கா மென்னத்
தாமரை யிருந்த தையல் சேடியாந் தரமு மல்லள்
யாமுரை வழங்கு மென்ப தேழைமைப் பால தன்றே.

தோளையே சொல்லு கேனோ சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ வல்லவை வழுத்து கேனோ
மீளவுந் திகைப்ப தல்லாற் றனித்தனி விளம்ப லாற்றே
னாளையே காண்டி யன்றே நானுனக் குரைப்ப தென்னே. —கம்பர்.

**மோட்டன் :—**

ஆயிரம் வேதங்களைக் கற்ற இராவணனைச் சுவாமிகள் "மோட்டன்" என்றனர் காரணம் கற்றதன் வண்ணம் நிற்கும் திறனின்றி பிறன் தாரம் நச்சிய பேயன் ஆதலின்.

**வில்லாளிகள் நாயகன் :—**

கரவேகமுஞ் சரவேகமும் மிக்குடையோன் இராமனே யாதலின் "வில்லாளிகள் நாயகன்" என்றனர்.

"உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி"

என்பதனால் சரவேகம்,

"தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்"

என்பதனால் கரவேகமுங் காண்க.

## கருத்துரை

இராகவன் மருகரே! திருத்தணிகைத்தேவே! தீமையே மிக்குடைய சிறியேனை நரகம் புக வொட்டாது பரகதி சேர்ப் பித்து ஆட்கொள்வீர்.

36

துப்பா ரப்பா டற்றி மொய்க்கால்
சொற்பா வெளி முக் குணமோகம்
துற்று யப்பீ றற்றே விட்டே
சுற்று மதனப் பிணிதோயும்

இப்பா வக்கா யத்தா சைப்பா
டெற்றே யுலகிற் பிறவாதே
எத்தார் வித்தா ரத்தே கிட்டா
எட்டா அருளைத் தரவேணும்

தப்பா மற்பா டிச்சே விப்பார்
தத்தாம் வினையைக் களைவோனே
தற்கா ழிச்சூர் செற்றுய் மெய்ப்போ
தத்தாய் தணிகைத் தனிவேலா

அப்பா கைப்பா லைப்போல் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே
அத்தா நித்தா முத்தா சித்தா
அப்பா குமரப் பெருமாளே.

## பதவுரை

தப்பாமல் பாடிச் சேவிப்பார்=தவறாது உம்மையே பாடித் தொழும் அடியார்கள், தத்தாம் வினையை களைவோனே=அவரவர் களின் வினையைப் போக்குபவரே! தற்கு ஆழி=தருக்கும் (நான் என்ற எண்ணம்) ஆக்ஞா சக்கரமுங் கொண்ட, சூர் செற்றாய்= சூரனை அழித்தவரே! மெய் போதத்தாய்=மெய்ஞ்ஞான மூர்த் தியே! தணிகை தனிவேலா=திருத்தணிகையில் எழுந்தருளியிருக் கும் ஒப்பற்ற வேலவரே! அ பாகை=அந்த சர்க்கரைப் பாகினைப் போலும், பாலைபோல்=பாலைப் போலவும், சொல் காவல்=சொல்லை யும் தினை காவலையும் உடைய, பாவை தனத்து அணைவோனே= வள்ளியம்மையாரது தனத்தில் தழுவுபவரே! அத்தா=உயர்ந்த வரே! நித்தா=என்றும் அழியாதவரே! முத்தா=இயல் பாகவே பாசங்களினின்றும் நீங்கியவரே! சித்தா=சித்தமூர்த் தியே! அப்பா=பரம பிதாவே! குமர=குமாரக் கடவுளே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! து பார்=உணவைத் தரும் மண், அப்பு=நீர், ஆடல் தீ=அசைகின்ற நெருப்பு, மொய் கால்=நெருங்கி வீசுகின்ற காற்று, சொல் பா=சொல்லப்படுகின்ற

பரந்துள்ள, வெளி=ஆகாயம், மு குணம்=மூன்று குணங்கள், மோகம்=மூவாசைகள் ஆகிய இவைகள், துற்றுய=நெருக்கமாக வைக்கப்பட்டுள்ள, பீறல் தோல் இட்டே சுற்று=கிழிந்த தோல் இட்டு சுற்றி மேயப்பட்டதும், மதன பிணி தோயும்=காம நோய் தோய்ந்துள்ளதுமான, இ பாவ காயத்து=இந்தப் பாவம் நிறைந்த உடம்பின்மீது, ஆசைப்பாடு எற்றே=ஆசைப்படுதலை மேற்கொண்டு, உலகில் பிறவாதே=உலகில் மீண்டும் மீண்டும் அடியேன் பிறவாமல், எத்தார்=ஏத்தாருடைய, வித்தாரத்தே=கல்வி சாமர்த்தியத்துக்கு, கிட்டா=கிட்டாததும், எட்டா=எட்டாததுமான, அருளை தர வேணும்=உமது திருவருளைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

தவறுமல் உம்மையே பாடித் தொழுபவர் யார் யாரோ அவர்களுடைய வினைகளைக் களைபவரே! செருக்கும் ஆக்ஞா சக்கரமும் பூண்ட சூரனை அழித்தவரே! மெய்ஞ்ஞான மூர்த்தியே! திருத்தணிகை மலையில் வீற்றிருப்பவரே; அந்த சர்க்கரைப் பாகையும் பாலையும் போன்ற இனிய சொற்களையும் தினைகாவலையும் கொண்ட வள்ளிபிராட்டியின் தனங்களில் தழுவுபவரே! உயர்ந்தவரே! என்றும் உள்ளவரே! அநாதி முத்தரே! சித்தரே! பரம பிதாவே! குமாரக் கடவுளே! பெருமிதம் உடையவரே! உணவைத் தரும் மண், நீர், அசைகின்ற தீ, நெருங்கி வீசுகின்ற காற்று, புகழப்படுவதும் பரந்திருப்பதுமான வெளி என்ற ஐம்பெரும பூதங்களும், முக்குணங்களும், மூவாசைகளும் நெருக்கமாக வைக்கப்பட்டுள்ளதும், கிழிந்த தோலிட்டு சுற்றி மேயப்பட்டதும், காமநோய் தோய்ந்துள்ளதுமான, இந்தப் பாவ உடலின் மேல் ஆசைப்படுதலை மேற்கொண்டு உலகில் மேலும் மேலும் அடியேன் பிறவாமல், தேவரீரை ஏத்தாதவர்களின் கல்வி ஆற்றலுக்குக் கிட்டாததும், பிறருக்கு எட்டாததுமான திருவருளைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**து பார் :—**

து—துப்பு—உணவுப் பொருள். உணவுப் பொருள்களை நல்கும் பூமி.

அப்பு—நீர். ஆடல் தீ—அசைகின்ற நெருப்பு.

**சொற்பா வெளி :—**

சொல்—புகழ்கின்ற பா—பரந்துள்ள. வெளி—ஆகாயம். இந்த உடம்பு ஐம்பூதங்களின் பரிணாமம்.

**முக்குண மோகந்துற்றுய :—**

சத்துவம், இராஜஸம், தாமசம் என்ற முக்குணங்களும், (மோகம்—ஆசை) மண், பெண், பொன் என்ற மூவாசைகளும் இந்தவுடம்பில் நெருக்கமாக வைக்கப்பட்டுள்ளன.

பிறற்றோலிட்டே சுற்று :—

பீறல்—கிழியல். ஒன்பது ஓட்டைகள் உள்ள தோலால் சுற்றி மூடிய உடம்பு.

மதனப்பிணி தோயும் :—

காமநோய் தோய்ந்தது இந்த உடம்பு.

இப் பாவக்காயம் :—

உடம்பு பாவத்தினால் வந்தது. வினையாலானது. திருட்டு மாட்டுக்குக் கட்டைபோட் டனுப்புவதுபோல், வினை காரண மாக இக் கட்டை வந்துளது

ஆசைப்பா டெற்றே :—

ஆசைப்பாடு எற்றே—ஏற்றே என்ற சொல் எற்றே எனக் குறுகி நின்றது.

ஏத்தார் :—

ஏத்தார் என்ற சொல் எத்தார் என வந்தது. முருகப் பெருமானது திருப்புகழை அன்புடன் பரவித் துதி செய்யாத வர்கள்

வித்தாரத்தே கிட்டா :—

ஆரவாரமான் கல்வி ஞானத்தில் இறைவன் திருவருள் கிட்டாது.

எட்டா அருளைத் தரவேணும் :—

அன்பு இல்லாதவர்க்கு அத் திருவருள் எட்டாது. அன் பர்க்கு எட்டும்.

..........................யார்க்கும்
எட்டானை என்னளவில் எட்டினானை
எம்மானைக் கண்டு களித் திருக்கின்றேனே" —திருஅருட்பா.

ஒப்பாமற் பாடிச் சேவிப்பார் தத்தாம் வினையைக் களைவோனே :—

என்றுந்தவறாது முருகனைப் பாடிப்பாடி வழிபடுகின்ற அடியார்களது வினைகளை முருகன் களைவான்.

தற்காழிச்சூர் :—

தற்கு ஆழி சூர். தருக்கு என்பது தற்கு என வந்தது. தருக்கு—நான் எனும் அகந்தை.

ஆழி—ஆக்ஞாசக்கரம். 1008 அண்டங்களிலும் ஆக்ஞா சக்கரத்தைச் செலுத்தி ஆண்டவன் சூரபன்மன்.

மெய்ப்போதகத்தாய் :—

சிவஞானமே வடிவானவர் முருகவேள். ஞான பண்டிதன்; ஞானாகரன், ஞானதாதா.

**அப்பாகைப் பாலைப் போல் சொல் :—**

அந்த பாகைப்போல், பாலைப்போல் இனிய மொழிகளை யுடையவர் வள்ளிபிராட்டியார்.

"பாகுகனி மொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா" —(பாதிமதி) திருப்புகழ்.

"தேனென்று பாகென் றுவமிக் கொணு மொழித் தெய்வ வள்ளிக்
கோன்" —கந்தரலங்காரம்.

**காவற் பாவை :—**

தினைப்புனங் காத்தவள் வள்ளி. தினைப்பயிர் என்பது ஞானப் பயிர்.

"தினைவனங்கிளி காத்த சவுந்தரி
அருகு சென்றடி போற்றி மணஞ்செய்து
செகமறிந்திட வாழ்க்கை புரிந்திடும் இளையோனே"
—(முனையழிந்தது) திருப்புகழ்

**அத்தா :—**

அத்தன்—குரு, மூத்தோன்.

**நித்தா :—**

என்றும் உள்ளவர்.

**முத்தா :—**

அநாதியே பாசங்களினின்றும நீங்கியவர்.

**சித்தா :—**

சித்துக்களையுடையவன் சித்தன்.

## கருத்துரை

குமாரக் கடவுளே! எவருக்கும் எட்டாத நின் திருவருளைத் தாரும்.

## 37

நிலையாத சமுத்திர மான
சமுசார துறைக்கணின் மூழ்கி
நிசமான தெனப்பல பேசி யதனூடே

நெடுநாளு முழைப்புள தாகி
பெரியோர்க ளிடைக்கர வாகி
நினைவால் நினடித்தொழில் பேணி துதியாமல்

தலையான வுடற்பிணி யூறி
பவநோயி னலைப்பல வேகி
சலமான பயித்திய மாகி — தடுமாறித்

தவியாமல் பிறப்பையு நாடி
யதுவேரை யறுத்துனை யோதி
தலமீதில் பிழைத்திட வேநி — னருள்தாராய்

கலியாண சுபுத்திர னாக
குறமாது தனக்கு விநோத
கவினாரு புயத்திலு லாவி — விளையாடிக்

களிகூரு முனைத்துணை தேடு
மடியேனை சுகப்பட வேவை
கடனாகு மிதுக்கன மாகு — முருகோனே

பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ — அருள்வேளே

பதியான திருத்தணி மேவு
சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத — பெருமாளே.

## பதவுரை

கலியாண சுபுத்திரன் ஆக = மேன்மை தங்கிய கல்யாண மாப்பிள்ளையாகவே என்றென்றும் விளங்கி, குறமாது தனக்கு = வள்ளியம்மையாரிடத்தில், விநோத = பொழுது போக்குபவராக, கவின் ஆரு புயத்தில் உலாவி = அழகு நிறைந்த அவருடைய திருப்புயத்தில் தழுவி உலாவி, விளையாடி = விளையாடல்களைப் புரிந்து, களி கூரும் உனை = மகிழ்ச்சியை யடையும் தேவரீரை, துணை தேடும் = துணையென்று தேடுகின்ற, அடியேனை சுகப்பட (ஏ, அசை) வை = அடியேனை இன்புறுமாறு வைத்தருள்வீர், கடன் ஆகும் = அடியேனை யாட்கொள்வது தேவரீருக்கு கடனேயாகும்; இது கனம் ஆகும் = அவ்வாறு ஆட்கொள்வதால் உமக்குப்பெருமையும் உண்டாகும், முருகோனே = முருகக் கடவுளே! பலகாலும் = பன்முறையும், உனை தொழுவோர்கள் = தேவரீரை வணங்கும் மெய்யடியார்களை, மறவாமல் திருப்புகழ் கூறி = மறவாமற்படிக்கு திருப்புகழைப்பாடி, படி மீது = இவ்வுலகின் கண், துதித்து = தோத்திரம் செய்வித்து, உடன் வாழ அருள்வேளே = உம்முடன் எப்போதும் இருந்து வாழ அருள் புரிபவரே! சிவலோகம்

என பரிவு ஏறும்=(இப்பூவுலகில்) இதுவே சிவலோகம் என்று அன்பு உண்டாக்கத்தக்க, பதி ஆன திருத்தணி மேவு=திருத்தலமாகிய திருத்தணியில் விரும்பி வாழ்கின்ற, பவ ரோக=பிறவிப் பெரும் பிணியைப் போக்கவல்ல, வயித்தியநாத=மருத்துவத் தலைவரே! பெருமாளே!=பெருமையின் மிக்கவரே! நிலையாத சமுத்திரம் ஆன=ஆழமும் அகலமும் இவ்வளவு என்று காணமாட்டாத மாப் பெருங் கடல்போன்ற, சமுசார துறைகளின் மூழ்கி=சமுசாரமாகிய துறையில் முழுகி, நிசம் ஆனது என பல பேசி=மெய் போன்ற பல பொய்களைப் பேசியும், அதன் ஊடே=அக்கடலின் நடுவே, நெடு நாளும் உழைப்பு உளது ஆகி=நீண்ட நாளாக உழைப்பை யுடையவனாகியும் பெரியோர்கள் இடை கரவாகி=பெரியோர்கள் கூட்டத்தில் திருட்டுத் தனமுடன் ஒளிவுடையவனாகியும். நினைவால் நின் அடி தொழில் பேணி=நல்ல நினைவுடன் தேவரீருடைய திருவடித் தொண்டுகளை விரும்பி, துதியாமல்=துதியாமலும், தலைஆன உடல் பிணி ஊறி=முதன்மையான உடலில் நோய்கள் வந்து தங்கவும், பவ நோயின் அலை பல ஏகி=பிறவிநோய் என்னும் அலைகள் பல இக் கடலில் வீசவும், சலம் ஆன பயித்தியம் ஆகி=துன்பமாகிய பித்து மிகவும், தடுமாறி=அடியேன் தடுமாற்றத்தை யடைந்து, தவியாமல் =தவிக்காவண்ணம், பிறப்பையு நாடி=பிறவியின் கொடுமையை எண்ணி, அது வேரை அறுத்து=அப்பிறவிக் கொடியின் வேரை யறவே யறுத்து, உனைஓதி=தேவரீரை ஓதி, தலமீதில்=இப்பூவுலகில், பிழைத்திட=அடியேன் உய்ந்திடுமாறு, நின் அருள் தாராய்=தேவரீருடைய திருவருளைத் தருவீர்.

## பொழிப்புரை

முருகக் கடவுளே! என்றென்றும் சிறந்த திருமணப் புதல்வராக விளங்கி, வள்ளிநாயகியாருடைய அழகிய புயத்தைத் தழுவி அவருடன் உலாவி, பொழுது போக்கி விளையாடி மகிழும் தேவரீரையே சிறந்த துணையென்று நம்பித் தேடுகின்ற அடியேனை இன்புறுமாறு வைத்தருள்வீர்: இது உமக்குக் கடனேயாம்; எளிமையாகிய என்னைக் காப்பாற்றுதல் உமக்குப் பெருமையுமாம். இவ்வுலகில் என்றென்றும் மறவாமல் திருப்புகழைப் பாடித் துதிக்கும் உமது மெய்யடியார்களை எப்போதும் உமது உடனேயே துதித்து வாழ இன்புற வைத்தருளும் கருணாகரரே! இதுவே சிவலோகம் என்று பார்ப்பவர்கள் பரிவுறும் திருத்தலமாகிய திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள பவரோக வைத்தியநாதப் பெருந்தகையினரே! சமுசாரமாகிய நிலைபேறில்லாத பெரிய கடலில் முழுகி மெய் போன்ற பல பொய்களைப் பேசியும், அச் சமுசார சாகரத்திலேயே நெடுநாளாக உழைப்பவனாகியும், ஆன்றோர் களோடு கூடாது ஒளிப்பவனாகியும், நினைவுடன் உமது திரு

வடித் தொழும்புகளை விரும்பிச் செய்யாதவனுகியும், உடலில் முதன்மையான நோய்கள் வரவும் உயிரில் பிறவிநோய் என்ற அலைகள் பல வீசவும், அதனால் துன்பமாகிய பித்து மிகவும், தடுமாற்றத்தை யடைந்தும் அடியேன் தவியாமற்படிக்கு, பிறந்துழல்வதின் கொடுமையை எண்ணி அப்பிறவியின் வேரை அறவே களைந்தெறிந்து, உய்மை ஒதி உலகில் உய்யு மாறு திருவருள் புரிந்து ஆட்கொள்வீர்.

## விரிவுரை

**நிலையாத சமுத்திரமான சமுசாரம்:—**

சமுசாரத்தை நிலையாத சமுத்திரம் என்று சுவாமிகள் கூறியது எத்துணை அழகாகவும் அநுபவமாகவும் இருக்கின்ற தென்பதை அன்பர்கள் உய்த்துணாக.

(1) கடலில் ஓயாமல் அலைகள் வீசிக்கொண்டே யிருக் கின்றன; சமுசாரத்திலும் இன்ப துன்பங்களாகிய அலைகள் வந்துகொண்டே யிருக்கின்றன.

(2) கடலில் கப்பல்கள் மிதந்து கொண்டேயிருக்கின்றன. சமுசாரத்திலும் ஆசைகளாகிய மரக்கலங்கள் மிதக் கின்றன.

(3) கடலில் திமிங்கலங்கள் முதலைகள் வாழ்கின்றன. சமுசாரத்திலும் நம்மை எதிர்க்கின்ற பகைவர்கள் வாழ்கின்றனர்.

(4) கடலில் பலவகைப்பட்ட மீன்கள் உலாவி வயிறு வளர்க்கின்றன. சமுசாரத்திலும் மனைவி மக்கள் முதலியோர் உலாவி வயிறு வளர்க்கின்றனர்.

(5) கடலுக்குள் மலைகள் இருக்கின்றன. சமுசாரத்திலும் அகங்காரமாகிய மலை பெரிதாக வளர்ந்திருக்கின்றது.

(6) கடல் ஆழமும் கரையுங் காணமாட்டாமல் பயங்கர மாக இருக்கின்றது. சமுசாரமும் எவ்வளவு சம்பா தித்துப்போட்டாலும் போட்ட இடங்காணுது முடிவு இன்றி பயங்கரத்தை விளைவிக்கின்றது.

சமுசாரத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் இவ்வநுபவ மொழி நன்கு புலனுகும். அந்தோ! இச் சாரமில்லாத சமு சாரம் எத்துணை அச்சத்தைத் தருகின்றது? அம்மம்மா! இதனின்றும் தப்பிக் கரை சேர்வது அருமையினும் அருமையே.

**நிசமான தெனப்பல பேசி:—**

சமுசாரத்தில் ஆழ்ந்து கிடப்பவர் கேவலம் வயிற்றை வளர்க்கும் பொருட்டும், மனைவி மக்களைக் காப்பாற்றும்

பொருட்டும் மெய்போன்ற பொய்களைப் பற்பல விதமாகவும், சாமர்த்தியமாகவும் பேசியுழல்வர்.

உதாரணம் :—

(1) ஒரு நாளைக்கு 50 ரூபாய் சம்பாதிக்கும் வழி இப்புத்தகத்தில் உள்ளது இதன் விலை ரூபாய் 1-00. (நாளொன்றுக்கு ஐம்பது ரூபாய் சம்பாதிக்கும் வழியைத் தெரிந்தவன் புத்தகத்தை இருபக்கமும் கம்பியால் பொதிந்து விற்றுக்கொண்டு அலைய வேண்டாமே?)

(2) இந்த மருந்து 250 வியாதிகளைக் கண்டிக்கும். இம் மருந்தை யுண்டு 3 மணி நேரத்தில் குணமில்லை என்றால் ரூ. 1000 இனாம்.

(3) நோயில்லாத பொழுது டாக்டர் சர்டிபிகேட் தந்து லீவு எடுத்தல்; இவைபோல் எத்தனையோ ஆயிரம் மெய் போன்ற பொய்கள்.

**நெடுநாளும் உழைப்புளதாகி :—**

"என்று நீ அன்று நான் உன் அடிமையல்லவோ" என்றபடி இறைவன் என்று உளனோ அன்று உயிர்களும் உண்டு; அன்றுதொட்டு உழன்று வருகின்றோம்.

**பெரியோர்க ளிடைக்கரவாகி :—**

அறிவான்ற ஆன்றோர்களிடம் கூடிப் பழகினால் ஆவி ஈடேறுவதற்குரிய உண்மை நெறிகளை உபதேசிப்பர்; இடித்துக் கூறி உய்விப்பர். ஆதலால் அறிஞரிடம் செல்லாதும், தற்செயலாக அவரைக் காண நேர்கினும் ஒளிந்தும் ஒதுங்கியும் செல்வது

**அடித்தொழில் பேணி :—**

அடிமைகளாகிய உயிர்கள் ஆண்டானுடைய அடித்தொண்டு புரிந்தாலன்றி உய்வது யாங்ஙனம்?

ஆமாறுன் திருவடிக்கே யகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. —மணிவாசகம்.

**தலையான உடற்பிணியூறி :—**

மேற் கூறியவாறு இறைவனை நினைந்து திருத்தொண்டுகள் செய்து புண்ணியத்தைத் தேடாது, கயவருடன் கூடி வறிதே காலத்தைக் கழித்து கூடாவொழுக்கங்களை மேற்கொண்டதன் பயனாக உடம்பில் முதற்றரமான குட்டம், க்ஷயம் முதலிய நோய்கள் வந்து குடிபுகுகின்றன.

பிறவிநோய் உயிர்ப்பிணி என்று பிரித்துணரும் பொருட்டு இவைகளை உடற்பிணி என்ற அருமை நுனித்து நோக்குந் தோறும் சிந்தை உருகுகின்றது.

**பவநோயின் அலைப் பலவேகி :—**

முதல் வரியில் நிலையாத சமுத்திரம் என்று எடுத்துக் கொண்டதற்கிணங்க, இந்த ஓயாது பிறந்து இறந்து வருவதைப் பல அலையென்றனர்.

> "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"
>
> —மணிவாசகம்.

**பிறப்பையு நாடி அதுவேரையறுத்து :—**

இவ்வாறு எண்ணில்லாத பல்யுகங்களாக, எண்ணில்லாத பிறவிகளை எடுத்து மாறி மாறி யுருவெடுத்து வரும் இப்பிறவியின் துன்பததை நன்கு எண்ணிப் பார்த்து, இப்பிறவியின் வேரை அறுதெறிய வேண்டும். இதற்கும் இறைவனையே வேண்டி நிற்றல் வேண்டும்.

> வெறுப்பனவே செய்யுமென் சிறுமையைநின் பெருமையினாற்
> பொறுப்பவனே யராப் பூண்பவனே பொங்கு கங்கைசடைச்
> செறுப்பவனே நின் திருவரு ளாலென் பிறவியை வேர்
> அறுப்பவனே யுடையா யடியே னுன் னடைக்கலமே. —மணிவாசகம்.

**கலியாண சுபுத்திரனுக......உனைத் துணைதேடும் :—**

"மனைவியை மணந்து சமுசாரத்தில் உழன்று துன்புறு வேனாகிய அடியேன், வள்ளி மாதுடன் மகிழும் உம்மையே துணை தேடுகின்றேன்" என்ற நயம்-எத்துணை அழகாகவும் ஆழமாகவும், சிந்திக்குந்தொறும் சித்தத்தில் தித்திக்கின்ற தென்பதையும் அன்பர்கள் உற்று நோக்குக.

**கடனாகும் :—**

அடிமைகளைக் காத்தல் ஆண்டானுக்குக் கடன் தானே.

> தன்கடன் அடியேனையுந் தாங்குதல்"

**கனமாகும் :—**

மாலயனாதி வானவரைக் காப்பாற்றியதைவிட எளியோரைக் காப்பாற்றுவதுதான் புகழ்.

> "வறியார்க் கொன்றீவதே யீகை"

"முருகா! நான் ஒரு சம்சாரி. தேவரீரும் இரு மனைவியரை மணந்துள்ள ஒரு பெரிய சம்சாரி; பெற்றவட்கே பிள்ளையருமை தெரியும். அதுபோல் சமுசாரிக்கே சமுசாரியின் துன்பம் நன்கு புலனாகும். ஆதலால் சமுசார சாகரத்தில் மூழ்கித் துன்புறும் எளியேனை யாட்கொள்வது உமக்குக் கடனும் பெருமையும் ஆகும். பொன்னுலகில் உள்ள இந்திராதி இமையவரை யாட்கொண்டது அத்துணைப் பெருமையாகாது. ஏன்? தனவந்தனுக்கு உணவு தருவது புண்ணியமாகுமா? ஏழைக்கல்லவா உணவும் உடையுந் தரவேண்டும். அதுதானே பெருமை. ஆதலால் என்னைக் காப்பாற்றினால்தான் உமக்கு உண்மையும் நிலைபேறும் உடைய புகழ் கிடைக்கும்" என்று உரிமையுடன் முறையிட்டுச் சுவாமிகள் வழக்கிடும் பண்பு எம்போல்வார்க்கு எத்துணை மகிழ்ச்சியை விளைவிக்கின்றது.

**பலகாலும்......வாழ அருள்வேளே :—**

எப்போதும் இளம் பூரணனாகிய முருகனையே துதிக்கும் அடியார்களை அப்பரமபதி தமது அருகில் வைத்து திருப்புகழ் பாடி மறவாமல் துதிக்குமாறு அருள் புரிவார்.

வேள்—விரும்பப்படுபவர்.

**சிவலோகம் எனப்பரிவேறும் :—**

திருத்தணிகை தொண்டை நாட்டுத் திருப்பதி. அது மிகவும் உயர்ந்த சுப்ரமண்ய க்ஷேத்திரம். ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர் ஓதும் பெருமையுடையது.

**பவரோக வயித்தியநாதப் பெருமாளே :—**

"பெம்மான் முருகன் பிறவா னிறவான்"

என்ற திருவாக்கின்படி, பிறவாப் பெருந்தகையாகிய முருகவேள் பிறவிப் பெருபிணிக்கு வயித்தியநாதராக விளங்குகின்றார். முருகர் பரம்பரை வைத்தியர்; அவருடைய பிதாவும் வைத்தீச்வரர்; மருந்தீசர். வைத்தீசர் மகன் வைத்தியனென்பதில் என்ன தடையுளது? இந்த வைத்திய நாதன திருத்தணி மலைமேலிருக்கின்றான். குழந்தைகளே! வாருங்கள்; பிறவி நோய்க்கு வருந்த வேண்டாம். என்னிடம் வாருங்கள். பிறவாப் பெறற்றையைப் பெறலாம். என்னிடம் அந்நோய்க்கு நல்ல மருந்துளது. இன்றே வாருங்கள், இப்பொழுதே வாருங்கள்" என்று அறைகூவி அழைக்கின்றான்.

"வருகவென அறைகூவி யாளுவதும்" —சீர்பாத வகுப்பு

## கருத்துரை

வள்ளி மணவாளரே! திருப்புகழைப் பாடுவித்து அடியவரை யாட்கொள்பவரே! தணிகைமலைமேவு பவரோக வைத்திய நாதரே! நிலையாத சமுசாரமாகிய கடலினின்றும் அடியேனைக் கரையேற்றி ஆட்கொள்வீர்.

## 38

நினைத்த தெத்தனையிற் றவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமற்
கனத்த தத்துவமுற் றழியாமற்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்த ணிப்பதியிற் பெருமாளே.

## பதவுரை

மனித்தர் பத்தர் தமக்கு எளியோனே = மனிதர்களுக்குள் பத்தர்கட்கு எளியவரே! மதித்த முத்தமிழில் = மதிக்கப்படுகின்ற இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழில், பெரியோனே = பெரியவரே! செனித்த புத்திரரில் சிறியோனே = சிவமூர்த்தியிடம் தோன்றிய குமாரர்களுள் இளையவரே! திருத்தணி பதியில் = திருத்தணியம்பதியில் வாழ்கின்ற, பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! நினைத்தது எத்தனையில் தவறாமல் = நினைத்தது எந்த அளவும் தவறாமல் இருக்கவும், நிலைத்த புத்திதனை பிரியாமல் = நிலையான ஞானத்தை விட்டு அடியேன் விலகாமல் இருக்கவும், கனத்த தத்துவம் உற்று அழியாமல் = பெருமைவாய்ந்த தத்துவங்களைக் கடந்து அப்பாற் சென்று அழியாமல் இருக்கவும், கதித்த நித்திய சித்து = வெளிப்படுகின்ற அழியாத சித்தியை, அருள்வாயே = அடியேனுக்கு அருள் புரிவீராக.

## பொழிப்புரை

மனிதர்களுள் அன்புடையார்க்கு எளியவரே! மதிக்கப்படும் முத்தமிழில் பெரியவரே! தோன்றிய சிவ குமாரரில் இளையவரே! திருத்தணிப் பதியில் வாழ்கின்ற பெருமிதம் உடையவரே! நினைத்த கருமங்கள் யாவும் தவறாமல் கைகூடவும், நிலைத்த அறிவினின்றும் பிரியாமல் இருக்கவும் பெருமை வாய்ந்த தத்துவங்களைக் கடந்து அப்பாலான

நிலையைப் பெற்று அழியாதிருக்கவும், வெளிப்பட்ட அழியாத சித்தியை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**நினைத்த தெத்தனையில் தவறுமல் :—**

'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர், எண்ணியர் திண்ணியர் ஆகப பெறின்'—என்று திருவள்ளுவர் கூறியாங்கு உத்தமர்கள் உறுதியாக எண்ணிய யாவும் நிறைவேறும்.

**நிலைத்த புத்திதனைப் பிரியாமல் :—**

அறிவு நிலைத்திருக்க வேண்டும். அவ்வறிவினை விட்டுப் பிரியாமல் இருக்க வேண்டும்.

**கனத்த தத்துவமுற்றழியாமல் :—**

தத்துவங்கள் 36. ஆன்ம தத்துவம் 24, வித்யா தத்துவம் 7 சிவ தத்துவம் 5 ஆக 36.

"ஆருறையுநீத் ததன்மேல் நிலையைப்
பேருஅடியேன் பெறுமா றுளதோ" —அநுபூதி.

முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்தால் இறைவனைக் காணலாம்.

கண்ணப்ப நாயனார் காளத்தி மலையின் படிகளில் ஏறும் காட்சி தத்துவங்களைக் கடந்து செல்லுவது போல் இருக்கின்றதாம்.

நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத்தாமும்
பேணுதத் துவங்கள் என்னும் பெருகு சோபானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையில் ஏறி நேர்படச் செல்லும் போதில்.

**கதித்த நித்திய சித்தருள்வாயே :—**

நித்திய சித்து-என்றும் அழியாத சித்து. அதனை அருணை முனிவர் பெற்றார். அதனைப் பெற்றேன் என்று பிறிதோரிடத்தில் பாடுகின்றார்.

"அவமே பிறந்தனை இறவாமல அன்பர்புகும்
அமுதாலயம் பதவி அருள்வோனே"
—(சிவஞான) திருப்புகழ்.

**மனித்தர் பத்தர் தமக் கெளியோனே :—**

மனிதர்களுள் அன்பு செய்யும் அடியார்க்கு முருகன் எளியவன்.

'மாலையனுக் கரியானே மாதவரைப் பிரியானே'
—(காலனிட) திருப்புகழ்.

"அபிநவ துங்ககங்கா நதிக்கு மைந்த அடியவர்க் கெளியோனே."
—(தமரகுரங்களும்) திருப்புகழ்.

**மதித்த முத்தமிழ் :—**

இயல், இசை, நாடகம். இறைவன் சத்து, சித்து, ஆனந்தம்.

**செனித்த புத்திரரிற் சிறியோனே :—**

சிவ குமாரர்கள் விநாயகர், வீரபத்திரர், வைரவர், வேலவர். ஆக நால்வரில் இளையவர் குமாரக் கடவுள்.

## கருத்துரை

திருத்தணிக் குமரா ! நித்திய சித்தை அருள் புரிவீர்.

## 39

பகலி ராவினுங் கருவி யாலனம்
பருகி யாவிகொண் டுடல்பேணிப்
பழைய வேதமும் புதிய நூல்களும்
பலபு ராணமுஞ் சிலவோதி

அகல நீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோரை
அசடர் மூகரென் றவல மேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ

சகல லோகமும் புகல நாடொறுஞ்
சறுகி லாதசெங் கழுநீருந்
தளவு நீபமும் புனையு மார்பதென்
தணிகை மேவுசெங் கதிர்வேலா

சிகர பூதரந் தகர நான்முகன்
சிறுகு வர்சவன் சிறைமீளா
திமிர சாகரங் கதற மாமரஞ்
சிதற வேல்விடும் பெருமாளே.

## பதவுரை

சகல லோகமும் புகல = எல்லா உலகங்களும் புகழும்படி, நாள் தொறும் = தினந்தோறும், சறுகு இலாத = தவறுதல் இன்றி, செங்கழு

நீரும் = செங்கழுநீர் மலரும், தளவு = முல்லை மலரும், நீபமும் = கடப்ப மலரும், புனையும் மார்ப = அணிகின்ற திரு மார்பரே! தென் தணிகை மேவு = அழகிய தணிகையில் வாழ்கின்ற, செம்கதிர் வேலா = செவ்விய ஒளியுடைய வேலாயுதரே! சிகர பூதரம் தகர = சிகரங்களையுடைய கிரவுஞ்சமலை பொடியாகவும், நான்முகன் = பிரமதேவரும், சிறுகு வாசவன் = தன் உயர்நிலையினின்றுந் தாழ்ந்துவிட்ட இந்திரனும், சிறைமீள = சிறைச்சாலையினின்று மீட்சி பெறுமாறும், திமிர சாகரம் கதற = இருண்ட கடல் கதறி ஒலி செய்யவும், மாமரம் சிதற = மாமரமான சூரன் பிளவுபடவும், வேல் விடும் = வேலாயுதத்தை விடுத்தருளிய, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! பகல் இராவினும் = பகலிலும் இரவிலும், கருவியால் = உடம்பு என்ற இக்கருவியினால், அனம் பருகி = அன்னத்தையுண்டு, ஆவிகொண்டு உடல் பேணி = உயிரை ஓம்பி உடம்பை விரும்பி வளர்த்து, பழைய வேதமும் = பழமையான வேத நூல்களையும் புதிய நூல்களும் = புதுமையாக எழுந்த நூல்களையும், பலபுராணமும் சில ஓதி = பலவகையான புராணங்களையும் ஒருவாறு சிலவற்றை ஓதியுணர்ந்து, அகலம் நீளம் என்று அளவு கூற அரும் = அகலம் நீளம் என்ற ஓர் அளவு சொல்லுதற்கு இயலாத, பொருளிலே அமைந்து அடைவோரை = பேரின்பப் பொருளிலே மனத்தை வைத்து அடைய வல்லோரை, அசடர் மூகர் என்று = மூடர் என்றும் ஊமையர் என்றும், அவலமே மொழிந்து = வீண் வார்த்தைகளைப் பேசி, அறிவிலேன் = அறிவிலியாகிய அடியேன், அழிந்திடலாமோ = அழிந்து போகலாமோ?

## பொழிப்புரை

எல்லா வுலகங்களும் புகழும்படி நாள்தோறும் தவறாமல் மலர்கின்ற செங்கழுநீர மலரும், முல்லையும், கடப்ப மலரும் தரிக்கின்ற திருமார்பினரே! அழகிய திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள செவ்விய ஒளி வீசும் வேலாயுதரே! சிகரங்களுடன் கூடிய கிரவுஞ்ச மலை பொடிபடவும், பிரமதேவனும், நிலைகுலைந்த இந்திரனும் சிறையிலிருந்து மீட்சியடையவும் இருண்ட கடல் கதறவும், அதில் மாமரமாக முளைத்த சூரன் பிளவுபடவும் வேலை விடுத்தருளிய பெருமிதம் உடையவரே! பகலிலும் இரவிலும் உடம்பாகிய கருவியால் அன்னம் உண்டு உயிர்கொண்டு உடலை வளர்த்து, பழைய வேதங்களையும், புதிய நூல்களையும் பல புராணங்களையும் ஓதியுணர்ந்து, அகலம் நீளம் என்று அளக்க முடியாத பேரின்பப் பொருளிலே மனத்தை வைத்து அடைகின்ற ஆன்றோரை, மூடர் என்றும் ஊமையர் என்றும் இகழுரை கூறி அறிவில்லாத அடியேன் அழியலாமோ?

## விரிவுரை

**பகலிரவினும் கருவியாலனம் பருகியாவி கொண்டுடல்பேணி :—**

இரவும் பகலும் உடம்பாகிய கருவியால் சிறிது உணவுண்டு இந்த உயிரைப பேணும் பொருட்டுப் பெரியோர்கள் உடம்பை வளர்ப்பார்கள்.

> உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
> உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
> உடம்புளே உத்தமன் கோயில் கொண் டானென்
> றுடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே; —திருமந்திரம்.

**பழைய வேதமும் :—**

வேதம் அநாதி. சுயம்பு. இறைவனுடைய திருவாக்கு.

**புதிய நூல்களும் :—**

ஆன்றோர்கள் உண்டாக்கிய புதிய நூல்கள்.

**பல புராணமும் சிலவோதி :—**

புராண வகைகள் பல. அவற்றுள் சிலவற்றை ஓதியுணர்ந்து அடங்கி நிற்பார்கள் மகான்கள்.

**அகல நீளமென்றளவு கூறரும் பொருளிலே யமைந்தடைவோரை :—**

பரம்பொருளின் அகலம், நீளம் இவற்றை யாரால் அளந்து அறிய முடியும்?

> "அகலநீளம் யாதாலும் ஒருவராலும் ஆராய
> அரிய மோனமே கோயில் என மேவி" —திருப்புகழ்.

அப்பரம் பொருளில் சித்தத்தை வைத்து நித்தம் சமாதி நிலையில் கூடியிருப்பவர்கள் பெரியோர்கள்.

**அசடர் மூகரென்றவலமேமொழிந்து :—**

சமாதி நிலையில் உள்ள மகான்களை மூடர் என்றும் ஊமையர் என்றும் உலகவர் இகழ்வார்கள்.

**சறுகிலாத செங் கழுநீரும் :—**

சறுகிலாத—தவறுதல் இன்றி. திருத்தணிகையில் நாள் தோறும் தவறாது செங்கழுநீர் மலரும்.

தளவு—முல்லை மலர். நீபம்—கடப்பமலர்.

## கருத்துரை

தணிகேசா! ஞானிகளைப் பழித்தல் கூடாது.

## 40

பழமை செப்பிய ழைத்தித மித்துடன்
முறைம சக்கிய ணைத்துந கக்குறி
படஅ ழுத்திமு கத்தைமு கத்துற வுறவாடிப்
பதறி யெச்சிலை யிட்டும ருத்திடு
விரவு குத்திர வித்தைவி ளைப்பவர்
பலவி தத்திலு மற்பரெ னச்சொலு மடமாதர்

அழிதொ ழிற்குவி ருப்பொடு நத்திய
அசட னைப்பழி யுற்றஅ வத்தனை
அடைவு கெட்டபு ரட்டனை முட்டனை அடியேனை
அகில சத்தியு மெட்டுறு சித்தியு
மெளிதெ னப்பெரு வெட்டவெ ளிப்படு
மருண பொற்பத முற்றிட வைப்பது மொருநாளே

குழிவி ழிப்பெரு நெட்டல கைத்திரள்
கரண மிட்டுந டித்தமி தப்படு
குலிலி யிட்டக ளத்திலெ திர்த்திடு மொருசூரன்
குருதி கக்கிய திர்த்துவி ழப்பொரு
நிசிச ரப்படை பொட்டெழ விக்ரம
குலிச சத்தியை விட்டருள் கெர்ச்சித மயில்வீரா

தழையு டுத்தகு றத்திப தத்துணை
வருடி வட்டமு கத்தில தக்குறி
தடவி வெற்றிக தித்தமு லைக்குவ டதன்மீதே
தரள பொற்பணி கச்சுவி சித்திரு
குழைதி ருத்திய ருத்திமி குத்திடு
தணிம லைச்சிக ரத்திடை யுற்றருள் பெருமாளே.

### பதவுரை

குழி விழி=குழிந்த கண்களையுடைய, பெருநெட்டு அலகை திரள்=நீண்ட பெரிய பேய்க் கூட்டங்கள், கரணம் இட்டு நடித்து=தலைகீழாகக் கரணம் இட்டுக் கூத்தாடி, அமிதப்பட்டு=அளவில்லாத, குலிலி இட்ட=வீராவேச ஒலி செய்த, களத்தில் எதிர்த்திடும்=போர்க்களத்தில் எதிர்த்து வந்த, ஒரு சூரன்=ஒப்பற்ற சூரபன்மன், குருதி கக்கி=உதிரத்தைக் கக்கி, அதிர்த்து

விழ = அதிர்ச்சியடைந்து விழும்படியும், பொரு நிசிசர படைபொட்டு எழ = போர் புரிந்தஅசுர சேனைகள் பொடிபட்டு அழியவும், விக்ரம குலிச சத்தியை விட்டு அருள் = ஆற்றல் பொருந்திய வச்சிராயுதத்தை விடுத்தருளிய, கெர்ச்சித = பேரொலி செய்யும், மயில் வீரா = மயில் வீரனே! தழை உடுத்த குறத்தி = தழைகளைத் தைத்து உடையாக உடுத்துள்ள வள்ளிநாயகியின், பத துணை = இரண்டு பாதங்களையும், வருடி = கையால் பிடித்தும், வட்ட முக = வட்டமான முகத்தில் திலத குறி தடவி = பொட்டு அடையாளத்தை வைத்தும், வெற்றி கதித்த = வெற்றியால் மிகுந்த, முலைக்குவடு அதன் மீது = தனங்களாகிய மலைகளின்மீது, தரள பொன் பணி = முத்து மணிகளாகிய அழகிய ஆபரணங்களும், கச்சு விசித்து = இரவிக்கையையும் கட்டி, இரு குழை திருத்தி = இரண்டு குழைகளையும் திருத்தியும், அருத்தி மிகுத்திடு = வள்ளிபிராட்டியின்மீது அன்பு மிகுந்துள்ளவரே! தணி மலை சிகரத்திடை = திருத்தணி மலையின் உச்சியின்மீது, உற்று அருள் = எழுந்தருளியிருக்கும், பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! பழமை செப்பி அழைத்து = பழைய உறவை எடுத்துக் கூறி அழைத்து, இதம் இத்துடன் = இன்பமும் இதனுடன், முறை மசக்கி = மாமா என முறை வைத்துக் கூப்பிட்டு மயக்கி, அணைத்து = தழுவி, நக குறிபட அழுத்தி = நகத்தின் அடையாளம் பதியுமாறு அழுத்தி, முகத்தை முகத்து உறவாடி = முகத்தை முகத்துடன் வைத்து உறவு செய்து, பதறி = அவசரப்பட்டு, எச்சிலையிட்டு = தம் வாயில் இருந்த பொருளைக் கொடுத்து, மருத்து இடு = மருந்தை யிட்டு, விரவு குத்திர வித்தை விளைப்பவர் = வஞ்சனை கலந்த வித்தையைச் செய்பவர்கள், பலவிதத்திலும் அற்பர் எனச் சொலும் மடமாதர் = பலவகைகளிலும் அற்பர் என்று சொல்லத் தக்க அறிவில்லாத மாதர்களுடன், அழிதொழிற்கு விருப்பொடு நத்திய அசடனை = அழிவதற்கு ஏதுவாகிய தொழில்களில் விருப்பத் துடன் ஆசைப்படும் மூடனை, பழி உற்ற அவத்தனை = பழிக்கு ஆளான வீணனை, அடைவு கெட்ட புரட்டனை = புகலிடம் இல்லாத பொய் யனை, முட்டன் அடியேனை = அறிவற்றவனாகிய அடியேனை, அகில சத்தியும் = எல்லாவிதமான ஆற்றலும், எட்டு உறு சித்தியும் = அஷ்டமா சித்திகளும், எளிது என பெருவெட்ட வெளிப்படும் = எளிதாக பெரிய வெட்ட வெளியில் தோன்றும், அருண பொன் பதம் = சிவந்த அழகிய உமது பாதங்களை, உற்றிட வைப்பதும் = எளியேன் சேரும்படி வைக்கும், ஒரு நாளே = ஒரு நாள் கிடைக் குமோ?

## பொழிப்புரை

குழிந்த கண்களையுடைய பெரிய நீண்ட பேய்க் கூட்டங் கள், கரணம் போட்டுக் கூத்தாடி அளவில்லாத வீராவேச

ஒலி செய்த போர்க்களத்தில் எதிர்த்துவந்த ஒப்பற்ற சூரன் உதிரத்தைக் கக்கி, அதிர்ச்சியுடன் விழும்படியும், போர்செய்த அசுர சேனைகள் பொடிபட்டு அழியவும், ஆற்றல் மிகுந்த வச்சிராயுதத்தைச் செலுத்திய வீரரே! பேரொலி செய்யும் மயில் வீரரே! தழையுடையுடுத்த குறமகளின் பாதம் இரண்டையும் வருடியும், வட்டமான முகத்தில் திலகம் வைத்தும், வெற்றியுடன் தோன்றும் கொங்கையாகிய மலைகளின் மீது, அழகிய முத்துமாலையும் இரவிக்கையும் அணிந்துகொண்டும், இரண்டு குழைகளைத் திருத்தியும் அன்பு மிகுந்த திருத்தணிகை மலையின் உச்சியில் வீற்றிருக்கின்ற பெருமையின் மிகுந்தவரே! பழைய உறவை எடுத்துக்கூறி அழைத்தும், இன்பத்துடன் முறை வைத்துக் கூறி மயங்கச் செய்து தழுவியும், நகக் குறி வைத்து முகத்தோடு முகத்தை வைத்து உறவாடியும், அவசரமாகத் தமது எச்சிலாகிய தாம்பூலத்தைக் கொடுத்தும், மருந்து வைத்தும், வஞ்சனை கலந்த வித்தை செய்பவர்; பல வகையாலும் அற்பர் என்று சொல்லத்தக்க பொதுமாதர்களுடன் அழிவதற்குக் காரணமாம் தொழில் செய்ய விரும்புகின்றவனை, அறிவில்லாதவனை, பழியை மேற்கொண்ட வீணனை, புகலிடம் இல்லாத பொய்யனை, மூடனாகிய அடியேனை, எல்லா சக்தியையும் அஷ்டமாசித்தியையும், எளிதாகக் கிட்டும்படி பெரிய வெட்டவெளியில் தோன்றுகின்ற திருவடியைச் சேரும்படியாகச் செய்யும் நாள் ஒன்று அடியேனுக்குக் கிடைக்குமோ?

## விரிவுரை

**பழமை செப்பியழைத்து :—**

பொதுமகளிர் தம்மை நன்கு அலங்கரித்துக்கொண்டு வீதியில் நின்று, அவ் வழி செல்லும் இளைஞர்களை "உங்கள், அப்பா காலம் முதல் எங்களுடன் உறவு உண்டு. ஆதலால் நம்ம வீட்டுக்கு வாருங்கள்" என்று அழைப்பார்கள்.

**முறை மசக்கியணைத்து :—**

பொருட் பெண்டிர் ஆதலால் தந்தையும் மைந்தனும் உடனாக மயக்கஞ் செய்து தழுவிக் கொள்வர்.

**எச்சிலையிட்டு :—**

"ஒருத்தர் வாய்ச்சுருள் ஒருவர் கை யுதவுவர்"
—(பழிப்பர்) திருப்புகழ்.

**எட்டுறு சித்தியும் :—**

முருகனைப் பணிவார்க்கு அட்டமா சித்தியும் எளிதில் உண்டாகும். சித்தி, முத்திக்கு ஊறுதரும். ஆதலால் அதனைப் பெரியோர்கள் பொருள் செய்ய மாட்டார்கள்.

1. அணிமா :—அணுவைப் போல் சிறிய உருவாகும் ஆற்றல்.

2 மகிமா :—மேருகிரியிலும் பெரிய வுருவாக நிற்கும் ஆற்றல்

3. கரிமா :—மிகவும் கனமாக நிற்கும் ஆற்றல்.

4. லகிமா :—பஞ்சிலும் நொய்தாக நிற்கும் ஆற்றல்.

5. பிராத்தி :—விரும்பியதைப் பெறும் பேறு.

6. பிராகாமியம் :—நினைத்த போகமெல்லாம் பெறுவது. (ஏககாலத்தில் பெண்கள் பலரொடும் இன்பம் நுகர்தல்)

7. ஈசத்துவம் :—யார்க்குந் தேவனுதல்.

8. வசித்துவம் :—எல்லாவற்றையும் தன் வசமாக்கும் ஆற்றல்

"கருப்புகழாம் பரசமயக் கதைகேளா தநுதினமுன்
திருப்புகழைக் கற்பார்க்குச் சித்தியெட்டும் எளிதாமே"

—தணிகைக் கலம்பகம்.

**தழையுடுத்த :—**

வேடுவர்கள் காட்டில் உள்ள தழைகளைத் தைத்து உடையாக உடுத்துக் கொள்வார்கள்.

"மரகத மணிப்பணியின் அணிதழை யுடுத்துலவு
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்"

—வேடிச்சிகாவலன் வகுப்பு.

**திலதக் குறிதடவி :—**

இந்த ஏழாவது அடியும் எட்டாவது அடியும் தலைவன் தலைவியினுடைய அணிகளைத் திருத்துதல் என்ற துறையில் வந்தது.

## கருத்துரை

திருத்தணிகைப் பெருமானே! ஆசை வயப்படாது அடியேன் உனது பாதமலர் சேர அருள் புரிவாய்.

## 35

புருவ நெறித்துக் குறுவெயர் வுற்றுப்
புளகிட வட்டத் தனமாஞர்
பொருவிழி யிற்பட் டவரொடு கட்டிப்
புரளு மசட்டுப் புலையேனைக்
கருவழி யுற்றுக் குருமொழி யற்றுக்
கதிதனை விட்டிட் டிடுதீயக்
கயவனை வெற்றிப் புகழ்திகழ் பத்மக்
கழல்கள் துதிக்கக் கருதாதோ

செருவசு ரப்பொய்க் குலமது கெட்டுத்
திரைகட லுட்கப் பொரும்வேலா
தினைவன முற்றுக் குறவர் மடப்பைக்
கொடிதன வெற்பைப் புணர்மார்பா

பெருகிய நித்தச் சிறுபறை கொட்டிப்
பெரிகை முழக்கப் புவிமீதே
ப்ரபலமுள் சுத்தத் தணிமலை யுற்றுப்
ப்ரியமிகு சொக்கப் பெருமாளே.

## பதவுரை

செரு அசுர=போர் புரியும் அசுரர்களுடைய, பொய் குலம் அது கெட்டு=பொய்மை மிகுந்த குலம் அழியவும், திரைகடல் உட்க=அலைகளுடன் கூடிய கடல் அஞ்சவும், பொரும் வேலா=போர்செய்த வேலாயுதரே! தினைவனம் உற்று=தினைக்காட்டை யடைந்து, குறவர் மட பை கொடி=மறவர் மகளாகிய மடக் கொடியும் பைங்கொடியுமாகிய வள்ளிநாயகியின், தனவெற்பை புணர் மார்பா=தனமாகிய மலையைத் தழுவிய திருமார்பினரே! பெருகிய நித்தம்=தினந்தோறும் ஒலி பெருகுகின்ற, சிறுபறை கொட்டி=சிறிய பறைகளைக் கொட்டி முழக்க, பெரிகை முழக்க=பேரிகையை யடித்து முழக்க, புவிமீதே=பூதலத்திலே, ப்ரபலம் உள்=புகழ் உள்ள, சுத்த தணிமலை உற்று=தூய திருத்தணிகை மலையில் எழுந்தருளியிருந்து, ப்ரியமிகு=அத்தலத்தில் மிகுந்த அன்புகொண்ட, சொக்க=அழகிய, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! புருவம் நெறித்து=புருவத்தை நெறித்த, குறுவெயர் உற்று=சிறிய வெயர்வையுற்று, புளகித வட்ட தனமாதர்=பூரிக்கின்ற வட்டமான கொங்கைகளையுடைய பொது மாதர்களின், பொரு விழியில் பட்டு=பூசலிடும் கண் வலையில் அகப்பட்டு, அவரொடு கட்டிப் புரளும் அவர்களுடன் தழுவிப் புரளுகின்ற, அசட்டு புலையேனை=அறிவில்லாத கீழ்மகனாகிய அடியேன், கருவழி உற்று=கருவில் விழும் வழியையே பின்பற்றி, குருமொழி அற்று=குருமொழியைக் கைவிட்டு, கதிதனைவிட்டு இடு=நற்கதியை அடைதலை ஒழிந்தவன், தீய கயவனை=கொடிய மூடனுமாகிய அடியேன், வெற்றி=வெற்றியும், புகழ் திகழ்=புகழும் விளங்குகின்ற, பத்ம கழல்கள் துதிக்க=தாமரை போன்ற திருவடிகளைத் துதிக்கும் பேறு பெற, கருதாதோ=உமது திருவுள்ளஞ் சிந்திக்காதே?

## பொழிப்புரை

போர் செய்கின்ற அசுரர்களுடைய பொய்மை மிகுந்த குலம் அழியவும், அலைகள் மிகுந்த கடல் அஞ்சவும் வேலா

யுதத்தால் போர் புரிந்தவரே! தினைவனத்திற் சென்று, குறவர் குல மடமங்கையாகிய பைங்கொடி போன்ற வள்ளிபிராட்டி யின் தன மலையைத் தழுவுகின்ற திருமார்பையுடையவரே! தினமும் ஒலி பெருகுகின்ற சிறுபறைகளையும், பேரிகைகளை யும் முழக்குகின்ற புகழும், பூமியில் தூய்மையும் உடைய திருத்தணிகை மலைமீது அன்புடன் எழுந்தருளியுள்ள அழகிய பெருமிதம் உடையவரே! புருவத்தை நெறித்து சிறுவெயர் வைத்துளி விளங்கப் பூரித்துள்ள வட்டமான தனங்களை யுடைய பொது மாதர்களின், பூசல் செய்யும் கண்களின் வலையில் வீழ்ந்து, அவர்களைத் தழுவிப் புரளுகின்ற கீழ் மகனும், புலையனும், கருவில் விழும் தீநெறிபிற் செல்லுபவ னும், குருமொழியைக் கைவிட்டவனும், நற்கதியை விட்ட வனும், தீயவனும், மூடனுமாகிய அடியேன், வெற்றியும் புகழும் உடைய உமது பாத கமலங்களைத் துதிக்கும் பெரிய பேற்றினைப் பெறுமாறு உமது திருவுள்ளத்தில் சிறிது நினைக் கக் கூடாதோ?

## விரிவுரை

**புருவநெறித்து :—**

பொதுமகளிர் தமது முகத்தில் சினம், துயரம், அச்சம், ஆச்சர்யம் முதலிய பல குறிப்புக்கள் தோன்ற புருவத்தைக் கீழும் மேலுமாக நெறிப்பார்கள்.

**குறுவெயர்வுற்று :—**

கலவியினால் முகத்தில் குறுவியர்வை யுண்டாகும்.

"வேர்வை மெத்த எழுந்து சலா சலா என"

—(ஓலமிட்ட) திருப்புகழ்.

"வெளுத்த இதழும் வியர் முகமும்
விழியிற் சிவப்பும் நகக் குறியும்" —மகாபாரதம்.

**பொரு விழியிற் பட்டு :—**

கண்களாகிய அம்பினால் ஆடவருடன் போர் புரிவர் அம் மகளிர். கண் வலையில் இளைஞர் வீழ்ந்து தவிப்பார்கள்.

**கருவழியுற்று :—**

நெருக்கமாக வண்டியிற் பயணம் புரியும்போது துன்புறு கின்றோம். காற்றில்லையென்றும், ஒளியில்லையென்றும் கவல் கின்றோம், தாய் வயிற்றில் முந்நூறு நாட்கள் இருக்கின்றோம். வயிற்றில் மலப்பை, நீர்ப்பை, உணவுப்பை ஆகிய பல பை களுடன் கருப்பை. அங்கு காற்றில்லை, ஒளியில்லை, மிகுந்த நெருக்கம். இதைவிடத் துன்பம் வேறு இருக்க முடியாது. ஆதலால் மீளவுந் தாயுதரத்தில் போகக்கூடாது என்று ஆன் றோர்கள் வருந்துகின்றார்கள்.

"இருப்பையூர் வாழ்சிவனே இன்னும் ஓரன்னை
கருப்பையூர் வாராமற் கா" —பட்டினத்தார்.

நல்வினை தீவினை காரணமாகப் பிறப்பு எய்துகின்றது. ஆகவே தீவினை கனவிலும் செய்யக்கூடாது; நல்வினை பயன் கருதாமற் செய்யவேண்டும். அதனால் பிறப்பு எய்தாது;

> "விதிகாணும் உடம்பை விடா வினையேன்
> கதிகாண மலர்க்கழல் என்றருள்வாய்" —அநுபூதி.

**குருமொழியற்று :—**

கருவழி வராத நன்னெறியைக் குருநாதர் காட்டியருளுவார். அத்தகைய குருமொழியாகிய திருமொழியை ஒருமொழியாகக் கொண்டு உய்ய வேண்டும். மூடர்கள் குருமொழி கேளாது, வேறு மொழி கேட்டு அவலமூற்றுக் கவலையடைகின்றார்கள்.

**புகழ்திகழ் பத்மக் கழல்கள் துதிக்கக் கருதாதோ :—**

இறைவனுடைய திருவடி புகழ் வாய்ந்தது. புகழ் பெற வேணுமாயின் அப்பரமபதியின் புகழ் நிறைந்த திருவடியைத் துதி செய்ய வேண்டும்.

ஞானமயமான முருகவேளின் திருவடியைத் துதி செய்யாமல், செல்வத்திற்கு ஆசைப்பட்டு அறிவில்லாத உலோபிகளான தனவந்தர்களையும், காம வயமாகி மாதர்களையுந் துதி செய்து புலவர்கள் பாழ்படுகின்றார்கள்.

ஆகவே, "முருகா! அடியேன் உமது பதமலரைத் துதி செய்யுமாறு, உமது திருவுள்ளத்தில் சிந்தித்து அருள் புரிவாய்" என்று சுவாமிகள் விண்ணப்பம் புரிகின்றார்கள்.

**செருவசுரப் பொய்க்குலம் :—**

சாதுக்களான தேவர்களுடன் சதா போர் புரிவதையே தொழிலாகக் கொண்டவர்கள் அசுரர்கள். சண்டை எங்கே? எங்கே? என்று தேடுவார்கள். சண்டையே தொழிலாகத் திரிவார்கள். பொய்யே நிறைந்தவர்கள் ஆதலால் அசுர குலத்தை முருகவேள் வேலினால் அழித்தருளினார்.

**மடப்பைக் கொடி—**

மடம் என்பது பெண்களிடம் இருக்கவேண்டிய நற்குணங்களில் ஒன்று.

மடம்—கொளுத்தியது விடாமை; இப்படி இப்படி இருக்க வேண்டும் என்று, தாய் தந்தையர் கணவன் மற்றப் பெரியோர்கள் அறிவுறுத்திய அறிவுரையை விடாது பிடித்து ஒழுகுதல்.

மடக்கொடி—பைங்கொடி.

**ப்ரபலமுள் சுத்தத் தணிமலை :—**

தலங்கள் பலவற்றுள் மிக்கப் புகழ் வாய்ந்தது திருத்தணிகை. தூய்மையுடையது.

### கருத்துரை

திருத்தணிவேலவா! உனது திருவடிகளைத் துதிசெய்யும் தன்மையை அருள்செய்.

## 42

பூசலிட் டுச்ச ரத்தை நேர் கழித் துப்பெ ருத்த
போர்விடத் தைக்கெ டுத்து வடிகூர்வாள்
போலமுட் டிக்கு ழைக்கு ளோடிவெட் டித்தொ ளைத்து
போகமிக் கப்ப ரிக்கும் விழியார் மேல்

ஆசைவைத் துக்க லக்க மோகமுற் றுத்து யர்க்கு
ளாகிமெத் தக்க ளைத்து ழியாமே
ஆரணத் துக்க ணத்து ளுண்மலர்ப் பொற் பதத்தை
யான் வழுத் திச்சு கிக்க அருள்வாயே

வாசமுற் றுத்தழைத்த தாளிணைப் பத்த ரத்த
மாதர்கட் கட்சி றைக்கு ளழியாமே
வாழ்வுறப் புக்கி ரத்ன ரேகையொக் கச்சி றக்கு
மாமயிற் பொற்க ழுத்தில் வரும்வீரா

வீசுமுத் துத்தெ றிக்க வோலைபுக் குற்றி ருக்கும்
வீறுடைப் பொற்கு றத்தி கணவோனே
வேலெடுத் துக்க ரத்தி னீலவெற் பிற்ற ழைத்த
வேளெனச் சொற் கருத்தர் பெருமாளே.

### பதவுரை

வாசம் உற்று தழைத்த = நறுமணம் கொண்டு விளங்குகின்ற, தாள் இணை பத்தர் = இரு திருவடிகளை வணங்குகின்ற அன்பர்கள், அத்த மாதர்கள் = பொருட் பெண்டிரது, கண் சிறைக்குள் அழியாமே = கண்ணாகிய சிறைச்சாலையில் அடைபட்டு அழியாத வண்ணம், வாழ்வு உற = நல்ல வாழ்வை அடையும் பொருட்டு, புக்கு = புறப்பட்டு, இரத்ன ரேகை ஒக்க சிறக்கும் = இரத்தின மணிகள் போன்ற வரிகளால் சிறப்புள்ள, மாமயில் = பெருமை தங்கிய மயிலின், பொன் கழுத்தில் வரும் வீரா = அழகிய கழுத்தின்மீது ஏறி வருகின்ற வீரரே! வீசு முத்து தெறிக்க = ஒளிவீசும் முத்துக்கள் சிதற, ஓலை புக்கு உற்று இருக்கும் = ஓலையாலாய பரண்மீது புகுந்து உறைகின்ற, வீறு உடை பொன் குறத்தி = பெருமை மிகுந்த அழகிய வள்ளி நாயகியின், கணவோனே = கணவரே! கரத்தில் வேல்

எடுத்து=திருக்கரத்தில் வேலாயுதத்தை ஏந்தி, நீல வெற்பில் தழைத்த=நீலோற்பல மலர் மலர்கின்ற திருத்தணி மலையின்மீது எழுந்தருளியுள்ள, கருத்தர் வேள் என சொல்=கருத்துள்ள அடியார்கள் செவ்வேட் பெருமானே என்று புகழ்கின்ற, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! பூசல் இட்டு=போர் புரிந்து, சரத்தை நேர் கழித்து=தனது கூர்மைக்கு நேர் நிற்க முடியாது அம்பைத் தள்ளியும், பெருத்த போர்விடத்தை கெடுத்து=போர்புரிய வந்த பெரிய ஆலகால விடத்தை வென்று அழித்தும், வடிகூர் வாள் போல=மிகக்கூர்மையுள்ள வாளாயுதத்தைப் போல, முட்டி குழைக்குள் ஓடி=தாக்கிக் காதில் உள்ள தோட்டுக்குள் ஓடிப் பாய்ந்தும், வெட்டி தொளைத்து=கண்டவர்களது உயிரை வெட்டித் தொளை செய்தும், போக மிக்க பரிக்கும்=போக இன்பத்தைத் தன்னிடம் நிரம்பத் தாங்குகின்றதும் ஆன, விழியார் மேல்=கண்களையுடைய பொது மாதர்களின்மீது, ஆசை வைத்து=ஆசையை வைத்து, கலக்க மோகம் உற்று=உள்ளத்தைக் கலக்கும். மோகத்தைக் கொண்டு, துயர்க்கு உள் ஆகி=அதனால் துன்பத்துக்கு உள்ளாகி, மெத்த களைத்து=மிகவும் அதிர்ச்சியடைந்து, உள் அழியாமே=உள்ளம் அழியாதபடி, ஆரணத்துக்கண் நத்து=வேதத்தினிடம் விரும்பிப் போற்றப்படுகின்ற, உன் நாள் மலர்=உமது புதிய மலர் போன்ற, பொன் பதத்தை=அழகிய திருவடியை, யான் வழுத்தி சுகிக்க=அடியேன் துதிசெய்து சுகம்பெற, அருள்வாயே=திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

நறுமணம் மிகுந்த உமது இரு திருவடிகளை வணங்கும் அன்பர்கள், பொருட் பெண்டிரது கண்ணாகிய சிறையில் அகப்பட்டு அழியாவண்ணம், நல்வாழ்வு பெறும் பொருட்டு, இரத்தின மணி போன்ற வரிகள் கொண்டதும் சிறப்புடையதுமான அழகிய மயிலின் மீது ஏறி வருகின்ற வீர மூர்த்தியே! ஒளி மிகுந்த முத்துக்கள் சிதறியுள்ள இலை வேய்ந்த பரண்மீது பெருமையுடன் இருக்கும் அழகிய வள்ளி பிராட்டியின் கணவரே! திருக்கரத்தில் வேலாயுதத்தைத் தாங்கி நீலமலையாகிய திருத்தணிகை மலைமீது எழுந்தருளியவரே! அடியார்கள் 'செல்வனே' என்று துதிக்கின்ற பெருமிதம் உடையவரே! ஆடவருடன் போர் புரிந்தும், கூர்மையால் தனக்குத் தோல்வியுறச் செய்து கணையைத் தள்ளியும், பெரிய போர் புரிய வல்ல ஆலகாலவிடத்தை அழித்தும், மிகுந்த கூர்மையுள்ள வாளாயுதத்தைப் போல பாய்ந்து தோட்டுக்குள் ஓடிப்பாய்ந்தும், ஆடவர் உயிரை வெட்டித் தொளைத்தும், இன்ப நுகர்ச்சியை மிகுதியாகத் தாங்கியும் உள்ள கண்களையுடைய பொதுமாதர் மீது ஆசை வைத்து, கலக்கமாகிய மோகத்தையடைந்து, துன்பத்துக்குள் மிகவும் களைப்புற்று உள்ளம் அழியாதபடி,

வேதத்தில் துதித்து விரும்புகின்ற உமது புதிய மலர்போன்ற அழகிய திருவடியை அடியேன் துதிசெய்து சுகம்பெறத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**பூசலிட்டு :—**

தம்மை விரும்புகின்றவரிடம் விலைமகளிரது கண்களே போர் செய்து அறிவை யழித்துவிடும்.

**சரத்தை நேர்கழித்து :—**

அம்பு கூர்மையானது; அதன் கூர்மையைவிட கண் கூர்மையாக இருப்பதனால், அம்பினை இகழ்ந்து அதை விலக்கியது என்று கூறுகின்றார்.

**பெருத்த போர் விடத்தைக் கெடுத்து :—**

"பெரிய போரினால் விளையும் தீமையைப் பார்க்கினும் பெருந் தீமை புரிகின்றது நஞ்சு. அதனையுண்டாரே மாய்வார். இந்தக் கண் கண்டாரையும் மாய்க்கும் வன்மையுடையது. அதனால் நஞ்சைத் தன் வலிமையால் கெடுத்தது" என்கின்றார்.

**வடிகூர்வாள் போல முட்டி :—**

வடி—கூர்மை. வடி கூர்வாள்—மிகுந்த கூர்மையுடைய வாளைப் போல் எதிர்த்தவரைத் தாக்கவல்லது அக்கண்.

**குழைக்குள் ஓடிவெட்டித் தொளைத்து :—**

காதுவரை நீண்ட கண்; குழைகளில் தன் ஒளியைப் பாய்ச்சி, எதிர்ப்பட்டவர் எவராயினும் அவர்கள் உள்ளத்தையும் உயிரையும் வெட்டித் தொளைக்கும் ஆற்றலுடையது அந்தக் கண்.

"விழையுமனி தரையுமுனி வரையுமவர் உயிர்துணிய
வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடும் செங்கண் வேலும்"
—திருப்புகழ்.

**போகமிக்கப் பரிக்கும் விழி :—**

பரித்தல்—தாங்குதல். போக இன்பத்தைத் தன்னிடத்தே வைத்து அதிகமாக அந்தக் கண் தாங்குகின்றது.

**ஆசை வைத்துக் கலக்க மோகமுற்றுத் துயர்க்குளாகி மெத்தக் களைத்து எழியாமே :—**

மாதர் மீது ஆசை வைத்து, அதனால் கலக்கமுற்று, மோகத் தீயால் வாடித் துன்பக் கடலுக்குள் வீழ்ந்து மாந்தர் களைப்புறுகின்றார்கள்.

வாலியும் இராவணனும் மாதராசையால் மாய்ந்தார்கள், இந்திரனும் சந்திரனும் மாதராசையால் உடல் நலம் அழிந்

தார்கள். கீசகனும் கிர்மீரனும் பெண்ணாசையால் மடிந்தார் கள்.

**ஆரணத்துக் கணர்த்து ஞண்மலர்ப்பதம் :—**

ஆரணத்துக் கண்நத்து—கண்—இடப் பெயரில் வந்தது. நத்துதல்—விரும்புதல். வேதத்தின் கண் விரும்பித் துதிக்கின்ற திருவடி.

**யான் வழுத்திச் சுகிக்க அருள்வாயே :—**

முருகன் திருவடியைத் துதித்தால் சகல சுகங்களும் உண்டாகும்.

**அத்தமாதர் :—**

அத்தம்—பொன். அத்தமாதர்—பொருட் பெண்டிர்.

முருகவேள், தனது அடியார்களை மாதர் மயலில் சிக்காது தடுத்து, நல்வாழ்வு பெற்று உய்யுமாறு மயிலில் ஏறி எழுந்தருளி வருவார்.

**நீலவெற்பு :—**

நீலோற்பலம் தினமும் சுனையில் மலர்வதால் திருத்தணி மலைக்கு நீலகிரியென்று பேர் உண்டாயிற்று. "நீலகிரி மருவு குருபதி" என்கின்றார் சீர்பாத வகுப்பில்.

## கருத்துரை

திருத்தணி வேலவரே! மாதராசையால் வருந்தாது உனது பாதமலரைத் துதித்துச் சுகமுற அருள்வாய்.

## 43

பொருவிக் கந்தொடடர்ச் செருவிக் கன்றெடுமிப்
புதுமைப் புண்டரிகக் கணையாலே
புளகக் கொங்கையிடத் திளகக் கொங்கையனற்
பொழியத் தென்றல்துரக் குதலாலே
தெருவிற் பெண்கள் மிகக் கறுவிச் சண்டையிடத்
திரியத் திங்களுதிப் பதனாலே
செயலற் றிங்கணையிற் றுயிலற் றஞ்சியயர்த்
தெரிவைக் குன்குரவைத் தரவேணும்
அருவிக் குன்றடையப் பரவிச் செந்தினைவித்
தருமைக் குன்றவருக் கெளியோனே
அசுரர்க் கங்கயல்பட் டமரர்க் கண்டமளித்
தயில்கைக் கொண்டதிறற் குமரேசா

தருவைக் கும்பதியிற் றிருவைச் சென்றணுகித்
தழுவிக் கொண்டபுயத் திருமார்பா
தரளச் சங்குவயற் றிரளிற் றங்குதிருத்
தணிகைச் செங்கழநிப் பெருமாளே.

## பதவுரை

அருவி குன்று அடைய பரவி=நீரருவி வீழும் வள்ளி மலை முழுவதும் உலாவிப் புகழ்ந்து, செம் தினை வித்த=செவ்விய தினையை விதைத்திருந்த, அருமை குன்றவருக்கு=அருமையான வேடர்களுக்கு, எளியோனே=எளியவராய் வந்தருள் புரிந்தவரே! அசுரர்க்கு அங்கு அயல்பட்ட=அசுரர்கட்கு அங்கு வேறுபட்ட, அமரர்க்கு அண்டம் அளித்து=தேவர்கட்கு அவர்கள் உலகத்தைத் தந்தருளிய, அயில் கைகொண்ட=வேலாயுதத்தைத் திருக்கரத்தில் ஏந்தியருளும், திறல் குமரேசா=பேராற்றல் படைத்த குமாரக் கடவுளே! தருவைக்கும் பதியில்=கற்பகமரம் வைத்துள்ள அமராவதி நகரில், திருவை சென்று அணுகி=தேவயானையிடம் போய்ச் சேர்ந்து, தழுவிக்கொண்டபடி=தழுவிக் கொண்ட தோள்களை யுடைய, திருமார்பா=திருமார்பினரே! தரளம்=முத்தும், சங்கு=சங்கும், வயல் திரளில் தங்கும்=வயல்களில் கூட்டமாகத் தங்குகின்ற, திருத்தணிகை=திருத்தணிகையில் வாழ்பவரே! செங்கழுநி=செங்கழுநீர் மலர் மாலையைப் புனைபவரே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! பொருவி கந்தொடு அடர்=போர் செய்வதற்கு உரிய மலர்க் கணைகளைப் பற்றுக் கோடாகக் கொண்டுவந்த, செரு இக்கன் தொடும்=போர் செய்து கரும்புவில் லோனாகிய மன்மதன் தொடுகின்ற, இ புதுமை புண்டரிக கணையாலே=இந்தப் புதிய தாமரைக் கணைகளாலும், புளக கொங்கை இடத்து=புளகம் கொண்டுள்ள கொங்கையிடத்தில், இளக கொங்கை=நெகிழ்ச்சியுற்ற பூந்தாதுக்கள், அனல் பொழிய=நெருப்பைப் பொழிந்து வீசவும், தென்றல் துரக்குதலாலே=தென்றல் காற்று சோர்வடையச் செய்வதனாலும், தெருவில் பெண்கள் மிக கறுவி=தெருக்களில் பெண்கள் மிகவும் பகைகொண்டு, சண்டையிட திரிய=சண்டையிடவேண்டித் திரியவும், திங்கள் உதிப்பதனாலே=சந்திரன் உதயமாவதனாலும், செயல் அற்று=செயல் அற்றுப்போய், இங்கு அணையில் துயில் அற்று=இங்குப் படுக்கையில் தூக்கமும் அற்று, அஞ்சி அயர் தெரிவை=அச்சமும் சோர்வும் கொண்டுள்ள இப்பெண்ணுக்கு, உன் குரவை தரவேணும்=தேவரீரது குராமலர் மாலையைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

வள்ளிமலையில் உள்ள அருவிகள் முழுதும் சென்று புகழ்ந்து, அங்கு செந்தினையை விதைத்த அரிய வேடர்கட்கு

எளியராகின்றவரே! அசுரர்களுக்கு மாறுபட்ட தேவர்களுக்கு அமராவதி நகரையளித்து வேலாயுதத்தைத் திருக்கரத்தில் ஏந்திய, பேராற்றல் படைத்த குமாரக் கடவுளே! கற்பகத் தரு வைத்த அமராவதி நகரிற் சென்று தெய்வயானையைத் தழுவிக் கொண்ட தோள்களையுடைய திருமார்பினரே! முத்துக் களும் சங்குகளும் கூட்டமாகத் தங்குகின்ற உயர்ந்த திருத் தணி மலையில் எழுந்தருளியவரே! செங்கழுநீர் மலர்மாலை தரித்த பெருமிதமுடையவரே! போர் செய்வதற்குரிய மலர் களைப் பற்றுக்கோடாகக் கொண்டு வந்த போர் வல்ல கரும்பு வில்லோனாகிய மன்மதன் விடுகின்ற இந்தப் புதிய தாமரைப் பூங்கணையாலும், புளகமுடைய தனத்தில் நெகிழ்கின்ற பூந்தாதுக்கள் நெருப்பைப் பொழியவும், தென்றல் காற்று துன்புறுத்துவதாலும், வீதியில் பெண்கள் மிகவும் பகைத்துச் சண்டையிட்டுத் திரியவும், சந்திரன் உதிப்பதனாலும், இத் தலைவி செயல் அற்றுப் போய், இங்கு படுக்கையில் தூக்கமும் அற்று, அஞ்சியும் சோர்ந்து உள்ளாள். ஆதலால் இப் பெண்ணுக்கு உமது குராமலர் மாலையைத் தந்தருளு வீராக.

## விரிவுரை

**பொருவிக் கந்தொடடர் :—**

பொரு வி கந்து ஒடு அடர் என்று பதப் பிரிவு செய்க வீ—மலர். இது வி எனக் குறுகி நின்றது.

மன்மதனுக்குப் போர் செய்வதற்குப் பற்றுக்கோடாக இருப்பது பஞ்சமலர்ப் பாணங்கள். கந்து—பற்றுக்கோடு

**செருவிக்கன்றொடு :—**

செரு இக்கன் தொடு' இக்கு—கரும்பு. இக்கன் கரும்பு வில்லையுடையவன்.

மன்மதனுக்குக் கரும்பு வில்; சுரும்பு நாண்; மலர் பாணம்.

கரும்பு வில்லை வைத்துக்கொண்டு அவன் இரும்பையும் உருக்குகின்றான்.

**புதுமைப் புண்டரிகக் கணையாலே :—**

புதுமை வாய்ந்த தாமரைக் கணை இது. காம நினைப் பூட்டும் முதற் கணை.

**புளகக் கொங்கையிடத்து :—**

மகிழ்ச்சியினால் தனம் புளகிக்கும்.

**கொங்கை யனல்பொழிய :—**

கொங்கு—பூந்தாதுக்கள்.

காதல் கொண்டார்க்குப் பூந்தாதுக்கள் அனல்போல் வெப்பத்தைச் செய்யும்.

**தென்றல் துரக்குதலாலே :—**

இனிமையான தென்றல் காற்று காமுகர்க்கு அனலாக இருக்கும்.

எல்லோர்க்கும் இனிக்கும் கற்கண்டு காய்ச்சலுடையார்குக் கசக்கும். அதுபோல் காம நோயுடையார்க்கு, குளிர்ந்த சந்திரனும், குளிர்ந்த தென்றலும், பூமணமும் துன்பத்தை விளைவிக்கும்;

**தெருவில் பெண்கள் மிகக் கறுவிச் சண்டையிட :—**

தலைவி தன் தலைவனிடம் காதல் கொண்டு உண்ணாமலும் உறங்காமலும் இருப்பதைக் கண்ட மற்ற மகளிர் தெருவில் கூடி பகைத்துப் பழிப்புரை கூறித் தூற்றுவர்.

**செயலற்றிங்கணயில் துயிலற் றஞ்சியயர்த் தெரிவைக் குன்குரவைத் தரவேணும் :—**

இத்திருப்புகழ் நாயகீ நாயக பாவத்தில் பாடியது அகப் பொருள் துறையில் அமைந்தது.

முருகன் விரும்பிய ஆன்மாவாகிய தலைவி முருகனை அடையப் பெருது, செயல் அற்றும், துயில் அற்றும், அப் பரம நாயகனை அடைய முடியாதோ என்று உள்ளம் அஞ்சியும், அயர்ச்சியுற்றும் வேதனைப்படுகின்ருள்.

"முருகவேளே ! இத்தலைவிக்கு உமது திருமார்பில் விளங்கும் குராமலர் மாலையைத் தந்தருளுவீராக" என்று பாங்கி கூறுகின்ருள்.

முருகப் பெருமானுக்கு அன்பான மலர் குரா.

**அருவிக்குன் றடையப் பரவி :—**

வள்ளி மலையில் உள்ள அருவிகள் யாவும் வள்ளியம்மையாரால் புனிதமானவை. அதனுல் முருகப் பெருமான் அந்த அருவிகள் தோறும் சென்று ஆடிப் புகழ்ந்து போற்றினுர்.

**அசுரர்க்கங் கயல்பட் டமரர்க்கு :—**

அசுரர்கள் தீய குணங்களின் வடிவானவர்கள். அமரர்கள் நற்குணம் படைத்தவர்கள். எனவே தீய குணத்துடன் நற்குணம் மாறுபட்டது.

**அண்டமளித்து :—**

ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசு புரிந்த சூரபன்மன் தேவர்களைச் சிறையில் இட்டு நூற்றெட்டு யுகங்களாகத் துன்புறுத்தினுன். முருகப் பெருமான் அசுரரை யழித்து அமரர்கட்குப் பண்டுபோல் அவர்களுடைய பொன்னுலகைக் கொடுத்தருளினுர்.

**தருவைக்கும் பதி :—**

தரு—கற்பக மரம். இது நினைந்ததைத் தரும் மகிமையுடையது. இந்தக் கற்பக மரத்தைத் தன்னகத்தே கொண்ட நகரம் அமராவதி.

கற்பக நிழலில் வளர்ந்த தெய்வயானையம்மையை எம்பெருமான் திருமணஞ் செய்து கொண்டருளினார்.

**தரளச் சங்குவயல் :—**

திருத்தணிகை மலையைச் சூழ்ந்துள்ள வயல்களில் சங்கு, சங்குகள் ஈனும் முத்தும் குவிந்திருக்கின்றன. அத்துணை வளமை மிக்கது.

## கருத்துரை

தணிகை நாயகா! இத் தலைவிக்கு உன் குரா மலர்மாலையைக் கொடுத்தருள்வீர்.

## 44

பொற்குட மொத்தகு யத்தைய சைப்பவர்
கைப்பொருள் புக்கிட — வேதான்
புட்குரல் விச்சைபி தற்றுமொ ழிச்சியர்
பொட்டணி நெற்றிய — ராலோர்

அற்பவி டைக்கலை சுற்றிநெ கிழ்ப்பவர்
அற்பர மட்டைகள் — பால்சென்
றக்கண்வ லைக்குள கப்படு புத்தியை
அற்றிட வைத்தருள் — வாயே

கொக்கரை சச்சரி மத்தளி யொத்துவி
டக்கைமு ழக்கொலி — யாலக்
கொக்கிற கக்கர மத்தம ணிக்கருள்
குத்த தணிக்கும — ரேசா

சர்க்கரை முப்பழ மொத்தமொ ழிச்சிகு
றத்தித னக்கிரி — மேலே
தைக்கும னத்தச மர்த்தஅ ரக்கர்த
லைக்குலை கொத்திய — வேளே.

## பதவுரை

கொக்கரை = கொக்கரை என்ற வாத்தியமும், சச்சரி = சச்சரி யென்ற வாத்தியமும், மத்தளி = மத்தளி யென்ற வாத்தியமும், ஒத்து

இடக்கை முழக்கு ஒலி ஆல=ஒத்து இடக்கை என்ற வாத்தியங்களும் முழங்குகின்ற ஓசை நிரம்ப, கொக்கு இறகு=கொக்கின் இறகு, அக்கு=எலும்பு, ஆர=பாம்பு, மத்தம்=ஊமத்தம்பூ, அணிக்கு அருள் குத்த=அணிந்துள்ள சிவபெருமானுக்கு இரகசியப் பொருளை அருள் புரிந்தவரே! தணி குமரேசா=திருத்தணிகையில் வாழும் குமாரக் கடவுளே! சர்க்கரை=சர்க்கரை, பழம் ஒத்த=மா பலா கதலி என்ற முப்பழத்தை நிகர்த்த, மொழிச்சி குறத்தி=மொழியையுடைய குறமகளின், தனகிரி மேலே=தனமாகிய மலையின்மீது, தைக்கு மனத்த=தைத்துள்ள மனத்தினரே! சமர்த்த=சாமர்த்தியமுள்ளவரே! அரக்கர் தலைகுலை கொத்திய=அரக்கர்களுடைய தலைக் கூட்டத்தை வெட்டி அழித்த, வேளே=உபகாரியே! பொன் குடம் ஒத்த=பொன்னாலாகிய குடத்தைப் போன்ற, குயத்தை அசைப்பவர்=தனத்தினை அசைப்பவர்கள், கைபொருள் புக்கிடவே தான்=கையில் பொருள் புகுந்த பின்னர், புள் குரல் விச்சை பிதற்று மொழிச்சியர்=பறவைகளின் குரல்களைக் காட்டி மாய வித்தைகளைக் குழறிப் பேசும் பேச்சுக்களையுடையவர்கள், பொட்டு அணி நெற்றியர் ஆனோர்=பொட்டு அணிந்த நெற்றியையுடையவர்கள், அற்ப இடை கலை சுற்றி நெகிழ்ப்பவர்=மெல்லிய இடையில் ஆடையைச் சுற்றி அது அவிழுமாறு செய்பவர்கள், அற்பர்=அற்பத்தனமுள்ளவர்கள், அமட்டைகள் பால் சென்று=அந்த அறிவில்லாதவர்களாகிய பொது மாதர்களிடம் போய், அ கண் வலைக்குள் அகப்படு புத்தியை=அவர்களுடைய அந்தக் கண் வலைக்குள் அகப்படுகின்ற புத்தியை, அற்றிட=என்னை விட்டு நீங்குமாறு செய்து, வைத்து=கருணை வைத்து, அருள்வாயே=திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

கொக்கரை, சச்சரி, மத்தளி, ஒத்து, இடக்கை யென்ற வாத்தியங்கள் மிகுதியாக ஒலிக்க, கொக்கின் இறகு, எலும்பு, பாம்பு, ஊமத்தமலர், இவைகளை அணிகின்ற சிவபெருமானுக்கு இரகசியத்தை உபதேசித்தருளியவரே! திருத்தணியில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! சர்க்கரையும், முப்பழத்தையும் ஒத்த இனிய மொழியையுடைய குறமகளாகிய வள்ளி பிராட்டியின் தனமாகிய மலையின் மீது அன்பு வைத்த மனத்தினரே! சமர்த்தரே! அரக்கர்களுடைய தலைக்கூட்டத்தை வெட்டியழித்த உபகாரியே! தங்கக் குடத்தை நிகர்த்த தனத்தை அசைப்பவர்களும், கைப்பொருள் கிடைத்தவுடன், பறவைகளின் குரல்களைக் காட்டி மாய வித்தைகளைக் குழறிப் பேசுபவர்களும், பொட்டு அணிந்த நெற்றியையுடையவர்களும் மெல்லிய இடையில் சுற்றிய ஆடையை அவிழ்ப்பவர்களும், அற்பர்களும், அந்த அறிவிலிகளுமாகிய பொது மகளிரிடத்தே சென்று அவர்களுடைய கண் வலைக்குள்

அகப்படுகின்ற புத்தியை என்னைவிட்டு நீங்கச் செய்து, அருள் புரிவீராக.

## விரிவுரை

**புட்குரல் விச்சை பிதற்று மொழிச்சியர் :—**

பொதுமாதர் தம்பால் வரும் ஆடவர் மயங்குமாறு பறவைகளின் ஒலிபோல் கூவியழைத்து உபசரிப்பார்கள்.

**அற்பவிடைக் கலைசுற்றி :—**

அற்பமான இடையில் ஆடையை உடுத்தி அதை மெல்ல அவிழ்ப்பார்கள்.

**அற்பர மட்டைகள் :—**

அற்பர் அ மட்டைகள் என்று பதச் சேதஞ் செய்க. அற்பர்கள்; அந்த மட்டைகள் என்று பொருள் செய்க. மட்டைகள்—அறிவில்லாதவர்கள்.

**அக்கண் வலைக்குளகப்படு புத்தியை அற்றிட வைத்தருள்வாயே :—**

பொது மகளிா நடு வீதியில் நின்று, அவ்வழியே செல்கின்ற இளைஞர்களை, தங்கள் கூந்தலை அவிழ்த்துக் கோதி, அக்கூந்தலாகிய காட்டில் கண்ணாகிய வலைபோட்டுப் பிடித்துக் கொள்வார்கள். இளைஞர்கள் பறவைகள்.

"திண்ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டில்
கண்ணி வைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ" —தாயுமானுர்.

"முருகா! இவ்வாறு விலைமகளிர் கண் வலைப்படும் அடியேனுடைய புத்தியை, அவ்விதம் அவரோடு செல்லாது தடுத்து ஆட்கொண்டருளும்" என்று வேண்டுகின்றார்.

**கொக்கரை சச்சரி :—**

கொக்கரை. சச்சரி என்பவைகள் ஒரு வகையான வாத்தியங்கள்.

**மத்தளி :—**

மத்தள வகையில் ஒன்று.

**ஒத்து :—**

ஒத்து என்பதும் ஒரு வகை வாத்தியம். நாகசுரத்துடன் சுருதியாக ஊதும் ஒரு குழல்.

**இடக்கை :—**

இடக்கை என்பது ஒரு வாத்தியம்.

சிவபெருமானுக்கு முருகன் உபதேசிக்கும்போது இந்த வாத்தியங்கள் யாவும் ஒலித்தன.

இன்றும் உபதேச மொழி பிறருடைய செவியில் புகாமல் இருக்கும்பொருட்டுச் சில வாத்தியங்களை ஒலிப்பது கண்கூடு.

**கொக்கிற கக்கர மத்தமணி :—**

கொக்கிறகு; அக்கு—எலும்பு. அர—பாம்பு மத்தம்—ஊமத்தம். இவைகளைச் சிவபெருமான் அணிந்தவர்.

**அருள்குத்த :—**

குப்தம் என்பது குத்த என வந்தது.

குப்தம்—இரகசியம். பிரணவப் பொருளாகிய இரகசியத்தை உபதேசித்தருளினார்.

**சர்க்கரை முப்பழமொத்த மொழிச்சி :—**

வள்ளி நாயகியாரது மொழியைப்பற்றிக் கூறும்போதெல்லாம் அருணகிரிநாத சுவாமிகள், அம்மொழியின் இனிமை கனியமுதினும் மேற்பட்டது என்கின்றார்.

'பாகு கனிமொழி மாது குறமகள்'

—(பாதிமதிநதி) திருப்புகழ்.

"தேனென்று பாகென்றுவமிக் கொணு மொழித் தெய்வவள்ளி"

—அலங்காரம்.

வள்ளியம்மை தமிழகத்தில் அவதரித்த தமிழணங்கு. அவர் பேசியது தமிழ். தமிழ் இனிய மொழி.

செந்தமிழ்த் தீஞ்சொல், கரும்பினும் இனிதாக இரும்பு நெஞ்சையும் உருக்கும் திறம் உடையது.

## கருத்துரை

தணிகேசா! மாதர் தம் கண்வலைப் படாதவண்ணங் காத்தருள்வாய்.

## 45

பொற்ப தத்தி னைத்துதித்து நற்ப தத்தி லுற்ற பத்தர்
பொற்பு ரைத்து நெக்கு ருக்க அறியாதே
புத்த கப்பி தற்றைவிட்டு வித்த கத்து னைத்து திக்க
புத்தி யிற்க லக்க மற்று நினையாதே

முற்ப டத்த லத்து தித்து பிற்ப டைத்த கிர்த்ய முற்றி
முற்க டைத்து வித்து நித்த முழல்வேனை
முட்டவிக்க டைப்பி றப்பி னுட்கி டப்ப தைத்தவிர்த்து
முத்தி சற்றெ னக்க ளிப்ப தொருநாளே

வெற்ப ளித்த தற்ப ரைக்கி டப்பு றத்தை யுற்ற ளித்த
வித்த கத்தர் பெற்ற கொற்ற மயில்வீரா

வித்தை தத்வ முத்த மிழ்ச்சொ லத்த சத்தம் வித்தரிக்கு
மெய் த்தி ருத்த ணிப்பொ ருப்பி லுறைவோனே
கற்பகப்பு னக்கு றத்தி கச்ச டர்த்த சித்ர முற்ற
கற்பு ரத்தி ருத்த னத்தி லணைவோனே
கைத்த ரக்கர் கொத்து கச்சி னத்து வஜ்ர னுக்கமைத்த
கைத்தொ ழுத்த றித்து விட்ட பெருமாளே.

**பதவுரை**

*வெற்பு அளித்த தற்பரைக்கு*=இமயமலை போற்றி வளர்த்த உமாதேவிக்கு, *இடப்புறத்தை உற்று அளித்த*=இடப்பாகத்தை அன்பு வைத்து அளித்த, *வித்தக அத்தர் பெற்ற*=ஞான முதல்வராகிய சிவபெருமான் பெற்றருளிய, *கொற்ற மயில்வீரா*=வெற்றியுடைய மயில் வீரரே! *வித்தை*=கல்வியும், *தத்வம்*=உண்மையும், *மு தமிழ் சொல்*=மூன்று தமிழின் சொல்லும், *அத்தம்*=பொருளும், *சத்தம் வித்தரிக்கும்*=ஓசைகளுடன் நீடித்திருக்கின்ற, *மெய் திருத்தணிபொருப்பில்உறைவோனே*=மெய்ம்மை விளங்கும் திருத்தணிகை மலை மீது எழுந்தருளியிருப்பவரே! *கற்பக புன குறத்தி*=கற்பகமரம் போன்ற தருக்கள் நிறைந்த தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளியம்மையின், *கச்சு அடர்த்த சித்ரம் உற்ற*=கச்சு நெருங்கிய அழகிய, *கற்புர திருதனத்தில் அணைவோனே*=பச்சைக் கர்ப்பூரம் அணிந்துள்ள அழகு மிக்க தனங்களில் அணைபவரே! *கைத்து அரக்கர் கொத்து உக*=வெறுப்பு கொண்ட அரக்கர்களின் கூட்டம் அழியுமாறு, *சினத்து*=கோபித்து, *வஜ்ரனுக்கு அமைத்த*=வஜ்ராயுதனாகிய இந்திரனுக்கு அவர்கள் இட்ட, *கை தொழு தறித்துவிட்ட*=கை விலங்கை முறித்து எறிந்த, *பெருமாளே*=பெருமையிற் சிறந்தவரே! *பொன் பதத்தினை துதித்து*=அழகிய உமது திருவடிகளைத் துதி செய்து, *நல் பதத்தில் உற்ற பத்தர்*=நல்ல பதவியை அடைந்த அன்பர்களுடைய, *பொற்பு உரைத்து*=பெருமையைக் கூறி, *நெக்கு உருக்க அறியாதே*=உள்ளம் நெகிழ்ந்து உருக அறியாமலும், *புத்தக பிதற்றை விட்டு*=புத்தகங்களைக் கற்றுப் பிதற்றலைவிட்டு, *வித்தகத்து உனை துதிக்க*=ஞானத்தால் தேவரீரைத் துதிசெய்ய, *புத்தியில் கலக்கம் அற்று நினையாதே*=கலக்கம் இல்லாத புத்தியுடன் உம்மை நினையாமலும், *முன்பட தலத்து உதித்து*=பூமியில் முற்பட்டுப் பிறந்து, *பின்படைத்து அகிர்த்ய முற்றி*=பின்னர் நான் செய்யும் கூடாத செயல்கள் நிரம்பி, *முன் கடை தவித்து நித்தம்உழல்வேனை*=பிறருடைய முன் வாசல்களில் நின்று தவித்து தினந்தோறும் அலைகின்ற அடியேனை, *முட்ட*=அடியோடு, *இ கடை பிறப்பினுள் கிடப்பதை தவிர்த்து*=இந்த இழிவான பிறப்பினுள் விழுந்து கிடப்பதை மாற்றி, *முத்தி சற்று எனக்கு அளிப்பது ஒரு நாளே*=முத்தி

நலம் அடியேனுக்குச் சிறிது அளித்து அருளும் ஒரு நன்னாள் எனக்குக் கிடைக்குமோ?

## பொழிப்புரை

மலையரையன் மகளாகிய பார்வதியம்மைக்கு இடப் பாகத்தை அன்புடன் அளித்த ஞானமூர்த்தியாகிய சிவபெருமான் பெற்றருளிய வெற்றி மயில் வீரரே! வித்தையும், உண்மையும், முத்தமிழும், சொல்லோசையும் பொருளோசையும் கூடித்து, என்றுமுள்ள திருத்தணியம்பதியில் எழுந்தருளியிருப்பவரே! கற்பகம் போன்ற தருக்கள் நிறைந்த தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிநாயகியின், கச்சு நெருங்கிய அழகுள்ள—பச்சைக் கர்ப்பூரம் பூசிய—அழகிய தனங்களில் அணைபவரே! பகைத்த அசுரர்களின் கூட்டத்தை அழித்து வஜ்ரபாணியான இந்திரனுடைய கைவிலங்கை ஒடித்து எறிந்து அருளிய பெருமையின் மிகுந்தவரே! அழகிய உமது பாதங்களைத் துதி செய்து நல்ல பதவியை அடைந்த அடியார்களின் பெருமையைக் கூறி உள்ளம் நெகிழ்ந்து உருக அறியாமலும் புத்தகத்தைப் படித்து அவற்றினைப் பிதற்றுவதை விடுத்து ஞானத்தால் தேவரீரைத் துதிக்க, கலக்கமற்ற புத்தியுடன் நினையாமலும், பூமியில் முற்படப் பிறந்து, பின்னர் பலப்பல தீய செயல்களைச் செய்து பிறருடைய வாசலின் முன் நின்று தவித்து தினமும் அலைகின்ற அடியேனை, அடியோடு இந்த இழிவான பிறப்பினுள் விழுந்து கிடப்பதினின்றும் மாற்றி, முத்தியின்பத்தைச் சிறிது அடியேனுக்கு அளித்தருளும் ஒரு நன்னாள் கிடைக்குமோ?

## விரிவுரை

**பொற் பதத்தினைத் துதித்து :—**

உத்தமமான அடியார்கள், முருகப் பெருமானுடைய சரணாரவிந்தங்களைச் சதா துதி செய்வார்கள். அத்திருவடியே பிறவிப் பெருங்கடலுக்கு ஓடமாக நின்று நம்மை முத்திக்கரை சேர்ப்பது. ஆதலால் அன்பர்கள் அனைவரும் காலையில்எழுந்தவுடன் சீர்பாத வகுப்பு என்ற பாடலைதினந்தோறும் பாராயணம் புரிக.

**நற்பதத்திலுற்ற பத்தர் :—**

முருகன் பதத்தைத் துதித்த அடியார்கள் மேலான பதத்தை யடைவார்கள்.

மால், அயன், இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் முருகன் திருவடியை அர்ச்சித்தமையால் மேலான பதவியைப் பெற்றார்கள்.

**பத்தர் பெற்றிப்புரைத்து நெக்குருக்க அறியாதே :—**

இத்தகைய மேலான முருகனுடைய அடியார்களின் பெருமைகளை இனிது எடுத்துக் கூறி உள்ளம் கசிந்து உருக

வேண்டும். அடியார் பக்தி எளிதில் இறைவனருளைக் கூட்டி வைக்கும். கன்றின் துணைகொண்டு பசுவினிடம் போய் பால் கறந்து கொள்வது போல அடியாரின், அருளைக் கொண்டே ஆண்டவனது அருளை எளிதிற் பெறமுடியும்.

**புத்தகப் பிதற்றை விட்டு :—**

சிலர் புத்தகங்களைப் படித்து, அதன் பயனைப் பெறாமல் அதைப் பிதற்றிக்கொண்டே திரிவார்கள்.

"கல்வியென்னும் பல்கடல் பிழைத்து" என்பார் மணிவாசகர்

உண்பதற்கு வாழையிலை உதவுகின்றது. உண்டபின் வாழையிலையை எடுத்து எறிந்துவிடுகின்றோம் அதுபோல் இறைவனை யடைவதற்குக் கல்வி துணை செய்கின்றது. அடைந்த பின் கல்வியை விட்டுவிட வேண்டும்

**வித்தகத் துணைத் துதிக்க :—**

வித்தகம—ஞானம். இறைவனை ஞானத்தால் வணங்கித் துதிசெய்ய வேண்டும்.

**புத்தியிற் கலக்கமற்று நினையாதே :—**

ஞானத்தால் இறைவனைத் துதிக்கின்றவரது புத்தி கலக்கமின்றித் தெளிவடையும்.

கலங்கிய புத்தி இன்பத்தைத் துன்பமாகவும், துன்பத்தை யின்பமாகவும் மயங்கியறியும்.

**முற்படத்தலத்துதித்து :—**

வினையின் காரணத்தால் முற்பட்டு இப்பூதலத்தில் ஆன்மா வந்து பிறக்கின்றது.

**பிற்படைத் தகிர்த்யமுற்றி :—**

பிறந்தபின் பல தீசெயல்களை ஆன்மாக்கள் செய்கின்றார்கள்.

**அகிர்த்யம் :—**

நற்செயல் இல்லாதது.

**முற்கடைத் தவித்து நித்த முழல்வேனை :—**

பிறருடைய வாசல்களின் முன் சென்று, அவர்களைப் பாடியும், அவர்களுடன் கூடியும், அவர்களது தயவை நாடியும், தயவு கிடைக்காத போது வாடியும் மாந்தர் அழிகின்றார்கள்.

**முட்டவிக் கடைப் பிறப்பினுட் கிடப்பதைத் தவிர்த்து :—**

முட்ட—முழுவதும். இந்த இழிந்த பிறவிப் பெருங்கடலில் விழுந்து யுகயுகாந்த காலமாகத் தவிக்கின்ற இந்தச் சீவனை, இப பிறவிப் படுகுழியிலிருந்து எடுத்துக் காப்பாற்ற வேண்டும்.

**முத்தி சற்றெனக் களிப்ப தொருநாளே :—**

முத்தி—பந்தத்தினின்றும் விடுபடுவது; அந்த முத்தி யின்பம் அடியேனுக்குச் சிறிதேனும் அளிக்கின்ற ஒருநாள் கிடைக்குமோ?

**வெற்பளித்த தற்பரைக் கிடப்புறத்தை யுற்றளித்த வித்தகத்தர் :—**

இம்மை நலம் விரும்புவோர் சக்தியை வழிபடுவார்கள்; பரத்தை விரும்புவோர் சிவபெருமானை வழிபடுவார்கள்.

பிருங்கியென்ற முனிவர் இம்மை நலத்தை விரும்பாதவர். வீடுபேறு என்ற பரத்தையே விரும்புபவர். அவர் கயிலா யத்தை யடைந்த போதெல்லாம், உமாதேவியாரை வலம் வராமல், சிவபெருமானை மட்டுமே வலம் வந்து வழிபடு வார்.

உமாதேவியார் சிவபெருமானுடன் நெருங்கி யமர்ந்திருந் தார். பிருங்கி முனிவர் வண்டுருவங் கொண்டு இடையில் நுழைந்து சென்றார்.

இதனால் அம்மை வருந்தி, "நான் இடப்பாகம் பெறுவேன்" என்று கூறி, கேதாரம் என்ற திருத்தலஞ் சென்று தவம் புரிந்து, இடப்பாகத்தைப் பெற்றார்கள்.

> தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
> உன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
> என்னை யாளுடை யானிடம் சேர்வனென் றியைக்
> கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான். —கந்தபுராணம்

**வித்தை தத்வ முத்தமிழ்ச் சொலைத்த சத்தம் வித்தரிக்குமெய்த் திருத்தணி :—**

திருத்தணியம்பதியில், அநேக வித்தைகளும், வித்தை களின் உண்மைகளும், முத்தமிழ் முழக்கங்களும், சொல் லோசையும் பொருளோசையும் சதா இடையறாது நீடித்திருக் கின்றன.

**வஜ்ரனுக்கமைத்த கைத்தொழுந் தறித்துவிட்ட :—**

வஜ்ராயுதனாகிய இந்திரன் முதலியோர்களைக் கையிலும் காலிலும் சூரபன்மன் விலங்கு பூட்டி வருத்தினான். எம்பிரான் அவ்விலங்கைத் தறித்து ஆட்கொண்டார்.

## கருத்துரை

தணிகையாண்டவனே! முத்திநலந் தந்தருள்வீர்.

## 46

மலைமு லைச்சியர் கயல்வி ழிச்சியர்
மதிமு கத்திய ரழகான
மயில்ந டைச்சியர் குயில்மொ ழிச்சியர்
மனது ருக்கிக ளெணைமீதே
கலைநெ கிழ்த்தியெ உறவ ணைத்திடு
கலவி யிற்றுவள் பிணிதீரக்
கசட னைக்குண அசட னைப்புகல்
கதியில் வைப்பது மொருநாளே
குலகி ரிக்குல முருவ விட்டமர்
குலவு சித்திர முனைவேலா
குறவர் பெற்றிடு சிறுமி யைப்புணர்
குமர சற்குண மயில்வீரா
தலம திற்புக லமர ருற்றிடர்
தனைய கற்றிய அருளாளா
தருநி ரைத்தெழு பொழில்மி குத்திடு
தணிம லைக்குயர் பெருமாளே

### பதவுரை

குலகிரி குலம் உருவ விட்டு=சிறந்த கிரவுஞ்சமலைக் கூட்டத்தில் உருவச் செலுத்தி, அமர் குலவு=போர் புரிந்த, சித்திர முனை வேலா=அழகிய கூரிய வேலாயுதரே! குறவர் பெற்றிடு சிறுமியை புணர்=குறவர்கள் பெற்ற சிறுமியாகிய வள்ளியம்மையைத் தழுவு கின்ற, குமர=குமாரக் கடவுளே, சற்குண=உத்தம குணத்தை யுடைய, மயில் வீரா=மயில் மீது வரும் வீரரே! தலம் அதில் புகல்=உலகத்தில் போற்றப்படும், அமரர் உற்ற இடர் தனை=தேவர்களுக்கு வந்த துன்பத்தை, அகற்றிய=நீக்கிய, அருள் ஆளா=அருளை ஆளு கின்றவரே! தரு நிரைத்து எழு=மரங்கள் வரிசையாய் வளர்ந்து ஓங் கும், பொழில் மிகுத்திடு=சோலைகள் மிகுதியாகவுள்ள, தணி மலைக்கு உயர்=திருத்தணிகை மலையில் மேம்பட்டுள்ள, பெருமாளே=பெரு மையின் மிகுந்தவரே! மலை முலைச்சியர்=மலைபோன்ற கொங்கையர், கயல் விழிச்சியர்=கயல்மீன் போன்ற கண்ணினர்; மதி முகத்தியர்= சந்திரனைப் போன்ற முகத்தினர்; அழகான மயில் நடைச்சியர்=அழ கிய மயில் போன்ற நடையினர்; குயில் மொழிச்சியர்=குயில் போன்ற சொல்லினர்: மனது உருக்கிகள்=மனத்தை உருக்குபவர்;

அணைமீதே = படுக்கையின் மீது, கலை நெகிழ்த்திடியெ = உடையைத் தளர்த்தி, உறவு அணைத்திடு = உறவுடன் அணைகின்ற, கலவியில் துவள் = கலவியின்பத்தில் துவளுகின்ற, பிணிதீரா = நோய் நீங்காத, கசடனை = குற்றமுள்ளவனை, குண அசடனை = குணமில்லாத கீழ் மகனை, புகல் கதியில் வைப்பதும் ஒரு நாளே = புகழப் பெறுகின்ற நற்கதியில் சேர்த்து வைக்கும் ஒரு நாள் உண்டாகுமோ?

## பொழிப்புரை

சிறந்த கிரவுஞ்ச மலைக் கூட்டத்தில் உருவச் செலுத்திப் போர் செய்த அழகும் கூர்மையும் பொருந்திய வேலாயுதக் கடவுளே! குறவர்கள் பெற்ற சிறுமியாகிய வள்ளிபிராட்டியைத் தழுவுகின்ற குமாரக் கடவுளே! உத்தம குணம் பொருந்திய மயில் வீரரே! உலகத்திற் போற்றப்படுகின்ற தேவர்களுக்கு உற்ற துன்பத்தைப்போக்கிய அருளாளரே! மரங்கள் வரிசையாய் வளர்ந்தோங்கும் சோலைகள் உயர்ந்துள்ள திருத்தணி மலையில் மேம்பட்டு விளங்கும் பெருமையின் மிகுந்தவரே! மலைபோன்ற தனத்தினர்; கயல்மீன் போன்ற கண்ணினர்; சந்திரனைப் போன்ற முகத்தினர்; அழகிய மயில் போன்ற நடையினர்; குயில் போன்ற மொழியினர்; மனத்தை உருக்குபவர்; ஆகிய பொது மாதர்களின் படுக்கையின் மீது உடையைத் தளர்த்தி, உறவுடன் தழுவுகின்ற கலவியின்பத்தில் தளர்ச்சியடைந்து நோய் நீங்காத கசடனை, குணமில்லாத மூடனை, பெரியோர்கள் புகழ்கிற நற்கதியில் சேர்க்கும் நாள் ஒன்று உண்டாகுமோ?

## விரிவுரை

**கதியில் வைப்பதும் ஒரு நாளே :—**

"மாதர் வயப்பட்டு அடியேன் அவமே அழியாமல் பரகதியில் வைத்து ஆட்கொள்ளும் நாள் ஒன்று உண்டாகுமோ?" என்று சுவாமிகள் முறையிடுகின்றார்.

**குலகிரிக் குலமுருவ :—**

குலம்—சிறப்பு. குலம்—கூட்டம். மாயையிற் சிறந்த கிரவுஞ்ச மலை பலவுருவங்கள் தாங்கி நிற்க, அக்கூட்டத்தை வேல்விட்டு முருகவேள் அழித்தருளினார்.

"குலகிரி குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே"

—(முத்தைத்தரு) திருப்புகழ்.

**சித்திரமுனை வேலா :—**

சித்திரம்— அழகு; முனை—கூர்மை. வேல் என்பது ஞானம். கூர்மை ஞானத்தின் இலக்கணம்.

**குறவர் பெற்றிடு சிறுமி :—**

வள்ளி—இச்சா சக்தி. திருமாலுடைய கண்ணில் பிறந்த சுந்தரவல்லி முருகனுடைய கட்டளையின்படி, மான் வயிற்றில்

தோன்றி, நம்பிராசனால் வளர்க்கப்பட்டு முருகனை மணந்து கொண்டார். இம்மை நலம் முழுவதும் தருகின்ற அருட்சக்தி வள்ளிபிராட்டியார்.

அருளாளா :—

அருளை ஆளுகின்றவர் அருளாளர்.

"பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா" —சுந்தரர் தேவாரம்.

## கருத்துரை

திருத்தணிகைக் குமரா! நற்கதி தந்து அருள் செய்வீர்.

## 47

முகத்தைமி னுக்கிக ளசடிகள் கபடிகள்
விழித்தும ருட்டிகள் கெருவிகள் திருடிகள்
மொழிக்குள்மயக்கிகள் வகைதனில் நகைதனில்
விதமாக
முழித்தும யற்கொளு மறிவிலி நெறியிலி
புழுக்குட லைப்பொரு ளெனமிக எணியவர்
முயக்கம டுத்துழி தருமடி யவனிடர் ஒழிவாக
மிகுத்தழ கைப்பெறு மறுமுக சரவண
புயத்திள கிக்கமழ் நறைமலர் தொடைமிக
விசைக்கொடு மைப்பெறு மரகதகலபியும்வடிவேலும்
வெளிப்பட எக்கினி யிரவொடு பகலற
திருப்பதி யப்புக ழுமுதியல் கவிசொலி
விதித்தனை முத்தினை தரவரு மொருபொரு
ளருளாயோ

புகைத்தழ லைக்கொடு திரிபுர மெரிபட
நகைத்தவ ருக்கிட முறைபவள் வலைமகள்
பொருப்பிலி மக்கிரி பதிபெறு மிமையவ
ளபிராமி
பொதுற்றுதி மித்திமி நடமிடு பகிரதி
எழுத்தறி ருத்திரி பகவதி கவுரிகை
பொருட்பய னுக்குரை யடுகிய சமைபவள்
அமுதாகச்

செகத்தைய கத்திடு நெடியவர் கடையவள்
அறத்தைவ ளர்த்திடு பரசிவை குலவதி
திறத்தமி ழைத்தரு பழையவ ளருளிய சிறியோனே
செருக்கும ரக்கர்கள் பொடிபட வடிவுள
கரத்தில யிற்கொடு பொருதிமை யவர்பணி
திருத்தணி பொற்பதி தனில்மயில் நடவிய
பெருமாளே.

## பதவுரை

புகை தழலைக்கொடு = புகையுடன் கூடிய நெருப்பினால், திரி புரம் எரிபட = முப்புரங்கள் எரிந்து அழியுமாறு, நகைத்தவருக்கு இடம் உறைபவள் = சிரித்தருளிய சிவபெருமானுடைய இடப்பாகத்தில் வீற்றிருப்பவளும், மலைமகள் = மலைஅரசனுக்கு மகளாகத் தோன்றியவளும், பொருப்பில் = மலைகளுள், இமகிரி பதி பெறும் = இமய மலைக்கு அரசன் பெற்ற, இமையவள் = இமயவல்லியும், அபிராமி = பேரழகியும், பொது உற்று = அம்பலத்தில் அமைந்து, திமித் திமி நடம் இடு = திமித்திமி என்று நடனஞ் செய்கின்றவரும், பகிரதி = தேவியும், எழுத்து அறி ருத்திரி = எழுத்திலக்கணங்களை அறிந்துள்ள உருத்திரியும், பகவதி = ஆறுகுணங்களையுடையவளும், சுவுரி = பொன்னிறம் படைத்தவளும், கை பொருள் பயனுக்கு உரை அடுகிய சமைபவள் = ஒழுங்காகப் பொருளின் பயனுக்குச் சொல்லுக்குப் பொருந்தியிருப்பவளும், அமுது ஆக = அமுதம் போல், செகத்தை யகத்து இடும் நெடியவர் கடையவள் = உலகத்தை வயிற்றில் அடக்கிய நெடியவராம் திருமாலின் தங்கையும், அறத்தை வளர்த்திடு பரசிவை = தருமத்தை வளர்த்த பரசிவையும், குலவதி = சிறந்தவளும். திற தமிழை தரு பழையவள் = ஆற்றலுடைய தமிழைத் தந்த பழையவளுமாகிய உமை, அருளிய சிறியோனே = பெற்றருளிய சிறிய பெருந்தகையே! செருக்கும் அரக்கர்கள் பொடிபட = கர்வங்கொண்ட அசுரர்கள் தூளாகியழியும்படி, வடிவு உள கரத்தில் = அழகிய திருக்கரத்தில் அயில் கொடு பொருது = வேல் கொண்டு போர் செய்து, இமையவர் பணி = தேவர்கள் பணிகின்ற, திருத்தணி பொன்பதி தனில் = திருத்தணி யென்ற அழகிய திருத்தலத்தில், மயில் நடவிய = மயிலின் மீது நடித்தருளிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! முகத்தை மினுக்கிகள் = முகத்தை மினுக்குபவர்கள்; அசடிகள் = மூடர்கள்; கபடிகள் = வஞ்சகிகள்; விழித்து மருட்டிகள் = கண்ணை விழித்து மயக்குபவர்கள்; கெருவிகள் = கருவம் பிடித்தவர்கள்; திருடிகள் = களவு செய்பவர்கள்; மொழிக்கு உள்மயக்கிகள் = இனிய மொழி கொண்டு மயக்குபவர்களாகிய பொது மாதர்களின், வகை தனில் = உபாயத்திலும், நகைதனில் = புன்னகை

யிலும், விதமாக முழித்து = ஒரு விதமாக முழித்து, மயல்கொளும் அறிவு இலி = மோக மயக்கங் கொண்ட அறிவில்லாதவனும், நெறி இலி = ஒழுக்கம் இல்லாதவனும், புழு குடலை பொருள் என மிக எணி = புழுநிறை குடலுடன் கூடிய இந்தவுடலைப் பொருளாக மிகவும் நினைத்து, அவர் முயக்கம் அடுத்து = அம்மாதர்களின் தலவியை விரும்பி, உழிதரும் = சுழலுகின்றவனுமாகிய அடியவன் இடர் ஒழிவு ஆக = அடியேனுடைய துன்பந் தீரும் பொருட்டு, மிகுந்த அழகை பெறும் = மிகுந்த அழகுடன் விளங்கும், அறுமுக = ஆறுமுகக்கடவுளே! சரவண = சரவணமூர்த்தியே! புயத்து இளகி கமழ் = திருத்தோளில் நெகிழ்வுற்று மணம் வீசுகின்ற, நறை மலர் தொடை = தேன் துளிக்கின்ற பூமாலையும், மிக விசை கொடுமை பெறு = மிகுந்த வேகமும் கடுமையும் கொண்ட, மரகத கலபியும் = பச்சை மயிலும், வடி வேலும் = கூரியவேலாயுதமும், வெளிப்பட = வெளிப்பட்டு, எனக்கு இனி = அடியேன் முன் தோன்ற, இரவொடு பகல் அற = மறப்பும் நினைப்பும் அற்றுப்போக, திரு பதிய = தெய்வத்தன்மை பொருந்த, புகழ் அமுது இயல் கவி சொலி = உமது திருப்புகழை அமுது போன்ற பாடல்களாகச் சொல்லி விதித்தன் எழுத்து இனைதர = பிரமன் எழுதிய எழுத்து மெலிந்து அழிதர, வரும் ஒரு பொருள் அருளாயோ = மேம்பட்டு விளங்கும் ஒப்பற்ற பொருளை அடியேனுக்கு உபதேசித்தருளுவீராக.

## பொழிப்புரை

புகையுடன் கூடிய நெருப்பினுல் திரிபுரம் எரிபட்டு அழியச் சிரித்தருளிய சிவபெருமானுடைய இடப்பாகத்தில் இருப்பவளும், பரதவர்களிடம் புதலவியாக வந்தவளும், மலைகளுள் இமயமலைக்கரசன் பெற்ற இமயவல்லியும், பேரழகான உரு வாய்ந்தவளும், அம்பலத்தில் திமித்திமியென்று நடனஞ் செய்யும் தேவியும், எழுத்திலக்கணங்களை அறிந்த பகவதியும், கௌரியும், ஒழுங்கான பொருளின் பயனாகவும் சொல்லாகவும் இருப்பவளும், அமுதுபோல் பூமியை வயிற்றில் அடக்கிய நெடியவராம் நாராயணரது தங்கையும் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த பரசிவையும், சிறந்தவளும், ஆற்றல் மிக்க தமிழைத் தந்த பழையவளுமாகிய பார்வதியம்மை பெற்ற சிறிய பெருந்தகையே! செருக்குடைய அசுரர்கள் அழிந்து பொடிபடுமாறு அழகிய திருக்கரத்தில் வேல் கொண்டு போர் செய்து, தேவர்கள் பணிய, திருத்தணிகையம் பதியில் மயில்மீது நடித்தருளிய பெருமிதம் உடையவரே! (தினந்தோறும்) முகத்தை மினுக்கிகள்; மூடர்கள்; வஞ்சகர்கள்; விழித்துப் பார்த்து மயக்குபவர்கள்; கர்வம் கொண்டவர்கள்: திருடிகள்; இன்சொல்லால் மயக்குபவர்களாகிய பொது மகளிரின் உபாயத்தாலும், புன்னகையாலும், ஒரு விதமாக முழித்து, மோகங் கொண்ட அறிவில்லாதவனும், ஒழுக்க

மில்லாதவனும், புழுக்குடலுடன் கூடிய இந்த வுடம்பைப் பொருள் என்று எண்ணின்மனுமாகிய அடியேன், அம் மகளிரைத் தழுவும் பொருட்டு அவர்களிடம் உழலுகின்ற எனது இடர் தீர, மிகுந்த அழகிய ஆறுமுகக் கடவுளே! சரவணபவா! உமது திருப்படியங்களில் நெகிழ்வுற்று மணம் வீசும் தேன் நிறைந்த பூமாலையும், கடிய வேகமுள்ள பச்சை மயிலும், கூரிய வேலும் வெளிப்பட்டு அடியேன் முன் தோன்ற, நினைப்பும் மறப்பும் அற்றுப்போக, தெய்வத் தன்மை என்பால் பொருந்த, உமது திருப்புகழை அமுதம் போல் பாடி பிரமனுடைய எழுத்து மெலிந்து அழிய, ஒப் பற்ற உண்மைப் பொருளை அடியேனுக்கு உபதேசித்தருள் வீராக.

## விரிவுரை

அடியவர் இடர் ஒழிவாக :—

இப்பாடலின் ஆறு வரிகளில் விலைமகளிரின் நிலைமை களைக் கூறி, அம்மாதர் வசப்பட்டு அடியேன் உழலா வண்ணம் எம்பெருமானே என்னை ஆண்டருளும் என்று சுவாமிகள் வேண்டுகிறார்.

மிகுத்தழகைப் பெறுமறுமுக :—

அழகின் நிலைக்களம் முருகப் பெருமான். முருகு—அழகு. அழகுத் தெய்வம் முருகன்.

"முழுது மழகிய குமர கிரிகுமரி யுடனுருகு
முக்கட் சிவன் பெறுஞ் சத்புத்ர" —(விழையுமனி) திருப்புகழ்.

சரவண :—

சரம்—தருப்பை. வனம்—காடு. தருப்பை வனத்தில் ஒளி யுருவாக வெளிப்பட்டவர்.

மிகவிசைக் கொடுமைப்பெறு மரகதமயில் :—

மிக விசை கொடுமை பெறு. முருகனுடைய மயில் மிகுந்த வேகத்துடன் கூடியது. மயிலின் வேகத்தை அலங்காரத்தில் கூறுகின்றார்.

குசைநெகிழா வெற்றி வேலோன் அவுணர் குடர் குழம்பக்
கசைவிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு; அடியிட எண்
திசை வரை தூள்பட்ட; அத்தூளின் வாரி திடர்பட்டதே.

வெளிப்படெனக்கினி :—

கடப்பமலர் மாலையும், மயிலும் வேலும் எனக்கு முன்னே தோன்றி காட்சி தரவேண்டும்.

இரவு பகலற :—

இரவு—கேவலம். தத்துவங்கள் தொழிற்பாடின்றி ஆணவ மலத்துடன் மாத்திரம் கூடியிருக்கும் ஆன்மாவின் நிலை.

பகல்—சகலம். ஆன்மா தத்துவங்களுடன் கூடி விடயங்களை நுகரும் நிலை.

இந்த இரண்டும் அற்ற இடமே இன்ப நிலை.

"ஆந்திபகலற்ற நினைவு அருள்வாயே" —(ஐங்கரனை) திருப்புகழ்.

"இராப்பகலற்ற இடத்தே யிருக்கை எளிதல்லவே" —அலங்காரம்.

திருப்பதிய :—

திரு—தெய்வத்தமை. மனிதத்தன்மை நீங்கி தெய்வத் தன்மை பதிய.

புகழ் அமுதியல் கவிசொலி :—

திருப்புகழ் அமுதம்போல் அழியா நிலையை அருள வல்லது.

"அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே"
—(புமியதனிற்) திருப்புகழ்.

"எம் அருணகிரிநாதர் ஓது பதி குருபிரம் திருப்புகழ் அமுதுமே"
—திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்.

விதித்த னெழுத்தினை தர :—

விதித்தன்—விதிக்கின்ற பிரமன். முருகனை வணங்குகின்ற அடியார்க்கு பிரமன் தலையில் எழுதிய எழுத்து மெலிந்து நலிந்து வலிமை குன்றிவிடும்.

ஒரு பொருளருளாயோ :—

ஒப்பற்ற உபதேசப் பொருளை எனக்கு உபதேசித்தருள் செய்வீராக.

வலைமகள் :—

உமாதேவியார் பாண்டி நாட்டில் கீழ்க்கடல் ஓரத்தில் புன்னைமர நிழலில் ஒரு குழந்தையாக அவதரித்தருளினார். பரதவகுலபதியாகிய அரசன் எடுத்து வளர்த்தான். திருநந்திதேவர் கடலில் மீனாகப் பிறந்து மக்களுக்கு இடர் விளைவித்தார். "இந்த மீனைப் பிடிப்பவனுக்கு என் புதல்வியைத் தருவேன்" என்று பரதவர்பதி பகர்ந்தான். சிவபெருமான் வலைஞனாக வடிவு கொண்டு சென்று வலைவீசி மீன் பிடித்து அருளினார். பரதவர் கோமான் அதிசயமுற்று தன் புதல்வியைக் கல்யாணஞ் செய்து கொடுத்தருளினான்.

**பொதுற்று :—**

பொது உற்று. பொது—அம்பலம். அம்பலத்தில் எம்பிரானுடன் எம்பிராட்டி நடனம் புரிகின்றாள்.

**பொருட்பகனுக் குரைபடுகிய சமைபவள் :—**

சொல்லும் பொருளும் போல் சிவத்துடன் பொருந்தியிருப்பவர் உமாதேவியார்.

**செகத்தையகத்திடு நெடியவர் :—**

உகாந்த காலத்தில் உலகமெல்லாம் ஒடுங்கி திருமால் திருவயிற்றில் அடங்கியிருக்கும் உலகம் மீள அவருடைய உதரத்திலிருந்து வெளிப்படும்.

உலக முண்டுமிழ்ந்த பெருமாள் என அவரை ஆன்றோர் புகழ்வார்கள்.

**அறத்தை வளர்த்திடு பரசிவை :—**

காஞ்சிபுரத்தில் காமாட்சி இருநாழி நெல்லைக்கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தருளினார்.

**திறத்தமிழைத் தரு பழையவள் :—**

திறம்—ஆற்றல். தமிழ் மிகுந்த ஆற்றலுடையது.

"தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்த கொடி
சப்பாணி கொட்டி யருளே"

"நறைபழுத்த துறைந்தீந் தமிழின் ஒழுகும்நறும் சுவையே"

—மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

## கருத்துரை

திருத்தணியில் நடிக்குஞ் சிவகாமி! குமரா! அடியேனுக்கு ஞானப்பொருளை உபதேசித்தருள்வீர்.

## 48

முகிலு மிரவியு முழுகதிர் தரளமு
முடுகு சிலை கொடு கணைவிடு மதனனு
முடிய வொருபொரு ளுதவிய புதல்வனு மெனநாடி
முதிய கனனென தெய்வதரு நிகரென
முதலை மடுவினி லதவிய புயலென
முகமுமறுமுகமுடையவ னிவனென வறியோரைச்
சகல பதவியு முடையவ ரிவரென
தனிய தநுவல விஜயவ னிவனென
தபனன் வலம்வரு கிரிதனை நிகரென இசைபாடிச்

சயில பகலவ ரிடைதொறு நடைசெயு
மிரவு தவிரவெ யிருபத மடையவெ
சவித வடியவர் தவமதில் வரவருள் புரிவாயே

அகில புவனமு மடைவினி லுதவிய
இமய கிரிமயில் குலவரை தநுவென
அதிகை வருபுர நொடி யினி லெரிசெய்த அபிராமி
அமரு மிடனன லெனுமொரு வடிவுடை
யவனி லுரையவன் முதுதமி ழுடையவ
னரியொ டயனுல கரியவ னடநவில் சிவன்வாழ்வே

திகிரி நிசிசரர் தடமுடி பொடிபட
திரைக ளெறிகடல் சுவறிட களமிசை
திரடு குறடுகள் புரள்வெகு குமிகள் பெருகாருச்
சிகர கிரிநெறி படபடை பொருதருள்
திமிரதினகர குருபர இளமயில்
சிவணி வருமொரு தணிகையில் நிலைதிகழ்
பெருமாளே.

## பதவுரை

அகில புவனமும் அடைவினில் உதவிய = எல்லா புவனங்களையும் முறைப்படி தந்த, இமயகிரி மயில் = இமய மலையில் வளர்ந்த மயிலாகிய உமாதேவி, குலவரை தநு என = சிறந்த மலையாம் மேருகிரியை வில்லாகக்கொண்டு, அதிகை வரு = திருவதிகை என்ற திருத்தலத்தில் எழுந்தருளி, புரம் நொடியினில் எரி செய்த = முப்புரத்தை ஒரு நொடிப் பொழுதில் எரித்தவரும், அபிராமி = பேரழகி, அமரும் இடன் = இடப்பாகத்தில் பொருந்தியவரும், அனல் எனும் ஒரு வடிவுடையவன் = நெருப்பு என்னும் ஒப்பற்ற வுருவத்தினனும், இல் உரையவன் = வாக்குக்கு எட்டாதவனும், முது தமிழுடையவன் = பழந்தமிழுக்கு உரியவனும, அரியொடு = திருமாலுடன், அயன் = பிரமனும், உலகு அரியவன் = உலகத்தோரும் அறிய அரியவனும், நடநவில் சிவன் = திரு நடனம் புரிகின்றவருமாகிய சிவபெருமானுடைய, வாழ்வே = வாழ்வாக விளங்கும் குமாரரே! திகிரி நிசிசரர் = சக்ராயுதத்துடன் வந்த அசுரர்களின், தடமுடி பொடிபட = பெரிய முடிகள் பொடியாகவும், திரைகள் எறிகடல் சுவறிட = அலைகள் வீசும் கடல்வற்றிப் போகவும், களமிசை திரடு குறடுகள் புரள் வெகு குருதிகள் = போர்க்களத்தில் மேடான உயர் நிலங்களிலும் புரண்டெழுந்த மிகுந்த உதிரவெள்ளம், பெருகு ஆறு = பெருகி ஆறாக ஓடும்படியும், சிகர கிரி நெரிபட = சிகரங்களையுடைய கிரவுஞ்சமலை நெரிபட்டு அழி

யவும், படைபொருது அருள்=வேற்படையால் போர் செய்தருளிய, திமிர தினகர=அஞ்ஞான இருளை யகற்றும் ஞான சூரியனே! குரு பர=குருமூர்த்தியே! இள மயில் சிவணி வரும்=இளமையான மயி லில் பொருந்தி வருகின்ற, ஒரு தணிகையில் நிலை திகழ்=ஒப்பற்ற திருத்தணிகை மலையில் நிலை பெற்று விளங்கும், பெருமாளே=பெரு மையில் மிகுந்தவரே! முகிலும்=கொடையில் மேகம் என்றும், இர வியும்=புகழ் ஒளியில் சூரியன் என்றும், முழுகதிர் தரளமும்=அழகில் பேரொளி வீசும் முத்து என்றும், முடுகு சிலை கொடு கணை விடு மதன னும்=வேகமாக வில்லெடுத்துக் கணைபொழிகின்ற மன்மதன் (அழ கில்) என்றும், முடிய ஒரு பொருள் உதவிய புதல்வனும் என=தன் இளமை நலம் முழுவதும் வழங்கிய பூரு என்றும், நாடி=விரும்பிச் சென்று, முதிய கனன் என=பழமையான கர்ணன் என்றும், தெய்வ தரு நிகர் என=தெய்வத் தருவாகிய கற்பகத்தை ஒப்பானவன் என் றும், முதலை மடுவினில் அதவிய புயல் என=மடுவில் முதலையைச் சங் கரித்த நீலவண்ணராகிய நாராயணர் என்றும், முகமும் அறுமுகம் உடையவன் இவன் என=முகமும் ஆறுமுகங் கொண்ட முருகன் என் றும், வறியோரை=தரித்திரரைப் பார்த்து, சகல பதவியும் உடையவர் இவர் என=சகல சம்பத்தும் உடையவர் இவர் என்றும், தனிய தநுவல விஜயவன் இவன் என=ஒப்பற்ற வில்லாளியாகிய அர்ச்சுனன் இவன் என்றும், தபனன் வலம் வரு கிரிதனை நிகர் என= சூரியன் வலம் வருகின்ற பொன் மேரு மலையை நிகரானவன் என்றும் இசை பாடி=இசைப் பாடல்களைப் பாடி, சயிலபகலவர் இடை தொறும் நடை செயும்=கற்பிள்ளை யொத்த கடினமுள்ளவர்கள் இடங்கள்தோறும் சென்று நடந்து திரியும், இரவு தவிரவே=பிச்சை யெடுக்குந் தொழில் நீங்கவும், இருபதம் அடையவே=உமது இரு பாதங்களை அடையவும், சவித அடியவர்=இதமுடன் கூடிய அடியார் களின், தவம் அதில் வர=தவமாகிய நிலை எனக்கு உண்டாக, அருள் புரிவாயே=அருள் செய்வீராக.

## பொழிப்புரை

எல்லாவுலகங்களையும் முறைப்படி ஈன்றவரும், இமய மலையில் வளர்ந்த மயில் போன்றவரும், மேருமலையை வில் லாக ஏந்தி திருவதிகையில் திரிபுரத்தை எரித்தவரும். அபிராமியுமாகிய உமையம்மையை ஒருபுறத்தில்தரித்தவரும், நெருப்பார் மேனியரும், உரைக்கு எட்டாதவரும், பழந்தமிழை புடையவரும், மாலும் அயனும் உலகோரும் அறியவொண் ணாதவருமாகிய நடராசப் பெருமானுடைய திருக்குமாரரே! சக்கராயுதத்துடன் வந்த அசுரர்களின் முடிகள் பொடிபட் டழியவும், அலைகளுடன் கூடிய கடல் வற்றிப் போகவும், போர்க்களத்தில் மேடான உயர் நிலங்களில் புரண்டோடிய உதிர வெள்ளம் ஆறுகப் பெருகவும், சிகரத்தையுடைய

கிரவுஞ்சமலை நெரியவும், வேற்படை கொண்டு போர் செய்தருளிய அஞ்ஞான இருளையகற்றும் ஞான சூரியரே! குருபர மூர்த்தியே! இளமையான மயிலில் பொருந்திவரும், ஒப்பற்ற திருத்தணிகை மலையில் நிலையாக வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! கொடையில் மேகம் என்றும், புகழ் ஒளியில் சூரியன் என்றும், பேரொளி வீசும் முத்து என்றும், அழகில் வேகமாக வில்லைக்கொண்டு கணைபொழியும் மன்மதன் என்றும், தன் இளமை முழுதும் ஈந்த புதல்வனை பூரு என்றும், பழைய கர்ணன் என்றும், தெய்வத்தருவாகிய கற்பகத்திற்குச் சமானமானவன் என்றும், மடுவில் முதலையைக் கொன்ற நீலமேகவண்ணராகிய நாராயணர் என்றும், ஆறுமுகமுடைய முருகவேள் என்றும், பரம தரித்திரனை சகல சம்பத்துக்களும் உடையவன் என்றும், நிகரில்லாத வில்லாளியான விசயன் என்றும்,சூரியனை வலம் வரும் பொன் மேருகிரி என்றும், இசைப் பாடல்களைப் பாடி, கல்லின் பிளவு போன்ற கன்னெஞ்சர்களின் இடந்தொறும் சென்று சென்று திரிகின்ற பிச்சை யெடுக்குந் தொழில் நீங்கவும், உமது இருபாத மலர்களையடையவும், இனிய அடியவர்களின் தவநிலையைப் பெறவும் அருள் புரிவீராக

## விரிவுரை

*முகிலும்:—*

இத் திருப்புகழில் தமிழ்ப் புலவர்கள், காமதேனுவின் பாலைக்கமரில் சொரிந்ததுபோல், செந்தமிழ்க் கவிகளைப் பரம லோபிகளான மூடர்களைப் பாடிப் பரதவிக்கும் தன்மையை வன்மையாகக் கண்டிக்கின்றார்

கைம்மாறு கருதாமல் மழை பொழியும் இயல்புடையது மேகம். தனவந்தர்களை 'மேகம் போன்றவனே',என்று புகழ்வர்

*இரவியும் :—*

புகழ்ஒளி வீசுவதில் சூரியனுக்கு நிகரானவன் என்று கூறுவர்.

*முழுகதிர் தரளமும் :—*

"சிறந்த ஒளி வீசுகின்ற முத்தே" என்று கூறுவர்.

*முடுகு சிலைகொடுகணைவிடுமதனனும் :—*

மன்மதன் ஆண் பெண் இருபாலர் மீதும் கரும்பு வில்லை வளைத்து சுரும்பு நாணை மாட்டி, மலர்ப் பாணங்களை விட வல்லவன். இத்தகைய "மன்மதனுக்கு நிகரானவனே!' என்று கூறுவர்.

*முதிய வொருபொரு ளுதவிய புதல்வனும் :—*

யயாதி என்ற மன்னனுக்குச் சுக்கிரர் கிழப் பருவம வரக்கடவது என்று சபித்தார். பின்னே கருணை புரிந்து

உன் மக்களில் ஒருவனிடம் தந்து அவன் இளமையைப் பெற்று இன்புறுவாய் என்று வரமீந்தார்.

யயாதியின் மக்களாகிய யது, துர்வசு, துருஷ்யு, அனு என்ற நான்கு புதல்வர்களும் தங்கள் இளமையைக் கொடுக்க மறுத்துவிட்டார்கள்.

பூரு என்ற கடைசீ மகன் அவருடைய முதுமையைப் பெற்றுக்கொண்டு, தனது இளமையை யீந்தான். ஆயிரம் ஆண்டுகள் அவன் முதுமையுடன் துன்புற்றான்.

அன்றி, தன் தந்தையின் பொருட்டு, அரசையும், திருமணத்தையும் தியாகஞ் செய்த பீஷ்மரையும் குறிக்கும்.

**முதிய கனன் என :—**

கர்ணன் என்ற சொல் கனன் என வந்தது. கர்ணன் இடை எழு வள்ளல்களில் ஒருவன். வரையாது வழங்கியவன்.

தன் உடம்புடன் பிறந்ததும், உயிருக்கு உறுதி செய்வதுமான கவச குண்டலங்களை, இந்திரன் வேதியனாக வந்து யாசிக்க, சூரிய பகவான் தடுத்தும் கொடுத்து உவந்தான்.

தலைவள்ளல்கள் எழுவர் :—சகரன், காரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன்.

இடையெழு வள்ளல்கள் :—அந்திமான், சிசுபாலன் அக்குரன், வக்கிரன், சந்திமான், கன்னன், சந்தன்.

கடையெழுவள்ளல்கள் :—பாரி, எழிலி, நள்ளி, ஆய், மலையன் ஓரி, பேகன்.

**முதலை மடுவினிலுதவிய புயலெனை :—**

கஜேந்திரம் என்ற யானையை முதலை பற்றிக்கொண்டது. பல காலம் போர் புரிந்து யானை இளைத்துவிட்டது. அதனால் செயல் இழந்து ஆதிமூலம் என்று அழைத்து நம்பிக்கையோடு தும்பிக்கையைத் தூக்கிக் கதறியது.

திருமால் கருடன்மீது வந்து சக்கரத்தால் முதலையைக் கொன்று யானைக்கு அருள் புரிந்தார்.

அத்தகைய நாராயணருக்கு நிகரானவனே யென்று புகழ்ந்து கூறுவர்.

**அறுமுகனிவனென :—**

கேவலம் ஒரு மனிதனைப் பார்த்து "நீ ஆறுமுகக் கடவுள் போன்றவன்" என்று கூறுவர்.

**வறியோரைச் சகல பதவியுமுடையவ ரிவரென :—**

ஒரு காசும் இல்லாத பரம தரித்திரனைப் பார்த்து, நீ எல்லாச் செல்வங்களும் உடையவன் என்று புகழ்வர்

இரட்டையர் என்ற புலவர்கள் மாறிமாறிப் பாடுவார்கள். ஒருவர்,

"குன்றும் வனமும் குறுகி வழி நடந்து
சென்று திரிவ தென்றுந் தீராதோ"

என்று பாட,

—ஒன்றும்

தொடாதவனைச் சங்கென்றுங் கோவென்றுஞ் சொன்னால்
இடாதோ அதுவே இது"

என்று மற்றொருவர் கூறினார்.

தனிய தநுவல விஜயவ னிவனென :—

வலிமையேயில்லாத ஒருவனை நீ வில்லில் விஜயன் போன்றவன் என்று கூறுவர்.

இப்படிக் கூறுகின்ற வழக்கம் 9-ஆம் நூற்றாண்டிலேயே இருந்தது போலும்.

"மிடுக்கிலாதானை வீமனே விறல் விஜயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை"

—சுந்தரர்.

தபனன் வலம்வரு கிரிதனை நிகரென :—

சூரியன் வலம் வருகின்ற மலை பொன்மேருகிரி. அது பொறகுவியலுக் குறைவிடமானது. அதற்கு நிகரானவனே என்று கூறுவர்.

சயில பகலவ ரிடைதொறு நடைசெயு மிரவு தவிரவே :—

சயில பகலவர்—கற்பிளவையொத்த கடின சித்தம் உள்ளவர்கள். நம்பால் பலகாலும் இவன் நடக்கின்றானே என்று இரக்கப்படாமல் சீறி விழுவர்.

இரவு—இரத்தல் தொழில். இரந்தவரே இறந்தவராவார்.

சவித அடியவர் :—

இதம்—இனிமை. ச—உடன். இனிமையுடன் கூடிய அடியார்கள்.

அகில புவனமு மடைவினிலுதவிய :—

எல்லா உலகங்களையும் ஈன்ற தாய் அம்பிகை.

"அகில புவனமு முதவு மலைமகள்" —பூதவேதாள வகுப்பு

அதிகை வருபுர நொடியினிலெரி செய்த :—

திரு அதிகை என்பது அட்டவீரட்டானங்களில் ஒன்று. இது திரிபுரம் எரித்த வீரம் உடைய தலம்.

**இலுரையவன் :—**

இல் உரையவன். உரைக்கு எட்டாதவன்; வாக்கும் மனமும் கடந்தவன் இறைவன்.

"மாற்றமனங் கழிய நின்ற மறையோனே" —திருவாசகம்.

## கருத்துரை

திருத்தணிகேசா! மனிதரைப் பாடுந் துயரற அடியவர் பெறும் தவநிலை தந்தருள்வீர்

## 49

முடித்த குழலினர் வடித்த மொழியினர்
முகத்தி லிலகிய விழியாலும்
முலைக்கி ரிகள்மிசை யசைத்த துகிலிலும்
இளைத்த இடையினு மயலாகிப்

படுத்த அணைதனி லணைத்த அவரொடு
படிக்கு ளநுதின முழலாதே
பருத்த மயில்மிசை நினைத்த பொழுதுன
பதத்து மலரிணை யருள்வாயே

துடித்து தசமுகன் முடித்த லைகள்விழ
தொடுத்த சரம்விடு ரகுராமன்
துகைத்தி வுலகையொ ரடிக்கு ளளவிடு
துலக்க அரிதிரு மருகோனே

தடத்து ளுறைகயல் வயற்கு ளெதிர்படு
தழைத்த கதலிக ளவைசாயத்
தருக்கு மெழிலுறு திருத்த ணிகையினில்
தழைத்த சரவண பெருமாளே.

## பதவுரை

*தசமுகன் = இராவணனுடைய, முடித்தலைகள் = முடியுடன் கூடிய தலைகள், துடித்து விழ = துடி துடித்து அற்று விழுமாறு, சரம் தொடுத்து விடு = கணையை வில்லில் தொடுத்துவிட்ட, ரகு ராமன் = ரகு குலத்தில் உதித்த ராமரும், துகைத்து = காலால் மிதித்து, இவ் உலகை ஒரு அடிக்குள் அளவு இடு = இந்த உலகை ஓரடியால் அளந்து துலக்க = விளங்கும்படி காட்டிய, அரி திரு மருகோனே = திருமாலின்*

திருமருகரே! தடத்து உள் உறைகயல்=குளத்தில் வசிக்கின்ற கயல் மீன் கள், வயற்குள் எதிர்படு=வயல்களில் காணப்படுகின்ற, தழைத்த கதலிகள் அவை சாய=வளமையாகவுள்ள வாழை மரங்கள் சாயும் படித் தாக்கி, தருக்கும் எழில் உறு=களிக்கின்ற அழகுடைய, திருத் தணிகையினில்=திருத்தணிகையென்ற திருத்தலத்தில், தழைத்த சரவண=மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்ற சரவண மூர்த்தியே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! முடித்த குழலினர்=முடித்த கூந்தலை யுடையவர்கள், வடித்த மொழியினர்=தேனை வடிகட்டியது போன்ற இனிய சொற்களையுடையவர் ஆகிய மாதர்களின், முகத்தில் இலகிய விழியாலும்=முகத்தில் விளங்குகின்ற கண்களாலும் முலை கிரிகள்மிசை=முலையாகிய மலைகள்மீது அசைத்த துகிலிலும்= அசைகின்ற ஆடையாலும், இளைத்த இடையிலும்=மெலிந்த இடையினாலும், மயல் ஆகி=அடியேன் மோகங் கொண்டவனாகி, படுத்த அணைதனில்=படுத்த படுக்கையில், அணைத்த அவரொடு=தழுவிய அம்மாதர்களுடன், படிக்கு உள் அநுதினம்=உலகில் தினந்தோறும், உழலாதே=திரியாதவாறு, பருத்த மயில் மிசை=பருமையுள்ள மயிலின் மீது, நினைத்தபொழுது=அடியேன் நினைத்த அப்பொழுதிலேயே, பதத்து மலர் இணை அருள்வாயே=உமது இரு பாதமலர் களைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

இராவணனுடைய முடியுடைய பத்துத் தலைகளும் துடித்து விழும்படி வில்லில் கருணைகளைத் தொடுத்து விட்ட, இரகுராமரும், காலால் இப்பூமியை மிதித்து,ஓரடியால்உலகை அளந்து விளக்கங் காட்டிய திருமாலுமாகிய நாராயணரது திருமருகரே! குளத்தில் வாழ்கின்ற கயல் மீன்கள் வயலில் தழைத்துள்ள வாழை மரங்கள் சாயும்படிச்செய்து மகிழ்கின்ற, அழகிய திருத்தணிகையம்பதியில் மகிழ்கின்ற சரவணரே! பெருமிதம் உடையவரே! முடித்த கூந்தலையுடையவரும், வடித்த தேன் போன்ற மொழியினருமாகிய பெண்களின் முகத்தில் விளங்கும் கண்களாலும்,முலைகளாகிய மலைகள்மீது அசைகின்ற ஆடையாலும், மெலிந்த இடையாலும், அடியேன் மயக்கங்கொண்டு, படுத்த படுக்கையில் தழுவுகின்ற அப் பொதுமகளிருடன் நாள்தோறும் திரியாமல், பருத்த மயிலின்மீது, அடியேன் நினைத்த அப்பொழுதே எழுந்தருளி வந்து உமது பாதமலர்கள் இரண்டையும் தந்தருளுவீராக.

## விரிவுரை

**முடித்த குழலினர் :—**

மகளிர் ஐந்து விதமாகக் கூந்தலை முடிப்பார்கள். கூந்தலை முடிக்கும் வண்ணத்தால் இளைஞர்கள் மயங்குவர்.

"கூந்தன்மா முகிலை குலைத்துடன் முடிப்பார்" —வில்லிபாரதம்.
"கொண்டையிலா தார சோலையில் மருளாதே"
—(கொம்பனையார்) திருப்புகழ்.

வடித்த மொழியினர் :—

வடிகட்டிய தேன்போல் இனிக்கப் பேசுவார்கள்.

"பாலொத்த மொழியிலே............
என்புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே அலையாமல்" —தாயுமானார்.

உழலாதே :—

உலக இன்பம் தினைத்துணையாயது. அந்த இன்பத்தைக் கருதி ஆன்மாக்கள் அலைந்து உலைந்து அழிகின்றன.

இறைவனுடைய திருவடியில் ஊறுகின்ற பேரின்பம் அளவிடற்கரியது; தெவிட்டாதது.

பருத்த மயில்மிசை :—

மயில் உலகமெல்லாம் நிழல்படுமாறு தோகையை விரித்து ஆடும்.

பாம்பனடிகளாருக்கு விண்ணெல்லாம் ஒளி வீசுமாறு மயில் ஆடி வந்து காட்சியளித்தது. அப்படிக் காட்சியளித்த நாள் மார்கழி அமாவாசை கழிந்த பிரதமை இந்நாள் மயூர வாகன சேவனம் என்று இன்றும் சென்னைக்கு அண்மையில் உள்ள திருவான்மியூர் மயூரபுரத்தில் கொண்டாடப் பெறுகின்றது.

"கராசலங்கள்
எட்டும் குலகிரியெட்டும் விட்டோ எட்டாத வெளி
மட்டும் புதைய விரிக்குங்கலாப மயூரத்தனே" —அலங்காரம்.

நினைத்த பொழுதின பதத்து மலரிணை அருள்வாயே :—

"அடியேன் நினைத்த அப்பொழுதே மயில்மிசை வந்து முருகா! உனது இரு சரணாரவிந்தங்களைத் தந்தருள்வாய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

இவ்வாறு அப்பெருந்தகையார் நினைத்தபோதெல்லாம் எம்பெருமான் வந்து அவருக்குக் காட்சி தருகின்றான். இந்த அருட்டிறத்தை அவரே கூறுகின்றார்.

"எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர்நிற்பனே"
—அலங்காரம்.

துடித்து தசமுகன் முடித்தலைகள் விழ தொடுத்த சரம் விடு ரகு ராமன் :—

இராமர் ஒரு சொல், ஒரு இல், ஒரு கணை உடையவர். "ஏகமாட ஏகபாண ஏக பத்னீ விருதுடு" என்பார் தியாகப் பிரம்மம்.

இராவணனுடைய பத்துத் தலைகளும் பனம்பழங்களைப் போல் துடித்து அறுந்து விழ ஒரு கணை விடுத்தருளினார்.

"முனைச்சங் கோலிடு நீலமகோததி
அடைத்தஞ்சாத இராவணனீன்பல
முடிக்கன் றோர்கணை யேவுமிராகவன் மருகோனே"
—(அனிச்சங்) திருப்புகழ்

**உலகை யொரடிக்கு ளளவிடு அரி :—**

உலகமெல்லாம் ஓரடியில் அடங்குமாறு திருமால் அளந்து மாவலிக்குக் காட்டியருளினார்.

... ... படிமாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான்" —கந்தரலங்காரம்.

**கயல் வயற்குளெதிர்படு தழைத்த கதலிகள் அலைசாயச் செருக்கும் :—**

வயலின் அருகில் ஓங்கியுள்ள வாழைகள் நிழல் கொடுத்து பயிர்களின் வளர்ச்சிக்கு ஊறு செய்வதனால், வயல்களில் வாழும் கயல மீகள் அவ்வாழையைச் சாயுமாறு செய்து மகிழ்கின்றன.

"சேல்பட்டழிந்தது செந்தூர் வயற்பொழில்" —அலங்காரம்.

## கருத்துரை

தணிகேசா! அடியேன் நினைத்தபோது உனது பதமலர் தந்தருள்வீர்.

## 50

முத்துத் தெறிக்கவள ரிக்குச்சி லைக்கைமதன்
முட்டத் தொடுத்த மலராலே
முத்தத்தி ருச்சலதி முற்றத்து தித்தி யென
முற்பட் டெறிக்கு நிலவாலே
எத்தத்தை யர்க்குமித மிக்குப்பெ ருக்கமணி
இப்பொற் கொடிச்சி தளராதே
எத்திக்கு முற்ற புகழ் வெற்றித் திருத்தணியில்
இற்றைத்தி னத்தில் வரவேணும்
மெத்தச்சி னத்துவட திக்குக் குலச்சிகர
வெற்பைத் தொலைத்த கதிர்வேலா
மெச்சிக் குறத்திதன மிச்சித் தணைத்துருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா

மத்தப்ர மத்தரணி மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே
வட்டத்தி ரைக்கடலில் மட்டித்தெ திர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே.

## பதவுரை

மெத்த சினத்து=மிகுதியாகக் கோபித்து, வடதிக்கு=வட திசையில் இருந்த, குலசிகர வெற்பை=சிறந்த சிகரங்களையுடைய கிரவுஞ்ச மலையை, தொளைத்த=தொளைத்துப் பொடியாக்கிய, கதிர்வேலா=ஒளியுடைய வேலாயுதரே! மெச்சி=புகழ்ந்து கூறி, குறத்தி தனம் இச்சித்து=வள்ளி நாயகியின் தனங்களை விரும்பி, அணைத்து உருகி=அவரைத் தழுவி உள்ளம் உருகி, மிக்கு பணைத்த=மிகவும் வளர்ந்துள்ள, மணிமார்பா=அழகிய திருமார்பினரே! மத்த ப்ரமத்தர்=மிகுந்த பித்தரான, அணி மத்தச் சடை=அழகிய ஊமத்தம் பூவைச் சூடிய, பரமர்=பெரியவராகிய சிவபெருமான், சித்தத்தில் வைத்த கழலோனே=தமது திருவுள்ளத்தில் வைத்துப் போற்றிய திருவடிகளை யுடையவரே! வட்ட திரை கடலில்=வட்டமாகிய அலைகளை வீசும் சமுத்திரத்தில், எதிர்த்தவரை=எதிர்த்துவந்த அசுரர்களை, மட்டித்து=முறித்து அழித்து, வெட்டித் துணித்த=வெட்டித் துண்டாக்கிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! முத்து தெறிக்க வளர்=தனக்குள்ளே யிருந்த முத்து வெளியே தெறித்துவிடுமாறு வளர்ந்த, இக்கு சிலை கை மதன்=கரும்பை வில்லாகக் கொண்ட கையையுடைய மன்மதன், முட்ட தொடுத்த=நன்றாகத் தொடுத்து விட்ட, மலராலே=மலர்க்கணையாலும், முத்த திரு சலதி=முத்துக்களையுடைய அழகிய கடலின், முற்றத்து=மருங்கிலே, உதி தி என=உதித்த தீயைப் போன்ற, முற்பட்டு எறிக்கு நிலவாலே=எதிர்ப்பட்டு வீசும் நிலவாலும், எ தத்தையர்க்கும் இத மிக்கு பெருக்கம் அணி=கிளிபோல் பேசும் எந்தப் பெண்களும் அவர் (வசை) கூறுவதால் துன்பம் பெருகி அத்துன்பத்தை அணிகின்ற, இ பொன் கொடிச்சி தளராதே=இந்தப் பொன் கொடிபோன்ற நாயகி தளர்ச்சி யுறாத வண்ணம், எ திக்கும் உற்றபுகழ்=எல்லாத் திசைகளிலும் புகழ்பரந்துள்ள, வெற்றி திருத்தணியில்=வெற்றி விளங்குந் திருத்தணிகையம் பதியில், இற்றை தினத்தில்=இன்றைய நாளில், வரவேணும்=தேவரீர் வந்தருளவேண்டும்.

## பொழிப்புரை

வடதிசையில் சிறந்த சிகரங்களுடன் இருந்த கிரவுஞ்ச மலையை மிகவும் கோபித்துத் தொளைத்துப் பொடி செய்த ஒளிமிக்க வேலாயுதரே! வள்ளிநாயகியின் ஞானமாகிய

தனத்தை மெச்சி விரும்பித் தழுவி உள்ளம் உருகி மிகவும் பருத்து ஓங்கிய அழகிய திருமார்பினரே! மிகவும் பித்தராகியவரும் அழகிய ஊமத்த மலரைச் சூடியவருமாகிய பரசிவத்தின் திருவுள்ளத்தில் வைத்த திருவடியினரே! அலைகள் வீசுகின்ற வட்டமான கடலில் எதிர்த்த சூராதி யவுணர்களை வெட்டித் துண்டாக்கியபெருமிதம் உடையவரே! முத்து வெளிப்பட வளர்ந்த கரும்பை வில்லாகக் கரத்தில் ஏந்திய மன்மதன் நன்ருக விடுத்த மலர்க்கணையாலும், முத்துக்களையுடைய அழகிய கடலின் கண் உதித்து தீப் போல் எதிர்ப்பட்ட சந்திர ஒளியாலும், கிளிபோன்ற பெண்கள் பேசும் வசைமொழியாலும், இந்தப் பொற்கொடியாகிய தலைவி தளராத வண்ணம், எல்லாத் திசைகளிலும் புகழ்பெற்ற வெற்றியுடன் கூடிய திருத் தணிகையம்பதியில் இன்று தேவரீர் வந்து அருள் செய்வீராக

## விரிவுரை

**முத்துத்தெறிக்க வளரிக்கு:—**

இக்கு—கரும்பு; முத்து கரும்பில் பிறக்கும்; முத்துக்கள் இருபது இடங்களில் பிறக்கும்.

யானையின் தந்தம், பன்றியின் கொம்பு, இப்பி, பாக்கு, வாழை, சங்கு, சலஞ்சலம், மீன், கொக்கு, தாமரை, பெண்களின் கழுத்து, நெல், கரும்பு, மூங்கில், பசுவின்பால், பாம்பு, மேகம், சந்திரன் உடும்பு, முதலை என்ற இவைகள் என உணர்க.

தந்தி வராகம் மருப்பிப்பி பூகம் தழைகதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினமின்ஞர்
கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே.

இத்திருப்புகழ் நாயகீ நாயக பாவத்தில் பாடியது. தலைவி தலைவனை விரும்பி வாடுகின்ற தன்மையில் அமைந்தது.

தலைவி மன்மதனுடைய மலர்க்கணையால் வருந்துகின்ருள்.

**முற்றத் துதித்தி யெனை :—**

முற்றத்து உதித்தி எனப் பிரிக்க. கடலின் முற்றத்தில் உதிக்கின்ற தீயைப்போல் சந்திர வொளி வெதுப்புகின்றது.

**இத்தத்தையர்க்கு மிதமிக்குப் பெருக்கமணி :—**

தத்தை—கிளி; கிளிபோன்ற பெண்கள் வசை கூறுவர்; அதனுல் தலைவி துன்பத்தை யடைகின்ருள்.

**இப்பொற்கொடிச்சி தளராதே :—**

இந்தப் பொன் கொடி போன்ற தலைவி தளராதபடி நீர் வந்து அருள்புரிவீராக.

**எத்திக்கு முற்றபுகழ் வெற்றித் திருத்தணி :—**

திருத்தணி மிகச் சிறந்த திருத்தலம். எல்லாத் திசைகளி லும் இத்தலத்தைப் புகழ்கின்றார்கள்.

**இற்றைத் தினத்தில் வரவேணும் :—**

இளம்பூரணரே! இத்தலைவியின் துயர தீர இன்றே வந்து ஆட்கொண்டருள்வீர்

**குறத்திதனை மிச்சித்து :—**

வள்ளி நாயகி—தவமான். தவஞ்செய்வார்க்கு உண்டா வது ஞானம். அந்த ஞானத்தை ஞானபண்டிதன் விரும்பு கின்றார்.

**மத்தப்ரமத்தர் :—**

மத்தப்ரமத்தர்—மிகுந்த பித்து உடையவர்.

ஆன்மாக்கள் செய்கின்ற குற்றங்கள் அனைத்தும் பொறுத்து அருள் பாலிக்கின்ற கருணை பித்து எனப்படும்.

'பெற்றமனம் பித்து பிள்ளை மனங்கல்லு' என்பது பழ மொழி. மகன் செய்கின்ற குற்றங்களைப் பொறுத்து அவன் வாழ்க என்று வாழ்த்துகின்ற அன்னை மனம் பித்து எனப் படும்

"பித்தாபிறை சூடி பெருமானே யருளாளா" —தேவாரம்

**மத்தச்சடையர் :—**

மத்தம்—ஊமத்தம். தலைக்குறைந்து ஊமத்தம் என்பது மத்தம் என வந்தது.

"மத்தமுமதியமும் வைத்திடுமரன்மகன்" —(கைத்தல) திருப்புகழ்.

## கருத்துரை

முருகா! உன்னை விரும்பி வருந்துகின்ற இத்தலைவிக்கு முன் இன்று வந்தருள்வீர்.

## 51

முலைபுளக மெழஅங்கை மருவுசரி வளைகொஞ்ச
முகிலளக மகில்பொங்க அமுதான
மொழிபதற வருமந்த விழிகுவிய மதிகொண்ட
முகம்வெயர்வு பெறமன்ற லணையூடே

கலைநெகிழ வளர்வஞ்சி யிடைதுவள வுடலொன்று
படவுருகி யிதயங்கள் ப்ரியமேகூர்
கலவிகரை யழியின்ப அலையிலலை படுகின்ற
கவலைகெட நினதன்பு பெறுவேனோ

அலையெறியு மெழில்கண்ட உததிவயி றழன்மண்ட
அதிரவெடி படஅண்ட மிமையோர்கள்
அபயமென நடுநின்ற அசுரர்பட அடியுண்டு
அவர்கள்முனை கெடநின்று பொரும்வேலா

தலைமதிய நதி தும்பை யிளவறுகு கமழ்கொன்றை
சடைமுடியி லணிகின்ற பெருமானார்
தருகுமர விடவைந்து தலையரவு தொழுகின்ற
தணிமலையி லுறைகின்ற பெருமாளே

## பதவுரை

அலை எறியும் = அலைவீசும், எழில் கண்ட = அழகும் வலிமையும் வாய்ந்த, உததி வயிறு அழல் மண்ட = கடலின் உட்புறத்தில் நெருப்பு மண்டி யெரியவும், அதிர வெடிபட அண்டம் = அண்டம் அதிர்ந்து வெடிபடவும், இமையோர்கள் அபயம் என = தேவர்கள் அபயம் என்று முறையிட, நடுநின்ற அசுரர் பட அடி உண்டு = நடு நிலத்தே நின்ற அசுரர்கள் அழிய அடிபட்டு, அவர்கள் முனைகெட நின்று = அவர்களது போர்முனை யும் கெட்டு அழிய நின்று, பொரும் வேலா = சண்டை செய்த வேலவரே! தலை மதியம் = தலையில் சந்திரனையும், நதி = கங்கா நதியையும், தும்பை = தும்பை மலரையும், இள அறுகு = இளஅறுகம்புல்லையும், கமழ் கொன்றை = மணம் வீசும் கொன்றை மலரையும், சடை முடியில் அணிகின்ற = சடை முடியில் தரிக்கின்ற, பெருமானார் தரு குமர = சிவபெருமான் பெற்ற திருக்குமாரரே! விட ஐந்து தலை அரவு தொழுகின்ற = நஞ்சையுடைய ஐந்து தலைகளை யுடைய நாகராஜன் வணங்குகின்ற, தணிமலையில் உறைகின்ற = தணிகைமலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! முலை புளகம் எழ = கொங்கை புளகங் கொள்ளவும், அங்கை பருவு சரி வளை கொஞ்ச = அழகிய கையில் சரிந்துள்ள வளைகள் இனிது ஒலிக்கவும், முகில் அளகம் = மேகம் போன்ற கூந்தல், அகில் பொங்க = அகில் மணம் வீசவும், அமுது ஆன மொழிபதற = அமுதம் போன்ற சொற்கள் நடுங்கவும், அரும் அந்த விழி குவிய = அருமையும் அழகும் வாய்ந்த கண்கள் குவியவும், மதி கொண்ட முகம் வெயர்வு பெற = சந்திரனையொத்த முகத்தில் வெயர்வை தோன்றவும், மன்றல் அணையூடே = நறுமணமுள்ள படுக்கையின்மீது,

கலைநெகிழ = உடை தளரவும், வளர்வஞ்சி இடைதுவள = வளர்கின்ற கொடிபோன்ற இடை துவளவும், உடல் ஒன்றுபட = உடல் ஒன்றோடொன்று சேரவும், உருகி = உள்ளம் உருகி, இதயங்கள் ப்ரியமே கூர் = மனங்கள் அன்பு மிகவும், கலவி கரைஅழி = புணர்ச்சி அளவு கடந்து, இன்ப அலையில் அலைபடுகின்ற = இன்ப அலையில் அலைபடுகின்ற, கவலை கெட = துன்பம் நீங்குமாறு, நினது அன்பு பெறுவேனோ = தேவரீரது அன்பை அடியேன் பெறுவேனோ?

## பொழிப்புரை

அலைகள் வீசுகின்ற அழகும் வலிமையும் வாய்ந்த கடலின் நடு இடத்தில் தீப்பிடிக்கவும், அண்டங்கள் அதிர்ந்து பிளக்கவும், தேவர்கள் அபயமிடவும், நடுநிலத்தில நின்ற அசுரர்கள் அடிபட்டு அவர்களது போர் கெடவும் நின்று போர் செய்த வேலாயுதரே! சந்திரன், கங்கை, தும்பை, இளம் அறுகு, வாசனை வீசுகின்ற கொன்றை, இவைகளைச் சடைமுடியில் தரிக்கின்ற சிவபெருமான் பெற்ற திருக்குமாரரே! நஞ்சையுடைய ஐந்தலை நாகம் தொழுகின்ற, திருத்தணிமலையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! தனம் புளகிதம் அடையவும், அழகிய கரத்தில் சரிகின்ற வளைகள் இனிது ஒலிக்கவும், மேகம் போன்ற கூந்தலில் அகில்வாசனை வீசவும் அமுதம் போன்ற சொற்கள் பதறவும், அருமையும் அழகும் உடைய கண்கள் குவியவும், சந்திரனைப்போன்ற முகத்தில் வெயர்வை தோன்றவும் வாசனை நிறைந்த படுக்கையின் மீது உடை தளரவும், வளர்கின்ற கொடி போன்ற இடை துவளவும், உடல்கள் ஒன்று படவும், உள்ளம் உருகி மனங்கள் அன்பு மிகுந்து, புணர்ச்சியின்பம் அளவின்றி நுகர்ந்து அந்த இன்ப அலையில் அலைபடுகின்ற துயரம் நீங்கும்படி, தேவரீரது அன்பை அடியேன் பெறக்கடவேனோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் முதல் பகுதியில் உலகநடையைக் கூறுகின்றார்.

**கவலை கெட நினதன்பு பெறுவேனோ? :—**

துயரம் துடைக்கும் மருந்து இறைவன் கருணையே யாகும்.

ஒரு வெட்ட வெளியில் ஒரு கோடி காக்கைகள் காக்கை மாநில மாநாடு ஒன்று கூட்டியிருந்தன. அவ்வழியே சென்ற ஒரு பயில்வான் ஒரு கல்லை விட்டு எறிந்தான். கல் விழுந்தவுடன் ஒவ்வொரு காக்கையாகவா பறக்கும்? சேர்ந்தாற்போல் அத்தனை காக்கைகளும் விலகும். அதுபோல் இறைவனுடைய கருணை ஒரு சிறிது படுமேல் ஒரு கோடி பிறவியில் செய்த பாவங்கள் அத்தனையும் பறந்து போகும்.

> "காகமானது கோடி கூடிநின்றாலுமொரு
> கல்லின்முன் எதிர்நிற்குமோ

கர்மமா னதுகோடி முன் னேசெய் தாலுமுன்
கருணைப்ரவாக அருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ'' —தாயுமானவர்.

அலையெறியுமெழில் கண்ட உததிவயிறழல் மண்ட :—

முருகப் பெருமான் வேலாயுதத்தை விட்டபோது, கடல் தீப்பிடித்துக் கொதித்தது.

விடவைந்து தலையரவு தொழுகின்ற தணிகை :—

திருப்பாற்கடல் கடைந்தபோது, கடை கயிறாக இருந்த வாசுகியின் உடல் புண்ணாயிற்று. அதனால் நொந்த வாசுகி திருத்தணிகையில் வந்து ஒரு சுனையை உண்டாக்கி முருகனை வழிபட்டு நலம் பெற்றனன்,

இந்த நாகசுனை, மலையின் மேல் அர்ச்சகர்களுடைய வீடு களுக்கு எதிரில் உள்ள விஷ்ணு தீர்த்தத்துக்கும் அப்பால் மேற்கேயிருக்கின்றது.

## கருத்துரை

திருத்தணிகையாண்டவனே! உலக இன்பத்தால் வரும் கவலை கெட நின்று அன்பைத் தந்தருள் செய்வீர்.

## 52

மொகுமொகென நறைகொண்மலர் வற்கத்தி லற்புடைய
முளரிமயி லனையவர்கள் நெய்த்துக்க றுத்துமழை
முகிலனைய குழல்சரிய வொக்கக் கனத்துவள்
ரதிபார

முலைபுளக மெழவளைகள் சத்திக்க முத்தமணி
முறுவலிள நிலவுதர மெத்தத்த வித்தசில
மொழிபதற இடைதுவள வட்டச்சி லைப்புருவ
இணைகோட

அகில்மிருக மதசலிலம் விட்டுப் பணித்தமல
ரமளிபட வொளிவிரவு ரத்நப்ர பைக்குழையொ
டமர்பொருத நெடியவிழி செக்கச்சி வக்கமர மதநீதி
அடல்வடிவு நலமிதனில் மட்கச்செ ருக்கியுள
முருகநரை பெருகவுட லொக்கப்ப ழுத்துவிழு
மளவிலொரு பரமவொளி யிற்புக்கி ருக்கவெனை
நினையாதோ

செகுதகெண கெணசெகுத செக்குச்செ குச்செகுத
கிருதசெய செயகிருத தொக்குத்தொ குத்தொகுத
டிமிடடி மி டிமிடிமிட டிட்டிட்டி டிட்டிமிட டிடிதீதோ
திரிகடக கடகதிரி தித்திக்ர தித்ரிகட
திமிர்ததிமி திமிர்ததிமி தித்தித்தி தித்திதிதி
செணுசெணுத தணசெணுத தத்தித்தி குத்ரிகுட
ததிதீதோ

தகுடதிகு திகுடதிமி தத்தத்த தித்திகுட
குகுகுகுகு குகுகுகுகு குக்குக்கு குக்குகுத
தரரரர ரிரிரிரிரி றிற்றித்த றிற்றிரிரி யெனவேநீள்

சதிமுழவு பலவுமிரு பக்கத்தி சைப்பமுது
சமையபயி ரவியிதய முட்கிப்ர மிக்கவுயர்
தணிகைமலை தனில்மயிலி னிர்த்தத்தி னிற்கவல
பெருமாளே.

## பதவுரை

செகுதகெண கெணசெகுத செக்குச் செகுச் செகுத கிருத செய செயகிருத தொக்குத் தொகுத் தொகுத டிமிடடிமி டிமிடிமிட டிட்டிட்டி டிட்டிமிட டிடிதீதோ திரிகடக கடகதிரி தித்திக்ர தித்ரிகட திமிர்ததிமி திமிர்த திமி தித்தித்தி திகதிதிதி செணு செணுத தணசெணுத தத்தித்தி குத்ரிகுட ததிதீதோ தகுடதிகு திகுட திமி தத்தத்த தித்திகுட குகுகுகுகு குகுகுகுகு குக்குக்கு குக்குகுத தரரரர ரிரிரிரிரி றிற்றித்த றிற்றிரிரி எனவேநீள்=செகுத கெண...ரிரிரி என்ற ஒலியுடன் நீண்ட, சதிமுழவு பலவும்=தாள வொத்துடன் வாத்தியங்கள் பலவும், இரு பக்கத்து இசைப்ப=இரு பக்கங்களிலும் ஒலிக்கவும், முது=பழையவளும், சமையம்=உடனிருந்தவருமான, பயிரவி=துர்க்காதேவி, இதயம் உட்கி ப்ரமிக்க= உள்ளம் அஞ்சித் திகைப்பு அடையவும், உயர் தணிகை மலைதனில்= மகிமையால் உயர்ந்த திருத்தணிகை மலையின்மீது, மயிலில்=மயிலின் மேல், நிர்த்தத்தில் நிற்கவல=நடனஞ் செய்துகொண்டு நிற்பதில் வல்லவரான, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! மொகு மொகுஎன நறைகொள் மலர் வற்கத்தில்=கமகமவென்ற வாசனை கொண்ட மலர்க்கூட்டத்தில், அற்பு உடைய=அன்புள்ள, முளரி மயில் அனையவர்கள்=தாமரையில் வாழும் இலட்சுமி போன்ற மாதர்களுடைய, நெய்த்து=நெய்ப்பும், கறுத்து=கருமையுமுடைய, மழை முகில் அனைய=மழைமேகம்போன்ற, குழல் சரிய=கூந்தல்

சரியவும், ஒக்க கனத்து=ஒன்றுபோலப் பருத்து, வளர் அதிபார= வளர்கின்ற அதிக கனமுள்ள, புலேபுளகம் எழ=தனங்கள் பூரிப்பு அடையவும், வளேகள் சத்திக்க=வளையல்கள் ஒலிக்கவும், முத்தமணி முறுவல்=முத்துமணிபோன்ற பற்கள், இள நிலவுதர= இளநிலவின் குளிர்ந்த வொளியை வீசவும், மெத்த தீவித்த சில மொழி பதற=மிகவும் தவிர்ப்புக்கொள்ளும் சில வார்த்தைகள் பதறவும், இடைதுவள=இடை துவண்டு வாடவும், வட்ட சிலே புருவ இணை கோட=வட்டவடிவான வில்லைப் போன்ற இரு புருவங் கள் வளையவும், அகில்=அகிலும், ம்ருகமதம்=கஸ்தூரியும், சலிலம்= பன்னீரும், விட்டு பணித்த மலர் அமளிபட=தெளித்து . அலங்கரித்த மலர்ப் படுக்கை கலேயவும், ஒளி விரவு ரத்ன ப்ரபை குழையொடு= ஒளி வீசுகின்ற இரத்னமணி பதித்த தோடுகளுடன் அமர் பொருத= போர்புரிகின்ற, நெடிய விழி செக்க சிவக்க=நீண்ட கண்கள் மிகவும் சிவக்கவும், அமர=இந்தக் கலவியின்பத்தில் பொருந்துவதால், மதம் =கொள்கை, நீதி=நீதி, அடல்=வலிமை, வடிவு=அழகு, நலம்= நன்மை முதலியவைகள், இதனில் மட்க=இக் கலவி யின்பத்தில் மங்கும் படியாக, உளம் செருக்கி=உள்ளம் கர்வம் அடைந்து, உருக=உள்ளம் உருகவும், நரை பெருக=நரைக்குந் தன்மையதிகப் படவும், உடல் ஒக்க பழுத்து விழும் அளவில்=உடம்பு மிகவும் கிழமாகி இறந்துபோகும்போது, ஒரு பரம ஒளி=ஒப்பற்ற பேரொளியில், புக்கு இருக்க=புகுந்து சுகித்திருக்கும்படி, எனே நினேயாதோ=அடியேனைப்பற்றித் தேவரீர் திருவுள்ளம் நினைக்க மாட்டாதோ?

## பொழிப்புரை

செகுத கெண...றிற்றிரிரி என்ற ஒலிகள் நீண்டு ஒலிக்க, தாள ஒத்துடன் வாத்தியங்கள் பலவும் இருபக்கங்களிலும் ஒலிக்கவும், பழமையானவளும் உடனிருந்தவளுமான துர்க்கா தேவி உள்ளம் அஞ்சித் திகைப்பு அடையவும், மகிமையில் உயர்ந்த திருத்தணிகை மலேயில் மயில் மீது நடனஞ் செய்யவல்ல பெருமிதம் உடையவரே! கமகம என்று நறுமணம் வீசும் மலர்க்கூட்டத்தில் அன்புள்ள—தாமரை மலரில் வாழ்கின்ற இலட்சுமிபோன்ற பெண்களுடைய,நெய்ப் பும் கருமையும் உடைய மழை மேகம் போன்ற கூந்தல் சரிய வும், ஒன்றுபோல் வளர்ந்துள்ள தனங்கள் பூரிப்பு அடைய வும், வளையல்கள் ஒலிக்கவும், முத்துமணி போன்ற பற்கள் இளநிலாவொளிவீசவும், மிகவும் தவிப்புற்ற சில வார்த்தை கள் பதறவும், இடைதுவளவும், வட்டமான வில் போன்ற இருபுருவங்கள் கோணலாகவும், அகில், கஸ்தூரி பன்னீர் இவைகள் தெளித்து அலங்கரித்த மலர்ப்படுக்கை கலேயவும், ஒளிவீசுகின்ற இரத்தினத்தோடுகளுடன் போர் புரிகின்ற

நீண்ட கண்கள் மிகவும் சிவக்கவும், கலவியின்பத்தில் பொருந்தி, கொள்கை, நீதி, வலிமை, அழகு, நன்மை இவைகள் மங்கவும், தருக்குற்று உள்ளம் உருகவும் நரைத்துப் பழுத்து உடம்பு தளர்ந்து மரணமடையும் போது ஒப்பற்ற பேரொளியில் புகுந்து அடியேன்சுகிக்கத் தேவரீர் திருவுள்ளம் கருதாதோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் ஒன்பது வரிகளில் கலவியினால் விளைகின்ற மெய்ப்பாடுகளைப் பற்றிச் சுவாமிகள் கூறுகின்றார்.

**மதநீதி அடல்வடிவுநலமிதனில் மட்க :—**

மதம்—கொள்கை.

ஒவ்வொரு மனிதனுக்குங் கொள்கையிருக்க வேண்டும். இதனைத்தான் குறிக்கோள் என்று கூறுவர். "குறிக்கோளிலாது கெட்டேன்" என்பார் அப்பரடிகள்.

"குறிக்கோளொன் றிலாமையினால் என்றேனும் இரந்தார்க்கு இனிதாகவுரைத் தறியேன்" என்பார் திருமங்கையாழ்வார். மாதர்களின் சேர்க்கையின் மிகுதியால், கொள்கை நீதி வலிமை அழகு நலம் முதலிய அனைத்தும் குன்றிவிடும்.

**நரைபெருக உடலொக்கப் பழுத்து விழும் அளவில் :—**

முதுமையால் நரைத்து திரைத்து வெம்பிய காய் போல் உடம்பெல்லாந் தளர்ந்து மனிதன் பிறந்த பிறப்பின் பயனைப் பெறாது மாண்டொழிகின்றான்.

**ஒருபரமவொளியிற்புக்கிருக்கவெனை நினையாதோ?:—**

முடிவில் ஆன்மா பேரொளிப் பிழம்பில் இரண்டறக் கலந்து பேரின்பத்தை யடைய வேண்டும்.

திருஞானசம்பந்தர் திருமணகாலத்தில் ஒரு சிவவொளி தோன்ற எலலோருடனும் அதிற்கலந்தார்என்றவரலாற்றை இங்கு நினைவுகூரவும்.

சிவநெறி விட்டு அவநெறி சென்றோர் இருளில் கலந்து நரகம் எய்தித் துன்புறுகின்றார்கள்.

"முருகா! அடியேன் முடிவு நிலை பெறும்போது உனது பேரொளியில் கலந்து பரம சுகத்தை யடையுமாறு தேவரீருடைய திருவுள்ளத்தில் கருணையுடன் நினைந்து அருள் செய்யவேண்டும்" என்று சுவாமிகள் முறையிடுகின்றார்கள்.

**செகுதகெண....எனவேநீள் :—**

இந்த மூன்றடிகளும் வாத்திய ஒலிகளைக் குறிப்பிடுகின்றன.

**சதிமுழவு பலவுமிரு பக்கத்திசைப்ப :—**

சதி—தாளவொத்து.

"சதியொடன்பர்க்கின்பத் திறமுதவு ப்ரதகுரு"
—(அமுதததி) திருப்புகழ்

**முதுசமைய பயிரவி இதயமுட்கிப்ரமிக்க :—**

முருகப் பெருமான் மயில் மீது நடனமாடுகின்றபோது, அஞ்சாத வீரம்படைத்த துர்க்காதேவியே மனம் அஞ்சித் திகைத்து நிற்கின்ருள். அத்துணை உக்கிரமாக ஐயன் நடனம் புரிகின்ருன்.

**தணிகை மலைதனில் மயிலில் நிர்த்தத்தில் நிற்க வல :—**

திருத்தணிகைமலை மீது முருகவேள் மயில் மீது நடனம் ஆடி அருணகிரியாருக்கு அருள்புரிந்தார்.

இத்திருப்புகழ் முருகனுடைய நடனவர்ணனையை அதி அற்புதமாக அறிவிக்கின்றது.

## கருத்துரை

தணிகையில் நடித்த பெருமானே! பரம ஒளியில் சேர்ந்து அடியேன் சுகம் பெற அருள் செய்வீர்

## 53

வங்கம் பெறுகட லெங்கும் பொருதிரை
வந்துந் தியதிரு மதனலே
வஞ்சம் பெறுதிட நெஞ்சன் தழலுற
வஞ்சம் பதும்விடு மதனலே

பங்கம் படுமென தங்கந் தனிலுதி
பண்பொன் றியவொரு கொடியான
பஞ்சொன் றியமயில் நெஞ்சொன் றியெயழல்
பொன்றுந் தனிமையை நினையாயோ

தெங்கந் திரளுட னெங்குங் கதலிகள்
சென்ருேன் றியபொழி லதனூடே
தெந்தெந் தெனதென என்றண் டுறஅளி
நின்றுந் திகழ்வொடு மயிலாடப்

பொங்குஞ் சுனைகளி லெங்குங் குவளைக்
ளொன்றும் புகழ்பெற மலரினும்
பொன்றென் றணிகையில் நின்றங் கெழுபுவி
யென்றுஞ் செயவல பெருமாளே.

## பதவுரை

தெங்கம் திரளுடன் = தென்னை மரங்களின் கூட்டத்துடன் கதலிகள் = வாழைகள், எங்கும் சென்று ஒன்றிய = எல்லா இடங்களிலும் அமைந்து பொருந்திய, பொழில் அதனூடே = சோலைக்குள், தெந்தெந்தெனதென என்று = தெந்தெந் தெனதென என்ற ஒலியுடன், அண்டு உற அளி நின்றும் = நெருக்கமாகி நின்று வண்டுகள் பாடவும், திகழ்வொடு மயில் ஆட = விளக்கமாக மயில்கள் ஆடவும், பொங்கும் சுனைகளில் = நீர் பொங்கி வழிகின்ற சுனைகளில், எங்கும் குவளைகள் = எங்கும் குவளைகள், என்றும் புகழ்பெற மலர் ஈனும் = எந்நாளும் புகழ்பெறுமாறு மலர்களைத் தருகின்ற, பொன் தென்தணிகையில் நின்று = அழகு மிகுந்த திருத்தணி மலையின் மீது எழுந்தருளி, அங்கு எழு புவி என்றும் செயவல = அங்கு ஏழு உலகங்களையும் என்றும் படைத்தளிக்கவல்ல, பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! வங்கம் பெறு கடல் = கப்பல்கள் செல்லப் பெற்ற கடலில், எங்கும் பொரு திரை = எங்கும் மாறுபட்டு எழும் அலைகள், வந்து உந்தி அதிரும் அதனாலே = எழுந்து வந்து கரையில் மோதி ஒலிக்கின்ற காரணத்தாலும், வஞ்சம் பெறு திட நெஞ்சன் = வஞ்சகங் கொண்ட உறுதியான உள்ளத்தினனாகிய மன்மதன், தழல் உற = நெருப்பு வீசிப் பொருந்த, அஞ்சு அம்பு அதும் விடும் அதனாலே = ஐந்து மலர்க்கணைகளையும் விடுகின்ற காரணத்தாலும், பங்கம்படும் = அவமானம் அடைகின்ற, எனது அங்கம் தனில் உதி = என் உடலில் உதித்த, பண்பு ஒன்றிய ஒரு கொடி ஆன = தற்குணம் பொருந்திய ஒரு கொடி போன்ற, பஞ்சு ஒன்றிய மயில் = பஞ்சு போன்று மென்மையுடைய மயிலையொத்த என் மகள், நெஞ்சு ஒன்றிய அழல் = உள்ளத்தில் சேர்ந்த காமத்தீயால், பொன்றும் தனிமையை = இறந்துபடும் தனிமை நிலையை, நினையாயோ = தேவரீர் திருவுள்ளத்தில் நினைத்து அருள் புரியலாகாதோ?

## பொழிப்புரை

தென்னையும் வாழையும் நிறைந்து சோலைகள் எங்கும் வண்டுகள் தெந்தெந் தெனதென என்ற ஒலியுடன் பாடவும், அழகிய மயில்கள் ஆடவும், நீர் பொங்கி வழிகின்ற சுனைகளில் எங்கும் குவளைகள் எந்நாளும் புகழ் பெறுமாறு மலர்கின்ற, மிகுந்த அழகுள்ள திருத்தணி மலையில் எழுந்தருளி, ஏழு உலகங்களையும் படைத்தருளுகின்ற பெருமிதம் உடையவரே! கப்பல்கள் செல்லப்பெற்ற கடலில் எங்கும் மாறுபட்டு எழுந்து வீசுகின்ற அலைகள் எழுந்து ஒலிக்கின்ற காரணத்தாலும், வஞ்சகம் கொண்ட உறுதியான மனத்தினனாகிய மன்மதன் நெருப்பு போன்ற பஞ்சபாணங்களையும் ஒருங்கே விடுகின்ற காரணத்தாலும், அவமானம் அடைகின்ற என்னு

டைய உடம்பிலிருந்து பிறந்த கொடி போன்றவளும், பஞ்சு போன்ற மென்மையும் மயில் போன்ற சாயலும் உடைய என் புதல்வி, உள்ளத்தில் சேர்ந்த காமத் தீயால வெதும்பி இறந்துபடுகின்ற தனிமை நிலைமையைத் தேவரீர் கருதி அருள் புரியக் கூடாதோ!

## விரிவுரை

இத்திருப்புகழ் நற்றாயிரங்கல் என்ற துறையில் அமைந்தது.

நாயகனை விரும்பிய புதல்வி காமத் தீயால் வெதும்பி அழிகின்றதைக் கண்ட தாய் இரக்கபட்டு அம்மகளைக் குறித்து வருந்துகின்ற முறையில் பாடியது.

**வங்கம் பெறுகட லெங்கும் பொருதிரை வந்துந்தியதிரு மதனாலே:—**

வங்கம்—கப்பல்; திரை—அலை; அதிரும்—ஒலிக்கும். கப்பல்கள் செல்லுகின்ற கடலில் எங்கும் மாறுபட்டு எழுகின்ற அலைகள் கரையில் வந்து மோதி ஒலிக்கின்ற ஓசை இனிமையாக இருக்கும். ஆனால் காதலர்க்கு அக் கடலோசை வேட்கையை மிகச் செய்து வருத்தும்.

"தொல்லை நெடுநீலக்கடலாலே..... ......
மெய்யு நகும் மானைத் தழுவாயே" —(துள்ளுமத) திருப்புகழ்

**வஞ்சம் பெறு திட நெஞ்சன்:—**

மன்மதன் காதலர்களிடம் சமயம் பார்த்து வந்து, அவர்கள் மீது மலர்க்கணைகளைச் சொரிந்து ஆசைத் தீயை மூட்டி வருத்துவன். அதனால் வஞ்சம்படைத்த நெஞ்சன் என்றார்.

உறுதியான வீரர்களையும், முனிவர்களையுங்கூட மயக்குவான். அதனால் "திட நெஞ்சன்" என்றார்.

அம்மலர்க்கணை நெருப்பு போல் சுடும். அதனால் 'தழலுற' என்றார்.

**அஞ்சம் பதும்விடும்:—**

அஞ்சம்பதும் விடும்—அஞ்சு அம்பு அதும் விடுவான்.

**பங்கம்படும்:—**

அதனால் உடம்பு நாணத்தால் தளர்கின்றாள்.

**என தங்கந்தனிலுதி:—**

என்னுடைய சரீரத்தில் இருந்து உதித்தவள்.

**பண்பொன்றிய வொரு கொடியான:—**

உயர்ந்த பண்புகள் பொருந்தியவள்; கொடி போன்ற மெல்லிய உடலையுடையவள்.

**பஞ்சொன்றிய மயில்:—**

பஞ்சு போன்ற மென்மையுடையவள்; மயில் போன்ற சாயலையுடையவள்.

**நெஞ்சொன்றியெ யழல் :—**

*அழல்—காமாக்கினி.* முருகா! என் புதல்வி உம் மீது கொண்ட காதல் தீயானது உள்ளத்தில் பொருந்தி வருந்துகின்றாள்.

**பொன்றுந்தனிமையை நினையாயோ :—**

இறந்துபடுகின்ற நிலைமையில் இருக்கின்றாள். இவளது தனிமையைக் கண்டு நீர் இரங்க வேண்டாவோ? பெண்ணென்றால் பேயும் இரங்குமே? இப்பெண்ணின் துயரை நினைத்து நீர் இரங்கக் கூடாதோ?

இவளது தனிமையைக் கருதி இனிமை செய்தருள்வீர்.

"தனிமையை நினைகிலை சங்கரா" —திருவிசைப்பா,

**தெங்கந் திரளுட னெங்குங் கதலிகள் சென்றொன்றிய பொழிலூடே தெந்தெந் தெனதென என்றண் டரளி நின்றுந் திகழ்வுற மயிலாட :—**

*திருத்தணிகை மலை இயற்கையழகால் சிறந்தது;* அங்கு எங்கும் என்றும் ஆடலும் பாடலுமாகக் காட்சி தருகின்றன.

அணியணியாக வானோங்கி நிற்குந் தென்னஞ் சோலைகள்; இடையிடையே வாழைகள்.

இத்தகு வளமையான சோலையில் வளமையான வண்டுகள் மிக இனிமையாக தென்னு தென்னு என்று ஒலி செய்து பாடுகின்றன. அப்பாடலுக்கு ஏற்ப களிமயில்கள் நின்று மரகதத் தோகையை விரித்து ஆடுகின்றன.

இந்த நடனத்தைச் சுனைகளில் உள்ள குவளை மலர்கள் கண் இமையாது கண்டு மகிழ்கின்றன.

**பொங்குஞ் சுனைகளி லெங்குங் குவளைகள் என்றும் புகழ்பெற மலரினும் :—**

திருத்தணிகை மலையில் பல சுனைகள் விளங்குகின்றன: அச்சுனைகள் தோறும் நீலோற்பல மலர்கள் எந்நாளும் இடையறாது மலர்கின்றன.

"எந்நாளு மொருசுனையி லுக்த்ரநீலப்போ
திலங்கிய திருத்தணிகைவாழ் எம்பிரான்" —மயில் விருத்தம்.

**பொன்றென் தணிகை :—**

பொன்—அழகு; தென்—இனிமை; அழகும் இனிமையும் பொருந்தியது திருத்தணி.

**எழுபுவி என்றுஞ் செயவல :—**

திருத்தணிகையில் முருகவேள் வீற்றிருந்து ஏழு உலகங்களையும் படைத்தருளுகின்றார்.

## கருத்துரை

முருகா என் புதல்வியின் தனிமையை நினைந்து மருவியருள்வாய்.

## 54

வரிக்கலையயி னிகரான விழிக்கடையி லிளைஞோரை
மயக்கியிடு மடவார்கள் மயலாலே
மதிக்குளறி யுளகாசு மவர்க்குதவி மிடியாகி
வயிற்றிலெரி மிகமூள அதனாலே

ஒருத்தருட னுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தர்தமை மிகநாடி யவரோடே
உணக்கையிடு படுபாவி எனக்குனது கழல்பாட
உயர்ச்சிபெறு குணசீலம் அருள்வாயே

விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனோத மகிழ்வோனே
வெடித்தமணர் கழுவேற ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு புலவோனே

செருக்கியிடு பொருசூரர் குலத்தையடி யறமோது
திருக்கையினில் வடிவேலை யுடையோனே
திருக்குலவு மொருநீல மலர்ச்சுனையி லழகான
திருத்தணிகை மலைமேவு பெருமாளே.

### பதவுரை

அருணகிரிநாதன் = அருணகிரிநாதன் என்ற அன்பன், விரித்து உரைத்த = வேதாகமங்களின் அரிய கருத்துக்களை விரிவாகக் கூறிய, தமிழ் எனும் மாலை = தமிழ்நூலாகிய திருப்புகழ்மாலையை, மிகுத்த பலம் உடன் ஓத = நிரம்பிய பயனுடன்பாட, மகிழ்வோனே = உள்ளம் மகிழ்கின்றவரே! அமணர் = சமணர்கள், வெடித்து கழுவேற = உடல் பிளக்கக் கழுவில் ஏறவும், ஒருத்தி கணவனும் மீள = ஒப்பற்ற மங்கையர்க்கரசியாருடைய கணவனாகிய பாண்டியன் சமண் சமயப் படுகுழியின்று மீண்டு உய்யவும், விளைத்தது ஒரு தமிழ்பாடும் = சிவஞானத்தை விளைத்த ஒப்பற்ற தமிழ் மறையாகிய தேவாரப்பாடலைப் பாடிய, புலவோனே = ஞான பண்டிதரே! செருக்கியிடு = அளவற்ற வாழ்வால் அகங்கரித்து, பொருசூரர் = போர் செய்ய வந்த சூராதியவுணானுடைய, குலத்தை அடி அறமோது = வம்சத்தை வேரோடு அழியுமாறு தாக்கிய வடிவேலை = கூர்மைபொருந்திய வேலாயுதத்தை, திரு கையினில் உடையோனே = அழகிய கரமலரில் உடையவரே! திரு குலவும் = அழகு தங்கியதும், ஒரு = ஒப்பற்றதும், நீல மலர் சுனையில் அழகு ஆன = நீலோற்பமலர் நாள்தோறும் மலரும்

கணையினால் விளங்குவதுமாகிய, திருத்தணிகை மலை மேவு = திருத்தணிகை மலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! வரி கலையின் நிகர் ஆன = வரிகளோடு கூடிய கலைமானைப் போன்ற, கடை விழியில் = கடைக்கண் பார்வையால், இளைஞோரை = இளைஞர்களை, மயக்கியிடு = மயக்கத்தைச் செய்யும். மடவார்கள் = விலைமகளிரது, மயலாலே = மயக்கத்தாலே, மதி குளறி = அறிவு தடுமாற்றத்தை யடைந்து, உளகரகம் அவர்க்கு உதவி = நிலம் வீடு நகை மனம் முதலியவற்றைத் தந்ததோடு கையிலுள்ள பணத்தையும் அப்பொருட்பெண்டிருக்குக் கொடுத்து, மிடி ஆகி = தரித்திரத்தையடைந்து; வயிற்றில் எரி மிக மூள-வயிற்றில் தீ மிகவும் மூண்டு எரியவும், அதனாலே = அதனாலே, ஒருத்தர் உடன் உறவு ஆகி = ஒருத்தருடன் நட்பாகியும், ஒருத்தரொடு பகை ஆகி = ஒருத்தருடன் பகையாகியும், ஒருத்தர் தமை மிக நாடி = ஒருத்தரை மிகவும் நாடியும், அவரோடே = அவர்களோடு, உணக்கை இடு = வாட்டத்தையடையவும், படு பாவி = படுபாவியாகிய, எனக்கு = அடியேனுக்கு, உனது கழல் பாட = தேவரீருடைய சரணாரவிந்தங்களைப் பாடிஉய்ய, உயர்ச்சி பெறு குணசீலம் = உயர்வு பெற்ற நற்குண நல்லொழுக்கத்தை, அருள்வாயே = அருள்புரிவீர்.

## பொழிப்புரை

அருணகிரிநாதன் என்னும் அன்பன் வேதாகமங்களின் நுண்மாண் பொருள்களை விரித்துரைத்த செந்தமிழினாலாகிய திருப்புகழ் என்னும் தமிழ் மறையை ஓதக் கேட்டு மகிழ்பவரே! சமணர்களது உடல் வெடித்துக் கழுவில் ஏறவும், ஒப்பற்ற மங்கையர்க்கரசியம்மையாருடைய கணவனாகிய பாண்டியன் சமண் படுகுழியினின்றும் கரையேறி உய்யவும் சிவஞானத்தை விளக்கும் ஒப்பற்ற தமிழ் மறையைப் பாடும் புலவர் பெருமானே! அகங்காரத்துடன் கூடி போருக்கு வந்த சூராதி யவுணர்களது குலத்தை வேரோடு களைந்தெறியத் தாக்கிய கூர்மை பொருந்திய வேற்படையைத் திருக்கரத்தில் உடையவரே! அழகு தங்கியதும் நிகரற்றதுமான சோலை பல சுனையால் கவின் பெறுவதுமாகிய திருத்தணிகை மலையில் எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! வரிகளுடன் கூடிய கலைமானைப் போன்ற கடைக்கண் பார்வையால் இளைஞர்களை மயக்கும் விலைமகளிருடைய மயக்கத்தாலே அறிவுதடுமாறி மனை மாடு மனம் முதலியவற்றுடன் கையிலுள்ள செல்வத்தையுங் கொடுத்து தரித்திரத்தை யடைந்து வயிற்றில் மிகவும் எரிச்சல் மூளவும் அதனால் ஒருத்தரோடு நட்பு கொண்டும், ஒருத்தரோடு பகைகொண்டும், ஒருத்தரை மிகவும் நாட்டங் கொண்டும் அவரோடு வாட்டத்தைக் கொள்ளும் படுபாவியாகிய அடியேனுக்கு தேவரீருடைய திருவடிக் கமலங்களைப்

பாடி உய்யுமாறு உயர்வுமிக்க நற்குண நல்லொழுக்கத்தைத் தந்தருள்வீர்.

## விரிவுரை

**வரிக்கலையின் விகரான...மடவார்கள் :—**

விலைமகளிர் தமது கடைக்கண்ணாகிய வலையை வீசி இளைஞர்களுடைய மனமாகிய பறவைகளைப் பிடிப்பர்.

"திண்ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டில்
கண்ணிவைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ" —தாயுமானார்

அவர்களுடைய விழி யமபாசத்திற்குநிகர் என்பார் சிதம்பர சுவாமிகள்.

**உணக்கைமிடு படுபாவி :—**

உணக்கம்-வாட்டம். உண கை இடும் என்று பிரித்து அப் பெண்டிருடன் ஒரு கலத்தில உண்ண கையிடும் என்றும் பொருள் கொள்ளலாம்.

**வித்தருணகிரிநாதன் :—**

அருணகிரியார் தன்னையே படர்க்கையில் வைத்துக் கூறுகின்றார். பிறிதோரிடத்திலும் இங்ஙனம் கூறுமாறு காண்க.

"உரைபெற வகுத்தருணை நகரிலொரு பத்தனிடு
மொழிவளர் திருப்புகழ் மதாணிக்ருபாகரனும்"
—வேடிச்சி காவலன் வகுப்பு.

**திருத்தபலமுடனோத மகிழ்வோனே :—**

திருப்புகழை சிறந்த பலனுண்டாகுமாறு அருணகிரியார் ஓதியருளினார். பலமுடன் என்பதற்கு ஆற்றல எனினும் பொருந்தும்.

## கருத்துரை

அருணகிரிநாதருடைய அரும்புகழ்ப் பாமாலையைக் கேட்டு மகிழ்பவரே! தேவாரப் பாடலைப் பாடிய செந்தமிழ்ப் புலவரே! சூராதியவுணரையட்ட சுப்ரமண்யரே! தணிகாசலக் கடவுளே! விலைமாதர் வலைப்பட்டு மயங்கும் அடியேனுக்கு நற்குண சீலத்தை நல்கி யாட்கொள்வீர்.

## 55

வாருற்றெழு பூண்முலை வஞ்சியர்
காருற்றெழு நீள்குழல் மஞ்சியர்
வாலக்குயில் போல்மொழி கொஞ்சியர் தெருமீதே
மாணுற்றெதிர் மோகன விஞ்சையர்
சேலுற்றெழு நேர்விழி விஞ்சியர்
வாகக்குழை யாம்ப ரஞ்சியர் மயலாலே

சீருற்றெழு ஞானமு டன்கல்வி
நேரற்றவர் மால்கொடு மங்கியெ
சேருற்றறி வானத ழிந்துயி ரிழவாமுன்
சேவற்கொடி யோடுசி கண்டியின்
மீதுற்றறி ஞோர்புகழ் பொங்கிய
தேசுக்கதிர் கோடியெ னும்பத மருள்வாயே

போருற்றிடு சூரர்சி ரங்களை
வீரதொடு பாரில ரிந்தெழு
பூதக்கொடி சோரிய ருந்திட விடும்வேலா
பூகக்குலை யேவிழ மென்கயல்
தாவக்குலை வாழைக ளுஞ்செறி
போகச்செநெ லேயுதி ருஞ்செய்க ளவைகோடி

சாரற்கிரி தோறுமெ ழும்பொழில்
தூரத்தொழு வார்வினை சிந்திடு
தாதுற்றெழு கோபுர மண்டப மவைசூழும்
தார்மெத்திய தோரண மென்தெரு
தேர்சுற்றிய வார்பதி அண்டர்கள்
தாமெச்சிய நீள்தணி யம்பதி பெருமானே.

### பதவுரை

போர் உற்றிடு சூரர் சிரங்களை = போர்க்கோலம் பூண்டு எழுந்த சூரர்களின் தலைகளை, வீரதொடு = வீரத்துடன், பாரில் அரிந்து = பூமியில் விழும்படி அரிந்து, எழு பூத கொடி = அப் போர்க்களத்தில் எழுந்துள்ள பூதங்களும் காக்கைகளும், சோரி அருந்திட = உதிரத்தைக் குடிக்கும்படி, விடும் வேலா = வேலாயுதத்தை விடுத்தருளியவரே! பூகக்குலையே விழ = பாக்கு மரங்களின் குலைகள் சாய்ந்து

விடும்படி, மென்கயல் தாவ=மெல்லிய கயல் மீன்கள் தாவ, குலை வாழைகளும்=வாழைக்குலைகளும். செறிபோக செம் நெல் உதிரும் =நெருங்கிச் செழிப்புடன் வளர்ந்துள்ள செந்நெற் கதிர்களும் உதிர்ந்துவிழும், செய்கள் அவை கோடி= வயல்கள் கோடிக்கணக்கானவையும், சாரல் கிரிதோறும் எழும் பொழில்=மலைச்சாரல் தோறும் எழுந்து வளர்ந்துள்ள சோலைகளும், தூரதொழுவார் வினை சிந்திடு=தொலைவில் கண்டவுடனே தொழுபவர்களுடைய வினைகளைத் தீர்க்கின்ற, தாது உற்று எழு கோபுர=பொன்மயமான கோபுரங்களும், மண்டபம் அவை=மண்டபங்களும், சூழும்=சூழ்ந்துள்ளதும், தார் மெத்திய தோரணம்=பூமாலைகளுடன் கூடிய தோரணங்கள், மென் தெரு=அமைதியான வீதிகள், தேர் சுற்றிய வார்பதி=தேர் சுற்றிவரும் பெரிய ஊருடன் கூடியதும், அண்டர்கள் தாம் மெச்சிய=தேவர்கள் புகழ்கின்றதுமாகிய, நீள் தணியம்பதி= நீண்ட தணிகையம்பதியில் விளங்கும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! வார் உற்று எழு பூண் முலை வஞ்சியர் = இரவிக்கை பொருந்திய உயர்ந்திருக்கின்றதும் ஆபரணத்துடன் கூடியதுமாகிய தனத்தையுடைய வஞ்சிக் கொடிபோன்றவர்கள், கார் உற்று எழு நீள் குழல் மஞ்சியர் = மேகத்தின் கருநிறத்தை யொத்துள்ள நீண்ட கூந்தலையுடைய அழகுடையோர்கள், வால குயில்போல் மொழி கொஞ்சியர்=இளங் குயில் போன்ற இனிய மொழிகளைப் பேசிக் கொஞ்சுபவர்கள், தெருமீதே=தெருக்களில் நின்று. மான் உற்று எதிர் மோகன விஞ்சையர்=மாட்சிமையுடன் எதிர்ப்படுகின்ற மோகத்தை விளைக்கின்ற மாய வித்தைகளில் வல்லவர்கள், சேல் உற்று எழு நேர் விழி விஞ்சியர்=சேல் மீனுக்கு நிகராய் எழுகின்ற கண்கள் மேம்பட்டு விளங்குபவர்கள், வாகக்குழையாம் அபரஞ்சியர் =அழகிய குழையணிந்துள்ள பொன்போன்றவர்கள் ஆகிய பொது மகளிரது, மயலாலே=மோக மயக்கத்தினால், சீர் உற்று எழு ஞானம் உடன்=சிறப்புடைய ஞானமும், கல்வி=கல்வியும், நேர் அற்றவர்= ஒழுக்கமும் அற்ற அப்பொதுமகளிர் மீதுள்ள மால் கொடு மங்கி வெ= ஆசையால் அடியேன் மங்குதலையடைந்து, சேர் உற்ற அறிவு அனலு அழிந்து=என்னுடன் சேர்ந்துள்ள அறிவும் அழிந்து, உயிர் இழவா முன்=உயிரையும் இழப்பதற்குமுன், சேவல் கொடியோடு=சேவற்கொடியுடன், சிகண்டியின் மீது உற்று=மயிலின்மீது ஏறி, அறிஞோர் புகழ் பொங்கிய=ஞானிகள் பாடிய உமது புகழ் நிறைந்துள்ள, தேசு கதிர் கோடி எனும் பதம் அருள்வாயே=ஒளியுடைய கோடி சூரியரை யொத்த திருவடியைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

போர்க் கோலங்கொண்டு எதிர்த்த சூரர்களின் தலைகளை வீரத்தோடு பூமியில் விழுமாறு அறுத்து, பூதங்களும் காக்

கைகளும் உதிரத்தைக் குடிக்கும்படி வேலாயுதத்தை விட்டருளியவரே! பாக்கு மரங்களின் குலைகள் விழுமாறு மெலிய மீன்கள் தாவ, அப்பாக்குக் குலைகள் விழுந்ததால், வாழைக் குலைகளும், நெருங்கி வளமையாக வளர்ந்த செந்நெற் கதிர்களும் உதிர்கின்ற வயல்கள பலவும், மலைச் சாரலில் வானோங்கி வளர்ந்துள்ள சோலைகளும், தொலைவில் கண்டு தொழுகின்றவர்களின் வினைகளைத் தீர்க்கின்ற பொன்மயமான கோபுரங்களும், மண்டபங்களும், மாலைகளுடன் கூடிய தோரணங்கள் விளங்குகின்ற அமைதியான வீதிகளும், தேர் உலாவும் நீண்ட ஊரும், தேவர்கள் புகழ்கின்ற புகழும் பொருந்திய திருத்தணிகை மலையில் எழுந்தருளிய பெருமிதம் உடையவரே! இரவிகையும் அணிகலமும் பூண்டு உயர்ந்துள்ள தனத்தையுடைய வஞ்சிக் கொடி போன்றவர்கள்; கரிய மேகம் போன்ற நீண்ட கூந்தலையுடைய அழகுடையவர்கள்; இளங் குயில் போன்ற மொழிகளால் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுபவர்கள்; தெருவில் நின்று மாட்சிமையுடன் மோகவித்தை புரிபவர்கள்; மீன் போன்ற கண்களையுடையவர்கள்; அழகிய குழைகளையணிந்த பொன் போன்றவர்கள்; ஆகிய பொது மாதர்களின் மீதுள்ள ஆசையால், சிறந்த, அறிவு, கல்வி ஒழுக்கம் இவைகள் அற்று, அம்மாதர்களின் மயக்கத்தால் ஒளி மழுங்கி, அடியேனுக்குள்ள அறிவு கெட்டு உயிர் இழப்பதற்கு முன், தேவரீர், சேவல் கொடியுடன் மயில் மீது ஏறி, ஞானிகள் புகழும் ஒரு கோடி சூரிய ஒளியுடன் கூடிய திருவடியைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழில் ஆறு வரிகளில் பொதுமகளிரின் அழகு நலன்களைக் கூறுகின்றார்.

**அபரஞ்சியர் :—**

அபரஞ்சி—புடம் இட்ட பொன்.

"வஞ்சியே அபரஞ்சியே மடமயிலே வரிக்குயிலே
கொஞ்சியே பழியஞ்சியார் உனைக் கூடுவார் இனி அம்மே"

—மீனாட்சியம்மைக் குறவஞ்சி

**சீருற்றெழு ஞானமுடன் கல்வி நேரற்று :—**

மாதர் மேல் மனம் வைப்பதனால் ஞானம் கல்வி ஒழுக்கம் ஆகிய அனைத்தும் அழியும்.

"போதந் தனங்கல்வி பொன்றவரும் போதிலயல்
மாதர்மேல் வைப்பார் மனம்"

**சேவற்கொடியோடு சிகண்டியின் மீதுற்று :—**

முருகப் பெருமான் மயிலில் ஆரோகணித்து வரும்போது சேவல்கொடி கொக்கறுகோ என ஒலி செய்யும்.

மயில்—விந்து. சேவல்—நாதம்.

"குருகு கொடியுடன் மயிலிலேறி மந்தரம்
புவனகிரி சுழல மறை ஆயிரங்களும்
குமரகுரு எனவலிய சேடனஞ்சவந் திடுவோனே"
—(ஒருவரையும்) திருப்புகழ்.

**அறிஞோர் புகழ் பொங்கிய :—**

அறிஞர்—ஞானிகள். சிவஞானிகள் முருகவேளை ஞானத் தால் தொசித்துப் போற்றிப் புகழ் செய்வார்கள்.

**தேசுக் கதிர் கோடி யெனும்பதம் :—**

முருகனுடைய திருமேனி சதகோடி சூரியப் பிரகாச முடையது.

"உததியிடை கடவுமரக்தவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"
—சீர்பாத வகுப்பு.

"பலகோடி வெண்மதி போலவெ வருவாயே"
—(மதனேவிய) திருப்புகழ்.

**போருற்றிடு சூரர் சிரங்களை :—**

சிறிதும் சாந்தமும் அமைதியும் இன்றி போர்த் தொழி லையே மேற்கொண்டவர்கள் சூராதியவுணர்கள்.

அவர்களது தலைகள் பூமியில் விழுமாறு வேலினால் அறுத்துத் தள்ளினார் முருகர்.

**பூதக்கொடி சோரி யருந்திட :—**

பூதம்—பூதங்கள். கொடி—காக்கை. பூதகணங்களும் காக்கைகளும அசுரர்களின் உடலிலிருந்து பெருகிய உதிர வெள்ளத்தைக் குடித்தன.

பூதக்கொடி என்ற சொல்லுக்குப் பூதகோடிகள் என்றும் பொருள் கொள்ளலாம்.

"போர்மிகுத்த சூரன் விடோம் விடோமென
நேரெதிர்க்க வேலை படர் பகா என
போயறுத்தபோது குபீர் குபீர் என வெகுசோரி
பூமியுக வீசு குகா"
—(சீர்சிறக்கு) திருப்புகழ்.

**பூகக்குலையேவிழ மென் கயல் தாவ :—**

வயல்களின் அருகில் செழித்தோங்கியுள்ள பாக்கு மரங் களில் கயல் மீன்கள் தாவி அக் குலைகளை உதிர்க்கின்றன.

**குலைவாழைகளுஞ் செறிபோகச் செநெலே யுதிரும் :—**

பாக்குக் குலைகள் விழுவதனால், வாழையின் குலைகளும் நெற்கதிர்களும் உதிர்கின்றன.

திருத்தணியின வளமையை இது விளக்குகின்றது.

**தூரத்தொழுவார் வினைசிந்திடு தாதுற்றெழு கோபுரம் :—**

திருத்தணியில் உள்ள கோபுரங்களை அடியார்கள் தூரத்திலிருந்தே கண்டு உள்ளங் கசிந்து தொழுகின்றார்கள். தொழுதவுடன் அவர்கள் வினைகள் மேலே கூறிய பாக்குக் குலைகளும், வாழைக் குலைகளும் நெற்கதிர்களும் உதிர்ந்து சிந்தியதுபோல் சிநதி யழிந்தன

அத்தலந் தன்னையாம் அடைகுவாம் என
புத்தியில நினைப்பினும் புறத்துற் செலவினும்
பததடி நடப்பினும் பரித்த கோடியெலாம்
கொத்தொடும அவர்புறம் வழிககொண் டோடுமே.

—தணிகைப் புராணம்.

"கல்லார கிரிச்சிகரம் காதலுடன் தரிசித்தோர்
கந்தவுல கெய்திடுவர்" —தணிகாசலப் புராணம்.

"ஆரூரைத் தூரத்தே தொழுவார் வினை தூளியே"

—அப்பர் தேவாரம்.

**தாதுற்றெழு கோபுரம் :—**

தாது—பொன். பொன்மயமான கோபுரம்.

**தார் மெத்திய தோரண மென்தெரு :—**

பூமாலைகள் தொங்கும், தோரணங்கள் விளங்கும் அமைதி நிரம்பிய தெருக்கள்.

திருத்தலஙகளில் திருவிழாக் காலங்களில் வீதிகள் தோறும தோரணங்கள் கட்டுவார்கள்.

"மகரதோரண ரத்ன அலங்கருத திரிசிராமலை"

—(குவளைபூசல்) திருப்புகழ்.

**தேர் சுற்றிய வார்பதி :—**

எமபெருமானை எழுந்தருளச் செய்து திருத்தேர் விழா செய்கின்றார்கள்.

தேருலாவிய சீருலாவு திருப்பதி திருத்தணிகை. அத் திருத்தேரின் வடம் பிடித்தார் கந்தவுலகில இடம் பிடிப் பார்கள்.

பாரின் மணியாய்ப் பணியும் தணிகையுறுன்
வாரி மயிலோன் மருவுதிருத்—தேரின்
வடம்பிடிப்பார் மால்பிடியார் வண்குமர னூரில்
இடம்பிடிப்பார் என்றும் இனிது.

**அண்டர் தாமெச்சிய நீள் தணியம்பதி :—**

தேவர்கள் யாவரும் புகழுகின்ற மகிமை மிகுந்தது திருத்தணி. புகழால் நீண்டது. ஆதலால் "நீள் தணியம்பதி" என்றார்.

எல்லா மலைகட்கும் நாயகமாகவும் தாயகமாகவும் திகழ்வது தணிகை மலை

### கருத்துரை

தணிகேசா! மாதர் வசமுற்று அழியாத வண்ணம் உனது ஒளிமிக்க உயர்பதம் தந்தருள்வீர்!

## 56

வெற்றிசெய வுற்றகழை விற்குதைவ ளைத்துமதன்
விட்டகணை பட்ட விசையாலே
வெட்டவெளி யிற்றெருவில் வட்டபணை யிற்கனல்வி
ரித்தொளிப ரப்பு மதியாலே
பற்றிவசை கற்றபல தத்தையர்த மக்குமிசை
பட்டதிகி ரிக்கு மழியாதே
பத்தியையெ னக்கருளி முத்தியைய ளித்துவளர்
பச்சைமயி லூற்று வரவேணும்
நெற்றிவிழி பட்டெரிய நட்டமிடு முத்தமர்நி
னைக்குமன மொத்த கழல்வீரா
நெய்க்கமல மொக்குமுலை மெய்க்குறவி யிச்சையுற
நித்தமிறு கத்த ழுவுமார்பா
எற்றியதி ருச்சலதி சுற்றியதி ருத்தணியி
லெப்பொழுது நிற்கு முருகோனே
எட்டசல மெட்டநில முட்டமுடி நெட்டசுர
ரிட்டசிறை விட்ட பெருமாளே.

### பதவுரை

நெற்றி விழிபட்டு எரிய = நெற்றிக் கண்ணின் தீபட்டு (மன்மதன் எரிந்துபோக, நட்டம் இடும் உத்தமர் = திரு நடனம் புரிந்தவராகிய சிவபெருமான், நினைக்கு மனம் ஒத்த = உழ்மையுடன் தியானிக்க அவர் திருவுள்ளத்தில் பொருந்திய, கழல் வீரா = திருவடிகளையுடைய வீரரே! நெய் கமலம் ஒக்கும் முலை = தேன் பொருந்திய தாமரையின் மொக்கு போன்ற தனத்தையுடைய, மெய் குறவி இச்சை உற =

உண்மை நிலையில் நின்ற வள்ளி பிராட்டி அன்புகொள்ள, நித்தம் இறுக தழுவும்=நாள் தோறும் கெட்டியாகத் தழுவுகின்ற, மார்பா= திருமார்பை யுடையவரே! எற்றிய திரு சலதி சுற்றிய=அலைவீசும் அழகிய நீர் நிலை சூழ்ந்த, திருத்தணியில்=திருத்தணிகாசலத்தில், எப்பொழுதும் நிற்கும்=எந்நாளும் வீற்றிருக்கும், முருகோனே=முருகக் கடவுளே! எட்டு அசலம் எட்ட=எட்டு மலைகள் வரை எட்டிப் பரவவும், நிலம் முட்ட=நிலம் முழுவதும், முடி நெட்டு=தங்கள் முடிச் சின்னத்தை வைத்து அரசு புரிந்த, அசுரர் இட்ட சிறைவிட்ட =அசுரர்கள் இட்ட தேவர்களது சிறையை விடுவித்த, பெருமாளே= பெருமையின் மிகுந்தவரே! வெற்றி செய உற்ற=வெற்றியைத் தரவல்ல, கழை வில் குதை வளைத்து=கரும்பு வில்லின் முனையை வளைத்து, மதன் விட்ட=மன்மதன் செலுத்திய, கணைபட்ட விசையாலே=கணைகள் உடலின்மீது பட்ட வேகத்தாலும், வெட்ட வெளியில்=வெட்ட வெளியிடங்களிலும், தெருவில்=தெருக்களிலும், வட்ட டணையில்=வட்டமான பறைபோல் விளங்கி, கனல் விரித்து =நெருப்பை வீசி, ஒளி பரப்பும்=ஒளியைப் பரப்புகின்ற, மதியாலே =சந்திரனும், பற்றி வசை=வசை மொழிகளைக் கொண்டு, கற்ற= அவ் வசைமொழிகளையே பயின்ற, பல தத்தையர் தமக்கும்= கிளியை யொத்த பல மாதர்களின் வசை மொழியாலும், இசை பட்ட திகிரிக்கும்=இசையை எழுப்பும் புல்லாங் குழலாலும், அழியாதே=நான் மெலிவுற்று அழியாமல், பத்தியை எனக்கு அருளி=பத்தி நெறியை எனக்குத் தந்தருளி, முத்தியை அளித்து= முத்தியையும் அருள் செய்து, வளர்பச்சை மயில் உற்று வரவேணும்= வளர்கின்ற மரகத மயில்மீது ஏறி வரவேண்டும்.

## பொழிப்புரை

நெற்றிக் கண்ணின் நெருப்பினால் மன்மதனை எரித்தவரும், திருநடனம் புரிகின்ற உத்தமருமாகிய சிவமூர்த்தி, உம்மைத் தியானிக்க, அவரது திருவுள்ளத்தில் எழுந்தருளியுள்ள திருவடிகளையுடைய வீரரே! தேன் பொருந்திய தாமரையின் மொட்டு போன்ற தனத்தையுடைய, உண்மை நிலையில் நின்ற வள்ளிநாயகி அன்பு கொள்ள, தினந்தோறும் கெட்டியாகத் தழுவுகின்ற திருமார்பினரே! அலை வீசுகின்ற அழகிய நீர்நிலைகள் சூழ்ந்த திருத்தணிகை மலைமீது எப்போதும் வீற்றிருக்கின்ற முருகக் கடவுளே! திசைகளிலுள்ள எண்கிரிகள் வரையிலும் பரவவும், நிலம் முழுவதும் தங்கள் அரசாட்சியைச் செலுத்திய அசுரர்கள் இட்ட தேவர்களின் சிறையை விடுவித்த பெருமிதம் உடையவரே! வெற்றியைத் தரவல்ல கரும்பு வில்லை வளைத்து மன்மதன் விட்ட மலர்க் கணைகள் பட்ட வேகத்தாலும், வெட்ட வெளிகளிலும் வீதிகளிலும், வட்டமான பறைபோல் விளங்கி, நெருப்பை வீசி ஒளி செய்கின்ற சந்திர

லும், வசைமொழிகளைப் பற்றிக் கொண்டு, அம்மொழிகளையே பயின்ற கிளி போன்ற பல பெண்களின் வசைமொழியாலும், இசையுடன் கூடிய புல்லாங் குழலாலும், நான் அழியாதபடி, பத்தி நெறியை எனக்கு அருள்புரிந்து, முத்தி நலத்தையும் வழங்கி, உயர்ந்த மரகத மயிலின்மீது வந்து அருள் புரிவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் பாடியது. ஆன்மாவாகிய நாயகி; பரமான்மாவாகிய முருகனை நாயகனாக அடையும் பொருட்டு விரகதாபத்தால் முறையிடும் முறையில் அமைந்தது.

**வெற்றி செயவுற்ற கழை விற்குதை வளைத்து மதன் :—**

மன்மதன் அமரர்மீது மலர் வில்லும், மனிதர்மீது கரும்பு வில்லும் அரக்கர் மீது இரும்பு வில்லும் தரித்துப் போர் புரிவான்.

மால், அயன், இந்திரன், சந்திரன், தேவர், முனிவர் முதலியவர்களைத் தன் வில்லினால் வெற்றி பெற்றவன்.

"கரும்பும் சுரும்பும் அரும்புங்கொண்டு காமர் வில்வேள்
இரும்பும் உருகச் செய்வான்."

**விட்ட கணைபட்ட விசையாலே :—**

மன்மதன் விட்ட மலர்க்கணை நாயகியின் உடம்பில் வேகமாகப் பட்டதனால் அவள் காமுற்று மயங்குகின்றாள்.

**வெட்ட வெளியில் :—**

சந்திரனுடைய ஒளி வெட்ட வெளியில் நன்கு வீசுகின்றது.

**தெருவில் :—**

வீதிகளிலும் அவ்வொளி வீசுகின்றது.

**வட்ட பணையில் :—**

பணை—பறை. பறை போல் வட்ட வடிவில் சந்திரன் திகழ்கின்றான்.

**கனல் விரித்தொளி பரப்ப மதியாலே :—**

சந்திரனுடைய குளிர்ந்த அமிர்த கிரணம் மற்றவர்க்குத் தட்பமாக இருக்கும். தலைவனைப் பிரிந்த தலைவிக்கு அது நெருப்பாக இருக்கும்.

"வாரி மீதே யெழு திங்களாலே
மாரவேள் ஏவிய அம்பினாலே

பா ரெலா மேசிய பண்பிலே
பாவியே னுவிம யங்கலாமோ" —திருப்புகழ்.

பற்றி வசை கற்றபல தத்தையர் தமக்கும் :—

தலைவனை விருப்பி தலைவி தவிக்கும்போது, அவளுடைய நிலைமையைக் கண்ட மாதர்கள் வசைமொழி கூறி ஏசுவார்கள். அவர்கள் அவ் வசைமொழியை நன்கு கற்றவர்கள்.

தத்தை—கிளி. கிளிபோல் கொஞ்சிப் பேசி இகழ்வார்கள்.

"ஓராத அனையர் கொடு வசைபேச"
"தெருவினில் நடவா மடவார் திரண்டொறுக்கும் வசையாலே"
—திருப்புகழ்.

இசைபட்ட திகிரிக்கும் அழியாதே :—

திகிரி—மூங்கில்.

இயற்கையான இசைக் கருவி புல்லாங்குழல். முதன் முதலாகப் புல்லாங்குழலை இசைத்தவர் முருகவேள்.

"குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன்", —திருமுருகாற்றுப்படை.

இந்த குழலோசை இனிமையானது. "குழலினிது" என்கிறார் திருவள்ளுவர்.

இக் குழலோசை காமுகர்க்கு வேதனையைத் தரும்.

மன்மதனுடைய கணை நிலவொளி, மாதர்களின் வசை, குழலோசை இத்தனையும் சேர்ந்து முருகா! உன்னை நினைந்து உருகும் தலைவியாகிய என்னை வருத்துகின்றன.

"இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைகளொரு நாலேவ விருது குயி லது கூவ
எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின் மணி
இசைகுறுகி இரு செவியில் நாராச முறுவதென
இகல்புரிய மதனகுரு வோராத அனையர்கொடு வசைபேச
அரகரென வனிதைபடு பாடோத அரிதரிது" —திருப்புகழ்.

பத்தியை எனக்கருளி :—

இவ்வாறு நான் உன்மீது காதலால் வருந்தாவண்ணம் முருகா! பத்தி நெறியைத் தந்தருள்வாய்.

முத்தியை வளித்து :—

பக்தியால வருவது முக்தி.

"ஆனபய பக்தி வழிபாடு பெறுமுத்தி அது
வாகநிகழ் பக்தஜன வாரக்காரனும்" —திருவேளைக்காரன் வகுப்பு.

**பச்சை மயிலுற்று வரவேணும் :—**

அடியேனுக்குப் பத்தியும் முத்தியுந் தரும்பொருட்டு பச்சை மயிலேறி வந்தருள்வாய்.

**நெற்றி விழி பட்டெரிய :—**

மன்மதன் இறைவன்மீது மலர்க்கணை சொரிந்தபோது சிவபெருமான், நெற்றிக் கண்ணால் அவனைச் சாம்பராக எரித்தருளினார்.

இந்த அருள் தன்மையான வீரச் செயலை உலகிற்கு உணர்த்துந் தலம் திருக்குறுக்கை.

இத்தலம் அட்ட வீரட்டானங்களில் ஒன்று. இது மாயூரத்துக்கு அருகில் உள்ள சிவத்தலம். தருமையாதீனத்தின் ஆட்சியில் உள்ளது. மிகத் தூய்மையாக விளங்குகின்றது.

சிவலிங்கம் கெம்பீரமாகத் திகழ்கின்றது. இங்குள்ள நடன சபையின் பேர் காமாங்கநாசனி சபை. மிக அழகாக விளங்குகின்றது சபைக்கு எதிரில் அருள்பெற்ற மன்மதன் இரதிதேவியுடன் வணங்கியவண்ணம் நிற்கின்றான்.

இத்தலத்து இறைவர் திருநாமம் யோகீச்சுரர். இங்கு கடுக்காய் தல விருட்சம். அதனால கடுவனம் என்ற பெயரும் உண்டு.

எந்தத் தலத்துக்குச் சென்றாலும் தமது கரத்தை நீட்டி ஆகாய கங்கையை எடுத்து வழிபடும் நியதியுடையவர் தீர்க்கவாகு என்ற முனிவர். இத்தலத்துக்கு வந்து வழிபட முயன்ற அவர் கை குறுகி விட்டது. அதனால் குறுங்கை முனிவர் ஆனார்.

அதனால் அவர் வருந்தினார். விநாயகர், "முனிவரே! வருந்தற்க. யாமும் குறுகிய கையுடன் இருக்கின்றோம். அதனால் குறுங்கை விநாயகர் என்பர். இத் தீர்த்தம், சூல தீர்த்தம். இது ஆகாய கங்கையினும் புனிதமானது. இத் தீர்த்தத்தால் இறைவனை வழிபடுவாயாக!" என்று விநாயகர் அருளிச் செய்தார்.

தீர்க்கவாகு என்ற முனிவருடைய கை குறுகியபடியால் இத்தலம் திருக்குறுக்கை என வழங்கலாயிற்று. முனிவர் சூல தீர்த்தத்தால் இறைவனை வழிபட்டு அருள் பெற்றார்.

**நட்டமிடும் உத்தமர் :—**

காமதகனம் புரிந்து சிவபெருமான் நடனம் ஆடியருளினார்

**நினைக்கு மனமொத்த கழல் வீரா :—**

சிவபெருமான் திருத்தணியில் முருகவேளின் திருவடியைச் சித்தத்தில் வைத்துத் தியானம் புரிந்தார்.

மத்தப்ர மத்தமணி மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே. —(முத்துத்தெறிக்க) திருப்புகழ்.

**நெய்கமல மொக்கு முலை :—**

நெய்—தேன். தேன் சொரிகின்ற தாமரையின் மொட்டு தனத்துக்கு உவமை.

**இறுகத்தழுவு மணிமார்பா :—**

இறைவன் சக்தியுடன் கூடுவது உலகம் வளர்ச்சியெய்தி இன்புறும் பொருட்டு.

தென்பா லுகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலமும்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. —திருவாசகம்.

"தறுகட்சிறுகண் சங்கராம சயில சரசவல்லி
இறுகத் தழுவும் கடகாசலபன் னிருபுயனே" —கந்தரலங்காரம்.

**எற்றியதிருச்சலம் சுற்றிய திருத்தணி :—**

நீர்நிலைகள் சூழ்ந்து அலைகள் வீசி வளஞ்செய்கின்ற நாட்டில் திருத்தணி விளங்குகின்றது. அருகில் நந்தியாறும், அநேக ஏரிகளும் குளங்களும் சுனைகளும் சூழ்ந்திருக்கின்றன.

**எப்பொழுது நிற்கும் முருகோனே :—**

திருத்தணியில எந்நாளும் நீங்காது உறைகின்றான் முருகன்.

**எட்ட சலமுட்ட நிலமுட்ட முடிகெட்ட சுரர் :—**

சூராதி யவுணருடைய ஆட்சி எட்டு குலகிரிவரையும், நிலவுலக முழுதும் பரவியிருந்தது.

**இட்ட சிறைவிட்ட பெருமாளே :—**

சூரன் தேவர்களையும் தேவமாதர்களையும் சிறைப்படுத்தினான். முருகவேள் தேவர்களின் சிறை தீர்த்தருளினார்.

தேவர் சிறை தீர்த்த தேவன் நமது உடற் சிறையையும் தீர்த்தருளுவான்.

"ஏழையினிரட்டைவினை யாயதொருடற் சிறை
யிராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்"
—திருவேளைக்காரன் வகுப்பு.

## கருத்துரை

தேவர் சிறைதீர்த்த திருத்தணி முருகா! உன்னை விரும்பும் நாயகியான என்னை ஆட்கொண்டருள்வீர்.

## 57

அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் கிசையாதே
அடையப் பொருள்கைக் கிளமைக் கெனவைத்
தருள்தப் பிமதத் தயராதே
தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சமனெட் டுயிரைக் கொடுபோகுஞ்
சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் கடவேனோ
இமயத் துமயிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே
இரணத் தினிலெற் றுவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா
சமயச் சிலுகிட் டவரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்
சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே.

### பதவுரை

இமயத்து மயிற்கு=இமவான் வளர்த்த மயில் போன்ற உமா தேவியாருக்கு, ஒருபக்கம் அளித்தவருக்கு=ஒரு பாகத்தைத் தந்த சிவபெருமானுக்கு, இசைய புகல்வோனே=உள்ளம் இசையுமாறு உபதேசித்தவரே! இரணத்தில்=போரில், எற்றுவரை=தாக்கி எதிர்ப் பவரை, கழுகுக்கு இரை இட்டிடு=கழுகுகட்கு இரையாக அளிக்கும், விக்ரம வேலா=வீரமுடைய வேலாயுதரே! சமய சிலுகிட்டவரை= சமயச் சண்டையிடுகின்ற சமயவாதிகளின் கூட்டத்தைவிட்டு, தவறி=விலகி, தவம் முற்ற=தவம் பூர்த்தியாகவும், அருள்புக நாடும்=திருவருளில் புகவும் அடியேன் விரும்புகின்ற, சடு பத்ம முக=தாமரை போன்ற ஆறு முகங்களையுடையவரே! குக=இதய குகையில் உறைபவரே! புக்க கன=வள்ளியை மணந்த பின் அடைந்து அமர்ந்துள்ள பெருமை மிக்க தணியில் குமர=திருத் தணிகைக் குமார மூர்த்தியே! பெருமாளே=பெருமையில் சிறந்த வீரே! அடைய பசி உற்றவருக்கு=மிகுந்த பசி உற்றவர்கட்கு, அமைவுற்று அமுதை பகிர்தற்கு இசையாதே=மன அமைதியுடன் அன்னத்தைப் பங்கிட்டுத் தருவதற்கு மனம் வராமல், அடைய

பொருள் = வைத்துள்ள பொருள் அனைத்தையும், இளமைக்கு என = தமது இளமைப் பருவத்துக்கு என, கைவைத்து = கைவசமாக இறுகப் பிடித்து வைத்து, அருள் தப்பி = அருள் நெறியில் நின்றும் தவறிப் போய், மதத்து அயராதே = அகங்காரத்தினால் தளர்ச்சி யடையாமல், தமர் சுற்றி அழ = சுற்றத்தார் சுற்றி அழவும், பறை கொட்டி இட = பறைகள் வாசிக்கவும், சமன் = இயமன், நெட்டு உயிரை கொடு போகும் = உயிரை நெடுந்தூரம் கொண்டு போகின்ற, சரீரத்தினை நிற்கும் என கருதி = உடம்பை நிலைத்து நிற்கும் என்று எண்ணி, தளர்வு உற்று ஒழிய கடவேனோ = அடியேன் தளர்ந்து ஒழியலாமோ?

## பொழிப்புரை

பருவதராஜன் வளர்த்த மயில்போன்ற உமாதேவியாருக்கு இடப்பாகத்தையருளிய சிவபெருமானுடைய மனம் மகிழுமாறு உபதேசித்தவரே! போரில் எதிர்ப்பவர்களைக் கழுகுக்கு இரையாகக் கொடுத்தவீரவேலாயுதரே! சமயச்சண்டைபுரிபவரிடமிருந்து விலகி, அடியேன் தவம் நிறைவுறவும் திருவருளை யடையவும் விரும்புகின்ற, தாமரை மலர்போன்ற ஆறுமுகங்களையுடைய குகப் பெருமானே! திருத்தணிகை மலையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! பசியால் வருந்துகின்றவர்க்கு அமைதியுடன் அன்னத்தைப் பகிர்ந்து தருவதற்கு மனம் இன்றி, வரவர இளமையடைவது போலவும், அந்த இளமைப் பருவத்துக்கு ஆகும் என்றும எல்லாப் பொருளையும் சேகரித்து வைத்து, அருள் நெறியினின்றும் தவறிப்போய், அகங்காரத்தால் தளர்ச்சியடையாமல் சுற்றத்தார் சுற்றியழவும், பறை வாத்தியங்கள் முழங்கவும், இயமன் உயிரைப் பற்றி நெடுந்தூரம் கொண்டு போகின்ற இந்த உடலை நிலையானது என்று எண்ணி, இவ்வுடம்புக்காகவே பாடுபட்டுத் தளர்ந்து அழிவது முறையாகுமோ?

## விரிவுரை

**அமைவுற்றடையப் பசியுற்றவருக் கமுதைப் பகிர்தற்கிசையாதே :—**

அடையப்பசி—முற்றிய பசி.

உயிர்கட்கு மூன்று நோய்கள் இருக்கின்றன.

1. உடம்புக்கு இடையறுது வருகின்ற நோய் பசி.
2. உள்ளத்தில் எப்போதும் இருக்கின்ற நோய் காமம்.
3. உயிருக்கு என்றும் அகலாது வருகின்ற நோய் பிறவி.

பசிநோய், காமநோய், பிறவிநோய் என்று கூறுவர்.

இவற்றுள் பசி அரசனுக்கும் உண்டு, ஆண்டிக்கும் உண்டு தொழுநோய், காசநோய் முதலிய நோய்களுடன் பல ஆண்டுகள் போராடுவார்கள்; பசிநோயுடன் சில மணிநேரம் போராட முடியாது.

பசி வந்தவுடன் மானம், குலம், கல்வி, வண்மை, 'பெருமிதம், தானம், தவம், உயர்ச்சி, முயற்சி, காமம் என்ற பத்துக் குணங்களும் பறந்து போய்விடும். பசியடைந்தவுடன் நாடி, ஊன், உள்ளம், உணர்வு முதலிய கருவிகரணங்கள் தன்னிலையழிந்து சோர்ந்து விடுகின்றன. ஆகவே பசித்தோர்க்கு உணவு தருவதுவே மேலான அறமாகும்.

"உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே" —மணிமேகலை.

"பசித்தோர் முகம் பார்" —பட்டினத்தடிகள்.

"ஐயமிட்டுண்" —ஒளவையார்.

"யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி" —திருமூலர்.

"ஒருபிடி சோறுகொண்டு இட்டு உண்டு இரு" —அலங்காரம்.

பசித்தவர்க்கு அன்னம் அமைதியாகக் கொடுக்க வேண்டும். அன்புடன் தரவேண்டும்; இன்னுரை கூறி, அகமும் முகமும் மலர்ந்து தரவேண்டும்.

பசித்தவனுக்கு அன்னந் தந்தால், உண்டவனுக்கு ஊன் குளிரும்; உள்ளம் குளிரும்; உணர்வு குளிரும்; உயிர் குளிரும்; உயிர்க்குயிரான சிவம் குளிரும்.

அடையப் பொருள் கைக்கிளமைக்கென வைத்து :—

வரவர கிழத்தனம் வருகின்றது. இளமை நீங்குகின்றது. இது உலகியற்கை. சிலர் அறியாமையால் தமக்கு மேலும் இளமை வருவதாக நினைந்து, தம்பால் உள்ள எல்லாப் பொருள்களையும், இம்மியளவுகூடச் செலவழிக்காமலும், அறஞ்செய்யாமலும் இறுகப் பிடித்து வைத்திருப்பார்கள்.

அருள் தப்பி மதத்தழியாதே :—

திருவருள் நெறியினின்று விலகி நெடுந்தூரம் போய், மதம் பிடித்து அழிவார்கள். யானைக்கு மும்மதங்கள் உண்டு. அதுபோல் மனிதனுக்கு மூன்று மதங்கள் உண்டு. தனமதம், குலமதம், கல்வி மதம் என்பன. செல்வத்தால் வளர்கின்ற மதம், குலத்தின் பெருமையால் வளர்கின்ற மதம், கல்வியின் பெருக்கால் வளர்கின்ற மதம்.

"மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்" —திருவருட்பா.

தமர் சுற்றியழ :—

உயிர் பிரிகின்றபோது, உறவினர் அருகில் இருந்து, சிவ நாமங்களைச் சொல்லி இறப்போர்க்குத் தெய்வ நினைவை உண்டாக்க வேண்டும். திருமுறைகளை ஓதவேண்டும். இதுதான் இறப்போர்க்கு நாம் செய்யும் உதவி.

இவ்வாறு புரியாமல் "ஐயோ! ஐயோ!" என்று கதறிப் பதறி அழுவர்.

**சமனெட்டுயிரைக் கொடுபோகும் :—**

அரசன், ஆண்டி, கற்றவன், கல்லாதவன், மணமகன், தனவந்தன் என்று பாராமல் சமமாக நினைத்து ஆயுள் முடிந்தவனைப் பற்றிச் செல்வதனால், இயமனுக்குச் சமன் என்ற பேர் ஏற்பட்டது.

நடுநிலை தவறாதவன் ஆதலால் நடுவன் என்றும் பேருண்டு. நமன் உயிரை உடம்பினின்றும் பிரித்துத் தன் உலகத்துக்குக் கொண்டு போவான். அந்த வழி போகப்போகத் தொலையாத அளவுக்கு நெடுந்தூரம் உள்ளது. வழியும்கல்லும் முள்ளும் அடர்ந்து பசி தாகம் தரத்தக்க வெப்பமுடையதாக இருக்கும்.

"விடாயப்படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே"
"தொலையாவழி" —கந்தரலங்காரம்.

**சரீரத்தினை நிற்குமெனக் கருதி :—**

ஜீரணம் ஆவதனால் உடம்பு சரீரம் எனப்பட்டது. இது நீர்மேற்குமிழிககு நிகராயது. யாக்கை நிலையாமையை உணர்வதுவே அறிவுடைமையாகும். நில்லாத உடம்பை நிற்பதாக நினைப்பது பேதைமையாகும்

நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. —திருக்குறள்.

நேற்றிருந்தார் இன்றில்லை என்று கூறுவதுதான் இவ்வுலகில் உள்ள பெருமை.

ஒரு இளமையான கணவன்; அழகிய மனைவி; கணவன் மனைவியை அடைப்பணியாரம் புரிந்து கொடுக்குமாறு கேட்டான். அவள் மிக்க அன்பாக அரிசியை ஊற வைத்து அடை செய்தாள். செய்து தட்டில் வைத்துக் கொணர்ந்தாள். உண்ட கணவன் இடப்பக்கம் வலிக்கின்றது. என்று படுத்தான். அப்படியே கண்ணை மூடிவிட்டான். இவ்வளவுதான் இந்த உலக வாழ்வு.

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேயிறை நேர்ந்ததே என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே. —திருமந்திரம்.

**இமயத்து மயிற்கொரு பக்கமளித்தவர் :—**

பிருங்கி முனிவர் உமாதேவியாரை ஒதுக்கிச் சிவபெருமானை மட்டும் வலம் வந்தார் அதனால் அம்மை, சிவமூர்த்தியைக் குறித்து திருக்காஞ்சியில் வேதமாகிய மாவடியில் மணலால் சிவலிங்கம் அமைத்து அன்புடன் வழிபாடு செய்து, இடப்பாகம் பெற்றனர்.

சமயச் சிலுகிட்டவரைத் தவறி :—

தவறுதல்—விலகுதல். சமயப் போர் புரிவது பயனற்ற செயல்; சமயங்கள் அனைத்தும் முடிவில் இறைவனைச் சென்று அடையும். நதிகள் அனைத்தும் கடலை நோக்கிச் சென்று கடலில் கலந்து அடங்குவதுபோல் எனவுணர்க.

"ஆறனைத்தும் புகுங்கடல்போல் சமய கோடி
அத்தனையுந் தொடர்ந்து புகும் ஆதிநட்பே" —தாயுமானுர்.

ஆகவே சமயவாதம் புரியாமலும், புரிவோர் பக்கம் சாராமலும் வாழவேண்டும்.

சடுபத்மமுக :—

சட—ஆறு; தாமரை போன்ற திருமுகங்கள். தாமரையில் தேன் சொரியும், திருமுருகன் திருமுகத்தில் கருணை பொழியும்.

"முகம் பொழி கருணை போற்றி" —கந்தபுராணம்.
"கருணைபொழி கமலமுகம் ஆறும்" —திருப்புகழ்.

தணியிற் குமர :—

இது ஐந்தாவது படைவீடாகிய குன்றுதோறாடலில் தலை சிறந்தது.

"தரையிடங் கொளும் பதிகளில் காஞ்சியந்தலம்போல்
வரையிடங்களில் சிறந்தது இத் தணிகை மால் வரையே"

என்று வடிவேற் பெருமானே வள்ளிநாயகியிடம்கூறியதனுல் அறிக. இங்கு சென்றேர்களின் வினை தணிவதனுல் தணிகை எனப்பட்டது. கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் இடம் இது.

ஆவிக்கு மோசம் வருமாறறிந்து உன் அருட்பதங்கள்
சேவிக்க என்றும் நினைக்கின்றிலேன் வினை தீர்த்தருளாய்
வாவித்தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடையானே அமரசிகாமணியே. —அலங்காரம்.

## கருத்துரை

திருத்தணியுறையுந் தேவா! நிலையாமையை யுணர்ந்து நிலைபெற அருள்.

## 58

குவளைக் கணைதொட் டவனுக் குமுடிக்
குடையிட் டகுறைப் பிறையாலே
குறுகுற் றஅலர்த் தெரிவைக் குமொழிக்
குயிலுக் குமினித் தளராதே

இவளைத் துவளக் கலவிக் குநயத்
திறுகத் தழுவிப் புயமீதே
இணையற் றழகிற் புனையக் கருணைக்
கினிமைத் தொடையைத் தரவேணும்

கவளக் கரடக் கரியெட் டலறக்
கனகக் கிரியைப் பொரும்வேலா
கருதிச் செயலைப் புயனுக் குருகிக்
கலவிக் கணயத் தெழுமார்பா

பவளத் தரளத் திரளக் குவை வெற்
பவையொப் புவயற் புறமீதே
பணிலத் திரள்மொய்த் ததிருத் தணிகைப்
பதியிற் குமரப் பெருமாளே.

## பதவுரை

கவளகரட=உருண்டையாக உணவையுண்பதும் மதம் பொழிவதுமாகிய, கரி எட்டு அலற=யானைகள் எட்டும் அஞ்சி அலறும்படி, கனக கிரியை பொரும் வேலா=பொன்மயமான கிரவுஞ்ச மலையுடன் போர்புரிந்த வேலாயுதரே! கருதி=வள்ளியை நினைந்து, செயலை புயனுக்கு உருகி=அசோக மலர்க்கணையைக் கைக்கொண்ட மன்மதனுக்கு உருகி, கலவி கண் நயத்து எழும் மார்பா=வள்ளிபிராட்டியுடன் சேர்வதற்கு விரும்பி எழுகின்ற திருமார்பினரே! பவளம்=பவளமும், தரளம்=முத்துக்களும், திரள குவை வெற்பு அவை ஒப்பு=திரண்டுள்ள குவியல்கள் மலை போலக் கிடக்கும், வயல்புறம்மீது=வயல் புறங்களில், பணில திரள் மொய்த்த=சங்கின் கூட்டங்கள் நெருங்கியுள்ள, திருத்தணியில் குமர=திருத்தணிகையம்பதியில் எழுந்தருளியுள்ள குமாரக்கடவுளே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! குவளை கணை தொட்டவனுக்கு=நீலோற்பல மலரைக் கணையாகச் செலுத்த தொட்டுள்ள மன்மதனுக்கு, முடி குடை இட்ட குறைபிறையாலே=முடிமீது குடையாக அமைந்துள்ள குறைவையுடைய சந்திரனது வெப்பத்தாலும், குறுகுற்ற அலர்=நெருங்கி வரும் பழிச்சொல் பேசுகின்ற, தெரிவைக்கும்=மங்கையர்க்கும், மொழி குயிலுக்கும்=இனிய குரல் படைத்த குயிலுக்கும், இனி தளராதே=இனி இப்பெண் தளர்ச்சியடையாதவாறு, இவளை துவள் அகலவிக்கு நயத்து=இவளை துவள்கின்ற அந்தச் சேர்க்கைக்கு விரும்பி, புயமீது இறுக தழுவி=உமது திருத்தோள்களால் இறுகத் தழுவி, இணை அற்ற அழகில் புனைய=ஒப்பில்லாத அழகுடன் இவள் தரித்துக்கொள்ள, கருணைக்கு

இனிமை தொடையை தரவேணும்=உமது கருணைக்குச் சின்னமாக இனிய மாலையைத் தந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

உணவை யுருண்டையாக உண்பதும், மதம் பொழிவதும் உடைய எட்டுத்திசை யானைகள் அஞ்சி அலறுமாறு, பொன் மயமான கிரவுஞ்ச மலையுடன் போர் புரிந்த வேலாயுதரே! வள்ளி நாயகியை நினைந்து, அசோக மலர்க்கணையையுடைய மன்மதனுக்கு உருகி, அவ் வள்ளியுடன் சேர்வதற்கு விரும்பி எழுகின்ற தோள்களையுடையவரே! பவளம் முத்து என்ற இரண்டும் மலைபோல் குவிந்துள்ள வயல்களில், சங்கின் கூட்டம் நெருங்கியுள்ள திருத்தணிகையில் வாழும் குமாரக் கடவுளே! பெருமிதம் உடையவரே! நீலோற்பலமலரைப் பாணமாகத் தொடுவதற்கு முயலும் மன்மதனுடைய முடிக்கு மேல் குடையாக விளங்கும் சந்திரனுடைய வெப்பத்தாலும், நெருங்கி வந்து பழிச்சொல் பேசுகின்றபெண்களுக்கும்,இனிய குரலையுடைய குயிலுக்கும், இப்பெண் தளர்ச்சியடையாமல், துவள்கின்ற அச் சேர்க்கைக்கு விரும்பி இவளை அழுத்தமாகத் தழுவி, நிகர் இல்லாத அழகும் இனிமையும் உடைய உமது மார்பில் உள்ள மலர் மாலையை இவள் தரிக்கும்படித் தந்தருள் வீர்.

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் எழுந்தது. முருகன்மீது காதல் கொண்ட ஒரு பெண்ணின் தாய் முருகனை நோக்கி முறையிடுவதாக அமைந்தது.

**குவளைக்கணை தொட்டவனுக்கு முடிக்குடையிட்ட குறைப் பிறையாலே :—**

நாயகனை விரும்பும் நாயகியை மன்மதன் பூங்கணையால் மென்மேலும் வருத்துவான்.

அவனுக்கு மூன்று வில்லுகள். அமரர்கள் மீது கணை செலுத்தும் போது மலர் வில்லும், மனிதர்கள் மீது கணை செலுத்தும் போது கரும்பு வில்லும், அரக்கர்மீது கணை செலுத்தும் போது இரும்பு வில்லும தரிப்பான்

கரும்பு வில், சுரும்பு நாண், மலர்க்கணை, அவனுடைய கணைகள் ஐந்து : தாமரை, மா,அசோகு,முல்லை, நீலோற்பலம்; கடைசியில் தொடுக்குங் கணை நீலோற்பலம். அது மரணத்தைத் தரவல்லது.

மன்மதனுடைய குடை சந்திரன். அவன் வளர்வதும் தேய்வதுமான குறையுடையவன். குளிர்ந்த சந்திரனுடைய ஒளி காமுகரை மிகுந்த வெப்பமாக வருத்தும். நெருப்பைக் கொப்புளித்து உமிழ்வதுபோல் இருக்கும்.

**குறுகுற்ற அலர்த் தெரிவை :—**

ஊர்ப் பெண்கள் பழி பல கூறுவர். 'இவள் போயும் போயும் இவனை விரும்பினளே? இவள் பித்துப் பிடித்தவள்' என்பனவாதி பழியுரை பகர்வர். அவ்வாறு கூறுகின்றமொழி அலர் எனப்படும்.

**மொழிக் குயிலுக்கும் இனித் தளராதே :—**

இனிய குயிலின் ஓசை தலைவிக்கு நாராசம்போல் வேதனையைத் தரும். எனவே, "சந்திரனாலும், ஊரவர் உரைக்கும் அலர் மொழியாலும், குயிலின் குரலாலும், முருகா! இவள் மெலிகின்றாள்" என்று முருகனை நோக்கித் தாய் பரிவுடன் கூறுகின்றாள்.

**இனிமைத் தொடையைத் தரவேணும் :—**

முருகா! உன் மீது காதல் கொண்ட இவளிடம் இரக்கம் புரிந்து, இவளை இறுகத் தழுவி, இவளது விரகநோயைத் தணித்து, உனது திருமார்பில் உள்ள மணமாலையைத் தந்தருள்க.

**கவளக் கரடக் கரியெட்டலறக் கனகக் கிரியைப் பொரும் வேலா —**

கவளம்—வாயளவு கொண்ட உணவின் உருண்டை.

"கவளந்தனையுண்டு வளர்ந்திடு கரி" —(கனகந்திரள்) திருப்புகழ்.

**கரடம் :—**

யானையின் மதம் பாய்கின்ற சுவடு.

**கரியெட்டு :—**

திக் கயங்கள் எட்டு: ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம் அஞ்சனம், புட்பதந்தம், சாருவபௌமம், சுப்ரதீபம். இவை முறையே கிழக்கு முதலிய திசைகளில் பூமியைத் தாங்குபவை

**கனகக் கிரி :—**

கிரவுஞ்ச மலை பொன்மயமானது.

"பொன்னஞ் சிலம்பு புலம்பவரும் எங்கோன்"

"சொன்னக் கிரவுஞ்சகிரியூடுருவத் தொளைத்த வைவேல்"

—கந்தரலங்காரம்.

**கருதி :—**

வள்ளியம்மைக்கு அருள் புரிய வேண்டும் என்று முருகவேள் நினைத்து.

**செயலைப் புயனுக்குருகி :—**

செயலை—அசோகு. அசோகு மலரையுடைய மன்மதனுக்கு உருகினன் போல் பெருமான் நடித்தருளினன்.

**பவளத் தரளத் திரளக் குவை :—**

திருத்தணியின் அருகில் உள்ள வயல்களில் பவளம் முத்து இவைகள் குவிந்திருக்கின்றன.

**பணிலத்திரள் மொய்த்த திருத்தணி :—**

பணிலம—சங்கு. சங்கினங்கள் நிறைந்துள்ள வயல். நீர் வளத்தை இது காட்டுகின்றது.

## கருத்துரை

திருத்தணிக் குமரா! உன்மீது காதல்கொண்ட இவளுக்கு உன் மார்பில் உள்ள மணமாலையைத் தந்தருள்வாய்.

## 59

பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே
புரளப் புரளக் கறுவித தறுகட்
பொருவிற் சுறவக் கொடிவேள்தோள்

தெரிவைக் கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே
செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் குணர்வைத் தரவேணும்

சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சுரருக் குரிமைப் புரிவோனே
சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையக்
கருதிப் பொருளைப் பகர்வோனே

தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் தொடும்வீரா
தவளப் பணிலத் தரளப் பழனத்
தணிகைக் குமரப் பெருமாளே.

## பதவுரை

சொரிகற்பக=மலர்களைச் சொரிகின்ற கற்பக மரங்களுடன் கூடிய, நல் பதியை=நலம் பொருந்திய அமராவதி நகரத்தை, தொழுகை சுரருக்கு=கைகூப்பித் தொழுது நின்ற தேவர்கட்கு, உரிமை புரிவோனே=உரிமையாகும்படி உதவியவரே! சுடர்பொன் கயிலை கடவுட்கு இசைய=ஒளிவீசும் அழகிய கயிலாய மலைக்குத் தலைவராம் சிவபெருமானுக்கு உள்ளம் பொருந்துமாறு, கருதி

பொருளை பகர்வோனே=வேதத்தின் உட்பொருளை உபதேசித்தவரே! தரிகெட்டு அசுரபடை கெட்டு ஒழிய=நிலை கெட்டு அசுர சேனைகள் அழிந்து ஒழியுமாறு, தனி நெடு அயிலை தொடும் வீரா=ஒப்பற்ற நெடிய வேலாயுதத்தை விடுத்தருளிய வீரரே! தவள பணில= வெண்மையான சங்குகளும், தரள=முத்துக்களும் நிறைந்த, பழன= வயலுடன் கூடிய, தணிகை குமர=திருத்தணியில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! பொரிய பொரிய=ஆசைத்தீயால் பொரி பட்டு பொரிபட்டு, பொலி முத்து வட துகளில் புதை அ தனமீது=விளங்குகின்ற முத்து மாலையானது தூள்பட்டுப் புதைபடும் அந்தக் கொங்கையின்மேல், புரள புரள=படுக்கைமீது புரண்டு புரண்டு வேதனைப்படுகின்ற இவள்மீது, சுறுவி=கோபித்து, தறுகண் பொருளில்=அஞ்சாமையுடன் போர் புரிகின்ற (கரும்பு) வில்லையு, சுறவகொடி=சுறாமீன் கொடியையும் உடைய, வேள்=மன்மதன், தோள் தெரிவைக்கு=கரங்களால் தெரிந்து விடும் கூரிய கணைகட்கும், அரிவை=அலர் கூறும் பெண்களுக்கும், பரவைக்கு உருகி=கடல் ஒலிக்கும் உள்ளம் உருகினவளாய் செயல் அற்றனள்=செயல்கள் அற்றவளாய், கற்பு அழியாதே= இவளுடைய கற்புநெறி அழியாதவாறு, செறிவுற்று=(உன்பால் காதல் கொண்ட) இவளிடம் தேவரீர் நெருங்கி, அணையில் துயில் உற்று=படுக்கையில் இவளுடன் துயில் புரிந்து, அருமை தெரிவைக்கு உணர்வை தரவேணும்=அருமையான இந்த மாதுக்கு மயக்கத்தை நீக்கி நல்லுணர்வைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

மலர்களைச் சொரிகின்ற கற்பக மரங்களையுடைய சிறந்த அமராவதி நகரத்தை, வணங்கிய கரங்களுடன் கூடிய தேவர்கட்கு உரிமையாகுமாறு உதவியவரே! ஒளி வீசும அழகிய கயிலை மலைக்குத தலைவராகிய சிவமூர்த்தியின் திருவுளத்துககு இசையுமாறு வேதத்தின் உடபொருளை உபதேசித்தவரே! நிலையற்று அசுர சேனைகள் அழிந்து ஒழியுமாறு ஒப்பற்ற நெடிய வேலைத் தொடுத்த வீரரே! வெண்மையான சங்குகளும் முத்துக்களும் நிறைந்த வயல் சூழ்ந்த திருத்தணியில எழுநதருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமிதம் உடையவரே! ஆசைத் தீயால் முத்துமாலை பொரிந்து தூள்பட்டுப் புதைபடும் அத் தனங்களின மீது, படுக்கையில் புரண்டு புரண்டு துன்புறுமாறு சினந்து கொடுமையுடன் போர்புரியும் கரும்பு வில்லும் சுறாமீன் கொடியும் உடைய மன்மதன், கரங்களால தொடுத்து விடுகின்ற கூரிய கணைக்கும், அலர் தூற்றுகின்ற மாதர்கட்கும் ஒலிக்கின்ற கடலுககும் உருகி செயல மறந்து தன் கற்பு நிலை கெடாதவாறு, இவளைத் தேவரீர்

நெருங்கி வந்து, இவளுடன் படுக்கையில் துயில் செய்து, இந்த அருமையான மாதுக்கு நல்லுணர்வை நலகுவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது :—

கணவனை நாடி வருந்துகின்ற ஒரு தலைவிக்காக, அவளுடைய பாங்கி தலைவனிடம் முறையிடுவதாக இது அமைந்தது.

**பொரியபொரிய :—**

தலைவனை விரும்பிய தலைவிக்கு விரகவேதனையால் எழுந்த வெந்தீயால் அவள் அணிந்திருக்கின்ற முத்து மாலை வெந்து பொரிந்து துகளாகின்றது.

அநுமான் சீதாதேவியிடம் திருவாழியைத் தந்தார். அம்மை அதனை அளவற்ற மகிழ்ச்சியுடன் வாங்கி திருமார்பில் வைத்து அணைத்தாள். அப்போது உண்டாகிய விரக வெந்தீயால் அம்மோதிரம் உருகிவிட்டது உடனே உள்ளம் உவந்து உடம்பு குளிர்ந்து வேர்த்து ஜிலஜிலிட்டது. அதனால் உருகிய மோதிரம் இறுகியது. இரண்டும் ஒரு கணத்தில் நிகழ்ந்தன.

இதனை நேரில் கண்ட அநுமார் இராமரிடம் கூறுகின்றார் :

ஒரு கணத் திரண்டு கண்டேன் ஒளிமணி யாழி யான்ற
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகம்என பதனின் வந்த வெங்கொழுந் தீயினால் வெந்
துருகிய துடனே ஆறி வலித்தது குளிர்ப்புள் ளூற

**பொலி முத்துவடத் துகளில் புதையத் தனமீதே :—**

ஒளி விளங்குகின்ற அம் முத்து மாலைகள் முன் கூறியவாறு பொரிந்து பொடியாகியது. அப்பொடியில் மறைபடுகின்ற தனங்கள் மீது, மன்மதன் தன் மலர்க்கணைகளை விடுகின்றான்.

**புரள புரள :—**

நாயகனை விரும்பிய நங்கை தான் விரும்பிய நாயகனை எய்தப்பெறுமையால், மலர்ப் படுக்கையில் படுத்துப் புரண்டு புரண்டு புழுங்குகின்றாள்.

**கறுவி தறுகட் பொருவில் சுறவக் கொடிவேள் :—**

கறுவி—கோபித்து. தறுகண்—அஞ்சுதல் இல்லாமை. பொரு வில்—போர்புரிதற் கேற்ற கரும்பு வில். சுற அக்கொடி—மன்மதனுக்கு சுறாமீன் கொடி. அது வீரமுள்ள மீன்.

**தோள் தெரிவைக்கு :—**

தோள்—கரம். கரத்தால் தெரிந்து விடுகின்ற கணை வை—கூர்மை. இது ஆகு பெயராகக் கணையை உணர்த்தியது.

மன்மதனுக்கு ஐந்து கணைகள். ஒவ்வொரு கணை ஒவ்வொரு பயனை விளைவிக்கும். ஆதலால் எந்த வேளையில் எந்தக் கணையை விடவேண்டும் என்று தெரிந்து மன்மதன் விடுவான்.

**அரிவை :—**

காதலால் வேதனைப் படுகின்ற ஒருத்தியைக் கண்டு ஊரில் உள்ள மாதர் அலர் மொழிகூறிப் பழித்துரைப்பர். ஆதலால் அந்த அலர் மொழி பரவாத வண்ணம் இறைவனே இவளை ஆட்கொள் என்று பாங்கி குறிப்பிடுகின்றாள்.

**பரவைக்கு உருகி :—**

பரவை—கடல். பரந்திருப்பதனால் இப்பெயர் பெற்றது. சமுத்திர ஒலி காதல் உணர்ச்சியை மிகுதிப்படுத்தும்.

**செயலற்றனள் கற்பழியாதே :—**

முருகா! இப்பெண் உன்னைக் காதலித்து, மன்மத பாணத்தாலும், அலர் மொழியாலும், கடலோசையாலும் உள்ளம் உருகித் தன் செயல் அற்று மயங்கிக் கிடக்கின்றாள். உன்னையே நாடியுள்ள இவளுடைய கற்பின் உறுதி யழியக் கூடாது.

**செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத் தெரிவைக் குணர்வைத் தருவாயே :—**

இவளை நீர் நெருங்கி வந்து, இவளுடன் சயனித்து, இவளுடைய காதல் மயக்கம் நீங்க, நல்லுணர்வை நல்கிக் காத்தருள்.

**சொரி கற்பக நற்பதி :—**

மலர்களைச் சொரிகின்ற கற்பகத்தரு. இது நினைத்தவற்றை நல்கும் நீர்மையது. இம்மரம் நிறைந்த நகர் அமராவதி.

இதனை சூரபன்மனுடைய மகன் பானுகோபன் துகளாக்கி எரியிட்டு அழித்தனன். முருகவேள் சூராதி அவுணரைத் தொலைத்து அமராவதி நகரைத் தொன்மைபோல நன்மையுடன் புதுப்பித்து, இந்திராதி இமையவர்கட்கு வழங்கியருளினார்.

**சுடர்பொற் கயிலை :—**

சுடர்—ஒளி, பொன்—அழகு. ஞானவொளி வீசுகின்ற அழகிய திருக்கயிலைமலை.

**தரிகெட்டசுர :—**

தரித்தல்—நிலைத்து நிற்றல், நிலையெறுதல் இல்லாத அசுரர்கள். அசுரர்கள் ஒழியுமாறு முருகன் வேலை விடுவித்தருளினார்.

**தனிநெட்டயிலை :—**

தனி நெடு அயில். சமானமில்லாத நீண்ட கூரிய வேல்.

**தவளப்பணிலத் தரளப் பழனம் :—**

வெண்மையான சங்குகளும், முத்துக்களும் நிறைந்த வயல்.

## கருத்துரை

திருத்தணி முருகா! உன்னை நாடிக் காதல் கொண்டு உருகும் இம் மாதினை மணந்து அருள் செய்வாய்.

## 60

அருக்கிமெத் தெனச்சிரித் துருக்கியிட் டுளக்கருத்
தழித்தறக் கறுத்தகட் பயிலாலே
அழைத்தகப் படுத்தியொட் டறப்பொருட் பறிப்பவர்க்
கடுத்தபத் தமுற்றுவித் தகர்போலத்

தரிக்கும்வித் தரிக்குமிக் கதத்துவப் ப்ரசித்தியெத்
தலத்துமற் றிலைப்பிறர்க் கெனஞானம்
சமைத்துரைத் திமைப்பினிற் சடக்கெனப் படுத்தெழச்
சறுக்குமிப் பிறப்புபெற் றிடலாமோ

பொருக்கெழக் கடற்பரப் பரக்கர்கொத் திறப்புறப்
பொருப்பினிற் பெருக்கவுற் றிடுமாயம்
புடைத்திடித் தடற்கரத் துறப்பிடித் தகற்பகப்
புரிக்கிரக் கம்வைத்தபொற் கதிர்வேலா

திருத்தமுத் தமிழ்க்கவிக் கொருத்தமைக் குறத்தியைத்
திணைப்புனக் கிரித்தலத் திடைதோயுஞ்
சிவத்தகுக் குடக்கொடிச் செருக்கவுற் பலச்சுனைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே.

## பதவுரை

பொருக்கு எழ=வற்றி உலர்ந்த காட்சி எழும்படி, கடல் பரப்பு =பரந்த கடல் வற்றவும், அரக்கர் கொத்து இறப்பு உற=அரக்கர்க

ளுடைய கூட்டம் இறந்து அழியவும், பொருப்பினில்=கிரவுஞ்ச மலையில், பெருக்க உற்றிடும் மாயம் புடைத்து இடித்த=நிரம்பவும் இருந்த மாயச் செயல்களைத் தகர்த்து அழித்த கதிர் வேலவரே! அடல் கரத்து பிடித்த=வலிமை மிக்க திருக்கரத்தில் தாங்கிய கதிர் வேலவரே! கற்பகபுரிக்கு=கற்பகத் தருவுள்ள அமராவதி நகரிடம், இரக்கம் வைத்த=கருணை வைத்த, பொன் கதிர்வேலா=அழகிய கதிர்வேலவரே! திருத்த முத்தமிழ் கவிக்கு ஒருத்த=திருத்தமுள்ள முத்தமிழ்ப் பாடலுக்கு ஒப்பற்றவரே! மை குறத்தியை=மையணிந்த வள்ளிபிராட்டியை, தினை புன கிரிதலத்து இடைதோயும்=தினைப்புனம் உள்ள மலையிடத்தில் தோய்ந்தவரே! சிவத்த குக்குட கொடி செருக்க=சிவந்த கோழிக் கொடி களிப்புற, உற்பல சுனை சிறப்பு உடை=நீலோற்பலம் மலரும் சுனையால் சிறப்புள்ள, திருத்தணி= திருத்தணிகை மலைமீது எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமை யில் மிக்கவரே! அருக்கி=சுருக்கமாகவும், மெத்தென=மென்மை யாகவும், சிரித்து உருக்கியிட்டு=புன்னகை புரிந்து உள்ளத்தை உருக்கி, உள கருத்தை அழித்து=உள்ளக் கருத்தை அழித்து, அற கறுத்த கண் பயிலாலே=மிக்க கருமையாயுள்ள கண்களின் குறிப்புக் களால், அழைத்து=தம்பால் கூப்பிட்டு, அகப்படுத்தி=தமது வலைக் குள் சிக்க வைத்து, ஒட்டு அற பொருள் பறிப்பவர்க்கு=பசையில்லா மல் எல்லாப் பொருள்களையும் பறிக்கின்ற விலைமாதர்பால், அடுத்து அபத்தம் உற்று=அடைந்து பொய்யான இன்பத்தை நுகர்ந்து, வித்தகர்போல=அறிவாளரைப் போல, தரிக்கும்=நடித்தும், வித்த ரிக்கும்=விரிவாகப் பேசியும், மிக்க தத்துவ ப்ரசித்தி=மேலான தத்துவங்களை எடுத்து ஓதும் கீர்த்தி, எத்தலத்தும் மற்று இலை பிறர்க்கு என=எந்த இடத்திலும் வேறு யாருக்கும் இல்லையென்னு மாறு, ஞானம் சமைத்து உரைத்து=ஞானவுரைகளைப் புதிதாக உண்டாக்கிப் பேசி. இமைப்பினில் சடக்கென படுத்து எழ=ஓர் இமைப்போதில் வேகமாகப்படுத்து எழுதல்போல், சறுக்கும் இப் பிறப்பு பெற்றிடலாமோ=நழுவி ஒழியும் இம்மானுடப் பிறப்பினைப் பெற்றிடுதல் நலமாகுமோ?

## பொழிப்புரை

பரந்த கடல் வற்றவும், கூட்டமான அரக்கர் அழியவும், கிரவுஞ்ச மலையில் நிரம்பவும் இருந்த மாயம் உடைந்து ஒழிய வும் தாக்கிய வேலவரே! வலிமை மிக்க திருக்கரத்தில் ஏந்திய வேலவரே! கற்பக நகர்மீது கருணை புரிந்த அழகிய கதிர் வேலவரே! திருத்தமுற்ற முத்தமிழ்ப் பாடல் பெற்ற சமான மில்லாதவரே! மையெழுதிய குறமாதினைத் தினைப்புனம் மேவிய மலைச்சாரலில் தழுவியவரே! சிவந்த சேவற்கொடி மகிழ, நீலோற்பல மலர் மலர்கின்ற சுனையால் சிறப்புள்ள

திருத்தணி மலையில் வாழும் பெருமிதம் உடையவரே! சுருக்க மாகவும் மென்மையாகவுஞ் சிரித்து உள்ளத்தை உருக்கி, உள்ளத்தின் கருத்தை அழித்து, மிகவுங்கருத்த கண் ஜாடை யால் அழைத்து, சிக்க வைத்து, எல்லாப் பொருள்களையும் கவர்கின்ற பொது மாதர்பால் அடுத்து பொய்யுறவை யடைந்து, அறிவாளியைப் போல் நடித்தும் விரிவாகப் பேசி யும், மேலான உண்மைகளை எடுத்துரைக்குங் கீர்த்தி எந்த இடத்திலும் வேறு யாருக்கும் இல்லை என்று சொல்லும்படி, ஞானவுரைகளை உண்டாக்கி யுரைத்து, ஒருகணத்தில் படுத்து எழுதல்போல் நழுவி ஒழியும் இம்மனிதப் பிறப்பைப் பெற் றிடல் நன்றாகுமோ?

## விரிவுரை

**அருக்கி மெத்தெனச் சிரித்துருக்கி :—**

அருகுதல்—குறைதல. வாய்விட்டு அதிகமாகச் சிரிக் காமல், மெல்ல. மென்மையாகப் புன்னகை புரிந்து ஆடவர் உள்ளத்தைப் பொது மகளிர் உருக்கிவிடுவார்கள்.

**உளக்கருத்தழித்து :—**

அவ்வாறு ஆடவரது மனத்தை உருக்கியதுடன் நில்லா மல், அவர்களது எண்ணங்களை அழித்துவிடுவார்கள்.

**கறுத்தகட் டயிலாலே அழைத்து :—**

கரிய கண்காட்டி அழைத்துத் தம் மாய வலையில் சிக்க வைப்பார்கள்.

**அடுத்தபத்த முற்று :—**

அடுத்து அபத்தம் உற்று. பொது மாதரையடுத்து, அங்கு அவர் செய்யும் பொய்யன்பை மெய்யன்பு எனக் கருதி நம்பி அவலமாவார்கள்.

**வித்தகர்போலே......சமைத்துரைத்து :—**

வித்தகம—ஞானம். பெரிய ஞானியைப்போல் நடித்தும், விரிவாகப் பேசியும், பேசுவதில் தனக்கு நிகரானவர் எங்கும் யாரும் இல்லை யென் னும்படி ஞானவுரைகளைப் புதிதுபுதிதாக உண்டாக்கிப் பேசுவர். அத்தனையும் வாசா ஞானமேயாகும். அநுபவத்தில் ஒன்றும் இருக்காது.

இத்தகைய வாய்வேதாந்தம் பற்றித் தாயுமானுர் கூறு கின்ருர்

வாசாகயிங்கரிய மன்றி யொரு சாதனம்
மனோவாயு நிற்கும் வண்ணம்
வாலாய மாகவும் பழகியறியேன்: துறவு
மார்க்கத்தின் இச்சைபோல

நேசானு சாரியாய் விவகரிப்பேன் அந்த
நினைவையும் மறந்த போது
நித்திரை கொள்வேன் தேகம் நீங்குமென எண்ணிலோ
நெஞ்சம் துடித்தயருவேன்
பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகு தூரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டை யருள்வாய்
பாசாட விக்குளே செல்லாத வர்க்கருள்
பழுத் தொழுகு தேவதருவே
பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே.

**சறுக்கு மிப்பிறப்பு பெற்றிடலாமோ :—**

ஒரு கணத்தில் நழுவி விழும் இயல்புடையது இப்பிறப்பு ஆதலால் மீண்டும் மீண்டும் இப்பிறப்பையே எடுத்து உழல்வது நலமன்று. ஆதலால் பிறவாத பெற்றியைத் தந்தருளும் என்று அருணகிரியார் இப்பாடலில் வேலவனை வேண்டுகின்றார்.

**பொருக்கெழ......கதிர்வேலா :—**

கடலையும் அரக்கரையும், கிரவுஞ்சமலையையும் அழித்த வேலையுடையவர் முருகவேள்.

கடல்—பிறவி. அசுரர்—வினைத் தொகுதி. கிரவுஞ்சம்—மாயை. இவற்றை ஞானமாகிய வேல் அழிக்கும்.

**திருத்த முத்தமிழ்க்கவிக் கொருத்த :—**

செவ்விய முத்தமிழ்க் கவிகளால் பாடப்பெற்ற நிகர் இல்லாத ஞானமூர்த்தி முருகவேள்.

**உற்பலச்சுனைச் சிறப்புடைய திருத்தணி :—**

திருத்தணியில் தினம் மூன்று நீலோற்பல மலர்கள் மலர்கின்ற அழகிய சுனை ஒன்று இன்றும் உளது. அதனால் அம்மலை கல்லாரகிரி என்று பேர் பெற்றது.

செங்கல்வம்—என்றால் தெலுங்கில் நீலோற்பல மலர். அதனால் அம் மலைமீதுள்ள சுவாமியைச் செங்கல்வராயன் என்பர்

"திருக்குலவு மொரு நீல மலர்ச்சுனையில் அழகான
திருத் தணிகை மலை மேவு பெருமாளே."—(வரிக்கலையி) திருப்புகழ்.

### கருத்துரை

தணிகேசா! பிறவித் துயர் நீங்கத் திருவருள் செய்.

## 61

கடற்செகத் தடக்கிமற் றடுத்தவர்க் கிடுக்கணைக்
  கடைக்கணிற் கொடுத்தமைத் தியல்காமக்
கலைக்கதற் றுரைத்துபுட் குரற்கள்விட் டுளத்தினைக்
  கரைத்துடுத் தபட்டவிழ்த் தணைமீதே
சடக்கெனப் புகத்தனத் தணைத்திதழ்க் கொடுத்து முத்
  தமிட்டிருட் குழற்பிணித் துகிரேகை
சளப்படப் புதைத்தடித் திலைக்குரைக் கடித்தடத்
  தலத்தில்வைப் பவர்க்கிதப் படுவேனோ
இடக்கடக் குமெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித்
  தெழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா
இகற் செருக் கரக்கரைத் தகர்த் தொலித் துரத்தபச்
  சிறைச்சியைப் பசித்திரைக் கிசைகூவும்
பெடைத்திரட் களித்தகுக் குடக் கொடிக் கரத்தபொய்ப்
  பிதற்றறப் படுத்துசற் குருவாய் முன்
பிறப்பிலிக் குணர்த்துசித் தவுற்றநெற் பெருக்குவைப்
  பெருக்கு மெய்த் திருத்தணிப் பெருமாளே.

### பதவுரை

இடக்கு அடக்கு=முரண்பாடுகளை அடக்குகின்ற, மெய் பொருள்=உண்மைப் பொருளைக் கொண்ட, திருப்புகழ்க்கு உயிர்ப்பு அளித்து=திருப்புகழுக்கு உயிரோட்டத்தைத் தந்து, எழில் தினை கிரி புறத்து உறைவேலா=அழகிய தினைப்புனம் உள்ள மலைப்பாங்கில் உறைகின்ற வேலவரே! இகல் செருக்கு=மாறுபட்டு அகங்கரித்த, அரக்கரை தகர்த்து=அசுரர்களை அழித்து, ஒலித்து=கொக்கரித்து, உரத்த பசு இறைச்சியை=திண்ணிய பசிய இறைச்சியை, பசித்து இரைக்கு இசை கூவும்=பசியுடன் இரை வேண்டும் என்று குரலுடன் கூவுகின்ற, பெடை திரட்கு அளித்த=பெட்டைக் கோழிக் கூட்டங்களுக்குக் கொடுத்த, குக்குட கொடி கரத்த=சேவலைக் கொடியாகத் திருக்கரத்தில் பிடித்தவரே! பொய் பிதற்று அற படுத்து=பொய்யான பிதற்றல் மொழிகளை அடியுடன் களைந்து சற்குருவாய்=சற்குரு நாதராய், முன்=முன்பு ஒரு நாள், பிறப்பு இலிக்கு உணர்த்து=பிறப்பில்லாத பெருமானாகிய சிவபிரானுக்கு உபதேசித்த, சித்த=சித்த நாதரே! உற்ற நெல் பெருகுவை பெருக்கு=சேர்ந்துள்ள நெல்லின் பெருங்குவியல்களை மேலும் பெருக வைக்கும், மெய் திருத்தணி=அழியாத திருத்தணி மலையில் எழுந்தருளிய, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! கடல் செகத்து அடக்கி=கடலும் உலகமும் தன்

அகலப் பரப்பினுல் அடங்குமாறு செய்து, மற்று அடுத்தவர்க்கு= தம்மை நாடிவந்தவர்கட்கு, இடுக்கண்=துன்பத்தை, கடை கணில் கொடுத்து=தமது கடைக்கண்ணுல் கொடுத்து, அழைத்து=அவர் களைத் தம்பால் நெருங்குமாறு கூப்பிட்டும், இயல் காம கலை கதற்று உரைத்து=இயல்பாகவுள்ள காம நூல்கள் முழுங்கியதை எடுத்து உரைத்து, புள் குரல்கள் விட்டு=பறவைகளின் குரல்களைக் காட்டி, உளத்தினை கரைத்து=உள்ளத்தை உருக்கி, உடுத்த பட்டு அவிழ்த்து= உடுத்துள்ள பட்டுப் புடவையை அவிழ்த்து, அணைமீது=படுக்கையின் மேல், சடக்கு என புக=சட்டென்று வேகமாகச் சேர்ந்து, தனத்து அணைத்து=மார்புறத்தழுவி, இதழ் கொடுத்து=இதழ் ஊறலை அளித்து, முத்தம் இட்டு=முத்தந் தந்து, இருள் குழல் பிணித்து= இருண்ட கரிய கூந்தலைக் கட்டி முடிந்து, உகிர் ரேகை=நகக் குறியை, சளப்பட புதைத்து அடித்து=மூர்க்கத்துடன் புதைய அழுத்தி இலை குழை கடிதடத்தனத்தில் வைப்பவர்க்கு=இலை போன்ற அல்குலில் சேர்ப்பவர் பால், இதப் படுவேனே=வசப்படுவேனே?

## பொழிப்புரை

மாறுபாடுகளை அடக்கும் உண்மைப் பொருளைக்கொண்ட தேவரீரது திருப்புகழுக்கு உயிரோட்டத்தைத் தந்து, அழகிய திணைப்புனத்துடன் கூடிய வள்ளிமலைப் பாங்கில் உறைகின்ற வேலாயுதரே! போரில் அகங்கரித்து வந்த அரக்கர்களை அழித்து, கொக்கரித்து கெட்டியான பசிய மாமிசத்தை, பசி யுடன் கூவுகின்ற பெண் கோழிகட்குத் தந்த சேவலைக் கொடி யாகத் திருக்கரத்தில் ஏந்தியவரே! பொய்மையைப் பிதற்று தலை அடியுடன் களைந்து, சற்குருநாதராய் விளங்கி, பிறப் பில்லாத சிவமூர்த்திக்கு முறைகாலத்தில் உபதேசித்த சித்த மூர்த்தியே! சேர்ந்துள்ள செற்குவியலை மேலும் பெருகச் செய் யும் மெய்மையுடைய திருத்தணியில் எழுந்தருளியுள்ள பெரு மிதம் உடையவரே! கடலினும் பூமியினும் பெரிதாக விளங்கி, தம்மை நாடி வந்தவர்க்குத் துன்பத்தைத் தமது கடைக் கண்ணுல் கொடுத்து, அவர்களை அழைத்து, இயல்பான காம நூல்களைக் கூறி, பறவைகளின் குரல்களை எழுப்பி, உள் ளத்தை உருக்கி, உடுத்த பட்டாடையை அவிழ்த்து, படுக்கை யின் மேல், விரைந்து சேர்ந்து தனம் பொருந்தத் தழுவி, இதழூறலைத் தந்து, முத்தமிட்டு, கூந்தலைக் கட்டி, நகக் குறியை அழுத்தமாக அழுத்தி, இலைபோன்ற அல்குலில் சேருமாறு செய்யும் பொதுமாதர் வசமாக அடியேன் ஆகலாமோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் முதற்பகுதியில். பொது மகளிரின் இயல்புகளை அடிகளார் கூறி, அம்மயக்கத்தில் ஆழ்ந்து அழிதல் கூடாது என்று உலகுக்கு உணர்த்தியருளினார்.

**இடக்கடக்கு மெய்ப்பொருட்டிருப்புகழ்க்குயிர்ப்பளித்து :—**

திருப்புகழ் பொறிபுலன்களின் சேட்டைகளை அடக்கி அருள் புரியும். சத்திய வாசகமானது திருப்புகழ். இத்திருப்புகழுக்கு உயிரோட்டம் தந்தது முருகன் வள்ளி நாயகிக்கு அருளிய கருணைத் திறம். திருப்புகழில் அதிகமான பகுதிகளில் வள்ளி மணவாளா! என்று கூறுகிறார் அருணகிரி நாதர்.

**எழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா :—**

மூவர்க்குந் தேவர்க்கும் முதல்வராம் முருகவேள், காமனை எரித்த கனற்கண்ணிலே ஞானஜோதியாய் வெளிப்பட்ட விமலன். அப்பெருமானுடைய மெய்யடியார்கள் பார்க்கின்ற திசையிலே கூட ஆசாபாசம் அண்டமாட்டா.

ஆகவே முருகவேள் தினைப்புனஞ் சென்று வள்ளியை மணந்தது ஆசைபற்றியன்று; 'தாழ்ந்த குலத்தில் பிறந்து, ஆசார ஈனராகக் கல்வி ஞானம் இன்றி இருப்பினும், என்னை நினைவார்க்கு எளிதில் வந்து அருள புரிவேன்'' என்பதை அதனால் உலகுக்கு உணர்த்தியருளினார்.

**இகற்செருக் கரக்கரைத் தகர்த்தொலித் துரத்தபச் சிறைச்சியைப் பசித் திரைக் கிசைகூவப் பெடைத்திரட் களித்தகுக் குடக் கொடிக்கரத்த :—**

இந்த மூன்று வரிகளில் சேவல் கொடியின் சிறப்பைக் கூறுகின்றார்.

இகல்—மாறுபாடு. மாறுபட்ட அரக்கர்களைச் சேவல் தன் காலாயுதத்தால் அழித்தது.

**ஒலித்து :—**

"கொக்கறு கோ'' என்று ஒலித்தது. அரக்கர்களின் உடற்றசையை, பசியுடன் கூவியழைக்கும் பெண் கோழிக்குழுவுக்கு உணவாகத் தந்து அக் குழுவினைக் காக்கும்.

இத்தகைய வீரமும், கருணையும் உடைய சேவலைஎம்பெருமான் திருக்கரத்தில் ஏந்தியிருக்கின்றார்.

**இறப்பிலிக் குணர்த்து சித்த :—**

சிவபெருமான் பிறப்பு இறப்பு இல்லாதவர். "அஜம் த்ருவம்'' என்று வேதம் முழங்குகின்றது.

> எல்லார் பிறப்பும் இறப்புமியற் பாவலர்தம்
> சொல்லால் தெளிந்தேம்நம் சோணேசன்—இல்லில்
> பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
> டிறந்தகதை யுங்கேட்டி லேம். —அருணகிரியந்தாதி.

சிவபிரானைபற்றிச் சொல்லவந்த பிற மத ஆசிரியரும், "பிறவா யாக்கைப் பெரியோன் கோடல்'' என்கிறார். அதனால் சிவமூர்த்திக்குத் தாயுந் தந்தையும் இல்லை. அவர்

தான் எல்லாருக்குந் தாயும் தந்தையுமாகி நின்று அருள் புரிகின்றார்.

"தாயுமிலி தந்தையிலி தான் தனியன் காணேடீ" —திருவாசகம்.

## கருத்துரை

திருத்தணி முருகா! மாதர் மயக்கற அருள்.

## 62

கனத்தறப் பணைத்தபொற் கழைப்புயத் தனக்கிரிக்
  கனத்தையொத் துமொய்த்தமைக் குழலார்தம்
கறுத்தமைக் கயற்கணிற் கருத்துவைத் தொருத்தநிற்
  கழற்பதத் தடுத்திடற் கறியாதே

இனப்பிணிக் கணத்தினுக் கிருப்பெனத் துருத்தியொத்
  திசைத்தசைத் தசுக்கிலத் தசைதோலால்
எடுத்தபொய்க் கடத்தினைப் பொறுக்குமிப் பிறப்பறுத்
  தெனக்குநித் தமுத்தியைத் தரவேணும்

பணைக்கரச் சினத்திபத் தனைத்துரத் தரக்கனைப்
  பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா
பருப்பதச் செருக்கறத் துகைக்குமுட் பதத்தினைப்
  படைத்தகுக் குடக்கொடிக் குமரேசா

தினைப்புனப் பருப்பதத் தினிற்குடிக் குறத்தியைச்
  செருக்குறத் திருப்புயத் தணைவோனே
திருப்புரப் புறத்தியற் றிருத்தகுத் துகித்திலத்
  திருத்திசைத் திருத்தணிப் பெருமாளே.

## பதவுரை

பணை கர சினத்து இபத்தனை = பனைமரம் போன்ற தும்பிக்கையையும் கோபத்தையும் உடைய ஐராவத யானையின் தலைவனாகிய இந்திரனை, துரத்து அரக்கனை = துரத்தி ஓட்டிய சூரபன்மனை பயத்தினில் பயப்பட = கடல்நீரில் அச்சப்படுமாறு, பொரும் வேலா = போர் செய்த வேலாயுதரே! பருப்பத செருக்கு அற = மலைகளின் இறுமாப்பு அழியும்படி, துகைக்கும் = மிதித்துப் பொடிபடுத்துகின்ற முள் பதத்தினை படைத்த = முள்போன்ற விரல்களையுடைய கால்களைக் கொண்ட, குக்குட கொடி = கோழிக் கொடியையுடைய, குமரேசா = குமாரக்கடவுளே! தினைப்புன பருப்பதத்தினில் குடி குறத்தியை = தினைப்புனத்தையுடைய மலையில் குடியிருந்த வள்ளிநாயகியை —

செருக்கு உற திரு புயத்து அணைவோனே = மகிழ்ச்சியடையுமாறு அழகிய புயங்களில் தழுவிக்கொண்டவரே! திருபுர புறத்து = அழகிய நகரத்தின் வெளிப்புறத்தில், இயல் திரு தகு து = (வயல்களில்) இயல்பான அழகும் தகுதியும் தூய்மையும் உள்ள, நித்தில = முத்துக்கள் விளங்கும்படி, திருதிசை = புண்ணிய வடதிசையின் எல்லையில் திகழும், திருத்தணி = திருத்தணிமலையின்மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! கனத்து அற பணைத்த = திண்மையுடன் மிகவும் பருத்துள்ள, பொன் கழை புய = அழகிய மூங்கில் போன்ற தோள்களும், தனகிரி = தனங்களாகிய மலைகளையும், கனத்தை ஒத்து மொய்த்த = மேகத்தை ஒத்து நெருங்கிய, மைகுழலார் தம் = கரிய கூந்தலையும் உடைய மாதர்களுடைய, கறுத்த மை கயல் கணில் = கரிய மையிட்ட மீன்போன்ற கண்களில், கருத்து வைத்து = எனது எண்ணத்தை வைத்து, ஒருத்த நின் கழல் பதத்து அடுத்திடற்கு அறியாதே = ஒப்பற்ற தேவரீரது வீரக்கழல் அணிந்த திருவடிகளைச் சேர்வதற்கு அறியாமல், இன பிணி கணத்தினுக்கு இருப்பு என = தொகுதியான பிணிகளின் கூட்டத்துக்கு உறைவிடம் என்று சொல்லும்படி, துருத்தி ஒத்து இசைத்து = துருத்தியைப்போல் ஒலிசெய்து, அசைத்த சுக்கிலம் = கட்டுண்ட சுக்கிலம், தசை தோலால் எடுத்த = தசை, தோல் இவைகளால் ஆக்கப்பட்ட, பொய் கடத்தினை = நிலையில்லாத உடம்பை, பொறுக்கும் = சுமக்கின்ற இ பிறப்பு அறுத்து = இந்தப் பிறவியை ஒழித்து, எனக்கு நித்த முத்தியை தரவேணும் = அடியேனுக்கு அழியாத முத்தி நலத்தைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

ஊமரம் போன்ற தும்பிக்கையையும் கோபத்தையும் உடைய ஐராவதம் என்ற வெள்ளை யானைக்குத் தலைவனான தேவேந்திரனைப் போரில் துரத்திய சூரபன்மனைக் கடல் நீரில் அஞ்சுமாறு போர் புரிந்த வேலாயுதரே! மலைகளின் இறுமாப்பு அடங்கும்படி இடிக்கின்ற முனைபோன்ற நகங்களுடன் கூடிய கால்களையுடைய கோழிக் கொடியையுடைய குமாரக் கடவுளே! தினைப்புனத்தையுடைய மலையில் வசிக்கும் வள்ளி நாயகியை அவள் மகிழுமாறு அழகிய மார்பில் அணைத்தவரே! அழகிய ஊர்ப்புறத்தில் உள்ள வயல்களில் உயர்ந்த அழகிய தூய முத்துக்கள் விளங்கும்படி தமிழ்நாட்டின் வடக்கு எல்லையாகத் திகழும் திருத்தணி மலையில் எழுந்தருளியிருக்கும் பெருமிதம் உடையவரே! திண்ணியதாய் மிகவும் பருத்துள்ள அழகிய மூங்கிலைப் போன்ற தோள்களையும், கொங்கைகளாகிய மலைகளையும் மேகத்தையொத்து நெருங்கிய கரியகூந்தலையும் உடைய மாதர்களின், கரிய மையிட்ட கண்களில் என் உள்ளத்தை வைத்து, ஒப்பற்ற உமது வீரக் கழல் தரித்த திருவடிகளை யடைவதற்கு அறி

யாமல், தொகுதியான நோய்களின் கூட்டத்திற்கு உறைவிடமான இவ்வுடலில் துருத்திபோல் பெருமூச்சு விட்டு; சுக்கிலம், தசை, தோல் இவைகளால் ஆக்கப்பட்ட நிலையில்லாத இந்த உடம்பைச் சுமக்கின்ற இப்பிறப்பை ஒழித்து அடியேனுக்கு அழியா முத்தியைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**கனத்தறப் பணைத்த பொற் கழைப்புய :—**

மாதர்களது தோள்களுக்கு நன்கு விளைந்த மூங்கிலை உவமையாக உரைப்பது மரபு. மூங்கில நல்ல மினுமினுப்பும் உருட்சியும் திரட்சியும் உடையதாய் இருக்கும்.

"வேய் மொழி வேய்த்தோள் வல்லி" —வில்லிபாரதம்.

**கனத்தை யொத்து மொய்த்த மைக்குழலார் :—**

கனம்—மேகம்; மெகம் போன்ற இருண்ட கூந்தல்.

**கறுத்தமைக் கயற்கணிற் கருத்து வைத்து :—**

மையணிவதால் கண் குளிர்ச்சியும் ஒளியும் பெறும்.

கரிசலாங்கண்ணி என்ற பச்சிலைச் சாற்றில் ஊறவைத்த துணியைத் திரியாக இட்டு தூய சிற்றாமணக்கெண்ணெயை வார்த்து, எரியவிட்டு, காற்று புகுமாறு வழிவிட்டு மேலே ஒரு பானையை மூடி பின்னர் அதில் படிந்த மையை எடுத்து, நறு நெய்யில் குழைத்துக் கண்களுக்கு இடுவார்கள்.

இட்டுக் கெட்டது காது; இடாது கெட்டது கண்.
கேட்டுக் கெட்டது குடி, கேளாது கெட்டது கடன்.
பார்த்துக் கெட்டது பிள்ளை; பாராது கெட்டது பயிர்.
உண்டு கெட்டது வயிறு; உண்ணாது கெட்டது உறவு.

என்னும் பழமொழிகளை நோக்குக.

1. குச்சியைச் சதா காதில் இட்டுக் குடைவதால் காது கெடும்.
2. மையை இடாததால் கண் கெடும்.
3. பிறர் கூறும் கோள் வார்த்தைகளைக் காது கொடுத்துக் கேட்பதனால் குடும்பம் சீரழியும்.
4. அடிக்கடிக் கேளாமையால் கடன் திரும்பி வராது அழியும்.
5. தயவு தாட்சண்யம் பார்த்துக் கண்டிக்காமல் இருந்தால் பிள்ளைகள் திருந்தாது கெடுவர்.
6. அடிக்கடி போய்ப் பார்க்கவில்லையானால் பயிர் கெடும்.
7. அடிக்கடி நிரம்ப உண்பதனால் வயிறு கெடும்.

8. உறவினருடைய வீடுகளில் விசேட காலங்களில் நாம் சென்று கலந்து உண்ணவில்லையானால் உறவினருடைய நட்பு கெட்டுவிடும்.

மையணிந்த மாதர்களின் கரிய விழிகளில் கட்டுண்டு மயங்கி ஆடவர் அழிவர்.

**நிற்கழல்:—**

முருகனுடைய வீரக் கழலை யணிந்துள்ள திருவடிகளை யடைவதற்கு அறியாமல் மாந்தர் கெடுகின்றார்கள். ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடு முருகனுடைய சரணாரவிந்தங்களேயாகும்.

அதனைப் பற்றாதார் பற்றுக்கோடு இன்றி பரதவித்துப் பருவரல் உற்றுக் கெடுவார்கள்.

**இனைப்பிணிக் கணத்தினுக் கிருப்பென :—**

வாதம், ஈளை, காசம், காய்ச்சல் முதலிய நோய்க் கூட்டங்கள் உறைகின்ற வீடு இந்த உடம்பு.

**பொய்க்கடம் :—**

பொய்—நிலையில்லாதது. இன்றிருந்து நாளையழியும் இயல்புடையது.

**இப்பிறப்பறுத்து :—**

உயிர் எண்ணில்லாத காலமாக இறப்பதும் பிறப்பதுமாக நிலைபேறின்றி அலைந்து உலைந்து உழல்கின்றது. பிறவாப் பெற்றியையுடைய பெருமானை அடைந்தாலன்றி பிறவி நோய் நீங்காது.

**நித்த முத்தியைத் தரவேணும் :—**

முத்தி—வீடுபேறு. முத்தி நலமே நிலைபேறுடையது. என்றுமுள்ள அந்த இன்பமயமான முத்தி நலத்தை யருள வல்ல தெய்வம் முருகவேள்.

உயிருக்கு வேண்டிய நலங்கள் மூன்று: (1) இகநலம் (2) பரநலம் (3) முத்தி நலம். இந்த மூன்றையும், தன்னை வழிபடும் அடியார்கட்கு வழங்கும்பொருட்டு எந்தை கந்தவேள் மூன்று சக்திகளையுடையவாக விளங்குகின்றார்.

இகநலம் வழங்கும் பொருட்டு இம்மண்ணுலகில் அவதரித்த வள்ளியாகிய இச்சாசக்தியையும், பரநலந் தரும் பொருட்டு சுவர்க்கத்தில் அவதரித்த தெய்வயானையாகிய கிரியாசக்தியையும், வீட்டு நலத்தினை வழங்கும் பொருட்டு வேலாகிய ஞானசக்தியையும் எம்பெருமான் தன்பால் அமைத்திருக்கின்றான்.

"இகமொடு பரமும் வீடும் ஏத்தினர்க்கு உலப்புறாமல்
அகனமர் அருளால் ஈயும் அறுமுகத்தவற்கு" —கந்தபுராணம்.

**பணைக்கரச் சினத்திபத்தன் :—**

யானையின் துதிக்கை பனைபோல் நீண்டும் பருத்தும் இருக்கும்.

''பனைக்கை மும்மத வேழமுரித்தவன்'' —அப்பர்.

பணைக்கை முக படக்கரட மதத்தவள —வேல் வகுப்பு.

கசக் கடவுள்'' —வேல் வகுப்பு.

வெள்ளை யானைக்கு இறைவன் இந்திரன்.

**இபத்தனைத் துரத்தரக்கன் :—**

இந்திரனைப் போரில் துரத்தித் துரத்தித் துன்புறுத்தியவன் சூரபன்மன்.

**பயத்தினில் பயப்படப் பொரும் வேலா :—**

பயம்—நீர் சூரபன்மன் முருகவேளுக்கு அஞ்சி முடிவில் கடல் நீரில் ஒளிந்தான். எமபெருமான் வேலை ஏவி கடல் நீரை வற்றச் செய்து அவனுடைய வலிமையை அடக்கியருளினார்.

**பருப்பதச் செருக்கறத் துகைக்குழுட் பதத்தினைப் படைத்த குக்குடம் :—**

குக்குடம்—கோழி; ஆண்கோழி சேவல் எனப்படும். இதற்குக் காலே ஆயுதம். காலால்போர் புரியும் அதனால்காலாயுதம் எனப்படும் வீரவுணர்வுள்ளது சேவல். சேவல் போர் கண்டு மகிழ்பவர் இன்றும் உளர்.

வாளகிரியைத் தனது தாளிலிடியப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக்காரனும்'' —வேளைக்காரன் வகுப்பு.

இறுமாந்து நிற்கின்ற மலைகளைச் சேவல் தன் முள் போன்ற கால்களால் இடித்துத் துகள்படுத்துமாம். அத்துணை வீரமும் வலிமையும் படைத்தது சேவல்.

**திருப்புரப் புறத்தியல் திருத்தகுத்துநித்திலம் :—**

திருபுரம் புறத்து இயல் திரு தகு துநித்திலம்.

நித்திலம்—முத்து; து—தூய்மை.

சிறந்த ஊர்ப்புறங்களில் உள்ள வயல்களில் அழகும் தகுதியும் தூய்மையுமுடைய முத்துக்கள் விளங்குகின்றன. இத்தகைய வளமையான ஊர்கள் சூழ்ந்த மலை திருத்தணி.

## கருத்துரை

திருத்தணி மேவும் வேலவரே! நித்திய முத்தியைத் தந்தருள்வீர்

## 63

பருத்தபற் சிரத்தினைக் குருத்திறற் கரத்தினைப்
 பரித்தவப் பதத்தினைப் பரிவோடே
படைத்தபொய்க் குடத்தினைப் பழிப்பவத் திடத்தினைப்
 பசிக்குடற் கடத்தினைப் பயமேவும்

பெருத்தபித் துருத்தனைக் கிருத்திமத் துருத்தியைப்
 பிணித்தமுக் குறத்தொடைப் புலனாலும்
பிணித்தவிப்பிணிப்பையைப்பொறுத்தமிழ்ப்பிறப்பறக்
 குறிக்கருத் தெனக்களித் தருள்வாயே

கருத்திலுற் றுரைத்தபத் தரைத்தொறுத் திருக்கரைக்
 கழித்தமெய்ப் பதத்தில்வைத் திடுவீரா
கதித்தநற் றினைப்புனக் கதித்தநற் குறத்தியைக்
 கதித்தநற் றிருப்புயத் தணைவோனே

செருத்தெறுத் தெதிர்த்தமுப் புரத்துரத் தரக்கரைச்
 சிரித்தெரித் தநித்தர்பொற் குமரேசா
சிறப்புறப் பிரித்தறத் திறத்தமிழ்க் குயர்த்திசைச்
 சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே.

### பதவுரை

கருத்தில் உற்று = தங்கள் கருத்தில் வைத்து, உரைத்த பத்தரை = தேவரீரைப் புகழ்ந்த அடியார்களை, தொறு திருக்கரை கழித்த = நிரம்ப வஞ்சகமுடையவர்களை ஒதுக்கித் தவிர்கின்ற, மெய் பதத்தில் வைத்திடு வீரா = அழியாத திருவடியில் சேர்த்துக் கொள்ளும் வீர மூர்த்தியே! கதித்த நல் தினை புன = மிகுந்த நல்ல தினைப்புனத்தில், கதித்த நல் குறத்தியை = இருந்த நற்குணவதியாகிய வள்ளியம்மையை, கதித்த நல் திரு புயத்து அணைவோனே = உயர்ந்த நல்ல திருப்புயத்தில் தழுவியவரே! செரு = போரில், தெறித்து எதிர்த்த = குவிந்து வந்து எதிர்த்த, மு புரத்து = மூன்று புரத்தில் வாழ்ந்த, உரத்து அரக்கரை = வலிய அரக்கர்களை, சிரித்து எரித்த = புன்னகை புரிந்து எரித்து நீறாக்கிய, நித்தர் = என்றும் உள்ள சிவபெருமானுடைய, பொன் குமர ஈசா = அழகிய திருக்குமாரராகிய தலைவரே, சிறப்பு உற = சிறப்பு ஏற்படும்படி, பிரித்து = தனிநின்று மேம்பட்டு, அற திற = அறநெறியை இனிது கூறும், தமிழ்க்கு உயர் திசை = தமிழ் மொழியின் வடதிசை எல்லையில், சிறப்பு உடை = சிறப்பைப் பெற்றுத் திகழும், திருத்தணி பெருமாளே = திருத்தணித்

தலத்தில் வாழும் பெருமையிற் சிறந்தவரே! பருத்த பல் சிரத்தினை = பருமையுடைய பல்லுடன் கூடிய தலையையும், குருநிறல் கரத்தினை = நிறமும் வலிமையும் கொண்ட கைகளையும், பரித்த அ பதத்தினை = உடம்பைத் தாங்குகின்ற அந்த கால்களையும், பரிவோடே படைத்த = அன்புடன் கொண்ட, பொய்குடத்தினை = பொய்யான குடம் போன்ற உடலை, பழிபவத்து இடத்தினை = பழிக்கும் பாவத்துக்கும் இடமாகிய உடலை, பசி குடல் கடத்தினை = பசிக்கு இடமாகிய குடலுடன் கூடிய உடலை, பயம் மேவும் பெருத்த பித்து உரு தனை = அச்சத்துடன் கூடிய பெரிய பித்த உருவத்தை, கிருத்திம துருத்தியை = தோலால் ஆகிய உலை ஊது கருவியை, பிணித்த மு கு (ற்) றத் தொடு = கட்டுப்பட்ட காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றத்துடன், ஐ புலனும் = சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களாலும், பிணித்த இப் பிணிப்பையை = கட்டுப்பட்ட இந்த நோய்ப்பையை, பொறுத்து அமிழ் பிறப்பு அற = தாங்குவதும் ஆழ்த்துவதுமான பிறப்பை ஒழிக்கும், குறி கருத்து எனக்கு அளித்து அருள்வாயே = குறிப்பைக்கொண்ட கருத்தினை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

தங்கள் உள்ளத்தில் வைத்துப் புகழ்கின்ற அடியார்களை நிரம்ப வஞ்சனை யுடையவர்களை ஒதுக்கித் தள்ளுகின்ற நிலை பெற்ற திருவடியில் சேர்த்துக்கொள்ளும் வீரமூர்த்தியே! தினைப்பயிர் மிகுந்த நல்ல புனத்தில் வாழ்ந்த நற்குணமிக்க வள்ளிநாயகியை உயர்ந்த நல்ல திருப்புயத்தில் தழுவிக் கொண்டவரே! போரில் குவிந்து வந்து எதிர்த்த முப்புரத்து வலிய அரக்கர்களைச் சிரித்து எரித்த அழிவில்லாத சிவமூர்த்தியின் அழகிய திருக்குமாரரே! தனி நின்று சிறப்புற்று அறநெறி கூறும் தமிழ் மொழியின் வடக்கு எல்லையில் சிறப்புடன் திகழும் திருத்தணி மலையின் மீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! பருத்த பல்லுடன் கூடிய தலையையும், நிறமும்வலிமையும் படைத்த கரங்களையும், தாங்குகின்ற கால்களையும் அன்புடன் படைத்த பொய்மையான குடம் போன்ற உடலை, பழிக்கும் பாவத்துக்கும் இடமாய உடலை, பசிக்கு இருப்பிடமாகிய குடலுடன் கூடிய உடலை, அச்சத்துடன் கூடிய பெரிய பித்த உருவத்தை, தோலாலாய உலை ஊதுங் கருவியை, பொருத்தப்பட்ட காமம், கோபம், மயக்கம் என்ற முக்குற்றங்களோடும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களோடும் கட்டுப்பட்ட இந்த நோய்ப் பையைத் தாங்குவதும் துன்பத்தில் ஆழ்த்துவதுமான பிறப்பை ஒழிக்கும் நோக்கத்தைக் கொண்ட கருத்தினை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் நான்கு அடிகளில் இந்த உடம்பின் சிறுமையை எடுத்துக் கூறுகின்றார்.

**பருத்த பிற்சிரம் :—**

பெரிய பற்களுடன் கூடியதலை. இந்த உடம்புக்குமுக்கிய மானது சிரம். அதனால் அதனை முதலிற் கூறினார்.

**குருத்திறற் கரம் :—**

குரு—நிறம்; திறம்—வலிமை; நிறமும் வலிமையும் பொருந்திய கை.

**பரித்தவப் பதத்தினை :—**

பரித்தல்—தாங்குதல். இந்த உடம்பைத் தாங்கி நிற்பது கால்.

**பொய்க்குடம் :—**

பொய் என்பதற்கு இரண்டு பொருட்கள் உண்டு: 1. இல்லாதது—நடவாதது பொய்; 2. நிலைபேறு இல்லாதது பொய்

பொய்யுலகம், பொய்யுடம்பு என்ற இடங்களில் உலகமும் உடம்பும் இல்லாதன அல்ல; இருந்து மறைந்து ஒழிவன; ஆதலால் இந்த உடம்பை பொய்க்குடம் என்றார். குடம் மண்ணால் ஆனது. உடம்பும் மண்ணால் ஆனது.

> "வாய்த்த குயவனார்பண்ணுபாண்டம்—இது
> வறகோட்டுக் காகாது என்றுடுபாம்பே"
> 'நந்தவனத்திலோ ராண்டி—அவன்
> நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
> கொண்டு வந்தானொரு தோண்டி—அதைக்
> கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி."

என்று சித்தர்கள் பாடுகின்றார்கள்.

குடம் உடையுந் தன்மையது. அதுபோல் உடம்பும் ஒரு நாள் அழியுந் தன்மையது. குடத்தினும் இழிந்தது உடம்பு. குடம் உடைந்தால் அந்த ஓடு வறுக்க உதவும். உடம்பு அதற்கும் உதவாதது.

**பழி பவத்திடத்தினை :—**

பழி பவத்து இடத்தினை; பழிக்கும் பாவத்துக்கும் உறைவிடமானது இந்த உடம்பு. பழி இப்பிறப்பிலும் பாவம் மறு பிறப்பிலும் வரக்கூடியவை.

**பசி குடற் கடம் :—**

பசிக்கு இருப்பிடமாவது குடல். "குடல் பசிக்கு அழுகின்றது. கொண்டை பூவுக்கு அழுகின்றது" என்பது பழமொழி

எல்லா நோய்களும் சிலரைச் சில காலத்தில் பற்றி விலகி யொழியுந் தன்மையன பசி நோய் மட்டும் எல்லா உயிர்களை யும் எக்காலத்தும் வாட்டுந் தன்மையது. அதனால் தான் பசிக் குதவும் அறஞ் சிறந்தது என்று ஆன்றோர் கூறுவர்

**பயமேவும் பருத்த பித்துருத்தனை :—**

பயம்—அச்சம்; பருத்த பித்த உரு. அச்சத்தைத் தரக் கூடிய பெரிய பித்தம் நிறைந்த வடிவம்.

**கிருந்திமத் துருத்தியை :—**

தோலால் செய்த துருத்தி. பிராணவாயுவால் சதா இயங் குவது இந்த உடம்பு.

**முக் குறத்தொடைப் புலனும் :—**

மு குற்றத்தொடு ஐ புலன் காமம், வெகுளி, மயக்கம் இந்த மூன்றும் உயிர்க்குள்ள குற்றங்கள்.

> காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றன்
> நாமம்,கெடக் கெடும் நோய்; —திருக்குறள்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் புலன்கள்

**பிறப்பறக் குறிக்கருத் தெனக்களித் தருள்வாயே :—**

பிறவித் துன்பம் தவிர்க்குங் குறியைக் கொண்டகருத்தை அடியேனுக்குத் தந்து அருள் புரிய வேணும்.

பிறவியாகிய துயர் பிறப்பற்ற பெருமானாகிய முருகக் கடவுளால்தான் நீங்கும்.

**கருத்திலுற்றுரைத்தபத்தரை...பதத்தில் வைத்திடும்வீரா :—**

கருத்தில் வைத்து முருகனைப் புகழ்ந்து துதி செய்கின்ற அடியார்களை, அப்பரமபதிதமது திருவடியில் சேர்த்து பேரின் பத்தை வழங்கியருளுவான்.

வஞ்சகர்களை அப்பாதம் ஒதுக்கித் தள்ளிவிடும்.

**சிறப்புறப்பிரித் தறத் திறத் தமிழ்க்குயர்த்திசை :—**

தமிழ் தனியே நின்று இயங்குந் தன்மையது. அறநெறி களைக் கூறும் சிறப்புடையது. இத்தகு சிறந்த தமிழ் வழங்கும் நாட்டின் வடக்கு எல்லையாகத் திகழ்வது திருத்தணி மலை.

## கருத்துரை

*திருத்தணிநாயகா! பிறப்புற அருள் புரிவாய்*

## 64

எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் தனிலோயா
எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் பவமாற
உனைப்பல நாளும் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குளிமேவி
உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணானுந் தொழுவேனோ
வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேள்கொன் றவனீயே
விளப்பென மேலென் றிடக்கய னாரும்
விருப்புற வேதம் புகல்வோனே
சினத்தொடு சூரன் தனைக்கொடு வேலின்
சிரத்தினை மாறும் முருகோனே
தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமாளே.

### பதவுரை

*வினை திறமோடு* = தொழிலில் திறமையுடன், *அன்று எதிர்த்திடும் வீரன்* = அந்நாளில் எதிர்த்து அம்புகள் எய்த வீரனாகிய மன்மதன், *விழ* = வெந்து விழும்படி, *கொடுவேள் கொன்றவன்* = கொடிய மன்மதனை எரித்த சிவபெருமான், *நீயே விளப்பு என* = "முருகா! நீ பிரணவப் பொருளைக் கூறுவாய்" என்று கேட்க, *மேல் என்று இடக்கு அயனாரும் விருப்புற* = தான் மேலானவன் என்று முரண்பட்ட பிரமதேவனும் விரும்பி மகிழ, *வேதம் புகல்வோனே* = வேதப் பொருளை உபதேசித்தவரே! *சினத்தொடு கொடுவேலின்* = கோபத்துடன் உக்ரமான வேலைக்கொண்டு, *சூரன் தனை சிரத்தினை மாறும்* = சூரபன்மனுடைய தலையினைத் தள்ளி ஒதுக்கிய, *முருகோனே* = முருகக் கடவுளே! *தினை புனமேவும்* = தினைப்புனத்தில் வசித்த, *குற கொடியோடும்* = வள்ளியம்மையுடன், *திருத்தணி மேவும்* = திருத்தணிகைமலைமீது எழுந்தருளியுள்ள, *பெருமாளே* = பெருமையின் மிகுந்தவரே! *எனக்கு என* = எனக்கு என்றே, *யாவும் படைத்திட* = எல்லாம் சேகரிக்க வேண்டி, *நாளும் இளைப்பொடு* = நாள் தோறும் இளைப்பு உண்டாகும்படி உழைத்து, *காலந்தனில் ஓயா* = காலக்கணக்கில் ஓய்வு இல்லாமல், *எடுத்திடு காயம் தனை கொடு* = எடுத்துக்

கொள்கின்ற உடம்புகளைக்கொண்டு, மாயும்=பின்னர் இறந்துபோம், இலச்சை இலாது=வெட்கம் அழிய, என் பவம் மாற=என் பிறப்பு அற, உனை பலநாளும்=தேவரீரைப் பலநாளும், திருப்புகழாலும்= திருப்புகழ் ஓதி, உரைத்திடுவார் தங்கு உளி மேவி=புகழ்கின்ற அடியார்கள் தங்குகின்ற இடத்துக்குச் சென்று, உணர்த்திய=அந்த அடியார்கள் உணர்த்திய, போதம் தனை பிரியாது=ஞானவாசகங் களைக் கடைப்பிடித்து அதினின்றும் விலகாமல், ஒண் பொல சரண்= ஒளிவீசும் அழகிய திருவடியை, நாஜும் தொழுவேனோ=அடியேன் தொழும் பாக்கியம் உண்டாகுமோ?

## பொழிப்புரை

தொழிலில் திறமையுடன் அன்று எதிர்த்த வீரனாகிய மன்மதன் வெந்து விழும்படி அக் கொடிய மதனனை எரித்த சிவபெருமான் "குழந்தாய் பிரணவப் பொருளை விளம்புவாய்" என்று கூற, தன்னைப் பெரியவனாகக் கருதி முரண்பட்ட பிரம தேவனும் விரும்பி மகிழ வேதப் பொருளை உரைத்தவனே! சினத்தோடு சூரனை வேல் கொண்டு தலையைத் துணித்த முருகக் கடவுளே! தினைப்புனத்தில் வாழும் குறமகளாகிய வள்ளியம்மையுடன் திருத்தணிகையில் வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! எனக்கென்று எல்லாப் பொருள்களையும் தேடி நாள்தோறும் இளைப்பு உண்டாகுமாறு நெடுங்காலமாக ஓய்வு இன்றி பிறப்பை எடுத்தும் உடனே இறந்தும் இந்த வெட்கம் இல்லாத என் பிறப்பு அறுமாறு தேவரீரைப் பல நாளும் திருப்புகழ் பாடிப் பரவுகின்ற அடியார்கள் உறைகின்ற இடம் போய் அங்கு அவர்கள் உணர்த்தும் ஞான போதனைகளைக் கேட்டு, அந்நெறியினின்று நழுவாது ஒளி வீசும் திருவடியை அடியேன் தொழும் பாக்கியம் உண்டாகுமோ?

## விரிவுரை

**எனக்கென யாவும் படைத்திட :—**

தனக்கென்று பல பொருள்கள் இருக்க வேண்டும் என்று கருதி, அவைகளை யடையும் பொருட்டு சதா பாடுபடுவது.

**நாளும் இளைப்பொடு :—**

சதா உழைத்து உழைத்து அதனால உடம்பும் உள்ளமும் இளைத்து இடர்ப்படுவார்கள்.

**காலந்தனி லோயா எடுத்திடுகாயம் தனைக்கொடு மாயும் இலச்சை யிலாது :—**

எண்ணில்லாத காலமாக ஆன்மாக்கள் இறப்பதும் பிறப்பதுமாகவே இருக்கின்றன. இவ்வாறு மாறிமாறிப் பிறந்து இறந்து வருவது பெரிதும் வெட்கப்படக் கூடியது. ஒரு

வீட்டுக்கு அடிக்கடிச் செல்ல வெட்கப்படுவது போல் இந்தப் பூமியில் ஓயாது பிறப்பதற்கு வெட்கப்பட வேண்டாமா?

உனைபல நாளும் திருப்புகழாலும் உரைத்திடுவார் தங்குளி மேவி:—

முருகனை சதா திருப்புகழ் பாடித் துதி செய்யும் அடியார்கள் இருக்கின்ற இடத்திற்குச் சென்று, அவர்களுடன் பழகினால் பிறவிப் பிணி கெடும்; ஆதலால் அடியார் திருக்கூட்டமே ஆவியீடேற்றத்துக்குச் சிறந்த—எளிய—நெறியாகும்.

### கருத்துரை

திருத்தணிமேவுந்திருமுருகா! அடியாருடன் கூடி உனைத் தொழுது பிறவியற அருள் புரிவாய்.

## 65

பெருக்கவு பாயம் கருத்துடை யோர்தம்
ப்ரபுத்தன பாரங் களிலேசம்
ப்ரமத்துட னுள்ளம் ப்ரமித்திருள் கூரும்
ப்ரியக்கட லூடுந் தணியாத

கருக்கட லூடுங் கதற்றுமநேகங்
கலைக்கட லூடுஞ் சுழலாதே
கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசுங்
கழற் புணை நீதந் தருள்வாயே

தருக்கிய வேதன் சிறைப்பட நாளுஞ்
சதுர்த்தச லோகங் களும்வாழச்
சமுத்திர மேழுங் குலக்கிரி யேழுஞ்
சளப்பட மாவுந் தனிவீழத்

திருக்கையில் வேலொன் றெடுத்தமராடுஞ்
செருக்கும யூரந் தனில்வாழ்வே
சிறப்பொடு ஞானந் தமிழ்த்ரய நீடுந்
திருத்தணி மேவும் பெருமாளே.

### பதவுரை

தருக்கிய வேதன் சிறைப்பட=நான் என்று செருக்குடன் வந்த பிரமதேவன் சிறைப்பட்டுத் துன்புறவும், சதுர்தச லோகங்களும் நாளும் வாழ=பதினான்கு உலகங்களும் என்றும் வாழ்வுறவும், சமுத்திரம் ஏழும்=ஏழு கடல்களும், குலகிரி ஏழும் சளபட=சிறந்த

ஏழுமலைகளும் துன்பப்படவும், மாவும் தனி வீழ=மாமரமானது தனித்து அழிந்து விழவும், வேல் ஒன்று=ஒப்பற்ற வேலாயுதத்தை, திருக்கையில் எடுத்து அமர் ஆடும்=திருக்கரத்தில் எடுத்துப் போர் புரிந்த, செருக்கு மயூரந் தனில் வாழ்வே=மகிழ்ச்சியுள்ள மயிலின் மீது ஏறியருளும் செல்வமே! சிறப்பொடு ஞானம்=சிறப்பும் ஞானமும், தமிழ்த்ரயம் நீடும்=முத்தமிழும் பெருகி விளங்கும், திருத்தணிமேவு=திருத்தணிகை மலைமீது வீற்றிருக்கும் பெருமை மிகுந்தவரே! பெருக்க உபாயம்=விரிவான தந்திரங்களில், கருத்து உடையோர் தம்=மனம் உடைய பொதுமாதர்களின், ப்ரபு தனபாரங்களிலே=பெரிய தனபாரங்களில், சம்ப்ரமத்துடன்=சிறப்புடன், நாளும் ப்ரமித்து=நாள்தோறும் மயக்கமுற்று, இருள் கூரும்=அறியாமையாகிய இருள் மிகுந்த, ப்ரிய கடலூடும்=ஆசைக் கடலுக்குள்ளும், தணியாத கருகடலூடும்=ஓய்வு இல்லாத பிறவிக் கடலுக்குள்ளும், கதற்றும் அநேக கலைகடலூடும்=கதறிப்பேசுகின்ற நானாவகையான கல்விக் கடலுக்குள்ளும், சுழலாதே=அடியேன் சுழற்சியடையாமல், கடப்ப அலர் சேர்=கடப்பமலர் சேர்ந்துள்ள, கிண்கிணி ப்ரபை வீசும்=கிண்கிணியின் ஒளிவீசுகின்ற, கழல்புணை நீ தந்து அருள்வாயே=தேவரீருடைய திருவடியாகிய தெப்பத்தைத் தந்து அருள்புரிவீராக.

## பொழிப்புரை

"நான் பெரியவன்" என்று செருக்குற்ற பிரமதேவன் சிறைக்குள் சேரவும், பதினான்கு உலகங்களும் என்றும் வாழவும், ஏழு கடல்களும் ஏழு மலைகளும் துன்பபடவும், மாமரம் முறிந்து விழவும் திருக்கரத்தில் வேலாயுதத்தை எடுத்துப் போராடியவரே! மகிழ்ச்சி மிகுந்த மயிலின் மீது ஏறி அருள்கின்ற செல்வரே! சிறப்பும் ஞானமும், முத்தமிழும் வளர்ந்து ஓங்குகின்ற திருத்தணிகை மலைமீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! பெரிய தந்திரங்களில் கருத்துடைய பொதுமகளிரின் சிறந்த தனங்களில் சிறப்புடன்நாள்தோறும் நான் மயங்கித் திகைத்து அறியாமையாகிய இருள் மிகுந்த ஆசைக் கடலுக்குள்ளும், இடையறாது வருகின்ற பிறவிக் கடலுக்குள்ளும், கதறிப் படிக்கின்ற கலைக் கடலுக்குள்ளும், அடியேன் சுழற்சியடையாமல், கடப்பமலர் அணிந்துள்ள கிண்கிணியின ஒளி வீசும் திருவடியாகிய தெப்பத்தைத் தந்து தேவரீர் திருவருள் புரிவீராக.

## விரிவுரை

**பெருக்க வுபாயங் கருத்துடையோர் :—**

தம்பால் வருகின்ற ஆடவர்களிடம் உள்ள பொருளை எப்படி எப்படிப் பறிக்க வேண்டும் என்று சதா அதற்குரிய தந்திரங்களான வழிவகைகளை எண்ணுகிறவர்கள்.

பொருள் முழுவதும்பறித்தபின்" அவர்களைஎப்படி விரட்டுவது?" என்றும் தந்திரம் புரிவார்கள். 'நாவார வேண்டும் விதஞ் சொல்லுவார் உனை நான் பிரிந்தால் சாவேன் என்றே யிருந் தொக்க உண்பார்கள் கைதான் வரண்டால் போய் வாரும் என்று நடுதலைக்கே குட்டும் பூவையருக்கு ஈவார் தலைவிதியோ? இறைவா கச்சி யேகம்பனே", என்பார் பட்டினத்தடிகள்.

**இருள்கூரும் ப்ரியக்கடல் :—**

மாதர்கள்பால் மயங்கி அறியாமையால் அவர்கள்மீது கடல் போன்ற ஆசை வைப்பர். அதனைக் காமக் கடல் என்பர். அது மிகவும் வெப்பமானது. அதனைக் கடப்பது மிகவும் கடினம். இறைவன் திருவருள் கைவரப் பெற்ற ஞானிகளே க்டப்பர்.

கடத்திற் குறத்திப் பிரான் அருளால் கலங்காத சித்தத்
திடத்திற் புணையென யான்கடந்தேன் சித்ரமாதரலகுற்
படத்தில் கழுத்திற் பழுத்த செவ்வாயிற் பணையிலுந்தித்
தடத்தில் தனத்திற் கிடக்கும் வெங்காம சமுத்திரமே.

—கந்தரலங்காரம்.

**தணியாத கருக்கடல் :—**

கரு— கருவில் உயிர்கள் வாழ்வதைக் குறிக்கின்றது.

பிறவிப் பெருங்கடல். பிறவி இடையறுது உயிர்கட்கு வந்து கொண்டே யிருக்கின்றது. பிறவித் துன்பமே பெருந் துன்பம். எண்ணில்லாத காலமாக எண்ணில்லாத பிறவிகளை எடுத்து உயிர்கள் ஏங்குகின்றன. இத் துயர் இறையருளாலேயே நீங்கற்பாலது.

**கதற்றுமநேகங் கலைக்கடல் :—**

பல நூல்களைப் படித்து, கல்வியின் பயனைப் பெருது, கற்ற கல்வியைக் கொண்டு ஓ என்று கதறி வாதிடடுக் கொண்டு உழலுவார்கள் பலர்.

**கழற்புணை :—**

"கலையே பதறிக் கதறித் தலையூ
டலைய படுமா றதுவாய் விடவோ,' —கந்தரநுபூதி.

"கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்" —திருவாசகம்.

ஆசைக்கடல், பிறவிக்கடல், கல்விக்கடல் இந்த மூன்று கடல்களையுங் கடப்பதற்கு இறைவன் திருவடி தெப்பமாக நின்று உதவுகின்றது.

"உறவு முறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும் உறுபுணையும்"
—சீர்பாத வகுப்பு.

**தருக்கிய வேதன் சிறைப்பட :—**

பிரமதேவன் ஒருசமயம் கயிலை சென்றபோது, "நான் படைப்புத் தலைவன்" என்று இறுமாந்து சென்றான். முருகவேள் அவனுடைய இறுமாப்பு நீங்குமாறு பிரணவப் பொருளை வினவி, அதனைச் சொல்லமாட்டாது அவன் திகைக்க; அவனைச் சிறையில் அடைத்து தருக்ககற்றி அருள் புரிந்தனர்.

**குலக்கிரி யேழும் :—**

சூரபன்மன் தனது வீரமகேந்திர நகருக்கு அரணாக எண் திசைகளில் எட்டு மலைகளை நிறுவினான். அதில் வடதிசையில் உள்ள இலங்கையில் ஏமகூட மலையில் சுவாமி தங்கியருளினார். அதனால் அந்த இலங்கை மலை நீங்க மற்ற ஏழு மலைகளையும் முருகவேள் கடலில் அழுந்துமாறு அழுத்தி விட்டார்.

**மாவுந்தனி வீழ :—**

இறுதியில் சூரபன்மன் உறுதி குலைந்து கடலில் இரும்பு மயமான மாமரமாகக் கடலின் நடுவே தோன்றி உலகை இடர்ப்படுத்தினான்.

**சிறப்பொடு ஞானத் தமிழ்த்ரய நீடும் :—**

திருத்தணிகையில் சிறப்பும் ஞானமும் முத்தமிழும் ஓங்கி வளர்ந்து விளங்குகின்றன. உயர்ந்த அரிய திருத்தலம் தணிகை.

"தரையிடங் கொளும் பதிகளில் காஞ்சியந்தலம் போல்
வரையிடங்களில் சிறந்ததித் தணிகை மால்வரையே"

என்று முருகப் பெருமானே கூறியருளினார்.

ஆதலால் மலைகளுக்கெல்லாம் ஒரு மணிமுடியாக விளங்குவது திருத்தணிகை மலை.

## கருத்துரை

திருத்தணிகையில் வாழும் முருகக் கடவுளே! ஆசை, பிறவி, கல்வி என்ற கடல்களைக் கடக்க உனது பாதமாகிய தெப்பத்தைத் தந்தருள்.

## 66

மருக்குல மேவுங் குழற்கனி வாய்வெண்
மதிப்பிள வாகும் நுதலார்தம்
மயக்கினி லேநண் புறப்படு வேனுன்
மலர்க்கழல் பாடும் திறநாடாத்

தருக்கனு தாரந் துணுக்கிலி லோபன்
சமத்தறி யாவன் பிலிமுகன்
தலத்தினி லேவந் துறப்பணி யாதன்
தனக்கினி யார்தஞ் சபைதாராய்

குருக்குல ராஜன் தனக்கொரு தூதன்
குறட்பெல மாயன் நவநீதங்
குறித்தயில் நேயன் திருப்பயில் மார்பன
குணத்ரய நாதன் மருகோனே

திருக்குள நாளும் பலத்திசை மூசும்
சிறப்பது ருஎண் டிசையோடும்
திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகுந்
திருத்தணி மேவும் பெருமாளே.

### பதவுரை

குருகுல ராஜன் தனக்கு = குருகுலத்து மன்னராகிய தருமருக்கு ஒரு தூதன் = ஒப்பற்ற தூதுவராகச் சென்றவரும், குறள் = வாமனரும், பெல மாயன் = வலிமை மிகுந்த மாயவரும், நவநீதம் குறித்து அயில் நேயன் = வெண்ணெயை நாடிச் சென்று உண்ட அன்பரும், திருபயில் மார்பன் = இலக்குமி தேவி வாழ்கின்ற திருமார்பரும், குணத்ரய நாதன் = முக்குணங்கட்குத் தலைவரும் ஆகிய திருமாலின், மருகோனே = திருமருகரே! திரு குளம் = குமாரதீர்த்தம் என்கிற சரவணப் பொய்கை, நாளும் பலதிசை மூசும் = நாள் தோறும் பலதிசைகளிலிருந்து வருகின்ற அடியார்கள் நெருங்கி நீராடுகின்ற, சிறப்பு அது உரு = சிறப்பினைப் பெற்றதும், எண்திசையோடும் = எட்டுத் திசைகளிலும், திரை கடல் சூழும் புவிக்கு உயிர் ஆகும் = அலைகளையுடைய கடல் சூழ்ந்த இப்பூதலத்துக்கு உயிர் நிலைத் தானமுமாகிய, திருத்தணி மேவும் = திருத்தணிகையம்பதியில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! மரு குல மேவும் குழல் = வாசனைக் கூட்டம் பொருந்திய கூந்தலையும், கனிவாய் = கொவ்வைக்கனி போன்ற வாயையும், வெண்மதி பிளவு

ஆகும் நுதலார் தம்=வெண் பிறை மதியைப் பிளந்த பிளவைப் போன்ற நெற்றியையும் உடைய மாதர்களின், மயக்கினிலே=மோக மயக்கத்தினில், நண்பு உறப்படுவேன்=நட்பு கொண்ட அடியேன், உன் மலர் கழல் பாடும் திறம் நாடா=தேவரீரது மலரடியைப் பாடுகின்ற வழிவகையை நாடாத, தருக்கன்=ஆணவம் பிடித்தவன், உதாரம்=கொடைக்குணமும், துணுக்கு இலி=அச்சமும் இல்லாதவன், லோபன்=கஞ்சத்தனம் படைத்தவன், சமத்து அறியா=திறமையில்லாதவன், அன்பு இலி=அன்பு இல்லாதவன், மூகன்=உமது நாமத்தைக் கூறாத ஊமையன், தலத்தினிலே வந்து உற பணியாதன்=உமது திருத்தலங்களில் சென்று உள்ளம் பொருந்தப் பணியாதவன், தனக்கு=இத்தகைய சிறியேனுக்கு, இனியார் தம் சபை தாராய்=தேவரீருக்கு இனியராக விளங்கும் அடியார்களின் கூட்டத்தில் சேரும் பெரும் பேற்றினை அருள்புரிவீராக.

## பொழிப்புரை

குருகுல வேந்தராகிய தருமருக்குத் தூதுவராய்ச் சென்றவரும், மாவலியின்பால் குள்ளமாகச் சென்றவரும், வலிமை மிகுந்த மாயவரும், வெண்ணெயை விரும்பிச் சென்று உண்ட நேசரும், திருமகள் உறைகின்ற திருமார்பினரும், முக்குணத்தின் தலைவரும் ஆகிய நாராயணரது திருமருகரே! நாள் தோறும் பல திசைகளிலிருந்து அடியார்கள் வந்து நெருங்கி நீராடுகின்ற குமார தீர்த்தம் என்ற சரவணப் பொய்கையின் சிறப்புடையதும், எட்டுத் திசைகளிலும் அலைகடல் சூழ்ந்த இப்பூதலத்துக்கு உயிர் நாடியாக விளங்குவதுமாகிய திருத்தணிகை மலை மீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வாசனைக் கூட்டம் நிறைந்த கூந்தலும், கொவ்வைக் கனி போன்ற வாயும், வெண் பிறையின் பிளவு போன்ற நெற்றியுமுடைய மாதர்களின் மயக்கத்திலே விருப்பங்கொண்டவனும் உமது, மலரடியைப் பாடும் வழிவகைகளை நாடாதவனும், ஆணவங் கொண்டவனும், தரும குணமும் அச்சமும் இல்லாதவனும், உலோபியும், திறமையில்லாதவனும், அன்பில்லாதவனும், உமது திருநாமத்தைக் கூறாத ஊமையனும், உமது திருத்தலங்களில் வந்து உள்ளம் பொருந்தப் பணியாதவனுமாகிய அடியேன் உமக்கு இனியராக விளங்கும் அடியார்களின் திருக்கூட்டத்தில் சேரும் பெருவாழ்வைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**மருக்குல மேவும் குழல் :—**

பெண்கள் கூந்தலில் வாசனை நிறைந்த தைலங்கள், நறுமலர்கள் இவைகளைச் சேர்ப்பார்கள். அதனால் அக்கூந்தல் நறுமணங் கமழும்.

**கனிவாய் :—**

கொவ்வைக் கனிபோல் அதரம் சிவந்திருக்கும். அது அழகை அதிகரிக்கச் செய்யும்.

**வெண் மதிப்பிளவாகும் நுதல் :—**

பிறைச் சந்திரனை இரண்டாகப் பிளந்தால், அப்பிளவை எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கும் அம்மாதர்களின் நெற்றி.

**மயக்கினிலே நண்புறப்படுவேன் :—**

அம்மாதர்களின் துன்பமாகிய இன்பத்தில்மனம் வைத்து மயக்கத்திலேயே நாட்டமுற்று மனிதர் உழலுவர். விளக்கில் விழும் விட்டிலைப் போன்றவர்கள்.

**மலர்க்கழல் பாடுந்திற நாடா :—**

இறைவனுடைய திருவடிகளை நினைத்து உள்ளம் உருகி வாயாரப் பாடினால் ஆன்மா ஈடேறும். பாடும் பணியே மேலானது "அளப்பில கீதஞ் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே" என்கின்றார் அப்பரடிகள்.

**தருக்கன் :—**

தருக்கு—நான் என்னும் அகங்காரம்; நான்பேசுகின்றேன்; நான் நடாத்துகின்றேன்; நான் சமர்த்தன் என்று எண்ணித் தலைக் கனம் உற்று உலாவுவோர்

**உதாரந் துணுக்கிலி :—**

உதாரம்—தாராள குணம். துணுக்கு—அச்சம்.

தாராளமாக வறியவர்க்கு வழங்க வேண்டும் செய்யத் தகாத காரியங்களைச் செய்வதில் அச்சம் இருத்தல் வேண்டும்

அஞ்சுவதஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில். —திருவள்ளுவர்.

**லோபன் :—**

லோபகுணம் மிகமிகக் கொடியது ஒரு மனிதனிடம் ஆயிரம் நற்குணங்கள் இருந்து, ஒரு உலோபகுணம் இருப்பின் அந்த ஆயிரம் நற்குணங்களையும் மறைத்து உலோப குணமே வெளிப்பட்டுத் தோன்றி உலகம் பழிக்குமாறு செய்யும். பல தீய குணங்கள் ஒருவன்பால் இருப்பினும், அள்ளி வழங்கும் வள்ளன்மையிருப்பின் அத் தீய குணங்களை யெல்லாம் மறைத்து அவனை உலகம் மதிக்கத் துதிக்கச் செய்யும்.

உளப்பரும் பிணிப்புரு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதலைவப்பு அதனை மாற்றினன். —கம்பர்.

இது இராமரை நோக்கி விஸ்வாமித்திரர் கூறுகின்ற கவி "இராமா! உலோபமாகிய ஒரு தீய குணம் அநேக நற்குணங் களை அழித்துவிடுவதுபோல், தாடகையாகிய ஒருத்தி இவ் வனத்தில் பல வளங்களையும் அழித்துப் பாலைவனமாக்கி விட்டாள்

கர்ணனிடம் தீய குணங்கள் அளவில்லாதவையிருந்தன. அத்தனை தீய குணங்களையும், கொடைக்குணம் மறைத்து, அவனை உலகம் மதிக்குமாறு செய்துவிட்டது.

**சமத்தறியா அன்பிலி :—**

சமத்து—சாமர்த்தியம். சிறிய முதல் வைத்து பெரிய லாபத்தைப் பெற்றவனைப் பார்த்து சாமர்த்தியசாலி என்று உலகம் உரைக்கும் மூலதனமே இல்லாமல் வியாபாரம்செய்து முன்னுக்கு வந்தவனைப் பார்த்தும உலகவர். "ஆ! இவன் பெரிய சமர்த்தன்" என்று வியந்து கூறுவர்.

நாம் இறைவனுடைய திருவடியில் ஒரு உத்தரணிதீர்த்த மும் ஒரு வில்வமும இட்டால் இறைவன் அளவற்ற செல்வ மும் அழிவற்ற நலன்களையும் அருளுவான். இட்டது சிறிய பொருள். பெற்றது பெரிய பொருள். இதுதானே உண்மையில் சாமர்த்தியம்.

இத்தகைய சமர்த்து இல்லாதவன் என்கின்றார். இறைவ னுடைய திருவடியில் இடையறாத அன்பு இருக்க வேண்டும். அன்பு வைத்தால் அருள் பெறலாம்.

**மூகன் :—**

மூகம்—ஊமை; பஜனை புரியும் போதும், விரிவுரை புரியும் இடத்தும் இறைவனுடைய நாமத்தை அடியார்கள் கூறும் போது சிலர் பேசாமல அவனது நாமத்தைச் சொல்லாமல் ஊமைபோல் இருப்பார்கள். அவர்கள் வாக்குபடைத்தபயனைப் பெறாத பாவிகள்.

**உறப்பணியாதன் :—**

உற—மனம் வாக்கு காயம் என்ற மூன்று கரணங்களும் பொருந்த இறைவனைப் பணிதல் வேண்டும் 'பணியாதவன்" என்பது இடைக்குறையாகப் பணியாதன் என வந்தது.

**இனியார்தஞ் சபைதாராய் :—**

அடியார்களது சபையில் சேர்ந்துவிட்டால் முத்தி தானே வந்து கிட்டும். குருட்டுப் பசு மந்தையில் சேர்ந்தால் தானே ஊர் வந்து சேர்ந்துவிடும்.

"தரையினூழ்த்திரை யேழே போலெழு
பிறவி மாக்கட லூடே நாணுறு
சவலை தீர்த்தன தாளே குடியுன் — அடியார்வாழ்

சபையினேற்றியின் ஞானபோதமும்
அருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேறகுழு னேமீ மேவுவ தொருநாளே''
—(நிருதராார்க்கொரு) திருப்புகழ்.

**குருக்குல நாதன் தளக்கொரு தூதன் :—**

குருகுல மன்னவராகிய தருமருக்காக, கண்ணபிரான் கருணையுடன் பரம மூடனாகிய துரியோதனனிடம் தூது சென்றார்.

**குறள் :—**

மாவலியின்பால் மூவடி மண் தானங் கேட்க நெடிய மால் குறிய வாமனனாகச் சென்றார். யாசகங் கேட்பவன் குறுகிவிடுவான் என்ற குறிப்பை இது உணர்த்துகின்றது.

**குணத்ரயநாதன் :—**

சத்துவம், ராஜஸம், தாமசம் என்ற முக்குணங்களுக்கும் அதிபன்.

**திருக்குள நாளும் பலத்திசை மூகம் சிறப்பதுற் :—**

திருத்தணியில் சரவணப் பொய்கை என்று வழங்குகின்ற குமார தீர்த்தத்தில் முழுகியவுடனே எத்தகைய துயர்களும் நீங்கும்.

"எத்துயர்த் திரளும் அத்தினத் தகற்றும்
சரவணப் பொய்கைத் தடம்புனல துளைந்து
மென்மலர்க் குன்றம மீமிசை யிவர்ந்து"
—தணிகையாற்றுப்படை.

எக்காலத்தும் மகா புனிதமாக—இணையில்லாத மகிமையுடையதாக விளங்குகின்ற தீர்த்தம் அக்குமார தீர்த்தம். அதில்முழுகி, மலைமீது மெல்ல ஏறும் அடியார்களது வினைகள் தணியும். வினைகளைத் தணிக்க வல்ல தலம். ஆதலால் தணிகை யெனப்பட்டது.

**திரைக்கடல் சூழும் புவிக்குயிராகும் திருத்தணி :—**

கடல் சூழ்ந்த இப்பூதலத்துக்கு உயிர் நாடியாக விளங்குவது இத் தலம் என்று அருணகிரியார் கூறுகின்றார் அதனால இத் தலத்தின் பெருமை அளவிடற்கரியது. உடம்பு உயிரின்றி இயங்காது உயிரில்லாத உடம்பு ஒன்றுக்கும் பயன்படாது. அதுபோல் இவ்வுலகுக்கு உயிர் திருத்தணியாகும். உலகை உயிர்போல் உய்விக்கின்ற அருமைத் திருத்தலம் தணிகை.

## கருத்துரை

திருமால் மருகரே! திருத்தணி நாயகரே! அடியேனை அடியார் திருக்கூட்டத்தில் சேர்த்து அருள் புரிவீராக.

## 67

வினைக்கின மாகுந் தனத்தினர் வேளம்
பினுக்கெதி ராகும் விழிமாதர்
மிகப்பல மானந் தனிற்புகு தாவெஞ்
சமத்திடை போய்வெந் துயர்மூழ்கிக்

கனத்தவி சாரம் பிறப்படி தோயுங்
கருக்குழி தோறுங் கவிழாதே
கலைப்புல வோர்பண் படைத்திட வோதுங்
கழற்புக ழோதுங் கலைதாராய்

புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே
பொருப்பிரு கூறும் படக்கடல் தானும்
பொருக்கெழ வானும் புகைமூளச்

சினத்தொடு சூரன் கனத்திணி மார்பந்
திறக்கம ராடுந் திறல்வேலா
திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி மேவும் பெருமாளே.

### பதவுரை

புனத்து இடைபோய்=தினைப்புனத்தின் நடுவில் சென்று, வெம் சிலை குறவோர்=வெப்பமாகிய போருக்கு உரிய வில்லைத்தாங்கிய வேடர்களின் மகளாகிய, வஞ்சியை புணர்=கொடி போன்ற வள்ளி நாயகியைத் தழுவுகின்ற வாகு அம்புய=மிக்க அழகிய தோள்களை யுடையவரே! வேளே=உபகாரியே; பொருப்பு இருகூறும் பட= கிரவுஞ்சமலை இரு பிளவாகுமாறும், கடல் தானும் பொருக்கு எழ= சமுத்திரம் வற்றி துகள் படுமாறும், வானும் புகை மூள=விண்ணில் புகை மூளுமாறும், சினத்தொடு=சீற்றத்துடன், கன திணி மார்பம் திறக்க=சூரபன்மனுடைய வலிமையும் திண்மையுமுடைய மார்பு திறந்து அழியுமாறும், அமர் ஆடும் திறல்வேலா=போர்புரிந்த வலிமை மிகுந்த வேலாயுதரே! திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும்= திருப்புகழைப் பண்ணுடன் ஓதுகின்ற எண்ணமுடைய அடியார்கள் கூடுகின்ற, திருத்தணி மேவும்=திருத்தணியம்பதியில் வாழுகின்ற, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! வினைக்கு இனம் ஆகும்= தீவினைகட்கு இனமாக நிற்கும், தனத்தினர்=தனங்களையுடையவர், வேள் அம்பினுக்கு எதிர் ஆகும் விழி மாதர்=மன்மதனுடைய

கணைக்கு இணையாக நின்று துன்பத்தைத்தரும் விழிகளையுடைய பொது மாதர்களின், மிக பலமானந்தனில் புகுதா = மிகுதியான பல வகைப்பட்ட அவமானச் செயல்களில் புகுந்து, வெம் சமத்திடை போய் = அவர்களுடைய சாகசப் போரில் அகப்பட்டு, வெம் துயர் மூழ்கி = வெம்மையான துன்பத்துச்குள் முழுகி, கனத்த விசாரம் = பெரிய கவலை தரும், பிறப்பு அடி தோயும் = பிறவிக்கு அடி நிலையாகிய, கரு குழி தோறும் கவிழாதே = கருவாகிய குழிதோறும் அடியேன் அழுந்தாமல், கலை புலவோர் = கலை கற்ற புலவர், பண் படைத்திட ஓதும் = இசையமையுமாறு பாடுகின்ற, கழல் புகழ் ஓதும் கலை தாராய் = வீரக்கழல் அணிந்த திருவடியின் புகழை ஓதும் திறத்தினை அடியேனுக்கு அருள் புரிவீர்.

## பொழிப்புரை

திணைப்புனத்தினிடை சென்று, வெப்பமான வில்லையேந்திய வேடர்களின் புதல்வியாகிய வள்ளியம்மையைத் தழுவிய அழகிய தோள்களையுடைய உபகாரியே! கிரவுஞ்சமலை இரண்டு பிளவாகுமாறும், சமுத்திரம் வற்றித் துகள படுமாறும், வானத்திலே புகை எழுமாறும், கோபத்துடன் வந்த சூரபன்மனுடைய மிகுந்த வலிமையுள்ள மார்பு பிளக்குமாறும் போர் புரிந்த ஆற்றல் படைத்த வேலாயுதரே! திருப்புகழை ஓதுகின்ற அடியார்கள். கூடுகின்ற திருத்தணிமலை மீது எழுந்தருளிய பெருமிதம உடையவரே! வினைகட்கு இனமாக நிற்குந் தனங்களையுடையவர்களும், மன்மதனுடைய பாணத்திற்கு நிகரான கண்களையுடையவர்களும் ஆகிய பொது மகளிரது, மிகுந்த பலவகையான அவமானச் செயல்களில் புகுந்து, அம்மாதருடைய கொடிய சாகசத்துக்குள் சென்று வெய்ய துன்பத்துக்குள் முழுகி, மிகுந்த துயரத்தைத் தரும் பிறவியின் அடிப்படையான கருவின் குழிதோறும் அழுந்தியுழலாதபடி, கலைகள் கற்ற புலவர்கள் இசையுடன் ஓதுகின்ற உமது சழலடியின் புகழை அடியேன் ஓதுகின்ற ஞானத்தைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**வினைக்கினமாகும் தனத்தினர் :—**

பலவினைகட்கு உறவாக நிற்பது பொதுமகளிரது தனங்கள். தனத்தை விரும்பி தனத்தைத் தேடும் பொருட்டு, பலப் பல தீமைகளை மாந்தர் புரிகின்றார்கள்.

**மிகப்பல மானந்தனில் புகுதா :—**

பலப்பல அவமானத்தைத்தரும் செயல்களில் மாந்தர் ஈடுபட்டு கேடுறுகின்றார்கள். பொதுமகளிர் உறவால் இம்மையில் பழியும், மறுமையில் பாவமும் எய்தும்.

**வெஞ்சமத்திடை போய் வெந்துயர் மூழ்கி :—**

தான் விரும்பிய ஒருத்தியை மற்றொருவன் விரும்பி வருவான். அதனால் அவனுடன் பலத்த சண்டை நிகழும்; மண்டையுடையும். பொருளும் போய் ஊரவர் கூறும் வசை மொழியும் பலவகையான பிணிகளும் மூடி வருந்துவார்கள்.

**களத்த விசாரம் பிறப்படி தோயும் கருக்குழிதோறும் கவிழாதே :—**

மோக விசாரத்தால் பெரிய துயரத்தையடைந்து, அவ் வினைக் கீடாக கருக்குழி தோறும் சென்று பலவேறு பிறவி யெடுத்து ஆன்மாக்கள் அல்லலபடும்.

**கலைப்புலவோர் பண் படைத்திட வோதும் கழற்புகழோதும் :—**

பல கலைகளைக் கற்ற புலவர்கள், இன்னிசையுடன் முருக னுடைய திருவடியைப் புகழ்ந்து பாடுவார்கள். அவ்வண் ணம் புலவர்கள் புகழ்கின்ற முருகவேளின் திருவடியைப் புகழ்ந்து பாடுகின்ற கலையே சிறந்த கலை. அதனைத் தனக்கு அருளுமாறு அடிகளார் இத்திருப்புகழில் முருகனை வேண்டுகிறார்.

**புனத்திடை போய் :—**

புனம் என்பது ஞானப்பயிர்.

**வஞ்சி :—**

வள்ளியென்பது பக்குவப்பட்ட ஆன்மா. ஞானப் பயிர் விளைத்த பக்குவமுற்ற ஆன்மாவை முருகன் தன்னுடன் இரண்டறக் கலக்குமாறு கருணைபுரிகிறான். ஒவ்வொரு ஆன் மாவும் வள்ளியைப் போல முருகனையடைந்து அப்பரம நாயகனுடன் கலந்து இன்புறுதல வேண்டும்.

**பொருப்பிரு கூறும் பட :—**

கிரவுஞ்சமலை இருபிளவாக முருகன் வேலை விடுத்தருளி னான். அது ஆன்மாக்களின் சஞ்சிதவினைக் கூட்டம். வினைக் கூட்டம் பொடிபட வேலை விடுத்தனன்.

**கடல் தானும் பொருக்கெழ :—**

வேலின் வெப்பத்தால் கடல் திடலாகியது. பிறவிப் பெருங்கடல் வற்றிவிட்டது.

**சூரன் கனத்திணிமார்பந் திறக்க :—**

ஆணவமலம் பிளவுபட்டு அழிந்தது. சூரன் — ஆணவம்.

## கருத்துரை

திருத்தணி மலையுறை தேவனே! உமது திருப்புகழ் பாட அருள் புரிவாய்.

## 68

இருமலு ரோக முயல்கன் வாத
மெரி குண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை இவையோடே

பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்க ளருள்வாயே

வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியஅ நேக இசைபாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே

தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.

### பதவுரை

வரும் ஒரு கோடி அசுரர் பதாதி மடிய=போருக்கு வந்த ஒரு கோடி அசுரசேனைகள் மாளும்படியும், அநேக இசைபாடி வரும்= பலப்பல வகையான இசைப்பாடல்களைப் பாடி வந்து, ஒரு கால வயிர ரவர் ஆட=ஒப்பற்ற கால பைரவர் நடம் ஆடவும், வடிசுடர் வேலை விடுவோனே=கூர்மையும் ஒளியும் உடைய வேலாயுதத்தை விடுத்த வரே! தரு நிழல் மீதில் உறை=கற்பகமரத்தின் நிழலில் வாழ்கின்ற முகில் ஊர்தி தரும்=மேகவாகனனும் இந்திரன் தந்த திருமாதின் மணவாளா=தெய்வயானையம்மையின் கணவரே! சலம் இடைபூவின் நடுவினில் வீறு=கடலுக்கு நடுவில் விளங்கும் பூதலத்தில் நடுவிடத்தில் பெருமை பெற்றுவிளங்கும், தணிமலை மேவு=திருத்தணிமலை மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமை மிகுந்தவரே! இருமலும்=இருமல் நோயும்,ரோக முயலகன்=முயலகன் என்ற நோயும், வாதம்=வாத நோய்களும், எரிகுண=வெப்பு நோயும், நாசிவிடமே =மூக்குப்பீனசமும் நீரிழிவு=நீரிழிவு என்ற நோயும், விடாத தலைவலி =நீங்காத தலைவலியும், சோகை=சோகை நோயும், எழு கள மாலை= கழுத்தைச் சுற்றி எழுகின்ற கண்ட மாலையும், இவையோடே= இவைகளுடன், பெரு வயிறு=பெரு வயிறும், ஈளை=சுவாசகாசமும்,

எரிகுலே=குலையெரிச்சலும், சூலே=சூலே நோயும், பெருவலி=பெரிய நோயும், வேறும் உள நோய்கள்=இவையன்றி மற்றுமுள்ள நோய்களும், பிறவிகள் தோறும்=ஒவ்வொரு பிறவியிலும், எனே நலியாத படி=அடியேனைப்பற்றித் துன்புறுத்தாவண்ணம், உனதாள்கள் அருள்வாயே=தேவரீருடைய திருவடிகளைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

போருக்கு வந்த ஒரு கோடியசுரர் சேனைகள் மாளவும், பலப்பல இசைகளைப்பாடி வருகின்ற ஒப்பற்ற காலபைரவர் நடனம் புரியவும் கூரிய ஒளிமிகுந்த வேலாயுதத்தை விடுத்தருளியவரே! கற்பக மரத்தின் நிழலில் வசிக்கின்ற மேக வாகனனுகிய தேவேந்திரன் தந்த தெய்வயானையம்மையாரின் கணவரே! கடலின் நடுவில் விளங்கும் பூதலத்தில் இடையில் பெருமை பெற்றுத் திகழும் திருத்தணியம்பதியில் வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! இருமல், முயலகன், வாதநோய், வெப்புநோய், மூக்குப்பீனசம், நீரிழிவு, தீராத தலைவலி, சோகை, புதிது புதிதாக எழுகின்ற கண்டமாலை, இவைகளுடன் பெருவயிறு, ஈளை, குலையெரிச்சல், சூலை, பெருநோய், மற்றுமுள்ள நோய்கள் பிறவிதோறும் அடியேனை வந்து பற்றித் துன்புறுத்தாத வண்ணம் தேவரீருடைய திருவடிகளைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழ், பரம குருநாதராகிய அருணகிரிப் பெருமான் உலகில் உள்ள மக்களின் மீதுள்ள அளவற்ற கருணையால் பாடியருளியது.

இத் திருப்புகழை, அன்பர்கள் நாள்தோறும், ஒருமைப்பட்ட உள்ளத்துடன் உருகிய சிந்தையுடன் ஓதினால், நோய்கள் விலகப் பெறுவார்கள். அன்றியும நோய் தீண்டப் பெறார்கள். நோயின்றி வாழ்ந்து வளம் பெறுதற் பொருட்டு அடிகளார் இத்திருப்புகழை இனிது பாடிக் கொடுத்தருளினார்.

**இருமலும் :—**

மனிதனை உயிருடன் வைத்து வதைக்கின்ற நோய் இருமல். இதில் ஆஸ்துமா, க்ஷயம், புகையிருமல், பொடியிருமல், தூறிருமல் என்று பலவகையுண்டு.

**முயலகன் :—**

முயலகன் என்பது ஒரு நோய். கைகால் இழுத்துக்கொண்டு துடிக்கச் செய்யும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பாச்சிலாச்சிராமம் என்ற திருத்தலத்தையடைந்த போது, அவ்வூர்த் தலைவர் கொலலி மழவன் என்பவர், தம் குழந்தைக்கு வந்த முயலகன் என்ற நோய் தீரும்படி கோயிலிலே குழந்தையை வைத்து வருந்தினார்.

அப்போது ஆலய வழிபாட்டிற்கு வந்த திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடியருளினார். அதனால் கொல்லிமழவன் புதல்வியின் முயலகன் என்ற நோய் நீங்கியது. அன்றியும் அக்கோயில் நடேசப் பெருமான் திருவடியின் கீழ் இருந்த முயலகனும் மறைந்தனன்.

**வாதம் :—**

அண்டவாதம், பட்சவாதம், பாரிசவாதம் முதலிய வாத நோய்கள் இறைவனைப் பிடிவாதமாக வணங்காத பாவிகட்கு வரும்.

**எரிகுணம் :—**

வெப்பு நோய்: கைகால் கண் காது முதலிய இடங்களில் ஒரே எரிச்சலுடன் வரும்.

**நாசிவிடம் :—**

நாசியில் வரும் பீனசம் முதலிய நோய்கள்.

**நீரிழிவு :—**

நீரில் சர்க்கரை வரும் பொல்லாத நோய். இது பலரைப் பிடித்து வாட்டி வருத்தும்.

**விடாததலைவலி :—**

தீராத தலைவலி.

**எழு களமாலை :—**

கழுத்தைச் சுற்றி புற்று போல் எழுகின்ற கண்டமாலை.

**பெருவயிறு :—**

பானை போல் வயிறு பெருத்து வேதனை செய்யும்.

**ஈளை :—**

சுவாசகாசம்: கோழை, சளி இவைகள் மிகுந்து வருத்தும்.

**எரிகுலை :—**

குலையெரிச்சல்.

**சூலை :—**

ஆலகால விடம் உள் புகுந்தது போல் குடலைப் புரட்டிப புரட்டித் துன்புறுத்தும்.

**பெருவலி :—**

பெரு நோய்—தொழுநோய் என்கின்ற கொடிய நோய். இதுதான் எல்லாநோய்கட்கும் அரசன். அதனால் இதைக் கண்டால் மற்ற நோய்கள் யாவும் தொழும். அதனால் தொழு நோய் எனப்பட்டது.

**பிறவிகள் தோறும் எனை நலியாதபடி —**

முருகா! அடியேனைப் பிறவிகள் தோறும்நோய்கள் பற்றி வருத்தாவண்ணம் அருள் புரிவாய்.

முருகன் பவரோக வயித்தியநாதன்; அவருடைய சீடர்களாகிய அகத்தியர் போகர் முதலியோர்களும் மருத்துவர்கள். முருகனை மனமொழி மெய்களால் வழிபடும் அடியார்கட்குப் பிணியே வராது. நோயற்ற இனிய வாழ்வில் வாழ்வார்கள்.

"முருகா எனவுனை ஓதுந்தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார் வியாதி அடைந்து நையார்.

—போரூர்ச் சந்நிதிமுறை.

**வருமொரு கோடி அசுரர் பதாதி மடிய :—**

மிகுந்த வேகத்துடனும் சீற்றத்துடனும் ஆயுதங்களையேந்திக்கொண்டு வந்த கோடிக்கணக்கான அசுரர்கள் மடியுமாறு வேலை முருகவேள் விடுத்தருளினார்.

**அநேக இசைபாடி வருமொரு கால வயிரவர் ஆட :—**

காலபைரவர் அப்போது அளவற்ற மகிழ்ச்சியுடன் பலப்பல விதமாக இசைப் பண்களைப் பாடித் துதி செய்தார்.

**தரு நிழல் மீதிலுறை முகிலூர்தி தரு திருமாது :—**

கற்பகத் தருவின் நிழலில் வாழ்பவன் இந்திரன். அவனுக்கு மேகம் வாகனமாக விளங்குகின்றது. திருமாலின் புதல்வியாகிய அமுதவல்லி தானே ஒரு குழவியாக, இந்திரனால் வளர்க்கப்பட்டனர். வெள்ளையானையின் மூலம் இந்திரன் இனிது வளர்த்து முருகவேளுக்குப பரங்குன்றத்தில் திருமணம் செய்து கொடுத்தனன்.

**சலமிடைபூவி னடுவினில் வீறு தணிமலை :—**

கடலின் நடுவேயுள்ள இம்மண்ணுலகின் இடையில் மிகப் பெருமையுடன் திகழ்வது திருத்தணிமலை தனக்குத்தானே ஒப்பான மகிமையுடைய தெய்வீகமான திருமலை.

## கருத்துரை

திருத்தணி மேவும் திருவேல் முருகா! அடியேனை நோயணுகா வகை திருவடி தந்தருள்.

## 69

கலைமட வார்தஞ் சிலையதனாலும்
கனவளை யாலுங் கரைமேலை
கருகிய காளம் பெருகிய தோயங்
கருதலை யாலுஞ் சிலையாலும்

கொலைதரு காமன் பலகணை யாலுங்
 கொடியிடை யாள்நின் றழியாதே
குரவணி நீடும் புயமணி நீபங்
 குளிர்தொடை நீதந் தருள்வாயே
சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
 திருமகள் நாயன் தொழும்வேலா
தினைவன மானுங் கநவன மானுஞ்
 செறிவுடன் மேவுந் திருமார்பா
தலமகள் மீதெண் புலவரு லாவுந்
 தணிகையில் வாழ்செங் கதிர்வேலா
தனியவர் கூருந் தனிகெட நாளுந்
 தனிமயி லேறும் பெருமாளே.

### பதவுரை

சிலைமகள் நாயன்=மலையரசன் மகளாகிய பார்வதியம்மையாரது கணவராகிய சிவபெருமானும், கலைமகள் நாயன்=வாணிதேவியின் கணவராகிய பிரமதேவரும், திருமகள் நாயன்=இலக்குமியம்மையின் கணவராகிய நாராயணரும், தொழும் வேலா=வணங்கி வழிப்படுகின்ற வேலாயுதரே! தினை வன மானும்=தினைப் புனத்தில் வாழ்ந்த மான் போன்ற வள்ளி நாயகியும், கநவனமானும்=விண்ணுலகத்திலுள்ள மேன்மை பொருந்திய கற்பகவனத்தில் வளர்ந்த மான் போன்ற தெய்வயானையும், செறிவுடன் மேவும்=உளங்கலந்து சேர்ந்து அணைகின்ற, திருமார்பா=திருமார்பினரே! தலமகள்மீது=நிலமகளாகிய பூமிமீது, எண் புலவர் உலாவும்=மதிக்கப்படுகின்ற சிறந்த புலவர்கள் நிறைந்து உலாவுகின்ற, தணிகையில் வாழ்=திருத்தணிகை மலைமீது வாழ்கின்ற, செங்கதிர் வேலா=சிவந்த ஒளி பொருந்திய வேலாயுதரே! தனியவர்=உலகை நீங்கியுள்ள அடியவர்களின், கூரும் தனிகெட=மிகுந்த தனிமையானது நீங்கும்படி அருளி நாளும் தனிமயில் ஏறும்=நாள்தோறும் ஒப்பற்ற மயில் மீது எழுந்தருளுகின்ற, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! கலை மடவார்தம்=மேகலை முதலிய அணிகள் அணிந்த பெண்களின், சிலை அதனாலும்=வசைப்பேச்சின் ஒலியாலும், கனவளையாலும்=திரண்ட சங்க நாதத்தாலும், கரை மேலே=கரையின்மேல் இருந்து கூவுகின்ற, கருகியகாளம், (மன்மதனது எக்காளமாகிய) கருமையான குயிலின் ஓசையாலும், பெருகிய தோயம்=பெருகியுள்ள கடல் ஓசையாலும் கருது அலையாலும்=சிந்தனை அலைகளாலும், சிலை ஆலும்=விலவிவிடத்தே அசைகின்ற, கொலை தரு காமன் பலகணையாலும்=கொலை செய்யவல்ல மன்மதனுடைய பல பாணங்களாலும், கொடி இடை

யாள்=கொடிபோன்ற மெல்லிய இடையுடைய இவள், நின்று அழியாதே=கவலைப்பட்டு நின்று அழிவுபடாமல், குரவு அணி=குராமலரைத் தரித்துள்ள, நீடு புயம் அணி=நீண்ட புயத்தில் அணிந்துள்ள, நீப குளிர்தொடை=குளிர்ந்த கடப்ப மலர் மாலையை, நீ தந்து அருள்வாயே=தேவரீர் தந்து அருள்புரிவீராக.

## பொழிப்புரை

மலையரையன் மகளாகிய உமாதேவியின் நாயகராகிய சிவமூர்த்தியும், கலைவாணியின் நாயகராகிய பிரம தேவரும், இலக்குமிதேவியின் நாயகராகிய திருமாலும் வணங்கி வழிபடுகின்ற வேலாயுதரே! தினைப்புனத்தில் வாழ்ந்த மான்போன்ற வள்ளிநாயகியும், தேவலோகத்தில் கற்பகச் சோலையில் வளர்ந்த மான் போன்ற தெய்வநாயகியும், உளம் கலந்து தழுவுகின்ற திருமார்பையுடையவரே! பூதலத்தின்மீது மதிக்கப்படுகின்ற புலவர்கள் உலாவுகின்ற திருத்தணிகை மலைமீது எழுந்தருளியுள்ள சிவந்த ஒளி பெற்ற வேலாயுதரே! தனிமையை யடைந்த தவசீலர்களின் தனிமை நீங்க, நாடோறும் ஒப்பற்ற மயிலின் மீது ஏறி உலாவுகின்ற பெருமிதம் உடையவரே! மேகலாபரணம் அணிந்த மாதர்களின் வசைமொழியாலும், கனத்த சங்கின் ஓசையாலும், கரையிலிருந்து கூவுகின்ற குயிலின் ஓசையாலும் கடல் ஒலியாலும், சிந்தனை அலையாலும், வில்லின் மீது அசைகின்ற கொலை புரியவல்ல மன்மதனுடைய பல பாணங்களாலும், கொடி போன்ற மெல்லிய இடையுடைய இவள் துன்புற்று நின்று அழியாத வண்ணம், குராமலர் அணிந்த நீண்ட புயத்தில் தரித்துள்ள குளிர்ந்த கடப்ப மலர் மாலையைத் தேவரீர் தந்து அருள் புரிவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழ் நாயகீ நாயக பாவத்தில் பாடப் பெற்றது.

முருகனாகிய தலைவனை விரும்பிய, பக்குவப்பட்ட ஆன்மாவாகிய தலைவிக்கு எந்த எந்த வகையால் துன்பம் விளைகின்றது என்று சுவாமிகள் விரித்துரைக்கின்றார்.

**கலை மடவார்தஞ் சிலையதனாலும் :—**

கலை—மேகலை (மணிமேகலை) இது சிறந்த பெண்மணிகள் ஆடைக்குமேல் இடையில் கட்டுகின்ற பொன்மணிக் கோவை. மூன்று ஐந்து ஏழு என்ற வரிசையில் வரிசையாகக் கட்டிக் கொள்வார்கள். மணிமேகலை என்பது ஒரு ஆபரணம். இந்த அணியை அணிந்த பெண்கள் முருகனாகிய தலைவனை விரும்பியேங்கி உண்ணாமலும் உறங்காமலும் பித்துப் பிடித்திருக்கின்ற தலைவியைப் பார்த்து, ஏளனமாகப் பேசி ஏசுவார்கள்.

அம்மாதர்களின் வசைமொழியால் மேலும் அத்தலைவி வேதனையுறுவாள்.

"தெருவினில் நடவா மடவார்
திரண்டொறுகசும் வசையாலே" —திருப்புகழ்.

சிலை—ஒலி; வசையொலி.

**கனவளையாலும் :—**

கனம்—பருமை; வளை—சங்கு. பருத்த சங்கின் ஓசை தலைவிக்கு மிகுந்த தாபத்தையுண்டாக்கும்.

**கரை மேலே கருகிய காளம் :—**

காளம்—'எக்காளம்' எக்காளம் என்பது ஒரு வாத்தியம். மன்மதனுக்கு எக்காளம் குயில். அது கரிய நிறமுடையது. கடற்கரையில் இருந்து குயில் கூவுவதனால் தலைவி மேலும் வருத்தம் அடைவாள்.

"மெள்ள வரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே"
—(துள்ளுமதவேள்) திருப்புகழ்.

**பெருகியதோயம் :—**

தோயம்—தண்ணீர்; பெருத்த நீர்—கடல். கடலோசை மகளிர்க்கு மிகுந்த விருப்பத்தையுண்டாக்கி வருத்தும்.

"தொல்லை நெடு நீலக்கடலாலே" —(துள்ளுமதவேள்)திருப்புகழ்.

**கருதலையாலும் :—**

கருது அலை. சிந்தனையில் பலப்பல எண்ணங்கள் அலை போல் எழுந்து வருத்தும்.

**சிலையாலும் கொலைதருகாமன் பலகணையாலும் :—**

கரும்பு வில்லின் மீது அசைகின்றவன் மன்மதன். பிரிவுத் துன்பத்தை யதிகப்படுத்தி கொலைபுரிகின்றவன். அவனுடைய பல கணைகளால் தலைவி துன்புறுவாள்.

"துள்ளுமத வேள்கைக் கணையாலே" —திருப்புகழ்.

**கொடியிடையாள் நின்றழியாதே :—**

கொடி போன்ற மெல்லிய இடையுடைய தலைவி முருகனை நினைந்து நினைந்து துன்புற்று அழியாத வண்ணம் காத்தருள்க என்று வேண்டுகின்றார்.

**குரவணி :—**

குராமலர் முருகனுக்கு உகந்த மலர். திருவிடைக்கழி என்ற திருத்தலத்தில் முருகவேள் குராமரத்தின் கீழ் வீற்றிருக்கின்றார்.

குராப்புனை தண்டையந்தாள் தொழல் வேண்டும்"
—கந்தரலங்காரம்.

**நீபங்குளிர் தொடைநீ தந்தருள்வாயே :—**

நீபம்—கடம்பு; விரகதாபம் உற்ற ஒரு தலைவிக்கு நாயகன் அணிந்த மலர்மாலை மகிழ்ச்சியைத் தரும். "முருகா! நின் மீது காதல் கொண்ட இவ்வனிதைக்கு நினது திருமார்பில் தரித்துள்ள கடப்பமலர் மாலை தந்து அருள் புரிவாய்.

> 'குளிர மாலையின் கண் அணிமாலை தந்து
> குறை தீர வந்து குறுகாயோ"
> —(விறல்மார) திருப்புகழ்.

> "மார் தங்கு தாரைத்தந் தருள்வாயே" —(நீலங்கொள்) திருப்புகழ்.

**சிலைமகள் நாயன் கலைமகள் நாயன் திருமகள் நாயன் தொழும்வேளை :—**

திருத்தணிகையில் அயன் அரி அரன் என்ற மும்மூர்த்திகளும் முருகவேளை வழிபட்டார்கள்.

திருத்தணிகையில் சிவபெருமான் முருகரைத் தியானித்து உபதேசம் பெற்றனர். அந்த "வீரட்டகாசர்" ஆலயம் தணிகைக்கு அருகில் ஓடும் நந்தியாற்றுக்கு வடகரையில் உள்ளது. உபதேசித்த சாமிநாதர் ஆலயம் நந்தியின் தென்கரையில் உள்ளது.

திருமால் முருகரை வழிபட்டுத் தாரகாசுரனால் கவரப்பட்ட சக்கராயுதத்தைப் பெற்றார். விஷ்ணு தீர்த்தம் திருக்கோயிலுக்கு மேற்கே, அர்ச்சகர்களின் வீடுகளின் எதிரில் உளது.

பிரமதேவர் முருகரை வழிபட்டு சிருட்டித் தொழிலின் வன்மையைப் பெற்றனர். மலை மீது ஏறிப்போகும் வழியில் பாதி தொலைவில், பிரமசுனையும் பிரமேசர் ஆலயமும் உள்ளன. இவ்வண்ணம் மூவரும் வழிபட்டதை இப்பாடலில் அருணகிரிநாத சுவாமிகள் குறிப்பிட்டனர் என அறிக.

**கநவனமான் :—**

கம்-விண்ணுலகம், ந-மேன்மை, விண்ணுலகில் உள்ளது மேன்மை தங்கிய கற்பகச் சோலை.

கனம்—பொன்; பொன்னுலகத்தில் உள்ள கற்பகவனம் எனினும் அமையும்.

**எண்புலவர் உலாவும் :—**

எண்—மதிப்பு. உலகம் மதிக்கத்தக்க சிறந்த புலவர்கள் உலாவுகின்ற பெருமையுடையது திருத்தணிகை.

புலவர் என்ற சொல்லுக்குத் தேவர்கள் என்றும் பொருள். தேவர்கள் வந்து வேண்டிய வரங்களைப் பெறும் பொருட்டு உலாவுகின்றனர் என்றும் பொருள்படும்.

**தனியவர் கூறும் தனிகெட :—**

தனியவர்—தனிமையானவர், சுற்றம், உறவு முதலிய சகல பற்றுக்களையுந் துறந்து தனிமையில் நின்ற ஞானிகள்.

10 பேருக்காக ஒருவரை விடவேண்டும்.
ஒரு ஊருக்காக பதின்மரை விடவேண்டும்.
ஒரு நாட்டுக்காக ஒரு ஊரை விட்டுவிட வேண்டும்.
ஒரு தேசத்துக்காக ஒரு நாட்டை விட்டுவிட வேண்டும்.
தனக்காக உலகத்தையே விட்டுவிட வேண்டும்.

எனவே, எல்லாவற்றையும் பற்றறத் துறந்து தனியானவர்கள்.

**அடல்வேண்டும் ஐந்தன்புலத்தை விடல்வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.** —திருக்குறள்.

அவ்வாறு எல்லாவற்றையும் விட்டுத் தனியானவர்களின் தனிமை கெட முருகன் அவரிடம் வந்து நின்று தானும் அத்தபோதனருமாக அருள் புரிகின்றான்.

**"தனியான ஞானதபோதனர்க்கிங்**
**கெமராஜன் விட்ட கடையேடு வந்தினி என் செயுமே"**
—அலங்காரம்

**தனிமயில் —**

தனி—ஒப்பற்றது, எம்பிரான் ஏறும் மயில் நிகரில்லாத பெருமையுடையது.

## கருத்துரை

திருத்தணி மேவுந் தேவதேவா! இந்த ஆன்மாவின் துயர் தீர நினது திருமாலையைத் தந்து அருள் புரிவாய்.

## 70

கரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந் தனபாரக்
கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொலித்துங்
கலைத்துகில் மினுக்கும் பணிவாரைத்

தரித்துள மழிக்குங் கவட்டர்க ளிணக்கந்
 தவிர்த்துன துசித்தங் களிகூரத்
தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற்றுன்
 தலத்தினி லிருக்கும் படிபாராய்

புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தொண்
 பொடிப்பணி யெனப்பன் குருநாதா
புயப்பணி கடப்பந் தொடைச்சிகர முற்றின்
 புகழ்ச்சிய முதத்திண் புலவோனே

திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
 தெறிப்புற விடுக்குங் கதிர்வேலா
சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி ஜயத்தென்
 திருத்தணி யிருக்கும் பெருமாளே.

## பதவுரை

*புரத்தையும் எரித்து = திரிபுரத்தையும் எரிசெய்தும், அம் கயத்தையும் உரித்து = அழகிய யானையின் தோலை உரித்து உடுத்தும், ஒண் பொடி பணி = ஒளிவீசும் திருநீற்றை ஆபரணமாக அணிந்த, என் அப்பன் குருநாதா = எனது அப்பனாகிய சிவபெருமானுடைய குருநாதரே! புய பணி = திருத்தோளில் ஆபரணமாக, கடப்பம் தொடை = கடப்பமலர் மாலையணிந்தவரே! சிகரமுற்று = சி என்னும் மகாமந்திரத்தின் உட்பொருளாய் விளங்கி, இன் புகழ்ச்சி அமுத = இனிய புகழமுதைக் கொண்ட, திண் புலவோனே = திண்ணிய புலவர் பெருமானே! திரள்பரி = கூட்டமான குதிரைகளும், கரிக்கும் = யானைகளும், பொடிபட = தூள்படவும், அவுணர்க்கும் தெறிப்பு உற = அசுரர்கள் சிதறியழியவும், விடுக்கும் கதிர்வேலா = செலுத்திய ஒளி படைத்த வேலாயுதரே! சிறப்பொடு குறப்பெண் களிக்கும் = சிறப்புடனே வள்ளியம்மையுடன் மகிழ்கின்றவரும், விஜய தென் = வெற்றியும் அழகுங் கொண்டவரும் ஆகிய, திருத்தணி இருக்கும் = திருத்தணியில் வாழ்கின்ற, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! கரிகுழல் விரித்தும் = கரிய கூந்தலை விரித்தும், புற கயல் விழித்தும் = வெளியில் தோன்றும் கயல் மீன் போன்ற கண்களை விழித்தும் கரிகுவடு இணைக்கும் தன பார = யானை போன்றும் மலை போன்றும் உள்ள பருத்த தனங்களையுடையவராய், கரத்திடு வளை = கையில் வளையல்களும், சங்கிலி சரம் ஒலித்தும் = பொன் சங்கிலிமாலைகளும் ஒலிசெயச் செய்தும், கலை துகில் மினுக்கும் = மேகலையுடன் கூடிய புடைவையைப் பளபளப்புடன் உடுத்தும், பணிவாரை தரித்து = தம்மைப்பணிந்து ஒழுகும் ஆடவரை யேற்று, உளம் அழிக்கும் =*

அவர்களது உள்ளத்தை அழிக்கின்ற, கவட்டர்கள் இணக்கம் தவிர்த்து=வஞ்சகர்களாகிய பொதுமாதரின் நட்பை யகற்றி, உனது சித்தம் களிகூர=தேவரீருடைய திருவுள்ளம் மிகவும் மகிழ்ச்சியடையும்படி, தவ கடல் குளித்து=அடியேன் தவக்கடலில் மூழுகி, இங்கு உனக்கு அடிமை உற்று=இப்பொழுதே தேவரீருக்கு அடிமை பூண்டு, உன் தலத்தினில் இருக்கும்படி பாராய்=உமது தலமாகிய தணிகையம்பதியில் உறைகின்ற வாய்ப்பினை அடியேன் பெறுமாறு கண் பார்த்து அருளுவீராக.

## பொழிப்புரை

திரிபுரத்தை எரித்தும், அழகிய யானையை உரித்தும் ஒளி படைத்த திருநீற்றைத் தரித்தும் விளங்கும் என் அப்பனாகிய சிவபெருமானுடைய குருநாதரே! தோள்களில் கடப்ப மலர் மாலையை அணியாக அணிந்த "சி" என்னும் மகாமந்திரத்தின் உட்பொருளாய் உற்று, இனிய புகழமுதைப் படைத்த திண்ணிய புலவர் பெருமானே! திரண்ட குதிரைகள் யானைகள் அவுணர்கள் அழிய ஒளிமிக்க வேலாயுதத்தை விடுத்தவரே! சிறப்போடு வள்ளியம்மை மகிழும் வெற்றியும் அழகும் படைத்த திருத்தணியில் வாழ்கின்ற பெருமிதம் உடையவரே! கரிய கூந்தலைவிரித்தும் மீன் போன்ற கண்களை விழித்தும், யானையும மலையும் போன்ற தனபாரங்களை உடையவராய், கரத்தில் வளையல்களும், பொற் சங்கிலிகளும் ஒலி செயச் செய்தும் மேகலையுடன் கூடிய புடவையைப் பளபளப்புடன் உடுத்தும், தம்மை வணங்கும் ஆடவரைச் சேர்த்துக் கொண்டு அவர்களின் உள்ளத்தை அழிக்கின்ற வஞ்சகர்களாகிய விலைமாதர்களின் உறவை நீக்கி, தேவரீரது திருவுள்ளம் மகிழுமாறு, தவக்கடலில் மூழுகி, உமது அடிமையாகி உமது திருத்தலத்தில் வசிக்கும் வாய்ப்பை அடியேனுக்கு அருள் புரிவீராக.

## விரிவுரை

**கரிக்குழல் விரித்தும் :—**

ஆடவர்களின் மனதை யீர்க்கும்பொருட்டு பொருட் பெண்டிர், அழகிய கரிய குழலை நன்கு வாரி முடிக்காமல் விரித்து நிற்பார்கள். அது முத்தி நெறி செல்வார்க்குத் தடை என்ற குறிப்பையுணர்த்தும்.

**புறக்கயல் விழித்தும் :—**

நீரின் மேல் உலாவும் கயல் மீனைப் போன்ற கண்களை உருட்டி விழித்து நிற்பர். அது மேலும் ஆடவரை மயக்கும். அக்கண் யமபாசம் போன்றது. ஆடவரைக் கட்டுண்ணச் செய்யும்.

**கரிக்குவடிணைக்குந் தனபார :—**

கரி—யானை. குவடு—மலை. யானையின் மத்தகம் போலவும், மலைச்சிகரம் போலவும் பருத்துள்ள தனங்களால் தனம் பரிப்பர்.

**கரத்திடு வளைச்சங்கிலிச் சரமொலித்தும் :—**

கரங்களில் உள்ள வளைகளை அசைத்தும், கழுத்தில் உள்ள பொற சங்கிலிகளை அசைத்தும் ஒலியுண்டாகச் செய்வர். அதுவும விருப்பத்தை மேலிடச் செய்யும்.

**கலைத்துகில் மினுக்கியும் :—**

கலை—மேகலை, இது ஆடைக்குமேல் அணியும் பொன்னுபரணம். சிறுசிறு மணிகளின் கோவை. ஐந்து, ஏழு ஒன்பது என்று தகுதிக்கேற்ப அணிவார்கள்.

**பணிவாரைத் தரித்துளமழிக்குங் கவட்டர் :—**

ஆசை வயப்பட்டவர்கள் அம்மகளிரை வணங்கி அவருடைய நட்பை விரும்புவார்கள். அவர்களை வசப்படுத்தி தெளிந்தவுள்ளத்தையழிக்கும் வஞ்சகர்கள் அம்மகளிர்.

**இணக்கந் தவிர்த்து :—**

பொதுமகளிரது உறவை நீக்குதல் வேண்டும். அதுவே நீங்காது அறிவின் ஆற்றலால் நீக்கவேண்டும்.

**தவக்கடல் குளித்து :—**

தவம் என்பது இறைவனை நினைத்து சிந்தையை ஒருமைப்படுத்தி அசைவற நிறகும் நிலை. இத்தவ நெறியில் முழுகி நிற்போர் இறைவனுடைய அருட்கடலில் முழுகுவார்கள்.

**உனக்கடிமையுற்று :—**

மனதிற்கு அடிமைப்பட்டிருக்கும் நாம் இறைவனுக்கு அடிமைப்படவேணும்.

**உன்தலத்தினிலிருக்கும்படி பாராய் :—**

இறைவன் அடியவர் பொருட்டு எழுந்தருளியிருக்கும் திருத்தலத்தில் வசிப்பது மிகவும் உத்தமோத்தமம். க்ஷேத்ர வாசம என்பார்கள். அங்கு ஆண்டவனுடைய அருள்விலாசங் குடி கொண்டிருக்கும்.

**புரத்தையும் எரித்து :—**

புரத்தையும் என்ற சொல்லில் வந்த உம்மை இறந்தகாலந் தழுவிய எசசவும்மை. அது மதனை எரித்ததையும் குறித்து நிற்கின்றது

**கயத்தை முறித்து :—**

இதில் வந்த உம்மையும் மேற்கூறியவாறு இறந்தது தழிஇயது. இது புலியை உரித்ததையுங் குறித்து நின்றது.

**ஒண்பொடிப்பணிவெனப்பன் :—**

ஒண்—ஒளி. ஞானவொளி வீசுவது திருநீறு. இறைவன் திருநீற்றையணிவது தன்னை நினைக்கின்ற ஆன்மாக்களின் வினைகள் பொடிபடும் பொருட்டு எனவுணர்க.

"நினைவொடு பணிபவர் வினைதுகள் படஎதிர்
நினைந்து திருநீ றணிந்த தொருபால்" —கொலுவகுப்பு

திருநீறு வினைகளை விலக்குவதன்றி பிறவினைகள் பொருந்தாவண்ணம் கவசமாக நின்று அரண் புரியும்.

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி" —திருமந்திரம்.

**சிகரமுற்று :—**

சி என்ற ஒரு தனி எழுத்து மகா மந்திரமாகும். அது ஏக பஞ்சாட்சரம் எனப்படும். நாயோட்டு மந்திரம் என்றுங் கூறுவர்.

நமசிவய—தூல பஞ்சாட்சரம்.
சிவயநம—சூட்சும பஞ்சாட்சரம்.
சிவயசிவ—காரண பஞ்சாட்சரம்.
சிவ—மகா பஞ்சாட்சரம்.
சி—மகாமநு.
ந—திரோதம்.
ம—ஆணவம்.
சி—சிவம்.
வ—திருவருள்.
ய—ஆன்மா.

திரோத சக்தியால் ஆணவமலத்தையகற்றி, திருவருள் துணைகொண்டு ஆன்மா சிவத்தைச் சேர்ந்து பவத்தையகற்றும். இவ் வைந்தெழுத்தே வேத இருதயமாகி விளங்குவது.

"வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச் சிவாயவே" —திருஞானசம்பந்தர்.

**விஜயத்தென் திருத்தணி :—**

தென்—அழகு. திருத்தணி தன்னை அடுத்து வந்த ஆன்மாக்களின் பாவத்தை அழித்து வெற்றி கொள்வது. விசேடமான ஜயம் விஜயம். ஆதலால் உத்தமமான திருத்தலம் திருத்தணிகை பணிவார் வினைகளைத் தணித்து சிவஞானத்தை யருள்வது தணிகாசலம்.

## கருத்துரை

திருத்தணிகேசா! தவநெறியுற்று உன் தலவாசம் புரிய அருள் செய்.

## 71

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவர் உயிர்க்குஞ் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்குந்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்

நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்குந்
தளத்துடன் நடக்குங் கொடுசூரர்

சினத்தையு முடற்சங் கரித்தம லையுமுற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்
திருத்தணி யிருக்கும் பெருமாளே.

## பதவுரை

***தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந் தகுத்தகு தகுத்தந் தன***=தனத்தன..... தன என்ற ஒலிக்குறிப்புடன், ***பேரி***=பேரிகைகள் முழங்கவும், ***தடுட்டுடு டுடுட்டுண்டென***=தடுட்டுடு—என்று, ***துடி***=உடுக்கைகள், ***முழக்கும்***=முழங்கவும். ***தளத்துடன் நடக்கும்***=சேனைகளுடன் போர்க் களத்திற்கு அணிவகுத்துவந்த, ***கொடுசூரர்***=கொடுமையான சூராதியவுணர்களது, ***சினத்தையும்***=கோபத்தினையும், ***உடல் சங்கரித்த மலை முற்றும்***=துணித்த பிணமலைகள் யாவையும், ***சிரித்து எரி கொளுத்தும்***=புன்னகை புரிந்து அந்நகையில் எழுந்த அனற் பொறியால் சாம்பராக்கிய, ***கதிர்வேலா***=ஒளிவீசும் வேற்படையை யுடையவரே! ***தினைக்கிரி குறப்பெண்***=தினைப்பயிர் விளையும் வள்ளிமலையில் விளங்கிய வள்ளிபிராட்டியாருடைய, ***தனத்தினில் சுகித்து***=பயோதரங்களில் இன்புற்று, ***எண்***=மாதவர்கள் மதிக்கின்ற, ***திருத்தணி இருக்கும்***=திருத்தணிகை என்னுந் திருத்தலத்தில்

எழுந்தருளியுள்ள, பெருமானே=பெருமையின் மிக்கவரே! சினத்தவர் முடிக்கும்=திருமுருகனடியார்களைக் கோபித்தவர்களுடைய தலைக்கும், பகைத்தவர் குடிக்கும்=அவ்வடியார்களைப் பகை செய்தவர்களுடைய குடும்பத்திற்கும், செருத்தவர் உயிர்க்கும்=அவ்வடியார்களைக் கொன்றவர்களுடைய ஆருயிர்க்கும், சினமாக சிரிப்பவர் தமக்கும்=அவ்வடியார்களைக் கண்டு கோபமாகச் சிரிப்பவர்கட்கும், பழிப்பவர் தமக்கும்=அவ்வடியார்களைப் பழிக்குந் தன்மையினர்க்கும் திருப்புகழ் நெருப்பு என்று யாம் அறிவோம்=திருப்புகழே பெரு நெருப்பாக நின்று அடியுடன் அழித்துவிடும் என்பதை யாம் அறிந்திருக்கின்றோம், நினைத்ததும் அளிக்கும்=அடியார்களாகிய நாங்கள் எதனை எதனை நினைக்கினும் அவற்றை நினைத்தவுடனே தரவல்லதும், மனத்தையும் உருக்கும்=பாடுபவர் கேட்பவர்களது கல்மனதையுங் கரைந்துருகச் செய்யவல்லதும், பிறவாமல்=இன்னும் ஒரு தாயுதரத்திற் புக்குப் பிறவாவண்ணம், நிசி கரு அறுக்கும்=இருட்செறிந்த கருவடையுந் துயரை அறுத்தெறிய வல்லதும், நெருப்பையும் எரிக்கும் =எல்லாவற்றையும் எரிக்கவல்லதாகிய நெருப்பையும் எரிக்கவல்லதும், பொருப்பையும் இடிக்கும்=மலையையும் இடித்தெறிய வல்லதுமாகிய, நிறைபுகழ்=எல்லாப் பொருள்களும் நிறைந்த திருப்புகழை, உரைக்கும்=பாடுகின்ற, செயல் தாராய்=நற்செயலைத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

பேரிகைகள் "தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந் தகுத்தகு தகுத்தந் தன" என்று முழங்கவும், உடுக்கைகள் "தடுட்டுடு டுடுட்டுண்" டென்று முழங்கவும் சேனைகளுடன் அணிவகுத்து நடந்த கொடிய சூராதியவுணர்களது கோபத் தீயையும், அறுத்து வீழ்த்திய பிணமலைகளையும் சிரித்து எரித்தருளிய வேலாயுதக் கடவுளே! தினைப்பயிர் விளையும் மலையிடத்து வசித்த வள்ளிநாயகியாருடைய தனபாரங்களில் இன்புற்று திருத்தணிகை மலையில் வாழுகின்ற பெருமையின் மிக்கவரே! நினது அடியார்களைக் கோபித்தவர்களுடைய முடிக்கும், அடியார்களைப் பகைத்தவர் குடிக்கும், அடியார்களைக் கொன்றவர்களுடைய உயிர்க்கும், அடியார்களைக் கண்டு கோபமாகச் சிரிப்பவர்கட்கும், அடியார்களைப் பழிப்பவர்கட்கும், திருப்புகழே நெருப்பாக நின்று அழித்து ஒழிக்கும் என்பதனை யாங்கள் அறிந்துளோம்; அதுவேயுமன்றி, நாங்கள் நினைத்தவைகளையெல்லாம் நினைத்தவண்ணம் நினைத்த உடனே தரவல்லதும், படிக்கினும், பாடினும், கற்கினும், கேட்கினும், சிந்திக்கினும் கல்மனத்தையுங் கரைந்துருகச் செய்யவல்லதும், இன்னொரு தாய் வயிற்றிற் புக்குப் பிறவா வண்ணம், இருண்மிக்க கருப்பையை அறுத்தெறிய வல்லதும், எல்லாவற்றையும் எரிக்க வல்லதாகிய நெருப்பையும் எரிக்கவல்லதும், மலையினை யிடிக்க வல்லதுமாகிய தேவரீர்

ருடைய திருப்புகழை நாடோறும் உரைத்து உய்யுமாறு திரு வருள் புரிவீர்.

## விரிவுரை

இத்திருப்புகழ் பாடப்பெற்ற வரலாறு பின்வருமாறு:

நம் பரமாசிரியராகிய ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் பல்லாயிரம் அடியார் குழாங்கள் சூழவும், "ஹரஹர" என்ற முழக்கம் வானத்தையளாவவும், கருப்புகாத கதிதனைக் காட்டும் திருப்புகழைப் பண்ணுடன் பாடிக்கொண்டும் தணிகை மலையை வலம் வருவாராயினார்கள். அப்போது ஆங்கிருந்த அறிவிலிகளும் அவநெறிபட்ட அசடர்களுமாகிய சிலர், சுவாமிகளது தவவேடத்தையும் திருநீற்றின் மாண்பையும் கண்டிகையின் கவினையும் பாடலின் பண்ணையும் கண்டு, எள்ளி நகையாடி, திருப்புகழையும அடியார்களையும் பழித்துப் பரிகசித்தனர்.

அதுகண்டு சுவாமிகள் சற்று மனம் வருந்தி, "என்னையனே! நின் திருப்புகழையும் திருப்புகழைப் பாடுஞ் சீலமிக்க அடியார்களையும் இவர்கள் நிந்தித்தது முறையா! வேலாயுதா! முருகா! இவர்களை யழிப்பதற்கு வேறு ஒரு நெருப்பு வேண்டுமோ! திருப்புகழே நெருப்பாய் நீறுக்கும்.

"சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவ ருயிர்க்கும் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்"

என்று பாடியருளலும், அப் புல்லர்கள் அத்தனைப் பேர்களும் சாம்பற் குவியலானார்கள். திருப்புகழின் அதியற்புதமான ஆற்றல்தான் என்னே! என்னே.

அதனைக் கண்ட "கருணைக்கு அருணகிரி" என்று உலகம் பாராட்டுகின்ற, நம் பரம கருணாமூர்த்தியாகிய சுவாமிகள் திருவுளமிரங்கி, "அந்தோ! அறுமுகத்தரசே! இந்தக் குழந்தைகள் அறிவின்றிச் செய்த அபசாரத்திற்காக இப் பாடலைத் தொடங்கியவுடன் அழிந்தொழிந்தனரே! ஏ! கருணாகரா! இவர்கள் செய்த அபராதத்தை மன்னித்து எழுந்தருளப புரிவீர்" என்று உருகியுரைத்து,

"நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்"

என்று பாடியருளலும் சாமபற்குவியலான அத்தனைப் பேர்களும் துண்ணென்று உயிர் பெற்று எழுந்தனர். திருப்புகழ்

அழிக்கவும் அருளவும் ஆற்றல் உடையது என்பதையுணர்ந்த அவர்கள் சுவாமிகள் திருவடித் தாமரைகளின் மீது வீழ்ந்து பன்முறை வணங்கி, "குருநாதா! அடியேங்கள் அறிவில்லாமல் பெரும்பாதகத்தைச் செய்துவிட்டோம்; எங்கள் தீமையைப் பொறுத்து எங்களை அடிமை கொண்டு ஆட்கொண்டருள்வீர்" என்று வேண்டி நின்றனர்.

சுவாமிகள் அவர்கட்கு அபயந் தந்து, அவர்களையும் தமது அடியார் திருக்கூட்டத்துள் சேர்த்துக் கொண்டு அவர்களைப் புனிதர்களாக்கி, ஆட்கொண்டருளினார்கள்.

**அறிவோம் யாம் :—**

யாம் என்ற பதம் சிங்கநோக்காக நின்று யாம் அறிவோமென்றும். யாம் நினைத்ததும் அளிக்கும் என்றும் பொருள் படும்.

**நெருப்பையுமெரிக்கும் :—**

புறத்தேயுள்ள நெருப்பை யெரிப்பதோடுமன்றி அகத்தேயுள்ள பசித் தீ, காமத் தீ முதலிய நெருப்புகளையும் எரிக்க வல்லது திருப்புகழ்.

**பொருப்பையு மிடிக்கும் :—**

புறத்தேயுள்ள மலையையிடிப்பதோடு, நமது சஞ்சித வினைத் தொகுதியாகிய மலையையும் இடிக்கவல்லது திருப்புகழ்

**நிறைப்புகழ் :—**

வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், உபநிஷதம் மருத்துவம், யோகம், சங்கீதம் முதலிய யாவும் திருப்புகழில் நிறைந்துள்ளன. நுணுகி ஆராய்வோருக்கு, இவை புலனாகும். இதனாலன்றோ,

> "வேதம்வேண் டாம்சகல வித்தைவேண் டாங்கீத
> நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
> குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றன்போற்றுந்
> திருப்புகழைக் கேளீர் தினம்"

என்று ஆன்றோர் வியந்தோதினர்.

**சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா :—**

ஆறுமுகக் கடவுள் சூரபன்மனுடன் போர் புரியுங்காலை பூமண்டலத்துள்ள அவுணசேனைகளை முழுவதையுங் கொன்றருளினார். மேலும் மேலும் அண்டங்களிலுள்ள அவுணசேனைகள் வந்துகொண்டேயிருந்தன. அவைகளையும் கொல்ல உதிர வெள்ளம் ஓடிற்று, நிணமும் தசையும் உதிரமும் சேர்ந்து

சேருயின. பிணமலைகள் குவிந்தன. அதனல் தேர் செல்லத் தடைப்பட்டது. அதுகண்டு பெருமான் புன்முறுவல் பூத்தனார் அம்மூரலிற் சிறு நெருப்புப் பொறி பரந்தது. அப்பொறியால பிணமலைகளும் அசுரசேனைகளும் எரிந்து கரிந்து சாம்பராயின.

**குறப்பெண் தனத்தினிற் சுகித்து:—**

வள்ளியம்மை ஞானம்பிகை. "சுந்தரஞான மென்குற மாது" என்ருர் பிறிதோரிடத்தில். அந்த ஞானமடந்தையின் அபர ஞானம், பரஞானம் என்ற இருதனங்களில் ஞானபண்டிதன் இன்புறுகின்றனன் என்பது இதன் உள்ளீடு.

இப்பாடலை நாடோறும் பாராயணம் புரிவோர்க்குச் சத்துரு பயம் சாராது என்பது ஒருதலை.

## கருத்துரை

வேலாயுதரே! திருத்தணிகை துரையே! பகைவரையழிக்க வல்லதும், அன்பருக் கருள வல்லதுமாகிய, கருப்பிணியைத் தவிர்க்கும் திருப்புகழை ஓதும் திறத்தினை யருள் புரிவீர்.

## 72

தொக்கறுக் குடில சுத்தமேற் றசுக
துக்கமாற் கடமு மலமாயை
துற்ற காற் பதலை சொற்படாக் குதலை
துப்பிலாப்பலச மய நூலைக்

கைக்கொளாக் கதறு கைக்கொளாக் கையவ
லப்புலாற் றசைகு ருதியாலே
கட்டுகூட் டருவ ருப்புவேட் டுழல
சட்டவாக் கழிவ தொருநாளே

அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குரவர்
அர்ச்சியாத் தொழுமு நிவனுய
அப்பபோர்ப் பனிரு வெற்பபூத் தணியல்
வெற்பபார்ப் பதிந திருமாரா

இக்கணேக் குறில்நி ருத்தநோக் குறுத
வத்திஞேர்க் குதவு மிளையோனே
எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெத்திஞர்க் கெளிய பெருமாளே.

## பதவுரை

*அக்கு=உருத்திராட்சம், அரா=பாம்பு, பொடியின்=திருநீறு ஆகிய இவைகளை, மெய்க்கு இடா குரவர்=திருமேனியில் தரித்துக் கொண்டிருக்கும் பெரியோனாகிய சிவமூர்த்தி, அர்ச்சியா தொழு=அர்ச்சனை செய்து தொழுத, முநிவன் ஆய அப்ப=மெய்ஞ்ஞான முனிவராக விளங்கும் பரமபிதாவே! போர் பனிரு வெற்ப=போருக்குரிய மலைபோன்ற பன்னிரு தோள்களையுடையவரே! பூ தணியல் வெற்ப=செங்கழுநீர் மலர்கின்ற தணிகை மலையில் வாழ்ப வரே! பார்ப்பதிநதி குமார=பார்வதியம்மைக்கும் கங்காதேவிக்கும் புதல்வரே! இ கண் நோக்கு உறில்=இப்பூமியில் நோக்கம் என்பது இருக்குமாயின், நிருத்த நோக்கு=அது உமது திருநடனத்தை நோக்கும் நோக்கு ஒன்றேயாகும்; உறு தவத்தினோர்க்கு உதவும் இளையோனே=அத்தகைய நோக்கினையுடைய தவசீலர்கட்கு உதவுகின்ற இளமபூரணரே! எத்திடார்க்கு அரிய=தேவரீரை ஏத்தித் துதி செய்யாதாருக்குக் காண அரியவரே! முத்த=அநாதி மலமுத்தரே! பா தமிழ்கொடு எத்தினர்க்கு எளிய=தமிழ்ப்பாடலைக் கொண்டு ஏத்தித் துதி செய்யும் அடியார்கட்கு எளியவரே! பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! தொக்கு அருக்குடில் =தோல் நீங்காத குடிசை, அசுத்தம் ஏற்ற=அசுத்தத்தை ஏற்றதும், சுகதுக்க மால் கடம்=இன்பதுன்பங் களும் மயக்கமும் நிறைந்த குடல்; மு மல மாயை துற்ற=மும் மலங் களும் மாயையும் நெருங்க வைத்த, கால் பதனை=காற்று நிறைந்த பானை, சொல்படா குதலை=சொல்விளங்கப்பெறாத மழலைச்சொல் போன்ற, தட்பு இலா பல சமய நூலை கை கொளா=அறிவுக்குப் பொருந்தாத பல சமய நூல்களைக் கைக் கொண்டு, கதறுகை கொள்=கதறிப் பேசுவதை மேற்கொண்ட, ஆக்கை=உடம்பு, அவல புலால் தசை குருதியாலே கட்டு கூட்டு=துன்பத்துக்கு இடமாம் மாமிசம் தசை உதிரம் இவற்றால் கட்டப்பட்ட கூட்டு, அருவருப்பு வேட்டு உழல்=வெறுக்கத் தகுந்த இந்த உடம்பை விரும்பித் திரிகின்ற, அசட்ட=கீழ் மகனாகிய அடியேனுக்கு, வாக்கு அழிவது ஒருநாளே=வாக்கு அற்ற மௌனநிலையைப் பெறுவது ஒருநாள் உண்டாகுமோ?*

## பொழிப்புரை

உருத்திராக்கம், பாம்பு, திருநீறு இவைகளைத் திருமேனி யில் தரித்துக் கொண்டிருக்கின்ற பெரியவராம் சிவபெருமான். அருச்சித்துத் தொழுத ஞான முனிவராம் பரமபிதாவே! போருக்கு உரிய பன்னிரு புயமலைகளை யுடையவரே! குவளை மலர் மலர்கின்ற திருத்தணியில் வாழ்பவரே! பார்வதிக்கும் கங்காதேவிக்கும் மைந்தரே! இப்பூதலத்தில் பார்வை என்பது ஒன்று இருக்குமானால் அது உமது திருநடனப்பார்வை

ஒன்றே அத்தகைய தவசீலர்கட்கு உதவும் இளம்பூரணரே! உமது திருவடியைத் துதிக்காதவர்க்கு அரியவரே! அநாதி மல முத்தரே! தமிழ்ப் பாடல்களைக் கொண்டு துதித்தவர்க்கு எளியவரே! தோல் நீங்காத குடிசை; அசுத்தத்தை ஏற்றதும் சுகம் துக்கம், ஆசை முதலியவைகட்கு இடமாய குடம்; மும் மலங்களும் மாயையும் நெருங்கியுள்ளதும் காற்றடைத்தது மாகிய பானை; சொல்விளங்கப்படாத மழலைச் சொல் போன்ற பல சமய நூல்களைக் கைக்கொண்டு கதறுதலைக் கொண்ட துன்பத்துக்கு இடமாய தசை பொதிந்த சதை உதிரம் இவை களால் கட்டப்பட்ட கலப்பு; வெறுக்கத்தக்க இந்த உடம்பை விரும்பித் திரிகின்ற அடியேனுக்குச் சிறந்த மோன நிலை கூடு கின்ற நாள் ஒன்று உளதாகுமோ.

## விரிவுரை

**தொக்கருக்குடில் :—**

தொக்கு—தோல், இந்த உடம்பு, எலும்பு சதை, உதிரம், மலம், சலம், கோழை, பித்தம் முதலிய பல அசுத்தப் பொருள் களால் ஆனது. தோலினால் போர்த்தப்பட்டுள்ளது.

**சுகதுக்க மாற்கடம் :—**

மூன்று உலகங்கள் உண்டு. ஒன்று ஒளியுலகம்; அது சுவர்க்காதி புவனங்கள். ஒன்று இருள் உலகம்; அது நரக உலகம். ஒன்று ஒளியும் இருளும் கலந்தவுலகம்; அது இந்த மண்ணுலகம்.

ஒளியுலகத்தில் வாழ்கின்ற உயிர்கட்கு இறைவன் தரு கின்ற உடம்பு பூத சார தநு. இருள் உலகத்தில் வாழ்கின்ற உயிர்கட்கு இறைவன் தருகின்ற உடம்பு பூத மாதநு இம் மண்ணுலகில் வாழ்கின்ற உயிர்கட்கு இறைவன் தருகின்ற உடம்பு பூத பரிணாம தநு

இருள் உலகில் உள்ள பூத மா தநு துன்பத்தை மட்டும் நுகர்வதற்கு உரியது.

ஒளியுலகில் உள்ள பூதசார தநு இன்பத்தை மட்டும் நுகர் வதற்கு உரியது.

இந்த மண்ணுலகில் உள்ள இப் பூத பரிணாம சரீரம் இன் பத்தையும் துன்பத்தையும் நுகர்வதற்கு ஏற்றது.

இந்த உடம்பு தனியே துன்பத்தையும் நுகராது தனியே இன்பத்தையும் நுகராது.

இந்த உலகில் நமக்கு மிகவும் பிரியமானது அல்வா. அதைச் சிறிதுதான் உண்ணலாம் ஒரு பரங்கிப்பழம் அளவு உண்ண இயலுமா? மனைவியுடன் சிறிது நேரந்தான் இன்புற லாம். தூங்கினால் சுகம். ஆனால் ஓயாது தூங்கிக்கொண்டிருக்க

முடியுமா? இப்படி எதனை எதனை இன்பமாக நாம் கருதி நுகர்கின்றோமோ அந்த இன்பங்களை இந்த உடம்பால் தொடர்ந்து நுகர இயலாது. வெயிலும் மழையும் போல் சுகதுக்கங்களை மாறி மாறி நுகர்வது இந்தவுடம்பு.

**மலமாயை துற்றகால் பதலை :—**

பதலை—மண்பானை. இது மிகவும் அருமையாகக் கிடைத்தது.

ஒரு ஊரில் ஒரு பிள்ளையார் கோயில். அதன் அருகில் ஒரு சிறிய நந்தவனம். அங்கு ஒரு ஆண்டி வந்து சேர்ந்தான் ஏதாவது தொண்டு செய்தால் தான் அங்கே வீடுகள் தோறும் அன்னம் கறி முதலியவைகள் கிடைக்கும்.

அப்படியானால் நந்தவனத்தில் செடிகளை வளர்த்து அம் மலர்களை எடுத்துத் தொடுத்து பிள்ளையாரப்பனுக்குக் கொடுத்தால் இனிய தொண்டு ஆகும். அதற்கு ஒரு தோண்டி வேண்டியதாயிற்று அந்தவூரின் கோடியில் ஒரு குயவனார் இருந்தார். சட்டி, பானை, மடக்கு முதலியன செய்து அவா விற்பார். அந்த ஆண்டி அக்குயவனாரிடம் போய் ஒரு தோண்டியை வேண்டினான். ஆண்டி தோண்டி வேண்டி நிற்க, குயவனார் நாளை வாரும் என்றார். இனமாகத் தருகின்றது. அதனால் தவணை போட்டார், நாளை நாளையென்று பல தவணை. ஆண்டியும் பாவம் பொறுமையுடன் நாளும் நடந்து நடந்து தொடர்ந்தான். முன்னூறு நாட்களுக்குப்பின் குயவனார் மனம் இரங்கி ஒரு தோண்டியைத் தந்தார்.

அத்தோண்டியைப் பெற்ற ஆண்டிக்குப் பெருமகிழ்ச்சி! உடனே தோண்டியை எடுத்துக்கொண்டு நேரே ஆற்றுக்குச் சென்றான். தோண்டியில் தண்ணீரை முகந்து தலைமீது வைத்தான். அங்கிருந்து நந்தவனத்தை நோக்கிப் புறப்பட்டான்.

அப்போது அந்த ஆண்டிக்கு இளமையில் தன் ஊரில் நடந்த ஒரு பிடாரி விழாவில் தான் கரக ஆட்டம் ஆடியது நினைவுக்கு வந்தது. பத்து மாதம் வேண்டிப் பெற்ற அத் தோண்டியைத் தலைமீது வைத்து வரும் ஆண்டி கரக ஆட்டம் ஆடுபவனைப்போல் தத்தீம் தகதீம் தகஜணு தளாம்கு என்ற ஜதியிட்டு ஆடினான். பாவம், உடனே தோண்டி கீழே விழுந்து உடைந்துவிட்டது. முந்நூறு நாட்கள் நடந்து நடந்து கால் தேய்ந்து தொடர்ந்து சென்று வேண்டிப் பெற்ற தோண்டி. அது ஒரு விநாடியில் உடைந்து ஒழிந்தது.

அந்த ஆண்டி—ஆன்மா. நந்தவனம்—இந்த உலகம். குயவனார்—பிரமதேவர். தோண்டி—இந்தவுடம்பு. இதனைச் சிந்தித்த ஒரு சித்தர் பாடுகின்றார்.

நந்தவனத்திலோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி.

இன்னொரு சித்தர் பாடினார்.

"காயமே இது பொய்யடா காற்றடைத்த பையடா"

இந்த உடம்புக்குள் பிராணவாயு தங்கியுள்ளது. அது எந்த விநாடி இந்த உடம்பை விட்டு நீங்குமோ தெரியாது. ஆணவம், கன்மம்,மாயை என்ற மும்மலங்களும்,மாயாகாரிய மான பொருள்களும் உடையது இந்த உடம்பு.

**சொற்படாக்குதலை துப்பிலாப் பல சமயநூலைக் கைக்கொளாக் கதறு கைக் கொளாக்கை :—**

குழந்தைகள் பேசும் சொற்களில் சொல்லின் முழுவுருவம் இராது. மாமி என்ற சொல்லை மம்மி என்றும், சாப்பாடு என்ற சொல்லை சாச்சியென்றும் குழறிக்குழறிக் கூறும்.

அது போல் கருத்து நிரம்பப் பெறாத சமயங்கள் பல ஒன்றுடன் ஒன்று ஒவ்வாது பிணங்கும்.

"பேயன்ன புறச்சமயப்பிணக்கு வழியனைத்தும் பிழையே"

என்கின்றார் மாதவச் சிவஞான-யோகிகள்.

மேலேயுள்ள அடியை,

"சொல்படா குதலை துப்புஇலா பல சமய நூலை கைகொளா கதறுகை கொள் ஆக்கை

என்று பதச்சேதம் புரிக.

கரும்பிருக்க இரும்பை மெல்வது போலும், நெருப்பிருக்க மின்மினியைத் தேடியலைவது போலும், வழியிருக்கக் குழியில் விழுவது போலும், வேதாகம நெறியாம் சைவசித்தாந்த நெறி யிருக்க அதனை விடுத்து, பல சமய நெறிகளின் குழறுபடைக் கொள்கைகளைக் கைக்கொண்டு உழல்கின்ற உடம்பை யுடையவன்.

**அவலப்புலால் தசைக் குருதியாலே கட்டு கூட்டு :—**

வீணாக வெறுஞ் சதை வைத்து உதிரம் முதலியவற்றால் கட்டப்பட்ட கட்டடம் போன்றது இந்த சரீரம்.

கால்கொடுத் திருகையேற்றி கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிரநீரால் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவமைத் தங் கேழுசாலேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காடனாரே.

—திருநாவுக்கரசு சுவாமிகள்.

**வாக்கழிவ தொருநாளே :—**

வாக்கிறந்த பெருநிலை. இது மௌன நிலை; பேசா அநுபூதி யெனபபடும். இதைப்பெறுகின்ற நாள் ஒன்று எனக்குக் கிடைக்குமோ? என்று சுவாமிகள் வேண்டுகிறார்.

**அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குரவர் :—**

அக்கு—உருத்திராக்கம். உருத்திராக்கம், பாம்பு, திருநீறு இவைகளைத் திருமேனியில் தரித்துக்கொண்டுள்ள பெரியவர் சிவபெருமான்.

**அர்ச்சியாத் தொழு முனிவனுய அப்ப :—**

சிவபெருமான் பிரணவ உபதேசம் பெறும் பொருட்டு, திருத்தணிகையில் முருகனை அர்ச்சித்து வணங்கி சீட பாவத்தை உலகிற்குக் காட்டியருளினார்.

முருகனை முனிவன் என்கின்றார். அநுபூதியிலும் "முருகன் தனிவேல்முனி" என்கின்றார்.

**பூத் தணியல் :—**

தினம் தினம் செங்கழுநீர் மலர்கின்றதனால் அம்மலை கல்லாரகிரி எனப்படும்; பூ—அழகு; அழகிய மலையெனினும் அமையும்.

**இக்கணைக் குறில் நிருத்த நோக்குறு தவத்தினோர்க்குதவு மிளையோனே :—**

இக் கண்ணால் இந்த உலகில் ஒன்றைப் பார்க்க வேண்டுமானால் அப்பார்வை முருகனுடைய நடன கோலம் அன்றி மற்றொன்றைப் பார்க்கக் கூடாது என்ற உறுதி பூண்ட தவ சீலர்கட்கு உதவுகின்ற இளம்பூரணன்.

**எத்திடார்க் கரிய :—**

முருகன் தன்னை அடுக்காதார்க்கு அரியன்.

**பாத்தமிழ் கொடெத்தினர்க் கெளிய :—**

சிறந்த தமிழ்ப்பாவால் துதிசெய்வார்க்கு இறைவன் எளியவன். தேவாரம் பாடிய சுந்தரருக்கு இறைவன் எளியனாய் இரவில் தூது சென்றதே சான்று.

**கருத்துரை**

தணிகேசா! மௌன நிலையருள்வாய்.

## 73

வட்டவாட் டனம ணைச்சிபாற் குதலை
மக்கள்தாய்க் கிழவி பதிநாடு
வைத்ததோட் டமனை யத்தமீட் டுபொருள்
மற்ற கூட் டமறி வயலாக

முட்டவோட் டிமிக வெட்டுமோட் டெருமை
முட்டர்பூட் டியெனை யழையாமுன்
முத்திவீட் டணுக முத்தராக் கசுரு
திக்குராக் கொளிரு கழல்தாராய்

பட்டநாற் பெரும ருப்பிநாற் கரஇ
பத்தின்வாட் பிடியின் மணவாளா
பச்சைவேய்ப் பணவை கொச்சைவேட் டுவர்ப
திச்சிதோட் புணர்த ணியில்வேளே

எட்டுநாற் கரவொ ருத்தல்மாத் திகிரி
யெட்டுமாக் குலைய எறிவேலா
எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெத்திஞர்க் கெளிய பெருமாளே.

### பதவுரை

பட்டம்=நெற்றிப்பட்டமும், நால் பெருமருப்பின்=நான்கு பெரிய தந்தங்களும், நால் கர=தொங்குகின்ற கையும் உடைய, இபத்தின்=ஐராவத யானை வளர்த்த, வாள் பிடியின் மணவாளா= ஒளிபொருந்திய தெய்வயானை யம்மையின் கணவரே! பச்சைவேய்= பசிய மூங்கிலால் கட்டிய, பணவை=பரண் மீதிருந்தவரும், கொச்சை வேட்டுவர் பதிச்சி=இழிகுல வேடர்களின் ஊரில் இருந்தவரும் ஆகிய வள்ளியம்மையின், தோள் புணர்=தோளைத் தழுவிய, தணியில் வேளே=திருத்தணிகையில் வாழும் உபகாரியே! நால் கர= தொங்குகின்ற துதிக்கையையுடைய, எட்டு ஒருத்தல்=எட்டு யானை களும், மா திகிரி எட்டு=பெரிய எண்கிரிகளும், குலைய எறிவேலா= நடுங்கும்படி செலுத்திய வேலாயுதரே! எத்திடார்க்கு அரிய=ஏத்தி துதிக்காதவர்க்கு அரியவரே! முத்த=அநாதிமல முத்தரே! பாத் தமிழ் கொடு எத்திஞர்க்கு எளிய=தமிழால் கவிகள் பாடித் துதித்தவர்க்கு எளியவரே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! வட்ட=வட்ட வடிவும், வாள்=ஒளியும் உடைய, தன மனைச்சி= கொங்கைகளையுடைய மனைவி, பால் குதலை மக்கள்=பால் மணத் துடன் மழலைச்சொல் பேசும் குழந்தைகள், தாய் கிழவி=தாயாகிய

கிழவி, பதி=ஊர், நாடு=நாடு, வைத்த தோட்டம்=நான் வைத்த தோட்டம், மனை=வீடு, அத்தம்=செல்வம், ஈட்டு பொருள்=தேடிய பொருள்கள், மற்ற கூட்டம்=மற்றும் உள்ள உறவினர்கள், அறிவு= கல்வியறிவு முதலிய இத்தனையும், அயல் ஆக=என்னை விட்டு நீங்கும் படி, முட்ட ஓட்டி=நன்றாக ஓட்டிச் செலுத்தி, மிக எட்டு=மிகவும் நெருங்கிவரும், மோட்டு எருமை=பெரிய எருமைமேல்வரும், முட்டர் =காலதூதர்களாகிய மூடர்கள், பூட்டி எனை அழையாமுன்=பாசக் கயிற்றைப்பூட்டி அடியேனை அழைப்பதற்கு முன்பாக, முத்தி வீட்டு அணுக=முத்தி வீட்டினை அணுகிச் சேரவும், முத்தர் ஆக்க=எல்லா வற்றையும் விட்ட ஞானியரைப்போல் என்னை ஆக்கவும், கருதி வேதத்துக்குள்ளும், குரா=குராமலரினுள்ளும், ஒளிரும்=ஒளிர்கின்ற கழல் தாராய்=தேவரீருடைய திருவடியைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

நெற்றிப்பட்டமும், நான்கு பெரிய கொம்புகளும், தொங்கு கின்ற தும்பிக்கையையும் உடைய ஐராவத யானை வளர்த்த ஒளி மிக்க தேவசேனையின் நாயகரே! பசிய மூங்கிலாலாய பரண்மீதும் இழிகுல வேடரது ஊரிலும் வாழ்ந்த வள்ளியம் மையின் தோளைத் தழுவிய திருத்தணிகை வேளே! தொங்கு கின்ற துதிக்கையையுடைய எண்திசை யானைகளும், பெரிய எண்கிரிகளும் நடுங்குமாறு வேலை விடுத்தவரே! ஏத்தித் துதி செய்யாதவர்க்கு அரியவரே! அநாதி மலமுத்தரே! தமிழால் கவிபாடித் துதித்தவர்க்கு எளிதில் அருள்பவரே! பெருமை யின் மிகுந்தவரே! வட்டமாகவும் ஒளியுடனும் உள்ள தனங் களையுடைய என் மனைவி, பால்மணமுடைய மழலைமொழி பேசும் குழந்தைகள், தாயாகிய கிழவி, என் ஊர், என் நாடு, நான் வைத்து வளர்த்த தோட்டம், என் வீடு, செல்வம், தேடிய பொருள்கள், ஏனைய சுற்றத்தார்கள், அறிவு ஆகிய அனைத்தும் என்னை விட்டு நீங்குமாறு, நன்கு ஓட்டி மிகவும் நெருங்கிவரும் பெரிய எருமைமேல் வருகின்ற மூடர்களாகிய இமயபடர்கள் பாசக்கயிற்றைப் பூட்டி அடியேனை அழைப்ப தற்குமுன், முத்தி வீட்டை அணுகவும், எல்லாவற்றையும் விட்ட ஞானியரைப் போல எனை ஆக்கவும், வேதத்தி னுள்ளும், குராமலரினுள்ளும் விளங்குகின்ற உமது திரு வடியை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழை முருகனுடைய திருவடியைப் பெற விரும்பி சுவாமிகள் பாடியருளினார்.

இயமனுடைய தூதர்கள் பாசக்கயிற்றால் உயிரைக கட்டி யிழுக்கும்போது நமககு என்ன என்ன பொருள்கள் உடைமை

களாக இருந்தனவோ அத்தனையும் வேருகிவிடும். இதனை இப் பாடலில் மிக விளக்கமாக அடிகளார் உபதேசிக்கின்ருர்.

**வட்டவாள் தன மனைச்சி —**

மனைச்சி—மனைவி; வாள்—ஒளி. மார்பில் தங்கம் இரத்தினம் முத்து முதலிய அணிகலன்கள் அணிந்திருப்பதனால் ஒளியுடையதாக இருக்கின்றது.

**பாற்குதலை மக்கள் :—**

பால குடித்த வாசனை மாருத குழந்தைகள் அல்லது பால் குடிக்கும் குழந்தைகள், மழலை பகரும் பாலகர்கள்.

தாய்க்கிழவி :—வய்து முதிர்ந்த தாயார்: தாயாகியகிழவி. இரு பெயரொட்டுப் பண்புத்தொகை; நாகப்பாம்பு என்பது போல்.

**பதிநாடு :—**

பதி—ஊர்; நாடு—பல ஊர்கள் அடங்கியது நாடு.

**வைத்த தோட்டம் :—**

விதவிதமாக மா, பலா, தென்னை, கமலா, நெல்லி, பூஞ் செடிகள் வைத்து நீர் வார்த்து, களைபறித்து, வேலி கட்டி வளர்த்துக் காப்பாற்றிய தோட்டம். உயிரைப்போல் பேணி வளர்த்த இத்தோட்டம் தனக்கு அயலாகுமாறு உயிரை எமபடர்கள் இழுத்துச் செல்வார்கள்.

**மனை :—**

அற்புதம் அற்புதமாகக் கட்டி வைத்த வீடு. ஒரு அதிதியைக் கூட வரவேற்று உபசரிக்காமல், வாயிலில் பெரிய நாயைக்கட்டி வைத்து, யாரும் நம்பிவராத வண்ணம் கம்பி போட்டு எனக்கே சொந்தம் என்று எண்ணியிருந்த மாளிகையும் அயலாகும்.

**அத்தம் :—**

வட்டிக்குமேல் வட்டி வாங்கி, பெட்டிமேல் பெட்டியாக்கி காசுமேல் ஒட்டிய தூசும் அகலாவண்ணம் பாதுகாத்து வைத்த அச்செல்வமும் அயலாகும்.

"அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே" —பட்டினத்தார்.

வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை யறியீர்
பெட்டிமேல் பெட்டிவைத் தான்கிறீர் வயிற்றுப்
பெட்டியை நிரப்பிக் கொண் டொட்டியுள் ளிருந்தீர்
பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் நேரீர்
பழங்கஞ்சி யாயினும் வழங்கவும் நினையீர்
எட்டிபோல் வாழ்கின்றீர் கொட்டிபோல் கிளைத்தீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே. —திருஅருட்பா.

**ஈட்டு பொருள் :—**

உடம்பை வருத்தி, வியர்வை ஒழுக, ஓடி, ஆடி, கண் விழித்து அயராது உழைத்துத் தேடிய பொருள்கள். இவ்வாறு ஈட்டிய பொருள்களை அறஞ்செய்தால் அவை ஆன்மா பிரியும்போது உடன் தொடர்ந்து போகும்.

"எங்காயினும் வரும் ஏற்றவர்க்கிட்டது இடாது வைத்த
வங்காரமும் உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்
சங்காதமோ ? கெடுவீர் உயிர் போம் அத் தனிவழிக்கே"

—அலங்காரம்.

உண்ணாமலும் உடுக்காமலும் பிறர்க்குக் கொடுக்காமலும் ஈட்டி வைத்த பொருளை இழப்பார்கள்.

உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டினார் இழப்பர் வான் தோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனீக் கரி.

—நாலடியார்

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" —ஔவையார்.

ஈயாதவர்களது செல்வத்தைத் தீயவர்கள் பறித்துக் கொள்வார்கள்.

இன்னும் ஒரு பொருள்; ஈ ஆர்—ஆர்—பன்மை விகுதி; ஈ ஆர்—ஈக்கள், தேட்டை—தேடிய தேனை, தீயார்—தீப்பந்தம் பிடித்தவர்கள். தீப்பந்தம் பிடித்தவர்கள் ஈக்களை ஓட்டி, அத் தேனீக்களின் உழைப்பைக் கவர்ந்து கொள்வார்கள்.

ஆகவே அறஞ்செய்யாதார் பொருள் அவமாகும்.

**மற்ற கூட்டம் :—**

இதுவரை கூறியவையன்றி, நிலம், வண்டி, வாகனம் உற்றார், உறவினர் ஆகிய அனைத்தும் அயலாகும்.

**அறிவு அயலாக :—**

உயிர் பிரியும் போது அறிவும் விலகிவிடும்.

"அறிவழிய மயல் பெருக உரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை அருகிலுற வெருவியழ உறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே"

—திருப்புகழ்.

"......கல்வியும் போய்ப்
பைவருங்கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய் விடும்போதுன் அடைக்கலமே"

—அலங்காரம்.

**முட்டவோட்டி மிக எட்டுமோட்டெருமை முட்டர் :—**

முட்டர்—மூடர்கள். இயமன் மூடர்களாவும் இரக்க மில்லாதவர்களாகவும் உள்ளவர்களைத்தான் தன் ஏவலராக நியமித்திருப்பான். அப்போதுதான் அவனுடைய கொடிய ஆட்சி நடைபெறும்.

பாலர் என்றும், மணமக்கள் என்றும் புலவர் என்றும், உபகாரி யென்றும், பாராமல் விதி முடிந்தால் வந்து உயிரைப் பிரித்து ஏகுவார்கள். விரைந்து வேகமாகச் செல்லுகின்ற எருமை வாகனத்தை யுடையவன் இயமன். பாசக்கயிற்றால் பிராணவாயுவைப் பிடித்து ஈர்த்துக்கொண்டு செல்வார்கள். அவ்வாறு கால தூதர்கொண்டு போம்போது உயிருக்குயிராய் நாம் தேடிவைத்த அசையும் பொருள் அசையாத பொருள் அத்தனையும் உடன் வாரா.

"தமரு மமரு மனையு மினிய தனமு மரசு மயலாக
தறுகண் மறலி முறுகு கயிறு தலையை வளைய எறியாதே"
—திருப்புகழ்.

**அழையாமுன்—கழல்தாராய் :—**

முருகப்பெருமானே! அடியேனுடையபொருள்கள் யாவும் அயலாகுமாறு என்னைக் கால தூதர்கள் அழைப்பதற்கு முன் உமது சரணாரவிந்தங்களைத் தந்தருளும்.

**முத்தி வீட்டணுக :—**

முத்தி—வடசொல். வீடு—தென்சொல்; இரண்டும் ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள்.

அப்பர் பெருமான், "அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே" என்பதுபோல எனவுணர்க.

முத்தி-பந்தத்தினின்றும் விடுபடுவது. இப்பியிலிருந்து விடுபட்டது முத்து; பந்தத்தினின்றும் விடுபட்டவர்கள் முத்தர்கள். விடு—என்ற முதனிலை நீண்டு வீடு என நின்றது.

**முத்தராக்க :—**

"அடியேனை ஜீவன் முத்தர்களைப் போல் ஆக்குமாறு உமது பாதந் தந்தருள். ஆக்கம்—செல்வம். முத்தர் ஆக்க—ஜீவன் முத்தர்களின் செல்வமாக விளங்கும் உமது திருவடியைத் தந்தருள்வீர்.

**சுருதிக் குராக் கொளிரு கழல் :—**

சுருதி—வேதம். காது வழி கேட்டுக் கேட்டு, வருவதனால் வேதம் இப்பெயர்பெற்றது. இறைவன் திருவடி வேதத்துக்கு உட்பொருளாக ஒளிர்வது. அடியவர்கள் உள்ளம் உருகிக்

கண்ணீர் பெருகி அர்ச்சிக்கின்ற குராமலருக்குள் ஒளிர்வது அப்பெருமானுடைய திருவடி.

"மொகு மொகென மதுப முரல் குரவு விளவினது குறு
முறியுமலர் வகுளதள முழுநீல தீவரமும்
முருகு கமழ்வதும்......மணநாறு சீறடியே.  —சீர்பாதவகுப்பு.

**பட்ட நாற்பெருமருப்பினற் கரஜி பத்தின் வாட்பிடியின் மணவாளா :—**

தெய்வயானையம்மையை இந்திரனுடைய ஐராவதயானை கற்பகச் சோலையில் வைத்து வளர்த்தது. அந்த யானை முகத்தில் பட்டமும் நான்கு தந்தங்களும் நீண்ட தும்பிக்கையும் உடையது.

நால் பெருமருப்பு :—நான்குபெரிய தந்தங்கள்; நாற்கரம்:— நாலுதல்—தொங்குதல்; தொங்குகின்ற கை—தும்பிக்கை.

**பிடி :—**

பெண்யானை போன்ற தெய்வகுஞ்சரி.

**பணவை :—**

பணவை—பரண்; இது மூங்கில்களை நட்டுச் செய்வது; இதன் மீது அமர்ந்து வள்ளிநாயகி தினைப்புனங் காவல் புரிந்தார்.

"சுனையோ டருவித் துறையோடு பசும்
தினையோ டிதனோடு திரிந்தவனே"  —கந்தரநுபூதி.

**தணியில் வேளே :—**

தணி—திருத்தணிகை; வேள்—உபகாரம் புரிபவர்.

**எட்டு நாற்கரவொருத்தல் :—**

ஒருத்தல்—யானை. அஷ்ட கஜங்கள்; கிழக்கு முதல் முறையே, ஐராவதம், புண்டரீகம, வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீபம்.

இந்த யானைகட்கு முறையே பெண்யானைகள் அப்பிரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனவதி.

**திகிரி எட்டுமாக் குலைய :—**

திகிரி—மலை கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பன அஷ்டமலைகள்.

**எத்தினர்க் கெளியன் :—**

மூவர்க்கும் தேவர்க்கும் அரியனும் பரமன், அடியார்க்கு மிக எளியனாய் அருள் புரிவான்.

அத்தாவுன் னடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருள் நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரிய நீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாயன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய! ஐயோ!
எம்பெருமான் திருக்கருணை யிருந்தவாறே. —அப்பர்.

முருகன் தமிழ்ப்பாடல்கள் கேட்டு அருள்புரியும் கருணா மூர்த்தி, என்பதை அடியில் வரும் திருப்புகழால் அறிக.

"கருணைய தமிழிற் பாடல் கேட்டருள் பெருமாளே"
—(அளிசுழல்) திருப்புகழ்.

## கருத்துரை

திருத்தணி முருகவேளே! உனது திருவடியை உயிர் நீங்கு முன் தந்தருள்.

## 74

சினத்தி லத்தினை சிறுமணை லளவுடல்
செறித்த தெத்தனை சிலைகட லினிலுயிர்
செனித்த தெத்தனை திரள்கய லெனபல வதுபோதா
செமித்த தெத்தனை மலைசுனை யுலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தி லெத்தனை நமனுயிர் பறிகொள்வ
தளவேதோ

மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
கெடுத்த தெத்தனை மிருகம தெனவுயிர்
வதைத்த தெத்தனை யளவில விதிகர மொழியாமல்
வகுத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மதியழி விரகனை
மலர்ப்ப தத்தினி லுருகவு மினியருள் புரிவாயே

தனத்த னத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டுடுடு டுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்

சினத்த மர்க்கள செருதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி யசுரர்கள் பரிசிலை
தெறித்தி டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா
செழிக்கு முத்தம சிவசர ணர்கள்தவ
முனிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருத்த ணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே.

## பதவுரை

*தனத்தனத்தன......தமித்த=தனத்தன......தமித்த என்ற தாள ஒலிக் குறிப்புடன், மத்தள=மத்தளமும், தமருக=உடுக்கையும், விருது ஒலி கடல் போல=வெற்றிச் சின்னங்களும் கடல்போல் முழங்க, சினத்து அமர் களம்=கோபமிக்க போர்க்களத்தில் செரு திகழ்=போர்மிகுதியாக (அதனால்), குருதிஅது இமிழ்த்திட=உதிரம் பெருகித் தோய்ந்திடவும், கரி=யானைப்படைகளும், அசுரர்கள்= இராக்கதர்களும், பரி=குதிரைப் படைகளும், சிலை=வில் முதலிய ஆயுதங்களும், தெறித்திட=பிளவுபட்டு அழியவும், நிணமிசை= மாமிச உணவை, கழு நரி தி(ன்)ன=கழுகுகளும் நரிகளும் தின்று பசியாறவும், பொரும்வேலா=போர்செய்த வேற்படையை யுடைய வரே! செழிக்கும் உத்தம=திருவருளால் தழைத்துள்ளவர்களும் உத்தம குணங்களுடையவர்களுமாகிய, சிவசரணர்கள்=சிவனடியார் களும், தவ முநிகணத்தவர்=தவத்தின் மிக்க இருடியர் குழாங்களும், மதுமலர்கொடுபணி=தேன் துளிக்கின்ற நறுமலர்கொண்டு வழிபாடு செய்கின்ற, திருத்தணி பதி=திருத்தணி என்னுந் திருத்தலத்தில், மருவிய=எழுந்தருளியுள்ள, குறமகள் பெருமாளே=வள்ளிநாயகி யாருக்குத் தலைவரே! சின தில தினை சிறுமணல் அளவு=சிறிய எள்ளளவும் தினையளவும் சிறுமணலளவும் ஆகிய, உடல் செறித்தது எத்தனை=உடம்பினை எடுத்து உழன்ற பிறப்பு எத்தனை? அளவு இல்லை=எண்ணிலாதன; சிலை=மலைகளிலும், கடல் விரில்=சமுத்திரங் களிலும், உயிர் செனித்தது எத்தனை=உயிரானது சென்று பிறந்த பிறப்பு எத்தனை? (அளவில்லை), திரள் கயல் என பல=திரண்டுள்ள கெண்டை மீனைப்போல் இங்குமங்குமாகப் பிறந்த பிறப்புக்கள் பல (அளவில்லை), அதுபோதா=அதுவும் போதாமல், செமித்தது எத்தனை =இயமன் ஒரு புறத்து சேமித்து வைத்த பிறப்பு எத்தனை? (அளவில்லை). மலை சுனை=மலைகளிலுள்ள சுனைகளிலும், உலகு இடை*

=வேறுபல உலகங்களிலும், செழித்தது எத்தனை=செழிப்பாக வாழ்ந்த பிறப்பு எத்தனை? (அளவிலை), சிறு தன மயல்கொடு= சின்ன தனமான செல்வத்தைக் கண்டு மயங்கி, செடத்தில் எத்தனை= ஜடவஸ்துபோல் அறிவற்றுக் கிடந்த பிறப்பு எத்தனை? (அளவிலை), உயிர் நமன் பறிகொள்வது அளவு ஏதோ=உயிரைக் கூற்றுவன் பறித்துக்கொண்டு போனதற்கும் ஒரு அளவு உண்டோ? (இல்லை), மனத்தில் நினைவு எத்தனை=அடியேனுடைய மனத்தில் தோன்றும் எண்ணங்கள் எத்தனை? (அளவிலை), கவடுகள் எத்தனை=வஞ்சகம் எத்தனை? (அளவிலை), குடி கெடுத்தது எத்தனை=பிறர் குடிகளைக் கெடுத்தது எத்தனை? (அளவிலை), மிருகம் அது என உயிர் வதைத்தது எத்தனை=மிருகங்களைப்போல் உயிர்களைக்கொன்றது எத்தனை? (அளவிலை), விதிகரம் ஒழியாமல்=பிரமதேவன் கை ஒழியாமல், வகுத்தது எத்தனை=விதிவிலக்கு எழுதியது எத்தனை? (அளவிலை), மசகனை= கொசுவுக்குச் சமானமானவனை, முருடனை=பிடிவாதமுடையவனை, மடைக்குலத்தனை=அறிவற்ற குலத்தில் பிறந்தவனை, மதி அழி விரகனை அறிவு அழிந்த வஞ்சகனை, மலர் பதத்தினில்=தேவரீருடைய திருவடிக் கமலத்தில், உருகவும்=உள்ளம் உருகுமாறு, இனி அருள் புரிவாயே=இனியாவது திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

தனத்தனத்தன......திமித்த என்ற பலப்பல சந்த பேதங்களுடன் மத்தளமும் பேரிகையும் உடுக்கையும் கடல்போல் முழங்க சினத்துடன் கூடிய போர்க்களத்தில் உதிரம்பெருகித் தோயவும் இராக்கதர்களும் யானை குதிரை முதலியவைகளும் வில் முதலிய ஆயுதங்களும் பிளவு பட்டொழியவும் தசையுணவை கழுகுகளும் நரிகளும் உண்டு மகிழவும் போர் புரிந்த வேலாயுதக் கடவுளே! அருட்செல்வத்தால் தழைக்கின்ற உத்தம சிவனடியார்களும், தவமே தனமாகவுடைய முனிபுங்கவர்களும் தேன் துளிக்கின்ற மலர்களைக்கொண்டு வழிபாடு செய்ய திருத்தணி மலைமீது எழுந்தருளியுள்ள வள்ளி மணவாளரே! சிறிய மணலளவும் தினையளவும் நொய் மணலளவும் உள்ள உடம்பினை எடுத்து உழன்ற பிறப்பு எண்ணிலாதன; மலைகளிலும் கடல்களிலும் பிறந்த பிறவிகள் எண்ணிலாதன; திரண்டுள்ள கயல்மீனைப் போல் புரண்டு இங்கும் அங்குமாக எடுத்த பிறவிகள் எண்ணிலாதன; அதுவும் போதாமல் கூற்றுவனால் ஒரு புறத்தே சேமித்து வைத்த பிறப்புக்களும் எண்ணிலாதன; மலைகளிலுள்ள சுனைகளிலும் வேறுபல உலகங்களிலும் பிறந்து செழிப்புடனிருந்த பிறவிகள் எண்ணிலாதன செல்வத்தால மயங்கி ஜடம் போற் கிடந்த பிறப்புக்கள் எண்ணிலாதன; இயமனால் இழுக்கப்பட்டனவும் எண்ணிலாதன; (இத்துணை

கோடி பிறவிகள் வந்துகொண்டே இருப்பதற்குக் காரணம்) மனத்தில் எண்ணுகின்ற எண்ணங்கள் எண்ணில்லாதன; வஞ்சகங்களும் எண்ணில்லாதன; பிறர் குடிகளைக் கெடுத்தனவும் எண்ணில்லாதன; விலங்குகளைப்போல்மன்னுயிரைக் கொன்றதும் தின்றதும் எண்ணில்லாதன; பிரமதேவன் கையொழியாமல் விதி விலக்குகளை எழுதியதும் எண்ணில்லாதன; ஆதலால் கொசுவுக்கு நிகரானவனும் பிடிவாத முடையவனும், அறிவற்ற குலத்தினனும், அறிவழிந்த வஞ்சகனுமாகிய அடியேன் தேவரீருடைய திருவடிக் கமலத்தை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகுமாறு இனிமேலாவது திருவருள் புரிவீர்.

## பதவுரை

**சினத்திலத்தினை :—**

சின - சின்ன; னகரமெய் மறைதல் விகாரம். எள், தினை நொய்மணல் அளவுள்ள சிறிய உடம்புடன் கூடிய பிறப்புகளை எடுத்தது எத்தனையோ? மேலும் கருவில் எள்ளளவு கூடியழிந்ததும, தினையளவுகூடி யழிந்ததும், சிறு மணலளவு கூடி யழிந்ததும் எத்தனையோ? என்றும் பொருள் கொள்ளலாம்.

**செமித்ததெத்தனை :—**

சேமித்தல் என்பது செமித்தல் என்று குறுகல் விகாரம் பெற்றது. மிகுந்த பாவஞ் செய்த ஆன்மாக்களை இருட்புறத்துலகில் கற்பம் வரை இயமன் சேமித்து வைப்பன்.

**செழித்தது எத்தனை :—**

மனிதசஞ்சாரமற்ற மலைச்சுனைகளில் மீன் முதலிய பிறவிகளாகப் பிறந்து செழிப்புற்றது எத்தனையோ பிறவிகள்.

**மனத்திலெத்தனை நினை :—**

இவ்வாறு பலகோடி கற்பங்களாக பல்கோடி இடங்களில் எல்லாவகைப் பிறவிகளையும் எடுத்து எடுத்துக் கறங்கெனச் சுற்றிஆன்மா இடைவிடாது அலைவதற்குக் காரணம் மனதில் உண்டாகும் பலகோடி எண்ணங்களேயாம் ஒவ்வொரு எண்ணத்திற்கும் ஒவ்வொருபிறப்புண்டு. குபேரன் சிவபெருமானுடன் தென்னாட்டுத்திருத் தலங்களைத் தெரிசித்து வருங்கால் காவிரிப்பூம் பட்டினத்தைக் கண்டு சிலநாள் தங்குதல் வேண்டும் என்று எண்ணியதால் பட்டினத்தாராகப் பிறந்தனன் என்பது சரித்திரம். மனத்தில் கவடும், வாக்கில் குடி கெடுப்பதும், காயத்தால் கொலை செய்வதுமாக திரிகரணங்களாலும் தீமையே செய்கின்றமையால், பிரமதேவன் கரமொழியாமல் விதிவிலக்குகளை எழுதிக்கொண்டே இருக்கின்றனன்

ஆதலால் பிறவாமையைப் பெறவிரும்புவோர் மனத்திலெழும் நினைவுகளை அறவே களையவேண்டும்.

மலர்ப்பதத்தினிலுருகவும் இனியருள்புரிவாயே :—

உருகிய தங்கத்தில் இரத்தினமணி பதியும்; இளகிய சேற்றில் தாமரை மலரும்; கல்லின் மேல் தாமரை மலராது; அதுபோல் கருங்கல் போன்றகெட்டியான மனதில் இறைவன் திருவடித் தாமரை மலராது. கல்மனதில் இறைவன் பாத மணி பதியாது.

"திணியானமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந்த மரும்புமதோ" —கந்தரநுபூதி.

உருகிய உள்ளத்தில் இறைவன் திருவடிப் போது மலரும். அருள்பெற்ற ஆன்றோர்கள் அனைவரும் உள்ளம் உருகுதல் ஒன்றையே பெரிதும் பாராட்டுகின்றனர்.

"உருகுமடியவ ரிருவினையிருள் பொரும்
உதயதினகர" —திருப்புகழ்.

"விரகறநோக்கியும் உருகியும் வாழ்த்தியும்" —திருப்புகழ்.

"உருகாமனமும் சிவஞானமுணரா அறிவும்"

"கல்லேனு மையவொருகாலத்திலுருகுமென்
கல் நெஞ்ச முருகவிலையே" —தாயுமானவர்.

"தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்"
—போற்றித் திருவகவல்.

"கொடியேனாகிய அடியேன் இனிப் பிறவா நெறி பெற இனியேனும் திருவடியில் நெகிழ்ந்த நெஞ்சத்தை நல்கி யாட் கொள்வீர்" என்று சுவாமிகள் முறையிடுகின்றனர்.

## கருத்துரை

"அசுரகுலகாலரே! தணிகாசலரே! பல்கோடி பிறவி எடுத்த அடியேன் இனிப் பிறவாவகை யருள்புரிவீர்.

## 75

தொடத்து ளக்கிகள் அபகட நினைவிகள்
குருட்டு மட்டைகள் குமரிகள் கமரிகள்
சுதைச்சி றுக்கிகள் குசலிக ளிசலிகள் முழுமோசந்
துறுத்த மட்டைகள் அசடிகள் கசடிகள்
முழுப்பு ரட்டிகள் கழுவிகள் மழுவிகள்
துமித்த மித்திரர் விலைமுலை யினவலை புகுதாமல்

அடைத்த வர்க்கியல் சரசிகள் விரசிகள்
தரித்த வித்ரும நிறமென வரவுட
னழைத்து சக்கிர கிரிவளை படிகொடு விளையாடி
அவத்தை தத்துவ மழிபட இருளறை
விலக்கு வித்தொரு சுடரொளி பரவந
லருட்பு கட்டியு னடியிணை யருளுவ தொருநாளே

படைத்த னைத்தையும் வினையுற நடனொடு
துடைத்த பத்தினி மரகத சொருபியொர்
பரத்தி னுச்சியி னடநவி லுமையரு ளிளையோனே
பகைத்த ரக்கர்கள் யமனுல குறஅமர்
தொடுத்த சக்கிர வளைகர மழகியர்
படிக்க டத்தையும் வயிறடை நெடியவர் மருகோனே

திடுக்கி டக்கட லசுரர்கள் முறிபட
கொளுத்தி சைக்கிரி பொடிபட சுடரயில்
திருத்தி விட்டொரு நொடியினில் வலம்வரு
மயில்வீரா
தினைப்பு னத்திரு தனகிரி குமரிநல்
குறத்தி முத்தொடு சசிமக ளொடுபுகழ்
திருத்த ணிப்பதி மலைமிசை நிலைபெறு பெருமாளே.

### பதவுரை

அனைத்தையும் படைத்து = உலகங்கள் உயிர்கள் எல்லாவற்றை யுந் தோற்றுவித்து, வினையுற = கன்மங்களை துய்ப்பித்து, நடனொடு = நடிக்கின்ற சிவத்துடன் கூடி, துடைத்த பத்தினி = மீளவும் ஒடுக்கிய தேவியும், மரகத சொருபி = மரகதம் போன்ற பச்சை வடிவத்தை யுடையவரும், ஓர் பரத்தின் உச்சியின் நடம் நவில் உமை = ஒப்பற்ற

பரவெளியில் ஆனந்த நிர்த்தனஞ் செய்யும் உமையம்மையாரும் ஆகிய பார்வதிதேவியார், அருள் இளேயோனே = பெற்றருளிய இளங்குமாரரே! பகைத்த அரக்கர்கள் = பகைகொண்டு எதிர்த்த இராட்சதர்கள், யமன் உலகு உற = கூற்றுவனுடைய நரகலோகத்தை யடையுமாறு; அவர் தொடுத்த = போரைத் தொடங்கிய, சக்கிர வளேகரம் = சக்கராயுதத்தையும் சங்கத்தையும் ஏந்திய திருக்கரத்தை யுடையவரும், அழகியர் = அழகுடையவரும் படி கடத்தையும் வயிறு அடை நெடியவர் = பூமியையும் அதிலுள்ள காடுகளையும் வயிற்றில் அடக்கிக் கொண்டு நீண்ட திருமேனியை யுடையவருமாகிய திருமாலினுடைய, மருகோனே = திருமருகரே! கடல் திடுக்கிட = சமுத்திரம் திடுக்கிட்டு அலறவும், அசுரர்கள் முறிபட = சூராதி அவுணர்கள் மாண்டொழியவும், இசைகிரி பொடிபட = இசைந்துள்ள குலமலைகள் தூள்படவும், கொளுத்து சுடர் அயில் = அனற்படுத்திய பேரொளி வீசும் வேலாயுதத்தை, திருத்திவிட்டு = நேர்மையுற விடுத்தருளி, ஒரு நொடியினில் வலம் வரு = உலகங்களை யெல்லாம் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்த, மயில்வீரா = மயில்வாகனத்தை யுடைய வீரரே! தினே புனத்து = தினேப்புனத்தில் வாழ்பவரும், இரு தனகிரி = மலைபோன்ற இரு பயோதரங்களை யுடையவரும், = இளம் பூரணியுமாகிய, நல்குறத்தி முத்தொடு = நல்ல முத்தனைய வள்ளியம்மையாருடனும், சசிமகளொடு = இந்திராணியின் திருமகளாராகிய தெய்வகுஞ்சரி யம்மையாருடனும், புகழ் திருத்தணிபதி = புகழ் பெற்ற திருத்தணி என்னுந் திருத்தலமாகிய, மலைமிசை நிலைபெறு பெருமாளே = திருமலைமேல் நிலைபெற்று வீற்றிருக்கும் பெருமையின் மிக்கவரே! தொட துளக்கிகள் = தொட்ட மாத்திரத்தில் அசைவு செய்து குலுக்குபவரும், அபகட நினேவிகள் = முறைமையில்லாத எண்ணத்தை யுடையவர்களும், குருட்டு மட்டைகள் = காமத்தால் கண்கெட்ட அறிவில்லாதவர்களும், குமரிகள் = இளம் பெண்களும், கமரிகள் = விலக்கத் தக்கவர்களும், சுதை சிறுக்கிகள் = கேட்டைத் தரும் சிறுக்கிகளும், குசலிகள் = தந்திரத்தைச் செய்பவரும், இசலிகள் = பிணங்குபவரும், முழுமோசம் துறுத்த மட்டைகள் = பூரணமான மோச குணங்களைத் திணித்துவைத்துள்ள மட்டிகளும், அசடிகள் = இழிமையானவரும், கசடிகள் = அடிமண்டிபோன்றவரும், முழுப்புரட்டிகள் = முழுப் புரட்டுகளைச் செய்பவரும், நழுவிகள் = நழுவுபவரும், மழுவிகள் = தங்கள் சூது வெளியுருவண்ணம் மழுப்புபவரும், துமித்த மித்திரர் = பொருளை அறுக்கின்ற நட்பை யுடையவரும், விலை முலையின வலை புகுதாமல் அடைத்தவர்க்கு = விலைகூறும் தனங்களினது வலையில் புகாமல் அடைந்தவர்களுக்கும், இயல் சரசிகள் = தமது தன்மையை சரசவார்த்தைகளால் புகுத்துபவரும், விரசிகள் = கலப்பு வரும் ஆகிய விலைமகளிர், தரித்த வித்ரும நிறம் என வர = பொருந்

திய பவள நிறத்துடன் அருகில் வர, உடன் அழைத்து = அவர்களை அழைத்து உடனுக வைத்து. சக்கிர கிரிவளை படி கொடு விளையாடி = சக்ரவாளகிரியாற் சூழப்பெற்ற பூவுலகில் அவர்களுடன் விளையாடி, அவத்தை = துன்பத்தில், தத்துவம் அழிபட = உண்மைகள் அழிவுறுத லால், இருள் அறை = ஆணவமலத்தை, விலக்குவித்து = தேவரீருடைய திருவருட் சக்தியால் நீக்குவித்து, ஒரு சுடர் ஒளி பரவ = நிகரற்ற ஞானவொளி வீசவும், நல்அருள் புகட்டி = குருவருளைப் பதித்து, உன் அடி இணை அருளுவது = தேவரீருடைய இரு திருவடிக் கமலங்களையும் தந்தருள்வது, ஒரு நாளே = ஒருநாள் உண்டோ?

## பொழிப்புரை

உயிர்கள் எல்லாவற்றையும் தோற்றுவித்து கன்மங் களைத் துய்ப்பித்து, ஆடுகின்ற அரனுருடன் அவைகளை மீளவும் ஒடுக்குகின்ற திருத்தேவியாரும், மரகதம் போன்ற திருவுருவுடையவரும், ஒப்பற்ற பரவெளியில் திருநடனம் புரிகின்றவருமாகிய உமையம்மையார் பெற்றருளிய இளம் புதல்வரே! பகைத்துஎதிர்த்த அவுணர்கள் இயமனுடைய நரக லோகஞ் சேர போர் புரிந்தவரும், சங்க சக்ரபாணியும், அழ கரும், உலகையும் உலகிலுள்ள பொருள்களையும்திருவயிற்றில் அடக்கியவரும்,நீண்ட திருவுருவுடையவரும் ஆகிய நாராயண மூர்த்தியின் மருகரே! கடல்கள் திடுக்கிடவும் சூராதி யவுணர் கள் மாய்ந்தொழியவும் குலாசலங்கள் தூள்பட்டழியவும் தீயுமிழ்ந்த ஒளிவீசும் வேலாயுதத்தைத் திருததி விடுத்தருளி, ஒரு நொடிப பொழுதுக்குள் உலகங்களை யெல்லாம் வலம் வந்த மயில்வாகனத்தை யுடையவருமாகிய வீரரே! தினைப் புனத்தில் இருந்தவரும் இரு தனபாரங்களை யுடையவரும் இளம் வயதுடைய வரும் நலமிகுந்த குறமாதும் ஆகிய வள்ளியம்மையாருடனும் இந்திராணியின் புதல்வியா ராகிய தெய்வயானை யம்மையாருடனும் புகழ் பெற்ற திருத் தணி என்னுந் திருமலைமீது நிலைபெற்று வாழ்கின்ற பெருமித முடையவரே! தொட்டவுடன் அசைந்து குலுக்குபவரும், முறையற்ற எண்ணத்தினரும, காமத்தால் கண்கெட்ட அறி விலிகளும், இள வயதுள்ளவரும், நில வெடிப்பினை யொத்த வரும், கேட்டைச் செய்கின்ற சிறுக்கிகளும். தந்திரவாதிகளும், பிணங்கிகளும், முழு மோசகுணங்கள் திணித்த மட்டிகளும், கீழ்மையாளரும், அடிவண்டல் போன்றவரும், முழுப்புரட்டு களைச் செய்பவரும், நழுவுபவரும், பொருளை யறுக்கின்ற நட்பையுடையவரும், விலைகூறு தனங்களின் வலையிற் புகா வாறு புலன்களைத் தடுத்தவர்களையுந் தமது வசப்படுத்தும் சரச வார்த்தைகளை யுடையவரும், கலட்புடையவரும் ஆகிய விலைமாதர்கள் பவள நிறத்துடன் அருகில் வர அவர்களை அழைத்து, சக்கரவாளகிரியாற் சூழப்பட்ட மண்ணுலகில்

அவர்களுடன் விளையாடி அவத்தையில் உண்மைகள் அழிபடுவதலால், ஆணவ மலத்தை அருட்சத்தியால் விலக்குவித்து, ஒப்பற்ற ஞானவொளி வீச அருள்பதிவித்து உமது திருவடித் தாமரைகளிரண்டையும் அடியேனுக்குத் தந்தருளும் நாள் ஒன்று உளதாகுமோ?

## விரிவுரை

**தொடத்துளக்கிகள் :—**

இபபாடலில் உள்ள நிந்தனைகள் பொதுமகளிரைக் குறித்தன. குலமகளிரைக் குறித்ததன்று.

**அடைத்தவர்க்கியல்...விளையாடி :—**

வலைபுகுதாமல் புலன்களை அடைத்தவர்க்கும் மயல் விளைப்பவர் என்பதில் அப்பொதுமகளிரின் ஆற்றலும் வெளிப்படுகின்றது. இவ்வாறே சுவாமிகள் பல இடங்களிலும் கூறுமாறு காண்க.

"தவர்சோரப் புரித்திடும் பாவ சொரூபிகள்"

—(குறித்தநெஞ்) திருப்புகழ்.

"துறவினர் சோரச்சோர நகைத்துப் பொருள்கவர் மாதர்"

—(அரிசனவாடை) திருப்புகழ்.

"முநிவோரும் மாலாகி வாட நகைத்துருக்கிகள்"

—(மாயாசொருப) திருப்புகழ்.

**படைத்தனைத்தையும் :—**

சக்தியே யாவையும படைத்தும் காத்தும் துடைத்தும் ஆன்மாக்கட்கு கன்மத்தைத் துய்ப்பித்துப் பக்குவம் வருவித்து உரிய காலத்தில் சிவத்தோடு அத்துவித முறுவித்து அருளுகின்றனள்.

**உமை :—**

உமா என்ற சொல் ஐகார ஈறுபெற்றுஉமை என்றாயிற்று. உ, ம, அ இம்மூன்று அட்சரங்கள்கூடி உமா என்றாயிற்று; உகரம் காத்தற்றொழிலையும், மகரம் அழித்தற்றொழிலையும், அகரம் படைத்தற்றொழிலையும் செய்கின்றது. அருளே சக்தியாதலின் காத்தற்றொழிலைக் குறிக்கும் உகரத்தை முதலாகக் கொண்டு உமா என்று வந்தது. அகர மகரத்தின் கூட்டுறவே ஓகாரமாகும்.

## கருத்துரை

உமை மைந்தரே! மால்மருகரே! மயில் வீரரே! தணிகைத் தனிமுதலே! மாதர் மயக்குற்று அழியும் அடியேனை பலரீக்கஞ் செய்து மலர்த்தாள் தந்து காத்தருள்வீர்.

## 76

எலுப்பு நாடிக ளப்பொ டிரத்தமொ
டழுக்கு மூளைகள் மச்சொடு கொட்புழு
விருக்கும் வீடதி லெத்தனை தத்துவ சதிகாரர்
இறப்பர் சூதக வர்ச்சுத ரப்பதி
யுழப்பர் பூமித ரிப்பர்பி றப்புட
னிருப்பர் வீடுகள் கட்டிய லட்டுறு சமுசாரம்

கெலிப்பர் மால்வலை பட்டுறு துட்டர்கள்
அழிப்பர் மாதவ முற்று நினைக்கிலர்
கெடுப்பர் யாரையு மித்திர குத்திரர் கொலைகாரர்
கிருத்தர் கோளகர் பெற்று திரிக்கள
வரிப்பர் சூடக ரெத்தனை வெப்பிணி
கெலிக்கும் வீடதை நத்தியெ டுத்திவ ணுழல்வேனோ

ஒலிப்பல் பேரிகை யுக்ரவ மர்க்கள
மெதிர்த்த சூரரை வெட்டியி ருட்கிரி
யுடைத்து வானவர் சித்தர்து தித்திட விடும்வேலா
உலுத்த ராவண னைச்சிர மிற்றிட
வதைத்து மாபலி யைச்சிறை வைத்தவன்
உலக்கை ராவிந டுக்கடல் விட்டவன் மருகோனே

வலிக்க வேதனை குட்டிந டித்தொரு
செகத்தை யீனவள் பச்சைநி றத்தியை
மணத்த தாதைப ரப்பிரம ருக்கருள் குருநாதா
வனத்தில் வாழும யிற்குல மொத்திடு
குறத்தி யாரைம யக்கிய ணைத்துள
மகிழ்ச்சி யோடுதி ருத்தணி பற்றிய பெருமாளே.

### பதவுரை

ஒலி பல் பேரிகை = ஒலிக்கின்ற பலவகையான பேரிகை வாத்தியங்களுடன், உக்ர அமர்க்களம் எதிர்த்து = கடுமையான போர்க் களத்தில் எதிர்த்து வந்த, சூரரை வெட்டி = சூராதியவுணர்களை வெட்டியழித்து, இருள் கிரி உடைத்து = இருள்மயமாய் நின்று மயக்கிய கிரவுஞ்சமலையைப் பிளந்து, வானவர் = தேவர்களும், சித்தர் = சித்தர்களும், துதித்திட = துதிசெய்ய, விடும் வேலா = வேலாயுதத்தை விடுத்தவரே! உலுத்த ராவணனை சிரம் இற்றிட வதைத்து =

ஆசையுடைய இராவணனுடைய சிரங்கள் அற்றுவிழுமாறு செய்து அவனை வதைத்து, மா பலியை சிறை வைத்தவன் = மகாபலிச் சக்கிர வர்த்தியைச் சிறையில் வைத்தவரும், உலக்கை ராவி, = உலக்கையை ராவி, நடுகடல் விட்டவன் = நடுச்சமுத்திரத்தில் எறிந்தவருமாகிய திருமாலின், மருகோனே = மருகரே! வலிக்க வேதனை குட்டி = தலை யில் வலியுண்டாகுமாறு பிரமதேவனைக் குட்டியவரே! நடித்து = ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு நடனஞ் செய்தவரும், ஒரு சகத்தை ஈனவள் = ஒப்பற்ற உலகங்களை யீன்ற, பச்சை நிறத்தியை மணத்த = பச்சை நிறமுடைய பார்வதி யம்மையை மணந்தவரும் ஆகிய, தாதை பரப்பிரமருக்கு அருள் = தந்தையாகிய பரப்பிரமப் பொரு ளாம் சிவபெருமானுக்கு உபதேசித்தருளிய, குருநாதா = குருநாதரே! வனத்தில் வாழும் மயில் குலம் ஒத்திடு = காட்டில் வாழும் மயிலினம் போன்ற, குறத்தியாரை = வள்ளி பிராட்டியாரை, மயக்கி அணைத்து = அன்பினால் மயங்குமாறு செய்து தழுவி, உளமகிழ்ச்சியோடு = திரு வுள்ளத்தில் மகிழ்ச்சியுடன், திருத்தணி பற்றிய = திருத்தணிகைப்பதி யில் பற்று வைத்து எழுந்தருளிய, பெருமாளே = பெருமையில் மிக்க வரே! எலும்பு = எலும்பு, நாடிகள் = நாடிகள், அப்பு = நீர், இரத்த மொடு = இரத்தம், அழுக்கு மூளைகள் = அழுக்குள்ள மூளைகள், மச் சொடு கொள்புழு = இழிவைக்கொண்ட புழு, இருக்கும் வீடு = இவை கள் இருக்கும் வீடு, அதில் எத்தனை தத்துவம் = அந்த வீட்டில்எத்தனை தத்துவங்கள், சதிகாரர் = மோசக்காரர்கள், இறப்பர் = அநீதி செய்ப வர்கள், சூது அகவர் சுதர் = சூதான உள்ளத்தையுடைய மக்கள், அ பதி உழப்பர் = அந்த ஊரில் மழுப்புபவர்கள், பூமி தரிப்பர் = மண்ணில் தோன்றுவர், பிறப்புடன் இருப்பர் = பிறந்த பிறப்புடன் இருப்பர், வீடுகள்கட்டி அலட்டுறும் சமுசாரம் கெடுப்பர் = வீடுகள் கட்டி அலைச்சலுறும் சமுசார வாழ்க்கையில் வெற்றி பெறுவர், மால் வலைப்பட்டு உறு துட்டஉரிகள் = ஆசை வலைப்பட்டுக் கிடக்கும் துஷ்டர்கள், அழிப்பர் = அழிவு செய்பவர், மாதவம் உற்று நினைக்கி லர் = பெரிய தவநிலையைச் சிறிதேனும் நினைக்காதவர்கள், யாரையும் கெடுப்பர் = எல்லோரையும் கெடுப்பார்கள், மித்திர குத்திரர் = நண்பர்கட்கு வஞ்சனை செய்வார்கள், கொலைகாரர் = கொலைபுரி வார்கள், கிருத்தர் = செருக்குள்ளவர்கள், கோளகர் = கோள் சொல் லுபவர்கள், பெற்று திரி களவு அரிப்பர் = தீமையைப் பெற்று திரிந்து களவுத் தொழிலில் தினவு கொண்டவர்கள், சூடகர் = கோப உள்ளத் தினர் எத்தனை வெபிணி = எத்தனை கொடிய நோய்கள், கெலிக்கும் வீடு அதை நத்தி = இத்தகைய துர்க்குணங்கள் குடியிருக்க அவைக ளுடன் போராடி வெல்லும் வீடாகிய இந்தவுடம்பை விரும்பி, எடுத்து இவண் உழல்வேனோ = உடம்பை எடுத்து இவ்வுலகில் அடியேன் திரிவேனோ?

## பொழிப்புரை

ஒலிக்கின்ற பல வகையான பேரிகைகளை முழக்கிக் கொண்டு கடுமையானபோர்க்களத்தில் எதிர்த்து வந்த சூராதி யவுணர்களை வெட்டியழித்து இருள் மயமாய் நின்ற கிரவுஞ்ச மலையைப் பிளந்து தேவரும் சித்தருந் துதிக்கச் செலுத்திய வேலாயுதரே! ஆசையுடைய இராவணனுடைய தலைகள் அற்று விழ வதைத்தவரும், மகாபலியைச் சிறையில் வைத்த வரும், இரும்பு உலக்கையைப் பொடி செய்து கடலில் எறிந்த வருமாகிய திருமாலின் மருகரே! வலிக்குமாறு பிரமதேவனைக் குட்டியவரே! திருநடனம் புரிந்து, ஒப்பற்ற உலகை யீன்ற மரகதவல்லியாம் உமாதேவியை மணந்த பிதாவாகிய, பரப் பிரமப் பரசிவனுக்கு உபதேசித்தருளிய குருநாதரே! காட்டில் வாழும் மயில் போன்ற வள்ளி நாயகியை மயக்கி யணைத்து உள்ளம் மகிழ்ச்சியுடன் தணிகையம்பதியில் வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! எலும்பு, நாடிகள், நீர், இரத்தம், அழுக்கு மூளைகள், இழிந்த புழுக்கள், இவைகள் குடியிருக்கும் வீடு, அதில் எத்தனையோ தத்துவங்கள், மோசக்காரர்கள் அநீதியுடையவர்கள், சூதான உள்ளத்து மக்கள், உடம்பான அந்தவூரில் மழுப்புவர், பூமியில் தோன்றுவர், பிறந்த பிறப் புடன் இருப்பர், வீடுகள் கட்டி அலைச்சலடையும்சமுசாரத்தில் வெற்றி பெறுவார்கள், ஆசை வலையிற்பட்டுக் கிடக்கும் பொல் லாதவர்கள், நன்மையை அழிப்பார்கள், பெரிய தவநிலையைச் சிறிதும் நினைக்காதவர்கள் யாவரையும் கெடுப்பார்கள், நண்பருக்குத் தீங்கு புரிவார்கள், கொலைஞர்கள், செருக்கு உடையவர்கள், கோள் சொல்லுபவாகள், கொடுமையைப் பெற்று திரிந்து திருட்டுத்தனத்துக்குத் திரிவார்கள், கோப உள்ளத்தினர், கொடிய நோய்கள், இவைகள் உறைய அவை களுடன் வெற்றி பெறும் இந்தஉடம்பாகியவீட்டினை விரும்பி, அதையே ஒழியாது எடுத்து இவ்வுலகில் அடியேன்உழல்வது முறையோ?

## விரிவுரை

**எலும்பு......இருக்கும் வீடு :—**

இந்த உடம்பை வீடாக உருவகம் புரிந்து சுவாமிகள் இந்தத் திருப்புகழில் விளக்கம் புரிகின்றார்.

எலும்பு, நாடி, நரம்புகள், நீர், உதிரம், மூளை, புழு முதலியன இந்த உடம்பில் உறைகின்றன.

**எத்தனை தத்துவம் :—**

இந்தவுடம்பில் ஆன்மதத்துவம் 24, வித்யாதத்துவம் 7, சிவதத்துவம 5, ஆக 36 தத்துவங்கள் உறைகின்றன.

இவற்றின் விரிவை சிவஞான போத முதலிய ஞான சாத் திரங்களால் அறிக

**சதிகாரர் :—**

இந்தவுடம்பில் வாழும் துர்க்குணங்கள் இன்ன இன்ன என்று கூறுவாராயினார்.

சதி—வஞ்சனை; மோசக்காரர்கள் இதில் உறைகின்றார்கள்.

**இறப்பர் :—**

இறத்தல்—கடத்தல். நியாயத்தைக் கடந்து அநீதியைச் செய்பவர்.

**சூதகவர்ச்சுதர் :—**

சூதான உள்ளத்துடன் கூடிய மக்களுக்கு வாய் வாழைப்பழமாகவும், மனங் கூத்திரிக்கோலாகவும் இருக்கும்.

**அப் பதி உழப்பர் :—**

அந்த வீட்டில் வாழ்ந்துகொண்டு தமது பேச்சின் திறமையால் தீமையை நன்மைபோல் பேசி மழுப்புகின்றவர்கள்.

**பூமி தரிப்பர் :—**

தீவினை செய்து செய்து மேலும் மேலும் இம் மண்ணுலகிலேயே பிறப்பவர்கள்.

**பிறப்புடன் இருப்பர் :—**

எடுத்த இப்பிறப்பினால் சிவகர்மம் புரிந்து பிறப்பையொழிக்காமல் அவகன்மம் புரிந்து இந்த வுடம்புடனேயே இருப்பார்கள்.

**வீடுகட்டி யலட்டுறு சமுசாரம் கெலிப்பர் :—**

ஆசை மேலீட்டினால் வீடுகள் பல புதுக்கி, இச்சமுசார வாழ்க்கையில் வெற்றி பெறுவார்கள்.

**மால் வலைப் பட்டுறு துட்டர்கள் :—**

மால்—ஆசையினால் வரும் மயக்கம்; அந்தமயக்கவலையில் பட்டு உழல்கின்ற பொல்லாதவர்.

**அழிப்பர் :—**

நீதி நெறிகளை அழிவு செய்வார்கள்.

**மாதவ முற்று நினைக்கிலர் :—**

பெரிய தவ நெறியை யடைந்து அதைச் சிறிதும் நினைக்காதவர்கள்.

**கெடுப்பர் யாரையும் :—**

எல்லோருக்கும் தீங்கு செய்து அவர்களைக் கெடுப்பார்கள்.

**மித்திர குத்திரர் :—**

மித்ரத்துரோகம் புரிபவர்; நம்பி நட்பு செய்தநண்பருக்குச் செய்யும் கெடுதல் கடவுளால் மன்னிக்க முடியாத பாவம்.

**கொலைகாரர் :—**

ஆடு மாடு மீன் கோழி முதலிய சிற்றுயிர்களைக் கொன்று தின்று திரிகின்றவர்கள்

**கிருத்தர் :—**

தான் என்ற அகங்காரம் உடையவர்கள்.

**கோளகர் :—**

சதா பிறரைப் பற்றிக் கோள் சொல்லிக் குடிகெடுப்போர்கள்.

**எத்தனை வெப்பிணி :—**

இந்த வுடம்பில் பலவகையான கொடிய நோய்கள் குடியிருக்கின்றன.

**விடதை நத்தி எடுத்திவண் உழல்வேனோ ? :—**

இந்த சரீரத்தை விரும்பி இதை விடாது எடுத்து இவ்வுலகில் அடியேன் உழலலாமோ ? அவ்வாறு உழல்வது கூடாது முருகா, ஆதலால் இனி இந்த வுடம்பை எடுத்து உழலாத வண்ணம் அடியேனுக்கு அருள் புரிவாய்.

> விதிகாணும் உடம்பை விடா வினையேன்
> கதிகாண மலர்க்கழல் என்றருள்வாய்'' —கந்தரநுபூதி

**மாபலியைச் சிறை வைத்தவன் :—**

பிரகலாதருடைய மகன் விரோசனன. விரோசனனுடைய மகன் மகாபலிச் சக்ரவர்த்தி. அவன் பேராலேயே மகாபலி பெரிய ஆற்றல் படைத்தவன் என்பது விளங்குகின்றது அல்லவா ? மாபலி மூன்று உலகங்களையும் வென்று, இந்திர வாழ்வையும் பெற்று, ஒப்பாரும் மிக்காருமின்றி வாழ்ந்தவன். அவனை அடக்கி இந்திரனுக்கு வாழ்வு தரும் பொருட்டு, திருமால் அதிதி வயிற்றில் வாமனருகத் தோன்றி மாவலி புரியும் யாகசாலையில் சென்று மூவடிமண் தானமாகக் கேட்டு, மண்ணும் விண்ணும் ஈரடியால் அளந்து, "மூன்ருவது அடிக்கு இடம் எங்கே ?" என்ருர். மாவலி "அடியேன் சிரம்" என்ருன்.

திரிவிக்கிரம மூர்த்தி மாவலியின் சிரத்தில் திருவடியை வைத்து அவனை அதல உலகத்தில் வைத்தருளினர் அவனுடைய வேண்டுகோளின்படி, வாசலில் காவல் புரிபவராகவும் நின்ருர்.

**உலக்கை ராவி நடுக்கடலிட்டவன் :—**

## இருப்பு உலக்கையும், யாதவ குலமும்

கண்ணபிரான் பாண்டவர்கட்குத் துணையாக நின்று துரியோதனனாதி குருகுலத்தையழித்தார். காந்தாரி கண்ணனைப் பார்த்து "கண்ணா! நீ என் குலத்தையழித்தனை. அதுபோல் உனது யதுகுலமும் 36வது ஆண்டில் ஒருங்கே அழியக் கடவது" என்றார். இந்தச் சாபத்தைக் கேட்ட கண்ணபிரான் புன்னகை புரிந்து, "அதுதான் என்கருத்தும்; அவ்வண்ணமே அழிவதாக" என்றார். ஏன்? பூபாரந் தீர்க்க வந்தவர். கொடுமையும் கோபமும் செருக்கும் படைத்தவர்களைப் பூமி தாங்க அஞ்சும்.

பாரத யுத்தம் முடிந்து சில ஆண்டுகட்குப் பின், துவாரகையில் வாழ்ந்த யாதவர்கள், விருஷ்ணிகள், அந்தகர்கள் முதலியவர்கள் நிரம்ப மதம் பிடித்து வாழ்ந்தார்கள். அப்போது எங்கும் துர்நிமித்தங்கள் உண்டாயின. புழுதிக் காற்று வீசியது. எரிகொள்ளிகள் விண்ணிலிருந்து வீழ்ந்தன.

துவாரகாபுரிக்கு விச்வாமித்திரர் கண்ணுவர் நாரதர் என்ற முனிவர்கள் வந்தார்கள். மதம் பிடித்த யாதவர்கள் கண்ணன் மகனாகிய சாம்பனை பெண்வடிவு புனைந்து வயிற்றில் துணி வைத்துக் கட்டி அம் மகா முனிபுங்கவர்களின் முன் சென்று "முனிவர்களே! இவள் பப்ருவின் மனைவி, கர்ப்பமாக இருக்கிறாள்; இவள் வயிற்றில் ஆண் குழந்தை பிறக்குமா? பெண் குழநதை பிறக்குமா" என்று கேட்டார்கள்.

முனிவர்களின் கண் சிவந்தது; அவர்களது அகங்காரத்தை நினைத்து அவர்கள் சீற்றங் கொண்டார்கள். "இந்த சாம்பன் வயிற்றில் இரும்பு உலக்கை பிறக்கும்; அந்த வுலக்கையால் பலராமன் கிருஷ்ணன் தவிர மற்ற அத்தனை பேரும் அழிவீர்கள்; பலராமர் கடலில் புகுவார். ஜரன் என்ற செம்படவன் பூமியில் சயனித்துக்கொண்டிருக்கின்ற கிருஷ்ணரைப் பிளக்கப் போகின்றான்" என்று கூறிவிட்டுச் சென்றார்கள்.

சிறந்த அறிவும் முடிவையறிந்த வுணர்வும் படைத்த வாசுதேவர் இதனைக் கேள்விப்பட்டு "அது அப்படியே ஆகட்டும்" என்றார்.

மறுநாள் சாம்பன் அந்தக் குலத்தை யழிக்கவந்த அந்தகனுடைய தூதனைப் போன்ற ஒரு கரிய பெரிய இரும்பு உலக்கையைப் பெற்றான். யாதவர்கள் அதை அரங்கொண்டு ராவிப் பொடிப் பொடியாகச் செய்து கடலில் கொட்டினார்கள். பலராமர், கிருஷ்ணர், பப்ரு என்ற புண்ணிய சீலர்கள் "இன்று

முதல் யாரும் மதுபானஞ் செய்யக்கூடாது. அப்படிக் குடித்தால் அவர்களைக் கழுவில் ஏற்றப்படும்" என்று பறைசாற்றச் செய்தார்கள்.

பின்னும் சில ஆண்டுகள் கழிந்தன. தலைமயிரில்லாத ஒரு முண்டன் கருநிறமும் பொன்னிறமும் கொண்டவுருவுடன் யாதவர்களின் வீடுகளில் சென்று சென்று மறைந்தான் அவனைப் பலர்வில்லம்பால் அடித்தார்கள். எல்லாவுயிர்களையும் கொல்லுபவனாகிய அவனை அடிக்க முடியவில்லை. பயங்கரமான பெருங்காற்று அடித்தது. எலிகளும் உடைந்த மண்பாண்டங்களும் எங்குங் காணப்பட்டன. பறவைகள் ஓயாது அச்சம் தரும்படி ஒலித்தன; ஆடுகள் நரிகள்போல் ஊளையிட்டன; நாய் வயிற்றில்பூனையும், கீரியிடத்தில்எலியும் பிறந்தன.

இப்படிப் பலப்பல தீய சகுனங்கள் நேர்ந்தன. இவற்றைக் கண்ட கண்ணபிரான் 'முப்பத்தாறுவது ஆண்டு வந்து விட்டது; காந்தாரியின் சாபம் விளையும் காலம் இது' என உணர்ந்தார். தீர்த்தயாத்திரை செய்யும்படி யாதவர்கட்குக் கட்டளையிட்டார். யாதவர்கள் யாவரும் பிரபாசபட்டினத்தையடைந்தார்கள். உத்தவரை மட்டும் அவ்விடம் விட்டுச் சென்றார்.

நிரம்ப மதுவைக் குடித்த அந்த யாதவர்கள் ஒருவரையொருவர் இகழ்ந்து பேசினார்கள். அதனால் பெருங் கோபமுற்று ஆயுதங்களால் ஒருவரை யொருவர் தாக்கினார்கள். கடற்கரையில் முளைத்துள்ள இரும்புக் கோரைகளைப் பிடுங்கினார்கள். அவைகள் இரும்புக் கோடாரிகளாக ஆயின. அவற்றால் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். கிருஷ்ணருடைய பிள்ளைகள், பேரன்கள், மற்ற யாதவர்கள் கண்ணனுடைய முன்னிலையிலேயே மாண்டார்கள். மிச்சமின்றி அத்தனை பேர்களும் அழிந்தார்கள்.

கண்ணபிரான் துவாரகை சென்று பெரிய பிதாவை வணங்கி "அர்ச்சுனன் வந்து உங்களைக் காப்பாற்றுவான்' என்று கூறிக் கானகம் போனார் தாரகன் என்ற தேர்ப்பாகன் தேரின் மீது ஏறி அத்தினபுரம் போனான்.

காட்டில் ஏகாந்தமான இடத்தில் இருந்த பலராமரைப் பார்த்தார். யோக சமாதியில் அமர்ந்திருந்த பலராமருடைய முகத்திலிருந்து ஒரு வெள்ளைப் பாம்பு வெளிப்பட்டது. அந்தப் பாம்பு ஆயிரம் தலைகளுடன் வளர்ந்து கடலுக்குள் சென்றது.

துருவாசர் "உள்ளங்கால் வழி ஆன்மா பிரியும்" என்று கூறிய சொல்லை நினைத்தார். குராமரத்தின் கீழ் இரண்யநதிக் கரையில் படுத்து யோகம் புரிந்தார். அந்த உலக்கையைராவிக்

கடலில் கொட்டியபோது மிகுந்த ஒரு ஈசசங் கொட்டை யளவுள்ள கூரிய துண்டைக் கடலில் எறிந்தார்கள். அதை ஒருமீன் விழுங்கிற்று; அம்மீனைப் பிடித்தவர்கள் அவ்விரும்புத் துண்டைக் காட்டில் எறிந்தார்கள் அக்கூரிய இரும்பை ஜரன் என்ற வேடன் எடுத்துத் தன் அம்பின் முனையில் அமைத்துக் கொண்டான். அவன் தொலைவில் தெரிந்த கண்ணனுடைய சிவந்த திருவடியை செங்கழுகு என்று எண்ணி அந்தப் பாணத்தை விடுத்தான். பிறகு அவன் அருகில் வந்து, கண்ணபிரானை வணங்கித் துக்கித்தான். அவனுக்கு அருள் செய்துவிட்டு, மண்ணும் விண்ணும் ஒளி யினால் விளங்க தேவர்கள் துதி செய்ய கண்ணபிரான் வைகுந்தம் சேர்ந்தார்.

வலிக்க வேதனைக் குட்டி :—

பிரணவ மந்திரத்துக்குப் பொருள் தெரியாத பிரமதேவ னுடைய நான்கு தலைகளில் முருகவேள் குட்டியபோது அவரு டைய குடுமி விபூதிபோல் துகள்பட்டு உதிர்ந்தது.

"நாலுமுக னதியரி யோமென அதாரமுறை
யாதபிர மாவை விழ மோதிபொரு ளோதுகென
நாலு சிரமோடு சிகை தூளிபட தாளமிடு மிலையோனே."
—(வாலவயதாகி) திருப்புகழ்.

ஒரு சகத்தை யீனவன் :—

அகில வுலகங்களையும் பெற்ற அன்னை பார்வதி; அத்தனை யுலகங்களையும் ஈன்றும் கன்னியாகவே விளங்கு கின்றாள்.

"அகிலாண்ட கோடியீன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே" —தாயுமானார்.

உளமகிழ்ச்சியோடு திருத்தணி பற்றிய பெருமாளே :—

முருகவேள் குறிஞ்சி நிலமாகிய மலைகளில் வசிப்பவர். பல்வேறு மலைகளில் வசிப்பினும், திருத்தணிகை மலையில் அதிக மகிழ்ச்சியாக வசிக்கின்றார். இதை முருகவேளே வள்ளி நாயகியிடம் கூறுகின்றார்.

"சுந்தரக் கிரி தொல் புவிதனிற் பல எனினும்
இந்த வெற்பினில் ஆற்றவும் மகிழ்ச்சியுண்டெனக்கே"
—கந்தபுராணம்.

## கருத்துரை

திருத்தணிகேசா! உடம்பெடுத்து அலையாவண்ணம் அருள் புரிவாய்.

## 77

திருட்டு நாரிகள் பப்பர மட்டைகள்
வறட்டு மோடியி னித்தந டிப்பவர்
சிறக்கு மேனியு லுக்கிம டக்குகண் வலையாலே
திகைத்து ளாவிக ரைத்தும னத்தினில்
இதத்தை யோடவி டுத்தும யக்கிடு
சிமிட்டு காமவி தத்திலு முட்பட அலைவேனோ

தரித்து நீறுபி தற்றிடு பித்தனு
மிதத்து மாகுடி லைப்பொருள் சொற்றிடு
சமர்த்த பாலஎ னப்புகழ் பெற்றிடு முருகோனே
சமப்ர வீணம தித்திடு புத்தியில்
இரக்க மாய்வரு தற்பர சிற்பர
சகத்ர யோகவி தக்ஷிண தெக்ஷிண குருநாதா

வெருட்டு சூரனை வெட்டி ரணப்பலி
களத்தி லேகழு துக்கிரை யிட்டிடர்
விடுத்த கூளிகள் தித்திகு தித்தென விளையாட
விதித்த வீரச மர்க்கள ரத்தமு
மிரற்றி யோடவெ குப்ரள யத்தினில்
விலக்கி வேல்செரு கிட்டுயிர் மொக்கிய மறவோனே

பெருக்க மோடுச ரித்திடு மச்சமு
முளத்தின் மாமகிழ் பெற்றிட வுற்றிடு
பிளப்பு வாயிடை முப்பொழு தத்துமொர் கழுநீரின்
பிணித்த போதுவெ டித்துர சத்துளி
கொடுக்கு மோடைமி குத்ததி ருத்தணி
பிறக்க மேவுற அத்தல முற்றுறை பெருமாளே.

### பதவுரை

*நீறு தரித்து=திருநீற்றினைத் தரித்து, பிதற்றிடு பித்தனும்=வேதங்களை மொழிந்த பித்தனாகிய சிவபெருமான், சமர்த்த=ஆற்றல் உடையவரே! பால=குழந்தையே! இதத்து=இனிமையாக, மா குடிலை பொருள் சொற்றிடு=பெருமை பொருந்திய பிரணவ மந்திரத்தின் பொருளை உபதேசிப்பாயாக, என புகழ் பெற்றிடு=என்று தேவரீரைக் கேட்குப்படியான புகழைப் பெற்றுள்ள, முருகோனே=முருகக்கடவுளே! சமப்ரவீண=நிபுணரே! மதித்திடு புத்தியில்=*

போற்றுகின்ற அடியார்களின் புத்தியில், இரக்கமாய் வரு தற்பர= கருணையுடன் எழுந்தருளும் பரம்பொருளே! சிற்பர=அறிவுக்கு அப்பாற்பட்டவரே! சகத்ர யோக விதக்ஷிண=ஆயிரக்கணக்கான பல யோகங்களுள் சிறப்புற்றதான மௌன யோகநிலையைக் கொண்ட, தெக்ஷிண குருநாதா=தெட்சிணாமூர்த்தியான குருநாதரே! வெருட்டு சூரனை வெட்டி=தேவர்களை அச்சப்படுத்திய சூரபன்மனைக் கொன்று, ரணவெளி களத்திலே=போரில் கொலையுண்ட இடங்களில், கழுதுக்கு இரை இட்டு=பேய்களுக்குப் பிணங்களை இரையாகக் கொடுத்து, இடர்விடுத்த கூளிகள்=அதனால் பசித்துன்பம் நீங்கிய பேய்கள், தித்திகுதித்தென விளையாட விதித்த வீர=தித்திகுதித்தென்று தாளவரிசையுடன் விளையாடும்படிச் செய்த வீரமூர்த்தியே! சமர் கள ரத்தமும்=போர்க்களத்தில் உதிரமானது, வெகு ப்ரளயத்தினில் இரற்றி ஓட=பெரிய பிரளய வெள்ளம்போல் ஒலித்து ஓட, விலக்கி=தேவர்களின் துன்பத்தை நீக்கி, வேல் செருக்கி=வேலை நுழைவித்து, உயிர் மொக்கிய=உயிரை யுண்ட, மறவோனே=வீரமூர்த்தியே! பெருக்கமோடு சரித்திடு மச்சமும்= மிகுதியாக உலாவுகின்ற மீன்கள், உளத்தில் மா மகிழ் பெற்றிட= உள்ளத்தில் மிகுந்த மகிழ்ச்சி பெற, உற்றிடு பிளப்பு வாயிடை= தமது பிளப்புள்ள வாயில், முப்பொழுதத்தும்=காலை உச்சி மாலை யென்ற மூன்று வேளைகளிலும், ஓர் கழுநீரின்=ஒப்பற்ற செங்கழு நீரின், பிணித்தபோது வெடித்து=கட்டுள்ள மொட்டுகள் வாய் விரிந்து, ரசத்துளி கொடுக்கும் ஓடைமிகுத்த=தித்திக்கின்ற தேன் துளிகளைத்தருகின்ற சுனைபெருமையுடன் திகழும், திருத்தணி=திருத்தணி மலையில், பிறக்க மேவுற=விளக்கம் பொருந்த, அத்தலம் உற்று உறை=அத்திருத் தலத்தில் பொருந்தி வாழ்கின்ற, பெருமாளே= பெருமையில் மிகுந்தவரே! திருட்டு நாரிகள்=திருட்டுத்தனமுள்ள பெண்கள், பப்பர மட்டைகள்=கூத்தாடும் பயனிலிகள், வறட்டு மோடி இனித்த நடிப்பவர்=பசையில்லாத செருக்குடன் இனிமையாக நடிப்பவர்கள், சிறக்க மேனி உலுக்கி=சிறப்புடன் உடம்பைக் குலுக்கி, மடக்கு கண் வலையாலே=அப்படியும் இப்படியும் திருப்புகின்ற கண்வலையினாலே, திகைத்து=மயக்குவித்து, உள் ஆவி கரைத்து=உள்ளுறையும் உயிரைக் கரையுமாறு செய்து, மனத்தினில் இதத்தை ஓட விடுத்து=மனத்தில் உள்ள இன்பத்தை ஓடிப்போம் படிச் செய்து, மயக்கு இடு சிமிட்டு=மயக்கத்தைத் தருகின்ற கண் சிமிட்டலால், காமவிதத்திலும் உட்பட அலைவேனோ=காமவழியில் உட்படும்படி அலைவேனோ?

## பொழிப்புரை

திருநீற்றைத் தரித்து வேதங்களைக் கூறிய பித்தனும் சிவபெருமான், "சமர்த்தனே! குழந்தையே! பெரிய பிரணவப்

பொருளை இனிமையாக உபதேசிப்பாயாக" என்றுதேவரீரைக் கேட்கும் புகழ்பெற்ற முருகக் கடவுளே! நிபுணரே! போற்று கின்ற அடியார்களது அறிவில் கருணையுடன் எழுந்தருளும் பரம்பொருளே! அறிவுக்கும் அப்பாற்பட்டவரே! ஆயிரக் கணக்கான யோகங்களுக்குள் சிறந்த சிவயோக நிலையைக் கொண்ட தட்சிணாமூர்த்தியான குருநாதரே! தேவர்களை அஞ்சும்படிச் செய்த சூரபன்மனைச் சங்கரித்து போரில் கொலையுண்ட இடங்களில் பேய்களுக்குப் பிணக்குவியல்களை உணவாகக் கொடுத்து, அதனால் பசித்துன்பம் நீங்கிய பேய் கள் தித்திதித்தென்று விளையாடும்படிச் செய்த வீரமூர்த் தியே! போர்க்களத்தில் உதிரம் பெரிய பிரளய வெள்ளம போல் ஒலித்து ஓட, துன்பத்தை விலக்கி, வேலை விடுத்து உயிரை உண்ட வீரக் கடவுளே! மிகுதியாக உலாவுகின்ற மீன்கள் உள்ளத்தில் மிக்க மகிழ்ச்சி பெறத் தமது பிளப்புள்ள வாயில், காலை உச்சி மாலை என்ற மூன்று வேளைகளிலும் ஒப் பற்ற செங்கழுநீரின் கட்டுள்ள மொட்டுக்கள் வாய் விரிந்து தேன் துளிகளைக் கொடுக்கும்; செங்கழுநீர் சுனை சிறந்து விளங்கும் திருத்தணிகையில், விளக்கம் பொருந்த அத்திருத் தலத்தில் வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! திருட்டுப் பெண்கள், கூத்தாடும் பயனில்லாதவர்கள், பகையற்ற செருக் குடன் இனிது நடிப்பவர்கள், சிறப்புடன் தேகத்தைக் குலுக்கி, அப்படியும் இப்படியுமாக கண் வலையாலே மயக்கு வித்து, உயிரைக் கரைத்து; மனத்தில் உள்ள இன்பத்தை ஓடிப் போம்படிச் செய்து, மயக்கத்தைத் தருகின்ற கண் சிமிட்டலால் காம வழியில் உட்படும்படி அடியேன் அலைய லாமோ?

## விரிவுரை

**திருட்டு நாரிகள் :—**

இத்திருப்புகழின் முதல் இரண்டு அடிகளில் விலைமகளி ரைப் பற்றி அடிகளார் கூறுகின்றார்.

தம்மை நாடி வந்தவர்களிடம் உண்மையன்பு காட்டாது, மனத்தில் ஒன்றும் முகத்தில் ஒன்றுமாகக் கரவுடன் நடப் பார்கள். அதனால் அவர்கள் இருமனப் பெண்டிர் எனப்படு வார்கள்.

**பப்பர மட்டைகள் :—**

பப்பரம்—ஒருவகை வரிக்கூத்து; மட்டை—பயனில்லாத பொருள். பிறவியெடுத்ததன் பயன் இன்னதென்று அறியா மல் வீணாக வாழ்பவர்கள்.

**வறட்டு மோடியினித்த நடிப்பவர் :—**

வறட்டு—சாறு இல்லாதது. பொருளின்றிப் பேசுவதை "வறட்டு வார்த்தை" என்பார்கள். வறட்டு ஜம்பம் என்றுங்

கூறுவர். கொடுமையை மறைத்து இனிமை போல் நடித்துப் பழகுவார்கள்.

**சிறக்கு மேனி உலுக்கி :—**

மலரும், அணிகலன்களும் நிறைந்த அழகிய உடம்பு மேலும் பளிச்சிடுமாறு குலுக்குவர். அதனால் அவர்களின் அழகு மிகும். ஒரு பொருள் அசைந்தால் அதன் அழகு அதிகப்படும். திருக்கோயில்களில் அலங்கரித்த உத்சவ மூர்த்தியை அப்படி சிறிது அசைப்பார்கள். அதற்கு வையாளி நடையென்று பேர். பூத்தமலர்க் கொம்பு அசைவதால் அழகு பெறும்.

**மடக்கு கண் வலையாலே :—**

கண்கள் நீரில் பிறழும் சேல்மீன் போல இப்படியும் அப்படியும் அசையுமாறு செய்து, இளைஞர்களை அக் கண் வலையால் பிடித்து வசப்படுத்துவார்கள். வலையால் பறவைகளைப் பிடிப்பவர் காட்டில் வலை வைப்பார்கள். வேசையர்கள் கூந்தலாகிய அடர்ந்த காட்டிலே கண்ணாகிய வலையை வீசி, இளைஞர்களின் உள்ளங்களாகிய பறவைகளைப் பற்றுவார்கள்.

"திண்ணிய நெஞ்சப் பறவை சிக்கக் குழற் காட்டில்
கண்ணி வைப்பார் மாயங் கடக்கு நாள் எந்நாளோ" —தாயுமானூர்

**திகைத்துனாவி கரைத்து :—**

ஆசை மிகுதியால் இளைஞர்கள் மனந்திகைப்புற்று காமாக்கினியால் உயிர் உருகி கரையுமாறு புரிவார்கள்.

**மனத்தினில் இதத்தை ஓட விடுத்து :—**

மனத்தினில் இன்பத்தை ஓடி ஒளியுமாறு விலக்குவர். ஆசை வயப்பட்டோர் துன்பம் அடைவார்கள் என்பது தேற்றம்.

**மயக்கிடு சிமிட்டு :—**

மயக்கு இடு சிமிட்டு கண்களை அப்படி ஒயிலாகச் சிமிட்டுவதனால் மயக்கத்தை வளர்ப்பார்கள்.

**காம விதத்தினுமுட்பட அலைவேனோ :—**

ஆசாபாசத்தில் உட்பட்டவர்கள் அலைவார்கள். "முருகா! அவ்வண்ணம் ஆசையிற் சிக்கி அலைதல் முறையோ? அடியேனை அவ்வாறு அலையாத வண்ணம் ஆட்கொள்ளுவீர்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்கள்.

**தரித்து நீறு :—**

## திருநீற்றின் பெருமை

சிவபெருமான் திருநீறு தரித்து அருள் புரிகின்றார்.

"நீறு தாங்கிய திருநுதலானை" —சுந்தரர் தேவாரம்.

நீறு—வினைகளை நீறுக்குவது. வடமொழியில் 'பஸ்மம். என்று பேர். எல்லா சமயங்களுக்கும் உரியது திருநீறு.

"சமயத்தில் உள்ளது நீறு" —திருஞானசம்பந்தர்

நம்முடைய வினை நீங்கும்பொருட்டு நாம் திருநீறு தரித்துக் கொள்ளுகின்றோம். இறைவன் ஏன் திருநீறு தரிக்கின்றார்?

குழந்தைகட்குப் பிணியுண்டானால் தாய் பத்தியம் இருப்பதுபோல், தமது திருவடிகளை நினைக்கின்ற அடியார்களது வினைகள் விலகும்பொருட்டு இறைவன் திருநீறு தரிக்கின்றார்.

"நினைவொடு பணிபவர் வினைதுகள் பட எதிர்
நினைந்து திருநீறணிந்த தொருபால்" —கொலு வகுப்பு.

பகைவருடைய கணைகளினின்றுங் காக்கும் பொருட்டு வீரர்கள் கவசம் அணிவார்கள். அதுபோல் காமாதி பகைவருடைய துன்பம் நேராவண்ணம் அணியும் கவசம் திருநீறு; அதனால் அது ரக்ஷை எனப் பேர்பெறும்.

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை" —திருமந்திரம்.

"சைவ மரபில் பிறந்து திருநீறு அணியாத பாவிகள் நெற்றியைச் சுடு", "திக் பஸ்ம ரஹிதம் பாலம்" என்று பஸ்ம ஜாபால உபநிடதங் கூறுகின்றது.

வெண்மைமை உலகம் விரும்பும். வெள்ளையாக உடுப்பது சிறப்பு. "வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை" என்பது பழமொழி. சூதுவாதில்லாதவர்களைப் பார்த்து "வெள்ளையுள்ளம்" என்று கூறுவர்.

வெண்மையான துணி, வெண்மையான கடிதம் இவைகளை நெருப்பில் இட்டால், கருமையாகிவிடும். வெண்மையான பொருள்கள் யாவற்றையும் கருமையாக்கும் அக்கினி கருமையான சாணத்தை மட்டும் வெண்மையாக்கி விடுகின்றது. ஆகவே நமது அக்ஞானமான கருமையை ஞானமாகச் செய்வது திருநீறு.

சாணத்தால் நீற்ற சாம்பல் அவரைச் செடியில் வரும் கருங் கிருமிகளைக் கொல்லும் ஆற்றலுடையது. விதிப்படி சாணத்தால் நீற்ற வெண்ணீறு நம் சரீரத்தில் உள்ள நச்சுக் கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் உடையது என உணர்க.

"அருள் செய்நீறிடார் அமுதுனக்கிடினும்
அம்மலத்தினை அருந்துதல் ஒழிக" —திருஅருட்பர.

சைவ சமயமாம் நமது தெய்வச் சமயத்தின் சின்னங்கள் மூன்று. திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுந்து. நெற்றி

யில் நீறும், மார்பில் உருத்திராக்கமும், உள்ளத்தில் திருவைந்தெழுத்தும் திகழவேண்டும். "நீறில்லா நெற்றி பாழ்" என்கின்றார் ஔவையார்.

தீட்சை பெறுதார் இடுகின்ற மலர், முகவரி எழுதாத கடிதம் உரியவரிடம் சேராததுபோல், இறைவன்பால் சேராது. அதனால் கண்ணபிரான் உபமன்யு முனிவரிடம் தீட்சைபெற்று சிவபூசை செய்தார்.

அங்ஙனம் தீட்சை பெற்றுக்கொண்டோர், திருநீற்றை எடுத்து இட உள்ளங்கையில் வைத்து ஓம் என்ற பிரணவத்தை வலக்கை மோதிர விரலால் எழுதி, பஞ்சகலா மந்திரம், பஞ்சப் பிரம்ம மந்திரம் ஷடங்க மந்திரம் கூறியணிய வேண்டும். அதனால் அது மந்திர விபூதியாக ஆகின்றது.

இதனை "மந்திரமாவது நீறு" என்ற தமிழ் மறையால் அறிக. நீர் இட்டுக் குழைத்து சிரசு, நெற்றி, மார்பு, நாபி, இரு முழந்தாள்கள், இரு முழங் கைகள், இரு மணிக்கட்டுக்கள், இரு தோள்கள், இரு விலா, முதுகு, கழுத்து ஆக இந்த பதினாறு அங்கங்களில் அணிந்து கையலம்பி, அந்த நீரை இடக்கையில் கும்பமுத்திரையாகப் பிடித்து, சிந்தும் நீரை, சம்மிதாமந்திரம் கூறி சிரசில் தெளித்துக்கொள்ள வேண்டும். இது மந்திரஸ்னனமாகும்.

> "பிணியெலாம்வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்புமஞ்சேன்
> துணிநிலா அணியினான்றன் றொழும்பரோ டழுந்தியம்மால்
> திணிநிலம் பிளந்து காணாச் சேவடிபரவி வெண்ணீ(று)
> அணிகிலாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறுகின்றார். நோய் கட்கும், பிறப்பு இறப்பு என்ற பெருந் துயருக்கும் அஞ்சாத அப் பெருவீரர் வெண்ணீறணியாத பேதைகட்கு அஞ்சுகின்றார். "திருவெணீறிடாமூடர்" என்கிறார் அருணகிரி நாதர்.

ஆதலால் புனிதமானதும், பெரிய ஐசுவர்யமாவதும் ஆகிய அருட்பெருந்திருவுடைய திருநீற்றை அணிந்து உய்வார்களாக.

**பிதற்றிடு பித்தனும் :—**

இறைவன் பேசுவது வேதமேயாகும்.

"பேசுவதுந் திருவாயால் மறைபோலுங் காணேடீ" —திருவாசகம்.

ஆன்மாக்கள் செய்யும் பிழைகளைப் பொறுத்து அருள் புரிகின்ற பரம கருணையுடையவன் ஆதலின் பித்தன் எனப் பெற்றான். மகன் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுத்து வாழ்த்தும் தாயைக் கண்டு, "பெற்ற மனம் பித்து; பிள்ளை மனங் கல்லு" என்று கூறும் பழமொழியாலும் உணர்க.

**இதத்து மாகுடிலைப் பொருள்......குருநாதா:—**

சனகாதி முனிவர்கட்குக் கல்லாலின்புடையமர்ந்து எல்லாமாய் அல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி யிருந்து காட்டிச் சொல்லாமல் சொன்னவராகிய குருதட்சிணாமூர்த்தி, "சமர்த்தனே! குழந்தாய்! இனிய பிரணவப் பொருளைச் சொல்" என்று துதி செய்து கேட்டருளினர். ஆதலின் குருவுக்குங் குருவாதலின் ஆதிகுருப்புகழ் மேவுங் கொற்றவன் முருகன்.

**சமப்ரவிண:—**

சமப்ரவீணன்—நிபுணன். ஆக்கல், அளித்தல், அழித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐம்பெருந் தொழில்களை விளையாட்டாக எளிதில் புரிகின்ற ஆற்றலுடையவன்.

**மதித்திடு புத்தியில் இரக்கமாய் வருதற்பர:—**

இறைவன் தன்னையுணர்ந்து உணர்வுமயமாய் நிற்கும் அடியவரது அறிவில் கலந்து விளங்குவான்.

"கற்றிடும் அடியவர் புத்தியிலுறைபவ" —திருப்புகழ்.

"அறிவொன் றறநின் றறிவா ரறிவில்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ" —அநுபூதி.

**சகஸ்ரயோக:—**

யோகத்தில் பல வகையுண்டு. ஹடயோகம், ஆலம்ப யோகம், நிராலம்பயோகம், ஆதாரயோகம், நிராதாரயோகம், மந்திரயோகம். கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம் என்பனவாதி அநேகம். இவற்றுக்கெல்லாம் மேலான சிவ யோகத்தினை உணர்த்தும் ஞானகுரு முருகன்.

**தக்ஷிண குருநாதா:—**

தென்னாட்டில் அப்பரமபதியாகிய முருகனையுணர்ந்து வழிபடுவார் பலர். அகத்தியர், சிகண்டி, நக்கீரர், அருணகிரி நாதர், குமரகுருபரர், சிதம்பர சுவாமிகள், இராமலிங்க அடிகள், பாம்பனடிகள் முதலிய அனைவரும் தென்னாட்டில் அவதரித்தவர்களேயாகும். அதனால் தட்சிண குருநாதர் என்றார்.

**வெருட்டு சூரனை......மறவோனே:—**

இந்த ஐந்தாவது ஆறாவது அடிகளில் போர்க்கள வர்ணனைகளையும், பேய்கட்கு உணவளித்த பெருமையையும், சூராதியவுணரை அழித்த போர்த் திறத்தையும் சுவாமிகள் கூறுகின்றார்கள்.

**பெருக்கமோடு சரித்திடு மச்சமும்:—**

திருத்தணியில் செங்கழுநீர் சுனை ஒன்று இன்றும் இருக்கின்றது. இச் சுனை கோயிலின் தென்புறம் இருக்கின்றது.

சுனையின் முன்புறம் ஒரு சிறு கோபுரம் உளது. அதனால் அது கோயில்போல் காட்சி தரும். அதில் அர்ச்சகரை யன்றி பிறர் புகமாட்டார்கள். அச்சுனையில் செங்கழுநீர் மலர் மலரும். அச் சுனை நீரை தூய்மை செய்துகொண்டு மீன்கள் நிரம்ப உலாவும்.

**உளத்தின் மாமகிழ் பெற்றிட ரசத்துளி கொடுக்கு மோடை :—**

தன்னிடத்தில் வாழ்ந்து, தூய்மை செய்யும் அந்த மீன்கள் மகிழுமாறு செங்கழுநீர் மலர்கள் அம்மீன்கட்கு உணவு தந்து அவைகளை மகிழச் செய்கின்றன. என்னவுணவு தருகின்றன ? செங்கழுநீர் மலர் மூன்று வேளைகளிலும் மலர்ந்து மீன்களின் பிளந்த வாயில் தேன் துளிகளை வழங்கி உதவுகின்றன.

செங்கழுநீர்ச் சுனையையுடையதால் திருத்தணி கல்லார கிரி யென்று பேர் பெற்றது. செங்கல்வராயன் என்ற பேர் இதனால் ஏற்பட்டது.

## கருத்துரை

தணிகேசா ! ஆசாபாசத்தில் சிக்கி அலையாமல் அடியேனை ஆட்கொள்ளும்.

# வள்ளிமலை

வள்ளிமலை யென்ற திருத்தலம் வட ஆர்க்காடு மாவட்டம் இராய வேலூருக்குப் பன்னிரண்டு கல் தொலைவில் ஈசான மூலையில் விளங்குகின்றது. திருவல்லம் என்ற சிவத்தலத்துக்கு வடக்கேயுள்ளது. சிறந்த புனிதமான தேவி பீடம். வள்ளிநாயகியார் அவதரித்த அரிய தலம். பல சித்தர்களும் முத்தர்களும் வாழ்ந்த—வாழ்கின்ற மகிமையுடையது.

மலையுச்சியில் வள்ளிபிராட்டியார் நீராடிய சூரியன் காணாத சுனையை இன்றுங் காணலாம். அருங்கோடையிலும் நீர் வற்றாதது. கோயில் குகைக் கோயில். வேறு எங்கும் இது போன்ற காட்சியைக் காண இயலாது. கணேசர் குண்டு, வள்ளியம்மையின் பரண் முதலிய சின்னங்கள் காண இருக்கின்றன. மலைவலம் வரலாம். முருகப்பெருமான் வேதங்களுங்காணாத திருவடி வைத்து உலாவிய அரிய பெரிய திருத்தலம்.

"குறமறவர் கொடியடிகள் கூசாது போய் வருட
கரடி புலி திரிகடிய வாரான கானில் மிகு
குளிர்கணியி னிளமரம் தேயாகி நீடியுயர் குன்றுலாவி"

—(உறவின்முறை) திருப்புகழ்.

"எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடை யுழை
இரலைமரை இரவு பகல் இரைதேர் கடாடவியில்
எயினரிடு மிதணதனில் இளகுதினை கிளிகடிய
இனிதுபயில் சறுமிவளர் புனமீதுலாவுவதும்"
—சீர்பாத வகுப்பு.

"சுனையோடருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே"

"விடுஞ்சுரர் மாமுடிவேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே" —கந்தரநுபூதி.

இத் திருத்தலத்தில் ஆண்டுதோறும் தமிழாண்டின் இறுதி நாளன்று திருப்படி விழா சிறப்பாக நடைபெறுகின்றது. ஞானத் தாயாக விளங்கும் எம்பிராட்டி வள்ளியம்மை அவதரித்த தலம். ஆதலால் எல்லோருக்குந் தாயகமாகவும் தலங்களின் நாயகமாகவும் விளங்குகின்ற இத்தலத்தை எல்லோரும் சென்று தரிசித்து இகபர நலன்களை எய்துதல் வேண்டும்.

இராய வேலூரிலிருந்து பஸ் வசதியுண்டு.

வேலூர் வள்ளி மணாளன் திருப்புகழ்ப் பாராயண சபையார்கள் இராஜகோபுரம் புதுக்கியும் திருப்படிகள் அமைத்தும், வள்ளிநாயகியின் ஆலயத்தைப் புதுப்பித்தும், இன்னும் பல அரிய திருத்தொண்டுகள் புரிந்து வருவது பாராட்டுதற்குரியது.

தனிமையும் இனிமையும் அமைந்த இத் திருத்தலத்தில் சென்று இருந்தால் மனோலயந் தானே வரும்.

இங்கு சென்று அறம்புரிவோர்க்கு ஒன்றுக்குக் கோடியாகப் புண்ணியம் பெருகும்: வினை கருகும்.

## 78

அல்லில்விழி யாலு முல்லைநகை யாலு
மல்லலபட ஆசைக் கடலீயும்
அள்ளவினி தாகி நள்ளிரவு போலு
முள்ளவினை யாரத் தனமாரும்
இல்லுமிளை யோரு மெல்லஅய லாக
வல்லெருமை மாயச் சமனாரும்
எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளி
லுய்யவொரு நீபொற் கழல்தாராய்

தொல்லைமறை தேடி யில்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா
துள்ளிவிளை யாடு புள்ளியுழை நாண
வெள்ளிவன மீதுற் றுறைவோனே
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லைவடி வேலைத் தொடுவோனே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

## பதவுரை

தொல்லை மறை தேடி=பழமையான வேதங்கள் தேடிப் பார்த்து, இல்லை எனும் நாதர்=காணமுடியவில்லையென்றுமுறையிடுகின்ற சிவபெருமானுக்கு, சொல்லும் உபதேச=உபதேசத்தைச் சொல்லியருளிய, குருநாதா=குருநாதரே! துள்ளி விளையாடும்=துள்ளி விளையாடுகின்ற, புள்ளி உழை நாண=புள்ளிமான் வெட்கப்படுமாறு, எள்ளி=இகழ்கின்ற வள்ளிபிராட்டியார் வாழ்ந்த, வனமீது உற்று உறைவோனே=வள்ளிமலைக் காட்டில் சென்று வாழ்கின்றவரே! வல் அசுரர் மாள=வலிமையுடைய அசுரர்கள் மாளவும், நல்ல சுரர் வாழ=நற்குணமுடைய தேவர்கள் வாழவும், வல்லை வடிவேலை தொடுவானே=விரைவில் கூரிய வேலாயுதத்தை விடுத்தவரே! வள்ளிபடர் சாரல்=வள்ளிக்கொடி படர்ந்திருக்கின்ற சாரலுடன் கூடிய, வள்ளிமலை மேவு=வள்ளிமலைமீது எழுந்தருளியிருக்கும், வள்ளி மணிவாள = வள்ளிமணவாளரே! பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! அல்லி விழியாலும்=தாமரை யிதழ்போன்ற கண்ணாலும், முல்லை நகையாலும்=முல்லையரும்பை நிகர்த்த பல்லாலும், அல்லல்பட=துயரத்தையடையும்படி, ஆசை கடல் ஈயும்=ஆசையைக் கடல்போலத் தருகின்றவர்களும், அள்ள இனிது ஆகி=அள்ளியெடுக்கலாம் போன்ற இனிதாக அமைந்து, நள் இரவு போலும் உள்ள=நடு இரவுபோல் இருள் உள்ளதான, வினையார்=செய்கைகளையுடையவர்களுமாகிய பொதுமாதர்களும், அ தனம் ஆரும் இல்லும்=அந்தச் செல்வம் நிறைந்த வீடும், இளையோரும்=மக்களாகிய இளைஞர்களும், மெல்ல அயல் ஆக=மெல்ல வேறாகும்படி, வல் எருமை=வலிய எருமைமீது வருகின்ற, மாய சமனும்=மாயத்தில் வல்ல இயமனார், எள்ளி=என்னை இகழ்ந்து, எனது ஆவி கொள்ளை கொள்ளும் நாளில்=அடியேனுடைய உயிரைக் கொள்ளையடித்துக் கொண்டு போகும் அந்த நாளில், உய்ய ஒரு நீ பொன் கழல் தாராய்=அடியேன் உய்யும்பொருட்டு ஒப்பற்ற தேவரீர் உமது அழகிய பாதமலரைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

பழமையான வேதங்கள் தேடியுங் காண முடியவில்லை யென்று கூறுகின்ற சிவபெருமானுக்கு உபதேச மொழியைக் கூறிய குருநாதரே! துள்ளி விளையாடுகின்ற புள்ளிமான் நாணும்படித் தன் அழகுக்கு நிகரில்லை யென்று இகழ்கின்றவளாகிய வள்ளிநாயகி வாழ்கின்ற வனத்தில் சென்று அவளுடன் வாழ்கின்றவரே! வலிய அசுரர்கள் மாளவும் நற்குண முடைய தேவர்கள் வாழும்படியும் விரைந்து கூரிய வேலாயுதத்தை விட்டவரே! வள்ளிக்கொடி படர்கின்ற சாரலுடன் கூடிய வள்ளிமலையின் மீது வீற்றிருக்கின்ற வள்ளி மணவாளரே! பெருமிதம் உடையவரே! தாமரை யிதழ் போன்ற கண்களாலும், முல்லையரும்பு போன்ற புன்முறுவலாலும் நான் துன்புறும்படி ஆசையைக் கடல்போலத் தருகின்றவர்களும், அள்ளி யெடுக்கலாம் போன்ற இனிதாக இருக்கும் நடு இரவின் இருள்போன்ற மனத்தையுடையவர்களுமாகிய பொது மாதர்களும், செல்வம் நிறைந்த வீடும், மக்களும், மெல்ல எனக்கு அயலாகும்படி, வலிய எருமைமீது வந்து மாயத்தைச் செய்யும் இயமன், என்னை இகழ்ந்து, என் உயிரைக் கொள்ளையடித்துக் கொண்டு போகும் அந்நாளில் ஒப்பற்றவராகிய தேவரீர் உமது அழகிய திருவடிகளைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**அல்லி விழியாலும் :—**

அல்லி—தாமரை.

"அல்லி மாதர் புல்க நின்ற ஆயிரந் தோளன்" —பெரிய திருமொழி

கண்கள் தாமரை இதழைப்போல் இருக்கும். கண்கள் சிவப்பாக இருந்தால் கோபத்தைக் குறிக்கும். வெண்மையாக இருந்தால் நோயைக் குறிக்கும். செம்மையும் வெண்மையுங் கலந்தவண்ணத்தில் இருக்க வேண்டும். தாமரை அத்தகைய நிறமுள்ளது. "சாரஸதள நயன" என்பார் தியாகப் பிரும்மம்.

**முல்லை நகையாலும்:—**

முல்லையரும்பு போன்ற வெண்மையும் கூர்மையும் வரிசையும் உடைய பற்கள் சிறிது தெரியுமாறு புன்னகை புரிந்து ஆடவர் உள்ளத்தைக் கொல்வர் பொதுமகளிர்.

**அல்லல்பட ஆசைக்கடலீயும்,—**

பெருந்துயரத்தையடையுமாறு, ஆசையைக் கடல்போல் பெரிய அளவில் தந்து வருத்துவார்கள்.

**அள்ள இனிதாகி நள்ளிரவுபோலு முள்ள வினையார் :—**

பொதுமகளிருடைய உள்ளமும் செயலும் நடு இரவின் கரிய இருள் போன்றது. பயங்கரமானது.

நடு இரவின் கரிய இருள் அள்ளி யெடுக்கலாம் என்ற அளவுக்குத் திண்ணியதாக இருக்கும்.

மாதர்களின் உள்ளத்தை இருளென உவமிக்கின்றார் சேக்கிழார் பெருமான்.

> பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்
> வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்அரன்
> அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்
> நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்.

நடு இரவில் இருளை இளையான்குடிமாற நாயனாரது புராணத்தில் சேக்கிழாரடிகள் மிக அழகாகக் கூறுவதையும் கண்டு கண்டு மகிழ்க

> பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
> தருகு நாப்பண் அறிவருங் கங் சல்தான்
> கருகு மையிருளின் கணம் கட்டுவிட்டு
> உருகு கின்றது போன்ற துலகெலாம்.

**தனமாரும் இல்லுமினியோரு மெல்ல அயலாக :—**

உயிர் பிரிந்தவுடன் செல்வமும் வீடும் மனைவி மக்களும் நமக்கு அயலாகி விடுகின்றன.

வாழ்நாள் முழுவதும் இரவு பகலாக வுழைத்தும் அறநெறி நீங்கியுந் தேடிச் செல்வத்தைச் சேமித்து வைக்கின்றார்கள். அதியற்புதமாக மாளிகையைப் புதுக்குகின்றார்கள. மனைவி மக்கள் பொருட்டே உழைக்கின்றார்கள்.

அப்படிப் பாடுபட்ட ஒருவன் ஒருகணத்தில் மாள்கின்றான். மாண்டவன் எதிர் வீட்டில் ஒரு வண்டி யிழுக்கின்றவனுக்கு மகனாகப் பிறக்கின்றான். பிறந்த அவனுக்குத் தான் தேடிய பொன்னும் புதுக்கிய மாளிகையும், அருமையாகத் தொகுத்து வைத்த பொருள்களும் சொந்தம் என்று சொல்ல முடியுமா? இது என் வீடு; இவள் என் மனைவி இவன் என் மகன் என்று கூறினால் அவனுக்கு என்ன கிடைக்கும்? உதைதான் கிடைக்கும். ஒரு விநாடியில் அத்தனையும் அயலாகிவிடுகின்றன. இதனை யறியாது மாந்தர் மதியிழந்து கதியிழந்து உழல்கின்றார்கள். என்னே பேதைமை?

> ' தமரு மமரு மனையுமினிய தனமு மரசும் அயலாகத்
> தறுகண் மறலி முறுகு கயிறு தலையை வளைய எறியாதே''
>
> —திருப்புகழ்.

> இல்லும் பொருளும் இருந்த மனையளவே
> சொல்லும் அயலார் துடிப்பளவே—நல்ல
> கிளைகுளத்து நீரளவே கிற்றியே நெஞ்சே
> வளைகுளத்துள் ஈசனையே வாழ்த்து.
>
> —(11ம் திருமுறை) ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

**சமனுரும் எள்ளி யெனதாவி கொள்ளை கொளுநாளில் உய்ய ஒரு பொற் கழல்தாராய் :—**

சமன்—இயமன். கீழோர் மேலோர், அரசன் ஆண்டி, இளைஞன் முதியவன், மணமகன், கற்றவன் மற்றவன் என்று பாராது ஆயுள் முடிந்தது என்றவுடன் சமமாகப் பார்த்து வந்து உயிரைக் கவர்வான். அதனுல் சமன் என்ற பெயர் உண்டாயிற்று.

எள்ளி—இகழ்ந்து. இயமன் ஆயுள் முடிந்தவுடன் வந்து இகழ்ந்து உயிரைக் கவர்ந்து போவான்.

அவனுடைய வாகனமாகிய எருமை மிகவும் வலிமையும் வேகமும் உடையது. மாயஞ்செய்து உயிரைப் பிடிப்பான்; அதனுல்,

"வல்லெருமை மாயச் சமனுர்"

என்றுர்.

"அவ்வாறு அந்தகன் வந்து எந்தன் உயிரைப் பற்றும் போது, முருகா! நீ வந்து அடிமையாகிய என்னைக் காத்து உன் திருவடித் தாமரையைத் தந்தருள்" என்று சுவாமிகள் வேண்டுகின்றுர்.

**தொல்லைமறை தேடி யில்லை யெனுநாதர் :—**

தொல்லை—பழமை. வேதம் அநாதி; சுயம்பு. அது இறைவன் அருளிச் செய்தது. அந்த வேதங்கள் தேடியும் இறைவனைக் காணுது முறையிடுகின்றன.

"வான்காணு மறைகாணு மலரோன் காணுன்
மால்காணுன் உருத்திரனும் மதித்துக் காணுன்
நான்காணு இடத்ததனைக் காண்பேம் என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே"

என்கிறுர் இராமலிங்க அடிகளார்.

உருத்திரர்நா ரணர்பிரமர் விண்ணேர் வேந்தர்
உறுகருடர் காந்தருவர் இயக்கர் பூதர்
மருத்துவர் யோகியர் சித்தர் முனிவர் மற்றை
வானவர்கள் முதலோர்தம் மனத்தால் தேடிக்
கருத்தழிந்து தனித்தனியே சென்றுவேதங்
களைவினவ மற்றவையுங் காணேம் என்று
வருத்தமுற்றுங் கவரோடு புலம்ப நின்ற
வஞ்சவெளி யேயின்ப மயமாந்தேவே. —திருவருட்பா.

"வேதங்கிடந்து தடுமாறும்"

என்கின்றுர் பரஞ்சோதி முனிவர்.

**துள்ளி விளையாடு புள்ளியுழை நாண வெள்ளி வனம் :—**

மான் துள்ளித் துள்ளி விளையாடும் இயல்புடையது; அதனால் பெண்கட்கு உவமை கூறப்படுவது.

அத்தகைய சிறந்த புள்ளி மானும் தன் அழகுக்கு நிகராக மாட்டாது நாணுகின்றது. அதனால் அந்த மானை எள்ளிநகை செய்கின்றார் வள்ளி பிராட்டியார். எள்ளி—இகழ்கின்றவள்.

**வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ :—**

அசுரர்கள் வல்லவர்; அமரர்கள் நல்லவர்கள். நல்லவர்கள் வாழும்பொருட்டு வல்லவரை வேலால் குமாரக் கடவுள் மாய்த்தருளினார்.

**வள்ளிபடர் சாரல் வள்ளிமலை :—**

வள்ளிக்கொடி அதிகம் படர்வதனால் அந்த மலை வள்ளி மலை யெனப்பட்டது.

நிலங்கட்குப் பெயர் அந்நிலத்தில் உள்ள மரங்களால் அமைந்தது.

மருதமரம் மிகுந்திருப்பதனால் மருதம் என்றும், முல்லைக் கொடி படர்ந்திருப்பதனால் முல்லை யென்றும், நெய்தல் என்ற செடியிருப்பதனால் நெய்தல் என்றும், பாலை மரம் அதிகம் இருப்பதனால் பாலையென்றும், குறிஞ்சி மரம் இருப்பதனால் குறிஞ்சி என்றும் நிலங்கட்குப் பெயர்கள் ஏற்பட்டன.

## கருத்துரை

வள்ளிமலை மேவும் வள்ளி மணவாளா! ஆவி பிரியும் அந்நாள் அடியேனைக் காத்தருள்வீர்.

## 79

ஐயுமுறு நோயு மையலும் வாவி
ஐவருமு பாயப் பலநூலின்
அள்ளல் கட வாது துள்ளியதில் மாயு
முள்ளமுமில் வாழ்வைக் கருதாசைப்
பொய்யுமக லாத மெய்யைவள ராவி
உய்யும்வகை யோகத் தணுகாதே
புல்லறிவு பேசி யல்லலல்படு வேனை
நல்ல இரு தாளிற் புணர்வாயே
மெய்ய பொழில் நீடு தையலைமு னாலு
செய்யபுய மீதுற் றணைவோனே

வெள்ளையிப மேறு வள்ளல்கிளை வாழ
வெள்ள முது மாவைப் பொருதோனே

வைய முழு தாளு மையமயில் வீர
வல்லமுரு காமுத் தமிழ்வேளே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

## பதவுரை

மெய்ய = மெய்ப் பொருளே! பொழில் நீடு தையலை = சோலையில் வாழ்ந்த வள்ளியம்மையை, மு நாலு செய்ய புயம் மீது உற்று அணை வோனே = சிவந்த பன்னிரு புயங்களால் நெருங்கித் தழுவியவரே! வெள்ளை இபம் ஏறு = வெள்ளை யானைமீது ஏறுகின்ற, வள்ளல் கிளை வாழ = வள்ளலாகிய இந்திரனுடைய சுற்றத்தவராகிய தேவர்கள் வாழும் பொருட்டு, வெள்ளம் = சமுத்திரத்தில், முது மாவை பொரு தோனே = முதிய மாமரமாக நின்ற சூரபன்மனுடன் போர்புரிந்த வரே! வையம் முழுது ஆளும் ஐய = உலக முழுவதும் ஆளுகின்ற தலை வரே! மயில் வீர = மயில்மீது வருகின்ற வீரமூர்த்தியே! வல்ல = திரு வல்லம் என்ற தலத்தில் வாழும், முருகா = முருகப் பெருமானே! முத்தமிழ் வேளே = இயல் இசை நாடகம் என்ற முத்தமிழ்த் தெய்வ மாக விளங்கும் செவ்வேட்பரமரே! வள்ளிபடர் சாரல் = வள்ளிக் கொடி படர்கின்ற சாரலுடன் திகழும், வள்ளி மலை மேவு = வள்ளி மலையில் வீற்றிருக்கும், வள்ளி மணவாள = வள்ளி நாயகரே, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! ஐயும் = கோழையும் உறுநோயும் = சேரும்நோய்களும், மையலும் = மோகமயக்கமும், அவா வின் ஐவரும = ஆசையைத் தூண்டுகின்ற மெய் வாய் கண் நாசி செவி என்ற ஐந்து பொறிகளும், உபாயம் = அவைகளின் சூழ்ச்சி களும், பல நூலின் = பலகலைகளும் ஆகிய இந்த, அள்ளல் கடவாது = சேற்றினைத் தாண்டாது, துள்ளி அதில் பாயும் = குதித்து அவைகட்கு உட்பட்டு இறந்து போகின்ற, உள்ளமும் = மனதும், இல் வாழ்வை கருது ஆசை = மனை வாழ்க்கையையே விரும்புகின்ற ஆசையும், பொய்யும் = பொய்யும், அகலாத மெய்யை வளர் ஆவி உய்யும் வகை = நீங்காத இந்த உடம்பை வளர்க்கின்ற உயிரானது உய்யும்படியான, யோகத்து அணுகாதே = சிவயோகத்தை அடியேன் மேற் கொள்ளா மல், புல் அறிவு பேசி = இழிவான அறிவுப் பேச்சுகளைப் பேசி, அல்லல் படுவேனை = துன்பத்தை அடைகின்ற அடியேனை. நல்ல இரு தாளில் புணர்வாயே = பிறவித்துயரைத் தீர்க்கும் உமது திருவடியிற் சேர்ந்தருளுவீராக.

## பொழிப்புரை

மெய்ப் பொருளே! நீண்ட சோலையில் வாழ்ந்த வள்ளி பிராட்டியாரைச் சிவந்த பன்னிரு புயங்களாலும் தழுவுபவரே! வெள்ளையானை மீது ஏறுகின்ற வள்ளலாகிய இந்திரனுடைய சுற்றத்தவராகிய அமரர்கள் வாழும்பொருட்டு, கடலில் மாமரமாக நின்ற சூரபன்மனுடன் போர் செய்தவரே! உலக முழுவதும் ஆள்கின்ற தலைவரே! மயில் வீரரே! திருவல்லத்தில் உறைகின்ற முருகக் கடவுளே! முத்தமிழ்த் தெய்வமாகிய செவ்வேட்பரமரே! வள்ளிக்கொடி படர்கின்ற வள்ளிமலையில் வாழ்கின்ற வள்ளி நாயகரே! பெருமிதம் உடையவரே! கோழையும், நோய்களும், மோக மயக்கமும், ஆசையைத் தூண்டுகின்ற ஐம்பொறிகளும், அவைகளின் சூழ்ச்சிகளும், பல கலைகளும் ஆகிய இந்தச் சேற்றினைக் கடக்க மாட்டாது, துள்ளி அதில் வீழ்ந்து மாய்ந்து போகின்ற உள்ளமும், மனை வாழ்க்கையையே விரும்புகின்ற ஆசையும் பொய்யும் நீங்காத இந்த உடலை வளர்க்கின்ற உயிர் உய்யும்படியான சிவ யோகத்தை மேற்கொள்ளாமல், புன்மையான அறிவினால் வீண் வார்த்தைகளைப் பேசித் துயரப்படுகின்ற அடியேனை பிறவித் துயரை யொழிக்கும் உமது பாதமலரிற் சேர்த்து ஆண்டருளுவீராக.

## விரிவுரை

**ஐயும் :—**

ஐ—கோழை.

'ஐயினால் மிடறு அடைப்புண்டு" —அப்பர்.

ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி அறிவழிந்து
மெய்யும் பொய்யாகி விழுகின்ற போதொன்று வேண்டுவல்யான்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர் திருநீறும் இட்டுக்
கையுந் தொழப்பண்ணி ஐந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

—பட்டினத்தார்.

**உறுநோயும் :—**

இந்த உடம்பு பல்வேறு நோய்கட்கு இடமாயது.

"பல நோயும் நிலுவை கண்டது" —(முனையழிந்தது) திருப்புகழ்.

**மையலும் :—**

ஆசையால் கோபமும், கோபத்தால் மயக்கமும் வரும் மயக்கத்தால் செய்வன தவிர்வன உணர முடியாத நிலைமை யேற்படும்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய் —திருக்குறள்

அவாவின் ஐவரும் —

ஐவர்—மெய் வாய் கண் நாசி செவி என்ற ஐம்பொறிகள்- இந்த ஐம்பொறிகளும் அவாவை அதிகரிக்கச் செய்யும். கண்-கண்ட பொருள்களை விரும்பச் செய்யும். வாய்-சுவையான உணவை விரும்பச் செய்யும். நாசி நறுமணத்தையும், செவி இனிய மொழிகளையும் பாடல்களையும் விரும்பும்.

"மெய்வாய் விழி நாசி யொடுஞ் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே" —கந்தரநுபூதி

உபாயம் :—

ஆசையினால் பல சூழ்ச்சிகள் செய்ய நேரும்.

பல நூலின் :—

கல்வியும் கவலை தருவதுதான். அதனால்தான் மாணிக்க வாசகர்,

"கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்'.
"கற்பனவும் இனியமையும்"

என்று அருளிச் செய்தார்.

அள்ளல் கடவாது :—

அள்ளல்-சேறு. இந்தத் துன்பமாகிய சேற்றைக்கடவாது ஆன்மாக்கள் அதில் வீழ்ந்து மாய்கின்றன.

"பிரபஞ்சமென்னும்
சேற்றைக் கழிய வழிவிட்டவா" —கந்தரலங்காரம்.

உள்ளமுமில் வாழ்வைக் கருதாசைப் பொய்யுமகலாத மெய் :—

மெய்—உடம்பு. இந்த உடம்பு மனம் ஆசை முதலியவற்றுக்கு இடமாய் நிற்பது.

உய்யும் வகை யோகத்தணுகாதே :—

உயிர்க்கு உய்யுமநெறி யோகநெறியாகும்.

அருணகிரியார் சிவராஜ யோகத்தைப் பற்றி திருப்புகழில் பலமுறை விளக்கஞ் செய்கின்றார்.

புல்லறிவு பேசி அல்லல்படுவேனை :—

புல்லறிவினால் வீண் வார்த்தைகளைச் சதா பேசிப் பலர் அல்லல்படுகின்றார்கள்.

பயனில் செயல் பாராட்டுவானை மகன்எனல்
மக்கட் பதடி யெனல். —திருக்குறள்.

வெள்ள முது மாவை :—

உறுதி யிழந்த சூரபன்மன் இறுதியில் கடலில் ஒளிந்து எஃகு மாமரமாய் நின்றான். முருகவேள் வேலினால் அம் மாமரத்தைப் பிளந்து அழித்தருளினார்.

"கடற்சலந்தனிலே யொளி சூரனை
உடற்பலுந்திரு கூறெனவேயது
கதித்தெழுந்தொரு சேவலு மாமயில் விடும்வேலா"
--(மனத்திரைந்) திருப்புகழ்.

**வல்ல முருகா :—**

வலலம்—திருவல்லம் என்ற திருத்தலம். இது நீவா நதிக் கரையில் இருக்கின்றது. சென்னையிலிருந்து காட்பாடிக்குப் போகும் இருப்புப் பாதையில் காட்பாடிக்கு 12 மைலுக்குக் கிழக்கில் உள்ளது. இத்தலம் ஞான சம்பந்தராலும், அருணகிரிநாதராலும், சேக்கிழாராலும் பாடப்பெற்றது. வில்வவனம் என்றும் பெயர் பெற்றது. அருமையான க்ஷேத்திரம்.

## கருத்துரை

வள்ளி மலை முருகா! உயிர் பிரியும்போது உன் திருவடி தந்து ஆட்கொள்வீர.

## 80

கையொத்து வாழு மிந்த மெய்யொத்த வாழ்வி கந்து
பொய்யொத்த வாழ்வு கண்டு மயலாகிக்
கல்லுக்கு நேரும் வஞ்ச உள்ளத்தர் மேல்வி ழுந்து
கள்ளப்ப யோத ரங்க ளுடன்மேவி

உய்யப்ப டாமல் நின்று கையர்க்கு பாய மொன்று
பொய்யர்க்கு மேய யர்ந்து ளுடைநாயேன்
உள்ளப்பெ ருக நின்று தொய்யப்ப டாம லென்று
முள்ளத்தின் மாய்வ தொன்றை மொழியாயோ

ஐயப்ப டாத ஐந்து பொய்யற்ற சோலை தங்கு
தெய்வத்தெய் வானை கொங்கை புணர்வோனே
அல்லைப்பொ ருமு ழங்கு சொல்லுக்ர சேவ லொன்று
வெல்லப்ப தாகை கொண்ட திறல்வேலா

வையத்தை யோடி யைந்து கையற்கு வீசு தந்தை
மெய்யொத்த நீதி கண்ட பெரியோனே
வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று
வள்ளிக்கு வேடை கொண்ட பெருமாளே.

## பதவுரை

*ஐயம் படாத* = சந்தேகப்படாதவாறு, *பொய்யற்ற* = பொய்யாத வகையில் நினைத்ததைத் தருகின்ற, *ஐந்து சோலை தங்கும்* = ஐந்து

கற்பகச் சோலையில் வளர்ந்த, தெய்வ ஆனை=தெய்வ மகளாகிய தெய்வயானையம்மையின், கொங்கை புணர்வோனே=தனத்தைச் சேர்பவரே! அல்லை பொரு முழங்கு=இரவைப் பொறுக்காத படி கூவும், சொல்=கொக்கறுகோ என்ற சொல்லையுடைய, உக்கிர சேவல் ஒன்று=வேகமுள்ள சேவல் பொருந்திய, வெல் அப் பதாகை கொண்ட=வெற்றியையுடைய அந்தக் கொடியை யுடைய, திறல் வேளா=வலிமையுடைய வேலாயுதரே! வையத்தை ஓடி=உலக முழுவதும் ஓடி வலம் வந்து, ஐந்து கையற்கு வீசு தந்தை=ஐங்கர விநாயகருக்குக் கனியைத் தந்த சிவபெருமானுக்கு, மெய் ஒத்த நீதி கண்ட=உண்மையான நீதி முறையை உபதேசித்த, பெரியோனே= பெரியவரே! வள்ளி குழாம் அடர்ந்த=வள்ளிக் கொடியின் கூட்டம் நெருங்கியுள்ள, வள்ளி கல் மீது சென்று=வள்ளி மலையின்மேல் சென்று, வள்ளிக்கு வேடை கொண்ட=வள்ளிநாயகியின்மீது விருப்பங்கொண்ட, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கை ஒத்து வாழும்=ஒழுக்கநெறியை யறிந்து அதன்படி வாழும், இந்த மெய் ஒத்த வாழ்வு இகந்து=இந்த உண்மையான வாழ்வை விடுத்து, பொய் ஒத்த வாழ்வு கண்டு=பொய்நிறைந்த வாழ்வைப் பார்த்து, மயல் ஆகி=அதிக மோகங் கொண்டு, கல்லுக்கு நேரும்=கல்லைப் போல் கடினமாகவுள்ள, வஞ்ச உள்ளத்தர்மேல் விழுந்து=வஞ்சக உள்ளத்தையுடைய வேசையர் மேல்விழுந்து, கள்ள பயோதரங்கள் உடன்மேவி=கள்ளத்தனம் பொருந்திய கொங்கைகளின் மீது பொருந்தி, உய்யப் படாமல் நின்று=உய்யும் வழியில் சேராமல் நின்று, கையர்க்கு=வஞ்சகருடனும், உபாய ஒன்று பொய்யர்க்குமே=தந்திரஞ்செய்யும் பொய்யருடனுமே பழகி, அயர்ந்து= சோர்வடைந்து, உள் உடை நாயேன்=உள்ளம் உடைந்த அடியேனுக்கு, உள்ள பேருக நின்று=உள்ளத்திற் பெறுதற்கரிய பேருக நின்று, தொய்யப் படாமல்=சோர்வு அடையாமல், என்றும் உள்ளத்தின் மாய்வது=எப்போதும் நிலைத்துள்ள மனம் இறந்த நிலையாகிய, ஒன்றை=உபதேச மொழியை, மொழியாயோ=சொல்லமாட்டீரோ?

## பொழிப்புரை

சந்தேகமின்றியும் பொய்க்காதும் நினைத்ததைத் தருகின்ற கற்பக முதலிய ஐந்து தருக்களின் சோலையில் வளர்ந்த தேவமகளாகிய தெய்வயானை யம்மையின் தனத்தில் சேர்பவரே! இரவு நேரத்தைப் பொறுக்காமல் கொக்கறுகோ என்று முழங்குகின்ற வேகமுள்ள சேவற் கொடியுடைய வலிய வேலாயுதக் கடவுளே! உலக முழுவதும் ஓடி வலம் வந்து, ஐங்கர விநாயகருக்குக் கனியைத் தந்த தந்தையாராகிய சிவபெருமானுக்கு உண்மை நிறைந்த நீதியான உபதேசத்தைச் செய்த பெரியவரே! வள்ளிக்கொடிகள் நிரம்பவும் அடர்ந்து

படர்ந்த வள்ளிமலையின் மீது சென்று வள்ளி நாயகி மீது விருப்பங்கொண்ட பெருமிதமுடையவரே! ஒழுக்க நெறியை யறிந்து அதன்படி வாழும் மெய்வாழ்வைத் துறந்து, பொய் வாழ்வைக் கண்டு அதில் மோகங்கொண்டு, கல்லைப்போல் கடினமும் வஞ்சகமும் உடைய நெஞ்சத்தராகிய பொருட் பெண்டிர்மேல் விழுந்து, கள்ளத்தனம் உடைய கொங்கை களின் மேற் பொருந்தி, உய்யும் வழியிற் சேராது, வஞ்சக ருடனும், தந்திரஞ் செய்யும் பொய்யருடனும் கலந்து அயர்ந்து உள்ளம் உடைந்த நாயினேனுக்கு, உள்ளத்தின் பேருக நின்று சோர்வடையாமல் நிலைத்த மனோபலந்தருவதான ஒரு உப தேசமொழியை உபதேசிக்க மாட்டீரோ!

## விரிவுரை

**கையொத்து வாழும் இந்த மெய்யொத்த வாழ்விகந்து:—**

கை—ஒழுக்கம். ஒழுக்க நெறியை மேற்கொண்டு வாழும் மெய் வாழ்வை விடுத்து பொய் வாழ்வையடுத்து மாந்தர் மதி மயங்கிக் கெடுகின்றார்கள். உண்மை வாழ்வில் எப்போதும் மனதில் சாந்தியிருக்கும். பொய் வாழ்வில் சதா சஞ்சலந்தான் இருக்கும்.

**கல்லுக்கு நேரும் வஞ்ச உள்ளத்தர்:—**

பொது மகளிரது நெஞ்சம் வஞ்சனை நிறைந்தது. கல்லைப் போல் இரக்கமற்று கடினமாக இருக்கும்.

பாலைவனத்தின் வரட்சியைக் கூற வந்த கம்பநாடர்,

"பொன்விலைப் பாவையர் மனமும்போல் பசையுமற்றதே."

**உய்யப்படாமல் நின்று:—**

உய்யும் வழியை யறியாது திகைத்து நிற்பர் அறிவிலி கள். பக்தி, சீலம், தியானம், வழிபாடு, ஆலய சேவை இவை கள் உய்யும் நெறி. இவற்றைக் கருதாமல், களியாட்டம் சூது வாது வஞ்சனைகள் செய்து கெட்டலைந்து அரிய வாணாளை வீணாக்கி மாய்கின்றார்கள்.

கல்லார் சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலும் பொய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங் கொடார்குரு சொன்னபடி
நில்லார் அறத்தை நினையார் நின்னுமம் நினைவில் சற்றும்
இலலார் இருந்தென் இறந்தென் புகல்கச்சி யேகம்பனே.

—பட்டினத்தார்.

**கையர்க் குபாயமென்று பொய்யர்க்குமே யயர்ந்து:—**

வஞ்சகருடனும், தந்திரமே புரியும் பொய்யருடனும் பழகி வாடுகின்றார்கள்.

தீயவர் நட்பு தீயினும் தீயது. தீ உடம்பை மட்டும் சுடும். தீயவர் நட்பு உள்ளம் உணர்வு உயிர் முதலிய எல்லாவற்றை யும் சுடும்.

உள்ளப்பெருக நின்று :—

"இப்படி யலைந்த அடியேன் உள்ளத்தில் முருகா! நீ பெறும் பேருக நின்று அருள் செய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

"என் உள்ளத்தில் ஓங்காரமாய் நின்ற மெய்யா" —திருவாசகம்.

உள்ளத்தின் மாய்வ தொன்றை மொழியாயோ?:—

மனம் மாண்ட இடமே சுகாரம்பமாகும். மனோலயம் அடைந்த இடத்தில் ஆனந்த ஊற்று சுரக்கும்.

போக்கும் வரவும் இரவும்பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவு முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயந் தானேதரும் எனைத்தன் வசத்தே
ஆக்கும் அறுமுகவா! சொல்லொணுதிந்த ஆனந்தமே.
—கந்தரலங்காரம்.

சினமிறக்கக் கற்றாலும் சித்தி யெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே. —தாயுமானர்.

ஐயப்படாத ஐந்து பொய்யற்ற சோலை :—

கற்பகம் என்ற தெய்வத்தரு நினைத்ததைத்தரும் இயல்புடையது. அதில் சந்தேகம் இல்லை பொய்மையுமில்லை.

சந்தானம், அரி சந்தானம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்ற ஐந்து தருக்கள்.

அல்லைப்பொரு முழங்கு சொல்லுக்ர சேவல் :—

அல்—இரவு. இரவு சேவலுக்கு வெறுப்பைத்தரும். அதனால் விடியற்காலையில் மகிழ்ந்து கொக்கறுகோ என்று கூவுகின்றது. ஞானவொளியைக் கண்டு களிப்பது. அது நாத தத்துவம் எனவுணர்க.

சேவல் கூவுவதால் ஆணவ இருள் நீங்கும்.

வையத்தை ஓடி :—

கனி காரணமாகக் கந்தக் கடவுள் உலக முழுவதும் ஒரு நொடிக்குள் வலம்வந்து, எங்கும் நிறைந்தவர் தாம் என்பதை உணர்த்தியருளினார்.

"இகலிமுது திகிரிகிரி நெரிய வளை கடல் கதற
எழுபுவியை யொருநொடியில் வலமாக வோடுவதும்"—சீர்பாதவகுப்பு.

வள்ளிக்கு வேடைகொண்ட :—

வள்ளி—இச்சாசக்தி. இறைவன் இச்சா சக்தியுடன் கூடுவதால் ஆன்மாக்களுக்கு இச்சைதோன்றி வினைகளை நுகர்ந்து வீடு பேறு எய்த ஏதுவாகும்.

கருத்துரை

வள்ளி காதலனே! அடியேனுக்கு மனோலயத்தை உபதேசித்தருள்வீர்.

## 81

முல்லைக்கு மார னங்கை வில்லுக்கு மாதர் தங்கள்
    பல்லுக்கும் வாடி யின்ப முயலாநீள்
முள்ளுற்ற கால்மடிந்து கொள்ளிக்குள் மூழ்கி வெந்து
    பள்ளத்தில் வீழ்வ தன்றி யொருஞான
எல்லைக்கு மார ணங்கள் சொல்லித்தொ ழாவ ணங்கு
    மெல்லைக்கும் வாவி நின்ற னருள்நாமம்
எள்ளற்கு மால யர்ந்து வுள்ளத்தி லாவ என்று
    முள்ளப்பெ ருரி ணங்கை யொழிவேனோ
அல்லைக்க வானை தந்த வல்லிக்கு மார்பி லங்க
    அல்லிக்கொள் மார்ப லங்கல் புனைவோனே
அள்ளற்ப டாத கங்கை வெள்ளத்து வாவி தங்கி
    மெள்ளச்ச ரோரு கங்கள் பயில்நாதா
வல்லைக்கு மார கந்த தில்லைப்பு ராரி மைந்த
    மல்லுப்பொ ராறி ரண்டு புயவீரா
வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று
    வள்ளிக்கு வேடை கொண்ட பெருமாளே.

### பதவுரை

***அல்லைக்கு***=இரவில், ***அ ஆனைதந்த***=அந்த ஆனையாகிய கணபதி தந்து உதவிய, ***வல்லிக்கு***=வள்ளி பிராட்டிக்கு, ***மார்பு இலங்க***= மார்பில் விளங்குமாறு, ***அல்லிக் கொள் மார்பு அலங்கல் புனைவோனே***=தாமரை மலர் மாலையை உமது மார்பிலிருந்து எடுத்துத் தரித்தவரே! ***அள்ளல் படாத***=சேறு இல்லாத, ***கங்கை வெள்ளத்து வாவி தங்கி***=கங்கையாற்றின் சரவணப் பொய்கையில் தங்கி, ***மெள்ள சரோருகங்கள் பயில் நாதா***=மெள்ள அங்குள்ள தாமரை மலர்களில் வீற்றிருந்த தலைவரே! ***வல்லைகுமார***=வல்லக் கோட்டையில் வீற்றிருக்கும் குமாரக் கடவுளே! ***கந்த***=கந்தப் பெருமானே! ***தில்லை புராரி மைந்த***=தில்லையம்பதியில் உறைகின்றவரும், திரிபுரத்தை எரித்தவருமான சிவ குமாரரே! ***மல் பொரு ஆறு இரண்டு புய வீரா***=மல் யுத்தஞ் செய்யவல்ல பன்னிரு தோள்களையுடைய வீர மூர்த்தியே! ***வள்ளி குழாம் அடர்ந்த***=வள்ளிக் கொடிகள் நிரம்பவும் படர்ந்துள்ள, ***வள்ளி கல் மீது சென்று***=வள்ளி மலையின் மீது சென்று, ***வள்ளிக்கு வேடை கொண்ட***=வள்ளிபிராட்டிமீது விருப்பங்கொண்ட ***பெருமாளே***=பெருமையின் மிகுந்தவரே! ***முல்லைக்கும்***=முல்லை

மலர்க் கணைக்கும், மாரன் அம் கை வில்லுக்கும்=மன்மதனுடைய அழகிய மரத்தில் இருக்குங் கரும்பு வில்லுக்கும், மாதர் தங்கள் நல்லுக்கும் வாடி=மாதர்களின் புன் சிரிப்புக்கும் வாட்டத்தையடைந்து, இன்பம் முயலா=இன்பத்தைப் பெற முயன்று, நீள் முள் உற்ற கால் மடிந்து=நீண்டமுள்தைத்த கால் போல் மடங்கிக் கிடந்து, கொள்ளிக்கு மூழ்கி வெந்து=மோகத் தீயில் உள்ளம் வெந்து, 'புள்ளத்தில் வீழ்வது அன்றி=பாவப் படுகுழியில் வீழ்வதல்லாமல், ஒரு ஞான எல்லைக்கும்=ஒப்பற்ற ஞான எல்லையையும், ஆரணங்கள் சொல்லி தொழா வணங்கும் எல்லைக்கும்=வேதமந்திரங்களைக் கூறித் தொழுது வணங்கும் எல்லையையும், வாவி=அனுகாது விலகித் தாண்டி, நின் தன் அருள் நாமம்=உமது அருள் தரும் திருநாமத்தை, எள்ளற்கு மால் அயர்ந்து=இகழ்ந்து பேசுவதற்கு ஆசைகொண்டு, உள்ளத்தில் ஆவ என்றும் உள்ள பெருர்=தங்கள் உள்ளத்தில் கடவுளே அபயம் என்னும் இரக்க வுணர்ச்சியை என்றும் எண்ணப் பெறுதவர்களான தீயவர்களின், இணங்கை ஒழிவேனோ=இணக்கத்தை அடியேன் விடமாட்டேனோ?

## பொழிப்புரை

விநாயகப் பெருமான் யானையாக வந்து அச்சுறுத்த இரவில் வள்ளியைக் கவர்ந்து, உமது மார்பில் தரித்த தாமரை மலர் மாலையைப் புனைந்தவரே! சேறு இல்லாத கங்காநதியின் நீரினலாய சரவணப் பொய்கையில் தங்கி, தாமரை மலரில் மெல்ல வீற்றிருந்தருளிய தலைவரே! வல்லக்கோட்டையென்ற தலத்தில் வாழும் குமார மூர்த்தியே! கந்தக் கடவுளே! தில்லையம்பதியில் இருக்கும் திரிபுரம் எரித்த சிவமூர்த்தியின் புதல்வரே! மற்போருக்கு உரிய பன்னிரு புயங்களையுடைய வீரமூர்த்தியே! வள்ளிக்கொடிகள் மிகுந்துள்ள வள்ளிமலையின் மீது சென்று வள்ளிபிராட்டியார் மீது விருப்பங்கொண்ட பெருமிதமுடையவரே! மன்மதனுடைய முல்லைக் கணைக்கும் கரும்பு வில்லுக்கும் மாதர்கள் புன்னகைக்கும் வாடி இன்பத்தைப் பெற முயன்று நீண்ட முள்தைத்த காலபோல் மடங்கிக் கிடந்து காமத்தீயால் வெந்து, பாவப் படுபள்ளத்தில் வீழ்வதல்லாமல், ஒப்பற்ற ஞான எல்லையையும், வேதமந்திரத்தால் உம்மைத் தொழுது வணங்கும் எல்லையையும் விலகித்தாண்டி, உமது அருள்பாலிக்குந் திருப்பேரை இகழ்ந்து உள்ளத்தில் இரக்க உணர்ச்சியற்ற கீழ்மக்களுடைய இணக்கத்தை அடியேன் விடமாட்டேனோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் தீயோர் இணக்கத்தை விடவேண்டும் என்று அடிகளார் முருகனிடம் முறையிடுகின்றார்.

**முல்லைக்கு :—**

முல்லை மலர் மன்மதனுடைய கணை.

**மாரனங்கை வில்லுக்கும் :—**

மாரன்—மன்மதன். கரும்பு வில்லால் மக்களின் மனதில் விருப்பத்தை விளைவிப்பான்.

**மாதர் தங்கள் பல்லுக்கும் :—**

பொதுமகளிர பல்லைக்காட்டி நகைத்து மயக்குவர்.

**வாடியின்ப முயலா :—**

காம வேட்கையால் மனிதர் வாட்டத்தை யடைந்து மீட்டும் மீட்டும் சிறிய இன்பத்தையே பெறுவதற்கு முயன்று துன்புறுவர்.

**நீள் முள்ளூற்ற கால்மடிந்து :—**

நீண்ட முள் தைத்த கால்போல் மடிந்து ஒடிந்து வேதனைப் படுவார்.

**கொள்ளிக்குள் மூழ்கிவெந்து :—**

காமாக்கினியால் உள்ளமும் உணர்வும் வெந்து துன்புறுவர்.

நெருப்பு நெருங்கியவரை மட்டுமே சுடவல்லது. காமத் தீ நீருள் குளிப்பினும் சுடும். குன்றேறி ஒளிப்பினும் சுடும். நெருப்பு உடம்பை மட்டுமே சுடவல்லது. காமத்தீ உள்ளம் உணர்வு உயிர் முதலிய அனைத்தையும் சுடுங் கொடுமையது.

**பள்ளத்தில் வீழ்வதன்றி :—**

ஆசைவயப்பட்டோர் பாவப் படுகுழியில் வீழ்ந்து பதை பதைப்பார்கள். அதனின்றும் ஏறுவது அரிது.

**ஒரு ஞான எல்லைக்கும் :—**

ஒப்பற்ற சிவஞானம் ஒன்றே முடிவாக நின்று ஆன்மாக் களுக்கு இன்ப எல்லையாக இருந்து அருள் செய்ய வல்லது.

**ஆரணங்கள் சொல்லித் தொழாவணங்கு மெல்லைக்கும் வாவி :—**

வாவுதல்—தாண்டுதல்.

பெரியோர்கள் வேத மந்திரங்களைக் கூறி இறைவனைத் தொழுது வணங்குவார்கள்.

தொழுவது—கரங்களால். வணங்குவது—தலையால்.

"கைகாள் கூப்பித் தொழீர்"

"தலையே நீ வணங்காய்" —அப்பர்.

"வணங்கத் தலை வைத்து" —மணிவாசகர்.

"வந்தெதிரே தொழுதானை வணங்கினன்" —கம்பர்.

இந்த அருள் நெறியைத் தாண்டிச் செல்வர் கீழ்மக்கள்.

"தவநெறி தனை விடு தாண்டு காலியை"
—(தரையினில்) திருப்புகழ்.

**அருள்நாமம் என்னற்கு மாலையர்ந்து :—**

கீழோர் இறைவனுடைய அருள் நாமத்தை இகழ்ந்து இடர்ப்படுவர்.

**இணங்கை யொழிவேனோ :—**

இத்தகைய மூடர்களது சேர்க்கையை அறவே ஒழிக்க வேண்டும்.

"கண்ணுவா ரேனுமுனைக் கைதொழா ராயின் அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே." —தாயுமானுர்.

**அல்லைக்கவானை தந்த வல்லிக்கு :—**

அல்லைக்கு அ ஆனை தந்த வல்லி.

இரவில் சென்று, விநாயகர் யானை வடிவாக வந்து அச்சுறுத்த அபயம் புகுந்த வள்ளியை முருகவேள் மாலை யிட்டு மணம் புரிந்தருளினுர்

**மென்னச் சரோருகங்கள் பயில் நாதா :—**

சரவணப் பொய்கை கங்கையாற்றின் ஒரு புடை விளங்கு வது.

பொய்கை—இயற்கையாயமைந்த நீர்நிலை.

தடாகம்—செயற்கையாகத் தடுத்து உண்டாக்கியது.

கங்கையாறு சேறில்லாதது. ஆதலால் "அள்ளற்படாத கங்கை" என்ருர்.

தெய்வீகமாய சரவணப் பொய்கையில் எம்பிரான் தெய் வத் தாமரை மலர்மீது எழுந்தருளினுர்.

"வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந்தருளினனே"
—கந்தபுராணம்.

"உதயரவி வர்க்க நிகர் வனகிரண விர்த்தவித
முடையசத பத்ரநவ பீடத்து வாழ்பவனும்"
—வேடிச்சி காவலன் வகுப்பு.

**வல்லிக்குமார :—**

வல்லககோட்டை என்ற திருத்தலம். கோடை நகர் என வழங்குகின்றது.

இது சிங்கப் பெருமாள் கோயிலுக்கு வடமேற்கில் 10 கல் தொலைவில் உள்ள அருமையான க்ஷேத்திரம்.

**மல்லுப்பொ ராறிரண்டு புயவீரா :—**

இறைவனுடைய புயம் வீரம் நிறைந்தது. அதனால் "ஆறிரு தடந்தோள் வாழ்க" என்றார் கச்சியப்பர்.

"எதிர்படு நெடிய தருவடு பெரிய கடாமுமிழ்
நாகமேக மிடிபட மற்பொரு
திண்சிலம் படங்க மோதிப்பிடுங்கின"

"அநுபவ னருக னனனிய னமல னமோகன
நேக னேக னபிநவ னித்திய
னஞ்சலென் ப்ரசண்ட வாகைப்புயங்களே" —புயவகுப்பு.

## கருத்துரை

வள்ளிமலையப்பனே! தீயவர் நட்பு தீர அருள் செய்வீர்.

## 82

கள்ளக்கு வாற்பை தொள்ளைப்பு லாற்பை
துள்ளிக்க ளுர்க்க யவுகோப
கள்வைத்த தோற்பை பொள்ளுற்ற காற்பை
கொள்ளைத்து ராற்பை பசுபாச

அள்ளற்பை மாற்பை ஞெள்ளற்பை சீப்பை
வெள்ளிட்ட சாப்பி சிதமீரல்
அள்ளச்சு வாக்கள் சள்ளிட்டி ழாப்பல்
கொள்ளப்ப டாக்கை தவிர்வேனோ

தெள்ளத்தி சேர்ப்ப வெள்ளத்தி மாற்கும்
வெள்ளுத்தி மாற்கு மருகோனே
சிள்ளிட்ட காட்டி லுள்ளக்கி ரார்க்கொல்
புள்ளத்த மார்க்கம் வருவோனே

வள்ளிச்சன் மார்க்கம் விள்ளைக்கு நோக்க
வல்லைக்கு ளேற்று மிளையோனே
வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

## பதவுரை

தெள் அத்தி சேர்ப்ப = தெளிவு பெற்ற அறிவு நிறைந்த தெய்வ யானையின் தலைவரே! வெள் அத்திமாற்கும் = வெள்ளையானையை யுடைய இந்திரனுக்கும், வெள் உத்தி மாற்கும் = வெண்மையான பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலுக்கும், மருகோனே = திருமருகரே! சிள் இட்ட காட்டில் உள்ள = சிள் வண்டுகள் நிறைந்த கானகத்தில் வாழ்ந்த, கிரார் கொல்புள் = கிராதகர்களான வேடர்கள் கொல்கின்ற பறவைகள் உள்ள, அத்த மார்க்கம் = காட்டு வழியில், வருவோனே = வருபவரே! வள்ளி சன்மார்க்கம் = வள்ளி பிராட்டியார் அநுட்டித்த நன்னெறி யென்னும் உபதேசத்தை, விள் ஐக்கு = கேட்ட தந்தையார்க்கு, நோக்க வல்லைக்குள் ஏற்றும் = ஒரு கணப் பொழுதில் உபதேசித்த, இளையோனே = இளம்பூரணரே! வள்ளி குழாத்து = வள்ளிக் கொடிகள் கூட்டமாய் நிறைந்திருக்கின்ற, வள்ளி கல் காத்த = வள்ளி மலையில் தினைப்புனங் காவல் செய்த, வள்ளிக்கு வாய்த்த = வள்ளிபிராட்டியாருக்கு வாய்த்த, பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! கள்ள குவால் பை = கள்ளத்தனமான வஞ்சனை பொய் முதலிய துர்க்குணங்கள் நிறைந்த பை, தொள்ளை புலால் பை = ஒட்டைகளையுடைய மாமிசப் பை, துள் இக்கனூர் = துள்ளுகின்ற கரும்பு வில்லையுடைய மன்மதனால் உண்டாகின்ற, கயவு கோபம் = தளர்ச்சி கோபமாகிய, கள் வைத்த தோல் பை = கள்ளை வைத்த தோல் பை, பொள் உற்ற கால் பை = பொள்ளென விரைந்து செல்லும் காற்றடைத்த பை, கொள்ளை துரால் பை = யமன் கொள்ளை கொண்டு போகின்ற செத்தையான பை, பசுபாச அள்ளல் பை = ஆன்மாவும் (உயிரும்) ஆணவமும் சேர்ந்த சேற்றுப்பை, மால் பை = மயக்கத்துக்கு இடமான பை, ஞொள்ளல் பை = குற்றங்கள் நிறைந்த பை, சீ பை = சீழ் நிறைந்த பை, வெள் இட்ட = கலப்பிலாத, அசா = தளர்வுடைய, பிசிதம் ஈரல் = இறைச்சி ஈரல் இவைகளை, அள்ள = அள்ளி உண்ண, சுவாக்கள் = நாய்கள், சள் இட்டு இழா = சள்ளென்று குலைத்து இழுத்து, பல் கொள்ளப்படு ஆக்கை = பல்லினால் கடித்துக்கொள்ளும் இந்த உடம்பை, தவிர்வேனோ = ஒழிக்கமாட்டேனோ?

## பொழிப்புரை

தெளிந்த அறிவுள்ள தெய்வயானையின் கணவரே! வெள்ளையானையையுடைய இந்திரனுக்கும்; திருப்பாற்கடலில் துயிலும் திருமாலுக்கும் திருமருகரே! சிள்வண்டுகள் நிறைந்த கானகத்தில் வாழும் வேடர்கள் கொல்லுகின்ற பறவைகள் உள்ள காட்டு வழியில் வருபவரே! வள்ளி நாயகி மேற்கொண்ட சன்மார்க்கத்தைக் கூறுமாறு சிவபெருமான் கேட்க கண்ணிமைப் பொழுதில் அவருக்கு உபதேசித்த இளையவரே!

வள்ளிக்கொடிகள் நிறைந்துள்ள வள்ளிமலையில் தினைப்புனத்தைக் காவல் செய்த வள்ளியம்மைக்கு வாய்த்த பெருமிதமுடையவரே! களவு பொய் முதலிய தீககுணங்கள் நிறைந்த பை; ஓட்டையுடைய இறைச்சிப் பை; துள்ளுகின்ற கரும்பு வில்லையுடைய காமனால் விளையுந் தளர்வு கோபம் என்ற கள் வைத்த தோல் பை; விரைந்து போகின்ற காற்றின் பை; இயமன் கொள்ளையடித்துக்கொண்டு போகின்ற செத்தையான பை; உயிரும் ஆணவமும் அடங்கிய சேறுறுப் பை; மயக்கத்தையுடைய பை; குற்றம் நிறைந்த பை; சீழ் ஒழுகும் பை; கலப்பில்லாத தளர்ச்சியுடைய இறைச்சி. ஈரல இவைகளை அள்ளித் தின்னும் நாய்கள் சள்ளென்று குலைத்து பல்லால் கடித்து இழுத்துக்கொண்டு போகும் இந்த உடம்பை ஒழிக்க மாட்டேனோ?

## விரிவுரை

**கள்ளக் குவாற் பை :—**

குவால்—கூட்டம். கள்ளத்தனமான பொய் வஞ்சனை களவு சூது வாது முதலிய தீக்குணங்களின் கூட்டம் நிறைந்த பை இந்த உடம்பு.

உடம்பைப் பலவகையான பை என்று இத்திருப்புகழில் அடிகளார் கூறுகின்றார்.

**தொள்ளைப் புலால் பை :—**

தொள்ளை—ஓட்டை. ஒன்பது ஓட்டைகளை யுடைய இறைச்சிப் பை.

**துள்ளிக்கனார் சயவு கோப கள் வைத்த தோற்பை :—**

துள் இக்கனார்; இக்கன்—கரும்பன். கரும்புவில்லையுடைய மன்மதன். மன்மதன் ஆன்மாக்களை மயக்கும்பொருட்டு துள்ளுவான்.

"துள்ளுமதவேள் கைக் கணையாலே" —திருப்புகழ்.

மன்மதனால் தளர்வு கோபம் முதலிய கள்ளை வைத்த தோற்பை

கள்—மயக்கத்தைத் தரும். கோபமும் மயக்கத்தைத் தரும்

"கள்வைத்த தோற்பை சுமவாதே" —(தகனமும்) திருப்புகழ்.

**பொள்ளுற்ற காற்பை :—**

பொள்ளென வேகமாகச் செல்லும் தசவாயுக்கள் குடிகொண்டிருக்கின்ற பை.

"காயமேயிது பொய்யடா. காற்றடைத்த பையடா" என்பது சித்தர்வாக்கு.

**கொள்ளைத் துராற்பை :—**

துரால்—செத்தை. யமன் கொள்ளையடித்துக் கொண்டு போகின்ற செத்தைபோன்ற உதவாத பை.

**பசுபாச அள்ளற்பை :—**

பசு—ஆன்மா. பாசம்—ஆணவ மலம். இவைகட்கு இடமாய சேற்றுப்பை. அள்ளல்—சேறு.

**மாற்பை :—**

மால்—மயக்கம். மயக்கத்துக்கு இடமான பை.

**ஞெள்ளற்பை :—**

ஞெள்ளல்—தவறு. தவறுகட்கு இடமாய பை.

**சீப்பை :—**

சீ—சீழ்; சீழ் ஒழுகும் பை.

"தோலெலும்பு சீநரம்பு பீளைதுன்று கோழை பொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான
தூலம்" —திருப்புகழ்.

**வெள்ளிட்ட சாப் பிசித மீரல் :—**

வெள் இட்ட அசா கலப்பில்லாத அசதி—தளர்ச்சி. இவைகளுடன் கூடிய உடம்பு.

**பிசித மீரல் அள்ளச் சுவாக்கள் :—**

பிசிதம்—இறைச்சி, சுவாக்கள்—நாய்கள்.

**சள்ளிட்டிழா —**

நாய்கள் சள்ளென்று குலைத்துக்கொண்டு வந்து இழுத்துச் செல்லும் உடம்பு.

**பல் கொள்ளப்படாக்கை :—**

பல்லால் கடித்து நாய்கள் தின்னும உடம்பு.

**ஆக்கை தவிரேனோ ? :—**

இத்தகைய இழிந்த உடம்பின் மீதுள்ள பற்றை விடவேண்டும்

தாயுமானுர் இந்த உடம்பைப்பற்றிக் கூறும் இனிய பாடலை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

காகமோடு கழு கலகைநாய் நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலிரண்டு நவ வாசல பெற்றுவளர்
காமவேள நடன சாலையை

மோக ஆசைமுறி யிட்ட பெட்டியை மும்
மல மிகுந் தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்கலார் கிடை சரக்கினை
மாக இந்த்ரதநு மின்னை யொத்திலக
வேதம் ஓதிய குலாலனூர்
வனைய வெய்யதடி காரனானயமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேகமான பொயை மெய்யெனக் கருதி
ஐய வைய மிசை வாடவோ ?
தெரிவதற்கரிய பிரமமே! அமல
சிற்சுகோதய விலாசமே!

*பிறப்பை ஒழிக்கும் உபாயங்கள்.* இவையெனக் கூறு கின்றார் குருஞான சம்பந்தர். அவற்றுள் உடலைப் பழித்தல் ஒன்று எனக் குறிப்பிடுகின்றார்

தன்பெருமை யெண்ணுமை தற்போதமே யிழத்தல்
மின்பெருமை யாம்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியு நான். —*சிவபோகசாரம்.*

**தென்னத்தி சேர்ப :—**

*அத்தி*—தெய்வயானை.

"முத்தைத்தரு பத்தித் திருநகை அத்திக்கிறை" —திருப்புகழ்.

*அத்தம*—கை. அத்தத்தையுடையது யானை. யானையால் வளர்க்கப்பட்டவள் தெய்வயானை.

தெளிந்த அறிவுள்ள தேவகுஞ்சரியின் கணவர்.

**வெள்ளத்திமால் :—**

வெள்ளையானையையுடைய இந்திரன்.

**வெள்ளுத்தி மால் :—**

*உந்தி*—கடல். சந்தத்துக்காக இது உத்தியென வந்தது. வெண்மையான பாற்கடலில் துயின்ற திருமால.

**சிள்ளிட்ட காட்டில் :—**

சிள் வண்டுகள் நிறைந்த காடு.

**கிரார் :—**

*கிராதகர்*—வேடர். இடைக் குறையாகக் கிரார் என வந்தது.

**புன்னத்த மார்க்கம் :—**

அத்தம்—காடு.

வேடர்கள் கொல்லுகின்ற பட்சிகளேயுடைய காட்டு வழியில் வள்ளியின் பொருட்டு முருகவேள் சென்றருளினார்.

**வள்ளிச் சன்மார்க்கம் :—**

வள்ளி அநுட்டித்த உண்மை நெறி.

வள்ளிநாயகி முருகவேளை நினைத்து தன்னை மறந்து தலைவன் தாள் தலைப்பட்டு நின்றார். அந்த நிலை வந்தபோது இறைவன் தானே வந்து அருள் புரிகின்றார். இதுவே இறைவனை யடையும் நெறி. இந்த இரகசிய நெறியை முருகவேள் முக்கட பிரானுக்கு உபதேசித்தருளினார் என உணர்க.

**விள்ளைக்கு :—**

விள் ஐக்கு—விள்ளுவாய் என்று கேட்ட தந்தைக்கு.

**நோக்கவல்லைக்கு ளேற்றும் இளையோனே :—**

வல்லை—விரைவு. நோக்கம்—கண்ணிமைக்கு நேரம்.

இமைப் பொழுதுக்குள் தந்தைக்குக் கந்தவேள் உபதேசித் தருளினார்.

## கருத்துரை

வள்ளிமலை மேவு வள்ளலே! இந்த மாய உடம்பை யொழித்து அருள்செய்வீர்.

## 83

வெல்லிக்கு வீக்கு முல்லைக்கை வீக்கு
வில்லிக்க தாக்க ருதும்வேளால்
வில்லற் றவாக்கொள் சொல்லற்று காப்பொய்
யில்லத் துருக்க வலைமேவு

பல்லத்தி வாய்க்க அல்லற் படாக்கை
நல்லிற் பொருச்ச மயமாறின்
பல்லத்த மார்க்க வல்லர்க்கர் மூர்க்கர்
கல்விக் கலாத்த லையலாமோ

அல்லைக்கொல் வார்த்தை சொல்லிக்கி தோத்து
சொல்குக்கு டார்த்த இளையோனே
அல்லுக்கு மாற்றி னெல்லுக்கு மேற்புல்
கெல்லைப்ப டாக்க ருணைவேளே

வல்லைக்கு மேற்றா் தில்லைக்கு மேற்றா்
வல்லிக்கு மேற்ற ரருள்வோனே
வள்ளிக் குழாத்து வள்ளிக்கல் காத்த
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

## பதவுரை

அல்லை கொல் வார்த்தை சொல்லிக்கு=இராக் காலம் ஒழியாதோ என்று சொல்லிக் கொண்டிருக்கின்ற தலைவிக்கு, இதம் ஒத்து சொல்=இதமாக ஒத்து இரவை யொழிக்கின்ற குரலாகக் கூவுகின்ற, குக்குடம் ஆர்த்த=சேவலைக் கொடியாகக் கட்டிய, இளையோனே=இளம் பூரணரே! அல் லுக்கும்=இரவையும், ஆற்றின் எல்லுக்கும் மேல் புல்கு=வழி தெரிவிக்கின்ற பகலையும் கடந்த மேல் நிலையில் மருவி, எல்லை படா கருணைவேளே=அளவு படுத்த முடியாத கருணைக் கடலாகிய வேளே! வல்லைக்கும் ஏற்றார்=வலிமையும் அழகும் பொருந்திய இடபவாகனத்தையுடையவரும், தில்லைக்கும் ஏற்றார்=சிதம்பரத்தலத்துக்கு ஏற்றவரும், வல்லிக்கும் ஏற்றார்=சிவகாம வல்லிக்கும் ஏற்றவருமாகிய சிவபெருமான், அருள்வோனே=அருளிய குமாரரே! வள்ளி குழாத்து=வள்ளிக் கொடிகள் கூட்டமாகவுள்ள, வள்ளிக் கல் காத்த=வள்ளி மலையில் தினைப்புனங் காவல் செய்திருந்த, வள்ளிக்கு வாய்த்த=வள்ளி பிராட்டியாருக்கு வாய்த்த, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! வெல்லி குவிக்கும்=உலகத்தை வென்று குவிக்கின்ற, முல்லை கை=முல்லை மலர்க் கணையை ஏந்திய கையையுடைய, வீக்குவில்=நாண் பூட்டிய வில், இக்கு அதா கருது வேளால்=கரும்பாக விரும்பிய மன்மதனால், வில் அற்று=ஒளி மழுங்கி, அவா கொள் சொல் அற்று=ஆசை கொண்டு உரைக்கும் சொல்லும் போய், உகா=மனம் நெகிழ்ந்து, பொய் இல்லத்து உறு=பொய் வாழ்வுடைய வீட்டிற்குச் சென்று, கவலை மேவு=கவலையடைகின்ற, பல் அத்தி வாய்க்க=பல கவலைக்கடல் நேர, அல்லல் படு ஆக்கை=துன்பப்படு உடம்பை உடையவனாகிய சிறியேன், நல்லில் பொருத=நன்மார்க்கத்தைத் தரியாத, சமயம் ஆறின்=ஆறு சமயங்களின், பல் அத்த மார்க்க=பல பொருள்களைக் கூறும் வழியை யுடைய, வல் அர்க்கர்=வலிய அரக்கராகிய, மூர்க்கர்=மூர்க்கர்களுடைய, கல்விகலாத்து=கல்விக் கலகத்துள், அலையலாமோ=அடியேன் அலைவது முறையோ?

## பொழிப்புரை

இரவு காலம் ஒழியாதோ என்று கூறி வருந்துகின்ற தலைவிக்கு இதமாக அவளுடன் ஒத்து, இரவையகற்றும் குரலாகக் கூவுகின்ற சேவல் கொடியையுடைய இளம் பூரணரே

இரவையும் சிறிது வழியைப் புலப்படுத்துகின்ற பகலையும் (கேவல சகலம்) கடந்த தூய நிலையில் விளங்குகின்ற, அள வற்ற கருணைமூர்த்தியாகிய செவ்வேட் பரமரே! வலிமையும் அழகும் உடைய இடபத்தை வாகனமாகவுடையவரும், தில்லை யம்பதிக்கும் சிவகாம சுந்தரிக்கும் ஏற்றவரும் ஆகிய சிவபெரு மானுடைய திருக்குமாரரே! வள்ளிக்கொடிகள் நிரம்பவும் படர்ந்த வள்ளிமலையில் தினைப்புனத்தைக் காவல் செய்த வள்ளி நாயகிக்கு வாய்த்த பெருமிதம் உடையவரே! உல கத்தை வென்று குவிக்கின்ற முல்லை மலர்க்கணையை ஏந்திய கையையுடையவனும் நாண் பூட்டிய வில் கரும்பாக விரும்பிக் கொண்டவனுமாகிய மன்மதனால், ஒளி மழுங்கியும், ஆசை கொண்டு உரைக்கும் சொல்லும்போய், மனம் நெகிழ்ந்தும், பொய் வாழ்வுடைய வீட்டில் இருந்து கவலையடைந்து, பல துன்பக் கடல் நோ, துயரப்படுகின்ற உடம்பையுடையவனு கிய அடியேன், நல்வழியைத் தரிக்காத ஆறு சமயங்களின், ஒற்றுமைப்படாத பல பொருள்களையுடைய வழியில் செல் பவர்களான, வல்லரக்கர் போன்ற மூர்க்கர்களின் கல்விக் கல கத்துள் அழியலாமோ?

## விரிவுரை

**வெல்லிக் குவீக்கு :—**

குவிக்கும் என்ற சொல் சந்தத்தையொட்டி குவீக்கும் என வந்தது.

மன்மதன் முல்லைக் கணைகளையேவி உலகில் உள்ள மாந் தர்களை மயக்கிக் குவிக்கின்றான்.

**முல்லைக்கை :—**

அப்படி வென்று குவிக்கின்ற கணையாகிய முல்லை மலரை ஏந்திய கையையுடையவன் மன்மதன்.

**வீக்கு வில்லிக்கதாக் கருது வேள் :—**

வீக்கு—நாண் பூட்டிய.

கரும்பு நாண் பூட்டிய வில்லாகக் கரும்பு வில்லை விரும் பிக் கொண்ட மன்மதன்.

**வில்லற்ற வாக்கொள் சொல்லற்றுகா :—**

வில் அற்று அவா கொள் சொல் அற்று உகா.

வில்—ஒளி.

மன்மதனால் அறிவு ஒளி அற்றுப் போகும். ஆசை கொண்டு உரைக்கும் சொல்லும் அற்றுப் போகும்.

உகுதல்—சிந்துதல். மனம் நெகிழ்ந்து சிந்தும்.

**பொய்யில்லத்துரு கவலைமேவு :—**

பொய் வாழ்வு—நிலையற்ற வாழ்வு.

நிலையில்லாத வாழ்வுடைய வீட்டில் இருந்து சதா கவலையை யடைந்து மனிதர் மாய்கின்றார்கள்.

**பல்லத்தி வாய்க்க :—**

அத்தி—கடல். பலவகையான துன்பக் கடல்.

"பல துன்பமு ழன்று கலங்கிய
சிறியன் புலையன் கொலையன்புரி
பவ மின்று கழிந்திட வந்தருள் புரிவாயே"
—(கனகந்திரள்) திருப்புகழ்.

உணவுக் கவலை; பொருட் கவலை; மனைவி மக்களால் கவலை, அரசினரால் கவலை; நோய் முதலியவற்றால் கவலை. இவ்வாறு பல கவலைகள்.

**அல்லற் படாக்கை :—**

அல்லல்படு ஆக்கை.

ஆக்கை—உடம்பு

பல துயரத்தால் சோர்வு படுகின்ற உடம்பு.

**நல்லிற் பொருச் சமயமாறின் :—**

நல்வழியில் சேராத ஆறு சமயங்கள். இவை புறச் சமயங்கள்.

**பல்லத்த மார்க்கர் வல்லர்க்கர் மூர்க்கர் :—**

அத்தம்—பொருள்.

ஒன்றோடொன்று ஒவ்வாது முரண்படுகின்ற பொருள்களைக் கூறும் சமய மாரக்கம். அதனைப் பின்பற்றுகின்ற, இரககமற்ற அரக்கரைப் போன்ற மூர்கக்ர்கள்.

**கல்விக் கலாத்தலையலாமோ :—**

கலாம்—கலகம்.

கல்வியின் பயன் மனம் அடங்குவதேயாகும். அப்படியின்றி கறற கல்வியைக் கொண்டு தர்க்கமிட்டு, ஒருவருடன் ஒருவர் வாதிட்டுக் கெடுகின்ற தன்மையை ஒழிக்க வேண்டும்.

"கலகலகலெனக் கண்ட பேரொடு
கிலுகிடு சமயப் பங்கவாதிகள்
கதறிய வெகு சொற் பங்கமாகிய பொங்களாவும்
கலைகளும் மொழிய" —(அலகிலவு)திருப்புகழ்.

சமய வாதிகளைப் பற்றி சுவாமிகள் பல இடங்களில் கண்டிக்கின்றார்.

**அல்லைக்கொல் வார்த்தை சொல்லிக்கி தோத்து சொல் குக்குடம் :—**

தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்கு இராப் பொழுது பெருந் துயரத்தைக் கொடுக்கும். ஒரு இரவு ஒரு யுகம் போலிருக்கும். இந்தப் பாழும் இரவு விடியாதோ? சூரியனைக் கடல் விழுங்கி விட்டதோ? என்று கூறிப் புலம்புவாள்.

"ஆதலால் அல்லை கொல் வார்த்தை சொல்" என்றார். இரவு ஒழியாதோ என்று சொல்லுகின்றவள். ஒரு தலைவி கூறுகின்றாள்.

ஆழிவாய்ச் சத்தம் அடங்காதோ ? நான் வளர்த்த
கோழிவாய் மண்கூறு கொண்டதோ ?—ஊழி
திரண்டதோ ? கங்குல் தினகரனுந் தேரும்
உருண்டதோ பாதாளத் துள்.

இவ்வாறு இரவு நீடித்துத் தவிக்கின்ற தலைவிக்குக் கோழி உபகாரமாகச் சூரிய உதயத்தைப் புலப்படுத்தக் கூவும். சேவலின் குரலைக் கேட்டு அவள் சிறிது ஆறுதல் அடைவாள்.

ஆதலால் துன்பப்படுகின்ற ஒரு பெண்ணுக்கு உதவி செய்கின்ற சேவலை முருகர் ஆவலுடன் கொடியாகக் கொண்டார்.

இனி, ஆணவ இருளில் கிடந்து தத்தளிக்கின்ற ஆன்மாவுக்கு ஞானக் கதிரோனாகிய சிவசோதியின் வடிவையுணர்த்தும் நாததத்துவம் சேவல்.

இத ஒத்து—இதமாக ஒத்து. ஒத்து என்ற சொல் சந்தத்துக்காக நீட்டல் விகாரம் பெற்றது.

**அல்லுக்கு மாற்றி னெல்லுக்கு மேற்புல் கெல்லைப்படாக் கருணைவேளே :—**

அல்—இரவு.எல்—பகல். இங்கு இரவு பகல் என்றது மறப்பும் நினைப்புமாகும். இது கேவலசகலம். இந்த இரண்டும் அற்ற இடமே சதானந்தம்.

"கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்" —கந்தரநுபூதி.

இரவும் பகலும் அற்ற தூய இடத்தில் பொருந்தி முருகவேள் விளங்குகின்றார். அவர் அளவுபடுத்த முடியாத தயா சாகரம்.

இரவுபக லற்றஇடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. —தாயுமானார்.

"இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே"

—கந்தரலங்காரம்.

"அந்தி பகலற்ற நினைவருள்வாயே" —(ஐங்கரனை) திருப்புகழ்.

**வல்லைக்கு மேற்றா:—**

வல்—வலிமை. ஐ—அழகு. ஏறு—இடபம்.

வலிமையும் அழகும் உடைய இடபத்தை வாகனமாக உடையவர் சிவபெருமான்.

உலகமெலாம் ஒடுங்கியபோது தருமம் ஒடுங்காது இடப வடிவாகச் சென்று சிவமூர்த்தியை யடைந்தது. இறைவன் அதனை ஊர்தியாகக் கொண்டார். உலகத்தை எல்லாம் தாங்குகின்ற இறைவனையுந் தாங்கும் வலிமையுடையது தருமமாகிய இடபம்.

கோயிலில் இறைவனுக்கு அண்மையில் உள்ள இடபம் தரும விடை. வெளிப் பிரகாரத்தில் பெரிதாகவுள்ளது மால் விடை.

திரிபுர சம்மார காலத்தில் திருமால் விடையாகச் சென்று இறைவனைச் சுமந்தார்.

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேருதே
இடபமுகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. —திருவாசகம்.

**தில்லைக்குமேற்றா வல்லிக்கு மேற்றா :—**

ஏற்றா—ஏற்றவர்.

தில்லையாகிய சிதம்பரத்துக்கும், சிவகாமவல்லிக்கும் ஏற்றவர் சிவபெருமான்.

தில்லையென்ற செடிகள் மிகுந்திருந்த காரணத்தால் அத்தலம் தில்லையெனப் பெற்றது.

## கருத்துரை

வள்ளி மணவாளரே! சமயக் கலகத்துள் சென்று தடுமாறு வண்ணம் அடியேனை ஆண்டருள்வீர்.

## 84

ககனமு மனிலமு மனல்புனல் நிலமமை
கள்ளப் புலாற்கி ருமிவீடு
கனவெழ மொழிதரு சினமென மதமிகு
கள்வைத்த தோற்பை சுமவாதே

யுகஇறு திகளிலு மிறுதிலு லொருபொருள்
உள்ளக்க ணேக்கு — மறிவூறி
ஒளிதிக ழுருவுரு வெனுமறை யிறுதியி
லுள்ளத்தை நோக்க — அருள்வாயே

ம்ருகமத பரிமள விகசித நளினநள்
வெள்ளைப் பிராட்டி — இறைகாணு
விடதர குடிலச டிலமிசை வெகுமுக
வெள்ளத்தை யேற்ற — பதிவாழ்வே

வகுளமு முகுளித வழைகளு மலிபுன
வள்ளிக் குலாத்தி — கிரிவாழும்
வனசரர் மரபினில் வருமொரு மரகத
வள்ளிக்கு வாய்த்த — பெருமாளே.

## பதவுரை

ம்ருகமத பரிமள = கஸ்தூரி மணங்கமழ்வதும், விகசித = நன்கு மலர்ந்து விளங்குவதுமாகிய, நளினநள் = தாமரை மலரில் வீற்றிருக்கும், வெள்ளை பிராட்டி = வெண்ணிறத்துடன் கூடிய கலைமகளாருடைய, இறைகாணு = கணவனுகிய பிரமதேவனுல் காணமாட்டாதவரும், விடதர = ஆலால விடத்தைக் கண்டத்தில் தரித்தவரும், குடில சடிலமிசை = வளைந்த சடைமுடியின் மீது, வெகுமுக = அநேக முகங்களையுடைய, வெள்ளத்தை ஏற்ற = கங்கா நதியை ஏற்றுக்கொண்டவரும் ஆகிய, பதி வாழ்வே = சிவபெருமானுடைய திருக்குமாரரே! வகுளமும் = மகிழமரமும், முகுளித வழைகளும் = குவிந்துள்ள அரும்புகளோடு கூடிய சுரபுன்னையும், மலிபுன = மிகுந்துள்ள கொல்லைகளையுடைய வள்ளிகுலா = வள்ளிக்கொடிகள் மிகுதியாக விளங்குகின்ற, கிரி வாழும் = (வள்ளி) மலையில் வாழ்கின்றவரும். வனசரர் மரபினில் வரும் = காட்டில் சஞ்சரிக்கும் வேடர்குலத்தில் தோன்றினவரும், ஒரு மரகத = ஒப்பற்ற மரகதநிறமுடையவருமாகிய வள்ளிக்கு வாய்த்த பெருமாளே = வள்ளியம்மையாருக்குக் கணவராக வாய்த்த பெருமையின் மிக்கவரே! ககனமும் = வானும், அனிலமும் = காற்றும், அனல் = நெருப்பும், புனல் = நீரும், நிலம்அமை = மண்ணும் ஆகிய ஐம்பூதங்களினலாய, கள்ளபுலால் = கரவுடைய துர் நாற்றம் வீசுவதும், க்ருமி வீடு = புழுக்களுக்கு வீடுபோன்றதும், கனல் எழ மொழிதரு = நெருப்புப் பொறி பறக்குமாறு பேசுகின்ற, சினம் என மதம் மிகு = கோபம் என்கின்ற அகங்கார மிகுந்த, கள்வைத்த தோல் பை = மயக்கம் என்ற கள்ளைவைத்துள்ள தோற்பை போன்றதுமாகிய இவ்வுடம்பை, சுமவாதே = சுமந்து அயராமல், யுக இறுதிகளிலும்

இறுதியில்=யுகாந்தங்களிலும் முடிவில்லாததும், ஒரு பொருள்=ஒப பற்ற பரம்பொருளும், ஒளிதிகழ் அரு உரு எனும்=ஞானவொளிவீச அருவாகவும் உருவாகவும் விளங்குவ தென்று கூறும், மறை இறுதி யின் உள்ளத்தை=வேதமுடிவில் விளங்குவதும் ஆகிய தேவரீரை, உள்ளக்கண் நோக்கும்=அகக் கண் பார்வையால் பார்க்கும், அறிவு ஊறி=சிவஞான ஊற்று பெருகி. நோக்க அருள்வாயே=பார்த்து மகிழ அருள்புரிவீர்.

## பொழிப்புரை

கஸ்தூரி மணங்கமழ்கின்றதும் நன்றாக மலர்ந்து விளங்கு வதுமாகிய வெண்டாமரை நடுவில் வீற்றிருக்கும் வெண்ணிற முடைய கலைமகளின் கணவராகிய பிரமதேவரால் காணமாட் டாதவரும், ஆலாலவிடத்தைக் கண்டத்தில் தரித்தவரும, வளைந்த சடைமுடியில் ஆயிரமுகங்களையுடைய கங்காநதியை ஏற்றவரும் ஆகிய சிவபெருமானுடைய திருப்புதல்வரே! மகிழ மரமும், குவிந்த அரும்புகளை யுடைய சுரபுன்னை மரங் களும் மிகுந்துள்ள தினைப்புனங்களோடு கூடிய வள்ளிக் கொடி படர்ந்துள்ள வள்ளி மலையில் வாழ்கின்றவரும், வன வேடர் மரபில் வந்தவரும், மரகதவண்ண முடையவருமாகிய வள்ளிபிராட்டியாருக்கு மிகப் பொருத்தமாக வாய்த்த பெருமித முடையவரே! வான், காற்று, தீ, நீர், மண் என்ற ஐம்பூதங்க ளின் பரிணமத்தாலாகியதும், துர்நாற்றம் மறைந்திருப்பதும், புழுக்களுக்கு உறைவிடமும், நெருப்புப்பொறி பறக்கப் பேசும் கோபமும மதமும் நிறைந்து அதனல் வரும மயக்கம் என்னும் கள் வைத்த தோற்பையுமாகிய இவ்வசேதன உடம்பை இனி நான் சுமந்து அயராவண்ணம், யுக முடிவிலும் முடிபாத ஒப்பற்ற பரம்பொருளும் ஞானவொளி வீசுவதும், அருவாக வும் உருவாகவும விளங்குவதென்று கூறும மறைகளின் முடிவில் திகழ்வதுமாகிய செம்பொருளாகிய தேவரீரை, உள்ளக கண்ணால் காணும் ஞானஊற்று சுரக்கத் தெரிசித்து உய்வுபெற அருள் புரிவீராக.

## விரிவுரை

**ககனமும்......நிலமை :—**

இவ்வுடல் மண் நீர் நெருப்பு காற்று வெளி என்ற ஐம் பூதங்களின் பரிணமமாகும்.

### உலகம், நிலம், பயிர் முதலிய விளக்கம்

சிவபெருமான் உலகங்கட்கெல்லாம் ஏகநாயகன். உலக மெல்லாம் அவருடைய நிலம். பிரமர் பயிர் செய்யுங் களமர். அவர் சிவபெருமான் ஏவலின்படி உலகமென்னும் வயலில் சராசரங்களாகிய விதைகளை இட்டு, தாவரம, நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர் ஆகிய பயிரை

வளர்த்தனர்; திருமகள் கொழுநராகிய திருமால் அப்பயிரைக் காத்தனர்; விளைவு முற்றிய பின், கூற்றுவன் என்னும் பணியாளன் வந்து ஊனுடம்பை மாற்றி உயிர் என்னும் நெற்குவியலை, பூதசாரதநு என்னும் வண்டியில் ஏற்றிப் பொன்னுலகத்திற்கும், பூதமகாதநு, என்னும் வண்டியிலேற்றி நரக உலகத்திற்கும, பூதபரிணமதநு என்னும் வண்டியிலேற்றி மண்ணுலகத்திற்கும் அனுப்புகின்றனன. அவற்றுள் ஒரு சில உயிர்களுக்கு இருவினையொப்பு மலபரிபாக முற இறைவன் தனது திருவடியிற் சேர்த்து அத்துவிதானந்த முத்தியைத் தருகின்றனன். அதனை உற்று நோக்கில் அரசன் ஆறிலொரு கடமைபெறும் முறைமைபோல் விளங்குகின்றது. இந்தக் கருத்தை திருக்கழுமல மும்மணிக் கோவையில் நமது பட்டினத்துப் பிள்ளையார் திறம்பட நமக்கு அறிவிக்கின்றனர். அதனைப் படித்தின்புறுக.

"பெரும்புகழ்க் காழி விரும்பு சங்கரனே
ஏந்தெழிற் புவன வேந்தநீ யாதலின்
வளமலி நான்முகக் களமரு னேவலின்
உரம்பெறு குலவரைக் குறும்பகப் பட்ட
மண்டலம் என்னுங் கண்டநீர் வயலுட்
சராசரத் தொகுதி விராயவித் திட்டுப்
பாதவ மிருகம் பறவை மானிடர்
ஆதிப் பைங்கூ ழமைத்தனர்; நிற்ப
மாவுறை மருமக் காவலாளர்
வளமையின் ஓம்ப விளைவு முற்றியபின்
புரிபயன் பெறுவா னரிதர வியற்றி
மெய்வலிக் கூற்றுவக் கைவினை மாக்களிற்
புலாலுடை யாக்கைப் பலாலம தகற்றி
அற்றமில் உயிரெனப் பெற்ற நெல்திறனைப்
பூதசாரத் தநு பூதம காதநு
பூத பரிணமம் புகலுறு யாக்கை
மூவகைப் பண்டியின் மேவற ஏற்றிப்
பொன்னிலம் நிரயம் இந்நிலம் என்னும்
இடந்தொறும் ஆங்கவை அடங்கவைத்தவற்றுள்
ஒருசில வற்றைநின் திருவடி வீட்டிற்
சேர்த்தனை யன்னது கூர்த்து நோககில்
அரசு கொள்கடமை ஆறி லொன் றென்னும்
புரைதீர் முறைமை புதுக்கினை போலும்; அதனால்
மாசுக நீயுறும வண்மை
பேசுக கருணைப் பெரிய நாயகனே."

"வானப் புக்குப் பற்று மருத்துக் கனல்மேவு
மாயத் தெற்றிப் பொய்க்குடி லொக்கப் பிறவாதே"
—திருப்புகழ்.

**கள்ளப்புலால் க்ருமிவீடு :—**

புலால்—தீய நாற்றம். அது மறைந்திருப்பதால் "கள்ளப் புலால்" என்றனர். புழுக்கள் பல உள்ளே நெளிவதால் "க்ருமி வீடு" என்றனர்.

"புழுக்கொள் மலக்குகை
வீடு கட்டியி ருக்குமெ னக்குநி னருள்தாராய்"
—(ஆலம்வைத்த) திருப்புகழ்.

**யுக இறுதிகளிலும் இறுதியில் ஒரு பொருள் :—**

உலகமழியும் காலத்தை யுகம் என்பர். அப்படி பல முறை உலகமழிந்து தோன்றும். அதனால் "யுக இறுதிகள்" என்று பன்மையாகக் கூறினர். அப்பொழுதும் அழியாத அநாதி மூலமாகிய பரம்பொருள் முருகவேள்.

**உள்ளக்க ணோக்கும் :—**

புறக்கணணால் கண்டு மகிழ்வதினும் அகக்கண்ணால் கண்டு மகிழ்வதுவே பரமானந்தம்.

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்தம்" —திருமூலர்.

**வெள்ளைப் பிராட்டி இறைகாணா :—**

கலைமகளுக்குத் தலைவனாகிய பிரமதேவரால் சிவபெருமான் காணப்படாதவர். கலையறிவினால் காணப்படாதவர் என்பது கருத்து.

**வெள்ளத்தை யேற்ற பதி :—**

உமாதேவியார் சிவபெருமானுடைய கண்களை மூடிய பொழுது உலகமெல்லாம் இருண்டு விட்டது. அப்பொழுது உமையம்மையார் வெருஉக் கொண்டனர். அதனால் திருக்கரப் பெருவிரலில் சிறு வேர்வைத் துளி உண்டாயிற்று. அது வெள்ளமாகப் பெருகி உலகையெல்லாம் அழிக்கத் தொடங் கிற்று. அதனால் உலகம் கலங்கியது. அப் பெரு வெள்ளத் தைச் சிவபெருமான் சடாமுடியில் ஏற்று உலகைக் காத்தருளி னார்.

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தா லவன் சடையிற் பாய்ந்திலளேல் தரணி யெல்லாம்
பில முகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ. —திருவாசகம்.

**வள்ளிக் குலாத்திகிரி :—**

வள்ளிகுல திகிரி எனப் பிரிக்க; குலத்திகிரி என்பது குலாத் திகிரி எனத் திரிந்தது. சிறந்த வள்ளிமலை என்பது பொருள். (இது திரு வ. சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள் குறிப்புரை) வள்ளிக்கொடி மிகுதியாக உள்ளமையால் வள்ளிமலை யெனப் பேருண்டாயிற்று.

வள்ளியம்மையார் திருவவதாரஞ் செய்த மலை. இது தொண்டை நாட்டில், திருவலம் என்ற இரயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கே 8 மைலில் உள்ளது. இத்தலம் மிகப் புனிதமானது. அம்மையார் பொருட்டு முருகவேள் வந்து பலகாலம் உலாவியது. வேதாகமங்களால் காண முடியாத வேற்பிரான் விரைமலரடிபடும் பெரும்பேறு செய்தது. இயற்கை வளங் குன்றாதது. அங்குள்ள மக்கள் இன்றைக்குங் கள்ளங் கபட மற்றவர்கள்.

"சுனையோ டருவித் துறையோடுபசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே"

"வீடுஞ்சுரர் மாமுடி வேதமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே" —அநுபூதி.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பும் என
திதயமு மணக்குமிரு பாதச் சரோருகனும்"
—வேடிச்சிகாவலன் வகுப்பு.

"எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
யிரலைபரை யிரவுபகல் இரைதேர்க டாடவியில்
எயினரிடு மிதணதனில் இளந்தினை கிளிகடிய
இனிதுபயில் சிறுமிவளர் புனமீ துலாவுவதும்"
—சீர்பாத வகுப்பு.

## கருத்துரை

சிவ குமாரரே! வள்ளி மணவாளரே! புன்புலால் யாக்கையைச் சுமந்து அயராமல், தேவரீரை உள்ளக் கண்ணால் கண்டு உய்ய அருள்வீர்.

## 85

அல்லசல டைந்த வில்லடல னங்கன்
அல்லிமல ரம்பு தனையேவ
அள்ளியெரி சிந்த பிள்ளைமதி தென்ற
லையமுது கிண்ட அணையூடே

சொல்லுமர விந்த வல்லிதனி நின்று
தொல்லைவினை யென்று முனியாதே
துய்யவரி வண்டு செய்யமது வுண்டு
துள்ளியக டம்பு தரவேணும்

கல்லசல மங்கை யெல்லையில் விரிந்த
கல்விகரை கண்ட புலவோனே
கல்லொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று
கல்லலற வொன்றை யருள்வோனே

வல்லசுர ரஞ்ச நல்லசுரர் விஞ்ச
வல்லமைதெ ரிந்த மயில்வீரா
வள்ளிபடர் கின்ற வள்ளிமலை சென்று
வள்ளியை மணந்த பெருமாளே.

## பதவுரை

கல் அசல மங்கை எல்லையில் விரிந்த=கற்களின் மயமான மலையரையன் மகளாகிய பார்வதியம்மை வரையில் சென்று நின்ற, கல்வி கரை கண்ட=கல்வியின் கரையைக் கண்ட, புலவோனே=புலவர் பெருமானே! கள் ஒழுகு=தேன் ஒழுகும், கொன்றை=கொன்றை மலரைப் புனைந்த, வள்ளல் தொழ=வள்ளலாகிய சிவபெருமான் வணங்க, அன்று=அந்நாளில், கல்லல் அற=குழப்பம் நீங்குமாறு, ஒன்றை அருள்வோனே=ஒரு மொழியாம் பிரணவப் பொருளை உபதேசித்தவரே! வல் அசுரர் அஞ்ச=வலிமையான அசுரர்கள் அஞ்சவும், நல்லசுரர் விஞ்ச=நற்குணமுடைய தேவர்கள் பிழைக்குமாறும் வல்லமை தெரிந்த=உமது ஆற்றலைக் காட்டிய, மயில் வீரா=மயில் வீரரே! வள்ளி படர்கின்ற=வள்ளிக் கொடி படர்கின்ற, வள்ளிமலை சென்று=வள்ளிமலையிற் சென்று, வள்ளியை மணந்த=வள்ளி பிராட்டியை மணஞ் செய்து கொண்ட, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே, அல் அசல் அடைந்த=இரவில் அயலில் வந்து, வில் அடல் அநங்கன்=வில்லையேந்தி வலிமையான மன்மதன், அல்லி மலர் அம்பு தனை ஏவ=தாமரை மலர்க்கணையைச் செலுத்த, பிள்ளை மதி=பிறைச் சந்திரனும், தென்றல்=தென்றல் காற்றும், அள்ளி எரி சிந்த=நெருப்பை அள்ளி வீச, ஐயம் உது கிண்ட=தலைவன் அருள் புரிவானோ என்ற ஐயப்பாடு வந்து கலக்கத்தைச் செய்ய, அணை ஊடு=படுக்கையில், சொல்லும்=மாதர்கள் சொல்லும் அலர் உரையால் சொல்லப்படுகின்ற, அரவிந்த வல்லி=தாமரை மலரில் வாழ்கின்ற இலக்குமி போன்ற இந்தப் பெண், தனி நின்ற=தனிமையாகக் கிடந்து, தொல்லை வினை என்று முனியாதே=என் பழவினையால்

வருந்துகின்றேன் என்று கூறித் தன்னைத்தானே வெறுக்காமல், துய்ய வரி வண்டு=தூயரேகைகளையுடைய வண்டுகள், செய்ய மது உண்டு= சிவந்த தேனையுண்டு, துள்ளிய கடம்பு=தேனுண்ட மயக்கத்தில் துள்ளுகின்ற கடப்ப மலர் மாலையை தரவேணும்=தந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

மலைமகளாகிய உமாதேவியாரின் திருமுன்வரை சென்று விரிந்த கல்வியிற் கரையைக் கண்ட புலவர் பெருமானே! தேன் ஒழுகும் கொன்றை மலரைத் தரித்த சிவபெருமான் வணங்கிக் கேட்க குழப்பம் நீங்குமாறு, ஒரு மொழியின் உட்பொருளை உபதேசித்தவரே! வலிய அசுரர்கள் அஞ்சுமாறும், நல்ல அமரர்கள் வாழுமாறும், உமது ஆற்றலைக் காட்டிய மயில் வீரரே! வள்ளிக்கொடி படர்கின்ற வள்ளிமலையிற் சென்று வள்ளிநாயகியை மணந்து கொண்ட பெருமிதம் உடையவரே! இரவு நேரத்தில் வந்து வில்லேந்திய வெற்றியுடைய மன்மதன் தாமரை மலர்க் கணையைச் செலுத்துவதனாலும், சந்திரனும், தென்றற் காற்றும் நெருப்பை அள்ளி வீசுவதனாலும், தலைவன் வருவானோ என்ற ஐயத்தையடைந்து, படுக்கையில் மாதர்கள் பழிச்சொல்கூறப்படுகின்ற, இலக்குமி போன்ற இப்பெண், தன் பழவினையால் துன்புறுகின்றேன் என்று தன்னைத்தானே வெறுத்துக்கொள்ளாத வண்ணம், தூய வரிகளையுடைய வண்டுகள் சிவந்த தேனைப் பருகித் துள்ளுகின்ற உமது கடப்பமலர் மாலையைத் தந்து அருள் செய்ய வேண்டும்

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் பாடப் பெற்றது. நற்றாயிரங்கல் என்ற துறையில், நாயகனை விரும்பி வேட்கை கொண்டு வாடி வருந்தும் தன் மகளைக் குறித்துத் தாய் இரங்குகின்றதாக அமைந்தது.

**அல்லசலடைந்த :—**

அல் அசல் அடைந்த. அசல்—அயல். (அருகு) இரவில் அருகில் வந்த. மன்மதன் இரவில் ஆட்சி செய்வான்.

**வில்லடலநங்கன் :—**

கரும்பு வில்லையேந்தி, ஆற்றல் படைத்த மன்மதன்.

அங்கம் இல்லாதவன் அநங்கன்.

**அள்ளியெறி சிந்த பிள்ளைமதி தென்றல் :—**

தலைவன் மீது வேட்கை கொண்ட தலைவிமீது, சந்திரனும் தென்றலும் நெருப்பை அள்ளி வீசுகின்றது போன்ற துன்பத்தைச் செய்கின்றன.

**ஐயமுதுகிண்ட :—**

ஐயம்—சந்தேகம். இது என்ற சொல உது என வந்தது. தலைவிக்குத் தலைவன் தன்னை விரும்புவானோ? விரும்ப மாட்டானோ என்ற ஐயம் ஏற்பட்டு வருந்துவள்.

**சொல்லும் :—**

ஊர் மகளிர் தலைவனை நினைந்து வருந்துகின்ற தலைவியைப் பரிகசித்து வசை மொழி கூறுவர்.

**அரவிந்தவல்லி :—**

தாமரையில் வாழும் இலக்குமி போன்றவள்.

**தனி நின்று :—**

முருகா! என் புதல்வி தனிமையில் கிடந்து தவிக்கின்றாள்.

**தொல்லை வினையென்று முனியாதே :—**

"முன் செய்த பழவினையால் இத்துயர் எனக்கு நேர்ந்ததே யென்று கூறி என் மகள் தன்னைத்தானே வெறுத்துக் கொள்ளுகின்றாள் அவ்வாறு வெறுத்துக் கொள்ளாத வண்ணம் நீ அருள் செய்" என்று தாய் முருகனை வேண்டுகின்றாள்.

**துய்பவரி வண்டு செய்யமது வுண்டு துள்ளிய கடம்பு :—**

முருகனுடைய மாலை கடம்பு. அதில் தூய ரேகைகளுடன் கூடிய வண்டுகள் சிவந்த தேனைக் குடித்து, மதுமயக்கத்தால் துள்ளிக் குதிக்கின்றன.

"முருகா! இப்புதல்விக்கு உன் கடப்ப மலர் மாலையைத் தந்தருளுவாயாக"

**கல்லசனமங்கை யெல்லையில் விரிந்த கல்வி கரைகண்ட புலவோனே :—**

ஒரு காலத்தில் தேவர்கள், முனிவர்கள் முதலியோர் குழுமினார்கள். அக்குழுவில் யார் முதன்மைப் புலவர்? அத்தகைய முதன்மைப் புலவர்க்கு வித்வதாம்பூலம் தரவேண்டும் என்ற ஆராய்ச்சி நிகழ்ந்தது.

கலைமகளின் அம்சமான ஔவையாரே சிறந்த புலவர். அவருக்குத்தான் தாம்பூலம் தரவேண்டும் என்று முடிவு செய்து, எல்லோரும் ஔவையாரிடஞ் சென்று, "அம்மே! தாங்கள் புலவர் சிகாமணி. இந்த வித்வதாம்பூலம் உமக்கே உரியது. பெற்றுக்கொள்ளும்" என்று நீட்டினார்கள்.

ஔவையார், "புலவீர்! இதைப் பெறும் தகுதி எனக்கு இல்லை. புலவர்கள் என்றால் தேவரைக் குறிக்கும். அப் புலவர்களாகிய தேவர்க்கு அதிபதி இந்திரன். இந்திரன் ஐந்திரம்

என்ற வியாகரணத்தைச் செய்தவன். அவன்பால் சென்று இதனைக் கொடுங்கள்" என்றார்.

எல்லோரும் இந்திரனிடம் போய் இதைக் கூறித் தாம்பூலத்தை நீட்டினார்கள்.

இந்திரன் அஞ்சினான். "ஒரு வியாகரண நூலைச் செய்ததனால் மட்டும் ஒருவன் சகல கலாவல்லவனாகி விடுவனோ? அகத்தியர்தான் பெரும் புலவர். அவரிடம் சென்று இதைக் கொடுப்பீராக" என்றான்.

அனைவரும் சென்று, "தலைமைப் புலவர் நீர். இவ் வித்வ தாம்பூலத்தைப் பெற்றுக்கொள்ளும்" என்றார்கள்.

அகத்திய முனிவர் புன்முறுவல் செய்து "'நன்று கூறினீர்கள். நான் தலைமைப் புலவன் ஆவேனோ? சகலகலாவல்லி கலைமகளேயாகும். அப்பெருமாட்டியிடம் போய் இதைச் சமர்ப்பணஞ் செய்யுங்கள்" என்றார்.

எல்லோரும் வாணிதேவியிடம் போய், "இந்த வித்வ தாம்பூலம் உமக்கே உரியது; பெற்றுக் கொள்ளும்" என்றார்கள்.

கலைமகள் நிலை கலங்கி, "நான் இத் தாம்பூலத்துக்கு உரியவள் ஆகேன். என் கணவரே உரியவர். அவர் வேதத்தில் வல்லவர். அவருக்கு இதைத் தருவது முறைமை" என்றார்.

பிரமதேவரிடம் போய் "இது சிறந்த புலவருக்கு உரிய தாம்பூலம்; நீர் பெற்றுக் கொள்ளும்" என்றார்கள்.

பிரமதேவர், "அம்மம்ம! நான் புலவனோ? அன்றன்று. வாகீசுவரி, ஞானேசுவரி, ஞானம்பாள் உமாதேவியார்தான். அப்பரமேச்வரிக்குத்தான் இது உரியது. ஆதலால் அம்பிகையிடம் போய்க் கொடுங்கள்" என்றார்.

திருக்கயிலாய மலைசென்று எல்லோரும் வணங்கி, "தேவீ! பரமேச்வரி! ஞானாம்பிகையே! இது வித்வ தாம்பூலம். இது உமக்கே உரியது" என்றார்கள்.

உமாதேவியார், "நன்று நன்று; நான் இதற்கு உரியவள் அன்று. என் குமாரன் ஞானஸ்கந்தன், ஞானபண்டிதன், சிவகுருநாதன், அம்முத்துக்குமார சுவாமியே இதற்குரியவன்" என்று அருளிச் செய்தார்.

எல்லோரும் கந்தகிரிக்குச் சென்று, "முருகா! மூவர் முதல்வா! இது வித்வ தாம்பூலம். இதனைத் தேவரீர் ஏற்றருளும்" என்று வேண்டி நின்றார்கள்.

"நல்லது" என்று முருகப் பெருமான் அத்தாம்பூலத்தை ஏற்றுக் கொண்டருளினார். அதனால் அவர் சகல கலா வல்லவர்!

மலைமங்கை வரைக்கும் போய், அந்த அம்மையார் எம் புதல்வனே கல்வி கரைகண்டவன் என்று குறித்தபடியால்,

"கல்லசலமங்கை எல்லையில் விரிந்த கல்விகரைகண்ட புலவோன்"

என்று அருணகிரியார் பாடுகின்றார்.

**கள்ளொழுகு கொன்றை வள்ளல் :—**

கொன்றை மலர் ஐந்து இதழ்களையுடையது. அது ஐந்தெழுத்தைக் குறிக்கும். அதன் இடையே விளங்கிருக்கின்ற தோகை பிரணவத்தைக் குறிக்கும். அது சிவபெருமானுக்கே உரிய மலர்.

"கொன்றைச் சடையர்க் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"
—(அம்பொத்த) திருப்புகழ்.

எல்லாவற்றையும் அடியவர்க்கு வழங்குவதால் வள்ளல் எனப்பட்டார்.

"வள்ளிக்கணவன் றனையீன்ற வள்ளல்பவனி வரக்கண்டே"
—திருஅருட்பா.

## கருத்துரை

வள்ளிமலை யாண்டவனே! என் புதல்விக்கு உனது கடப்பமலர் மாலையைக் கொடுத்தருள்வீர்.

## 86

குடிவாழ்க்கை யன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர சன்ன மொழியார்கள்
குலமவாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை யுணராதே
இடநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
னிருதாட்கள் தம்மை யுணர்வேனோ
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயில்மேற்றி கழ்ந்த குமரேசா

வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா
அடிநாட்கள் செய்த பிழைநீக்கி யென்னை
யருள் போற்றும் வண்மை தரும்வாழ்வே
அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

## பதவுரை

வட நாட்டில்=வட நாட்டில் உள்ள, வெள்ளிமலை காத்து=வெள்ளி மலையைக் காத்து, புள்ளி மயில் மேல் திகழ்ந்த=புள்ளியையுடைய மயில்மீது விளங்குகின்ற, குமரேசா=குமாரக் கடவுளே! வடிவு ஆட்டி=அழகு நிறைந்த பெண்மணியாகிய, வள்ளி அடி போற்றி=வள்ளி பிராட்டியின் திருவடியைப் புகழ்ந்து, வள்ளி மலை காத்த=வள்ளி மலையில் அப்பிராட்டியின் சமயம் பார்த்துக் காத்திருந்த, நல்ல மணவாளா=நல்ல நாயகரே! அடி நாள்கள் செய்த=முன் நாள்களில் அடியேன் செய்த, பிழை நீக்கி=குற்றங்களைப் பொறுத்துக் களைந்து, என்னை அருள் போற்றும் வண்மை தரும்=எனக்கு உமது திருவருளைப் போற்றும் வளப்பமான குணத்தைத் தந்தருளிய, வாழ்வே=என் செல்வமே! அடி போற்றி=உமது திருவடியைப் போற்றி, அல்லி முடி சூட்ட வல்ல=தாமரை மலரை உமது முடியில் சூட்ட வல்ல, அடியார்க்கு நல்ல=அடியார்களுக்கு நல்லவராக விளங்கும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! குடி வாழ்க்கை=இல்லற வாழ்க்கை, அன்னை=தாய், மனையாட்டி=மனைவி, பிள்ளை=பிள்ளை, குயில் போல் ப்ரசன்ன மொழியார்கள்=குயில் போலப் பேசி எதிர்ப்படும் மொழியுடைய பெண்கள், குலம்=குலம், வாய்த்த நல்ல தனம்=கிடைத்துள்ள நல்ல செல்வம், வாய்த்தது என்ன=இவை யெல்லாம் நமக்கு வாய்த்தது என்று ஆணவங் கொண்டு, குரு வார்த்தை தன்னை உணராதே=குருவின் உபதேச மொழிகளை உணர்ந்து அறியாமல், நாள்கள் இட=வாழ்நாள்களைக் கழிக்க, வெய்யநமன் நீட்டி=கொடிய இயமன் நெருங்கிவந்து, தொய்யஇடர் கூட்ட=தளர்வுறும்படித் துன்பங்களைத் தர, இன்னல் கொடு போகி=துயரத்துடன் கொண்டு போய், இடு காட்டில்=சுடு காட்டில், என்னை எரி ஊட்டு முன்=அடியேனை எரிப்பதற்கு முன்பாக உன் இரு தாள்கள் தம்மை=உமது இரு திருவடிகளை உணர்வேனோ=உணர்ந்து அறியேனோ?

## பொழிப்புரை

வடநாட்டில் உள்ள வெள்ளி மலையைக் காத்து, புள்ளி மயில்மீது விளங்குகின்ற குமாரக் கடவுளே! அழகு நிறைந்த

வள்ளி நாயகியின் திருவடியைப் புகழ்ந்து, வள்ளிமலையில் அவருடைய சமயம் பார்த்து நின்ற நல்ல மணவாளரே! அடியேன் முன்னுளில் செய்த குற்றங்களைப் பொறுத்து அவைகளை நீக்கி, அடியேன் உமது திருவருளைப் போற்றுகின்ற சீலத்தைத் தந்த பெருவாழ்வே! உமது திருவடியைப் போற்றித் தாமரை மலரைச் சென்னியில் சூட்டவல்ல அடியார்கட்கு இனியராக விளங்கும் பெருமிதம் உடையவரே! இல்லற வாழ்வு, தாய், மனைவி, மக்கள், குயில் போன்ற மொழியுடன் எதிர்ப்படுகின்ற புதல்வியர் குலம், வாய்த்த இனிய செல்வம் இவையெலாம் எனக்கு இருக்கின்றன என்ற ஆணவத்தைக் கொண்டு, குருநாதரின உபதேசமொழியை உணர்ந்தறியாமல், வாழ்நாளைக் கழிக்க, கொடிய எமன் நெருங்கி தளர்வுறுமாறு துன்பத்தைக் கொடுக்க துயருடன் என்னைக் கொண்டுபோய், சுடுகாட்டில் சுடுவதற்கு முன் உமது திருவடிகளை உணர்ந்து உய்வேனே?

## விரிவுரை

**குடிவாழ்க்கை யன்னை மனையாட்டி பிள்ளை குயில்போல் ப்ரசன்ன மொழி யார்கள் குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன :—**

சிறந்த வாழ்க்கை, தாய், மனைவி, மக்கள், மகள், குலம், நல்ல செல்வம் முதலியன நமக்கு வாய்த்துள்ளதென்று மனிதன் தருக்கு அடைகின்றான்.

அங்ஙனந் தருக்குற்று இறுமாந்து செய்வன தவிர்வன தெரியாது நிற்பான்.

**குருவார்த்தை தன்னை யுணராதே :—**

குருநாதர் மனித வுருவெடுத்த தெய்வம், குருநாதனை மனிதனாக எவன் எண்ணுகின்றானோ அவன் நறகதியடையான்.

பசுவின் மலத்தை நாம் மலம் என்று கருதாது புனிதப் பொருளாகக் கருதுகின்றோம். அதுபோல நமது கருமேனியைக் கழிக்க வந்தது குருவின் திருமேனி என்றுணர்க.

ஆதலால் குரு வார்த்தைக்கு மறுவார்த்தை நினைக்கக் கூடாது

**இடநாட்கள் :—**

பிரமதேவன் தந்த வாழ்நாட்கள் அத்தனையும் அவமே கழிந்தன.

**வெய்ய நமனீட்டி :—**

வெப்பமான சீற்றமுள்ள இயமன் ஓலையை நீட்டி வருவான்.

**தொய்ய இடர் கூட்ட :—**

தளர்ச்சியடையும்படி உயிரைப்பற்றித் துன்பத்தைச் செய்வான்.

**இன்னல் கொடு போகி :—**

சுற்றத்தார்கள் மிகுந்த துன்பத்துடன் உடம்பை எடுத்துக் கொண்டு போவார்கள்.

**இடுகாட்டிலென்னை யெரியூட்டு முன்னு ளிருநாட்கள் தம்மை யுணர்வேனோ :—**

அருமையிலும் அருமையாக, நேரங் கடவாமல் உயர்ந்த வுணவுகளையுண்டு வளர்த்த இந்த உடம்பு ஒரு நொடியில் தீயில் வெந்து சாம்பராகி மறைந்து ஒழிகின்றது.

"ஒளிருமின லுருவதென ஓடியங்கம் வெந்திடுவேனோ"

—(ஒருவரையும்) திருப்புகழ்.

"முருகா! இவ்வாறு அடியேன் எரியில் கரியுமுன் உமது திருவடியை உணர்ந்து உய்ய அருள் செய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

**வடநாட்டில் வெள்ளிமலை காத்து :—**

வடநாட்டில் உள்ள வெள்ளி மலையான திருக்கயிலாயத்தில், கோபுர வாசலில் முருகன் இருந்து காத்தல் செய்கின்றார்.

**அடிநாட்கள் செய்த பிழைநீக்கி யென்னை அடிபோற்றும் வண்மை தரும் வாழ்வே :—**

அருணகிரிநாதர் தன் வரலாற்றை இதில் குறிப்பிடுகின்றார்.

அருணகிரிநாதர் இளமையில் உலக நெறியிற் சென்று செய்த பிழைகளையெல்லாம் பொறுத்து, நீக்கி சதா தன்னைப் பாடும் அருள்திறத்தை அருள் புரிந்தார் முருகப் பெருமான்.

**அடிபோற்றியல்லி முடிசூட்டவல்ல அடியார்க்கு நல்ல பெருமாளே :—**

பூவினில் சிறந்தது தாமரைப் பூ. அதனால் பிரமதேவர், இலக்குமி, வாணி முருகவேள் முதலிய மூர்த்திகள் தாமரையை உறைவிடமாகக் கொண்டார்கள்.

திருமாலும் திருவீழிமிழலையில் தினமும் ஆயிரந் தாமரைப் பூக்களால் சிவபெருமானை அருச்சித்து வழிபட்டார்.

"பூவினுக்கு அருங்கலம் பொங்குதாமரை" —அப்பர்.

நல்ல தாமரை மலர் மாலையை முருகனுடைய திருவடியில் சூட்டுகின்ற அடியார்க்கு முருகன் நல்லவராகத் திகழ்கின்றார்.

"அடியார்க்கு நல்ல பெருமான் அவுணர்குல மடங்கப்
பொடியாக்கிய பெருமான்"
—கந்தரலங்காரம்.

## கருத்துரை

வள்ளி நாயகனே! மரணமடையுமுன் உன் சரணமடைய அருள் செய்யும்.

## 87

சிரமங்க மங்கைகண் செவிவஞ்ச நெஞ்சுசெஞ்
சலமென்பு திண்பொருந் திடுமாயம்
சிலதுன்ப மின்பமொன் றிறவந்து பின்புசெந்
தழலின்கண் வெந்துசிந் திடஆவி
விரைவின்க ணந்தகன் பொரவந்த தென்றுவெந்
துயர்கொண்ட லைந்துலைந் தழியாமுன்
வினையொன்று மின்றிநன் றியலொன்றி நின்பதம்
வினவென்று அன்புதந் தருள்வாயே
அரவின்கண் முன்துயின் றருள்கொண்ட லண்டர்கண்
டமரஞ்ச மண்டிவந் திடுசூரன்
அகலம் பிளந்தணைந் தகிலம் பரந்திரங்
கிடஅன் றுடன்றுகொன் றிடும்வேலா
மரைவெங் கயம்பொருந் திடவண் டினங்குவிந்
திசையொன்ற மந்திசந் துடனாடும்
வரையின்கண் வந்துவண் குறமங்கை பங்கயம்
வரநின்று கும்பிடும் பெருமாளே.

## பதவுரை

அரவின் கண் = ஆதி சேடன் மீது, முன் துயின்று அருள் = முன்பு அறிதுயில்புரிந்து உலகங்கட்கு அருள் செய்கின்றவரும், கொண்டல் = நீலமேகம் போன்றவரும் ஆகிய திருமாலும், அண்டர்கள் = தேவர்களும், கண்டு அமர் அஞ்ச = பார்த்து போருக்கு அஞ்சும்படி, மண்டி வந்திடு சூரன் அகலம் பிளந்து = நெருங்கி வந்த சூரபன்மனுடைய மார்பைப் பிளந்து, அணைந்து அகிலம்பரந்து இரங்கிட = அவன் அலறி விழும் ஒலி எங்கும் பொருந்தி பரவி ஒலிக்க, அன்று உடன்று கொன்றிடும் வேலா = அந்நாள் போர் புரிந்து கொன்ற வேலவரே!

மரைவெம் கயம் பொருந்திட=தாமரை மலர் விரும்பத்தக்க குளங்களில் பொருந்த, வண்டு இனம் குவிந்து=வண்டின் கூட்டங்கள் நிறைந்து, இசை ஒன்ற=இசை ஒலிக்க, மந்தி சந்து உடன் ஆடும்=குரங்குகள் சந்தனமரங்களில் விளையாடுகின்ற, வரையின் கண் வந்து=வள்ளி மலையில் வந்து, வண் குறமங்கை=வளமையான குறமகளாகிய வள்ளி பிராட்டியின், பங்கயம் வர நின்று=தாமரை போன்ற பாதம் வருவதைக் கண்டு, கும்பிடும=கும்பிட்ட, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! சிரம் அங்கம்=தலையாகிய உறுப்பு, அம் கை கண் செவி=அழகிய கரம், கண், காது, வஞ்ச நெஞ்சு=வஞ்சகத்துக்கு இடமாம் நெஞ்சு, செம்சலம்=சிவந்த நீராகிய உதிரம், என்பு=எலும்பு ஆகிய இவைகள், திண் பொருந்திடு மாயம்=வலிமையாகப் பொருந்தியுள்ள மாயமான இந்த உடம்பு, சில துன்பம் இன்பம் ஒன்றி வந்து இற=சில துன்பங்களும் இன்பங்களும் பொருந்தி முடிவு காலம் வந்து சேர, பின்பு செம் தழலின் கண் வெந்து=பின்னர் செவ்விய தீயில் வெந்து, ஆவி சிந்திட=உயிர் பிரிதலுறும்படி, விரைவின் கண் அந்தகன் பொர=வேகமாக எமனே போர் செய்ய, வந்தது என்று=வந்து விட்டான் என்று, வெம் துயர் கொண்டு=வெப்பமான துக்கத்தைக் கொண்டு, அலைந்து உலைந்து அழியா முன்=அலைந்தும் நிலைகுலைந்தும் அடியேன் அழிவதற்கு முன் வினை ஒன்றும் இன்றி=வினைகள் யாவும் தொலைந்து, நன்று இயல் ஒன்றி=நல்ல செயல்களைப் பொருந்தி, நின் பதம்=உமது பாதங்களை, வினை என்று அன்பு தந்து அருள்வாயே=கேட்டு ஆராய்ந்து அறிகின்ற அன்பினை வழங்கி அருள் புரிவீராக.

## பொழிப்புரை

ஆதிசேடன் மீது முன் அறிதுயில் கொண்டு உலகங்கட்கு அருள் புரிகின்றவரும், நீலமேக வண்ணரும் ஆகிய திருமாலும் தேவர்களும் கண்டு போரில் அஞ்சுமாறு நெருங்கி வந்த சூரபன்மனுடைய மார்பு பிளந்து, பொருந்திய நல்ல இடங்களிலும் அவன் அலறிய ஒலி பரந்து ஒலிக்க அன்று போர் புரிந்து வதைத்த வேலாயுதரே! தாமரை விரும்பத்தக்க குளங்களில் பொருந்த, வண்டுக் கூட்டங்கள் நிறைந்து இசை ஒலிக்க, குரங்குகள் சந்தன மரத்தில் விளையாடும் வள்ளி மலையின் கண் வந்து வளமையான வள்ளியம்மையின் பாதம் வரக் கண்டு கும்பிட்ட பெருமிதம் உடையவரே! தலை, அழகிய கை, கண், காது, வஞ்சம் நிறைந்த நெஞ்சு; சிவந்த இரத்தம், எலும்பு முதலிய உறுப்புக்கள் வலிமையாகப் பொருந்திய மாயமான இத்தேகமானது, சில துன்பமும் இன்பமும் பொருந்தி முடிவில் மரண காலம் வந்தபோது, செவ்விய நெருப்பில் வெந்து உயிர் பிரியும்படி, இயமன் வேகமாக வந்து போரிட வந்து விட்டான் என்று கொடிய துக்கத்தைக் கொண்டு, அலைந்தும் உலைந்தும்

அழிவதற்கு முன், வினைகள் யாவும தொலைந்து, நல்ல செயல்களைப் பொருந்தி, உமது பாதத்தை ஆராய்ந்து அறியும் அன்பை எனக்கு என்று அருள் புரிவீரோ?

## விரிவுரை

**சிரமங்க மங்கைகண் செவி வஞ்ச நெஞ்சு செஞ்சலமன்பு தின்பொருந்திடு மாயம் :—**

இந்த உடம்பு, தலை, கை கண், காது, நெஞ்சு, உதிரம் எலும்பு முதலிய உறுப்புக்களுடன் கூடியது. அந்தந்த உறுப்புக்கள் இந்த உடம்பில் உறுதியாக அமைக்கப்பட்டுள்ளன அப்படி அமைத்தவன் இறைவன். அற்புதமான இயந்திரம் இவ்வுடம்பு. இதற்குள் எத்தனை எத்தனையோ கருவிகளை அமைத்திருக்கின்றான். எல்லாப் பூட்டுக்களிலும் பசை நாம் இறக்கின்றவரை இருந்து, கைகால் முதலிய சந்திகள் அசைந்து அசைந்து வேலை செய்ய உதவுகின்றது.

பிறகு உடம்பு மாயமாக மறைந்து விடுகின்றது. அதனால் மாயம் என்றார்.

**சில துன்ப மின்ப மொன்றிற :—**

இற—இற்றுப்போக; முடிவு அடைய.

இந்த உடம்பில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வந்து கொண்டிருக்கின்றன.

கடலில் மாறி மாறி அலைகள் வருவது போல் என அறிக.

**தழலின்கண் வெந்து சிந்திட ஆவி :—**

பெறுதற்கரிய பிறவி இம்மானுடப் பிறவி. இது வறிதே நெருப்புக்கு இரையாகின்றது. இதனால் ஆய பயனைப் பெற்று விட்டால் உடம்பு அழிவதனால் கவலையில்லை. உணவு உண்ட பின் வாழையிலையைத் தூக்கியெறிவதுபோல், ஆன்மலாபம் பெற்றபின் உடம்பு நீங்கலால் துன்பமில்லை. கருமபின் சாறு போனபின் சக்கை எரிவதனால் துன்பமில்லை.

**வினை யொன்று மின்றி :—**

வினையால் உடம்பு மீள மீள வந்து கொண்டிருக்கும்.

"விதி காணுமுடம்பை விடா வினையேன்"

—கந்தரநுபூதி.

வினைப் போகமே இந்த உடம்பு.

வினை முற்றிலும் அற்றாலன்றி பிறவி நீங்காது. ஆகாமியம், பிராரப்தம், சஞ்சிதம் ஆகிய மூன்று வினைகளும் அற்றுப்போக வேண்டும். அதனால் "வினை ஒன்றும் இன்றி" என்று அருளிச் செய்தார்.

வேட்டியில் மெல்ல மெல்லத் தூசு படிவதுபோல் வினை பையப் பைய ஏறிவிடுகிறது.

"தூளேறு தூசு போல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளும்
டழலேறு காற்றினிடை அழலேறுபஞ் செனச்
சூறையிட் டறிவை எல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனும் கூற்றின்
நட்பேற வுன்னுடைந்து
நயனங்கள் அற்றதோர் ஊரேறு போலவே
நானிலந் தனில் அலையவோ" —தாயுமானுர்.

**நன்றிய மொன்றி :—**

நல்ல செயல்களில் பொருந்தி.

நற்செயல்களாவன. ஆலய வழிபாடு, ஜெபம், தியானம், பாராயண, ம்தவம் முதலியனவாம்.

**இன்பதம் வினவென்று அன்புதந் தருள் வாயே :—**

வினு—என்ற சொல் வின் எனக் குறுகியது. திருவடியின் பெருமையைக் கற்றூர் வாயிலாகக் கேட்டு திருவடிக் கன்பு செய்ய வேண்டும்.

திருவடியைப் பற்றியே அருணகிரிநாதர் பாடிய சீர்பாத வகுப்பை அன்பர்கள் தினந்தோறும் பாராயணம் புரிதல் வேண்டும்.

**அரவின் கண் முன் துயின்று :—**

ஆதிசேடன் வெள்ளைப் பாம்பு. அது சுழுமுனை என்ற நாடி. சுழுமுனையில் பிராணவாயுவைச் செலுத்தி யோகிகள் தூங்காமல் தூங்குவர். இது அறிதுயில்.

உலகம் உய்யத் திருமால் யோகநித்திரை செய்கின்றூர்.

**மந்தி சந்துடனுடும்வரை :—**

சந்து—சந்தனம். குரங்குகள் சந்தன மரங்களில் விளையாடு கின்ற மலை வள்ளிமலை;

"சந்தனுடவியினும் உறை குறமகள்"
—(கொந்துவார்) திருப்புகழ்.

"மட்டொழுகு சாரமதுரித்த தேனைப்பருக
மர்க்கட சமூக மமை தொட்டிருலெட்டுவரை"
—பூதவேதாள வகுப்பு.

## கருத்துரை

வள்ளிமலை நாதனே! உடம்பு அழியுமுன் உமது திருவடியைத் தந்தருளவீர்.

## 88

வரைவில்பொய் மங்கையர் தங்க ளஞ்சன
விழியையு கந்துமு கந்து கொண்டடி
வருடிநி தம்பம ஸேந்து தென்தென் அளிகாடை
மயில்குயி லன்றிலெ னும்பு ளின்பல
குரல்செய்தி ருந்துபி னுந்தி யென்கிற
மடுவில்வி ழுந்துகி டந்து செந்தழல் மெழுகாகி

உருகியு கந்திதழ் தின்று மென்றுகை
யடியின கங்கள்வ ரைந்து குங்கும
உபய தனங்கள்த தும்ப அன்புட னணையாமஞ்
சுலவிய கொண்டைகு லைந்த லைந்தெழ
அமளியில் மின்சொல்ம ருங்கி லங்கிட
உணர்வழி யின்பம றந்து நின்றனை நினைவேனோ

விரவி நெருங்குகு ரங்கி னங்கொடு
மொகுமொகெ னுங்கட லுங்க டந்துறு
விசைகொடி லங்கைபு குந்த ருந்தவர் களிகூர
வெயில்நில வும்பரு மிம்ப ரும்படி
ஜெயஜெய வென்றுவி டுங்கொ டுங்கணை
விறல்நிரு தன்தலை சிந்தி னன்திரு மருகோனே

அருகர் கணங்கள்பி ணங்கி டும்படி
மதுரையில் வெண்பொடி யும்ப ரந்திட
அரகர சங்கர வென்று வென்றருள் புகழ்வேலா
அறம்வளர் சுந்தரி மைந்த தண்டலை
வயல்கள் பொருந்திய சந்த வண்கரை
யரிவை விலங்கலில் வந்து கந்தருள் பெருமாளே.

### பதவுரை

விரவி நெருங்கு=தன்னுடன் கலந்து கூடி நெருங்கி வந்த, குரங்கு இனங்கொடு=குரங்கின் கூட்டத்துடன் சென்று, மொகு மொகு எனும் கடலும் கடந்து=மொகு மொகு என்று ஒலிக்கின்ற கடலைக் கடந்து சென்று, உறு விசை கொடு=பொருந்திய வேகத்தோடு, இலங்கை புகுந்து=இலங்கைக்குள் நுழைந்து, அரும்தவர் களிகூர=அருமையான தவமுனிவர்கள் மகிழ்ச்சி மிகுதியாக அடையும் படி, வெயில் நிலவு உம்பரும்=ஒளி பொருந்திய தேவர்களும், இம்ப

ரும் = இந்த மண்ணுலகத்தோரும், படி = பூமியில், ஜெய ஜெய என்று = வெற்றி பெறுக வெற்றி பெறுக என்று ஒலிக்க, விடும்கொடும் கணை = விடுத்த கொடிய அம்பினால், விறல் நிருதன் தலை சிந்தினன் = வீரமுள்ள இராவணனுடைய தலைகளை அறுத்துத் தள்ளிய இராமருடைய, திருமருகோனே = திருமருகரே! அருகர் கணங்கள் = சமணருடைய கூட்டமானது, பிணங்கிடும்படி = மாறுபட்டு நிற்குமாறும், மதுரையில் = மதுரைமா நகரில், வெண் பொடியும் பரந்திட = திருநீறு பரவவும், அர அர சங்கர என்று = ஹர ஹர சங்கரா என்று யாவரும் கூறவும், வென்று அருள் = வெற்றி பெற்றருளிய, புகழ் வேலா = புகழ் பெற்ற வேலவரே! அறம் வளர் சுந்தரி = அறத்தை வளர்த்த அழகியாகிய பார்வதி தேவியின், மைந்த = குமாரரே! தண்டலை = குளிர்ந்த சோலைகளும், வயல்கள் பொருந்திய = வயல்களும் பொருந்திய, சந்த வண்கரை = அழகிய வளப்பமான நீர்க்கரைகளுள்ள, அரிவை விலங்கலில் = வள்ளிமலையில், வந்து உகந்து அருள் = வந்து மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும், பெருமாளே = பெருமையில் சிறந்தவரே! வரைவில் பொய் மங்கையர் தங்கள் = பொய்மை மிகுந்த பொது மாதர்களின், அஞ்சன விழியை உகந்தும் = மையிட்ட கண்களில் மகிழ்ந்தும், முகந்து கொண்டு = அந்த இன்பத்தைப் பருகியும், அடி வருடி = அவர்களுடைய காலைத் தடவியும், நிதம்பம் அணைந்து = அல்குலை அனுபவித்தும், தெந்தென அளி = தெந்தென என்று ஒலிக்கும் வண்டு, காடை = காடையென்ற பறவை, மயில் = மயில், குயில் = குயில், அன்றில் எனும் புள்ளின் = அன்றில் என்ற பறவைகளின், பல குரல் செய்து இருந்து = பல ஒலிகளை எழுப்பியிருந்து, பின் உந்தி என்கிற மடுவில் விழுந்து கிடந்து = பின்னர் கொப்பூழ் என்ற மடுவில் விழுந்து கிடந்தும், செம் தழல் மெழுகு ஆகி = சிவந்த நெருப்பில் பட்ட மெழுகு போல் ஆகி, உருகி = உள்ளம் உருகியும், உகந்து = மகிழ்ச்சியடைந்தும், இதழ் தின்று மென்று = வாயிதழைத் தின்றும் மென்றும், கை அடியின் நகங்கள் வரைந்து = கையின் அடியில் உள்ள நகங்களால் குறியிட்டும், குங்கும உபய தனங்கள் ததும்ப = குங்குமம் பூசப் பெற்ற இரு தனங்கள் பூரித்து அசைய, அன்புடன் அணையா = அன்போடு தழுவியும், மஞ்சு உலவிய கொண்டை குலைந்து எழ = அழகு உலவிய கொண்டை அவிழ்ந்து அலைச்சல் அடைய, அமளியில் = படுக்கையில், மின் சொல் மருங்கு இலங்கிட = மின்னல் என்று சொலத்தக்க மெல்லிய இடை விளக்கந்தர, உணர்வு அழி இன்பம் மறந்து = நல்லுணர்வை யழிக்கின்ற அந்த இன்பத்தை மறந்து, நின்றனை நினைவேனோ = தேவரீரை நினைக்க மாட்டேனோ?

## பொழிப்புரை

தன்னுடன் கலந்து கூடி நெருங்கி வந்த குரங்குகளின் கூட்டத்துடன் சென்று, மொகுமொகு என்று முழங்குகின்ற

கடலைக் கடந்து வேகமாக இலங்கையுள் நுழைந்து, அருமையான தவஞ் செய்யும் முனிவர் மிகுந்த மகிழ்ச்சி யடையுமாறு ஒளிமிகுந்த தேவரும் பூவுலக வாசிகளும், இம்மண்ணுலகில் ஜெய ஜெய என்று ஒலி செய்ய, கொடிய கணையை விடுத்து, வீரமுடைய இராவணனுடைய தலைகளை அறுத்த இராமருடைய் திருமருகரே! சமணருடைய கூட்டம் மாறுபட்டுக் கலங்கி நிற்கவும், மதுரையம்பதியில் திருநீறு பரவுமாறும், ஹர ஹர சங்கரா என்று எங்கும் ஒலிக்கவும் வென்றருளிய புகழ்மிக்க வேலவரே! அறம் வளர்த்த அழகியாம் பார்வதியின் பாலகரே! சோலையும் வயல்களும் பொருந்திய, அழகிய வளமையான கரைகளுடன் கூடிய வள்ளி மலையின் கண் வந்து மகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமிதம் உடையவரே! பொய் மிகுந்த பொது மாதர்களின் மை தீட்டிய கண்களில் மகிழ்ந்தும், அந்த இன்பத்தைப் பருகியும், அவர்கள் பாதத்தைப் பிடித்துத் தடவியும், அல்குலை அநுபவித்தும், தெந் தென என்று ஒலிக்கும் வண்டு, காடை, மயில், குயில், அன்றில் என்ற பறவைகளின் பலவிதமான குரல்களை எழுப்பியிருந்தும் கொப்பூழ் என்ற மடுவில் விழுந்து கிடந்தும், சிவந்த அழலில் பட்ட மெழுகுபோல் உள்ளம் உருகியும், களிப்புற்றும். வாய் இதழைத் தின்றும் மென்றும், கையில் உள்ள நகங்களால் குறி வைத்தும், குங்குமம் பூசிய இரு தனங்கள் பூரித்துக் குலுங்க அன்புடன் தழுவி, அழகு உலவிய கூந்தல் அவிழ்ந்து கலைந்திட படுக்கையில் மின்னலைப் போன்ற இடை விளங்க நல்லுணர்வை யழிக்கின்ற அக் கலவியின்பத்தை மறந்து தேவரீரை நினைக்க மாட்டேனோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் நான்கு அடிகளிற் பொது மகளிரின் தன்மைகளைச் சுவாமிகள் கூறுகின்றார்கள்.

**வரைவில் பொய் மங்கையர்:—**

விலை கொடுப்பார் யாவர்க்கும் தம்நலத்தை விற்பதல்லது, அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவு இலாத மகளிர் வரைவின் மகளிர்.

**இன்ப மறந்து நின்றனை நினைவேனோ:—**

இறைவனை நினைப்பற நினைக்க வேண்டும். இறைவனை நினைந்தால் ஏனைய நினைவுகள் தாமே விலகும்.

**உம்பருமிம்பரும்:—**

உம்பர்—தேவர்கள்; இம்பர்—மனிதர்கள்.

"உம்பரு மிம்பரு முய்யவன்று
போனக மாகநஞ் சுண்டல் பாடிப்
பொற்றிருச் சுண்ணம் இடித்து நாமே"

—திருவாசகம்.

**அறம் வளர் சுந்தரி :—**

காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மை முப்பத்திரண்டு அறங்களைச் செய்தருளினர். அதனால் அம்பிகை அறம் வளர்த்த நாயகி.

**அரிவை விலங்கல் :—**

அரிவை விலங்கல்—வள்ளிமலை.

### கருத்துரை

வள்ளிமலை மேவும் இறைவனே! உன்னை நினைக்க அருள் புரிவாய்.

### திருக்கழுக்குன்றம்

இத்தலம் செங்கற்பட்டு புகைவண்டி நிலயத்துக்குத் தென் கிழக்கு 9 மைல். பஸ் வசதியுண்டு. நால்வர் பாடலும் பெற்றது. இது கதலிவனம், வேதகிரி, பட்சிதீர்த்தம் எனவும் வழங்கும். வேதங்களும் கழுகுகளும் வழிபட்ட தலம். இங்கு பட்சி தரிசனம் சிறந்தது. அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடிய தலபுராணம் உண்டு. சங்கு தீர்த்தம் மிகச் சிறந்த மகிமையுடையது. பன்னிரு ஆண்டுகட்கு ஒருமுறை சங்கு பிறக்கின்றது. பன்னிரு ஆண்டுகட்கு ஒருமுறை இன்றும் இடி அபிஷேகம் நடைபெறுகின்றது என்பர். வேதம் பூசித்தபடியால் உயர்ந்த தெய்வீகம் உடையது. சுவாமி பெயர் வேதகிரீச்சுரர். தேவியார் பெயர் பெண்ணின் நல்லாளம்மை.

### 89

அகத்தி னைக்கொண் டிப்புவி மேல்சில
தினத்து மற்றொன் றுற்றறி யாதுபின்
அவத்துள் வைக்குஞ் சித்தச னூடு கணையாலே
அசுத்த மைக்கண் கொட்புறு பாவையர்
நகைத்து ரைக்கும் பொய்க்கடல் மூழ்கியெ
அலக்க ணிற்சென் றுத்தடு மாறியெ சிலநாள்போய்
இகத்தை மெய்க்கொண் டிப்புவி பாலர்பொன்
மயக்கி லுற்றம் பற்றைவி டாதுட
லிளைப்பி ரைப்பும் பித்தமு மாய்நரை முதிர்வாயே
எமக்க யிற்றின் சிக்கினி லாமுனுன்
மலர்ப்ப தத்தின் பத்திவி டாமன
திருக்கு நற்றொண் டர்க்கிணை யாகவு னருள்தாராய்

புகழ்ச்சி லைக்கந் தர்ப்பனு மேபொடி
படச்சி ரித்தண் முப்புர நீறுசெய்
புகைக்க னற்கண் பெற்றவர் காதலி யருள்பாலா
புவிக்குள் யுத்தம் புத்திரர் சேயர
சனைத்து முற்றுஞ் செற்றிட வேபகை
புகட்டி வைக்குஞ் சக்கிர பாணிதன் மருகோனே
திகழ்க்க டப்பம் புட்பம தார்புய
மறைத்து ருக்கொண் டற்புத மாகிய
தினைப்பு னத்தின் புற்றுறை பாவையை யணைசீலா
செகத்தி லுச்சம் பெற்றம ராவதி
யதற்கு மொப்பென் றுற்றழ கேசெறி
திருக்க ழுக்குன் றத்தினில் மேவிய பெருமாளே.

## பதவுரை

புகழ் சிலை கந்தர்ப்பனும்=புகழ் பெற்ற கரும்பு வில்லையேந்திய மன்மதனும், பொடிபட சிரித்து=பொடிபட்டு எரிந்து போகவுஞ் சிரித்து, அண் மு புரம் நீறு செய்=அணுகிவந்த முப்புரங்கள் சாம்ப லாகவும், புகை கனல் கண்பெற்றவர்=புகை நெருப்பைத் தந்த கண்ணைக் கொண்ட சிவபெருமானுடைய, காதலி அருள் பாலா= காதலியாகிய பார்வதி தேவியின் பாலகரே! புவிக்கு உள் யுத்தம்= பூமியில் போர் வரவும், புத்திரர்=புதல்வர்கள், சேய்=பிள்ளைகள், அரசு அனைத்தும் முற்றும்=அரசர்கள் அனைவரும், செற்றிடவே பகை புகட்டி வைக்கும்=ஒருவரை யொருவர் கொல்லும்படி பகையை மூட்டி வைத்த, சக்கிர பாணிதன்=சக்கராயுதத்தை ஏந்திய கையரா கிய திருமாலின், மருகோனே=மருகரே! திகழ் கடப்பம் புட்பம் அது ஆர்புய=விளங்குகின்ற கடப்ப மலர் மாலை நிறைந்த புயங்களை மறைத்து, உரு கொண்டு=வேறு வடிவத்தைக் கொண்டு, அற்புதம் ஆகிய தினைபுனத்தில்=அற்புதமான தினைப்புனத்தில், இன்பு உற்று உறை=இன்பத்துடன் வாழ்ந்த, பாவையை அணை சீலா=வள்ளி பிராட்டியை மருவிய சீலரே! செகத்தில் உச்சம் பெற்று=பூதலத் தில் மேலான சிறப்பைப் பெற்று, அமராவதி அதற்கு ஒப்பு என்று உற்று=இந்திரனுடைய நகராகிய அமராவதிக்கு நிகர் இவ்வூர் என்று விளங்கி, அழகே செறி=அழகு நிறைந்துள்ள, திருக்கழுக் குன்றத் தினில் மேவிய=திருக்கழுக்குன்றத்தினில் வீற்றிருக்கும், பெரு மாளே=பெருமையின் மிகுந்தவரே! அகத்தினை கொண்டு=அகங் காரத்தைக் கொண்டு, இ புவிமேல்=இந்தப் பூதலத்தில், சில தினத்து=சில நாள்கள், மற்று ஒன்று உற்று அறியாது=வேறு ஒரு

நன்மார்க்கத்திலும் பொருந்த அறியாமல், பின் அவத்து உள் ளவக்கும்=பின் பயனிலாத தன்மையில் வைக்கின்ற, சித்தசனுர் அடு கணையாலே=மன்மதன் செலுத்தி வருத்துங் கணையினால், அசுத்த= தூய்மையில்லாததும், மை=மைபூசியதுமாகிய, கண் கொட்பு உறு பாவையர்=கண்கொண்டு சுழற்றும் பொது மாதர்கள், நகைத்து உரைக்கும்=சிரித்துப் பேசும்,பொய் கடல் மூழ்கியெ=பொய்யெனும் கடலில் அடியேன் முழுகி, அலக்கணில் சென்று=துன்பத்தில்பட்டு, தடுமாறியெ=தடுமாற்றத்தை யடைந்து, சிலநாள் போய்=சிலநாள் போக, இகத்தை மெய் கொண்டு=இம்மை வாழ்வே மெய்யென எண்ணி,இ புவி=இந்தப் பூமியில்,பாலர் பொன் மயக்கத்தில் உற்று= மக்கள் பொன் என்னும் மயக்கத்தில் அகப்பட்டு,அ பற்றைவிடாது= அந்தப் பற்றினைவிடாமல்,உடல் இளைப்பு=உடலில் இளைப்பு, இரைப்பும்=மூச்சு வாங்குதல், பித்தமும் ஆய்=பித்தம் இவைகள் மேலிட, நரை முதிர்வு ஆய்=நரை வந்து கிழத்தனத்தை யடைந்து,எம கயிற்றின் சிக்கல் நிலாமுன்=இயமனுடைய பாசக் கயிற்றின் சிக்கில் நிற்பதற்குமுன், மலர் பதத்தின்=தேவரீருடைய மலரடியில், பத்திவிடா மனது இருக்கும்=அன்பு விடாத மனத்தையுடைய.நல்தொண்டர்க்கு இணை ஆகவும்=நல்தொண்டர்கட்கு அடியேன் சமமாகும்படி, உன் அருள் தாராய்=உமது திருவருளைத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

புகழ்பெற்ற கரும்பு வில்லையுடைய மன்மதன் பொடிபட்டு எரியவும், அணுகி வந்த திரிபுரங்கள் சாம்பராகவும் சிரித்துப் புகை நெருப்பை ஏவிய நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானுடைய காதலியாகிய உமையம்மை பெற்ற புதல்வரே! பூமியில் போர் வந்து, புத்திரர், குழந்தைகள் மன்னர் அனைவரும் மாண்டொழிய பகையை மூட்டிய சக்கராயுதத்தை ஏந்திய கரத்தையுடைய திருமாலின் மருகரே! விளங்குகின்ற கடப்பமலர் மாலை யுடைய புயத்தை மறைத்து மாறு வேடம் புனைந்து, அற்புதமாகிய தினைப்புனத்தில் இன்பமாக வாழ்ந்த வள்ளிநாயகியைத் தழுவிய சீலமுடையவரே! பூதலத்தில் சிறப்புடைய, அமராவதி நகருக்கு நிகராகி அழகு நிறைந்த திருக்கழுக்குன்றத்தில் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! அகங்காரங்கொண்டு, இப்பூதலத்தில் சில நாள் வேறு ஒரு நல்வழியை மேற்கொள்ள அறியாது, வீணாக்கும் மன்மதனுடைய கணையினால், அசுத்தமும் மையும் உடைய கண்களைச் சுழற்றும் பொதுமாதர்கள் சிரித்துப் பேசும் பொய் சமுத்திரத்தில் முழுகி, துன்பப்பட்டு, தடுமாறி சில நாள் போக, இம்மை வாழ்வே மெய்யென்று எண்ணி மைந்தர் பொன் என்ற மயக்கத்தை யடைந்து, அந்த ஆசையை விடாது, இளைப்பு, மேல் மூச்சு, பித்தம், நரை முதலியவற்றை யடைந்து கிழவனாகி இயமனுடைய பாசக்

கயிற்றில் அகப்பட்டு சாவதற்கு முன், உமது திருவடித் தாமரையின் அன்பு விடாத மனமுடைய நல்ல அடியார்கட்கு அடியேனும் சமமாகி உய்யும்படி உமது திருவருளைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**அகத்தினைக் கொண்டு :—**

அகம்—நான். நான் என்ற அகப்பற்று.

**மற்றொன்றுற்றறியாது :—**

அவ நெறியன்றி, மற்றச் சிவ நெறியை யடைந்து உய்ய அறியாது

**அவத்துள் வைக்கும் :—**

அவம்—பயனற்றது. பயனில்லாத செயலில் வைப்பவன் மன்மதன்.

**இகத்தை மெய்க் கொண்டு :—**

மறுமையையும் வீடுபேற்றையுங் கருதாமல், இம்மை வாழ்வே நிலைத்தது என்று கருதுவது மாந்தர் தொழில். இம்மை, மறுமை, வீடு என்ற மும்மையில் இம்மையே மெய் யென்றெண்ணி இடர்ப்படுகிறார்கள்.

**பாலர்பொன் மயக்கில் உற்று :—**

மனைவி, மைந்தர், பொன், பொருள் என்ற இவைகளைச் சதமென நினைத்து மயக்கமுறுவர் அறிவிலிகள். இவைகள் யாவும் ஒரு கணத்தில் அழிபவை.

> "நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை". —திருக்குறள்.

**அம் பற்றைவிடாது :—**

சந்தத்தைக் குறித்து பகர மெய் மகர மெய்யாக வந்தது. பற்று விட்டாலன்றி பிறவி தொலையாது.

> "அற்றது பற்றெனில் உற்றது வீடு" —நம்மாழ்வார்.

**இளைப்பிரைப்பும் பித்தமுமாய் நரை முதிர்வாயே :—**

இளைப்பு என்பது ஒரு நோய். இது காசத்தைச் சேர்ந்தது.

இரைப்பு—அதிகமாக மூச்சு விடுகின்ற நோய்.

பித்தம்—பாண்டு, மயக்க முதலிய துயரங்களைச் செய்கின்ற நோய்.

இந்த நோய்களால் துன்புற்று, நரைத்து திரைத்து முதுமையாகி ஆன்மாக்கள் துன்புறும்.

**எமக்கயிற்றின் சிக்கினிலாமுன் :—**

ஆயுள் முடிந்தவுடன் கூற்றுவன் பாசக் கயிற்றால் உயிரைப் பிணித்துக் கொடு போவான் அந்த இடர்ப்பாடு வருமுன் இறைபணி செய்து உய்ய வேண்டும்.

**பத்திவிடாமன திருக்கு நற்றொண்டர்க் கிணையாகவுனருள் தாராய் :—**

அடியார்கள் இறைவன் திருவடியில் நீங்காத அன்புடன் இருப்பார்கள்.

"பெருநதியணியும் வேணிப் பிரான்கழல் பேணிநாளும்
உருகிய அன்புகூர்ந்த சிந்தைவார் ஒழுக்கமிக்கார்"

என்று குங்கலியக் கலய நாயனாரது அன்பின் திறத்தைச் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார்.

இத்தகைய திருத் தொண்டருடன் கூடி, அவர்களின் கருணையால் அவர்களுக்கு நிகரான அன்புடையராய் உயர்தல் வேண்டும்.

**புகழ்ச்சிலைக் கந்தர்ப்பன் :—**

கந்தர்ப்பன்—மன்மதன். ஆசையை விளைவிக்கின்ற மன்மதனை நெற்றிக் கண்ணால் பார்த்து சிவபெருமான் எரித்தருளினார்.

மும்மலகாரியமாகிய முப்புரத்தைச் சிரித்து விளையாட்டாக எரித்தருளினார்.

**புவிக்குள் யுத்தம்...பகை புகட்டி வைக்கும் சக்கிரபாணி :—**

"நீ பாரத வமரில் யாவரையும் நீறுக்கிப் பூபாரந் தீர்க்கப் புகுந்தாய் புயல்வண்ணா!" என்று கண்ணன் தூதில் சகதேவன் கூறியபடி, கண்ணனுடைய அவதார நோக்கம் பூபாரந் தீர்ப்பது.

அதற்குக் கருவி பாண்டவர்கள். பகவான் கிருஷ்ணர் பாண்டவர்க்கும் கௌரவர்கட்கும் பகை மூளச்செய்து, தானே விஜயனுக்குத் தேரோட்டி அரச குலம் யாவும் அழியச் செய்து நிலத்துக்கு நலஞ் செய்தார்.

கிருஷ்—தோண்டுவது. இச்சொல் நிலத்தைக் குறிக்கின்றது. ந—நலம்.

நிலத்துக்கு நலஞ் செய்கின்றவர் கிருஷ்ணர். இது கிருஷ்ண என்ற சொல்லுக்குப் பொருள்.

**செகத்தி லுச்சம் பெற்றமராவதி யதற்கு மொப்பென் றுற்றழகே செறி திருக்கழுக்குன்றம் :—**

சம்புகுத்தன் மாகுத்தன் என்ற இருவர் சகோதரர்கள். சம்புகுத்தன் சிவமே பரம்பொருள் என்பான். மாகுத்தன்

சக்தியே பெரிய பொருள் என்பான்: . இந்த வழக்கு எங்குந் தீராது வேத மலையில் வந்து சிவமூர்த்தியிடம் வினவினார்கள்.

சிவபெருமான், "பொன்னும் அணிகலமும் போன்று சக்தியும் சிவமும் தாதான்மியம். வேறு வேறு பொருளன்று" என்று அருளிச் செய்தார். சிவமூர்த்தி கூறியும் அவர்கள் மனந் தெளியாது, மீண்டும் சிவமே பரம் என்றும், சக்தியே பரம் என்றும் வாதிட்டார்கள். அவர்களைக் கழுகுகளாகுமாறு சிவபெருமான் சபித்தருளினார். அக்கழுகுகள் பூசித்ததனால் கழுக்குன்றம் எனப் பெற்றது.

### கருத்துரை

திருக்கழுக்குன்றமேவிய திருமுருகா! தொண்டருடன் கூடி வாழ அருள் செய்வீர்.

## 90

எழுகுநிறை நாபி அரிபிரமர் சோதி
யிலகுமரன் மூவர் முதலானோர்
இறைவியெனு மாதி பரைமுலையி னூறி
யெழுமமிர்த நாறு கனிவாயா

புழுகொழுகு காழி கவுணியரில் ஞான
புநிதனென ஏடு தமிழாலே
புனலிலெதி ரேற சமணர்கழு வேற
பொருதகவி வீர குருநாதா

மழுவுழைக பால டமரகதரி சூல
மணிகரவி னோத ரருள்பாலா
மலரயனை நீடு சிறைசெய்தவன் வேலை
வளமைபெற வேசெய் முருகோனே

கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு
கதிருலவு வாசல் நிறைவானோர்
கடலொலிய தான மறைதமிழ்க ளோது
கதலிவன மேவு பெருமாளே.

### பதவுரை

எழுகு நிறை நாபி = ஏழுஉலகங்களையும் தமது நாபியில்கொண்ட, அரி = நாராயணர், பிரமர் = பிரம்ம தேவர், சோதி இலகும்அரன் =

சோதிவடிவாக விளங்கும் உருத்திரன், மூவர் முதலானோர் = இந்த மூவர் முதல் பிற தேவர்கட்கும், இறைவி எனும் ஆதி = தலைவி யென்று சொல்லப் பட்ட ஆதி பராசத்தியாகிய, பரை முலையின் ஊறி எழும் = மேலாய உமாதேவியாரது திருமுலையில் ஊறியெழுந்த, அமிர்தம் நாறு = ஞானப்பால் மணக்கும், கனிவாயா = கனிபோன்ற வாயையுடையவரே! புழுகு ஒழுகு காழி = புழுகு வாசனை ஒழுகி நறுமணம் வீசுகின்ற சீகாழிப் பதியில், கவுணியரில் = கவுணியர் குடியில், ஞான புனிதன் என = ஞானசம்பந்தராக அவதரித்து, தமிழாலே = தமிழ்ப் பாசுரத்தின் மகிமையாலே, ஏடு புனலில் எதிர் ஏற = ஏடானது வையையாற்றின் நீரில் எதிர் ஏறிச் செல்லவும், சமணர்கழு ஏற = சமணர்கள் கழுவில் ஏறவும், பொருத = தமிழினால் வாதப் போர் புரிந்த, கவிவீர = கவிவீரரே! குருநாதா = குருநாதரே! மழு = மழுவையும், உழை = மானையும், கபாலம் = பிரம கபாலத்தையும், டமரக = உடுக்கையும், த்ரிசூலம் = திரிசூலத்தையும், மணி = மணியையும், கர விநோதர் அருள் பாலா = கரத்தில் ஏந்திய அற்புத மூர்த்தியாம் சிவபெருமான் அருளிய திருக்குமாரரே! மலர் அயனை = தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனை, நீடு சிறை செய்து = பெரிய சிறைச் சாலையில் அடைத்து, அவன் வேலை = அவனுடைய தொழிலாகிய படைப்புத் தொழிலை, வளமை பெறவே செய் = செப்பமாகச் செய்தருளிய, முருகோனே = முருகக் கடவுளே! கழுகு தொழு = கழுகுகள் தொழுகின்ற, வேதகிரி சிகரி வீறு = வேதமலையின் உச்சியில் விளங்குகின்ற, கதிர் உலவு = ஒளி பொருந்திய, வாசல் நிறை வானோர் = வாசலில் நிறைந்த தேவர்கள், கடல் ஒலியது ஆன = கடலின் ஒலி போல பெரு முழக்கமாக, மறை தமிழ்கள் ஓது = வேதங்களையும், தமிழ்ப் பாடல்களையும் ஓதுகின்ற, கதலிவனமேவு = கதலிவனமாகிய திருக்கழுக் குன்றத்தில் வாழுகின்ற, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே!

## பொழிப்புரை

ஏழு உலகங்களையும் நாபியில் அடக்கிய திருமால், பிரமா, ஒளியுருவாய உருத்திரர் என்ற இந்த மூவர்கட்கும், பிறதேவர் கட்கும் தலைவியாகிய ஆதி பராசக்தியின் திருமுலையில் ஊறி வெளிப்பட்ட ஞானப்பால் மணக்கும், கனிபோன்ற வாயையுடையவரே! புழுகு வாசனை வீசுகின்ற சீகாழியம்பதியில் கவுணியர் குடியில் ஞானசம்பந்தராக அவதரித்து, வையையாற்று வெள்ளத்தில் தமிழ்ப்பாசுரம் எழுதிய ஏடு எதிர்த்துச் செல்லவும், சமணர்கள் கழுவில் ஏறவும், வாதப்போர் புரிந்த கவிவீரரே! குருநாதரே! மழு, மான், பிரம கபாலம், உடுக்கை, திரிசூலம், மணி இவைகளைக் கரத்தில் தரித்த அற்புத மூர்த்தியாம் சிவபெருமான் அருளிய திருக்குமாரரே! தாமரை மலரில் வாழுகின்ற பிரமதேவனைச் சிறையில் அடைத்து, அவனுடைய தொழிலாகிய சிருட்டித் தொழிலை வளமையாகச்

செய்த முருகப் பெருமானே! கழுகுகள் தொழுகின்ற, வேதாசலத்தின் உச்சியில் விளங்கும் ஒளி நிறைந்த தேவர்கள் கடல் ஒலிபோல் வேதங்களையும் தமிழ்ப் பாடல்களையும் ஓதுகின்ற கதலிவனம் என்ற திருக்கழுக்குன்றத்தில் வாழும் பெருமித முடையவரே!

## விரிவுரை

இத்திருப்புகழ் வேண்டுகோள் எதுவும் இன்றி துதியாக அமைந்தது.

எழுகு நிறை நாபி அரி :—

அரி—பாவங்களைப் போக்குபவர். கு—பூமி; ஏழு என்பது சந்தத்தை ஒட்டி எழு என்று வந்தது. ஏழு உலகங்களையும் தனது வயிற்றில் அடக்கியவர் திருமால்.

"ஒருபகல் உலகெலாம் உதரத்துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை" —கம்பராமாயணம்.

சோதி யிலகுமரன் :—

ஒளி மயமான உருத்திரர். மூவரில் ஒருவராக வருகின்ற உருத்திரர் வேறு; சிவபெருமான் வேறு.

சிவபிரான் மூவருக்குந் தலைவர். அவரை வேதத்தில் சதுர்த்தம் என்று கூறும்.

"சிவம் அத்வைதம் சதுர்த்தம்"

"முந்திய முதல் நடு இறுதியு மானாய்
மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்" —திருவாசகம்

உருத்திரரையும் சிவத்தையும் ஒன்றெனக் கருதி இடர்ப் படுவோர் பலர்.

மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணிவிண்ணாண்டு மண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந்திரிதவரே"
—(திருச்சதகம்) திருவாசகம்.

மூவர் முதலானோர் இறைவி :—

மூவர்க்குந் தேவர்க்கும் தலைவி உமாதேவியார்.

"......அரனரி
அயனண்டர்க் கரியாளுமை" —(சகசம்பக்) திருப்புகழ்

"முதற்றேவர் மூவரும் யாவரும் முகிழ்நகையே"
—அபிராமியந்தாதி

ஆதி பரை முலையினூறி யெழுமமிர்த நாறு கனிவாயா :—

உமாதேவியாரின் திருமுலைப்பால் சிவஞான மயமானது.

ஆதி நாயகன் கருணையாய் அமலமாய்ப் பரம
போத நீரதாய் இருந்ததன் கொங்கையிற் பொழிபால்
ஏதிலாததோர் குருமணி வள்ளமீது ஏற்றுக்
காதன் மாமகற் கன்பினால் அருத்தினள் கௌரி. —கந்தபுராணம்.

புழு கொழுகு காழி :—

சீகாழியில் புழுகு வாசனை எங்கும் நிறைந்துள்ளது. இன்றும் அங்கு சட்டைநாதருக்குப் புனுகுச் சட்டம் சாத்துகின்றார்கள்.

கவுணியரில் ஞான புனிதனென :—

முருக சாருபம் பெற்ற அபர சுப்ரமண்ய மூர்த்திகளுள் ஒருவர் சீகாழியிலே கவுணியர் குடியில் திருஞானசம்பந்தராக அவதரித்தருளினார்.

ஏடு தமிழாலே புனலிலெதிரேற :—

திருஞானசம்பந்தரின் திரு அவதாரத்தின் நோக்கம் பரசமய நீக்கமும் சிவசமய ஆக்கமுமாம்.

மதுரையம்பதிக்குப் பிள்ளையார் எழுந்தருளி எண்ணாயிரம் சமணர்களுடன் அனல்வாதஞ் செய்து, பின் புனல் வாதஞ் செய்தபோது, "வாழ்க அந்தணர்" என்று தொடங்கும் திருப்பாசுரத்தைப் பாடி, அந்தத் தமிழ் ஏட்டினை வையையாற்றில் இட்டார். அந்த ஏடு எதிரேறிச் சென்றது.

திருவுடைப் பிள்ளையார்தந் திருக்கையால் இட்டஏடு
மருவுறும் பிறவியாற்றில் மாதவர் மனஞ் சென்றாற் போல்
பொருபுனல் வைகை யாற்றில் எதிர்த்துநீர் கிழித்துப் போகும்
இருநிலத் தோர்கட்கெல்லாம் இதுபொருள் என்றுகாட்டி.
—பெரியபுராணம்.

இவ்வாறு ஏடு ஆற்றில் எதிரேறியபோது புத்தேளிர் பூமழை பொழிந்தார்கள். பாண்டியன் அற்புதம் அடைந்தான். அமணர்கள் அஞ்சி அஞ்சலி செய்தார்கள். செந்தமிழின் ஆற்றலை உலகவர் உணர்ந்தார்கள்.

ஏடுநீர் எதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்கள் எல்லாம்
நீடிய வாழ்த்தில் போற்றி நிமிர்ந்தபூ மாரி தூர்த்தார்
ஆடியல் யானைமன்னன் அற்புதம் எய்தி நின்றான்
பாடுசேர் அமணர் அஞ்சிப் பதைப்புடன் பணிந்துநின்றார்.
—பெரியபுராணம்.

சமணர் கழுவேற பொருத கவிவீர :—

நாங்கள் தோல்வியுற்றால் கழுவில் ஏறுவோம் என்று சமணர்கள் கூறிய உரைப்படி ஆற்றங்கரையில் கழுக்கள் நாட்டி கழுவில் ஏறினார்கள்.

பண்புடை அமைச்சனுரும் பாருளோர் அறியும் ஆற்ருல்
கண்புடை பட்டு மிண்ட கழுத்தறி நிரையில் ஏற்ற
நண்புடை ஞானம் உண்டார் மடத்துத்தீ நாடியிட்ட
எணபெருங் குன்றத்தெண்ணு யிரவரும் ஏறினுர்கள்.
—பெரியபுராணம்.

பொருதல்—போர் புரிதல். திருநீற்றினல் ஞானசம்பந்தர் எண்ணுயிரம் சமணர்களுடன் போர் புரிந்தருளினுர்.

"சிவமாய்த் தேனமுதூறுந் திருவாக்கால் ஒளிசேர்வெண்
திருநீற்ருல் அமராடும் சிறியோன்" —(தவர்) திருப்புகழ்.

மழுவுழை கபால டமருகத்திரிசூல மணிகர விநோதர்:—

சிவபெருமான் இடக்கரத்தில் மானும் வலக்கரத்தில் மழுவும் ஏந்தியுள்ளார்.

துள்ளி ஓடுகின்ற மனமாகிய மானையும், அடியார்களது பாவத்தை எரிக்கும் மழுவையும் உடையவர்.

"மழுமான்கரத்தனை மால்விடையானை" —பட்டினத்தார்.

உடுக்கைநாத ஒலியால் உலகங்களை இறைவன் படைக்கின்ருன். "தோற்றந் துடியதனில்".

திரிசூலம்—இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்று சக்திகளைக் குறிக்கின்றது

மலரயனை நீடு சிறை செய்தவன் வேலா, வளமை பெறவேசெய்:—

பிரணவத்தின் பொருள் அறியாத பிரமனை செவ்வேள் சிறையில் வைத்து, அவனுடைய சிருட்டித் தொழிலை ஒருமுகமும், நான்கு திருக்கரங்களும், ஜெபமாலையும் கமண்டலமுந் தாங்கித் தாமே செய்தருளினுர்.

ஒருகரந்தனில் கண்டிகை வடம்பரித் தொருதன்
கரதலந்தனில் குண்டிகை தரித்திரு கரங்கள்
வரதமோ டபயந்தரப் பரம்பொருள் மகனேர்
திருமுகங்கொடு சதுர்முகன் போல்விதி செய்தான்.
—கந்தபுராணம்.

அகிலவுலகங்கட்கும் தலைவராய் ஐந்தொழில்கட்கும் முதல்வராய முருகவேள் படைப்புத் தொழில் புரிவதில் அதிசயம் ஒன்றுமில்லை.

உயிரினுக் குயிராகியே பரஞ்சுடர் ஒளியாய்
வியன்மறைத் தொகைக் கிறதாய் விதிமுதல் உரைக்கும்
செயலினுக் கெலாம் ஆதியாய் வைகிய செவ்வேள்
அயன் எனப்படைக் கின்றதும் அற்புதம் ஆமோ. —கந்தபுராணம்.

முருகப் பெருமான் படைப்புத் தொழில் புரியும்போது உயிர்கள் யாவும் நல்லொழுக்க முடையனவாய், இன்ப நலம் பெற்று மகிழ்ந்திருந்தன.

"முற்றுமத் தொழிலிற்பட்ட முதுயிர் பெற்ற பேற்றை
இற்றெனக் கிளக்கலாமே எஃகறிவுடையார்க்கேனும்."

—தணிகைப்புராணம்.

கழுகு தொழு வேதகிரி :—

கிருதயுகத்தில்—சண்டன் பிரசண்டன் என்ற கழுகுகளும், திரேதாயுகத்தில்—சம்பாதி சடாயு என்ற கழுகுகளும், துவாபரயுகத்தில்—சம்புகுத்தன் மாகுத்தன் என்ற கழுகுகளும் பூசித்தன. கலியுகத்தில்—சம்பு ஆதி என்ற கழுகுகள் பூசிக்கின்றன.

வானோர் கடலொலியதான மறைதமிழ்களோது ;—

திருக்கழுக்குன்றத்திலே தேவர்கள் மறைகளாலும், தமிழ்ப் பாடல்களினாலும் இறைவனைக் கடல்போன்ற ஒலிசெய்து துதிக்கின்றார்கள்.

"முழாவொலி யாழொலி முக்கணாயகன்
விழாவொலி மணத்தொலி வேள்வியாவையும்
வழாவொலி மறைவொலி வானையுங்கடந்
தெழாவொலி கடல்கிளர்ந்தென வொலிக்குமால்"

—திருக்கழுக்குன்ற தலபுராணம்.

கதலிவனம் :—

இத்தலத்தின் தலவிருட்சம் வாழை. ஐந்தாம் திருவிழாவில் வாழை விருட்ச வாகனத்தில் இறைவன் எழுந்தருளுகின்றார்.

## 91

ஓல மிட்ட சுரும்பு தனா தனாவென
வேசி ரத்தில் விழுங்கை பளீர் பளீரென
வோசை பெற்ற சிலம்பு கலீர் கலீரென விரகலீலை

ஓர்மி டற்றி லெழும்புள் குகூ குகூவென
வேர்வை மெத்த வெழுந்து சலா சலாவென
ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீரென அமுதமாரன்

ஆல யத்து ளிருந்து குபீர் குபீரென
வேகு திக்க வுடம்பு விரீர் விரீரென
ஆர முத்த மணிந்து அளா வளாவென மருவுமாதர்

ஆசை யிற்கை கலந்து சுமா சுமாபவ
சாக ரத்தி லழுந்தி எழா எழாதுளம்
ஆறெ ழுத்தை நினைந்து குகா குகாவென
வகைவராதோ

மாலை யிட்ட சிரங்கள் செவேல் செவேலென
வேலெ ழுச்சி தரும்பல் வெளேல் வெளேலென
வாகை பெற்ற புயங்கள் கறேல் கறேலென
எதிர்கொள்சூரன்

மார்பு மொக்க நெரிந்து கரீல் கரீலென
பேய்கு திக்க நிணங்கள் குழூ குழூவென
வாய்பு தைத்து விழுந்து ஐயோ ஐயோவென
உதிரமாறாய்

வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலை வெற்பு மிடிந்து திடீல் திடீலென
மேன்மை பெற்ற ஜனங்கள் ஐயா ஐயாவென
விசைகள்கூற

வேலெ டுத்து நடந்த திவா கராசல
வேடு வப்பெண் மணந்த புயா சலாதமிழ்
வேத வெற்பி லமர்ந்த க்ருபா கராசிவ குமரவேளே

## பதவுரை

மாலையிட்ட சிரங்கள் = பூமாலையை யணிந்துகொண்டுள்ள (சூராதியருடைய) தலைகள், செவேல் செவேல் என = உதிரக் கொதிப்பால் சிவந்த நிறத்தை யடையவும், வேல் எழுச்சி தரும்பல் = வேலைப்போல் கூர்மையாகவுள்ள பற்கள், வெளேல்வெளேல்என = (உதிரத்துடன் கூடிய புலாலுணவால் சிவந்த அப்பற்கள்) வெண்ணிறத்தையடையவும், வாகைபெற்ற புயங்கள் = வெற்றி மாலையைச் சூடியுள்ள தோள்கள், கறேல் கறேல் என = மிகுந்த கறுப்புநிறத்தையடையவும், எதிர் கொள் சூரன் = போரில் எதிர்த்த சூரபன்மனுடைய, மார்பும் ஒக்க நெரிந்து = ஏனைய உறுப்புகளுடன் மார்பும் மிகவும் நெரிந்து, கரீல் கரீல் என = தீய்ந்துபோகவும், பேய் குதிக்க = பேய்கள் குதிகொள்ளவும், நிணங்கள் குழூ குழூ என = தசைகள் குவியவும், வாய் புதைத்து விழுந்து = (அசுர சேனைகள்). வாயைப் பொத்திக் கொண்டு விழுந்து, ஐயோ ஐயோ என = ஐயோ ஐயோ என்று அலறவும், உதிரம் ஆறாய் = உதிர வெள்ளம் ஆறாய் ஓடவும், வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீல் என = கடல் அறவே சுவறி சுறீல் என்று

சத்திக்கவும், மாலை வெற்பும் இடிந்து திடல் திடல் என = அத்த கிரியும் ஏனைய கிரிகளும் திடல் திடல் என்று இடிந்து விழவும், மேன்மை பெற்ற ஜனங்கள் = பெருமைமிக்க முனிவர்களும் தேவர்களும், ஐயா ஐயா என = ஐயா ஐயா என்று, இசைகள் கூற = துதிசெய்யவும், வேல் எடுத்து நடந்த திவாகரா = வேலாயுதத்தை எடுத்துக்கொண்டு போர்க்களத்தில் நடந்த சிவசூரியரே! அசல = மலையிடத்தே வாழும் வேடுவப் பெண் மணந்த புய அசல = வள்ளி நாயகியாரை மணந்து கொண்ட மலைபோன்ற தோளை யுடையவரே! தமிழ் வேத வெற்பில் அமர்ந்த = தமிழ் வழங்கும் வேதாசலம் என்னும் திருக் கழுக்குன்றத்தில் விரும்பி வாழ்கின்ற, கிருபை ஆகர = கருணைக்கு உறைவிடமானவரே! சிவ குமரவேளே = சிவகுமாரரே! ஒலம் இட்ட சுரும்பு தனு தனு என = ரீங்காரம் செய்கின்ற வண்டுகள் கூந்தலில் தனு தனு என்று சத்திக்கவும், (ஏ-அசை) சிரத்தில் விழுங்கை = தலையில் தலையலங்காரங்கள், பளீர் பளீர் என = பளீர் பளீர் என்று மின்னவும், ஓசை பெற்ற சிலம்பு கலீர் கலீர் என = ஒலியையுடைய பாதச் சிலம்புகள் கலீர் கலீர் என்று சத்திக்கவும், விரக லீலை = காம லீலையின் எண்ணம், ஒர் மிடற்றில் எழும்புள் குகூகுகூ என = தனிமை யான நெஞ்சத்தில் உண்டாகி பறவையின் குரல் போல் குகூ என்று படபடப்புறவும், வேர்வை மெத்த எழுந்து சலா சலா என = மிகவும் வேர்வையுண்டாகி சலசலப்புறவும், ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீர் என = மயிர்க் கூச்சலுற்று சிலிர்ப்புறவும், அமுதமாரன் ஆலயத் துள் இருந்து குபீர் குபீர் என = அமுதம் போன்ற மன்மதன் உள்ளத் தில் இருந்து குபீர் என்று வேகத்துடன், (ஏ-அசை) குதிக்க = குதிக்க வும், உடம்பு விரீர் விரீர் என = உடம்பு விரிந்துபோவது போல துன்புறவும், ஆரமுத்தம் அணிந்து அளா அளா என = முத்தாரங்களை யணிந்து அளவளாவியும், மருவு மாதர் = தழுவுகின்ற விலைமகளி ருடைய, ஆசையில் கைகலந்து = ஆசையினுல் கைகலந்து உறவாடி, சுமா சுமா = பயன் சிறிது மின்றி, பவசாகரத்தில் அழுந்தி = பிறவிக் கடலில் அழுந்தி, எழா எழாது = அதனின்றும் எழும் வகையின்றி வாடும் அடியேனுடைய, உளம் ஆறு எழுத்தை நினைந்து = உள்ளத் தில் சடக்கரமந்திரத்தைத் தியானித்து, குகா குகா என வகை வராதோ = குகா குகா என்று துதிக்கும் தன்மை உண்டாக மாட்டாதோ?

## பொழிப்புரை

(சூராதி யவுணர்களுடைய) பூமாலையை யணிந்துள்ள தலைகள் உதிரக் கொதிப்புற்று சிவப்புறவும், (ஊனுண்டு சிவந்த) வேல் போன்ற கூர்மையான பற்கள் வெளுப்புறவும், வெற்றி பெற்ற புயங்கள் மிக்க கறுப்புறவும், போர்க்களத்தில் எதிர்ந்த சூரபன்மன் மார்பும் மற்ற உறுப்புக்களும் நெரிந்து கரியவும், பேய்கள் கூட்டங் கூட்டமாகக் குதிக்கவும்,

நிணங்கள் குவியவும், அசுரசேனைகள் வாய்புதைத்து "ஐயோ" என்று அலறிவிழவும் உதிரவெள்ளம் ஓடவும், கடல் வற்றவும், அத்தகிரி முதலியவை இடிந்து விழவும், முனிவரும் தேவரும் "ஐயா" என்று துதி செய்யவும், வேலாயுதத்தை எடுத்து நடந்த சிவசூரியரே! மலைப்பக்கத்தில் வாழும் வள்ளிநாயகியாரைத் திருமணங் கொண்ட புயமலையை யுடையவரே! தமிழ் வழங்கும் வேதாசலத்தில் வாழும் கருணாகரரே! சிவ குமாரரே! (கூந்தலிலிருந்து) ஒலிடுகின்ற வண்டுகள் சத்திக்கவும், தலையலங்காரம் மின்னவும், ஒலிபெற்ற காற்சிலம்பு அரற்றவும், காமலீலையின் எண்ணத்தால் நெஞ்சில் படபடப்புறவும், வேர்வை மிகவும், மயிர் சிலிர்க்கவும், மன்மதன் உள்ளத்திலிருந்து குதிகொள்ளவும், உடம்பு விரிவதுபோல் துன்புறவும், முத்தாரங்களை யணிந்து தழுவுகின்ற விலைமாதருடைய ஆசையால் அவர்களைக் கலந்து அவமே திரிந்து பிறவிப் பெருங்கடலில் அழுந்திய அடியேன் அதினின்றும் கரை சேர்ந்து உய்ய சடக்கர மந்திரத்தை உள்ளத்தில் தியானித்து "குகா குகா" என்று வாயார வாழ்த்தி உய்யும் தன்மையைப் பெறமாட்டேனோ?

## விரிவுரை

இப்பாடலின் முற்பகுதி விரகதாபத்தாலுண்டாகும் நிகழ்ச்சியைப் பற்றிக் கூறுகின்றது. விழுங்கை—விழுகின்ற கை'என்றும் பொருள் கொள்ளலாம். கை—ஒப்பனை எனப் பொருள் கொள்ளப்பட்டது. பிறவிப் பெருங் கடலில் விழுந்த ஆன்ம கோடிகட்குப் பற்றுக்கோடாகத் திகழ்வது ஆறெழுத்தேயாம்.

பிற்பகுதி முருகவேள் வேலெடுத்து நடந்ததனால் உண்டாகும் அற்புத நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுகின்றது.

## கருத்துரை

வேலாயுதரே! வள்ளிமணவாளரே! வேதாசலரே! சிவ மைந்தரே! மாதர் மயக்குற்று பிறவிக் கடலில் வீழ்ந்தலையும் அடியேன் ஆறெழுத்தை நினைந்து உய்யும் வண்ணம் அருள் புரிவீர்.

## 92

வேத வெற்பி லேபு னத்தில் மேவி நிற்கு மபிராம
வேடு வச்சி பாத பத்ம மீது செச்சை முடிதோய
ஆத ரித்து வேளை புக்க ஆறி ரட்டி புயநேய
ஆத ரத்தொ டாத ரிக்க ஆன புத்தி புகல்வாயே

காது முக்ர வீர பத்ர காளி வெட்க மகுடாமா
காச முட்ட வீசி விட்ட காலர் பத்தி யிமையோரை
ஓது வித்த நாதர் கற்க வோது வித்த முனிநாண
ஓரெழுத்தி லாறெ ழுத்தையோது வித்த பெருமாளே.

## பதவுரை

வேத வெற்பிலே = வேதாசலமாகிய திருக்கழுக்குன்ற மலை மேலும், புனத்தில் = வள்ளிநாயகியாரது தினைப்புனத்திலும், மேவி நிற்கும் = விரும்பி நிற்கும், அபிராம = சிறந்த பேரழகுடையவரே ! வேடுவச்சி = வேட்டுவகுல விளக்காகிய வள்ளியம்மையாருடைய, பாத பத்ம மீது = திருவடித்தாமரைமீது, செச்சை முடி தோய = வெட்சிமலரை யணிந்துள்ள தேவரீருடைய திருமுடி படியுமாறு பணிந்து, ஆதரித்து வேளை புக்க = அன்பு வைத்து தக்க சமயமறிந்து சென்ற, ஆறு இரட்டி புய நேய = பன்னிரு புயாசலங்களையுடைய நண்பரே ! காதும் = மறநெறிநின்றுரைக் கொல்லுந் தன்மை யுடையவரும், உக்ர = பயங்கரமானவருமாகிய, வீரபத்ரகாளி வெட்க = வீரபத்ரகாளி யம்மையார் நாணுமாறு, மகுடம் ஆகாச முட்ட = திருமுடி ஆகாயத்தில் முட்டுமாறு வளர்ந்து நின்று, வீசிவிட்ட காலர் = தக்கன் முதலியோரை எடுத்து வீசி எறிந்த வீரபத்ரர், பத்தி இமையோரை = அன்பின் மிக்க தேவர்கள் முதலியோரை, ஓதுவித்த நாதர் கற்க = வேதசிவாகமங்களைக் கற்பித்த சிவபெருமான் கற்றுக் கொள்ளுமாறும், ஓதுவித்த முனிநாண = பிரணவ மந்திரார்த்தத்தைச் சொல்வதற்கு முயன்ற பிரமதேவன் வெட்குமாறும், ஓர் எழுத்தில் ஆறு எழுத்தை ஓதுவித்த = ஓர் எழுத்தாகிய பிரணவ மந்திரத்தில் ஆறெழுத்துக்களையும் அடக்கி உபதேசித்த, பெருமாளே = பெருமையின் மிக்கவரே ! ஆதரத்தோடு = கருணையோடு, ஆதரிக்க = அடியேனைக் காப்பாற்றும் பொருட்டு, ஆன புத்தி புகல்வாயே = அடியேனுக்குத் தகுந்த அறிவைச் சொல்லியருள்வீர்.

## பொழிப்புரை

**வேதாசலமாகிய திருக்கழுக்குன்றத்திலும், வள்ளியம்மையாருடைய தினைப்புனத்திலும் விரும்பி வாழுகின்ற கட்டழகின் மிக்கவரே ! வேட்டுவகுலத்தில் அவதரித்த வள்ளிநாயகியாரது திருவடித் தாமரையில் வெட்சிமலரைச் சூடியுள்ள உமது திருமுடி தோய வணங்கி, அவ்வம்மையார் மீது அன்பு வைத்து சமயமறிந்து தினைப்புனஞ் சென்ற பன்னிருபுயாசலங்களையுடைய நண்பரே ! கொல்லுந் தன்மையும் பயங்கரமும், வீரமும் உடைய பத்ரகாளி நாணுமாறும், மகுடம் ஆகாயம் வரை செல்லுமாறும் பேருருக் கொண்டு, தக்கனுதியரை எடுத்து வீசி எறிந்த வீரபத்திரர், அன்புமிக்க அமரர் முதலி**

யோருக்கு வேத சிவாகமங்களைக் கற்பித்த சிவபெருமான் கற்கவும், பிரணவ மந்திரார்த்தத்தை விளக்க முயன்ற பிரம தேவன் நாணவும், ஓ என்ற ஓரெழுத்தில் ஆறு எழுத்தையும் ஓதுவித்த பெருமித முடையவரே! அன்புடன் அடியேனைக் காப்பாற்றுதற்கு ஆன நல்லறிவைப் புகன்று அருள்வீர்.

## விரிவுரை

**வேதவெற்பு :—**

இது திருக்கழுக்குன்றம். வேதங்கள் மலையுருக் கொள்ள அதன்மீது வேதாதிபராகிய சிவபெருமான் எழுந் தருளியதால் வேதாசலம் எனப்படும். அஷ்டவசுக்கள், நந்தி, இந்திரன், பசு, வராகம், முதலியோர் இத்தலத்தில் வழிபட்டு நற்பேறு பெற்றனர். சண்டர் பிரசண்டர் என்னும் இருவரும் கிருதயுகத்திலும், சம்பாதி சடாயு என்னும் இருவர் திரேதா யுகத்திலும், சம்புகுத்தர் மாகுத்தர் என்னும் இருவரும் துவா பரயுகத்திலும், கழுகுருவுடன் வழிபட்டு நற்கதி பெற்றனர். இக்கலியுகத்தில், புஷா, விருத்தா என்னும் தவசிகள் கழுகுரு வுடன் இன்றும் இருந்து வருவது கண்கூடு. பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை சங்கு பிறக்கும சங்கு தீர்த்தம் என்ற அழகிய தடாகம் ஒன்று உண்டு. இப்பொழுதும் அத்தீர்த்தத் தில் முழுகி மலைவலம் வந்து நோய் தீரப் பெறுவோர் பலர்.

மிகப் புனிதமான க்ஷேத்திரம். மாணிக்கவாசகருக்கு சிவ பெருமான் காட்சி தந்த திருத்தலம்.

"கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக் குன்றிலே"

**காதுமுக்ர......கால :—**

தக்கன் சிவபெருமானிடம் தவமிருந்து வரம் பல பெற்று தருக்குற்று, சிவபெருமானை மதியாது தேவர்களைப் பொருள் படுத்தி வேள்வி செய்யத் தொடங்க, நன்றி கொன்றார் எய்து நெறி இதுவே என்று உலகம் உணர, சிவபெருமான் வீரபத் திரரை யுண்டாக்கி யனுப்பி தக்கயாகத்தை யழித்த வரலாற் றைக் கந்தபுராணத்திலும் சிவமகாபுராணத்திலும் காண்க.

**பத்தியிமையோர் :—**

வரிசையாயுள்ள தேவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

**ஓதுவித்த நாதர் :—**

சகல தேவர்களையும் ஓதுவித்தவர் சிவபெருமானே யாவார்.

**ஓதுவித்த முனிநாண :—**

"பிரணவ மந்திரப் பொருள் யாது" என்று பிரமதேவனை குமாரக் கடவுள் வினவ, பிரணவப் பொருள் முருகவேளே

என்று உணராத பிரமன், முருகவேளுக்கு அதனையுரைக்கத் தொடங்கினான். அவ்வாறு தொடங்கிய அவன், ஆறுமுகக் கடவுள் சிவபெருமானுக்கே அதனை உபதேசிக்கும்போது, தன் அறியாமையை எண்ணி நாணங் கொண்டனன்.

**ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமானே :—**

ஓரெழுத்து பிரணவ மந்திரம்; ஓ; இதில் ஆறெழுத்தாவன: அ, உ, ம, நாதம், விந்து, கலை என்பன இதன் விரிவை தக்கோர் வாய்க் கேட்டுத் தெளிக.

### கருத்துரை

வேதவெற்பிலும் தினைப்புனத்திலும் வாழும் அழகரே! வள்ளி மணவாளரே! சிவனுருக்கு ஒரு மொழி யுரைத்த குருபரரே! அடியேனுக்கு நல்லறிவைப் புகன்று ஆட் கொள்வீர்.

## பேறை நகர்

## 93

நீலமயில் சேருமந்தி மாலைநிக ராகி யந்த
காரமிக வேநி றைந்த குழலாலும்
நீடுமதி ரேக இன்ப மாகியச லாப சந்த்ர
னேர்தருமு கார விந்த மதனாலும்

ஆலினிக ரான வுந்தி யாலுமட வார்கள் தங்கள்
ஆசை வலை வீசு கெண்டை விழியாலும்
ஆடியக டாமி சைந்த வார்முலைக ளாலு மந்த
னாகிமயல் நானு ழன்று திரிவேனோ

கோலவுரு வாயெழுந்து பாரதனை யேயிடந்து
கூவிடுமு ராரி விண்டு திருமார்பன்
கூடமுறை நீடு செம்பொன் மாமதலை யூடெ ழுந்த
கோபவரி நார சிங்கன் மருகோனே

பீலிமயில் மீது றைந்து சூரர்தமை யேசெ யங்கொள்
பேர் பெரிய வேல்கொள் செங்கை முருகோனே
பேடைமட ஓதி மங்கள் கூடி விளை யாடு கின்ற
பேறை நகர் வாழ வந்த பெருமாளே.

## பதவுரை

கோல உருவாய் எழுந்து=அழகிய பன்றியின் வடிவத்தைக் கொண்டு, பார் அதனையே இடந்து=பூமியைப் பிளந்து கொண்டு சென்று, கூவிடு=பூமியை மீட்டு வந்தவரும், முராரி=முரன் என்ற அசுரனை வதைத்தவரும், விண்டு=விஷ்ணுவும், திருமார்பன்=இலக்குமியைய் மார்பில் கொண்டவரும், கூடம் உறை=கூடத்தில் இருந்த, நீடு செம்பொன் மா மதலை ஊடு எழுந்த=நீண்ட சிவந்த பொன்னுலாகிய தூணிலிருந்து தோன்றிய, கோப அரி நார சிங்கன்=கோபம் மிகுந்த நரசிங்கமூர்த்தியுமாகிய திருமாலின், மருகோனே=மருகரே! பீலி மயில்மீது உறைந்து=தோகை நிறைந்த மயில்மீது வீற்றிருந்து, சூரர் தலைமையே செயம் கொள்=சூராதி யவுணர்களை வென்ற, பேர் பெரிய=புகழ்மிகுந்த, வேல் கொள்=வேலாயுதத்தை யேந்திய, செம் கை=சிவந்த திருக்கரத்தையுடைய, முருகோனே=முருகக் கடவுளே! பேடை மட ஓதிமங்கள்=அறியாமையுள்ள பெண் அன்னங்கள், கூடி விளையாடுகின்ற=ஒன்றுகூடி விளையாடுகின்ற, பேறை நகர் வாழ வந்த=பெறும் பேறு நகரில் வாழுகின்ற, பெருமாளே=பெருமையில் மிகுத்தவரே! நீலமயில் சேரும்=நீல மயில்கள் சேர்ந்து விளையாடுகின்ற, அந்தி மாலை நிகர் ஆகி=மாலைப் பொழுதுக்கு ஒப்பதாகி, அந்தகாரம் மிகவே நிறைந்த=பேரிருள் மிகவும் நிறைந்துள்ள, குழலாலும்=கூந்தலாலும், நீடும் அதிரேகை இன்பம் ஆகிய=நீடித்துள்ள மிக்க இன்பத்தைத் தருவதாகிய, சலாப=இன்பமாய் பேசத்தக்க, சந்த்ரன் நேர் தரு=சந்திரனை யொத்த, முக அரவிந்தம் அதனாலும்=முகமாகிய தாமரையாலும், ஆலின் நிகர் ஆன=ஆல்இலைக்கு ஒப்பான, உந்தியாலும்=வயிறாலும், மடவார்கள் தங்கள்=பொது மாதர்கள் தங்களுடைய, ஆசைவலை வீசு கெண்டை விழியாலும்=ஆசை வலையை வீசுகின்ற மீன் போன்ற கண்களாலும், ஆடிய கடாம் இசைந்த=கடைந்தெடுத்த குடம்போன்ற, வார் முலைகளாலும்=இரவிக்கையுடன் கூடிய தனங்களாலும், மந்தன் ஆகி=அறிவு மழுங்கியவனாகி, மயல் நான் உழன்று விடுவேனோ=அடியேன் மயக்கங் கொண்டு கலங்கித் திரியலாமோ?

## பொழிப்புரை

அழகிய பன்றியுருவத்தை யெடுத்து, பூமியைத் தோண்டிச் சென்று, பூமியை மீட்டு வந்தவரும், முரன் என்ற அசுரனை வதைத்தவரும் விஷ்ணுவும், இலக்குமியை ஏந்திய திருமார்பரும், கூடத்தில் இருந்த நீண்ட பொன் மயமான தூணில் தோன்றியவருமாகிய நரசிங்கப் பெருமானுடைய திருமருகரே; தோகையுடைய மயில் வாகனத்தில் அமர்ந்து, சூராதி யவுணர்களை வென்று புகழ் பெற்ற வேலாயுதத்தைத் தரித்த

சிவந்த கரத்தையுடைய முருகக் கடவுளே! அறியாமையுடைய பெண் அன்னங்கள் ஒன்றுபட்டு விளையாடுகின்ற பெறும் பேறு என்ற திருத்தலத்தில் வாழ்கின்ற பெருமிதமுடையவரே! நீலமயில் சேர்ந்து விளையாடுகின்ற மாலைப் பொழுதுக்கு ஒப்பதாகி, பெரிய கரிய இருள் மிகவும் நிறைந்த கூந்தலாலும், நீண்ட இன்பந் தருவதாகிய இன்ப வார்த்தைகளுடன் கூடிய சந்திரனை யொத்த தாமரை முகத்தாலும், ஆலிலை போன்ற வயிறாலும், பொது மாதரின் ஆசை வலை வீசுகின்ற மீன் போன்ற கண்களாலும், கடைந்தெடுத்த குடம் போன்ற கச்சுடன் கூடிய தனங்களாலும், மந்தமுடையவனாகி மயக்கங் கொண்டு உழன்று அடியேன் திரியலாமோ?

## விரிவுரை

**நீலமயில் சேரும் அந்திமாலை நிகராகி :—**

மாலையில் இருளைக் கண்டு களித்து மயில்கள் தோகை விரித்து ஆடி மகிழும்.

மாலையில் மகிழ்வது மயில். காலையில் மகிழ்வது சேவல்.

அந்திமாலை இருள் மயமானது. அது பெண்களின் கூந்தலுக்கு ஒப்பாக இங்கே கூறப்பட்டது.

**அந்தகார மிகவே நிறைந்த குழலாலும் :—**

அந்தகாரம்—பேரிருள்.

ஒளியை இருள் விழுங்குவதுபோல், ஆடவரின் அறிவு ஒளியை அக்கூந்தல் விழுங்கி மயக்கஞ் செய்யவல்லது.

இத்திருப்புகழில் மற்ற மூன்று அடிகளிலும், ஆடவரது அறிவை மயக்கவல்ல பொது மாதரது அங்க இயல்களைக் கூறுகின்றார்.

**நானுழன்று திரிவேனோ :—**

"அடியேன் மயக்கத்தால் உழன்று திரிவது முறையோ? அவ்வாறு திரியாத வண்ணம், அடியேனுடைய மயலை அயலாக்கி முருகா! ஆட்கொண்டருள்" என்று சுவாமிகள் ஞான பண்டிதனை வேண்டுகின்றார்.

**கோல வுருவாயெழுந்து பாரதனையே யிடந்து கூவிடு முராரி :—**

திதியின் மைந்தனான இரணியாட்சன் திருமாலைப் பகைத்து அவருடைய மனைவியாகிய பூமாதேவிக்குத் துன்பஞ் செய்யும் பொருட்டு பூமியைக் கடலில் அழுத்தினான். அப்போது திருமால் அழகிய வெண்பன்றியாக வடிவெடுத்து, இரணியாட்சனை வதைத்து, பூமியைப் பந்துபோல் தனது

முகத்தில் உள்ள வெண் கொம்புகளில் ஏந்தி மேலே கொணர்ந்தார்.

அதனால் பழங்காலத்தில் தங்க நாணயங்களில் வராக மூர்த்தியின் வடிவைப் பொறித்தார்கள். அதனால் அந்தத்தங்க நாணயத்துக்கு வராகன் என்ற பேர் வழங்கியது.

**முராரி :—**

கிருஷ்ணாவதாரத்தில் முரன் என்ற அரக்கனை வதைத்தருளினார். அதனால் முராரி என்ற பேர் ஏற்பட்டது.

**கூடமுறை நீடு செம்பொன் மாமதலையூடெழுந்த கோபவரி நாரசிம்மன் :—**

திதியின் மகனாகிய இரணியன் கடவுள் இல்லை என்று கூறி எங்கும் தன்னையே வணங்குமாறு செய்து, ஐந்து கோடியே எழுபதினாயிரத்து அறுபத்தொரு ஆண்டுகள் கொடுமை செய்தான்.

அவனுடைய மகன் பிரகலாதன் பிர—விசேடமான, ஹ்லாதன்—மகிழ்ச்சியுடையவன், பிரஹ்லாதன்.

இவர் எப்போதும் இடையறாது ஓம் நமோ நாராயணாய என்று தியானஞ் செய்து கொண்டிருந்தார்.

"நீ வணங்கும் மாயன் எங்கேயிருக்கின்றான் ?" என்று கனகன் கனன்று வினவினான்.

"எங்கேயென்று கேட்கின்றாயே அச் சொல்லிலும் இருக்கின்றான்; கல்லிலும் இருக்கின்றான்" என்று கூறினார் பிரகலாதர்.

அப் பொன் பூண் இட்ட கற்றூணை இரணியன் அறைந்தான். அதினின்றுந் திருமால் நரசிங்கமாகத் தோன்றி இரணியனை வதைத்தருளினார்.

> "சாலக் கனகன் தனி மைந்தனை முனிந்த
> காலத்தவனறைந்த கற்றூணிடை வந்தாய்." —வில்லிபாரதம்.

கனகன் = இரணியன் (கனகம் = இரணியம் = பொன்.)

அந்தத் தூண் சபாமண்டபத்தில் கூடத்தில் இருந்தது. பொன் மயமாக இருந்தது. ஆகவே, "கூடமுறை நீடு செம்பொன் மாமதலை" என்றார். மதலை—தூண்.

**நீலமயில் மீதுறைந்து சூரர்தமையே செயங்கொள் :—**

முருகப் பெருமான் சூரனுடன் போர் புரிந்தபோது இந்திரன் மயிலுருக் கொண்டு கந்தநாயகனைத் தாங்கினான். அதை இங்குக் குறிப்பிடுகின்றார்.

**பேறைநகர் :—**

பெறும்பேறு என்ற திருத்தலம்.

அகத்தியருக்குப் பெரிய பேற்றினைத் தந்த தலம். அதனால் பெறும்பேறு என்ற பேர் பெற்றது.

இத்தலம் செங்கற்பட்டு மாவட்டம், அச்சிறுபாக்கத்தை அடுத்த தொழுப்பேடு என்ற புகைவண்டி நிலையத்துக்கு அருகில் இருக்கின்றது. சிறிய மலைமீது அழகிய திருக்கோயில் விளங்குகின்றது. இங்கு ஆண்டுதோறும் அன்பர்கள் திருப்படி விழா புரிகின்றார்கள்.

### கருத்துரை

பேறைநகரில் வாழும் பெருமானே! மாதர் மயல் தீர்த்துக் காத்தருள்வீர்.

### மயிலம்

மயிலம் தென்னார்க்காடு மாவட்டம். புகைவண்டி நிலையம் உண்டு. புகைவண்டி நிலையத்திலிருந்து இரண்டு மைலில் மலையின்மீது கோயில் அமைந்துள்ளது. இங்கு முருகவேள் கண்கொள்ளாத காட்சியும் மாட்சியும் பெற்று விளங்குகின்றார்.

கள்ளிப்பாலையே பருகிக் கொண்டு ஆயிரம் ஆண்டுகள் யோக நிஷ்டையில் இருந்த பாலயோகியின் சமாதி இங்கு உண்டு.

அவருடைய வழிவழி வந்த சிவஞான பாலைய சுவாமிகள் மடாலயம் மிகவும் பெருமை வாய்ந்தது.

## 94

கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்
குயில்தங்கு மாமொழி யாலே நேரே
யிழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானா விதமாகி
உலைகொண்ட மாமெழு காயே மோகா
யலையம்பு ராசியி னூடே மூழ்கா
வுடல்பஞ்ச பாதக மாயா நோயா லழிவேனோ
உறுதண்ட மாசமொ டாரோ வாரா
எனையண்டி யேமம னார்தூ தாளோர்
உயிர்கொண்டு போய்விடு நாள்நீ மீதா ளருள்வாயே

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூ
ரணியஞ்ச ராசனம் வேறய் நீறு யிடவேதான்
அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீ
ரனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ரூபக ஏகா வேறோர் வடிவாகி
மலைகொண்ட வேடுவர் கானூ டேபோய்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண்டு லாயவள் தாள்மீ தேவீழ் குமரேசா
மதிமிஞ்சு போதக வேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே.

## பதவுரை

அலைகொண்ட வாரிதி=அலைவீசும் கடல், கோ கோ கோ கோ என=கோ கோ என்று ஒலித்து, நின்று வாய் விடவே=வாய்விட்டு நின்று ஓலமிட, நீள்மாசூர்=அதனுள் மாமரமாய் நின்ற சூரபன்மன், அணி அம் சராசனம் வேறய்=வைத்திருந்த வில் வேறுபட்டு விழ, நீறய் இடவேதான்=பொடியாகுமாறு, அவிர்கின்ற சோதிய=ஒளி விடுகின்ற ஒளியைக் கொண்டதும்,வார் ஆர்=நேர்மை நிறைந்ததும், நீள் சீர்=பெருமை நீண்டதும், அனல்=நெருப்பைக் கொப்பளிப்பது மான, அம் கை வேல்விடும் வீரா=அழகிய கரத்தில் இருப்பதுமான வேலைவிட்ட வீரரே! தீரா=தீரரே! அருமந்த ரூபக=அருமையான வடிவையுடையவரே! ஏகா=ஒப்பற்றவரே! வேறு ஓர் வடிவு ஆகி=வேற்று வடிவைக்கொண்டு, மலைகொண்ட வேடுவர் கானூடே போய்=மலையை இருப்பிடமாகக் கொண்ட வேடர்களின் காட்டில் சென்று, குறமங்கையாள் உடனே=வள்ளி பிராட்டியார்மீது, மால் ஆயே=அன்பு வைத்து, மயல் மொண்டு உலா=மோகங் கொண்டு உலாவி, அவள் தாள் மீதே வீழ்=அவளுடைய பாதத்தின்மீது வீழ்ந்து பணிந்த, குமர ஈசா=குமாரக் கடவுளே! மதி மிஞ்சு போதக =ஞானமிகுந்த ஞானசாரியரே! வேலா=வேலாயுதரே! ஆளா மகிழ் சம்பு தொழு பாதா=தொண்டனாக உபதேசத்தைப் பெற்று நின்று மகிழ்ந்த சிவ பெருமான் தொழுகின்ற திருவடியையுடைய வரே! நாதா=தலைவரே! மயிலம் தண் மாமலை வாழ்வே=மயிலம் என்ற குளிர்ந்த பெருமையான மலையில் வாழ்கின்றவரே! வானோர் =தேவர்கள் போற்றுகின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கொலைகொண்ட போர் விழி=கொலைத் தொழிலைக் கொண்ட

போருக்குரிய கண்கள், கோலோ=அம்போ, வாளோ=வாளாயுதமோ, விடம் மிஞ்சு பாதக=நஞ்சு நிறைந்து பாவத் தொழில் செய்யவல்ல, வேலோ=வேலோ, சேலோ=சேல் மீனோ, குழை கொண்டு உலாவிய=காதில் உள்ள தோட்டினைத் தொடும் அளவுக்கு உலாவிவரும், மீனோ=மீனோ, மானோ எனும்=மானோ என்று சொலத்தக்க, மானார்=பெண்களின், குயில்தங்கு மாமொழியாலே=குயிலின் குரல் போல் அமைந்த சிறந்த இனிய சொற்களாலே, நேரே இழைதங்கு நூல் இடையாலே=கண்ணெதிரே தோன்றும் நூலிழை போல் மெல்லிய இடையினாலே, மீது ஊர் குளிர் கொங்கை மேருவினாலே=மேலே பொருந்தியுள்ள தனம் என்ற மேரு மலையாலே, நானுவிதம் ஆகி=பலவகையாக நெஞ்சம் கலங்கி, உலை கொண்ட மாமெழுகு ஆயே=நெருப்பின் உலையிற்பட்ட நல்ல மெழுகு போல் உருகி, மோக ஆய் அலை அம்பு ராசியின் ஊடே மூழ்கா=காமம் என்னும் அலைவீசும் கடலினுள் முழுகி, உடல் பஞ்ச பாதக மாயா=உடல் ஐந்து பாதகத்துக்கும் ஈடாகி, நோயால் அழிவேனோ=நோயினால் அழிவேனோ? உறுதண்ட பாசமொடு=கையில் உள்ள தண்டாயுதம் பாசக் கயிறு இவைகளுடன், ஆரா வாரா=ஆரவாரஞ் செய்து, எனை அண்டியே=அடியேனை நெருங்கி வந்து, நமனார் தூது ஆனோர்=யமனுடைய தூதர்கள், உயிர் கொண்டு போய்விடும் நாள்=என்னுடைய உயிரைக் கொண்டுபோய்விடும் அந்த நாளில், நீ மீதாள்=உமதுமேன்மை பொருந்திய பாதமலரை, அருள்வாயே=தந்தருளுவீராக.

## பொழிப்புரை

அலைகளையுடைய கடல் கோ கோ என்று வாய்விட்டு ஒலிக்க, அக் கடலில் நீண்ட மாமரமாய் நின்ற சூரபன்மனுடைய அழகிய வில் வேறுபட்டுத் தூளாகுமாறு ஒளியும் நேர்மையும் பெருமையும் உடைய நெருப்பு போன்ற வேலைக் கையில் எடுத்து விடுத்த வீர மூர்த்தியே! தீரரே! அருமை வாய்ந்த வடிவினரே! ஒப்பற்றவரே! வடிவம் மாறி மலையிடத்து வாழ்கின்ற வேடர்களின் காட்டிற் சென்று, குறமாது மீது அன்பு கொண்டு, மையலால் அவள் காலின் மீது வீழ்ந்த குமாரக் கடவுளே! அறிவு நிறைந்த ஞானசாரியரே! வேலாயுதரே! தொண்டரைப்போல் மகிழ்ந்து சிவபெருமான் தொழுத பாதங்களையுடையவரே! தலைவரே! குளிர்ந்த மயிலம் என்ற பெருமை மிகுந்த மலையில் வாழுகின்றவரே! தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! கொலைத் தொழிலைச் செய்து போர் புரியும் கண்கள் அம்போ? வாளாயுதமோ? நஞ்சு நிறைந்து பாவத் தொழில் புரியும் வேலோ? சேல் மீனோ? காதில் உள்ள தோடு வரை சென்று உலவி வரும் மீனோ? மானோ? என்று சொலத்தக்க மாதர்களின், குயில் போன்ற

இனிய மொழிகளாலே, எதிரில் தோன்றும் நூல் போன்ற இடையினாலே, மேலே பொருந்தியுள்ள குளிர்ந்த தனமாகிய மேரு மலையாலே பலவிதமாக நெஞ்சங் கலங்கி, உலையிற்பட்ட மெழுகுபோல் உருகி, மோகக் கடலில் முழுகி, உடல் ஐம்பெரும் பாவங்கட்கும் ஈடாகி ஒழியாத நோயால் அழிவேனோ? தண்டாயுதமும் பாசக் கயிறும் எடுத்துக்கொண்டு ஆரவாரஞ் செய்து யமதூதர்கள் என்னை நெருங்கி வந்து உயிரைக் கொண்டு போகும் அந்த நாளில் தேவரீர் உமது மேலான திருவடியைத் தந்தருளும்.

## விரிவுரை

இத்திருப்புகழில் மாதர்களின் கண் முதலிய உறுப்புகளின் வர்ணனை நன்கு கூறப்பட்டது.

**கொலை கொண்ட போர்விழி கோலோ வாளோ :—**

பொது மகளிரது கண்கள் கலகஞ் செய்து கொலை செய்து கொள்ளும் அளவுக்குப் போர் செய்யவல்லது. கண்களுக்கு உவமையாக அம்பு, வாள், வேல், சேல், மான் முதலியவற்றைக் கூறுவர்.

**பஞ்சபாதகம் :—**

கொலை, பொய், களவு, கள், குருநிந்தை.

**உயிர் கொண்டுபோய் விடுநாள் நீ மீ தான் அருள்வாயே :—**

"இயம தூதர்கள் வந்து உயிரைக் கொண்டு போகும் அந் நாளில் முருகா! உமது பாதமலரைத் தந்தருள்" என்று அப் போதைக்கு இப்போது விண்ணப்பம் புரிகின்றார்.

**அவிர்கின்ற சோதிய...வேல் :—**

எம்பிரான் திருக்கரத்தில் விளங்கும் வேலாயுதம் நூறு கோடி சூரிய ஒளியை யுடையது.

'உலாவுதயபாநு சதகோடி யுருவானவொ ளிவாகு மயில்வேல்"

—(அவாமருவி) திருப்புகழ்.

**அருமந்த ரூபக :—**

முருகன் என்றாலே அழகன் என்று பொருள். முருகன் திருவுருவின் அழகு எழுதரிய வடிவு. நேரே பார்த்த சூரபன்மன் கூறுகின்றான்.

ஆயிர கோடிகாமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடில் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

—கந்தபுராணம்.

முருகனுடைய திருவடியின் ஒரு மூலையில் உள்ள அழகுக்கு ஆயிரங் கோடி மன்மதர்களின் அழகு இணையாகாது.

**வேறோர் வடிவாகி :—**

முருகன் தன் சுய வடிவை மாற்றி, வேட வடிவாகச் சென்றார் வள்ளியிடம்.

பக்குவப்படாத ஆன்மாக்கட்கு இறைவன் தன் சொரூபத்தைக் காட்டாது மானுடச் சட்டை தாங்கியே அருள் புரிவான் என்ற உண்மையை இது உணர்த்துகின்றது.

**அவள் தாள்மீதே வீழ் குமரேசா :—**

வள்ளியின் பாதத்தில் பணிந்தார் என்பது அவருடைய அளப்பற்ற பெருங் கருணையைக் குறிக்கின்றது.

**மதிமிஞ்சு போதக :—**

ஞானமே வடிவாய ஆசிரியர் முருகர். அவரைக் குருவாகக் கொண்டாலன்றி மெய்ஞ்ஞானத்தைப் பெற முடியாது.

"முருகன்தனிவேல் முனி நம்குருவென்
றருள்கொண்டறியார் அறியுந் தரமோ ?" —கந்தரநுபூதி.

## கருத்துரை

மயிலம் மேவிய வரதனே ! மாதர் மயக்கில் சிக்கி மடியுமுன் உன் மலர்ப்பாதந் தந்தருள்வீர்.

## திரிசிராப்பள்ளி

திரிசிரன் என்ற அசுரன் வழிபட்டது. இரத்தினவதியென்ற செட்டிப் பெண்ணின் அன்புக்காக இறைவர் தாயாக வந்து மருத்துவஞ் செய்தருளினார். ஆதலால் அங்குள்ள சுவாமிக்குத் தாயுமான தயாபரன் என்ற பெயர் ஏற்பட்டது. சைவ எல்லப்ப நாவலர் பாடிய செவ்வந்திப் புராணமும் மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய உறையூர்ப் புராணமும் இத்தலத்தின் பெருமையை விளக்குவன. சம்பந்தர், அப்பர் தேவாரம் பெற்ற திருத்தலம்.

## 95

அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய
கொங்கை காட்டிம றைத்துச் சீரிய
அன்பு போற்பொய்ந டித்துக் காசள வுறவாடி
அம்புதோற்றகண் ணிட்டுத் தோதக
இன்ப சாஸ்த்ரமு ரைத்துக் கோகிலம்
அன்றில் போற்குர லிட்டுக் கூரிய நகரேகை

பங்க மாக்கிய லைத்துத் தாடனை
கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்
பண்பில் வாய்க்கம யக்கிக் கூடுத வியல்பாகப்
பண்டி ராப்பகல் சுற்றுச் சூளைகள்
தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி
பங்கர் போற்றிய பத்மத் தாள்தொழ அருள்வாயே
எங்கு மாய்க்குறை வற்றுச் சேதன
அங்க மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்
இன்ப மாய்ப்புகழ் முப்பத் தாறினின் முடிவேறாய்
இந்த்ர கோட்டிம யக்கத் தான்மிக
மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத
மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல வயலூரா
செங்கை வேற்கொடு துட்டச் சூரனை
வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்
தின்று கூத்துந டிக்கத் தோகையில் வரும்வீரா
செம்பொ னாற்றிகழ் சித்ரக் கோபுர
மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு
தென்சி ராப்பளி வெற்பிற் றேவர்கள் பெருமாளே.

## பதவுரை

எங்குமாய்=எங்கும் நிறைந்தவராய், குறைவு அற்று=குறை விலாதவராய்,சேதன அங்கமாய்=அறிவே அங்கமானவராய், சுத்தத் தோர் பெறும் இன்பமாய்=தூய அன்பர்கள் பெற்று மகிழும் இன்பப் பொருளாய், புகழ் முப்பத்தாறினின் முடிவுவேறாய்=புகழ் பெற்ற முப்பத்தாறு தத்துவங்களின் முடிவுக்கும் வேறானவராய், இந்த்ர கோட்டி மயக்கத்தால்=இந்திராதி கூட்டத்துத் தேவர்கள் கலந்து ஒன்று கூடி, மிக மந்த்ர மூர்த்தம் எடுத்து=சிறந்த மந்திரரூப பூசனை செய்து, தாமதம் இன்றி வாழ்த்திய= தாமதமில்லாமல் வாழ்த்திய, சொர்க்க காவல=தேவலோக காவலரே! வயலூரா=வயலூரில் வாழ்பவரே! செம்கை வேல் கொடு=சிவந்தகரத்தில் உள்ள வேலா யுதத்தைக் கொண்டு, துட்ட சூரனை வென்று=கொடியவனான சூரபன் மாவை வென்று,தோல்பறை கொட்ட=தோலினால் செய்த பறைகள் ஒலிக்க, கூளிகள் தின்று கூத்து நடிக்க=பேய்கள் பிணங்களையுண்டு கூத்தாடி மகிழ, தோகையில் வரும் வீரா=மயிலின் மீது வந்த வீர மூர்த்தியே! செம்பொன்னால் திகழ்=செம்பொன்னால் விளங்கும்,சித்ர கோபுர=அழகிய கோபுரத்தின்மீது, மஞ்சு இராபகல் மெத்த சூழ்

தரு = மேகங்கள் இரவும் பகலும் மிகுதியாகச் சூழ்ந்துள்ள, தென் சிராப்பள்ளி வெற்பில் = அழகிய திரிசிராப்பள்ளி மலையில் எழுந்தருளியிருக்கும், தேவர்கள் = தேவர்கள் போற்றும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! அம் கை நீட்டி அழைத்து = அழகிய கையை நீட்டி அழைத்தும், பாரிய கொங்கை காட்டி மறைத்து = பருத்த தனங்களைக் காட்டி மறைத்தும், சீரிய அன்புபோல் பொய் நடித்து = சிறந்த அன்புடையவர்களைப் போல் பொய்யாக நடித்தும், காசு அளவு உறவு ஆடி = கொடுக்கின்ற காசுக்கு ஏற்ப உறவு செய்து, அம்பு தோற்ற கண் இட்டு = அம்பும் தோற்கும்படியான அத்துணை கூர்மையுடைய கண்ணால் மயக்கியும், தோதக இன்ப சாஸ்த்ரம் உரைத்து = வஞ்சகம் நிறைந்த காம இன்ப நூல்களை எடுத்துப் பேசியும், குயில் அன்றில் போல குரல் இட்டு = குயில் அன்றில் என்ற பறவைகளைப் போல் குரலைக் காட்டியும், கூரிய நகரேகை = கூர்மையான நகத்தால் குறியிட்டு, பங்கம் ஆக்கி அலைந்து = விகாரப்படுத்தி உழலச் செய்து, தாடனை கொண்டு = காம நூல் முறையில் தட்டுதல் செய்து, வேட்கை எழுப்பி = காம ஆசையை எழுப்பி, காமுகர் பண்பில் வாய்க்க மயக்கி = காமங் கொண்டவர் தமது வசப்படும்படி ஆக்கி மயக்கி, கூடுதல் இயல்பு ஆக = தம்முடன் கூடுதலையே ஒழுக்கமாகும்படிச் செய்து, பண்டு இரா பகல் சுற்று = முதலிலிருந்தே இரவும் பகலும் சுற்றியலைக்கும், சூளைகள் தங்கள் மேல் ப்ரமை விட்டு = வேசைகளின் மேல் உள்ள மயக்கத்தை ஒழித்து, பார்வதி பங்கர் போற்றிய = பார்வதி பாகராம் சிவபெருமான் போற்றித் துதித்த, பத்ம தாள் தொழ = உமது தாமரைத் தாளைத் தொழும் பேற்றினை, அருள்வாயே = தந்தருளுவீராக.

## பொழிப்புரை

எங்கும் நிறைந்தவராய், குறைவில்லாதவராய், அறிவே அங்கமானவராய், தூய அன்பர்கள் பெற்று மகிழும் இன்பப் பொருளாய், புகழ் பெற்ற முப்பத்தாறு தத்துவங்களின் முடிவுக்கும் அப்பாற்பட்டவராய், இந்திராதி தேவர்கள் கலந்து ஒன்றுகூடிச் சிறந்த மந்த்ர ரூப பூசனை செய்து, தாமதிக்காமல் வாழ்த்திய தேவலோகக் காவலனே! வயலூர் அரசே! திருக்கையில் உள்ள வேலாயுதத்தைக் கொண்டு, கொடிய சூரபன்மனை வென்று, தோலினால் செய்த பறையை ஒலித்து, பேய்கள் அசுரரின் தசைகளைத் தின்று கூத்தாட, மயிலின் மீது வரும் வீரரே! செம் பொன்னால் விளங்குகின்ற அழகிய கோபுரத்தில் மேகங்கள் இரவு பகலாக மிகவும் தவழ்கின்ற, அழகிய திரிசிராப்பள்ளி மலையில் எழுந்தருளியுள்ள, தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! அழகிய கையை நீட்டி அழைத்தும், பருத்த தனங்களைக் காட்டி மறைத்தும், சிறந்த அன்புபோல் பொய்யாக நடித்தும், தருகின்ற பணத்துக்கு

ஏற்ப உறவு செய்தும், கணை தோற்கும் கூரிய கண்களால் மயக்கியும், வஞ்சகமுடைய இன்ப சாஸ்திரங்களைப் பேசியும், குயில் அன்றில் போல குரல்களைக் காட்டியும், கூர்மையான நகங்களினால் அடையாளஞ் செய்தும், விகாரப்படுத்தி அலைத்தும், காம நூலின்படி தட்டுதல் செய்தும், ஆசையையெழுப்பியும், காமங் கொண்டவரை தமது வசமாகும்படி மயக்கித் தம்முடன் கூடுதலையே இயல்பாகும்படி, முதலிலிருந்தே இரவும் பகலும் சுற்றியலைக்கும் வேசைகளின் மேல் உள்ள மயக்கத்தை ஒழித்துப் பார்வதியின் பாகராகிய சிவபிரான் போற்றித் துதி செய்த உமது பாத தாமரையைத் தொழும்படியான பாக்கியத்தை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**அங்கை நீட்டியழைத்து :—**

பொது மாதர்கள் நடுத் தெருவில் நின்று, அவ்வழி போகின்ற, தனம் படைத்த இளைஞர்களைக் கண்காட்டி கை நீட்டி என் வீட்டுக்கு வாருங்கள் என்று அழைப்பார்கள்.

**காசளவுறுவாடி :—**

ஆடவர்கள் தரும் பொருளின் அளவுக்கு ஏற்ப அவருடன் உறவு செய்வார்கள்.

**இன்ப சாஸ்த்ரம் :—**

காம நூலில் உள்ள இரகசியங்களை அம்மாதர்கள் வாய் விட்டுப் பேசுவார்கள்.

"புல்லுதல் சுவைத்திடல் புணர்நகக்குறி
பல்லுறல் மத்தனம் பயிலுந் தாடனம்
ஒல்லொலி கரணமோ டுவகையாகிய
எல்லையில் புணர்நிலைக் கியைந்த என்பவே"

—கந்தபுராணம் (இந்திரபுரிப் படலம்)

**பத்மத்தாள் தொழ அருள்வாயே :—**

மாதர்களின் மயக்கத்தைத் தொலைத்து முருகவேளின் திருவடிகளைத் தொழுதல் வேண்டும்.

**எங்குமாய் :—**

இறைவன் யாண்டும் நீக்கமற நிறைந்தவன்.

"நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமலமூர்த்தி"

—கந்தபுராணம்.

ஒரு மன்னவனைச் சூழ்ந்து பல புலவர்கள் இருந்தார்கள். ஒரு புதிய புலவன் ஒரு மாங்கனி தந்து அரசனை வணங்கினான். கனியை யேந்திய காவலன் "புலவீர்காள்! கடவுள்

இருக்குமிடத்தைக் காட்டுபவர்க்கு இக்கனியைத் தருவேன்'' என்றான்.

புலவர்கள் கயிலையில் இருக்கின்றார்; திருப்பாற்கடலில் இருக்கின்றார்; சூரிய மண்டலத்தில் இருக்கின்றார்; வேத முடிவில் இருக்கின்றார் என்றெல்லாம் கூறினார்கள்.

ஒரு சிறு பெண் எழுந்து, "மன்னவரே! இறைவன் இருக்குமிடத்தைக் காட்டுபவர்க்கு ஒரு கனி தருவதாகக் கூறினீரே! நீர் இறைவன் இல்லாத இடத்தைக் காட்டும்; உமக்குப் பன்னிரண்டு பழங்கள் தருகின்றேன்'' என்றாள். எல்லோரும் நாணினார்கள் சிறுமியின் செவ்விய மதி நலத்தைக் கண்டு துதி செய்தார்கள்.

**குறைவற்று :—**

இறைவன் ஒருவனே குறைவிலா நிறைவு உள்ளவன். எத்துணைப் பெருஞ் ' ப்புடையவர்கள்பாலும் ஏதாவது ஒரு குறையிருக்கும்.

**சேதன அங்கமாய் :—**

சேதனம்—ஞானம். முருகவேள் அறிவையே வடிவாக உடையவர்

"ஞானந்தான் உருவாகிய நாயகன் இயல்பை
நானும் நீயுமாய் இசைத்தும் என்றால் அஃது எளிதோ?''

—கந்தபுராணம்.

"அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவுதிரு மேனியென் றுணர்ந்துன்
அருணசர ணரவிந்த மென்று அடைவேனோ''

—(குகையில் நவ) திருப்புகழ்.

**பரிசுத்தத்தோர் பெறும் இன்பமாய் :—**

தூய அன்பர்கள் பெறுகின்ற பேரின்பம் முருகன்.

"துரியநிலையேகண்ட முத்தரித யாகமல
மதனில்வினை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபதமே'' —(சுருதிமுடி) திருப்புகழ்.

**முப்பத்தாறினின் முடிவேறாய் :—**

(தத்துவங்களின் விவரத்தை 188-ஆம் பக்கம் பார்க்கவும்) முப்பத்தாறு தத்துவங்களுங் கடந்தவன் இறைவன்.

"ஆறுறுமீதில் ஞானோபதேசம் அருள்வாயே''

—(மாலாசை) திருப்புகழ்.

**இந்த்ரகோட்டி மயக்கத்தான் மிக மந்த்ர ரூபமெடுத்துத் தாமதமின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல :—**

கோட்டி—கூட்டம். வடமொழியில் கோஷ்டி யென்பர். முருகனை, இந்திரன் முதலிய தேவ கூட்டங்கள் அன்பின்

மிகுதியால் மயக்கத்துடன், மந்திர ரூபமான வடிவை அமைத்து, சிறிதும் கால விளம்பம் இன்றிப் போற்றிப் புகழ்கின்றார்கள். முருகன் சொர்க்கத்துக்குப் பாதுகாவலர்.

"எந்தைபாங்கரின் ஈண்டி அவன்பெயர்
மந்திரங்கொடு மஞ்சனம் ஆட்டினார்" —கந்தபுராணம்

**செம்பொனாற்றிகழ் சித்திர கோபுர :—**

செம்பொன் மயமான அழகிய கோபுரத்துடன் கூடிய திருத்தலம் திருச்சிராப்பள்ளி.

## பதவுரை

திரிசிராப்பள்ளி மேவிய திருமுருகா ! உமது பாத தாமரையைத் தந்தருள்வீர்.

## 96

அந்தோமன மேநம தாக்கையை
நம்பாதெயி தாகித சூத்திர
மம்போருக முடிய பூட்டிது இனிமேல்நாம்

அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ னார்க்கிய
லங்காகுவம் வாஇனி தாக்கையை ஒழியாமல்

வந்தோமிது வேகதி யாட்சியு
மிந்தாமயில் வாகனர் சீட்டிது
வந்தாளுவம் நாமென வீக்கிய சிவநீறும்

வந்தேவெகு வாநமை யாட்கொளு
வந்தார்மத மேதினி மேற்கொள
மைந்தாகும ராவெனு மார்ப்புய மறவாதே

திந்தோதிமி தீதத மாத்துடி
தந்தாதன னாதன தாத்தன
செம்பூரிகை பேரிகை யார்த்தெழ மறையோதச்

செங்காடென வேவரு மூர்க்கரை
சங்காரசி காமணி வேற்கொடு
திண்டாடிம காமயில் மேற்கொளு முருகோனே

இந்தோடிதழ் நாகம காக்கடல்
கங்காளமி ஞர்சடை சூட்டிய னருள்பாலா
என்தாதைச் தாசிவ கோத்திர

எண்கூடரு ஞால்மௌவி நோக்கியை
நன்பூமண மேவிசி ராப்பளி
யென்பார்மன மேதினி நோக்கிய பெருமாளே.

## பதவுரை

அந்தோ மனமே=ஐயோ! மனமே!, நமது ஆக்கையை நம் பாதே=நாம் வாழ்கின்ற இவ்வுடம்பு நெடுநாளைக்கு நிற்குமென்று நம்பி மோசம் போகாதே,இத அகித சூத்திரம்=இன்பமும் துன்பமும் நிறைந்த ஒரு எந்திரமாகும், இது அம்போருகன் ஆடிய பூட்டு=இவ் வுடம்பு பிரமதேவனால் செய்யப்பட்டது, இனிமேல் நாம்=சென்றது சென்றாலும் இனிமேலாவது நாம், அஞ்சாது அமையா=உடல் விரை வில் அழியுமே என்று பயப்படாமல் இருக்க முடியாது, கிரி யாக் கையைப் பஞ்சு ஆடிய=கிரௌஞ்ச மலையின் வடிவத்தைத் தூள்படுத் திய, வேலவனுர்க்கு இயல் அங்கு ஆகுவம் வா=வேலாயுதக் கடவு ளுக்கு நீங்காத அன்புடையோமாகுவம் அங்கு நீ என்னுடன் வரு வாய், இனிது=இதுதான் இன்ப நெறியாகும்,ஆக்கையை ஒழியாமல் வந்தோம்=உடம்பை ஒழியாமல் எடுத்துக்கொண்டே வந்தோம், இதுவே கதி ஆட்சியும் இந்தா=முருகவேளுக்கு ஆட்பட்டு அன்பு செய்யும் இம் மெய்ந்நெறியே மோட்சம் ஆன்றோர் வழக்குமாம் ஆதலால் இதனைப் பெற்றுக்கொள், இது மயில்வாகனர் நாம் வந்து ஆளுவம் என வீக்கிய சீட்டு இந்தா=இது மயிலேறும் பெருமான் "நாம் வந்தருளி உன்னை யாட்கோள்வோம்" என்று வேகமுறச் செலுத்தித்தந்த சீட்டு;இதனைப் பெற்றுக்கொள், சிவநீறும் இந்தா= மங்கலத்தை நல்கும் திருநீற்றையும் பெற்றுக்கொள், வந்தே வெகுவா நமை யாட்கொள=முருகன் அநேகமாக வலிதில் வந்தே நம்மை யாட்கொள்வதற்கு, உவந்தார்=மகிழ்ந்திருக்கின்றார், மதம் மேதினி மேற்கொள=இந்த மெய்க் கொள்கையை உலகம் மேற் கொள்ளும் பொருட்டும், உய=நீ உய்யும் பொருட்டும், மைந்தா= வலிமையுள்ளவரே! குமரா=குமாரக்கடவுளே! மா துடி=பெரிய உடுக்கையும், செம் பூரிகை=செம்மை பொருந்திய பூரி என்னும் வாத்தியமும், பேரிகை=பேரிகையும்,திந்தோதிமி தீதத தந்தாதனனு தன தாத்தன=திந்தோதிமி தீதத தந்தாதனனுதன தாத்தன என்ற தாளபேதங்களுடன், ஆர்த்து எழ=ஆரவாரித்து எழவும், மறை ஓத=வேதங்களை ஓதவும், செம் காடு எனவே வரும் மூர்க்கரை= சிவந்த காட்டைப்போல் எதிர்த்து வந்த இராக்கதர்களை, சங்கார

சிகாமணி வேல்கொடு=சங்காரஞ் செய்வதில் முதன்மை பெற்றதாகிய வேலாயுதத்தைக் கொண்டு, செண்டு ஆடி=அவர்களது தலைகளைச் செண்டுபோல் ஆடி, மகா மயில் மேல்கொளு=பெரிய மயில் வாகனத்தின்மீது எழுந்தருளிய, முருகோனே=முருகப் பெருமானே! இந்து=சந்திரனையும், ஓடு=ஆமையின் ஓட்டையும், இதழ்=பூவிதழ்களையும், நாகம்=பாம்புகளையும், மகா கடல்=பெரிய கடல் போலப் பெருகிவந்த கங்கையையும், கங்காளம்=பிரம விட்டுணுக்களுடைய எலும்புக் கூட்டையும், மின் ஆர் சடை சூட்டிய=ஒளி நிறைந்த சடை முடியிலும் (திருமேனியிலும்) அணிந்துகொண்டுள்ள, என் தாதை=அடியேனுடைய பிதாவும், சதாசிவ கோத்திரன்=சதாசிவ கோத்திரத்திற்குத் தலைவருமாகிய சிவபெருமான், அருள் பாலா= பெற்றருளிய புதல்வரே! எண் கூடு அருளால்=அளவிடற்கரிய திருவருளால், நௌவி நோக்கியை=மான் போன்ற பார்வையுடைய வள்ளிநாயகியாரை, நன் பூ மணம் மேவி=நலம்பொருந்திய அழகுடன் திருமணம் செய்துகொண்டு அப்பிராட்டியாருடன், சிராப்பளி என்பார்=திரிசிராப்பள்ளி என்னுந் திருத்தலத்தின் பேரைமாத்திரம் கூறும் பேறு பெற்றவர்களுடைய, மன மேதினி நோக்கிய= உள்ளமாகிய பூமியில் எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! என்னும் ஆர்ப்பு=என்று பெரிய ஒலியுடன் துதிக்கும் படியான தன்மையை, மறவாதே=மனமே! நீ ஒருபொழுதும் மறந்துவிடாதே.

## பொழிப்புரை

ஐயோ! மனமே! நிலையில்லாத இவ்வுடலை நிலைத்திருக்குமென்று நம்பி மோசம் போகாதே; இன்பமுந் துன்பமும் நிறைந்த எந்திரம் இவ்வுடம்பு. இது பிரமதேவனால் செய்யப் பெற்றது; அறிவு தெளிந்த பிறகு நாம் இவ்வுடம்பு அழியாது என்று எண்ணி அமைதியுடன் இருப்பது தகாது. கிரௌஞ்ச மலையைப் பஞ்சு பஞ்சாகப் பொடித்தெறிந்த வேலாயுதக் கடவுளுக்கு இடைவிடாத அன்பு செய்து அவர் திருவடியில் அடிமைப் படுவோம்; ஆதலால் அங்கு நீ என்னுடன் வருவாயாக; அப்படி அன்பு செய்யாமையால் ஒழியாமல் மாறி மாறி பலப்பல பிறப்புக்களை எடுத்துக்கொண்டே வந்தோம்; இனியும் பிறவாதிருக்கும் பொருட்டு முருகக் கடவுளிடத்தில் அன்பு செய்யும் இம் மெய் நெறியே மோக்ஷமும் ஆன்றோர் நெறியுமாகும். ஆதலால் இவ்வன்பு நெறியைப் பெற்றுக் கொள்வாயாக; "நாம் வந்து ஆட்கொள்வோம்" என்று அருட் செலுத்தி மயில் வாகனர் எழுதிக் கொடுத்த கைச்சீட்டாகிய இதனை நீ பெற்றுக்கொள்; மங்கலந் தரும் திருநீற்றையும் பெற்றுக்கொள்; அநேகமாக அப் பரமபதி வலிதில் வந்து நம்மை யாட்கொள்ளும் பொருட்டு உவந்திருக்கின்றனர்.

இவ்வன்பு நெறியை உலகம் மேற்கொள்ளும் பொருட்டும் நீ உய்யும் பொருட்டும், "வலிமையுள்ளவரே! குமாரக் கடவுளே! பெரிய உடுக்கையும், பூரிகையும், பேரிகையும், திந்தோ திமி தீதத தந்தாதன, ஞதன தாத் தன என்ற தாள பேதங்களுடன் ஒலித்து எழவும், வேதங்களை ஓதவும் சிவந்த காட்டைப்போல் பெருகிவந்த அவுணர்களைச் சர்வ சங்காரஞ் செய்வதில் சிகாமணியாகிய வேலாயுதத்தைக் கொண்டு அவ்வவுணர்களது தலைகளைச் செண்டுபோல் ஆடி அழித்து பெரிய மயில் வாகனத்தின் மீது எழுந்தருளிய முருகக் கடவுளே! சந்திரனையும் ஆமை ஓட்டையும் சர்ப்பத்தையும் பெருங் கடல்போலப் பெருகி வந்த கங்கா நதியையும் பிரம விட்டுணுக்களின் முழு எலும்புக் கூட்டையும் ஒளிபெற்ற சடையிலும் திருமேனியிலும் தரித்துக் கொண்டிருப்பவரும், அடியேனுடைய தந்தையாரும், சதாசிவ கோத்திரத்திற்குத் தலைவருமாகிய சிவமூர்த்தியின் திருக்குமாரரே! அளவிடற்கரிய திருவருளால் மான்போன்ற திருப்பார்வையையுடைய வள்ளி நாயகியாரை நலமிகுந்த அழகுடன் திருமணஞ் செய்து கொண்டு திரிசிராப்பள்ளி என்ற திருத்தலத்தின் பேரை மாத்திரம் சொல்லும் பேறு பெற்றவர்களாயினும் அவர்கள் உள்ளமாகிய பூமியில் எழுந்தருளியுள்ள பெருமானே!" என்னும் பெரிய ஆர்ப்புடன் துதித்தலை மனமே! நீ ஒருபோதும் மறந்து விடாதே.

## விரிவுரை

**அந்தோ மனமே :—**

காடுங்கரையும் கால்விட்டோடும் மனக்குரங்கை தான் செய்யும் நல்லுபதேசத்தைக் கேட்கச் செய்ய ஒருமுகப்படுத்தும் பொருட்டு, "அந்தோ" என்றனர். பலர் பல விஷயங்களைப் பேசிக்கொண்டிருக்குமிடத்தில் ஒருவன் 'ஐயோ' என்று அலறினால் எல்லோரும் தங்கள் பேச்சை நிறுத்திவிட்டு ஐயோ என்று கதறினவனை நோக்குவரல்லவா? மனதை ஒருமுகப்படுத்துதற்கு அருணகிரியார் இந்த உபாயத்தைக் கையாளுகின்றனர்.

**சமதாக்கையை நம்பாதே :—**

ஆக்கப்பட்டதனால் உடலுக்கு ஆக்கை என்ற பேருண்டாயிற்று. யாக்கை நிலையற்றது.

நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. —திருப்புகழ்.

"இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே"

"நீர்க்குமிழிக்கு நிகரென்பர் யாக்கை" —தாயுமானுர்.

இவை முதலிய ஆன்ரேர் அமுத வாக்குகளை உற்று நோக்குக. மணப்பறையே பிணப்பறையாவதும், மணமகனே பிணமகனுவதும் கண்கூடு.

**இயல் அங்காகுவம் வா:—**

சுவாமிகள் பல வழியிலும் சென்று சென்று அலைந்தலைந்து கறங்குபோல் பயனின்றித் திரியும் மனதை முருகனிடம் அழைக்கின்றனர். "நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீ வா நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்கு" என்று அப்ப மூர்த்திகள் நெஞ்சை யழைக்குந் திறனையும் இதனோடு ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்க.

**இந்தா மயில்வாகனர் சீட்டிது :—**

புகைவண்டியில் ஏறுபவனும், நாடகத்திற்குச் செல்பவனும் நுழைவுச்சீட்டு எடுத்தாலன்றி அநுமதிக்கப்பட மாட்டார்கள். ஆதலினுல் கந்தவுலகிற்குச் செல்லும் "மயில்வாகனர் சீட்டு" ஒன்று உளது. அதனைப் "பெற்றுக்கொள்" என்கின்ற உலகியல் உன்னுந்தோறும் உவகை வெள்ளம் கரைபுரண்டு ஓடுகின்றது.

**மைந்தா குமரா வெனுமார்ப்புய மறவாதே :—**

ஒருவன் உய்ய வேண்டுமானுல் முருகா! மூவர் முதல்வா! குமரா! குன்றெறி வேலா! மயிலா! சிவமைந்தா! என்று எக்காலமும் ஓங்கி உரைத்துக்கொண்டே இருக்க வேண்டும்.

"விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறேன் நயந்துருகேன்"
—மணிவாசகம்.

**சிராப்பள்ளி என்பார் மனமேதினி நோக்கிய பெருமாளே :—**

"திருச்சிராப்பள்ளி," "திருச்சிராப்பள்ளி" என்று எப்போதும் சொல்பவர்கள் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு, வடிவேற் பெருமான் வள்ளியம்மையாருடன் எழுந்தருளுவர்.

அரிச்சிராப்பகல் ஐவரா லாட்டுண்டு
சுரிச்சிராது நெஞ்சேயொன்று சொல்லக்கேள்
திரிச்சிராப்பள்ளி யென்னலுந் தீவினை
நரிச்சிராது நடக்கும் நடக்குமே. —அப்பர்.

## கருத்துரை

ஓ மனமே! நமது உடல் நிலையற்றது. அநேக பிறப்பெடுத்த நாம் இனி பிறவாநெறி பெறவேண்டும். முருகன் கைச்சீட்டும் திருநீறும் இந்தா! "அசுரகுலகாலா! சிவமைந்தா! சிராமலைச் செல்வா! குமரா" என்னும் ஆர்ப்புடன் கூறி உய்வாய்.

## 97

அரிவையர் நெஞ்சுரு காப்புணர்
தருவிர கங்களி ஞுற்பெரி
தவசம்வி ளேந்துவி டாய்த்தடர் முலைமேல்வீழ்ந்
தகிலொடு சந்தன சேற்றினில்
முழுகியெ ழுந்தெதிர் கூப்புகை
யடியின கம்பிறை போற்பட விளையாடிப்

பரிமளம் விஞ்சிய பூக்குழல்
சரியம ருங்குடை போய்ச்சில
பறவைக ளின்குர லாய்க்கயல் விழிசோரப்
பனிமுக முங்குறு வேர்ப்பெழ
இதழமு துண்டிர வாய்ப்பகல்
பகடியி டும்படி தூர்த்தனை விடலாமோ

சரியையு டன்க்ரியை போற்றிய
பரமப தம்பெறு வார்க்கருள்
தருகணன் ரங்கபு ரோச்சிதன் மருகோனே
சயிலமெ றிந்தகை வேற்கொடு
மயிலினில் வந்தெனை யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய குருநாதா

திரிபுவ னந்தொழு பார்த்திபன்
மருவிய மண்டப கோட்டிகள்
தெருவில்வி ளங்குசி ராப்பளி மலைமீதே
தெரியஇ ருந்தப ராக்ரம
உருவளர் குன்றுடை யார்க்கொரு
திலதமெ னும்படி தோற்றிய பெருமாளே.

### பதவுரை

சரியை உடன்=சரியை மார்க்கத்தையும், க்ரியை போற்றிய= கிரியை மார்க்கத்தையும் மேற்கொண்டு, பரம பதம் பெறுவார்க்கு அருள் தரு=மேலான பதத்தைப் பெற விரும்புவார்க்கு அருளைத் தருகின்ற, கணன்=கண்களையுடையவரும், ரங்கபுர உசிதன்=ஸ்ரீரங் கத்தில் பள்ளி கொண்டுள்ள மேலானவரும் ஆகிய திருமாலின், மருகோனே=மருகரே! சயிலம் எறிந்த கை வேல் கொடு=கிரவுஞ்ச

மலையைப் பொடிபடச் செலுத்திய கைவேலை ஏந்திக் கொண்டு,மயிலி னில் வந்து=மயிலின் மீது எழுந்தருளி வந்து, எனை ஆட் கொளல்= அடியேனை ஆட்கொண்ட திருவருளை, சகம் அறியும்படி காட்டிய= உலகம் உணரும்படி காட்டியருளிய, குருநாத=குருமூர்த்தியே! திரி புவனம் தொழு பார்த்திபன்=மூன்று புவனங்களும் வணங்கி நின்ற மன்னவன், மருவிய மண்டப கோட்டிகள்=புதுக்கிய மண்டபக் கூட் டங்கள், தெருவில் விளங்கு=வீதிகளில் விளங்குகின்ற, சிராப்பள்ளி மலை மீதே=திருச்சிராப்பள்ளி மலைமீது, தெரிய இருந்த பராக்ரம= யாவருக்கும் தெரியுமாறு வீற்றிருக்கும் வீரமூர்த்தியே! உருவளர் குன்று உடையார்க்கு=அழகிய வுருவுடன் விளங்கும் குன்றுடையவ ராகிய தாயான தயாபரர்க்கு, ஒரு திலதம் எனும்படி தோற்றிய= ஒரு நெற்றிப் பொட்டு போல் தோன்றிய, பெருமாளே=பெருமை யின் மிகுந்தவரே! அரிவையர். நெஞ்சு உருகா=மாதர்களின் மீது உள்ளம் உருகி, புணர்தரு விரகங்களினுல்=சேரவேண்டும் என்று விரக நோயினுல், பெரிது அவசம் விளைந்து=மிகவும் மூர்ச்சையாகி, விடாய்த்து=ஆசை விடாய் கொண்டு, அடர் முலைமேல் வீழ்ந்து= நெருங்கியுள்ள தனங்களின் மீது வீழ்ந்து, அகிலொடு சந்தன சேற் றில் முழுகி எழுந்து=அகில் சந்தனம் இவைகளின் சேற்றினில் மூழ்கி எழுந்தும், கூப்பு கை அடியில்=குவிந்துள்ள கையடியில் உள்ள, நகம் பிறை போல்பட=நகம் பிறைபோல் படும்படி, விளையாடி=விளையா டல் செய்து, பரிமளம் விஞ்சிய=வாசனை மிகுந்த, பூ குழல் சரிய= மலர் நிறைந்த கூந்தல் சரிய, மருங்கு உடை போய்=இடையில் இருந்த ஆடை விலக, சில பறவைகளின் குரலாய்=சில பட்சிகளின் ஒலிகள் எழ, கயல் விழிசோர=மீன் போன்ற கண்கள் சோர்வடைய, பனிமுகமும் குறு வேர்ப்பு எழ=குளிர்ந்த முகத்தில் குறு வெயர்வு உண்டாக, இதழ் அமுது உண்டு=வாயிதழைப் பருகி, இரவாய் பகல்=இரவும் பகலும் ஒன்று போலக் கழித்து,பகடி இடும்படி தூர்த் தனை=கலவிக் கூத்தாடுகின்ற கொடியவனை, விடலாமோ=கைவிட லாமோ?

## பொழிப்புரை

சரியை மார்க்கத்தையும் கிரியை மார்க்கத்தையும் அநுட் டித்து மேலான பதத்தைப் பெற விரும்பும் அன்பர்கட்கு அருளைத் தருகின்ற ஸ்ரீரங்கத்தில் உறைகின்ற சிறந்த திரு மாலின் திருமருகரே! கிரவுஞ்ச மலை பொடியாகச் செலுத்திய வேலை ஏந்திக்கொண்டு மயிலின் மீது வந்து அடியேனை ஆட் கொண்ட கருணைத் திறத்தை உலகம் உணரும்படி காட்டிய குருநாதா! மூன்று உலகங்களும் வணங்குகின்ற மன்னவன் புதுக்கிய மண்டபக் கூட்டங்கள் தெருவிலே காட்சியளிக்கும் திரிசிராப்பள்ளி மலைமீது, உலகமறிய எழுந்தருளியிருக்கும் வீரமூர்த்தியே! அழகிய குன்றுடையவராம் சிவபெருமானுக்கு

ஒரு திலகம்போல் தோன்றிய பெருமிதமுடையவரே! மாதர்களின் மீது உள்ளம் உருகி, அவர்களைச் சேரவேண்டும் என்ற ஆசை நோயால் மிகவும் உணர்வு அழிந்து, காம விடாய் கொண்டு, நெருங்கிய தனங்களின்மீது வீழ்ந்து, அகில் சந்தனமாகிய சேற்றில் முழுகி எழுந்து, எதிரில் குவிந்த கையில் உள்ள நகங்களினால் பிறைபோல் குறி வைத்து விளையாடி, நறுமணம் மிக்க பூ முடித்த குழல் சரியவும், இடையில் இருந்த உடை அவிழவும், சில பறவைகளின் குரல்கள் எழவும் மீன் போன்ற கண் சோரவும், குளிர்ந்த முகத்தில் சிறு வியர்வை எழவும், வாயிதழ் அமுதை உண்டு, பகல் இரவு என்று அறியாமல் கலவியில் கூத்தாடும்படி இந்தக் கொடியவனை விடலாமோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் நான்கு அடிகளில் மாதர் கலவிச் செயலைப்பற்றி அடிகளார் கூறுகின்றார்.

**சரியை :—**

நந்தனவனம் அமைத்தல், மலர் பறித்தல், தொடுத்தல் ஆலயத்தை விளக்குதல், கூட்டுதல் முதலியன.

**கிரியை :—**

ஆலய வழிபாடு செய்தல், துதித்தல், பூசித்தல் முதலியன.

**பரமபதம் பெறுவார்க்கருள் தருகணன் :—**

திருமாலை அன்புடன் வழிபட்டோர் பெறுவது பரமபதம். அது மேலான பதம். கண்ணன் என்ற சொல் கணன் என வந்தது.

**ரங்க புரோச்சிதன் :—**

ரங்கபுர உச்சிதன்.

திருவரங்கம் என்ற திருத்தலம் இட்சுவாகு முதலியவர்கள் வழிபட்டது,

"அணியரங்கம் தந்தானை அறிந்தார் அறியாதார்"

—கம்பராமாயணம்.

பூலோக வைகுந்தம் எனப் புகழப்பெற்ற தலம். ஓங்கார வடிவாய விமானமுடையது.

**சயிலமெறிந்தகை வேற்கொடு மயிலினில் வந்தெனை யாட்கொளல் சகமறியும்படி காட்டிய குருநாதா :—**

இது சுவாமிகள் வரலாற்றைக் குறிக்கின்றது.

திருவருணையில் அருணகிரியாரோடு வாதிட்ட சம்பந்தாண்டான் தேவியை அரசவையில் வரவழைப்பேன் என்று உறுதி

கூறி, அவ்வாறு அழைக்க முடியாது தோல்வியடைந்தான் அருணகிரியார் "அதல சேடனாராட" என்ற திருப்புகழைப் பாடி வேண்டினார். முருகக் கடவுள் கம்பத்திலிருந்து வெளிப்பட்டுப் பிரபுடதேவராஜன் முதலிய அனைவரும் கண்டுகளிக்கக் காட்சியளித்தார்.

இந்தத் திருவருட் செயல் உலகமறிய நிகழ்ந்தது.

**திரிபுவனந்தொழு பார்த்திபன் மருவிய மண்டப கோட்டிகள் :—**

குணதரன் என்ற மகேந்திரவர்மன், ராஜ ராஜ கேசரி வர்மன் முதலிய பல மன்னர்கள் திரிசிராப்பள்ளியில் பல மண்டபங்களைக் கட்டினார்கள்.

ஆயிரக்கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், பதினாறு கால் மண்டபம், மணிமண்டபம், சித்திரமண்டபம் முதலியன இன்னும் காண இருக்கின்றன.

**சிராப்பள்ளி மலை :—**

வாயுவுக்கும் ஆதிசேடனுக்கும் வலிமையில் யார் பெரியவர் என்ற ஒரு போட்டி நடந்தது.

ஆதிசேடன் தன் ஆயிரம் பணாமகுடங்களால் திருக்கயிலாய மலையின் சிகரங்களை மூடினான். வாயுதேவன் ஓங்கி வீசி கயிலையின் மூன்று சிகரங்களை அடித்துத் தள்ளினான். ஒன்று காளத்தி, ஒன்று திரிசிராப்பள்ளி, ஒன்று திருக்கோணமலை. இந்த மூன்றும் தட்சிண கைலாயம் எனப்படும்

முன்னர் விழ்ந்திடு சிகரிகாளத்தி யாமொழிவர்
பின்னர் விழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்கல்
அன்னதின் பிறகமைந்தது கோணமா அசலம்
இன்ன மூன்றையும் தட்சிண கயிலையென் றிசைப்பர்.

—செவ்வந்திப் புராணம்.

**உருவளர் குன்றுடையார்க்கொரு திலதமெனும்படி தோற்றிய :—**

குன்றுடையார் என்ற சொல் திருஞானசம்பந்தர் இத்தலத்தில் பாடியருளிய, நன்றுடையானை என்ற திருப்பதிகத்தில் "சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என்னுள்ளம் குளிருமே" என்ற பகுதியை நினைவூட்டுகின்றது.

சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து திலகம் போல் முருகர் தோன்றினார்.

## கருத்துரை

திரிசிராப்பள்ளி முருகவேளே! மாதர் வசமாகி அடியேன் அலையாமல் ஆண்டருள்வீர்.

## 98

அழுதழு தாசார நேசமு
முடையவர் போலேபொய் சூழ்வுறும்
அசடிகள் மாலான காமுகர் பொன்கொடாநாள்
அவருடன் வாய்பேசி டாமையு
முனிதலு மாருத தோஷிகள்
அறுதியில் காசாசை வேசைகள் நஞ்சுதோயும்

விழிகளி லுல்மாட வீதியில்
முலைகளை யோராம லாரொடும்
விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத
விரகிகள் வேதாள மோவென
முறையிடு கோமாள மூளிகள்
வினைசெய லாலேயெ னுவியு யங்கலாமோ

வழியினில் வாழ்ஞான போதக
பரமசு வாமீவ ரோதய
வயலியில் வேலாயு தாவரை யெங்குமானுய்
மதுரையின் மீதால வாயினில்
எதிரம ணுரோரெ ணுயிரர்
மறிகழு மீதேற நீறுப ரந்துலாவச்

செழியனு மாளாக வாதுசெய்
கவிமத சீகாழி மாமுனி
சிவசிவ மாதேவ காவென வந்துபாடுந்
திருவுடை யாய்தீதி லாதவர்
உமையொரு பாலான மேனியர்
சிரகிரி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.

### பதவுரை

வழியினில் வாழ்=அருள் நெறியில் வாழ்கின்ற, ஞானபோதக= ஞான உபதேசம் புரியும், பரம சுவாமீ! =உலகங்களை யெல்லாம் உடைமையாக உடைய பெரியவரே! வர உதய=சிவபெருமான் தேவர்கட்குத் தந்த வரத்தால் தோன்றியவரே! வயலியில் வேலாயுதா=வயலூரில் வாழ்கின்ற வேலாயுதரே! வரை எங்கும் ஆனுய்= மலைகள் அனைத்திலும் வீற்றிருப்பவரே! மதுரையில் மீது ஆலவாயி

னில்=மதுரையாகிய ஆலவாய் என்ற திருத்தலத்திலே, எதிர்=எதிர்த்து வந்த, அமணர் ஒரு எண்ணாயிரர்=எண்ணாயிரஞ் சமணர்களும், மறி கழு மீது ஏற=அழியுமாறு கழுவின் மீது ஏறவும், நீறு பரந்து உலாவ=திருநீறு எங்கும் பரவுமாறும், செழியனும் ஆள் ஆக=பாண்டியனும் அடிமைப் படவும், வாது செய்=வாது செய்த, கவி மத=தமிழ்மறையாகிய மதத்தைப் பொழிந்த, சீகாழி மாமுனி=சீகாழியில் வந்த பெரிய முனிவரே! சிவ சிவ மாதேவ கா என வந்து பாடும்=சிவ சிவா! மகாதேவா! நீர் காப்பாற்றும் என்று இறைவன் முன் வந்து பதிகம் பாடியருளிய, திருவுடையாய்=தெய்வத்தன்மை யுடையவரே! தீது இலாதவர்=தீமையிலாதவரும், உமை ஒரு பாலான மேனியர்=உமாதேவியை ஒரு புறத்தில் கொண்ட திருமேனியரும் ஆன சிவபிரானுடைய, சிரகிரி வாழ்வு ஆன=திரசிரகிரியில் வாழ்வு கொண்டிருக்கும், தேவர்கள்=தேவர்கள் போற்றும், தம்பிரானே=தனிப் பெருந்தலைவரே! அழுது அழுது=மேலும் மேலும் அழுது, ஆசார நேசம் உடையவர் போலே=ஆசாரமும் அன்பும் உடையவர்களைப்போல் நடித்து, பொய் சூழ் உறும்=பொய்யான சூழ்ச்சிகளைச் செய்யும், அசடிகள்=அறிவில்லாதவர்கள், மால் ஆன காமுகர்=தம் மீது மயக்கங் கொண்ட காமிகள், பொன்கொடா நாள்=பொன் கொடுக்க முடியாத நாள்களில், அவருடன் வாய் பேசிடாமையும்=அவர்களோடு வாய்பேசாதிருத்தலும், முனிதலும் மாறுது=கோபித்தலும் நீங்காத, தோஷிகள்=குற்றமுடையவர்கள், அறுதி இல் காசு ஆசை வேசைகள்=முடிவு இல்லாத பணத்தாசை கொண்ட வேசைகள், நஞ்சுதோயும்=நஞ்சு தோய்ந்த, விழிகளினால்=கண்களினால், மாடவீதியில்=மாட வீதிகளில், முலைகளை ஓராமல் ஆரொடும்=தனங்களை ஆராயாமல் எவரோடும், விலையிடும்=விலைக்கு விற்கும், மா மாய ரூபிகள்=பெரிய மாய வடிவினர்கள், பண்பு இலாத=நற்குணம் இல்லாத, விரகிகள்=வஞ்சகிகள், வேதாளமோ என=பேயோ என்னும்படி, முறை இடு கோமாளம் மூளிகள்=கூக்குரலிட்டழுது கும்மாளம் போடும் விகாரமுடையவர்கள், இத்தகைய பொதுமாதர்களின், வினை செயலாலே=மாயச் சூழ்ச்சிகளால், என் ஆவி உயங்கலாமோ=அடியேனுடைய உயிர் வருந்தலாமோ?

## பொழிப்புரை

நன்னெறியில் ஞானோபதேசஞ் செய்யும் பெரிய சுவாமியே! வரத்தால் தோன்றியவரே! வயலூரில் வாழ்பவரே! வேலாயுதரே! எல்லா மலைகளிலும் இருப்பவரே! மதுரையாகிய ஆலவாயில் எதிர்த்த சமணர்கள் எண்ணாயிரம் பேர்களும் கழுவில் ஏறவும், திருநீறு எங்கும் பரவுமாறும், பாண்டியனும் அடிமைப்படவும் வாது செய்து, தமிழ்வேதமாகிய மதத்தைப்

பொழிந்த சீகாழி மாமுனிவரே! சிவசிவா! மாதேவா! காத்தருள் என்று மதுரையில் வந்து பாடியருளிய தெய்வத் தன்மையுடையவரே! குற்றமில்லாதவரும் உமையம்மையை ஒரு பாகத்தில் உடையவருமாகிய சிவபிரானுடைய திரிசிராப் பள்ளியில் வாழ்கின்றவரே! தேவர்கள் போற்றும் பெருமையின் மிகுந்தவரே! மேலும் மேலும் அழுதும், ஆசாரமும் அன்பும் உடையவர்கள் போல் பொய்மையாக நடித்தும் வஞ்சனையைச் செய்யும் அறிவற்றவாகளும், தம்மீது மயக்கமுற்ற காமுகர்கள் பொருள் தராதபோது, அவருடன் பேசாமலும் கோபித்தும் சாகசம் புரியும் குற்றமுடையவர்களும், முடிவில்லாத பணத்தாசையுடைய வேசைகளும், நஞ்சு படிந்த கண்களினால் மாடவீதியில் தனங்களை ஆராயாமல் எவருடனும் விலைக்குத் தருபவர்களும், பெரிய மாய வடிவத்தினர்களும், நற்குணம் இல்லாத வஞ்சகிகளும், பேயோ பிசாசோ என்னும்படி கூச்குரல் செய்து கும்மாளமிடும் மூளிகளும் ஆகிய பொது மாதர்களின் கொடுஞ் செயல்களாலே அடியேனுடைய உயிர் வருந்தலாமோ?

## விரிவுரை

**அழுதழுதாசார நேசமுமுடையவர் போலே :—**

பொதுமகளிர் தம்மை விரும்பி வந்தவர், மேலும் மேலும் விரும்பும் பொருட்டு, கண்டபோதெலலாம் மாயக கண்ணீர் வடித்து அழுவர். "ஆ! எத்தனை அன்பு நம்மீது இவள் வைத்திருக்கின்ருள்" என்று ஆடவர் மயங்கித் தியங்குவர்.

அநாசாரமே குடிகொண்டிருக்கின்ற அவர்கள் மிகுந்த ஆசாரமுடையவர் போலும், ஒரு துளிகூட நேசமின்றி, மிக்க நேசமுடையவர் போலும் நடித்துக் கொள்வார்கள்.

**பொய் சூழ்வுறு மசடிகள் :—**

தமக்கு ஏதோ கடன் இருப்பது போலும், நகைகளை அடகு வைத்து விட்டது போலும், நோய் வந்தது போலும் பேசிப் பெருந் தொகைகளைப் பறிப்பார்கள்.

**மாலான காமுகர் பொன்கொடாநாள் அவருடன் வாய் பேசிடாமையுமுனிதலு மாருத தோஷிகள் :—**

கைவரண்ட காரணமாக ஆடவர் காசு கொடுக்கவில்லையானல் உடனே பிணக்கமுற்று, அவருடன் சீற்றங்கொண்டு பேசாமல் இருப்பார்கள் பலகாலும் அள்ளியள்ளித் தந்ததை மறந்து விடுவார்கள்.

பாக்கு மரத்துக்குத் தண்ணீர் விட்டுக்கொண்டேயிருக்க வேண்டும் ஒருநாள் விடவில்லையானல் வாடிவிடும்.

**வினை செயலாலே யெனுவியு யங்கலாமோ :—**

பலப்பல மாயஞ் செய்யும் பரத்தையர்களின் கொடுஞ் செயல்களால் ஆவி வருந்தி யழியலாமோ! அழிவது கூடாது,

**வழியினில் வாழ் ஞானபோதக :—**

அறவழியில் வாழ்கின்ற ஞானதேசிகன் முருகன்.

வழி—மலைப்பக்கம். 'மலைப் பக்கங்களில் வாழ்பவரே' எனினும் பொருந்தும்.

**பரமசுவாமீ :—**

பரமன்—பெரியவன். சுவாமீ—எல்லாவற்றையும் தனக்கு உடைமையாக உடையவன். சுவாமி என்ற சொல் முருக னுக்கே உரிய சொல்.

வடமொழி நிகண்டு அமரசிம்மம், "தேவசேனாபதிச்சூர: சுவாமீ கஜமுகானுஜ:" என்று கூறுகின்றது.

**வரோதய :—**

வர உதய—சிவபெருமான் பால் தேவர்கள்,

'ஆதியும் நடுவும் ஈறும் அருவமும் உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும் இன்பமும் துன்புமின்றி
வேதமுங் கடந்துநின்ற விமல ஓர் குமரன்றன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகர்க்க என்றார்.

இவ்வாறு வேண்டிய தேவர்களின் முறையீட்டுக்கு இரங் கிய முக்கட் பெருமான் ஆறுமுகங் கொண்டு தன்னுடைய ஆறு நெற்றிக் கண்களிலிருந்து முருகனைத் தோற்றுவித்தார். அந்த வரத்தால் உதயமானவர் ஆனதால் 'வரோதய' என்றார்.

**வயலியில் வேலாயுதா :—**

வயலூர் என்னும் திருத்தலத்தில் அருணகிரிநாத ருக்குத் திருப்புகழ் பாடும் தன்மையை முருகவேள் தந்தருளி னார்.

"பாதபங்கய முற்றிட உட்கொண் டோதுகின்ற திருப்புகழ் நித்தம்
பாடுமன்பது செய்ப்பதியில்தந் தவனீயே"
—(கோலகுங்கும) திருப்புகழ்.

**வரை எங்குமானாய் :—**

முருகவேள் குறிஞ்சிநிலக் கடவுள். எல்லா மலைகளிலும் அவர் எழுந்தருளியிருக்கின்றார். "பல குன்றிலும் அமர்ந்த பெருமாளே", "மலைக்கு நாயக" என்றெல்லாம் அடிகளார் பாடு கின்றனர்.

**எதிரமணு ரேசரெணுயிரர் :—**

சமண குருமார்களாகவும் தலைவராகவும் இருந்தவர்கள் எண்ணாயிரவர்கள். இவர்களின் இடையறாத பிரசாரத்தால் பாண்டி நாடு முழுதும் சமண இருள் மூடிவிட்டது.

**மறிகழுமீதேற :—**

சமணர்கள் "நாங்கள் தோற்றால் கழுவேறுவோம்" என்று கூறியவாறு, அனல்வாதம் புனல்வாதம் புரிந்து தோல்வியுற்று. தங்கள் வாய் மதத்தால் கூறிய வண்ணம் கழுக்களை நாட்டி ஏறினார்கள்.

**நீறுபரந்துலாவ :—**

திருநீறு பாண்டியநாடு முழுவதும் பரவியது. அதன் பெருமை உலகெங்கும் பரவியது.

**செழியனும் ஆளாக :—**

சம்பந்தப் பெருமானுடைய அருட்டிறத்தைக் கண்கூடாகக் கண்ட பாண்டியன் அவருடைய திருவடியில் வீழ்ந்து அடியவன் ஆனான்.

**வாதுசெய் கவிமத சீகாழி மாமுனி :—**

திருஞானசம்பந்தர் ஞானவேழம். அது தேவாரமாகிய மதத்தைப் பொழிந்தது.

> தளம்பு நெஞ்சுடைய எண்ணாயிரஞ் சமண் தலைவராயோர்
> உளம்பரி வொடுக முக்கண் யோசனையகலம் ஏற
> வளம்பட வந்து செய்த வாரணம் என்னும் நாமம்
> விளங்கியதன்று முன்னா மேதகுதராதலத்தே.
>
> திருவிளையாடற் புராணம்

> மண்ணா உடம்பு தங்குருதி மண்ணக்கழுவின் மிசைவைத்த
> எண்ணாயிரவர்க் கெளியரோ நாற்பத்தெண்ணாயிரவரே.
>
> —தக்கயாகப்பரணி.

**சிவசிவா மாதேவகாவென வந்துபாடும் திருவுடையாய் :—**

திருஞானசம்பந்தர் சிவபெருமானை அமணருடன் "வாது செயத் திருவுள்ளமே" என்று பாடி வேண்டினார்; இந்தவுலகம் சமண இருளால் மூடியழியா வண்ணம் காத்தருள் என்று சிவபெருமானிடம் வேண்டிக் கொண்டருளினார்.

**தீதிலாதவர் உமையொரு பாலான மேனியர் :—**

திருஞானசம்பந்தர் திரிச்சிராப்பள்ளி தேவாரத்தில், "நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளேறு ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானை" என்று பாடியருளியதை இங்கே அருணகிரியார் நமக்கு நினைவூட்டி அந்த அழகிய சொற்களை அமைத்தருளினார்.

### கருத்துரை

திரிசிரபுரம் வாழ் தேவா! பரத்தையர் வசமாகி அழியா வண்ணம் பாதுகாத்தருள்வீர்.

## 99

இளையவர் நெஞ்சத் தளையமெ னுஞ்சிற்
றிடைகொடு வஞ்சிக் கொடிபோல்வார்
இணையடி கும்பிட் டணியல்குல் பம்பித்
திதழமு துந்துய்த் தணியாரக்

களபசு கந்தப் புளகித இன்பக்
கனதன கும்பத் திடைமூழ்குங்
கலவியை நிந்தித் திலகிய நின்பொற்
கழல்தொழு மன்பைத் தருவாயே

தளர்வறு மன்பர்க் குளமெனு மன்றிற்
சதுமறை சந்தத் தொடுபாடத்
தரிகிட தந்தத் திரிகிட திந்தித்
தகுர்தியெ னுங்கொட் டுடனாடித்

தெளிவுற வந்துற் றொளிர்சிவ னன்பிற்
சிறுவஅ லங்கற் றிருமார்பா
செழுமறை யஞ்சொற் பரிபுர சண்டத்
திரிசிர குன்றப் பெருமாளே.

### பதவுரை

தளர்வு அறும் அன்பர்க்கு=சோர்வு இல்லாத அன்பர்களின், உளம் எனும் மன்றில்=உள்ளமாகிய மன்றத்தில், சது மறை சந்தத் தொடு பாட=நான்கு வேதங்களும் சந்தத்துடன் பாட, தரிகிட தந்தத் திரிகிட திந்தித் தகுர்தி யெனும் கொட்டுடன் ஆடி=தரிகிட தந்தத் திரிகிட திந்தித் தகுர்தி யென்ற ஒலியை யுண்டாக்கி முழவங்கள் கொட்ட நடனஞ் செய்து, தெளிவு உற வந்து உற்று ஒளிர்=அன்பர்கள் தெளிவு பெறும் வண்ணம் அந்த அன்பர்களின் உள்ளத்தில் வந்து இருந்து விளங்கும், சிவன் அன்பின் சிறுவ=சிவபெருமானுடைய அன்புக் குழந்தையே! அலங்கல் திருமார்பா=பூமாலையணிந்த திருமார்பையுடையவரே! செழு மறை அம் சொல்=வளமுள்ள வேதங்களை அழகாகச் சொல்லுகின்ற, பரிபுர=சதங்கையை யணிந்த

வரே! சண்ட=வலிமையுடையவரே! திரிசிரகுன்ற=திரிசிரமலையில் வாழும், பெருமாளே=பெருமையில் சிறந்தவரே! இளையவர் நெஞ்ச=இளைஞர்களுடைய நெஞ்சுக்கு, தளையம் எனும்=விலங்கு என்று சொல்லத்தக்க, சிறு இடைகொடு=சிறிய இடையைக் கொண்ட, வஞ்சி கொடி போல்வார்=வஞ்சிக் கொடிபோன்ற பொது மாதரது, இணை அடி கும்பிட்டு=இரண்டு கால்களையும் கும்பிட்டு, அணி அல்குல் பம்பித்து=அழகிய அல்குல் பூரிப்பு அடைய, இதழ் அமுதும் துய்த்து=இதழின் அமுதத்தைப் பருகி, அணி ஆர=அழகிய முத்துமாலையும், களப சுகந்த=கலவைச் சாந்தின் நறுமணமும், புள்கித இன்ப=புளகிதமும் இன்பமும் கொண்ட, கனதன கும்பத்து இடை மூழ்கும்=பருத்த கொங்கைக்குடத்துள் மூழ்கும், கலவியை நிந்தித்து=கலவியின்பத்தை வெறுத்துத் தள்ளி, இலகிய நின் பொன்=விளங்குகின்ற உமது அழகிய, கழல் தொழும் அன்பை தருவாயே=திருவடியைத் தொழுகின்ற அன்பினை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

சோர்வில்லாத அன்பர்களின் உள்ளமாகிய மன்றத்தில் நான்கு வேதங்களும் சந்தத்தோடு பாட, தரிகிட என்ற தாள ஒத்துடன் முழவங்கள் முழங்க, நடனஞ் செய்து, அன்பர்கள் தெளிவு பெறுமாறு அவர்கள் உள்ளத்தில் வந்து இருந்து விளங்குகின்ற சிவபெருமானுடைய இளங் குழந்தையே! மாலையணிந்த அழகிய திருமார்பினரே! வளமையான வேதங்களை ஒலிக்கும் தண்டையணிந்த வலிமையுடையவரே! திரிசிர கிரியில் விளங்கும் பெருமிதமுடையவரே! இளைஞர்களுடைய நெஞ்சுக்கு விலங்கு என்று சொல்லத்தக்க சிற்றிடையுடைய வஞ்சிக்கொடி போன்ற பொது மாதரது, இரு கால்களையுங் கும்பிட்டு, அழகிய அல்குல் பூரிப்பு அடைய, வாயிதழ் அமுதைப் பருகி, அழகிய முத்து மாலையும், கலவைச் சாந்தின் நறுமணமும் புளகிதமும் கொண்ட பருத்த கொங்கைக் குடத்தில் முழுகும் கலவியின்பத்தை வெறுத்து விலக்கி விளங்குகின்ற உமது அழகிய திருவடியைத் தொழும் அன்பைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**இளையவர் நெஞ்சத் தளையமெனுஞ் சிற்றிடை :—**

பொது மாதரது சிற்றிடை இளைஞரது உள்ளத்தைச் சிறையில் இட்டுத் தளை பூட்டிவிடும் வன்மையுடையது.

**கழல்தொழு மன்பைத் தருவாயே :—**

இறைவனுடைய திருவடியைத் தொழுதால் பிறவிப் பிணி தீரும். அன்புடன் தொழுதல் வேண்டும்.

**தளர்வறு மன்பர்க் குளமெனும் மன்றில் :—**

சிவபெருமான் அடியார்களது உள்ளமாகிய நடனசாலையில் நடனம் ஆடுகின்றார். இதனையே அருட்பிரகாச வள்ளலார் கூறும் அழகான இப்பாடலைப் படியுங்கள்.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும் தம்முயிர் போல்
எண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார் யாவரவர்
உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடமெனநான்
தெரிந்தேன் ; அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்சிந்தைமிக
விழைந்த தாலோ.

**சதுர்மறை சந்தத் தொடுபாட......ஆடி :—**

வேதங்கள் தாமே ஒலி செய்ய இறைவன் நடம் புரிந்தருளுகின்றார்.

**செழுமறையஞ்சொற் பரிபுர :—**

முருகப் பெருமான் திருவடியில் அணிந்துள்ள தண்டை சதங்கை முதலிய அணிகலன்கள் வேத மந்திரங்களை உச்சரித்து ஒலிக்கின்றன

"மறைசதுர்விதந் தெரிந்து வகைசிறு சதங்கை கொஞ்சு
மலரடி" —(அனைவரு) திருப்புகழ்.

## கருத்துரை

திரிசிரகிரித் திருமுருகா! மாதரது உறவைமறந்து உனது திருவடியைத் தொழும் அன்பைத் தந்தருளும்.

## 100

பகலவ னொக்குங் களவிய ரத்னம்
பவளவெண் முத்தந் திரமாகப்
பயிலமு லைக்குன் றுடையவர் சுற்றம்
பரிவென வைக்கும் பணவாசை
அகமகிழ் துட்டன் பகிடிம ருட்கொண்
டழியும வத்தன் குணவீனன்
அறிவிலி சற்றும் பொறையிலி பெற்றுண்
டலைதலொ ழித்தென் றருள்வாயே

சகலரு மெச்சும் பரிமள பத்மந்
  தருணப தத்திண் சுரலோகத்
தலைவர்ம கட்குங் குறவர்ம கட்குந்
  தழுவஅ ணைக்குந் திருமார்பா

செகதல மெச்சும் புகழ்வய லிக்குந்
  திகுதிகெ னப்பொங் கியவோசை
திமிலைத விற்றுந் துமிகள்மு ழக்குஞ்
  சிரகிரி யிற்கும் பெருமாளே

## விரிவுரை

சகலரும் மெச்சும்=எல்லோரும் புகழும், பரிமள பத்மம்=நறுமணமுள்ள தாமரை போன்ற தருணபத=இளமைவாய்ந்த திருவடிகளையுடையவரே! திண் சுரலோக தலைவர் மகட்கும்=வலிமையுடைய தேவலோகத் தலைவரான இந்திர குமாரியான தேவசேனைக்கும், குறவர் மகட்கும்=குறவர் குமாரியான வள்ளியம்மைக்கும், தழுவ அணைக்கும் திருமார்பா=அவர்கள் தழுவத் தழுவுகின்ற திருமார்பினரே! செகதலம் மெச்சும் புகழ் வயலிக்கும்=பூவுலகம் பாராட்டிப் புகழ்கின்ற வயலூரிலும், திருதிகு என பொங்கியஓசை= திகு திகு எனப் பொங்கியெழும் ஒலியையுடைய, திமிலை=திமிலையும் தவில்=தவிலும், துந்துபிகள் முழக்கும்=துந்துபி என்ற வாத்தியமும் முழக்கஞ் செய்கின்ற, சிரகிரியிற்கும்=திரிசிராமலைக்கும் தலைவரான பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! பகலவன் ஒக்கும்= சூரியனைப் போல் ஒளி வீசும், கனவிய ரத்னம்=பெருமை வாய்ந்த இரத்னம், பவளம்=பவளம், வெண்முத்தம்=வெண்மையான முத்து மாலைகள், திறம் ஆக பயில=நன்றாக விளங்க, முலை குன்று உடையவர் சுற்றம்=கொங்கை மலையையுடைய பொது மகளிரது உறவினரையே, பரிவு என வைக்கும்=ப்ரிவு என வைக்கின்றவனும், பண ஆசை அகமகிழ் துட்டன்=பொருளாசையில் உள்ளங்களிக்கின்ற துஷ்டனும், பகிடி=வெளிவேஷக்காரனும், மருள் கொண்டு அழியும் அவத்தன்=மோக மயக்கங் கொண்டு அழிகின்ற வீணனும், குண ஈனன்=இழிந்த குணத்தனும், அறிவு இலி=அறிவில்லாதவனும், சற்றும் பொறை இலி=சிறிதும் பொறுமை இல்லாதவனும் ஆகிய அடியேன், பெற்று உண்டு அலைதல் ஒழித்து என்று அருள்வாயே= பொருளைத் தேடிப் பெற்று உண்டு அலைகின்ற இந்த அலைச்சலை ஒழித்து என்று எனக்கு அருள் புரிவீர்?

## பொழிப்புரை

எல்லோரும் புகழ்கின்ற நறுமணம் வீசும் இளமையான தாமரை போன்ற திருவடியை யுடையவரே! வலிமையுடைய

தேவலோகத் தலைவன் இந்திரனுடைய புதல்வியாகிய தெய்வயானையம்மையும், வள்ளியம்மையுந் தழுவ அவர்களை அணைத்துக் கொள்ளும் திருமார்பினரே! பூவுலகம் பாராட்டிப் புகழ்கின்ற வயலூரிலும், திகுதிகு என்ற ஒலியுடன் முழங்கும் திமிலை, தவில், பேரிகை முதலியவைகளை முழக்கஞ் செய்யுந் திரிசிரகிரியிலும் வாழும் பெருமிதமுடையவரே! சூரிய ஒளி போன்ற பெருமையுடைய ரத்னமாலை பவளமாலை வெண் முத்து மாலைகள் நன்ருக விளங்கும் தனக் குன்றுடைய பொது மகளிரின் உறவினரையே விரும்புகின்றவனும், பணத்தாசையில் உள்ளம் மகிழும் துஷ்டனும், வெளிவேஷக்காரனும், மோக மயக்கங் கொண்டு அழியும் வீணனும், குணங் கெட்டவனும், அறிவற்றவனும், சிறிதும் பொறுமையில்லாதவனுமாகிய அடியேன் பொருளைப் பெற்று உண்டு, அலையும் அலைச்சலை ஒழித்து என்று அருள் புரிவீர்?

## விரிவுரை

**பகலவ னெக்குங் கனவிய ரத்னம் :—**

சூரியனைப் போல் ஒளி செய்யும் உயர்ந்த இரத்தினங்களைப் பதித்த அணிகலன்கள்.

**முலைக்குன்றுடையவர் சுற்றம் பரிவென வைக்கும் :—**

பொது மாதருடைய சுற்றத்தாரையே பெரிதும் மதித்து, அவர்களிடம் அன்பு வைத்து மூடர்கள் அலைகின்ருர்கள்.

இறைவனுடைய அடியாரை அண்டினுல் கடைத்தேறலாம். சார்பு அறிந்து வாழ்தல் வேண்டும்.

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். —திருக்குறள்.

**பணவாசை அகமகிழ் துட்டன் :—**

தன் பொருளில் வைப்பது பற்று.

பிறர் பொருளில் வைப்பது ஆசை.

"ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெலவே நினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்"

ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்திஞல் ஆகாதோ. —தாயுமானுர்.

**பகிடி :—**

வெளி வேஷம் போடுவது.

உள்ளொன்று வைத்து, வெளியே பூசை செய்வது போலும், தருமஞ் செய்வது போலும் நடித்தல்.

**பெற்றுண்டலைதல் :—**

அரிது தேடிப் பொருளைப் பெற்று, உண்டு அலைவது மனிதருடைய தொழிலாக அமைந்துளது. 'இந்த அலைச்சல் தீர முருகா! எளியேனை யாட்கொண்டருள்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்கள்

**சகலருமெச்சும் பரிமளபத்மம் தருணபதம் :—**

தருணம்—இளமை. முருகவேள் என்றும் இளையவர்.

தாரகனுடன் போர் புரிகின்ற காலத்தும் அவர் குழவி யாகவே காட்சி தருகின்றார். குழந்தைகள் காலில் தண்டை யிருக்கும்.

"......அணிமணித் தண்டையார்க்கும்
செழுமல ரடியுங்கண்டான் அவன்தவம் செப்பற்பாற்றே"

**சூரபன்மன் காண்கின்ற காட்சி :—**

"தண்டையுஞ் சிலம்பும் ஆர்க்கும் சரணமும் தெரியக் கண்டான்"

முருகப் பெருமானுடைய திருவடியை அகில உலகத் தாரும் புகழ்கின்றார்கள். அதனால் "சகலரு மெச்சும்" என்றார்.

**செகதல மெச்சும் புகழ் வயலிக்கும் :—**

வயலூர் என்பது அரிய முருக க்ஷேத்திரம் திருச்சிராப் பள்ளிக்கு மேற்கு 5 கல் தொலைவில் நல்ல சூழ்நிலையில் சோலை யும் வயலும் சூழ விளங்குகின்றது. அதனால் வயலூரையும் திருச்சிராப்பள்ளியையும் சேர்த்து இத்திருப்புகழில் சுவாமிகள் பாடுகின்றார்.

**வயலிக்கும் சிரகிரியிற்கும் :—**

இடப் பொருளில் கண்ணுருபு பெற்று வரவேண்டியது நான்காம் வேற்றுமையாக குவ்வுருபு பெற்று வந்தது. உருபு மயக்கம்.

## கருத்துரை

சிரகிரிப் பெருமானே! அலைதலை யொழித்து ஆண்டருள் வீர்

## 101

ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடு செங்கை யுறவாடி
ஒருவரொடு சிந்தை ஒருவரொடு நிந்தை
ஒருவரொடி ரண்டு முறையாரை

மருவமிக அன்பு பெருகவுள தென்று
மனநினையு மிந்த மருள் தீர
வனசமென வண்டு தனதனன வென்று
மருவுசர ணங்க ளருளாயோ

அரவமெதிர் கண்டு நடுநடுந டுங்க
அடலிடுப்ர சண்ட மயில்வீரா
அமரர்முத லன்பர் முனிவர்கள்வ ணங்கி
அடிதொழவி ளங்கு வயலூரா

திருவையொரு பங்கர் கமலமலர் வந்த
திசைமுகன்ம கிழ்ந்த பெருமானுர்
திகுதகுதி யென்று நடமிட முழங்கு
த்ரிசிரகிரி வந்த பெருமாளே.

### பதவுரை

அரவம் எதிர்கண்டு = பாம்பு எதிரில் கண்டதும், நடு நடு நடுங்க = நடு நடுங்கும்படி, அடல் இடு = வலிமையைக் காட்டுகின்ற, ப்ரசண்ட = மிக்க வேகமுள்ள, மயில் வீரா = மயிலை வாகனமாக வுடையவரே! அமரர் முதல் அன்பர் = தேவர்கள் முதலான அன்பர்களும், முனிவர்கள் வணங்கி = முனிவர்களும் வணங்கி, அடிதொழ விளங்கு = திருவடியைத் தொழ விளங்குகின்ற, வயல் ஊரா = வயலூரில் வாழுகின்றவரே! திருவை ஒரு பங்கர் = இலக்குமியை ஒரு பங்கில் உடைய திருமாலும், கமல மலர் வந்த = தாமரை மலரில் தோன்றிய, திசைமுகன் மகிழ்ந்த = பிரமதேவரும் மகிழ்ந்து போற்றுகின்ற, பெருமானுர் = சிவபெருமான், திகுதகுதி என்று = திகுதகுதி என்ற தாளவகையுடன், நடனம் இட = திருநடனம் புரிய, முழங்கு = வாத்தியங்கள் ஒலிக்கின்ற, த்ரிசிரகிரி வந்த = திரிசிரகிரியில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! ஒருவரொடு கண்கள் = ஒருவருடன் கண்களைக் கொண்டு உறவாடியும் ஒருவரொடு கொங்கை = ஒருவருடன் தனங்களைக்கொண்டு உறவாடியும், ஒருவ

ரொடு செங்கை உறவு ஆடி = ஒருவருடன் சிவந்த கையைக் குலுக்கி உறவாடியும், ஒருவரொடு சிந்தை = ஒருவரை மனதில் வைத்து விரும்பியும், ஒருவரொடு நிந்தை = ஒருவரை நிந்தித்தும், ஒருவரொடு இரண்டும் உரையாரை = ஒருவரிடம் விருப்பு வெறுப்பு என்ற இரண்டும் காட்டாமல் மௌனம் சாதித்தும் சாகசம் புரிகின்ற பொது மாதரை, மருவ மிக அன்பு பெருக = சேர்வதற்கு மிகுந்த காதல் பெருக, உளது என்று மனம் நினையும் = உள்ளது என்று மனத்தில் நினைக்கின்ற, இந்த மருள் தீர = இந்த மயக்கந் தீருமாறு, வனசம் என = தாமரை யென்று எண்ணி, வண்டு தனதனன என்று மருவு = வண்டுகள் தனதனன என்று ஒலிசெய்து பொருந்துகின்ற, சரணங்கள் அருளாயோ = திருவடிகளை அருளமாட்டீரோ ?

## பொழிப்புரை

எதிரில் கண்டதும் பாம்பு நடுநடுங்கும்படி வலிமையைக் காட்டுகின்ற, மிகுந்த வேகமுடைய மயிலை வாகனமாகக் கொண்ட வீரமூர்த்தியே! தேவர் முதலிய அன்பர்களும், முனிவர்களும், உமது திருவடியைத் தொழ விளங்குகின்ற வயலூர் அண்ணலே! இலக்குமி நாயகரும், தாமரையில் தோன்றிய பிரமதேவரும் மகிழ்ந்து தொழுகின்ற சிவபெருமான் திகுதகுதி என்று திருநடனம் புரிய முழவங்கள் முழங்கும் திரிசிரகிரியில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! ஒருவருடன் கண்களால் உறவு செய்தும், ஒருவருடன் தனங்களால் உறவு செய்தும், ஒருவருடன் கைகளால் உறவு செய்தும் ஒருவரை மனதில் விரும்பியும், ஒருவரை வெறுத்து நிந்தித்தும், ஒருவரை விருப்பு வெறுப்பு என்ற இரண்டும் இன்றி மௌனமாயிருந்தும் சாகசம் புரிகின்ற பொதுமாதரைச் சேர மிகவும் விரும்பி மனத்தில் நினைக்கின்ற இந்த மயக்கந் தீருமாறு, தாமரை மலர் என்று வண்டுகள் தனதனன என்று ஒலித்துப் பொருந்துகின்ற உமது திருவடிகளைத் தந்து அருள் புரியமாட்டீரோ ?

## விரிவுரை

**ஒருவரொடு கண்கள் :—**

பொது மகளிர் ஒருவரைக் கண்களால் அழைத்தும் கண்களால் இனிது பார்த்தும் உறவாடுவார்கள்.

**ஒருவரொடு கொங்கை :—**

ஒருவரிடம் தழுவி தமது தனங்களால் உறவாடுவார்கள். தனங்களைத் தந்து தனங்களைக் கவர்வார்கள்.

**ஒருவரொடு செங்கை :—**

ஒருவரிடம் கை குலுக்கியுங் கைகாட்டி யழைத்தும் கைகளினால் உறவாடுவார்கள்.

**ஒருவரொடு சிந்தை :—**

ஒருவருடன் அன்பாய்ப் பேசி உறவு செய்கின்ற போதே மற்றொருவர் மீது மனதை வைத்திருப்பார்கள்.

**ஒருவரொடு நிந்தை :—**

பொருள் கொடுக்கவில்லையானால் உலோபி, கஞ்சன் என்று நிந்திப்பார்கள்.

**ஒருவரொடிரண்டு முரையாரை .—**

ஒருவரிடம் விருப்பு வார்த்தையும் வெறுப்பு வார்த்தையும் கூறாமல் மௌனம் சாதிப்பார்கள்.

**வனசமென வண்டு தனதனன என்று மருவு சரணங்கள் :**

முருகனுடைய திருவடிகளில் வண்டுகள் தாமரையென்று கருதி ஒலித்துக்கொண்டு பொருந்துகின்றன.

அடியார்கள் ஆனந்தத் தேன் துளிக்கின்ற பாத தாமரையில் துதிகள் ஓதிப் பொருந்துகின்றார்கள் என்பது குறிப்பு.

**அரவமெதிர்கண்டு நடுநடு நடுங்க :—**

மயிலைக் கண்டு பாம்பு மிகவும் நடுங்கும். பாம்பு என்பது மாயை, மயில் என்பது விந்து தத்துவம். விந்துவைக் கண்டு மாயை நடுங்கி ஒடுங்கும்.

**திருவையொரு பங்கர் :—**

திரு—இலக்குமி. இலக்குமி நாயகர் திருமால்.

"திருமடந்தை மண்மடந்தை இருபாலுந்திகழ"
—பெரிய திருமொழி.

திரு—பார்வதியெனக்கொண்டு பார்வதி பங்கர் சிவபெருமான் என்றும் என்றும் பொருள் கொள்ளலாம்.

"பேழைவார்சடைப் பெருந்திருமகள் தனைப்
பொருந்தவைத் தொருபாகம்"
—திருஞானசம்பந்தர்.

**த்ரிசிரகிரி :—**

திரிசிரன் என்ற அரக்கன் பூசித்த திருத்தலம். மலைக் கோயில் மிகவும் அழகியது. அரிய பெரிய சிறப்பு வாய்ந்தது.

## கருத்துரை

திரிசிராப்பள்ளி மேவுந் தேவா! உமது பாதமலர் தந்து அருள் செய்வீர்.

## 102

குமுத வாய்க்கனி யமுத வாக்கினர்
கோலே வேலே சேலே போலே அழகான
குழைகள் தாக்கிய விழிக ளாற்களி
கூரா வீரு தீரா மாலா யவரோடே

உமது தோட்களி லெமது வேட்கையை
ஓரீர் பாரீர் வாரீர் சேரீர் எனவேநின்
றுடைதொ டாப்பண மிடைபொ ருத்தன
மூடே வீழ்வே னீடே றுதே யுழல்வேனோ

தமர வாக்கிய அமரர் வாழ்த்திய
தாதா வேமா ஞாதா வேதோ கையிலேறீ
சயில நாட்டிறை வயலி நாட்டிறை
சாவா மூவா மேவா நீவா இளையோனே

திமிர ராக்கதர் சமர வேற்கர
தீரா வீரா நேரா தோரா உமைபாலா
திரிசி ராப்பளி மலையின் மேற்றிகழ்
தேவே கோவே வேளே வானோர் பெருமாளே.

### பதவுரை

தமர வாக்கிய = ஒலிசெய்யும் துதிச் சொற்களால், அமரர் வாழ்த்திய = தேவர்கள் வாழ்த்துகின்ற, தாதாவே = கொடை வள்ளலே! மாஞாதாவே = சிறந்த ஞானமூர்த்தியே! தோகையில் ஏறீ = மயிலின் மீது ஏறிவருகின்றவரே! சயில நாட்டு இறை = மலை நாடுகட்குத் தலைவரே! வயலி நாட்டு இறை = வயலூர் நாட்டுக்குத் தலைவரே! சாவா = இறவாமையும், மூவா = முதிர்ச்சி யடையாமையும், மேவா நீ = அடையாத தேவரீர்! வா = வருக. இளையோனே = என்றும் இளையவரே! திமிர ராக்கதர் = இருள் போல் கருநிறமுடைய அரக்கருடன், சமர வேல்கர = போர் செய்த வேலை யேந்திய திருக்கரத்தினரே! தீரா = தைரியமுடையவரே! வீரா = வீர மூர்த்தியே! நேரா = நேர்மையுடையவரே! தோரா உமை பாலா = தோல்வி யில்லாத உமாதேவியின், குமாரரே! திரிசிராப்பள்ளி மலையின் மேல் திகழ் = திரிசிராப்பள்ளி மலைமீது விளங்குகின்ற, தேவே = கடவுளே! கோவே = அரசே! வேளே = உபகாரியே! வானோர் பெருமாளே = தேவர்கள் போற்றும் பெருமையுடையவரே! குமுத வாய் = குமுத

மலர் போன்ற வாயினின்றும், கனி அமுத வாக்கினர்=பழம் போலவும், அமுதம்போலவும் இனிமையாகப் பேசுபவர், கோல்=அம்பு, வேல்=வேலாயுதம், சேல் போல்=சேல்மீன் போன்ற, அழகான= அழகிய, குழைகள் தாக்கிய விழிகளால்=காதிலுள்ள குழைகளைத் தாக்குகின்ற கண்களினால்,களிகூரா=மகிழ்ச்சி மிகுதியாக அடைந்து, வீறு=பெருமையுடன், தீராமால் ஆய்=முடிவு இல்லாத மோக மயக்கத்தையடைந்து, அவரோடே=அப் பொதுமாதர்களுடன், உமது தோள்களில்=உங்கள் தோள்களின் மீது, எமது வேட்கையை= எமக்கு உள்ள ஆசையை, ஓரீர்=நீர் ஆராயமாட்டீர், பாரீர்= எம்மைப் பார்க்கமாட்டீர், வாரீர்=எம்மிடம் வர மாட்டீர், சேரீர்= எம்மைச் சேரமாட்டீர், எனவே நின்று=என்றெல்லாம் கூறிக் கொண்டுநின்று,உடை தொடா=அவர்களின் ஆடையைத் தொட்டு, பணம்=பாம்பின் படம் போன்ற அல்குல் இடத்தும், இடை பொரு தனம் ஊடே=இடை தாங்கமுடியாத பருத்த கொங்கைகளின் இடத்தும், வீழ்வேன்=விழுகின்ற நாயினேன், ஈடேறுதே=ஈடேறும் வழியையறியாமல், உழல்வேனோ=திரிவேனோ?

## பொழிப்புரை

ஒலிமிகுந்த துதி வாக்கியங்களுடன் தேவர்கள் வாழ்த்து கின்ற கொடைவள்ளலே! ஞானமூர்த்தியே! மயில்வாகனரே! மலைநாட்டுக்கு அதிபரே! வயலூர் நாட்டுக்குத் தலைவரே! சாவாதவரே! மூப்பு அடையாதவரே! நீர் அடியேன்பால் வருக. இளைஞரே! இருள்போன்ற கரிய அரக்கருடன் போர் செய்த வேலை யேந்திய திருக்கரத்தினரே! தைரியமுடைய வரே! வீரமூர்த்தியே! நேர்மையுடையவரே! தோல்வி யில்லாத பார்வதியம்மையின் பாலகரே! திரிசிராப்பள்ளி மலையின மீது விளங்குகின்ற தெய்வமே! அரசரே! உபகாரியே! தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! குமுதமலர் போன்ற வாயினின்று கனிபோலவும் அமுதம்போலவும் இனிமையாகப் பேசுபவர்கள், அம்பு, வேல, சேல்மீன் போன்ற அழகுடையதும், காதுகளில் உள்ள தோடுவரை நீண்டு அவை களைத் தாககுகின்றதுமான கண்களைக் கொண்டு அடியேன் களிப்பு மிகுந்து, பெருமையுடன், முடிவில்லாத மோகத்தை யடைந்து, அப்பொது மாதருடன், 'உமது தோள்களில் எமக்குள்ள ஆசையை நீர் ஆராயகிலீா; எம்மைப் பார்க்கின்றிலீர்; எம்பால் வருகிலீர்; எம்மைச் சேர்கிலீர்' என்றெல்லாம் கூறி நின்று, அவருடைய உடையைத் தொட்டு, பாம்பின்படம் போன்ற அல்குலிலும், இடை தாங்கமாட்டாத பருத்த தனங் களிலும் விழுகின்ற நாயினேன் ஈடேறும் வழியை யறியாமல் திரியலாமோ?

## விரிவுரை

**குமுத வாய்க்கனி யமுத வாக்கினர் :—**

பொதுமகளிர் வாய் குமுதமலர் போல் அழகாக இருக்கும். அவ் வாயினின்றும் கனிந்த கனிரசம்போலும், அமிர்தம் போலும், இனிக்கின்ற சொற்கள் உதிரும். அதனால் அவர்பால் செல்லும் ஆடவர்கள் மயங்கித் தியங்கி உழலுவார்கள்.

**கோலே வேலே சேலே போலே :—**

கண்கள் அம்பு போலவும், வேல் போலவும், சேல்மீன் போலவும் கூர்மையாகவும் அழகாகவும் இருக்கும்.

**குழைகள் தாக்கிய விழிகள் :—**

கண்கள் காதுவரை நீண்டிருக்கும். கண்களின் கருவிழி பிறழ்ந்து பிறழ்ந்து சென்று, அக் காதின் குழையுடன் போர் புரிவதுபோல் திகழும்.

**தமர வாக்கிய அமரர் வாழ்த்திய :—**

முப்பத்து முக்கோடி தேவர்களும் முருகவேளின் சந்நிதியில் நின்று வாழ்த்தித் துதிக்கின்ற ஒலி கடல்போல மிகுந்த ஒலி செய்கின்றது. தமரம்—ஒலி.

**தாதாவே :—**

தாதா—கொடைவள்ளல்.

உலகில் புலவர்கள் அறிஞர்கள் வீரர்கள் பலப்பலர் இருந்தார்கள்; இருக்கின்றார்கள். வள்ளல்கள் மட்டுஞ் சிலர்தான். உலகந் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரை இருபத்தொரு வள்ளல்கள் என்று கணக்கிடப்பட்டுளது.

> ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றும் புலவர்
> வார்த்தைபதி னாயிரத்தில் வாய்க்குமே—பூத்தகுழல்
> தண்டா மரைத்திருவே தாதா கோடிக் கொருவர்
> உண்டாயின் உண்டென் றறு.

தாதாவாகிய கொடை வள்ளல்கள் அனைவருக்கும் தலைவர் முருகவேள். பன்னிரு கரங்களாலும் அள்ளி வழங்கும் வள்ளல்.

> "வேண்டுமடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
> வேண்டு மளவி லுதவும் பெருமாளே"
>
> —(கோங்கமுகையு) திருப்புகழ்

> "வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
> வேண்டவெரு துதவு பெருமாளே"
>
> —(சாந்தமில்) திருப்புகழ்

"அடியவரிச்சையி லெவையெவை யுற்றன
அவைதரு வித்தருள் பெருமாளே"
—(கலகலெனச்சில) திருப்புகழ்

"யார்வேண்டினாலுங் கேட்ட பொருளீயும்
த்யாகாங்க சீலம் போற்றி" —(நாகாங்க) திருப்புகழ்

**ஞாதாவே :—**

ஞாதா—அறிஞன்.

ஞானமே வடிவாய தெய்வம் முருகவேள்.

"ஞானந்தா னுருவாகிய நாயகன்" —கந்தபுராணம்.

ஞானபண்டித சுவாமீ நமோநம" —திருப்புகழ்.

"ஞானாகர சுரபாஸ்கரனே" —கந்தரலங்காரம்.

**சயில நாட்டிறை :—**

மலையும் மலையைச் சார்ந்த நிலமும் குறிஞ்சி குறிஞ்சி நிலக்கடவுள் குமரன் அவன் தெய்வசிகாமணி. அதனால் பழந்தமிழர்கள் மலைமீது வைத்து மலைக் கடவுளாக வழிபட்டார்கள்.

"மலைக்கு நாயக" என்று சுவாமிகள் திருக்கொணமலைத் திருப்புகழில் கூறுகின்றார்கள்.

"சேயோன் மேய மைவரை யுலகும்"—தொல்காப்பியம்

**வயலி நாட்டிறை :—**

வயலூர் முருகனுக்கு உகந்த திருத்தலம். இத்தலத்தில் முருகவேள் பரம வரதராக விளங்குகின்றார். அந்த வயலூருக்கும், அதைச் சார்ந்த நாட்டுக்கும் தலைவர் முருகர்.

**சாவா மூவா மேவா :—**

முருகன் பிறப்பும் இறப்பும் மூப்பும் இல்லாதவன்.

"என்றும் அகலாத இளமைக்கார"—(சந்தனசவாது) திருப்புகழ்.
"பெம்மான் முருகன் பிறவான் இறவான்"—அநுபூதி.

**தோரா உமைபாலா :—**

தோரா—தோலாத.

"தோரர் வென்றிப் பேராமன்றற்
றோளா குன்றைத் தொளையாடீ" —(ஓராதொன்றை) திருப்புகழ்

## கருத்துரை

திரிச்சிராப்பள்ளி மேவுந் தேவே! மாதர் மயலில் வீழ்ந்து உழலாவண்ணம் காத்தருள்வீர்.

## 103

குவளை பூச்ல்வி ளைத்திடு மங்கயல்
கடுவ தாமெனு மைக்கண் மடந்தையர்
குமுத வாயமு தத்தை நுகர்ந்திசை பொருகாடை
குயில்பு ருமயில் குக்கில் சுரும்பினம்
வனப தாயுத மொக்கு மெனும்படி
குரல்வி டாஇரு பொற்குட மும்புள கிதமாகப்

பவள ரேகைப டைத்தத ரங்குறி
யுறவி யாளப டத்தை யணைந்துகை
பரிச தாடன மெய்க்கர ணங்களின் மதநூலின்
படியி லேசெய்து ருக்கிமு யங்கியெ
அவச மாய்வட பத்ர நெடுஞ்சுழி
படியு மோகச முத்ர மழுந்துத லொழிவேனோ

தவள ரூபச ரச்சுதி யிந்திரை
ரதிபு லோமசை க்ருத்திகை ரம்பையர்
சமுக சேவித துர்க்கை பயங்கரி புவனேசை
சகல காரணி சத்தி பரம்பரி
யிமய பார்வதி ருத்ரி நிரஞ்சனி
சமய நாயகி நிஷ்களி குண்டலி யெமதாயி

சிவைம னோமணி சிற்சுக சுந்தரி
கவுரி வேதவி தக்ஷணி யம்பிகை
த்ரிபுரை யாமளை யற்பொடு தந்தருள் முருகோனே
சிகர கோபுர சித்திர மண்டப
மகர தோரண ரத்ன அலங்க்ருத
திரிசி ராமலை அப்பர் வணங்கிய பெருமாளே.

### பதவுரை

தவள ரூப சரச்சுதி = வெண்ணிறமுடைய சரஸ்வதி, இந்திரை = இலக்குமி, ரதி = இரதி தேவி, புலோமசை = இந்திராணி, க்ருத்திகை = கார்த்திகை மாதர்கள், ரம்பையர் = அரம்பையர் ஆகிய, சமுக சேவித = கூட்டத்தினர்கள் வணங்குகின்ற, துர்க்கை = துர்க்கை தேவி, பயங்கரி = தீயவர்க்கு அச்சத்தைச் செய்கின்றவள், புவந ஈசை = புவ

னங்கட்குத் தலைவி, சகல காரணி=சகல காரியங்கட்குங் காரணமாயிருப்பவள், சத்தி=ஆற்றலாகத் திகழ்பவள், பரம்பரி=முழுமுதலாம் தேவி, இமய பார்வதி=இமயமலையரையன் மகளாய் வந்த பார்வதி, ருத்ரி=உருத்ரி, நிரஞ்சனி=அழுக்கற்றவள், சமய நாயகி=சமயங்களுக்குத் தலைவி, நிஷ்களி=உருவமில்லாதவள், குண்டலி=குண்டலம் அணிந்தவள், எமது ஆயி=எங்கள் தாய், சிவை=சிவபிரானுடைய தேவி, மநோமணி=மனத்தை ஞானநிலைக்கு எழுப்புபவள், சிற்சுக சுந்தரி=அறிவு ரூப ஆனந்த அழகி, கவுரி=பொன்னிறமுடையவள், வேதவிதட்சணி=வேதத்தில் சிறப்பாக எடுத்து ஓதப்பட்டவள், அம்பிகை=அம்பிகை, த்ரிபுரை=இடை பிங்கலை, சுழுமுனை என்ற மூன்று நாடிகளிலும் இருப்பவள், யாமளை=சியாமள நிறம் படைத்தவள் ஆகிய பார்வதியம்மை, அற்பொடு தந்து அருள் முருகோனே=அன்புடன் பெற்றருளிய முருகக் கடவுளே! சிகர=மலை உச்சியும், கோபுர=கோபுரமும், சித்திரமண்டப=சித்திரங்கள் எழுதிய மண்டபங்களும், மகரதோரண=மகர மீன் வடிவில் அமைத்த தோரணங்களும், ரத்ன அலங்க்ருத=இரத்தினமயமான அலங்காரங்களும் உடைய, திரிசிராமலை அப்பர் வணங்கிய=திரிசிராமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் வணங்கிய, பெருமாளே=பெருமையில் சிறந்தவரே! குவளை=குவளை மலர் போலவும், பூசல் விளைத்திடும் அம் கயல்=போர் புரியும் அழகிய கயல் மீன் போலவும், கடு அது ஆம் எனும்=விஷம் போலவும் உள்ள, மை கண் மடந்தையர்=மைபூசிய கண்களையுடைய மாதர்களின், குமுத வாய் அமுதத்தை நுகர்ந்து=குமுதமலர் போன்ற வாயிதழ் அமுதத்தைப் பருகி, இசை பொரு காடை=ஒலிபொருந்திய காடை என்னும் பறவை, குயில் புறு மயில்=குயில் புறு மயில், குக்கில்=செம்போத்து, சுரும்பு=வண்டு, அனம்=அன்னம், வனபதாயுதம் ஒக்கும் எனும்படி=அழகிய கோழி என்ற இப்பறவைகளின் குரலை நிகர்க்கும் என்று சொல்லத்தக்க, குரல் விடா=குரல்களைக் காட்ட, இரு பொற்குடமும் புளகிதம் ஆக=இரண்டு தங்கக் குடம் போன்ற தனங்கள் புளகிதம் எய்த, பவளரேகை படைத்த அதரம் குறி உற=பவளரேகை போன்ற வாயிதழில் குறியுண்டாக, வியாள படத்தை அணைந்து=பாம்பின் படம் போன்ற அல்குலை யணைந்து, கை பரிச தாடனம்=கையால் தொட்டு தட்டுகை முதலிய, மெய் கரணங்களின்=உடலில் செய்யும் தொழில்களை, மதன் நூலின் படியிலே செய்து=காம நூலின் முறைப்படி செய்து, உருக்கி=பெண்களின் உள்ளத்தை உருக்கி, முயங்கியே=கூடி, அவசமாய்=தன்வசம் அழிந்து, வடபத்ர நெடும் சுழிபடியும்=ஆலிலை போன்ற வயிற்றுச் சுழியிலே முழுகும், மோக சமுத்திரம் அழுந்துதல் ஒழிவேனோ=மோகக் கடலில் அழுந்தும் துயரத்தைத் தவிர மாட்டேனோ?

## பொழிப்புரை

வெண்ணிறம் படைத்த கலைமகள், இலக்குமி, இரதி, இந்திராணி, கார்த்திகை மாதர்கள், அரம்பையர் முதலிய குழுவினரால் வணங்கப்பெற்ற துர்க்காதேவி, தீயவர்க்கு அச்சத்தைச் செய்பவள், புவனேசுவரி, எல்லாக் காரியங்கட்குங் காரணமாயிருப்பவள், சக்தி, பெரிய பொருளாக இருப்பவள், இமவானுடைய புதல்வியாக வந்த பார்வதி, உருத்திரி, அழுக்கற்றவள், சமயங்கட்குத் தலைவி, உருவமில்லாதவள், குண்டலமணிந்திருப்பவள், எங்கள் அன்னை, சிவபத்தினி, மனோன்மணி, அறிவின் வடிவாய ஆனந்த அழகி பொன்னிறம் படைத்தவள், வேதங்களால் புகழ்ந்து பேசப்பட்டவள், அம்பிகை, திரிபுரை, சியாமள நிறமுடையவள் ஆகிய எம்பிராட்டி பெற்றருளிய முருகக் கடவுளே! மலையுச்சியும் கோபுரமும், சித்திரமண்டபமும், மீன் வடிவில் அமைந்த தோரணங்களும், இரத்தினமயமான அலங்காரங்களும் உடைய திருச்சிராமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் வணங்கிய பெருமிதமுடையவரே! நீலோற்பலம் போலவும், போர் புரியும் அழகிய கயல்மீன்களைப் போலவும் நஞ்சைப் போலவும் மை பூசிய கண்களையுடைய மாதர்களின் குமுதம் போன்ற வாயிதழ் அமுதைப் பருகி, ஒலியை எழுப்பும், காடை, குயில், புறா மயில், செம்போத்து, வண்டு, அன்னம், அழகிய சேவல் என்ற பறவைகளின் குரலை நிகர்க்கும் என்று சொல்லத்தக்க குரலைக் காட்ட, இரண்டு தங்கக் குடங்களை யொத்த தனங்கள் பூரிப்பு அடைய, பவளரேகை போன்ற வாயிதழிற் குறியுண்டாகப் பாம்பின்படம் போன்ற அல்குலைச் சேர்ந்து, கையால் தடவித் தட்டுதல் முதலிய உடல் கொண்டு செய்யும் தொழில்களைக் காமநூலின் முறைப்படி செய்து அம்மாதரின், உள்ளத்தை உருக்கிக் கலந்து தன்வசமழிந்து, ஆலிலை போன்ற வயிற்றின் சுழியில் முழுகுகின்ற மோக சமுத்திரத்தில் அழுந்துந் தன்மையை ஒழிவேனோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதற்பகுதி பொதுமாதரின் கலவிச் செயல்களைப் பற்றிக் கூறி, அதனினின்றும் உவர்ப்பு அடைதல் வேண்டும் என்று இறைவனிடம் அடிகள் வேண்டுகின்றார்.

பிற்பகுதியில் அம்பிகையைப் பற்றி விரிவாகக் கூறுகின்றார். அம்பிகையின் இருபத்தொரு திருநாமங்கள் இங்கே கூறப்பட்டுள்ளன.

## கருத்துரை

திரிசிராப்பள்ளி மேவிய திருமுருகா! மாதர் வயப்பட்டு அழியாவண்ணம் ஆண்டருள்வீர்.

## 104

சத்திபாணீ நமோநம முத்திஞானீ நமோநம
தத்வ வாதீ நமோநம விந்துநாத
சத்துருபா நமோநம ரத்நதீபா நமோநம
தற்ப்ரதாபா நமோநம் என்றுபாடும்

பத்தி பூண்டு மலேயுல கத்தின் மானுர் சவாதகில்
பச்சை பாடீர பூஷித கொங்கைமேல்வீழ்
பட்டி மாடான நானுனே விட்டிராமே யுலோகித
பத்ம சீர்பாத நீயினி வந்துதாராய்

அத்ர தேவா யுதாசுர ருக்ர சேனு பதீசுசி
அர்க்ய சோமாசி யாகுரு சம்ப்ரதாயா
அர்ச்ச னுவாகனுவய லிக்குள் வாழ்நாய காபுய
அக்ஷ மாலா தராகுற மங்கைகோவே

சித்ர கோலா கலாவிர லக்ஷ்மி சாதார தாபல
திக்குபாலா சிவாகம தந்த்ரபோதா
சிட்டநாதா சிராமலே யப்பர் ஸ்வாமீ மகாவ்ருத
தெர்ப்பை யாசாரவேதியர் தம்பிரானே.

### பதவுரை

அத்ர தேவ ஆயுதா = படைக்கல நாயகமாகிய வேலாயுதத்தை ஏந்தியவரே! சுரர் உக்ர சேனுபதீ = தேவர்களைச் சேனைகளாகக் கொண்ட வேகமுடைய அதிபதியே! சுசி அர்க்ய = தூய்மையான மந்திரநீரோடு கூடியதும், சோமாசியா குரு = சோமரசம் பிழிந்து செய்யத்தக்கதுமாகிய வேள்விகட்கு குருமூர்த்தமாக நின்ற, சம்ப்ர தாயா = தொன்றுதொட்டு வந்த வழக்கமுடையவரே! அர்ச்சன = அருச்சனைகளும், ஆவாகன = ஆவாகனங்களும், (பூஜாகாலத்தில் செய்யும்,) வயலிக்குள் வாழ் நாயகா = வயலூர் என்னும் திருத்தலத் தில் வாழ்கின்ற தலைவரே! புய அக்ஷ மாலை ஆதரா = திருப்புயங்களில் உருத்திராக்க மாலையை அணிந்துகொண்டுள்ள அன்பரே! குற மங்கை கோவே = வள்ளிபிராட்டியாருக்கு மணவாளரே! சித்ர கோலா கலா = அழகும் ஆடம்பரமும் உடையவரே! விர லக்ஷ்மி சாதாரதா = வீரலக்ஷ்மியாகிய ஆதாரத்துடன் விளங்குபவரே! பல திக்கு பாலா = திசைகள் பலவற்றையும் காப்பாற்றுபவரே! சிவ ஆகம தந்த்ர போதா = சிவபரம் பொருளைப் பற்றிப் பேசும் ஆகமங்

களாகிய அறிவுநூல்களைப் பக்குவான்மாக்கட்கு உபதேசிப்பவரே சிட்ட நாதா = ஒழுக்கமுடைய ஞானிகட்கெல்லாம் தலைவரே! சிராமலை அப்பர்ஸ்வாமி = திரிசிராமலைமீது வீற்றிருக்கும் சிவபெருமானை உடைமையாக உடையவரே! மகா வ்ருத = சிறந்த விரதங்களோடும் தெர்ப்பை ஆசார = தருப்பைப் புல்லுடனும் ஆசாரத்துடனும் விளங்கும், வேதியர் தம்பிரானே = வேதியாரங்கதர்களுக்குத் தலைவரே! சத்தி பாணீ நமோ நம = வேற்படையைத் தாங்கிய திருக்கையரே! போற்றி போற்றி, முத்திஞானீ நமோ நம = முத்தியைத் தரவல்ல ஞான பண்டிதரே போற்றி போற்றி, தத்வ ஆதீ நமோ நம = உண்மை நிலைக்கு முதல்வரே போற்றி போற்றி, விந்து நாத சத்துருபா நமோ நம = சிவதத்துவங்கள் ஐந்தனுள் விளங்கும் விந்துதத்துவம் நாத தத்துவம் என்ற இரண்டையுங் கடந்து நிற்கும் உண்மை வடிவினரே! போற்றி போற்றி, ரத்ன தீபா நமோ நம = மணி விளக்குபோல் ஒளிர்பவரே போற்றி போற்றி. தன் ப்ரதாபா நமோ நம = தனக்கே உரிய புகழ் மிக்கவரே போற்றி போற்றி, என்று பாடும் = என்று இவ்வண்ணம் வாயாரப் பாடித் துதிக்கும்படியான, பத்தி பூணுமல் = அன்பு நெறியை மேற்கொள்ளாமல் (ஏ = அசை), உலகத்தின் = இவ்வுலகின் கண், மானார் = மான்போன்ற பெண்களது, சவாது அகில் பச்சை பாடீர பூஷித = சவ்வாது அகிற்சாந்து பச்சைக் கற்பூரம் சந்தனம் ஆகிய நறுமணக் கலவைகளை யணிந்துள்ள, கொங்கைமேல் வீழ் = தனங்களின்மேல் மோகாந்தகாரத்துடன் விழுந்து மயங்குகின்ற, பட்டிமாடு ஆன நான் = திருட்டு மாட்டைப் போன்ற அடியேன், உனைவிட்டு இராமே = தேவரீரை அரைக்கண நேரமேனும் விட்டுப் பிரிந்திராமல், உலோக இத = உலகங்கட்கு நன்மையைச் செய்வதும், பத்ம சீர்பாதம் = தாமரையைப் போன்றதும் சிறப்புமிக்கதுமாகிய உமது திருவடிகளை, இனி நீ வந்து தாராய் = இனியாவது தேவரீர் அடியேன்முன் எழுந்தருளி வந்து தந்தருள்வீர்.

## பொழிப்புரை

படைக்கல அரசாகிய வேலாயுதத்தைத் தாங்கியவரே! தேவர்களைச் சேனைகளாகக் கொண்ட வேகமுடைய அதிபதியே! தூய்மையான மந்திர நீரைக்கொண்டு சோமரசம் பிழிந்து செய்யும் சிவவேள்விகட்குத் தொன்றுதொட்டு குருமூர்த்தமாக நின்றவரே! அருச்சனைகளும் ஆவாகனங்களும் பூஜாகாலத்தில் செய்யும் வயலூர் என்னும் புண்ணியதலத்தில் வாழ்கின்ற பெருமானே! திருப்புயங்களில் உருத்திராக்க மாலையை அணிந்துகொண்ட அன்புடையவரே! வள்ளியம்மையாருடைய கணவரே! அழகும் ஆடம்பரமும் உடையவரே! வீரலக்ஷுமியாகிய ஆதாரத்துடன் விளங்குபவரே! திசைகள் பலவற்றையும் காப்பாற்றுபவரே! சிவபரம்பொருளைப்பற்றிப் பேசும் ஆகமங்களாகிய அறிவுநூல்களைப் பக்குவ ஆன்மாக்

களுக்கு உபதேசிப்பவரே! ஒழுக்கமுடைய ஞானிகட்கெல்லாம் தலைவரே! திரிசிராமலைமீது உறைகின்ற சிவமூர்த்தியை உடைமையாக உடையவரே! சிறந்த விரதங்களும் தருப்பையும் தூய்மையும் உடைய சிவவேதியர்கட்குத் தலைவரே! வேலாயுதத்தைத் தாங்கிய கரதலமுடையவரே! வந்தனம் வந்தனம்; முத்தியைத் தரவல்ல ஞானபண்டிதரே வந்தனம், வந்தனம்; விந்துநாதங்கடந்த உண்மை வடிவினரே வந்தனம் வந்தனம்; மணிவிளக்கனையீர்! வந்தனம் வந்தனம்; தனக்கே யுரிய புகழை யுடையவரே! வந்தனம் வந்தனம்; என்று என் புருகிப் பாடித் துதிக்கும் பக்திநெறியை மேற்கொள்ளாமல், உலகத்திலே பெண்களுடைய சவ்வாது அகிற்சாந்து பச்சைக் கற்பூரம் சந்தனக் குழம்பு முதலிய நறுமணங்களாலலங்கரித்த தனங்களின் மீது காமுற்று வீழ்ந்து அறிவு மயங்கிய திருட்டு மாட்டைப் போன்ற அடியேன் தேவரீரை விட்டுப் பிரியாமல் இருக்க, உலகத்திற்கு இன்பத்தைச் செய்வதும் தாமரை போன்றதும் சிறப்புமிக்கதுமாகிய திருவடிகளை இனியாவது தேவரீர் எழுந்தருளிவந்து தந்தருள்வீர்.

## விரிவுரை

**சத்திபாணீ :—**

சக்தி—வேல் "வேலைத் தாங்கிய விமலரே" என்று துதிப்பார்க்கு வினையில்லை. மனத்தில் நினைத்தவை யாவும் முற்றுப் பெறும்.

"சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை யடுத்த பகை
அறுத்தெறிய உறுக்கி யெழும் அறத்தை நிலைகாணும்"
—வேல் வகுப்பு.

"ஏலம் வைத்த புயத்தி லணைத்தருள்
வேலெடுத்த சமர்த்தை யுரைப்பவர்
ஏவருக்கு மனத்தில் நினைப்பவை யருள்வோனே"
—(ஆலம்வைத்தவிழி) திருப்புகழ்.

**முத்திஞானீ :—**

முத்திப்பேற்றைத் தரவல்ல முழுமுதற் கடவுளும் முருகவேளே! முத்தியும் அவரே! முத்திக்கு முதல்வரும் அவரே!

"தெரிசன பரகதி யானாய் நமோ நம" —(அவகுண) திருப்புகழ்.

"கதிக்கு நாதனீ உனைத்தேடியே புகழ்
உரைக்கு நாயெனை அருட் பார்வையாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தரவேணும்"
—(விலைக்குமேனி) திருப்புகழ்.

**தற்ப்ரதாபா :—**

தன் பிரதாப; ப்ரதாபம்—புகழ். முருகப் பெருமானுடைய புகழ் ஒன்றே திருப்புகழ். அப்புகழ் அவர்க்கே யுரியது.

**பாடி பத்தி பூணுமல் :—**

இறைவனையடைவதற்குரிய நெறிகளில் சிறந்த நெறி பக்தியுடன் பாடுவதேயாம். சுந்தரமூர்த்தி நாயனருடைய பரட லுக்கிரங்கி வேதாகமங்கட்கும் எட்டாத சிவபெருமான் இரவெலாம் பரவையார் வீட்டிற்கு இருமுறை தூது சென்றனரெனின் அப் பாடும் பணியின் பெருமை எம்மால் பகர்தற் பாற்றோ?

யாவரே இருந்தும் யாவரே வாழ்ந்தும் யாவரே எமக்குறவாயும்
தேவரீ ரல்லால் திசைமுக மெனக்குத் திருவுள மறியவே றுளதோ
பாவலா ஒருவன் செந்தமிழ்க் கிரங்கிப் பரவையா ருடலைமாற்ற
ஏவலா ளாகி யிரவெலா முழன்ற இறைவனே ஏகநாயகனே.

—பட்டினத்தடிகள்

"அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகடாமருளுமாறே" —அப்பர்.

"பாடுகின்ற பனுவலோர்கள் தேடுகின்ற செல்வமே"—தாயுமானர்

பல பிறப்புகளில் செய்த நற்றவப்பயனுடையார்க்கே இறைவனைப் பாடிப்பரவும் பெரும்பேறு கிடைக்கும் அங்ஙனம் பாடுங்கால் மனத்தை வேறு இடங்களில் செலுத்தாமல் பாட்டுடைத் தலைவராம் பரமபதியின் பாத கமலங்களில் செலுத்தி, பாட்டிற் பொதிந்துள்ள கருத்துக்களை யுணர்ந்து என்புருகிப் பாடவேண்டும். அவ்வாறு பாடுமவர்க்கு மூவர்க்கும் எட்டாத முழுமுதற் பெருமான் தோழராகிவிடுவர்.

"பாதமலர் மீதிற் போதமலர் தூவி
பாடுமவர் தோழத் தம்பிரானே"

—(ஆலவிழி) திருப்புகழ்

**பத்தி பூணுமலே :—**

மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனும், காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடுங் கடவுளும, உலகெலா முணர்ந்து ஓதற்கரிய ஒருவனுமாகிய இறைவனை பக்தி நெறி ஒன்றாலேயே எளிதில் அடையலாம். அன்பு எனினும் பக்தி எனினும் ஒன்றே, "அன்பே சிவம்". அன்பு வடிவாக விளங்கும் அத் தலைவனை அன்பு நெறியாலன்றி வேறு எந்நெறியா லடைய முடியும்?

"பத்திவலையில் படுவோன் காண்க"

"பத்தி நெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன்"
—மணிவாசகம்.

| | |
|---|---|
| கிருதயுகத்தில் | தியானத்தால் முத்தி |
| திரேதா யுகத்தில் | யாகத்தால் முத்தி |
| துவாபரயுகத்தில் | பூஜையினால் முத்தி |
| கலியுகத்தில் | பக்தியுடன் கூடிய நாம சங்கீர்த்தனத்தால் முத்தி. |

"ஆனபய பக்தி வழி பாடு பெறு முத்தி யது
வாகநிகழ் பத்தசன வாரக்காரனும்"
—திருவேளைக்காரன் வகுப்பு

"பத்தி சித்தி காட்டி அத்தர் சித்த மிட்ட
பத்தருக்கு வாய்த்த பெருமாளே"
—(மச்சமெச்சு) திருப்புகழ்

**பட்டிமாடு :—**

பட்டி மாடு—திருட்டு மாடு திருட்டு மாடு அடுத்தவன் வயலில் மேய்ந்து அவனுடைய நலத்தை யழிக்கின்றதுபோல், பிறன்மனை நயந்து பெருங்கேட்டையடைவர்.

**அத்ர தேவாயுதா :—**

அத்ர தேவ ஆயுதா; அஸ்திர என்பதில் ஸ்திரம் நிலை பெறுதல். நிலைபெறுதலின்றி செல்லுவது அஸ்திரமெனப் படும். அப் படைக்கலங்கள் யாவைக்கும் அரசாக விளங்குவது வேலாயுதம்.

ஆயதற் பின்ன ரேவின்மு தண்டத் தைம்பெரும் பூதமு மடுவ
தேயபல் லுயிரு மொருதலை முடிப்ப தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயி ருண்ப தெப்படைக்கு
நாயக மாவ தொரு தனிச் சுடர்வேல் நல்கியே மதலைகைக்
[கொடுத்தான்.
—கந்தபுராணம்

**அர்ச்சனை :—**

வழிபாட்டில் இறைவன் திருவடியில் அன்புடன் இறைவன் திருநாமங்களைச் சொல்லி நறுமலர்களைச் சிந்துதலுக்கு அருச்சனை என்று பெயர். அங்ஙனம் அருச்சிப்போர் சொற் பிழையின்றி அகில அண்ட நாயகன் அருகில் நிற்கின்றோம் என்ற பயபக்தியுடன் இனிமையாக அருச்சிக்க வேண்டும். பராக்கு பார்த்துக்கொண்டும், ஊக்கமின்றியும், தருக்குடனும், மனதை வேறு இடத்தில் செலுத்திக் கொண்டும் அருச்சிப்பது பெருங் குற்றம். வடமொழி மந்திரங்கள் பொருள் விளங்காதவர்க்கும் உச்சரிப்பு சரியாகத் தெரியாதவர்கட்கும் செந்தமிழ்த்

திருமொழியாலேயே பல திருநாமங்கள் அமைந்துள்ளன. சிவார்ச்சனையாயின் போற்றித் திருவகவலும், போற்றித் திருவிருத்தங்களும் சிறந்தன. முருகவேளை வழிபடுவோர் அருணகிரியார் திருவாக்கிலிருந்து நம்மால் தொகுக்கப்பெற்ற திருப்புகழ்த் திருமந்திரங்களைக் கூறி அருச்சிக்கலாம். அங்ஙனம் அருச்சிக்கில் தனக்கும் கேட்பார்க்கும் கருங்கல் மனங்கரைந்துருகி இம்மை மறுமை நலங்கள் எய்துதல் ஒருதலை.

**ஆவாகனம் :—**

திருவுருவத்தில் இறைவனை வெளிப்பட்டருளச் செய்யுங் கிரியை.

**அக்ஷமாலாதரா :—**

அக்ஷம்—கண்; சிவபெருமானுடைய திருக்கண்ணினின்றும் தோன்றியதால் உருத்திராக்கம் என்றாயிற்று. முருகப்பெருமான் உருத்திராக்கமணியினை யணிந்துள்ளாரெனின் ஏனையோர் அணிவதில் என்ன தடை? சைவரெனப் பிறக்கும் பேறு பெற்றோர் ஒவ்வொருவரும் கட்டாயமாக உருதிதிராக்கமணிந்து கொள்ள வேண்டும்.

"ருத்ராக்ஷா ஜாதாஸ் ஸர்வானுக்ரகார்த்தாய தேஷாம்
நாமோச்சாரணமாத்ரேண தசகோப்ரதான பலம்
தர்ஸநஸ்பர்சநாப்யாம் த்விகுண பலம்." —ஜாபாலஸ்ருதி.

அனைவருக்கும் அநுக்கிரகம் செய்வதற்காக உருத்திராக்கங்களுண்டாயின. அவற்றின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே பத்து கோதான பலனும்; அவற்றைக் காண்டல், தீண்டல்களுக்கு மேலும் மேலும் இரட்டிப்புப் பலனுண்டாம்.

உருத்திராக்கத்தைப்பற்றி சிவமூர்த்தி, திருமால் முதலியோர் கூறும் திருமொழிகளை ஈண்டு காட்டுதும். அன்பர்கள் அவைகளைச் சற்று ஊன்றிப் படித்து உய்க.

சிவபெருமான்

அரிய மாதவர்க் கருள்தரும் உருத்திர அக்கம்
உரிய நீறிவை புனைந்துளர் ஓங்கரும் பாவம்
புரியும் வன் தொழில் புலையரே யாயினும் அவர்எம்
தெரிசனத்துளர் எமதருட் குரியராய்ச் சிறப்பார்.

திருமால்

ஊனுறு சூலி உருத்திர அக்கப் பெருமை
யானோ புகல்வன்? எனக்கும் எளிதாயிற்றோ?
ஆனார் அதுபொறுத்தார்க் கண்டார் அணிகயிலைக்
கோனாகித் தேவர் குழாம் போற்ற நிற்பாரால்.

சென்மித்த நாண்முதலாய் தீநெறிக்கண் சென்று சென்று
வன்மித்த நெஞ்சராய்க் கொன்றுண்ட வன்கணரு
நின்மித் தரனருள் நீள்பணியின் ஒன்றணிந்தால்
என்மற் றவர்பெரும்பே றெம்மனோர்க் கீட்டுவதே.
யாது தவமிழைத்தோ ரானாலும் இம்மணியோர்
போது தரித்திலரேல் அத்தவமும் பொய்மையே
ஊதி யுலோகம் உருக்கியவர் சிந்தூரத்
தாது கொடுத்திலரேல் என்னுமத் தன்மையதே.
ஆயமாமணி உருத்திர அக்கமுற் றணிந்தார்
மாயிரும்புவிச் செல்வராய் மன்னனிற் சிறப்பார்
ஏயவெள்ளியங் கயிலைவீற் றிருப்பர் ஈ திகழ்ந்தோர்
பாயவெண்டிரை நிலத்துழல் பஞ்சபா தகரே.

உருத்திராக்கத்தின் பெருமை என்னாற் சொல்லுந்தரத் ததோ? அதனை அணிந்தவரைக் கண்டார் தேவர்கோமானாகி கயிலை வீற்றிருப்பர் பிறந்த நாள் தொட்டு பல தீவினைகள் செய்தோரும் உருத்திராக்கமணியை அன்புடன் அணிவா ராயின் அவர்கள் புனிதராகிப் பெரும்பேறு பெறுவர். என்ன தவம் செய்தோராயினும் இதனையணியாராயின் சித்தியடை யார். உருத்திராக்கமணிந்தோர் இம்மையில் சிறந்த செல்வத் துடன் இன்புற்று மறுமையில் வீடுபேறடைவர். உருத்திராக் கத்தைப் பூணாமல் சிவபூஜை செய்வோர் அப்பூஜையின் பலனை யடையமாட்டார் உருத்திராக்கத்தைத் தரித்துக் கொள் வதற்கு எவர் கூசுகின்றாரோ அவரைச் சிவபெருமான் காண்ப தற்குக் கூசுவர்.

பூணாமற் கண்டிசிவ பூசைபுரி வார்பலத்தைக்
காணார் பூணாய்கண் டிகை.
பூண்பதற்குக் கண்டியினைக் கூசியிடும் புல்லியரைக்
காண்பதற்குக் கூசுமரன் கைத்து. —சைவசமயநெறி.

தவஞ் செய்தார்க்கே உருத்திராக்கத்தைத் தரித்துக் கொள்ள வேண்டுமென்ற அன்பும் ஊக்கமும் வரும். பாவஞ் செய்தவர்க்கு அதில் வெட்கமும் அசட்டையும் வரும். ஆண்டவன் கண் நம் மீது டுவதானால் அதற்கென்று ஒரு தவஞ்செய்ய வேண்டுமல்லவா? இன்னும் உருத்திராக்க மணியில் ஒன்றுவது அணிகிற்பரேல் விலங்கு, பேய், பூதம், ஏவல், சூனியம் முதலிவைகளால் பீடிக்கப்படமாட்டார்.

"அலங்குமாமணி உருத்திர அக்கமொான் றணியின்
விலங்கெயிற் றுவெம் பூதமே முதலிய மேவா
புலங்கொள் மாமணி புனைதரின் போக்குரு திதனால்
இலங்கு மாமணி நீற்றொடும் புனைவதற் கிசையும்.
—உபதேசகாண்டம்.

ஒருவனுடைய மனைவிக்கு திருமாங்கல்யம் எத்துணையுயர் வையும் நலத்தையும் பொலிவையும் தருமோ அதுபோல் உருத்திராக்கம் ஒருவனுக்கு எல்லா நலன்களையுந் தரும் திருமாங்கல்யமுடைய பெண் எப்படி சுபகாரியங்களுக்குத் தகுதியுடையவளோ அதுபோல் உருத்திராக்கதாரண முடைய வன் சகல நற்கருமங்கட்கும் தகுதியுடையவனும். தாலியைக் கண்டவுடன் எப்படி ஒருததியைச் சுமங்கலி என்றெண்ணு கின்றேமோ அதுபோல் உருத்திராக்கங்கண்டவுடன் அவனைச் சிவனடியான் என்று எண்ணுதல் வேண்டும் ஒரு பெண் தாலியை யணிவதற்கு வெட்கப்பட்டால் எப்படி அவள் வெறுக்கத்தக்கவளோ அப்படியே உருத்திராக்கந் தரிக்க வெட்கப்பட்டவனும். சிலர் உருத்திராக்க மணியைத் தரித் திருந்து நடுவில் அவிழ்த்து விடுகின்றனர். அவர் திருமாங் கல்யத்தை இடையில் அவிழ்த்து வைத்துவிடும் வாழாப் பெண்டிர்க்கு நிகராவர்.

ஆயிரம் உருத்திராக்கமணிகளை அன்புடனும் ஒழுக்கத் துடனும் ஒருவர் அணிகுவரேல் அவரைத் திருமால் திசை முகன் தேவர்கோமான் முதலியோர் சிவமூர்த்தியாகவே நினைந்து வணங்குவார். அவர் பெருமையை எம்மால் அள விடற்பாற்றோ? அவரை மனிதர் என்று எண்ணுவது?

ஆய மாமணி ஆயிரம் புனைந்திடி லவரை
மாயனுன்முகன் புரந்தரன் வானவர் முதலோர்
பாய மால்விடைப் பரனெனப் பணிகுவ ரென்றால்
தூய மாமணி மிலைத்தவர் மனிதரோ சொல்வீர்.

—பிரமோத்தர காண்டம்.

இனி சமயக் கண்கொண்டு பாராமல், மருத்துவக் கண் கொண்டு பார்க்கினும் உருத்திராக்கந் தரித்தல் சாலவும் நன்றாகும். உருத்திராக்கத்தில் தங்கச் சத்திருப்பதால் அது உடம்பில் தேய்தலாலும் அதன்மீது பட்ட தண்ணீர் உடம் பில் படுவதாலும் நோய்களை நீக்கி, மீண்டும் வரவொட்டாமல் தடுத்து நல்ல ஆரோக்கியத்தைத் தரும். தீராத ஜுர நோய்க்கு மாற்றுயர்ந்த உருத்திராக்கத்தைத் தேனில் இழைத்து மூன்று வேளை தர ஜுரம் நீங்கும் என வைத்திய நூல் பகர் கின்றது.

மேலும் உருத்திராக்கத்தின் குணத்தைப்பற்றி நுணுகி யாராய்ந்த அறிஞர்கள் இவ்வாறு கூறுகின்றனர்; உருத் திராக்கம் கொடிய தாகத்தை நீக்கும்; நீங்காத தோஷங்கள் மூன்றையும் போக்கும்; பித்தத்தையும் விக்கலையும் மாற்றும். கபத்தை வீட்டும்.

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
ஆளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்கால்—நாளும்

இருத்திராமற் குபத்தை வீட்டுமே நல்ல
உருத்திராக் கத்தின்வலி யுன். —தேரையர்.

இனி உருத்திராக்கத்தை யணியும் விதி.

உச்சியொன்றிரு காதினில் பன்னிரண்டுவந்த
வச்சிரத்தினில் நாற்பத்தெண் ணுன்கணி களத்து
செச்சைமார்பி னூற் றெட்டெனச் சிறந்தணிபவரே
பச்சிளம்பிடி யிடத்தனென் றேத்தப் படுவார்.

| | |
|---|---|
| தலையில் (அதாவது கழுத்தில்) | 1 |
| இரு காதுகளிலும் | 12 |
| தோளில் | 40 |
| கழுத்தில் | 32 |
| மார்பில் | 108 |

மேலும் உருத்திராக்க மணியை பொன், பவளம், முத்து இவைகளுடன் சேர்த்து அணிதல் வேண்டும். உருத்திராக்க மணியை அணிபவர்க்குச் சிவபெருமானுடைய திருவருள் எளிதில் கிடைக்கும்.

சைவ சமயத்திற்குச் சிறந்த அடையாளம் திருநீறும் உருத்திராக்கமுமே. திருநீற்றை மட்டும் தரித்து உருத்திராக்க மணியாதார் அரைச் சைவரே.

ஆகலால் அன்பர்கள் அளவிடற்கரிய பெருமையுடைய உருத்திராக்க மணியை யன்புடன் தரித்து உய்வார்களாக.

மகாவ்ருத தெர்ப்பை யாசார வேதியர் :—

சிறந்த விரதங்களுடனும், தருப்பையுடனும் ஆசாரத்துடனும் இருந்து இறைவனை முப்போதுந் திருவுருத்தீண்டி பூசிப்பவர்; அவர் ஆதிசைவரெனப்படுவர்; சிவனடிபேணுஞ் செம்மனச் செல்வர்; செந்தமிழ் நாட்டினர்.

## கருத்துரை

வேலாயுதா! தேவசேனுபதீ! வயலூர் வள்ளால்! சிராமலையப்பர்ஸ்வாமீ! தேவரீரை அடியேன் என்புருகப்பாடியுய்ய அருள் புரிவீர்!

## 105

புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற்
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித் திடிலாவி
புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே

தவனப் படவிட் டுயிர்செக் கில்ரைத்
தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்
சலனப் படஎற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் தும்யமப் ரகரத் துயர்தீராய்

பவனத் தையொடுக் குமனக் கவலைப்
ப்ரமையற் றைவகைப் புலனிற் கடிதிற்
படரிச் சையொழித் ததவச் சரியைக் க்ரியையோகர்
பரிப்க் குவர்கிட் டைநிவிர்த் தியினிற்
பரிசுத் தர்விரத் தர்கருத் ததனிற்
பரவப் படுசெய்ப் பதியிற் பரமக் குருநாதா

சிவனுத் தமனித் தவுருத் திரன்முக்
கணனக் கன்மழுக் கரனுக் ரரணத்
த்ரிபுரத் தையெரித் தருள்சிற் குணனிற் குணருதி
செகவித் தனிசப் பொருள்சிற் பரனற்
புதனுப் பிலியுற் பவபத் மதடத்
த்ரிசிரப் புரவெற் புறைசற் குமரப் பெருமாளே.

### பதவுரை

பவனத்தை ஒடுக்கும்=மூச்சைப்பிடித்து ஒடுக்கும், மன கவலை ப்ரமை அற்று=மனத்துயராகிய மயக்கத்தை விலக்கி, ஐவகை புலனில்=சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐவகைப் புலன்களில், கடிதில் படர் இச்சை ஒழித்த=வேகமாகச் செல்லும் ஆசையை ஒழித்த, தவ=தவநெறியில் நின்ற, சரியை=சரியையாளர்கள், க்ரியை=கிரியையாளர்கள், யோகர்=யோகநெறியில் நின்றவர்கள், பரிபக்குவர்=இரு வினை யொப்பு எய்தி மலபரிபாகம் பெற்ற

வர்கள், நிட்டை நிவர்த்தியினில் பரிசுத்தர்=தியான நிலையில் நின்று துறவு பூண்ட தூயவர்கள், விரத்தர்=உலகப்பற்றை விட்டவர் ஆகிய பெரியோர்களின்,கருத்து அதனில் பரவப்படு=தமது கருத்தில் வைத்துப் போற்றப்படும், செய் பதியில்=வயலூரில் வாழும், பரம குருநாதா=பெரிய குருநாதரே! சிவன்=சிவபிரான், உத்தமன்=உத்தமர், நித்த=அழிவில்லாதவர், உருத்திரன்=உருத்திர மூர்த்தி, முக்கணன்=மூன்றுகண்களையுடையவர், நக்கன்=சிரிக்கின்றவர், மழுகரன்=மழுவை யேந்திய கரத்தினர், உக்ர ரண=கொடுமையான போர்க்களத்தில், த்ரிபுரத்தை எரித்து அருள்=முப்புரத்தை எரித்தருளியவர், சிற்குணன்=ஞான குணத்தினர், நிர்க்குணன்=உலக குணம் இல்லாதவர், ஆதி=ஆதிமூர்த்தி, செகவித்தன்=உலகத்துக்கு மூலப் பொருளாயிருப்பவர், நிசபொருள்=உண்மைப் பொருளாயிருப்பவர், சிற்பரன்=அறிவுக்கு எட்டாதவர், அற்புதன்=ஆச்சரியமானவர், ஒப்பிலி=ஒப்பு இல்லாதவராகிய சிவபிரானிடத்தே, உற்பவ=தோன்றியவரே! பத்மதட=தாமரைத் தடாகங்கள் நிறைந்த, த்ரிசிரபுர வெற்பு உறை=திரிச்சிராப்பள்ளி மலைமீது வீற்றிருக்கின்ற, சற்குமர=உண்மையான குமாரமூர்த்தியே! பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! புவனத்து=இப்பூமியில், ஒரு பொன் தொடி=ஒரு அழகிய பெண்ணின்,சிறு உதர கருவில் பவம் உற்று=சிறிய வயிற்றில் கருவில் தோற்றம் அடைந்து, விதிப்படியில் புணர்=விதியின் படி கூடுகின்ற, துக்க சுகம் பயில்வுற்று=துக்கத்தையும் சுகத்தையும் நுகர்ந்து, மரித்திடில்=இறந்த பின், ஆவி புரியட்டகம் இட்டு=உயிரை சூட்சும உடலில் புகுத்தி, அது கட்டி=அத் தேகத்தைக் கட்டி,இறுக்கு=அழுந்தக் கட்டு,அடி=அடி,குத்து=குத்து,எனஅச்சம் விளைத்து=என்று பயத்தை உண்டு பண்ணி, அலற புரள்வித்து=அலறி அழும்படிப் புரட்டி, வருத்தி=வருத்தப்படுத்தி, மணல் சொரிவித்து=வாயிலே மணலைச் சொரிவித்து, அனல் ஊடே தவன பட விட்டு=நெருப்பினுள்ளே சூடேறும்படியாக விட்டு, உயிர் செக்கில் அரைத்து=அந்தவுயிரைச் செக்கில் இட்டு அரைத்து, அணி பற்கள் உதிர்த்து=வரிசையாயுள்ள பற்கள் உதிரும்படி அடித்து, எரி செப்பு உருவை தழுவ எண்ணி=எரிகின்ற செம்பாலாகிய பதுமையைத் தழுவும்படிச் செய்து, முள்களில் கட்டி இசித்திட=முள்ளுகளில் கட்டியிழுத்து, வாய் கண் சலனபட எற்றி=வாயும் கண்ணும் அசையும் படியாக அடித்து, இறைச்சி அறுத்து அயில்வித்து=என் உடம்பில் இருக்கின்ற இறைச்சியை அறுத்து என் வாயில் வைத்துத் தின்னும் படிச் செய்து, முரித்து=எலும்பை முரித்து, நெரித்து=நொறுக்கி நசுக்கி, உளைய=வருந்தும்படி,தளை இட்டு வருத்தும்=காலில் விலங்கு பூட்டித் துன்பப்படுத்தும், யம ப்ரகர துயர் தீராய்=யமதண்டனையென்னும் துன்பத்தைத் தீர்த்தருள்வீராக.

## பொழிப்புரை

பிராணவாயுவை ஒடுக்கும் மனக்கவலையாம் மயக்கத்தை விலக்கி. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களில் வேகமாகச் செல்லுகின்ற ஆசையை ஒழித்த தவநெறியில் நின்ற சரியையாளர்கள் கிரியையாளர்கள், யோகியர்கள், மலபரிபாகம் பெற்றவர்கள், தியானத்தில் நின்று துறவு பூண்ட தூயவர்கள், உலகப்பற்றை விட்டவர்கள் ஆகிய பெரியோர்கள் தமது கருத்தில் வைத்துப் போற்றும் குருநாதரே! வயலூரில் வீற்றிருக்கும் மேலான குருநாதரே! சிவபெருமான், உத்தமர், அழிவற்றவர் உருத்திரர், முக்கண்ணர், சிரிக்கின்றவர், மழுவையேந்திய கரத்தினர், கொடிய போர்க்களத்தில் முப்புரத்தை எரித்தருளியவர், ஞானகுணத்தினர், உலக குணமில்லாதவர், ஆதிமூர்த்தி, உலகத்துக்கு மூலப் பொருளாயிருப்பவர், உண்மைப் பொருளாக விளங்குபவர். அறிவுக்கு எட்டாதவர். அற்புதமானவர், சமானமில்லாதவர் ஆகிய சிவபிரானிடம் தோன்றியவரே! தாமரைக் குளங்கள் நிறைந்த திரிசிராப்பள்ளி மலையில் உறைகின்ற, உண்மைக் குமாரரே! பெருமிதமுடையவரே! இப்பூமியில் ஒரு அழகிய பெண்ணின் சிறிய வயிற்றின் கருவில் தோன்றி, விதியின் வண்ணம் இன்ப துன்பங்களை அநுபவித்து, இறந்தபின் இயம தூதர்கள் உயிரை நுண்ணுடம்பில் புகுத்தி, அந்தத் தேகத்தைக் கட்டி, "அழுந்தக் கட்டு; அடி குத்து" என்றெல்லாம் கூறி அச்சத்தை யுண்டுபண்ணி, அலறி அழப்புரட்டி, வருத்தப்படுத்தி, வாயில் மணலைச் சொரிவித்து, நெருப்பினுள் சூடேற்றும்படியாக விட்டு, அந்த வுயிரைச் செக்கில் இட்டு அரைத்து, வரிசையாயுள்ள பற்களை உதிரும்படி அடித்து, எரிகின்ற செம்பாலாகிய பதுமையைத் தழுவச்செய்து, முட்களில் கட்டி இழுத்து வாயுங் கண்ணும் கலங்கி அசையும்படி அடித்து 'என் உடம்பிலுள்ள இறைச்சியை யறுத்து என் வாயில் இட்டு உண்பித்து. எலும்பை முரித்து, நொறுக்கி நசுக்கி வருந்தும்படி விலங்கு பூட்டித் துன்புறுத்தும் இயம தண்டனையின் துயரத்தைத் தீர்த்தருளுவீராக

## விரிவுரை

**புவனத்தொரு பொற்றொடி சிற்றுதரக் கருவிற் பவமுற்று :—**

பொற்றொடி—பொன்னாலாகிய வளையலை யணிந்தவள்; அன்மொழித்தொகை.

ஒரு பெண்ணின் சிறிய கருப்பையில் பத்து மாதங்கள் புழுக்கமும் நெருக்கமும் இருளும் நிறைந்த இடத்தில் துன்புற்று இருந்து இந்த ஆன்மா பிறக்கின்றது. பிறவித் துயர் மிகக் கொடிது.

விதிப்படியில் புணர்துக்க சுகப் பயில்வுற்று:—

முன் செய்த நல்வினை தீவினைக்கு ஏற்ப இன்ப துன்பங்களை ஆன்மா நுகர்கின்றது. இறைவன் கூறிய நியாயத் தீர்ப்பு விதியாக வந்து ஆட்சி புரிகின்றது.

"விதிகாணும் உடம்பை விடாவினையேன் —கந்தரநுபூதி

மரித்திடில் :—

உடம்பு முகந்துகொண்ட வினை முடிந்தவுடன் உயிர் உடம்பை விட்டுப் பிரிந்துவிடும்.

உடம்பு—அகல்; வினைப்போகம்—நெய். வாழ்நாள்—திரி. எரிகின்ற சுடர்—உயிர்.

நெய்யற்றவுடன் வாழ்நாளாகிய திரி எரிந்து உயிராகிய விளக்கு அணைந்துவிடுகின்றது.

புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் தீயினில்
எண்ணிய விளக்கவை இரண்டு எஞ்சினால்
அண்ணலே அவிவதற் கைய மாவதோ. —கம்பராமாயணம்

ஆவி புரியட்டகமிட்டு :—

தூல உடம்பில் உறைந்த உயிரைச் சூக்கும உடம்பில் இட்டு இயமதூதர் கொண்டு போவார்கள். அது புரியட்டக சரீரம் எனப்படும்.

ஐம்பெரும் பூதங்கட்குக் காரணமான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற தன் மாத்திரைகள் 5, மனம், புத்தி அகங்காரம் 3 ஆக 8 தத்துவங்களுடன் கூடியது புரியட்டகம். இதை சூக்குமதேகம் என்றுங் கூறுவர்.

"ஆசைசேர் மனதிதன்மாத்திரை புரியட்டகந்தான்"
—சிவஞானசித்தியார் (153)

அதுகட்டி :—

சூக்குமதேகத்தைப பாசக் கயிற்றால் கட்டி இழுத்துக் கொண்டு போவார்கள் இயம தூதுவர்.

இறுக்கு அடி குத்தென அச்சம் விளைத்து :—

இயமதூதர்கள் "நன்றாக இறுக்கு, அடி, குத்து," என்று கூறி மிக்க அச்சத்தை உண்டாக்குவார்கள்.

அலறப் புரள்வித்து :—

ஓ ஓ என்று அலறி அழும்படி தரையில் புரளவிட்டு வருத்துவர்.

**மணற் சொரிவித்து :—**

ஊரவர் உடைமைகளையும், கோயில் உடைமைகளையும் உண்ட வாயில் கொதிக்கின்ற மணலை அள்ளிக்கொட்டித் துன்புறுத்துவர்.

**அனலூடே தவனப்பட விட்டு :—**

சூலத்தில் குத்தி தீயில் காய்ச்சி, தாகம் எடுக்க இடர்ப் படுத்துவர்.

**உயிர் செக்கிலரைத்து :—**

ஆடு கோழிகளை அறுத்து அந்த இறைச்சியை உரலில் இட்டு ஆட்டிப் பக்குவஞ் செய்து உண்டவர்களை, செக்கில் இட்டு ஆட்டி அல்லற்படுத்துவர்.

> "நமன்தமர் செக்கிலிடும்போது
> அஞ்சல் என்பாய்". —அப்பர்.

**அணிபற்களுதிர்த்து :—**

புலால் உண்டு எலும்பைக் கடித்து நொறுக்கிய பற்களைப் பளீர் பளீர் என்று கன்னத்தில் அறைந்து உதிர்ப்பார்கள்.

ஆ! ஆ! நினைத்தாலும் நெஞ்சு பதறுகின்றது.

**எரி செப்புருவைத் தழுவப்பணி :—**

அயல் மாதரை—அயல் ஆடவரைத் தழுவிய ஆண்—பெண் இவர்களை, நரகில் ஒரு செம்பினால் ஆய பதுமையைத் தீயில் பழுக்கக் காய்ச்சி, 'நீ தழுவிய பெண் இதோ; நீ தழுவிய கள்ளக் காதலன் இதோ! தழுவு' என்று சாட்டையால் அடித்துத் தழுவும்படிச் செய்வார்கள்.

> வம்புலாங்கூந்தல் மனைவியைத் துறந்து
> பிறர்பொருள் தார மென்றிவற்றை
> நம்பினார் இறந்தால் நமன் தமர்பற்றி
> எற்றிவைத் தெரியெழுகின்ற
> செம்பினால் இயன்ற பாவையைப் பாவி
> தழுவென மொழிவதற் கஞ்சி
> நம்பனே வந்துன் திருவடியடைந்தேன்
> நைமி சாரணியத்துள் எந்தாய்.
>
> —திருமங்கையாழ்வார்.

**வாய் கண் சலனப்பட எற்றி :—**

பொய்சாட்சி சொன்னவாய், அயல்மாதரைக் கண்ட கண் இவைகள் கலங்கி அசையுமாறு அடிப்பார்கள்.

**இறைச்சி அறுத்து அயில்வித்து :—**

சிற்றுயிர்களைக் கொன்று தின்ற பாவிகளை நமன்தமர் நிரயத்தில் நிறுத்தி கூரிய வாளால் அவர்களின் உடல் தசையை அறுத்து அறுத்து அவர்கள் வாயில் திணித்துச் சாப்பிடு என்று தண்டிப்பார்கள்.

"கொன்றால் பாவம் தின்றால் போயிற்று" என்ற பழமொழி இதனால் ஏற்பட்டது. கொன்ற பாவம், தங்கள் உடம்பைத் தின்றால் தீரும்.

**வருத்தும் யமப்ரகரத் துயர்தீராய் :—**

பாவிகளை யமதூதர்கள் துன்புறுத்துவார்கள். 'முருகா! அந்த யமதண்டனையினின்றும் அடியேனை விலக்கிக் காத்தருள்வாய்"

**பவனத்தை யொடுக்கு மனக்கவலை ப்ரமையற்று :—**

பிராணவாயுவை ஓடாமல் இழுத்து உள்ளுக்குள் நிறுத்தி விழிபிதுங்குமாறு கடினமாகப் பயில்கின்ற அடயோகம் முதலிய சாதனங்கள் பயனற்றவை. அவை ஆன்மலாபத்தை நல்கா. ஆதலால் மூச்சைப் பிடித்த உடம்பை வருத்தும் அந்த மயக்கம் விலக வேண்டும் என்றார்.

"துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கி லென்னாம் ?"
—கந்தரலங்காரம்

**ஐவகைப்புலனிற் கடிதிற் படரிச்சை யொழித்து :—**

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐவகைப்புலன் வழியே விரைந்து செல்லும் அவாவை அறவே அகற்ற வேண்டும்.

சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.
—திருக்குறள்

**சரியை :—**

இறைவனைப் புற வழிபாடு புரிதல்.

**கிரியை :—**

இறைவனை அகத்தும் புறத்தும் வழிபடுதல்.

**யோகம் :—**

அகவழிபாடு முதிர முதிர, புறவழிபாடு தானே நிற்க அகவழிபாட்டுடன் நிற்றல்.

**ஞானம் :—**

எங்கும் அதுவாய் தரிசித்து நிற்றல்.

**பரிபக்குவர் :—**

ஆன்மா இருவினை யொப்பு எய்தி, மும்மல பரிபாகம் உற்று, சத்திநிபாதம் பெற்று நின்றவர் பரிபக்குவர்.

**நிட்டை நிவர்த்தியினிற் பரிசுத்தர் :—**

நிட்டை—தியான சமாதியில் ஓவியம் போல் நிலைத்து நின்று, உலகநெறி கழன்று இருக்கும் தூய ஞானிகள்.

**விரத்தர் :—**

விரத்தி—பந்தபாசங்களை வெறுத்து ஒதுக்கி நின்றவர்கள்.

**கருத்ததனிற் பரவப்படு...குருநாதர் :—**

இத்தகைய பரமஞானிகள் தம் கருத்தில் வைத்துத் துதிக்கும் பொருள் முருகவேள்.

**சிவனுத்தமன் :—**

சிவபெருமான் ஒருவரே உத்தம தெய்வம். சிவன் உத்தமன்; பார்வதி உத்தமி.

"மத்தள வயிறனை உத்தமி புதல்வனை"

—(கைத்தல) திருப்புகழ்.

**நித்தன் :—**

சிவபிரான் ஒருவரே அழிவில்லாதவர். ஏனைய திரிமூர்த்திகளும், தத்தம் தொழிலில் திரிமூர்த்திகளேயாவார்கள்.

நூறுகோடி பிரமர்கள் நொங்கினர்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே. —அப்பர்

**உருத்திரன் :—**

ஆன்மாக்களின் துன்பத்தைக் கண்டு இரங்குபவர்.

**முக்கணன் :—**

சந்திரனையும் சூரியனையும் அக்கினியையுங் கண்களாக வுடையவர்.

**நக்கன் :—**

எப்போதும் புன்சிரிப்புடன் விளங்குபவர்.

**மழுக்கரன் :—**

ஆன்மாக்களின் மலமாகிய அழுக்கைத் தகிக்கும் ஞானக்கினியை ஏந்தியவர்.

**சிற்குணன் :—**

இறைவனுடைய அருட்குணங்கள் எட்டு. அவையாவன: தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை.

**நிர்க்குணன் :—**

குணம்—கட்டுவது. பிராகிருத குணமாகிய சத்துவம் ராஜஸம் தாமசம் என்ற முக்குணங்கள் இல்லாதவர், சிவபெருமான்.

**ஆதி :—**

அப்பரமனே ஆதிப் பொருள்.

"அந்தம்ஆதி என்மனார் புலவர்" —சிவஞானபோதம்.

**செகவித்தன் :—**

வித்து—விதை.

இந்த வுலகம் முளைப்பதற்கு விதைப்பொருளாக இருக்கின்றவர் சிவபிரான்.

**நிசப்பொருள் :—**

அவர் ஒருவரே மெய்ப்பொருள். ஏனைய அனைத்தும் தோன்றி மறையும் பொய்ப் பொருள்களேயாகும்.

**ஒப்பிலி :—**

"தனக்குவமை யில்லாதான்" —திருக்குறள்.

"சமானரஹிதம் விபும்" —சுருதி

இறைவன் ஒப்பிலாத ஒருவன்.

## கருத்துரை

திரிசிரபுரம் உறையுந் தேவ தேவா! இயம தண்டனையினின்றும் நீக்கி என்னைக் காத்தருள்வீர்.

## 106

பொருளின் மேற்ப்ரிய காமா காரிகள்
பரிவு போறற்புணர் க்ரீடா பீடிகள்
புருஷர் கோட்டியில் நாணு மோடிகள்
கொங்கை மேலே
புடைவை போட்டிடு மாயா ரூபிகள்
மிடிய ராக்குபொ லாமூ தேவிகள்
புலையர் மாட்டும ருதே கூடிகள் நெஞ்சமாயம்
கருதொ ணுப்பல கோடா கோடிகள்
விரகி னுற்பலர் மேல்வீழ் வீணிகள்
கல்வி சாத்திர நூலே யோதிகள் தங்களாசைக்
கவிகள் கூப்பிடு மோயா மாரிகள்
அவச மாக்கிடு பேய்நீ ருணிகள்
கருணை நோக்கமி லாமா பாவிக ளின்பமாமோ
குருக டாக்ஷக லாவே தாகம
பரம வாக்கிய ஞாநு சாரிய
குறைவு தீர்த்தருள் ஸ்வாமீ கார்முக வன்பரான
கொடிய வேட்டுவர் கோகோ கோவென
மடிய நீட்டிய கூர்வே லாயுத
குருகு க்ஷேத்ரபு ரேசா வாசுகி அஞ்சுமாறும்
செருப ராக்ரம கேகே வாகன
சரவ ணுற்பவ மாலா லாளித
திரள்பு யாத்திரி யீரா றுகிய கந்தவேளே
சிகர தீர்க்கம கா்சீ கோபுர
முகச டாக்கர சேணு டாக்ருத
திரிசி ராப்பளி வாழ்வே தேவர்கள் தம்பிரானே.

### பதவுரை

குரு கடாக்ஷ=குருமூர்த்தியாய் கடைக்கணிக்க வல்லவரே! கலா வேத ஆகம=கலை வேதம் ஆகமம் இவைகளின், பரம வாக்கிய=சிறந்த மொழிகளை உபதேசிக்க வல்ல, ஞான ஆசாரிய=ஞான குருவே! குறைவு தீர்த்து அருள் ஸ்வாமி=குறைகள் யாவற்றையும் தீர்த்தருளுகின்ற சுவாமியே! கார்முக வன்பர் ஆன=வில்லையேந்திய வலிமையாளரான, கொடிய வேட்டுவர் கோ கோ கோ என=

பொல்லாத வேடர்கள் "கோ கோ கோ" என்று கூக்குரலிட்டு உம்மைச் சுற்றிய போது, மடிய = அவர்கள் இறக்கும்படி, நீட்டிய கூர், வேல் ஆயுத = நீட்டி விடுத்த கூரிய வேலாயுதரே! குருகுக்ஷேத்ரபுர ஈசா = கோழியூர் என்ற உறையூரில் வாழும் தலைவரே! வாசுகி அஞ்சு மாறும் = வாசுகி என்ற நாகவேந்தன் அஞ்சும்படி, செரு பராக்ரம = போர் செய்யும் வீரத்தையுடைய, கே கே வாகன = மயில் வாகனரே! சரவண உற்பவ = சரவணப் பொய்கையில் தோன்றியவரே! மாலால் லாளித = பெருமையால் அழகு பெற்ற, திரள் புய அத்திரி ஈராறு ஆகிய = திரண்ட புய மலைகள் பன்னிரண்டு கொண்ட, கந்தவேளே = கந்தக் கடவுளே! சிகர தீர்க்க மகா ஸ்ரீ கோபுர முக = சிகரங்கள் நீண்ட பெருஞ் சிறப்புள்ள கோபுர முகப்பில் வீற்றிருப்பவரே! சடாக்கர = ஆறெழுத்துக் கலையுடையவரே! சேண் நாடு ஆக்ருத = விண்ணுலகம் போல் உயர்ந்த, திரிசிராப்பள்ளி வாழ்வே = திரிசிராப்பள்ளியில் வாழ்கின்றவரே! தேவர்கள் தம்பிரானே = தேவர்கள் போற்றும் தனிப் பெருந் தலைவரே! பொருளின் மேல் ப்ரிய = பணத்தின் மேல் ஆசை வைத்த, காம ஆகாரிகள் = காமத்தின் உறைவிடமானவர்கள், பரிவு போல் புணர் = அன்புடையவர்கள் போல் சேரும், க்ரீடா பீடிகள் = காமலீலையின் இருப்பிடமானவர்கள், புருஷர்கள் கோட்டியில் = ஆண்களின் கூட்டத்தில், நாணு மோடிகள் = வெட்கமில்லாத செருக்குடையவர்கள், கொங்கை மேலே புடைவை போட்டிடு = தனங்களின் மீது புடவை போட்டுள்ள, மாயா ரூபிகள் = மாய வடிவத்தினர், மிடியர் ஆக்கு = தம்மிடம் வந்தவரைத் தரித்திரராகச் செய்யும், பொலா மூதேவிகள் = பொல்லாத மூதேவிகள், புலையர் மாட்டும் மருதே கூடிகள் = கீழ்மக்களிடத்தும் மறுக்காமல் சேர்பவர்கள், நெஞ்சம் மாயம் கருத ஒணு பல கோடா கோடிகள் = நெஞ்சத்தில் வஞ்சனை நினைவுகள் எண்ண முடியாத பல கோடிக் கோடிக்கணக்காக உடையவர்கள், விரகினால் பலர் மேல் வீழ் வீணிகள் = தந்திரத்தால் பலர் மேல் விழுகின்ற பயனில்லாதவர்கள், கல்வி சாத்திர நூலே ஓதிகள் = காம நூல்களையே படிப்பவர்கள், தங்கள் ஆசை கவிகள் கூப்பிடும் = தங்கட்கு விருப்பமான பாடல்களைப் பாடி அழைப்பதில், ஓயா மாரிகள் = ஓயாத மழை போன்றவர்கள், அவசம் ஆக்கிடு = மயக்கத்தைத் தருகின்ற, பேய்நீர் ஊணிகள் = பேய் போல் ஆடவைக்கும் கள்ளைக் குடிப்பவர்கள், கருணை நோக்கம் இலா மா பாவிகள் = இரக்கமுள்ள பார்வையே யில்லாத பெரிய பாவிகளாம் பரத்தையருடைய, இன்பம் ஆமோ = இன்பம் ஆகுமோ? (ஆகாது).

## பொழிப்புரை

குருமூர்த்தியாய் கடைக்கண் பார்வையால் அருள் புரிய வல்லவரே! கலை வேதம் ஆகமம் ஆகிய சிறப்பான மொழி

களை உபதேசிக்க வல்ல ஞானசாரியரே! அடியவர்களின் குறைகளைத் தீர்த்தருளும் சுவாமியே! வில்லையேந்திய வலிய—பொல்லாத வேடர்கள் "கோ கோ" என்று இரைச்சலிட்டு உம்மைச் சூழ்ந்தபோது, அவர்கள் மீது வேலையேவியவரே! கோழியூர் என்ற உறையூரில் வாழும் தலைவரே! வாசுகி என்ற நாகராஜன் அஞ்சுமாறு போர் செய்யும் வீரத்தையுடைய மயில் வாகனரே! சரவணப் பொய்கையில் தோன்றியவரே! பெருமையும் அழகும் திரட்சியும் படைத்த மலைபோன்ற பன்னிரு தோள்களையுடையவரே! கந்தக் கடவுளே! சிகரங்கள் நீண்ட பெருஞ் சிறப்புள்ள கோபுர முகப்பில் வீற்றிருப்பவரே! ஆறு அட்சரங்கட்கு உரியவரே! விண்ணுலகம்போல் உயர்ந்த திரிசிராப்பள்ளியில் வாழ்பவரே! தேவர்கள் போற்றும் தனிப் பெருந் தலைவரே! பணத்தாசை கொண்ட காமத்தின் உறைவிடமானவர்கள்; அன்புடையவர்போல் நடித்துச் சேரும் காம லீலைக்கு இருப்பிடமானவர்கள்; ஆண்களின் கூட்டத்தில் நாணமில்லாத செருக்குடையவர்கள்; தனத்தின் மீது ஆடையிட்டுள்ள மாயா வடிவத்தினர்கள்; தம்மிடம் வந்தவரைத் தரித்திரராகச் செய்யும் பொல்லாத மூதேவிகள்; கீழ்மக்களையும் மறுக்காமல் சேர்பவர்கள்; நெஞ்சத்துள்ள மாய நினைவுகள் எண்ண முடியாத கோடி கோடியாக வுடையவர்கள்; தந்திரத்தினால் பலர் மீது விழும் வீணிகள்; காமநூலையே சதா படிப்பவர்கள்; தங்கட்கு விருப்பமான பாடல்களைப் பாடி இளைஞரை அழைக்கும் மழைபோன்றவர்கள். நினைவைமாற்றிப் பேய்போலாட வைக்கும் கள்ளைக் குடிப்பவர்கள்; கருணை நோக்கமேயில்லாத பெரிய பாவிகளான வேசையரது இன்பம் ஆகுமோ? (ஆகாது.

## விரிவுரை

இத்திருப்புகழிலும் முதல் நான்கு அடிகளில் பொருட் பெண்டிரின் செயல்களைக் கூறுகின்றார்.

**நெஞ்சமாயம் கருதொணுப்பல கோடாகோடிகள் :—**

விலைமாதர்களின் நெஞ்சத்தில் எழும் வஞ்ச நினைவுகள் எண்ணில்லாதன

"விரகுடன் நூறுயிர மனமுடைய மாபாவிகள்"
"வஞ்சமே கோடிகோடிகள் நெஞ்சமே சேரமேவிய
வன்கணர்"
கோடா கோடிய மனதானர்" —திருப்புகழ்.
"உண்ணிறை உடைய அல்லல் ஓராயிர மனத்த ஆகும்"
—சிந்தாமணி.

**அவசமாக்கிடுபேய் நீருண்ணிகள் :—**

"ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள்" —திருப்புகழ்.

கள்ளுண்டார் அறிவு மயங்கி, செய்வன தவிர்வன அறியாதும், சொல்வன இன்னதென்று உணராதும் ஆடுவர்.

கள்விலை பகர்வோர், கள்ளருந்துவோர், கள்ளருந்துதற்குடன்படுவோர், கள்ளருந்துனரை மகிழுனர், இவர்கள் அனைவரும் நரகில் கிடந்து துயருறுவார்கள்

குருகடாக்ஷ :—

கடாக்ஷம்—கடைக்கண் பார்வை. இறைவனுடைய கடைக்கண் பார்வை ஆன்மாக்களை உய்விக்கும். குருவின் கடைக் கணிப்பு மாணவனை உய்விக்கும்.

வேட்டுவர் கோ கோ கோவென மடிய விட்டிய கூர்வேலாயுத :—

கந்தவேள் வள்ளி நாயகியை களவாடிக் கொண்டு போன போது, வேடர்கள் விலலம்புடன் தொடர்ந்து சென்று, கோ கோ என்று கதறச் சூழ்ந்து வளைந்தார்கள்.

வள்ளிபிராட்டியார் "ஐயனே! நும்மீது அம்புகளை ஏவும் இவர்கள்மீது வேல் ஏவும்" என வேண்டினுர். அப்போது கொடியில் இருந்த சேவல் கொக்கரித்தது வேடர்கள் வீழ்ந்து மாய்ந்தனர். பின்னர் நாரதரின் வேண்டுகோளின்படி, முருகவேள் அனுமதி செய்ய, வள்ளிநாயகி, "யாவரும் எழுக" என்னலும் வேடர்கள் உயிர்பெற்றெழுந்தார்கள். கந்தபுராணம் சேவலின் ஒலியால் வேடர்கள் மாய்ந்தார்கள் என்று கூறுகின்றது. அருணகிரியார், வேலை விட்டு மாய்த்தார் என்று கூறுகின்ருர். இவ்வாறே பிறிதொரு பாடலிலும் கூறுகின்ருர்.

"வேற்கொடு கடுகிய முடுகிய
செருக்கு வேட்டுவர் திறையிட முறையிட மயிலேறும்"
—(வெருட்டி) திருப்புகழ்.

குருகுக்ஷேத்ர புரீச :—

குருகு—பறவை. கோழியூர்—என்பது உறையூர்.

திருமுக்கீச்சுரம். யானையைக் கோழி வென்றதால் கோழியூர் எனப் பேர் பெற்றது.

இத்திருத்தலம் திரிசிராமலைக்கு மேற்கே 1 கல் தொலைவில் உள்ளது.

வாசுகி அஞ்சுமாறு செரு பராக்ரம கேகேவாகன :—

கேகயம்—மயில்.

வாசுகியென்ற அரவரசனை மயில் வென்றது.

"வாளெயிற துற்றபகு வாய்தொறு நெருப்புமிழும்
வாசுகி எடுத்துதறும் வாசிக்காரனும்" —திருவகுப்பு.

**திரள் புயாத்திரி :—**
புய அத்திரி; அத்திரி—மலை, புயமாகிய மலை.

### கருத்துரை

திரிசிராமலை மேவு முருகா! மகளிர் இன்பம் ஆகாது.

### 107

பொருள்கவர் சிந்தை அரிவையர் தங்கள்
புழுககில் சந்து பனிநீர்தோய்
புளகித கொங்கை யிளகவ டங்கள்
புரளம ருங்கி லுடைசோர

இருள்வளர் கொண்டை சரியஇ சைந்து
இணைதரு பங்க அநுராகத்
திரிதலொ ழிந்து மனதுக சிந்து
னிணையடி யென்று புகழ்வேனோ

மருள்கொடு சென்று பரிவுட னன்று
மலையில்வி ளைந்த தினைகாவல்
மயிலை மணந்த அயிலவ எங்கள்
வயலியில் வந்த முருகோனே

தெருளுறு மன்பர் பரவ விளங்கு
திரிசிர குன்றில் முதனாளில்
தெரிய இருந்த பெரியவர் தந்த
சிறியவ அண்டர் பெருமாளே.

### பதவுரை

மருள்கொடு சென்று=(வள்ளிபிராட்டிமீது) மோக மயக்கம் கொண்டு சென்று, பரிவுடன் அன்று=அன்புடன் அந்நாளில், மலையில் விளைந்த தினை காவல்=வள்ளி மலையில் விளைந்த தினைப்பயிரைக் காவல் புரிந்த, மயிலை மணந்த=மயில் போன்ற வள்ளிபிராட்டியை மணந்து கொண்ட, அயிலவ=வேலவரே! எங்கள் வயலியில் வந்த முருகோனே=எங்கள் வயலூரில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுளே! தெருள் உறும் அன்பர்=தெளிந்த அறிவுடைய அடியார்கள், பரவ விளங்கு=துதி செய்ய விளங்குகின்ற, திரிசிரகுன்றில்=திரிசிரா மலையில், முதல் நாளில்=ஆதி நாள் முதல், தெரிய இருந்த=எல்லோர்க்குந் தெரியுமாறு இருந்த, பெரியவர் தந்த=பெரியவராகிய சிவபெரு

மான் பெற்ற, சிறியவ=சிறிய பெருந்தகையே! அண்டர் பெருமாளே=தேவர்கள் போற்றும் பெருமையில் சிறந்தவரே! பொருள் கவர் சிந்தை=பொருளைக் கவர்வதையே சிந்தையில் கொண்ட, அரிவையர் தங்கள்=பொது மாதர்களுடைய, புழுகு அகில் சந்து=புழுகு அகில் சந்தனம், பனிநீர் தோய்=பன்னீர் ஆகிய இந்த வாசனைகள் தோய்ந்த, புளகித கொங்கை இளக=புளகிதங்கொண்ட தனங்கள் நெகிழ்ந்து அசையவும், வடங்கள் புரள=மணிமாலைகள் புரளவும், மருங்கில் உடைசோர=இடையில் ஆடை சோரவும், இருள் வளர் கொண்டை சரிய=இருள் நிறைந்த கரிய கூந்தல் சரியவும், இசைந்து இணைதரு=மனம் ஒத்துச் சேருகின்ற, பங்க அநுராக திரிதல் ஒழிந்து=குற்றத்துக்கு இடமான காம வாழ்க்கையில் திரிகின்ற தன்மை ஒழிந்து, மனது கசிந்து=உள்ளம் உருகி, உன் இணை அடி என்று புகழ்வேனோ=உமது உரு திருவடிகளை அடியேன் என்று புகழ்வேனோ?

## பொழிப்புரை

வள்ளி மீது மயக்கங் கொண்டு சென்று அன்புடன் அன்று, வள்ளிமலையில் விளைந்த தினைப்பயிரைக் காவல் புரிந்த வள்ளியாகிய மயிலை மணந்துகொண்ட வேலவரே! எங்கள் வயலூரில் எழுந்தருளிய முருகக் கடவுளே! தெளிந்த அறிவுடைய அன்பர்கள் துதி செய்ய விளங்குகின்ற திரிசிரா மலையில் ஆதிநாள் முதல் எல்லோருக்குந் தெரிய எழுந்தருளியிருக்கும் பெரியவராகிய சிவபெருமான் பெற்ற சிறிய பெருந்தகையே! தேவர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! பணத்தைக் கவர்கின்ற மனத்தையுடைய பொது மாதர்களின் புனுகு அகில் சந்தனம் பன்னீர் ஆகிய நறுமணந் தோய்ந்த புளகிதங் கொண்ட தனங்கள் நெகிழ்ந்து அசையவும், மணி மாலைகள் புரளவும், இடையில் உள்ள உடை சோரவும், இருண்ட கரிய குழல் சரியவும், மனம் ஒத்து சேர்கின்ற குற்றம் பொருந்திய காம வாழ்க்கையில் திரிகின்ற தன்மையொழிந்து, மனம் கசிந்து உருகி உமது இரு திருவடிகளை என்று அடியேன் புகழ்வேனோ?

## விரிவுரை

**பொருள் கவர் சிந்தை:—**

பொதுமாதரது மனம், தம்மை நாடி வருபவரிடம் பணத்தைக் கவர்வதிலேயே தீவிரமாக வேலை செய்யும்.

**மனது கசிந்து இணையடியென்று புகழ்வேனோ:—**

இறைவனடி மலரை நினைக்கும்போது மனங்கரைந்து உருக வேண்டும்.

இன்றிருந்து நாளை அழிகின்ற மனிதர்களைப் புகழாமல் எம்பெருமானைப் புகழவேண்டும்

**வயலியில் வந்த :—**

திரிசிராப்பள்ளித் திருப்புகழ் பலவற்றில் அண்மையில் உள்ள வயலூரரையும் இணைத்தே சுவாமிகள் பாடுகின்றார்.

**தெரிய இருந்த பெரியவர் :—**

சிவபெருமான் ஒருவரே எல்லோருக்கும் பெரியவர்.

"பெரியவன் சிராப்பள்ளிப் பேணுவார்
அரியயன் தொழ அங்கிருப் பார்களே" —அப்பர்.

**சிறியவ :—**

சிவகுமாரர் நால்வர், விநாயகர், வீரபத்திரர், வைரவர். வேலவர் இந்த நால்வரில் சிறியவர் முருகர்.

## கருத்துரை

சிராமலை நாதா! உமது பாதத்தைப் புகழ்ந்து பாட அருள் செய்வீர்.

## 108

வாசித்துக் காணொ ணாதது
பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது — நெஞ்சிதுலே
மாசர்க்குத் தோணொ ணாதது
நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது — விந்துநாத
ஓசைக்குத் தூர மானது
மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி யானது — கண்டுநாயேன்
யோகத்தைச் சேரு மாறுமெய்ஞ்
ஞானத்தைப் போதி யாயினி
யூனத்தைப் போடி டாதும — யங்கலாமோ
ஆசைப்பட் டேனல் காவல்செய்
வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி — கந்தவேளே

ஆலித்துச் சேல்கள் பாய்வய
லூரத்திற் காளமோடட
ராரத்தைப் பூண்ம யூரது ரங்கவீரா

நாசிக்குட் ப்ராண வாயுவை
ரேசித்தெட டாத யோகிகள்
நாடிற்றுக் காணொ ணாதென நின்றநாதா

நாகத்துச் சாகை போயுயர்
மேகத்தைச் சேர் சிராமலை
நாதர்க்குச் சாமி யேசுரர் தம்பிரானே.

## பதவுரை

ஏனல் காவல் செய்=தினைப்புனத்தைக் காவல் செய்திருந்த, வேடிச்சிக்கு ஆக=வேட்டுவப் பெண்ணாகிய வள்ளியம்மையார் பொருட்டு, ஆசைப்பட்டு=அன்புகொண்டு, மாமயல் ஆகி=பெரிய மயக்கத்தையடைந்தவர் போல் சென்று, பொன்பாதமே பணி=பொற்பிரகாசம் பொருந்திய அவருடைய திருவடிகளை வணங்கிய, கந்தவேளே=விரும்பத்தக்ககந்தக்கடவுளே! ஆலித்து=ஆரவாரித்து, சேல்கள் பாய்=சேல்மீன்கள் பாய்ந்து விளையாடுகின்ற, வயலூரத்தில்=வயலூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி, காளமோடு அடர் ஆரத்தை பூண்=விடத்தோடு கூடிய பாம்பை மாலையாகத் தரித்த, மயூர துரங்க வீரா=மயிலாகிய குதிரைமேல் பவனிவரும் வீர மூர்த்தியே! நாசிக்குள்=மூக்கின் வழியாக, ப்ராணவாயுவை=பிரணவாயுவினை, ரேசித்து எட்டாத யோகிகள்=வெளியே விடுத்து மீண்டும் பூரகஞ் செய்து சஹஸ்ராரப் பெருவெளிவரை எட்டுதலை யடையாத யோகிகள், நாடிற்று காண ஒணாது என=நாடிப் பார்த்தும் காண்டற்கரிதென்னும்படி, நின்ற நாதா=அப்பாலைக் கப்பாலாக நின்ற தனிப்பெருந் தலைவரே! நாகத்து சாகைபோய்=மலையில் கிளைச் சிகரமானது நீண்டு சென்று, உயர் மேகத்தை சேர்=உயர்ந்துள்ள மேகமண்டலம்வரை சேர்ந்துள்ள, சிராமலை=திரிசிராமலையில் எழுந்தருளியுள்ள, நாதர்க்கு சாமியே=சிவபெருமானுக்கு உரிய பொருளே! சுரர் தம்பிரானே=தேவர்களுக்குத் தலைவரே! வாசித்து காண ஒணாதது=நூல்களைக் கற்று அக் கலையறிவினால் காணக் கூடாததும், பூசித்துக்கூட ஒணாதது=பூசை செய்து அக்கிரியா மார்க்கத்தாலும் அடைதற்கரியதும், வாய்விட்டு பேச ஒணாதது=வாக்கினால் இத்தன்மைத்து என்று பேசுதற்கு முடியாததும், மாசற்கு நெஞ்சினாலே தோண ஒணாதது=குற்றமுடையோர்கள் உள்ளத்தில் தோன்றி விளங்காததும், நேசர்க்கு சேர ஒணாதது=அன்பு செய்வார் உள்ளத்தினின்றும் நீங்காது நிலைத்திருப்பதும், மாயைக்கு சூழ

ஒண்ணாதது = மாயையினால் வளைக்க முடியாததும், விந்து நாத ஓசைக்கு தூரம் ஆனது = விந்து கழல அதினின்றும் எழும் நாத ஒலிக்கு மிக்க சேய்மையிலிருப்பதும், மாகத்துக்கு ஈறு அது ஆனது = விண்ணின் முடிவில் விளங்குவதும், லோகத்துக்கு ஆதியானது = உலகத்திற்கு முதன்மையானதும் ஆகிய மெய்ப்பொருளை, நாயேன் கண்டு = நாயினேன் உளக்கண்ணால் கண்டு, யோகத்தை சேருமாறு = சிவயோகத்தை அடையுமாறு, மெய்ஞானத்தை போதியாய் = உண்மை யறிவை உபதேசித்தருள்வீர், இனி = இனிமேல், ஊனத்தை போடிடாது = இவ்வூன உடம்பை வெறுத்து ஒதுக்காது, மயங்கலாமோ = மயங்கி வறிதே யழியலாமோ ?

## பொழிப்புரை

தினைப்புனத்தைக் காத்திருந்த வேடமங்கையாகிய வள்ளி நாயகியார் மீது அன்புற்று மயக்கமடைந்தவர்போல் சென்று பொன்மயமான அவருடைய திருவடியில் வணங்கிய கந்த வேளே! ஆரவாரத்துடன் சேல்மீன்கள் துள்ளிப் பாய்கின்ற வயலூர் என்னும் திருத்தலத்தில எழுந்தருளி, நஞ்சினையுடைய பாம்பை மாலையாகத் தரித்துக் கொள்ளும் மயிற்பரியின் மீது பவனிவரும் வீர மூர்த்தியே! நாசியில் பிராண வாயுவை ரேசக பூரக கும்பக மென்னும் சாதனங்களால் செலுத்தி மேலைப் பெருவெளிவரை எட்டாத் யோகிகளால் நாடிக் காணமாட்டாதவரென அப்பாலைக்கப்பாலாய் நின்ற வான்பொருளே! மலையின் கிளைச் சிகரமானது உயர்ந்து மேக மண்டலம்வரை நீண்டு உயர்ந்துள்ள திரிசிராமலை என்னும் திருமலையின் மீது கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுக்கு உரிய பொருளாக விளங்குபவரே! தேவர்கட்கெல்லாந் தலைவரே! கல்வியறிவினால் காணப்படாததும், கிரியா மார்க்கத்தால் கிட்டுதற்கரியதும், வாய்விட்டு வசனிப்பதற்கு இயலாததும், குற்றமுள்ளவர் மனத்தில் தோன்றாமல் ஒளிந்திருப்பதும், அன்பர்கள் உள்ளத்தில் நீங்காது நிலை பேறாக இருப்பதும், மாயையினால் சூழ முடியாததும், விந்து நாத ஓசைக்கு அதிதூரத்தில் இருப்பதும், பூத வெளி கடந்து பரவெளியின் முடிவில் இலகுவதும், உலகத்திறகுத் தலைமையானதும் ஆகிய மெய்ப் பொருளை நாயேன் கண்டு, சிவயோகத்தைச் சேர்ந்து உய்யுமாறு உண்மை யறிவை உபதேசித்தருள்வீர்; இனி அடியேன் இவ்வூன உடம்பை வெறுக்காது வறிதே வாணாளைக் கழித்து மயங்குவது முறைமையோ?

## விரிவுரை

வாசித்துக் காணொணாதது :—

கல்வியறிவினால் இறைவனைக் காண முடியாது. அநுபவ அறிவினாலேயே காண முடியும். அவ்வநுபவ அறிவு கலையறி

வால் வரும். அநுபவ அறிவை வேண்டாது வெறுங் கலையறிவே அமையும் என்பார்க்கு அறிவுறுத்துவாராகி "வாசித்துக் காணொணாதது" என்றனர்.

"கற்றிட்டுத் தேடொணாதது" என்றார் பிறிதோரிடத்திலும்.

மணக்கு மலர்த் தேனுண்ட வண்டே போல
வளர்பரமா னந்தமுண்டு மகிழ்ந்தோ ரெல்லாம்
இணக்கமுறக் கலந்துகலந் ததீத மாதற்
கியற்கை நிலை யாததுதான் எம்மாற்கூறும்
கணக்குவழக் கனைத்தினையுங் கடந்த தந்தோ
காண்பரிதிங் கெவர்க்கு மெனக் கலைகளெல்லாம்
பிணக்கறநின் றேலமிடத் தனித்து நின்ற
பெரும்பதமே மதாதீதப் பெரியதேவே. —இராமலிங்க அடிகள்

**பூசித்துக் கூடொணாதது :—**

பூஜை செய்வதாகிய வெறுங் கிரியை நெறியால் மட்டும் இறைவனோடு கூட முடியாது. ஞானநெறி ஒன்றாலேயே இறைவனைக் கூடமுடியும். அந்த ஞானத்திற்குக் கிரியாநெறி சாதனமாகும். சரியையாற் கிரியையும், கிரியையால் யோகமும், யோகத்தால் ஞானமும், ஞானத்தால் இறைவனையும் அடையலாம்.

"ஓது சரியைக் ரியையும் புணர்ந்தவர் எவராலும்
ஓத அரிய துரியங் கடந்தது" —(ஓலமறைக) திருப்புகழ்.
"கிரியை யாளர்க்கும்.........எட்டரிதாய"
—(சரியையாளர்) திருப்புகழ்

**வாய்விட்டுப் பேசொணாதது :—**

இறைவனது தன்மை வாக்கினால் இத்தன்மைத்தென்று அறுதியிட்டுப் பேசுந் தரமுடையதன்று. உணர்ச்சியால் உணர்வினோர் உணர்தற்பாலதாம்.

"உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" —சேக்கிழார்.
"மக்கட்குக் கூறரிதானது" —திருப்புகழ்.
"மாற்றம் மனங் கழிய நின்ற மறையோனே" —மணிவாசகம்
"இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"
—மணிவாசகம்.

**மாசர்க்குத் தோணொணாதது :—**

இறைவன் மாசுடையார் மனதில் தோன்றாமல் பாலிற்படு நெய்போல மறைந்திருப்பன்.

**நேசர்க்குப் பேரானது :—**

அன்பர்கள் உள்ளத்தை விட்டு நீங்காது இறைவன் நிலை பேருக வீற்றிருப்பன்.

"இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"
—மணிவாசகம்.

கற்பகோடிகாலம் கனலுக்கு நடுவே ஊசியின்மீது நின்று ஊணுறக்கந் தவிர்த்து, பொறி புலன்களை யொடுக்கி, எலும்பு தோன்ற தவஞ் செய்வோர்க்கும், தேவர்க்கும், முனிவர்கும், வேதங்கட்கும் தன்னுருக் காட்டாது ஒளிந்து நிற்கும் அம் முதல்வன அன்புமிக்க ஞானசீலர்கள் உள்ளத்தில் கோயில் கொண்டிருப்பன்.

கற்பங்கள் பலகோடி செல்லத் தீய
 கனலினடு ஊசியின்மேற் காலையூன்றிப்
பொற்பறமெய் யுணவின்றி உறக்கமின்றிப்
 புலர்ந்தெலும்பு புலப்படஐம் பொறியை யோம்பி
நிற்பவருக் கொளித்து மறைக் கொளித்து யோக
 நீண்முனிவர்க் கொளித் தமரர்க் கொளித்து மேலாஞ்
சிற்பதத்திற் சின்மயமாய் நிறைந்து ஞானத்
 திருவாளர் உட்கலந்த தேவதேவே.
—இராமலிங்க அடிகள்

**விந்துநாத ஓசைக்கு தூரமானது :—**

சிவ தத்துவங்கள் ஐந்தனுள் அடங்குபவை விந்துவும் நாதமும். ஆன்மதத்துவங்கள 24. வித்தியா தத்துவங்கள் 7. சிவ தத்துவங்கள் 5. ஆக 36. தத்துவங்களையுங் கடந்து நிற்கும் தத்துவாதீதனுகிய இறைவன் விந்துநாத ஓசைக்கு அப்பாற்பட்டு விளங்குவன்.

"நாத விந்து கலாதீ நமோ நம" —திருப்புகழ்.

"ஆருறையு நீத்ததன்மே னிலையைப்
பேரு அடியேன் பெறுமாறுளதோ" —அநுபூதி

**ஆசைப்பட்......பணி :—**

மூவருங்காணு முழுமுதலாகிய முருகவேள் வள்ளியம்மை யாரை (களவியலை) உலகிற் கறிவுறுத்தும் பொருட்டு களவு மணம் புணர்ந்தருளினர். ஆனமாக்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் தனது உயர்நிலையினின்றும் கீழிறங்கி வந்து எளிதில் ஆட்கொள்ளும் கருணைப் பெருக்கை இது உணர்த்துகின்றது.

**வேளே :—**

ஆன்ம கோடிகளால் விரும்பத் தக்கவன்.



திருக்கழுக்குன்றம் - மலைத்தோற்றம்

**சேர்க்குப் பேரொணாதது :—**

அன்பர்கள் உள்ளத்தை விட்டு நீங்காது இறைவன் நிலைபேருக வீற்றிருப்பன்.

" இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க "
—மணிவாசகம்.

கற்பகோடிகாலம் கனலுக்கு நடுவே ஊசியின்மீது நின்று ஊணுறக்கந் தவிர்த்து, பொறி புலன்களை யொடுக்கி, எலும்பு தோன்ற தவஞ் செய்வோர்க்கும், தேவர்க்கும், முனிவர்கட்கும், வேதங்கட்கும் தன்னுருக் காட்டாது ஒளிந்து நிற்கும் அம் முதல்வன அன்புமிக்க ஞானசீலர்கள் உள்ளத்தில் கோயில் கொண்டிருப்பன்.

கற்பங்கள் பலகோடி செல்லத் தீய
கனலினடு ஊசியின்மேற் காலையூன்றிப்
பொற்பறமெய் யுணவின்றி உறக்கமின்றிப்
புலர்ந்தெலும்பு புலப்படஐம் பொறியை யோம்பி
நிற்பவருக் கொளித்து மறைக் கொளித்து யோக
நீண்முனிவர்க் கொளித் தமரர்க் கொளித்து மேலாஞ்
சிற்பதத்திற் சின்மயமாய் நிறைந்து ஞானத்
திருவாளர் உட்கலந்த தேவதேவே.
—இராமலிங்க அடிகள்

**விந்துநாத ஓசைக்கு தூரமானது :—**

சிவ தத்துவங்கள் ஐந்தனுள் அடங்குபவை விந்துவும் நாதமும். ஆன்மதத்துவங்கள் 24. வித்தியா தத்துவங்கள் 7. சிவ தத்துவங்கள் 5. ஆக 36. தத்துவங்களையுங் கடந்து நிற்கும் தத்துவாதீதனுகிய இறைவன் விந்துநாத ஓசைக்கு அப்பாற்பட்டு விளங்குவன்.

"நாத விந்து கலாதீ நமோ நம" —திருப்புகழ்.

"ஆருறையு நீத்ததன்மே னிலையைப்
பேரு அடியேன் பெறுமாறுளதோ" —அநுபூதி

**ஆசைப்பட......பணி :—**

மூவருங்காணு முழுமுதலாகிய முருகவேள் வள்ளியம்மையாரை (களவியலை) உலகிற் கறிவுறுத்தும் பொருட்டு களவு மணம் புணர்ந்தருளினர். ஆன்மாக்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் தனது உயர்நிலையினின்றும் கீழிறங்கி வந்து எளிதில் ஆட்கொள்ளும் கருணைப் பெருக்கை இது உணர்த்துகின்றது.

**வேளே :—**

ஆன்ம கோடிகளால் விரும்பத் தக்கவன்.



திருக்கழுக்குன்றம் - மலைத்தோற்றம்

மோசிக்குள் ஸோதா:—

இறைவன் சிவயோகிகளால் காணத்தக்கவன்.

## கருத்துரை

வள்ளி மணவாளரே! மயில் வாகனரே! சிவ யோகிகளால் காணத்தக்கவரே! சிராமலைச் செம்மலே! மெய்ஞ் ஞானத்தைப் போதித்து உய்வித்தருள்வீர்.

## 109

வெருட்டி யாட்கொளும் விடமிகள் புடைவையை
நெகிழ்த்த ணுப்பிகள் படிறிகள் சடுதியில்
விருப்ப மாக்கிகள் விரவிய திரவிய மிலராகல்
வெறுத்து நோக்கிகள் கபடிகள் நடமிடு
பதத்தர் தூர்த்திகள் ம்ருகமத பரிமள
விசித்ர மேற்படு முலையினு நிலையினு மெவரோடும்

மருட்டி வேட்கைசொல் மொழியினும் விழியினு
மவிழ்த்த பூக்கமழ் குழலினு நிழலினு
மதிக்கொ ணுத்தள ரிடையினு நடையினு மவமேயான்

மயக்க மாய்ப்பொருள் வரும்வகை க்ருஷிபணு
தடத்து மோக்ஷம தருளிய பலமலர்
மணத்த வார்க்கழல் கனவிலு நனவிலு மறவேனே

இருட்டி லாச்சுர ருலகினி லிலகிய
சகஸ்ர நேத்திர முடையவன் மிடியற
இரக்ஷை வாய்த்தருள் முருகப னிருகர குகவீரா
இலக்ஷ்மீச்சுர பசுபதி குருபர
சமஸ்த ராச்சிய ந்ருபபுகழ் வயமியல்
இலக்க ரேய்ப்படை முகடெமு ககபதி களிகூரத்

திருட்டு ராக்ஷதர் பொடிபட வெடிபட
எடுத்த வேற்கொடு கடுகிய முடுகிய
செருக்கு வேட்டுவர் திறையிட முறையிட மயிலேறும்

செருப்ப ராக்ரம நிதிசர வணபவ
சிவத்த பாற்கர னிமகரன் வலம்வரு
திரிச்சி ராப்பளி மலைமிசை நிலைபெறு பெருமாளே.

## பதவுரை

இருட்டு இலா = இருள் இல்லாத, சுரர் உலகினில் இலகிய = தேவ லோகத்தில் விளங்கி நிற்கும், சகஸ்ர நேத்திரம் உடையவன் = ஆயிரங் கண்களை உடைய இந்திரனுடைய, மிடி அற = வறுமைத் துயரம் நீங்குமாறு, இரட்சை வாய்த்து அருள் = அவனுக்குப் பாது காப்பைத் தந்தருள், முருக = முருகக் கடவுளே! பன் இருகர = பன்னிரண்டு கரங்களையுடையவரே! குக = குகமூர்த்தியே! வீரா = வீரரே! இலட்சுமி ஈச்சுர = இலட்சுமீகரம் விளங்குந் தலைவரே! பசுபதி = சிவபெருமானுக்கு, குருபர = குருமூர்த்தியே! சமஸ்த ராச்சிய ந்ருப = சகல ராஜ்யங்களுக்கும் அரசரே! புகழ் வயம் இயல் = புகழும் வெற்றியும் பொருந்திய, இலக்கர் ஏய்படை முகடு எழ = இலக்கம் வீரர்கள் கூடிய சேனையின் மேலே பறந்துலவும், சகபதி களி கூர = பறவையரசனாகிய கருடன் மகிழ்ச்சி மிகவும் அடைய, திருட்டு ராட்சதர் பொடிபட = திருட்டுத்தனமுள்ள இராட்சதர்கள் பொடியாகுமாறும், வெடிபட = பூமிவெடிக்குமாறும், எடுத்த வேல் கொடு = திருக்கரத்தில் எடுத்த வேலாயுதத்தைக் கொண்டு, கடுகிய முடுகிய = கடுமையுடன் துரத்திக்கொண்டு வந்த செருக்கு வேட்டுவர் = அகங்கரித்த வேடர்கள், திறைஇட = திறை தந்து வணங்கும் படியும், முறைஇட = முறையிட்டு வேண்டும்படியும் செய்த, மயில் ஏறும் செரு பராக்ரம = மயிலின்மீது ஏறுகின்ற போர் வீரரே! நிதி = செல்வமே! சரவணபவ = சரவணபவ! சிவந்த பாற்கரன் = சிவந்த ஒளியுடைய சூரியனும், இமகரன் வலம்வரும் = சந்திரனும் வலம் வருகின்ற, திரிச்சிராப்பள்ளி மலைமிசை நிலைபெறு = திரிசிராப்பள்ளி என்ற மலையின்மீது நிலைத்து வாழுகின்ற, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! வெருட்டி ஆட்கொள்ளும் = தம்பால் வந்தவர்களை வெருட்டி அடிமைப்படுத்தவல்ல, விடமிகள் = நஞ்சையொத்தவர்கள், புடைவையைநெகிழ்த்து = ஆடையைத் தளர்த்தி, அணுப்பிகள் = ஏமாற்றுபவர்கள், படிறிகள் = பொய் சொல்லுபவர்கள், சடுதியில் விருப்பம் ஆக்கிகள் = வெகுவேகத்தில் தம்மிடம் விருப்பம் வரும்படிச் செய்பவர்கள், விரவிய திரவியம் இலர் ஆனால் = நிறைந்த செல்வம் இல்லாதவராயின், வெறுத்து நோக்கிகள் = வெருப்புடன் பார்ப்பவர்கள், கபடிகள் = வஞ்சனை நினைவு உடையவர்கள், நடம் இடுபதத்தர் = நடனஞ்செய்யுங் காலையுடையவர்கள், தூர்த்திகள் = காமமுடையவர்கள் ஆகிய பொதுமாதரின், ம்ருகமத பரிமள = கஸ்தூரி முதலிய நறுமணம் வீசும், விசித்ரம் மேல்படு முலையினும் = அழகு மேம்பட்டு

விளங்கும் தனத்திலும், நிலையிலும் = நிற்கின்ற வகையிலும், எவரோடும் = யாரையும், மருட்டி வேட்கை சொல் மொழியினும் = மயக்குவித்து ஆசை வார்த்தைகளைச் சொல்லும் சொற்களினாலும், விழியினும் = கண்களிலும், அவிழ்த்த பூகமழ் குழலினும் = மலர்ந்த பூக்கள் மணக்கும் கூந்தலிலும், நிழலினும் = ஒளியிலும், மதிக்க ஒணு = மதிக்க முடியாத, தளர் இடையினும் = தளர்ந்த இடையினும், நடையினும் = நடையினாலும், அவமே யான் மயக்கம் ஆய் = அடியேன வீணுக மயக்கமடைந்து, பொருள் வரும் வகை க்ரிஷிபணும் தடத்து = பொருளைச் சேகரிக்க வேண்டிய முயற்சிகளைச் செய்து கொண்டிருந்த வேளையில், மோட்சம் அது அருளிய = அடியேனுக்கு வீடு பேற்றை அருள் புரிந்த, பல மலர் மணத்த = அநேக மலர்கள் நறுமணம் வீசும், வார்கழல் = நீண்ட திருவடிகளை, கனவிலும் நனவிலும் மறவேனே = அடியேன் கனவிலும் நனவிலும் மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

இருளையில்லாத தேவவுலகில் விளங்கும் ஆயிரங் கண்களுடைய இந்திரனுடைய வறுமை நீங்குமாறு பாதுகாவல் செய்தருளிய முருகக் கடவுளே! பன்னிரு கரங்களையுடையவரே! குகப் பெருமானே! வீர மூர்த்தியே! இலட்சுமிகரம் விளங்கும் தலைவரே! பசுபதியாம் சிவபெருமானுடைய குருநாதரே! எல்லா ராஜ்யங்கட்கும் அரசரே! புகழும் வெற்றியும் உடைய இலக்கம் வீரர்கள் சேர்ந்த சேனையின் மேலே பறந்து உலவும், பறவையரசனாகிய கருடன் மிகுந்த மகிழ்ச்சியடைய, திருட்டுக்குணமுடைய அசுரர்கள் அடிபட்டுச் சிதறிப் போகுமாறு எடுத்த வேலினால், வேகத்துடன் துரத்தி வந்த அகங்காரமுள்ள வேடர்கள் வணங்கியும் முறையிட்டும் துதிக்க மயிலில் ஏறும் போர் வீரரே! செல்வமே! சரவணபவ! சிவந்த சூரியனும் சந்திரனும் வலம் வருகின்ற திரிசிராப்பள்ளி மலையின் மீது நிலையாக அமர்ந்துள்ள பெருமிதம் உடையவரே! தம்மிடம் வந்தவர்களை வெருட்டி அடிமைப்படுத்த வலல விஷமிகள், உடையைத் தளர்த்தி ஏமாற்றுபவர்கள், பொய்சொல்லுபவர்கள், அதிவேகமாக மோகத்தையுண்டாக்குபவர்கள், திரண்டுள்ள பணத்தைக் கொடுக்கவில்லையானல், வெறுப்பாகப் பார்ப்பவர்கள், வஞ்சனையுடையவர்கள், நடனம் ஆடும் காலையுடையவர்கள், காமிகள் ஆகிய பொது மாதர்களின், கஸ்தூரி வாசனை வீசும் அழகுமேம்பட்ட தனத்திலும், அவர்கள் நிறகும் நிலையிலும், யாரையும் மயக்கி ஆசை வார்த்தைகளைச் சொல்லுகின்ற சொற்களிலும், கண்களிலும், விரிந்த மலர் மணக்கும் கூந்தலிலும், ஒளியிலும், மதிக்க முடியாத தளர்ந்த இடையிலும், ஆடையிலும், அடியேன் வீணுக மயங்கி, அவர்கட்குத் தரும்பொருட்டு பொருளைத் தேடுகின்ற காலத்து, அடியேனுக்கு வீடு பேற்றை வழங்கிய, மலர்களின்

நறுமணம் வீசும் உமது நீண்ட திருவடிகளைக் கனவிலும் நனவிலும் மறக்க மாட்டேன்.

## விரிவுரை

இத்திருப்புகழ் அருணகிரியாரின் சரித்திரக் குறிப்பு உடையது.

முதல் மூன்று அடிகளில் பொதுமகளிரது இயல்புகளைக் கூறினார்.

நான்காம் அடியில் தாம் மாதர் மயக்கில் சிக்குண்டிருந்த போது முருகப்பெருமானுடைய திருவடி அவரை ஆட்கொண்டது எனக் கூறுகின்றார். அத்தகைய திருவடியைக் கனவிலும் நனவிலும் மறவேன் என்று நன்றி பாராட்டும் முறையில் பாடுகின்றார்.

**இருட்டிலாச் சுரருலகு :—**

தேவவுலகில் இருள், துன்பம், வெப்பம் இவைகள் இரா. புண்ணியஞ் செய்தவர்கள் அங்கு இன்பத்தை நுகர்வர்.

**சகஸ்ர நேத்திர முடையவன் மிடியற இரட்சைவாய்த்தருள் முருக:—**

ஆயிரங் கண்களுடைய இந்திரன் சூரபன்மனால் நாடு நகரம கவரப் பெற்று வறியவன் ஆனான். அவனுடைய வறுமையையும் சிறுமையையும் போக்கி கந்தவேள் காத்தருளினார்.

**இலக்கரேய்ப்படை :—**

நவவீரர்கள் நவசக்திகளிடம் தோன்றியபோது வேர்வையில் இலட்சம் வீரர்கள் தோன்றினார்கள். இவர்கள் முருகப்பெருமானுடைய பரிசனங்கள்.

**வேட்டுவர் திறையிட முறையிட :—**

இரவில் முருகவேள் வள்ளியம்மையைக் களவு கொண்டு சென்றபோது, வேலவன் என்று அறியாத வேடர்கள், துரத்திக்கொண்டு போய் போர் புரிந்தார்கள். முருகனால் அழிந்தார்கள். வள்ளிபிராட்டியால் உய்வு பெற்று எழுந்தார்கள். முருகன் என்பதை உணர்ந்தபின். அவரது அடிமலர் மீது வீழ்ந்து "ஐயனே! எங்கள் குலதெய்வமே! நீர் எங்கட்கு மருகனாக நாங்கள் என்ன தவஞ் செய்தோமோ? தாயே பிள்ளைக்கு நஞ்சு ஊட்டினால் யார் என்ன செய்ய முடியும்! வேலியே பயிரை மேயலாமா? எங்கள் குடிக்குப் பழி வரலாமா? தேவரீர் எங்கள் சீறூருக்கு எழுந்தருளி, எங்கள் குலக்கொடியை நாங்கள் தர நீ மணஞ் செய்துகொள்ள வேண்டும்" என்று வணங்கி முறையிட்டார்கள்.

## கருத்துரை

திரிசிராப்பள்ளி மேவுந் தேவா! உனது அடிமலரைக் கனவிலும் நனவிலும் மறவேன்.

## திருக்கற்குடி

இத்திருத்தலம் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது. உய்யக்கொண்டான் என்று இப்போது வழங்குகின்றது. இது வயலூருக்குப் போகும் வழியில் உள்ளது மூவர் தேவாரமும் பெற்றது.

## 110

குடத்தைத் தகர்த்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்
குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துத் தவர்சோரப்

புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட்ட கச்சுத் தனமாதர்
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரித்துப் பதத்தைத் தருவாயே

கடத்துப் புனத்துக் குறத்திக்கு மெத்தக்
கருத்திச்சை யுற்றுப் பரிவாகக்
கனக்கப்ரி யப்பட் டகப்பட்டு மைக்கட்
கடைப்பட்டு நிற்கைக் குரியோனே

தடத்துற்ப வித்துச் சுவர்க்கத்த லத்தைத்
தழைப்பித்த கொற்றத் தனிவேலா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே.

## பதவுரை

கடத்து=காட்டில் உள்ள, புனத்து=தினைப்புனத்தில் இருந்த, குறத்திக்கு=வள்ளிபிராட்டிக்கு, மெத்த கருத்து இச்சை உற்று=மிகவும் திருவுள்ளத்தில் விருப்பங்கொண்டு, பரிவு ஆக=அன்பாக, கனக்க ப்ரியப்பட்டு=மிகவும் காதல்கொண்டு, அகப்பட்டு=அம் மாதரசியின் அன்பு வலையில் சிக்குண்டு, மை கண் கடைப்பட்டு=மையணிந்த கடைக் கண்ணில் வசப்பட்டு, நிற்கைக்கு உரியோனே=

நிற்பதற்கு ஆளானவரே! தடத்துஉற்பவித்து=சரவணப்பொய்கை யில் உதித்து, சுவர்க்க தலத்தை தழைப்பித்து=பொன்னுலகை வாழ வைத்த, கொற்ற தனி வேலா=வீரம் பொருந்திய ஒப்பற்ற வேலா யுதரே! தமிழ்க்குக் கவிக்கு=தமிழுக்கும், தமிழ்க் கவிகட்கும். புகழ் செய்பதிக்கு=புகழ் மிகுந்த வயலூருக்கும், தரு கற்குடிக்கு=மரங்கள் நிறைந்த கற்குடி மலைக்கும் தலைவரான, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! குடத்தை தகர்த்து=குடத்தை நொறுக்கியும், களிற்றை துரத்தி=யானையைத் துரத்தியும், குவட்டை செறுத்து= மலையை அடக்கியும், ககசால குலத்தை குமைத்து=பட்சிகளின் கூட்டத்தின் குலத்தை வருந்த வைத்தும், பகட்டி=ஆடம்பரமாக இருந்தும், செருக்கி=அகந்தை பூண்டும், குருதத்துவத்து தவர் சோர=குருவாக இருந்து உண்மைகளை உரைக்கும் தவமுனிவர்களும் சோர்ந்து மயங்கும்படி, புடைத்து=பருத்து, பணைத்து=செழிப்புற்று, பெருக்க கதித்து=மிகவும் எழுச்சியுற்று, புறப்பட்ட=வெளித் தோன்றுவதும், கச்சு=இரவிக்கையணிந்ததுமான, தனமாதர்= தனத்தையுடைய பொது மாதர்களின், புணர்ச்சி சமுத்ர=சேர்க்கை யென்ற கடலில். திளைப்பு அற்று இருக்க=முழுகுதலை ஒழித்து இருக் கும்படி, புரித்து பதத்தை தருவாயே=அருள்புரிந்து உமது திருவடி யைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

காட்டில் தினைப்புனத்தில் இருந்த வள்ளி பிராட்டியின் மேல் திருவுள்ளத்தில் மிகவும் விருப்பங்கொண்டு, அன்போடு மிக்க காதல் பூண்டு, அவருடைய அன்பு வலையில் அகப்பட்டு மைபூசிய கடைக் கண்ணின் வசமாகி நிற்பதற்கு உரியவரே! சரவணப் பொய்கையில் உதித்துப் பொன்னுலகை வாழ வைத்த வீரம் பொருந்திய ஒப்பற்ற வேலாயுதரே! தமிழுக்கும கவிகட்கும், புகழ்பெற்ற வயலூருக்கும, மரங்கள் நிறைந்த திருக்கற்குடிக்கும் தலைவராக விளங்கும் பெருமிதமுடைய வரே! குடத்தை நொறுக்கியும், யானையைக் காட்டிற்குப் போகு மாறு துரத்தியும் மலையை அடக்கியும், பறவைகள் கூட்டத் தின் குலத்தை வருந்த வைத்தும், ஆடம்பரமும் அகந்தையும் கொண்டும், குருவாக இருந்து உண்மைப் பொருளை யுணர்த்து கின்ற தவமுனிவர்களும் சோர்வு அடையுமாறு பருத்தும், செழிப்புற்றும், மிகவும் உயர்ந்தும் வெளிப்பட்டுத் தோன்று வதும், இரவிக்கையுடன் கூடியதுமான தனத்தையுடைய பொது மாதர்களின் கலவிக் கடலில் முழுகுவது நீங்கி அருளில் சேர்ந்து இருக்கும்படி அருள்புரிந்து உமது பாத மலரைத் தருவீராக.

## விரிவுரை

**குடத்தைத் தகர்த்து :—**

இத்திருப்புகழில் முதல் மூன்றடிகளில் தனத்தின் சிறப்பைக் கூறுகின்றார்.

குடம் உடையும் இயல்புடையது. தனம் உடையாதது.

ஆதலால் இயல்பாக குடம் உடைவதை, தனம் தனக்கு நிகராகாமல் தோல்வியுறச் செய்து உடைப்பதாகக் கூறுகின்றார்.

**களிற்றைத் துரத்தி :—**

யானையின் மத்தகம் தனத்துக்கு உவமையாகாததால் யானைகளை இத் தனம் காட்டிற்கு விரட்டியடித்துவிட்டது. இயல்பாகக் காட்டில் யானை வாழ்கின்றது. தனம் அதை ஓட்டி விட்டதாகக் கூறுகின்றது. தற்குறிப்பேற்றம் என்ற அணி.

**குவட்டைச் செலுத்து :—**

மேருவுடன் பகைத்த விந்தமலை வளர்ந்து நின்றது. அகத்தியர் அம்மலையை அடக்கிப் பாதலம் புகுமாறு செய்தார். இந்திரன் மலைகளின் சிறகுகளை அரிந்து அடக்கினன். அதனால மலைகளும் தனத்துக்கு நிகராக முடியாமல் போய் விட்டன.

**ககசாலக் குலத்தைக் குமைத்து :—**

ககம்—பட்சி. சாலம—கூட்டம்.

பறவைகளின் கூட்டத்தின் தலைமையானது சக்கரவாகப் புள். அது தனத்துக்கு உவமை கூறப் பெறுவது. அது பறக்கும் இயல்புடையது. தனம் பறவாது நிலைபெற்றிருப்பதனால், அந்தச் சக்கரவாகப்பட்சியையும் வருந்த வைத்தது.

"வல்லுச் சக்கரம் மதன்மகுடம்" —உசிதசூடாமணி.

"சக்கிரம் வைத்தப்பொற்குட மொத்திட்டுத்திகழ் முலைமேவும்"
—திருப்புகழ்.

**பகட்டி :—**

பகட்டுதல்—ஆடம்பரம் செய்தல்; நன்றாக அலங்கரிக்கப் பட்டு விளங்குவது தனம்.

**குருத்தத்துவத்துத் தவர் சோர :—**

குருவாகவும், மடாதிபதிகளாவும், துறவிகளாகவும் உள்ள முனிவர்களும் சோர்ந்து பதைபதைக்கச் செய்யவல்லது தனம்.

"துறவினர் சோரச்சோர நகைத்து" —திருப்புகழ்.

புடைத்துப்பணைத்துப் பெருக்கக் கதித்து புறப்பட்ட கச்சுத் தனமாளுர் :—

பருத்தும் செழித்தும் மிகவும் உயர்ந்தும் தோன்றுகின்ற தனத்தையுடைய பொதுமாதர்கள்.

தடத்துற்பவித்து :—

தடம்—குளம்.

சரவணப் பொய்கையில் செந்தாமரைக் கமலத்தில் முருகவேள் மூவருந் தேவரும் போற்ற அவதரித்தருளினார்.

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொணுமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடு நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப்போதில் வீற்றிருந் தருளினுனே.

—கந்தபுராணம்.

தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச் செய்ப்பதிக்குத் தருக்கற் குடிக்கும் பெருமாளே :—

தமிழ்க்குப் பெருமாளே !

கவிக்குப் பெருமாளே.

செய்ப்பதிக்குப் பெருமாளே !

கற்குடிக்குப் பெருமாளே !

என்று விரித்துக் கொள்க.

அருணகிரியாருக்கு இரண்டாவது முறையாக வயலூரில் முருகன் அருள புரிந்து வயலூர்ரையும் வைத்துத் திருப்புகழ் பாடுமாறு பணித்தருளினர்.

அதனுல் எந்தத் தலத்தில் சென்று தெரிசித்தாலும் "வயலூரா ! வய்லூரா" என்று மறவாமல் வயலூரைப் பாடுவாராயினர்.

திருச்சிராப்பள்ளிக்கு இப்போது கிடைத்துள்ள பாடல்கள் பதினைந்து. இவற்றுள் ஒன்பது திருப்புகழில் வய்லூரைப் பற்றிக் கூறியிருக்கின்றார்

இது போல் வயலூருக்கு அடுத்துள்ள இந்தத் திருக்கற்குடி என்ற தலத்துத் திருப்புகழிலும் "வயலூருக்குத் தலைவரே" என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

தமிழுக்குத் தலைவன், தமிழ்க் கவிக்குத் தலைவன், வயலூருக்குத் தலைவன், கற்குடிக்குத் தலைவன் முருகன்.

கருத்துரை

திருக்கற்குடி மேவுந் திருமுருகா ! உனது பாதமலரைத் தந்தருளுவாய்.



திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலும், தெப்பக்குளமும்.

## 111

நெறித்துப் பொருப்புக் கொத்த
முலைக்குத் தனத்தைக் கொட்டி
நிறைத்துச் சுகித்துச் சிக்கி — வெகுநாளாய்

நினைத்துக் கொடத்துக் கத்தை
யவத்தைக் கடுக்கைப் பெற்று
நிசத்திற் சுழுத்திப் பட்ட — அடியேனை

இறுக்கிப் பிடித்துக் கட்டி
யுதைத்துத் துடிக்கப் பற்றி
யிழுத்துத் துவைத்துச் சுற்றி — யமதூதர்

எனக்குக் கணக்குக் கட்டு
விரித்துத் தொகைக்குட் பட்ட
இலக்கப் படிக்குத் தக்க — படியேதான்

முறுக்கித் திருப்பிச் சுட்டு
மலத்திற் புகட்டித் திட்டி
முழுக்கக் கலக்கப்பட்டு — அலையாமல்

மொழிக்குத் தரத்துக் குற்ற
தமிழ்க்குச் சரித்துச் சித்தி
முகத்திற் களிப்புப் பெற்று — மயிலேறி

உறுக்கிச் சினத்துச் சத்தி
யயிற்குத் தரத்தைக் கைக்கு
ளுதிககப் பணித்துப் பக்கல் — வருவாயே

உனைச்சொற் றுதிக்கத் தக்க
கருத்தைக் கொடுப்பைச் சித்தி
யுடைக்கற் குடிக்குட் பத்தர் — பெருமாளே.

### பதவுரை

சித்தி உடை கற்குடிக்குள் = சித்திகளையுடைய திருக்கற்குடி என்ற தலத்தில் வாழும், பத்தர் = அன்பர்கள் போற்றும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! நெறித்து = மோகத்தால் மனம் வளைந்து, பொருப்புக்கு ஒத்த = மலைக்கு நிகரான, முலைக்கு தனத்தை கொட்டி = தனத்துக்காகத் தனத்தை நிரம்பக் கொட்டிக் கொடுத்து, நிறைத்து சுகித்து = நிரம்பவும் இன்பத்தை அநுபவித்து, சிக்கி =

ஆசை வலையில் அகப்பட்டு, வெகு நாளாய் = பல நாள்களாக, நினைத்துக்கொடு = அந்த இன்பத்தையே நினைத்துக்கொண்டு, அத்துக்கத்தை = அந்தத் துன்பங்களுக்கும், அவத்தைக்கு = வேதனைக்கும், அடுக்கை பெற்று = ஆளாகி, நிசத்தில் சுழுத்திபட்ட = உண்மையான மரணத் தூக்கத்தையடைந்த, அடியேனை = அடியேனை, யமதூதர் = இயமனுடைய தூதர்கள், இறுக்கி பிடித்துக் கட்டி = அழுத்தமாகப் பிடித்துக் கட்டியும், உதைத்தும் = காலால் உதைத்தும், துடிக்க பற்றி = துடிதுடிக்கப் பற்றியும், இழுத்து சுற்றி வைத்து = சுற்றிநின்று இழுத்தும் மிதித்தும், எனக்குக் கணக்கு கட்டு விரித்து = என்னுடைய கணக்குக் கட்டை விரித்துக் காட்டியும், தொகைக்கு உட்பட்ட இலக்கப்படிக்குத் தக்கபடியே = எனது பாவங்களைக் குறித்துள்ள ஏட்டில் உள்ள எண்ணிக்கைக்கு ஏற்றபடியே, முறுக்கி = என்னை முறுக்கியும், திருப்பி சுட்டு = திருப்பித் திருப்பி நெருப்பில் சுட்டும் மலத்தில் புகட்டி = மலக் குழியில் அழுத்தியும், திட்டி = வைதும், முழுக்க கலக்கப்பட்டு அலையாமல் = முழுதும் என்னை கலக்கமுறச் செய்ய அக் கலக்கத்தில் சிறியேன் அலையாத வண்ணம், மொழிக்கு = அடியேனுடைய மொழியையும், தரத்துக்கு உற்ற தமிழ்க்கு = தகுதியுள்ள தமிழையும், சரித்து = அங்கீகரித்து ஏற்றுக்கொண்டு, சித்தி முகத்தில் களிப்பு பெற்று = வீடு பேற்றைத் தரும் திருமுகத்தில் மகிழ்ச்சியுடன், மயில் ஏறி = மயிலின்மீது ஏறி, உறுக்கி சினத்து சத்தி அயிற்கு = தண்டிக்கும் சினம் வாய்ந்த ஞான வேலை, தரத்தை கைக்கு உள் = தகுதியுடன் திருக்கரத்தில், உதிக்க பணித்து = தோன்ற எடுத்துக்கொண்டு, பக்கல் வருவாயே = அடியேனுடைய அருகில் வந்தருளுவீராக, உனை சொல் துதிக்கத்தக்க = உம்மை நல்ல சொற்களைக் கொண்டு துதிசெய்யத்தக்க, கருத்தைக் கொடுப்பை = கருத்தைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

எட்டுச் சித்திகளும் அமைந்த திருக்கற்குடியென்ற திருத்தலத்தில் எழுந்தருளிய அன்பர்கள் வணங்கும் பெருமிதமுடையவரே! மோகத்தால் மனம் வளைந்து, மலைக்கு ஒப்பான தனத்துக்காக, தனத்தைக் கொட்டிக் கொடுத்து, நிரம்ப இன்பத்தை அநுபவித்து, அதில் அகப்பட்டு, பல நாள்களாக அந்த இன்பத்தையே நினைத்துக்கொண்டு, துக்கங்களுக்கும் வேதனைகளுக்கும் ஆளாகி, உண்மையில் மரணத்தையடைந்த அடியேனை, யமதூதர்கள் இறுக்கிக் கட்டிப் பிடித்துக் கொண்டு போய், உதைத்தும், துடிதுடிக்கப் பற்றியும், சுற்றி நின்று இழுத்து மிதித்தும், என் கணக்குக் கட்டை விரித்துக் காட்டியும், அந்த ஏட்டில் உள்ள என் பாவச் செயல்களுக்கு ஏற்றவாறு, என்னை முறுக்கியும், திருப்பித் திருப்பிச் சுட்டும், மலக் குழியில் அழுத்தியும், திட்டியும், முழுவதும் கலங்க வைக்கும் அக்கலக்கத்தில் அடி

யேன் அலையாத வண்ணம், அடியேனுடைய மொழியையும், தகுதியுள்ள தமிழையும் ஏற்றுக்கொண்டு, வீடுபேற்றைத் தரும் திருமுகத்தில் மகிழ்ச்சியுடன் மயிலில் ஏறி, தண்டிக்குங் கோபம் வாய்ந்த சக்தி வேலைத் தகுதியுடன் திருக்கரத்தில் தோன்ற எடுத்துக்கொண்டு, அடியேனுடைய அருகில் வந்தருளுக; உம்மை இனிய சொற்களைக் கொண்டு துதிப்பதற்குத் தகுந்த கருத்தைத் தந்தருளுக.

## விரிவுரை

இத்திருப்புகழில் இயம தண்டனையை அடிகளார் விரித்துக் கூறியருளுகின்றார். முன் திரிசிராமலைத் திருப்புகழ் "புவனத் தொரு" என்ற பாடலிலும் இவ்வாறு கூறியருளினார்.

**நெறித்து :—**

நெறிதல்—வளைதல்.

மோகத்தால் மனம் குழைந்து மனிதன் வளைகின்றான். மகளிரிடம் வளைந்து நிற்கின்றான்.

**தனத்தைக் கொட்டி :—**

விலைமகளிரின் தனத்தை விரும்பி நிரம்பவும் தனத்தைக் கொட்டித் தந்து மனிதர் மகிழ்ந்து மயங்குகின்றார்கள்.

**சுகித்து சிக்கி :—**

அம்மாதரிடம் இன்புற்று, அவர்களின் மையல் வலையில் சிக்கிக் கொள்ளுகின்றார்கள்.

> "திண்ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டில்
> கண்ணிவைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ ?"
>
> —தாயுமானார்.

**வெகுநாளாய் நினைத்து கொடு :—**

மனிதன் இறைவனையும், தான் வந்த கருமத்தையும் நினையாமல், முன்னுகர்ந்த போக இன்பத்தையே சதா நினைந்து நெஞ்சம் புண்ணாகி மண்ணாகின்றான்.

**நிசத்திற் சுழுத்திப்பட்ட அடியேனை :—**

தினந்தினஞ் சுழுத்தி (தூக்கம்) வருகின்றது. முடிவில் பெரிய சுழுத்தி மரணத் தூக்கம் வந்து விடுகின்றது. அதுதான் உண்மையான தூக்கம்.

**இறுக்கிப் பிடித்துக் கட்டி :—**

யமதூதர்கள், பாவிகளைப் பாசக் கயிற்றால் சேர்த்து இறுக்கிக் கட்டிப்பிடித்து இழுத்து, தண்ணீர் இல்லாத சுடு

மண்ற்பாதையில். தண்ணீர் தண்ணீர் என்று ஆன்மா தவிக்கத் தவிக்க அடித்தும் உதைத்தும் துன்புறுத்திக் கொண்டு செல்லுவார்கள்.

> ''விடாய்ப்படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும்
> வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே''
> —கந்தரலங்காரம்.

**எனக்குக் கணக்குக் கட்டு விரித்து :—**

என்னுடைய பாவச் செயல்கள் நிரம்பிய கணக்குக் கட்டுகளை எடுத்துக் காட்டுவார்கள் யமதூதர்கள்.

ஆன்மாக்கள் நினைப்பவை, பேசுபவை, செய்பவை யனைத்தும் அக்கணக்கில் தானே பதிவாகும். இயம தூதர்கள் அதைக் காட்டி, அக்கணக்கின்படி தண்டிப்பார்கள்.

ஆதலால் தீய எண்ணங்களை மனதில்கூட நினையாமல் எப்போதும் எம்பெருமானையே நினைக்க வேண்டும்.

**முறுக்கித் திருப்பிச் சுட்டு :—**

முகத்தைப் பின்புறமாக முறுக்கியும், திருப்பித் திருப்பி நெருப்பில் சுட்டும் துன்புறுத்துவார்கள்.

**மலத்தில் புகட்டி :—**

சொல்ல முடியாத துர்நாற்றமுடைய மலக்குழியில் அழுத்தி வேதனைப்படுத்துவார்கள்.

**திட்டி :—**

''பெறுதற்கரிய மனிதப் பிறவியெடுத்து அப்பிறப்பை வீணாக்கிய பாவி! சண்டாளா! மூடனே! குடிகேடனே'' என்று வைவார்கள்.

> ''மயலது பொலாத வம்பன் விரகுடைய னுகுமென்று
> வசைகளுடனே தொடர்ந்து அடைவார்கள்'' —திருப்புகழ்.

**முழுக்கக் கலக்கப்பட்டு அலையாமல் :—**

''இத்தகைய நரக வேதனையில் அடியேன் முழுவதும் துன்புற்று அலையாத வண்ணம் காத்தருள்வாய்'' என்று சுவாமிகள் முருகனை வழுத்துகின்றார்.

**மொழிக்குத் தரத்துக்குற்ற மொழிக்கு :—**

இனிய மொழியையும். தரமுள்ள தமிழ் மொழியையும் ஏற்றுக் கொண்டு மயிலின் மீது வந்தருள்க.

**துதிக்கத்தக்க கருத்தைத் தொடுப்பை :—**

முருகனைத் துதிக்கத்தக்க உயர்ந்த எண்ணத்தைத் தந்தருள்க என்று வேண்டுகின்றார்.

**சித்தியுடைக் கற்குடி :—**

திருக்கற்குடி என்ற திருத்தலம் அஷ்டமா சித்திகளையும் உடைய அரிய தலம்.

"அட்டமாசித்தி அணைதரு காளத்தி" என்று திருஞான சம்பந்தர் திருக்காளத்தி மலையைச் சிறப்பிக்கின்றார்.

## கருத்துரை

திருக்கற்குடி இறைவா! யமவாதனையகற்றி யாண்டருள்வீர்.

## இரத்தினகிரி

(வாட்போக்கி)

இத்தலம் திரிச்சிராப்பள்ளி மாவட்டத்தில் குளித்தலைக்குத் தெற்கு 6½ கல் தொலைவில் இருக்கின்றது. அப்பர் தேவாரம் பெற்றது. மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஒரு கலம்பகம் பாடியுள்ளார்கள். ஐயர்மலை, சிவாயமலை, என்ற பேர்களும் உண்டு.

### 112

கயலைச் சருவிப் பிணையொத் தலர்பொற் கமலத் தியல்மைக் — கணினாலே
கடிமொய்ப் புயலைக் கருதிக் கறுவிக் கதிர்விட் டெழுமைக் — குழலாலே
நயபொற் கலசத் திணைவெற் பிணைமிக் குளநற் பெருசெப் — பிணையாலே
நலமற் றறிவற் றுணர்வற் றனனற் கதியெப் படிபெற் — றிடுவேனோ
புயலுற் றியல்மைக் கடலிற் புகுகொக் கறமுற் சரமுய்த் — தமிழ்வோடும்
பொருதிட் டமரர்க் குறுதுக் கமும்விட் டொழியப் புகழ்பெற் — றிடுவோனே
செயசித் திரமுத் தமிழுற் பவநற் செப்முற் பொருளுற் — றருளவாழ்வே
சிவதைப் பதிரத் தினவெற் பதனிற் றிகழ்மெய்க் குமரப் — பெருமாளே.

## பதவுரை

புயல் உற்று இயல்=மேகங்கள் படியுந் தன்மையுடைய, மை கடலில்=கரிய சமுத்திரத்தில், புகு கொக்கு அற=புகுந்து நின்ற மாமரம் அறும்படி, முன் சரம் உய்த்து=முன்னாளில் வேலை விடுத்து, அமிழ் வோடும்=அடக்கி ஆழ்த்தும் ஆற்றலுடன், பொருதிட்டு=போர் செய்து, அமரர்க்கு உறு துக்கமும் விட்டு ஒழிய=தேவர்கட்கு இருந்த துன்பம் அவர்களைவிட்டு அகலுமாறுசெய்த, புகழ்பெற்றிடுவோனே=புகழைப் பெற்றவரே! செய சித்திர=வெற்றியைத் தரும் அழகிய, முத்தமிழ் உற்பவ=முத்தமிழ்ப் பாடல்களின் மூலம் வெளிப்படும், நல் செபம்=சிறந்த மந்திரங்களையும், முன் பொருளும் உற்று=மேலான பொருளையும் அடைந்து, அருள் வாழ்வே=அவற்றை உலகுக்கு வழங்கிய வாழ்வே! சிவதைபதி=சிவாயம் என்று கூறப்படும், ரத்தின வெற்பு அதனில்=இரத்தினகிரியில், திகழ் மெய் குமர=விளங்கும் உண்மை வடிவாம் குமாரக் கடவுளே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கயலை சருவி=கயல் மீனோடு போர்செய்து, பிணைஒத்து=பெண்மானை நிகர்த்து, அலர் பொன் கமலத்து இயல்=அழகிய தாமரை மலரின் தன்மையைக் கொண்ட, மை கணினாலே=மை பூசிய கண்ணினாலும், கடி மொய் புயலை கருதி கறுவி=விளக்கமுற்று நெருங்கிய மேகத்தை நோக்கிக் கோபித்து, கதிர் விட்டு எழும்=ஒளி வீசி எழுந்து திகழ்கின்ற, மை குழலாலே=கரிய கூந்தலாலும், நய பொன் கலசத்தினை=இனிமையும் அழகுங்கொண்ட குடத்தையும், வெற்பினை=மலையையும், மிக்கு உள=மேம்பாடுள்ள. நல்பெரு செப்பு=நல்ல பெரிய கரகத்தையும் ஒத்த, இணையாலே=இரு தனங்களாலும், நலம் அற்று=அடியேன் நலங்களை இழந்து, அறிவு அற்று=நல்லறிவையும் இழந்து, உணர்வு அற்றனன்=மெய்யுணர்வையும் இழந்துவிட்டேன், நல் கதி எப்படி பெற்றிடுவேனோ=நல்ல முத்தியை எப்படிப் பெறுவேனோ?

## பொழிப்புரை

மேகங்கள் படியுந் தன்மையுடைய கரிய கடலில் புகுந்து மாமரமாய் நின்ற சூரபன்மன் மாயும்படி முன்னாள் வேலாயுதத்தை விடுத்து போர் புரிந்து, தேவர்கட்கு இருந்த துயரத்தைக் களைந்து புகழ் பெற்றவரே! வெற்றியைத் தரும் அழகிய முத்தமிழ்ப் பாடல்களின் மூலம் வெளிப்படும் சிறந்த மந்திரங்களையும், மேன்மையான பொருளையும் உலகுக்கு அருளிய செல்வமே! சிவாயம் என்ற இரத்தினகிரியில் விளங்குகின்ற, உண்மைப் பொருளாகிய குமாரக் கடவுளே! பெருமிதமுடையவரே! கயல் மீனோடு போர்புரிந்து, பெண்மானை நிகர்த்து, அழகிய தாமரை மலரின் தன்மையுடைய மை பூசிய கண்ணினாலும், விளக்கமுற்று நெருங்கிய மேகத்தை நோக்கிக் கோபித்து ஒளி

வீசி எழுந்து திகழும் கரிய கூந்தலினாலும், இனிமையும் அழகும் படைத்த குடத்தையும், மலையையும், மேம்பாடு உள்ள நல்ல கரகத்தையும் ஒத்த இரு தனங்களாலும், நலமும் மெய்யறிவும் மெய்யுணர்வும் அடியேன் இழந்தேன்; இனி நான் நற்கதியை எப்படிப் பெறுவேனோ?

## விரிவுரை

**கயலைச் சருவி :—**

பெண்களின் கண்கள் மீனைக் காட்டிலும் புரட்சியும் பொலிவும் மிகுந்திருப்பதனால் கயல் மீனுடன் போர் புரிந்து வென்றது என்றார்.

**பிணையொத்து :—**

பிணை—பெண்மான். பெண் மானைப் போன்ற மருண்ட பார்வையுடைய கண்கள்.

**பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து.** —திருக்குறள்.

**அலர்பொற் கமலத்தில் மைகண் :—**

அலர்ந்த அழகிய தாமரை மலர்போன்ற கண்கள்.

**நலமற்றறிவற் றுணர்வற்றனன் :—**

ஆன்ம லாபமாகிய நலத்தையும், நல்லறிவையும் மெய்யுணர்வையும் மாந்தர்கள் மாதர் மயலால் இழந்து விடுகின்றார்கள்.

**நற்கதி யெப்படி பெற்றிடுவேனோ ? :—**

"நலமான பரகதியை அடியேன் எவ்வாறு பெற்று உய்வேனோ?" என்று அடிகளார் ஏங்குகின்றார்.

**புயலுற்றியல் மைக்கடலிற்புகு கொக்கற :—**

கொக்கு—மாமரம். முடிவில் சூரபன்மன் கடலில் மாமரமாக நின்றான்.

**விடம்பிடித் தமலன் செங்கண்**
**வெங்கனல் உறுத்திப் பாணி**
**இடம்பிடித் திட்ட தீயில்**
**தோய்த்துமுன் இயற்றி யன்ன**
**உடம்பிடித் தெய்வம் இவ்வாறு**
**உருகெழு செலவின் ஏகி**
**மடம்பிடித் திட்ட வெஞ்சூர்**
**மாமுதல் தடிந்த தன்றே.** —கந்தபுராணம்.

**செயசித்திரமுத் தமிழுற்பவநற் செபமுற் பொருளுற்றருள் வாழ்வே :—**

திருஞான சம்பந்தரை முருகவேள் அதிட்டித்துச் செய்த திருவருளை இது குறிக்கின்றது.

**சிவதைப்பதி :—**

இரத்தினகிரிக்குச் சிவாயம் என்று பெயர் உண்டு.

**"சடைவிராய விருப்புச் சிவாயமே**
**சங்கரற்கு விருப்புச் சிவாயமே"**

—வாட்போக்கிக் கலம்பகம்.

**"சடை விராய இருப்பு உச்சி வாயமே"**

சிவபிரானுடைய சடையில் கலந்து உச்சியில் உள்ளது கங்கை. வாயம்—நீர்.

**"சங்கரற்கு விருப்பு சிவாயமே"**

சிவபிரானுக்கு விருப்பமான தலம் சிவாய மலையாகும்.

### கருத்துரை

இரத்தினகிரி மேவிய இளம் பூரணரே! அடியேன் நற்கதி பெற அருள் புரிவீர்.

## 113

**சுற்றகப டோடுபல சூதுவினை யானபல**
**கற்றகள வோடுபழி காரர்கொலை காரர்சலி**
**சுற்றவிழ லானபவி ஷோடுகடல் மூழ்கிவரு**
**துயர்மேவித்**

**துக்கசமு சாரவலை மீனதென கூழில்விழு**
**செத்தையென மூளுமொரு தீயில்மெழு கானவுடல்**
**சுத்தமறி யாதபறி காயமதில் மேவிவரு**
**பொறியாலே**

**சற்றுமதி யாதகலி காலன்வரு நேரமதில்**
**தத்துஅறி யாமலொடி யாடிவரு சூதரைவர்**
**சத்தபரி சானமண ரூபரச மானபொய்மை**
**விளையாடித்**

**தக்கமட வார்மனையை நாடியவ ரோடுபல**
**சித்துவிளை யாடுவினை சீசியிது நாறவுடல்**
**தத்திமுடி வாகிவிடுவேனுமுடியாதபத மருள்வாயே**

தித்திமித தீதிமித தீதிமித தீமிதத
தத்ததன தானதன தானனன தானனன
திக்குடுடு டூடமட டாடமட டூடுடுடு எனதாளம்
திக்குமுகி லாடஅரி யாடஅய னாடசிவ
னொத்துவிளை யாடபரை யாடவர ராடபல
திக்கசுரர் வாடசுரர் பாடமறை பாடஎதிர் களமீதே

எத்திசையு நாடியம னார்நிணமொ டாடபெல
மிக்கநரி யாடகழு தாட கொடி யாடசமர்
எற்றிவரு பூதகண மாடவொளி யாடவிடு வடிவேலா
எத்தியொரு மானைதினை காவல்வல பூவைதனை
சித்தமலை காமுககு காநமசி வாயனொடு
ரத்னகிரி வாழ்முருக னேயிளைய வாவமரர்
பெருமாளே.

## பதவுரை

தித்திமித தீதிமித தீதிமித தீமிதத தத்ததன தானதன தானனன தானன்ன திக்குடுடு டூடமட டாடமட டூடுடுடு என=தித்தி மித......டூடுடுடு என்ற ஒலியுடன், தாளம் திக்கு முகில் ஆட=திசைகளில் திரண்டு தாளம் ஒலிக்கவும், அரி ஆட=திருமால் ஆடவும், அயன் ஆட=பிரமதேவர் ஆடவும், சிவன் ஒத்து விளையாட=சிவபெருமானும் அதற்கு இசைந்து களிநடம் புரியவும், பரை ஆட=அம்பிகை ஆடவும், வரர் ஆட=சிறந்த முனிவர்கள் ஆடவும், பல திக்கு அசுரர் வாட=பல திசைகளிலும் இருந்த அசுரர்கள் மனம் வாடவும், சுரர் பாட=தேவர்கள் கீதங்கள் பாடவும், மறைபாட=வேதங்கள் துதி செய்யவும், எதிர் களமீதே=எதிர்த்து வந்த போர்க்களத்திலே எத்திசையும் நாடி=எல்லாத் திசைகளையுந் தேடிச் சென்று, யமனார்=கூற்றுவனார், நிணமொடு ஆட=சதைக் கொழுப்பில் ஆடவும், பெலம் மிக்க நரி ஆட=வலிமை மிகுந்த நரிகள் ஆடவும், கழுது ஆட=பேய்கள் ஆடவும், கொடி ஆட=காக்கைகள் ஆடவும், சமர் எற்றி வரு பூதகணம் ஆட=போரில் மோதி வருகின்ற பூதகணங்கள் ஆடவும், ஒளி ஆட=ஒளி வீசவும், விடு வடி வேலா=விடுத்தருளிய கூரிய வேலாயுதரே! எத்தி ஒருமானை=ஏமாற்றி ஒப்பற்ற மான் போன்ற வள்ளியின், தினை காவல் வல பூவைதனை=தினை காவலில் வல்ல நாகணவாய்ப்பறவை போன்ற வள்ளி பிராட்டியாரை, சித்தம் அலை காமுக=உள்ளத்தைக் கலக்குவித்த ஆசையுடையவரே! குகா=குகப் பெருமானே! நமசிவாயனொடு=சிவபெருமானுடன், ரத்னகிரி வாழ்

முருகனே = இரத்தினகிரியில் வாழ்கின்ற முருகக் கடவுளே! இளையவா = இளம்பூரணரே! அமரர் = தேவர்கள் போற்றுகின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! சுற்ற கபடோடு பல = சூழ்ந்துள்ள வஞ்சனைகள் பலவும், சூது வினை ஆன பல = சூது நிறைந்த தொழில்கள் பலவும், கற்ற களவோடு பழிகாரர் = கற்றுக்கொண்ட கள்ளச் செயலுடன் பழியையுடையவர்கள், கொலைகாரர் = கொலைகாரர்களாகிய இவர்களுடன் கூடி, சலி சுற்ற விழல் ஆன பவிஷோடு = சலிப்புற்று அலைந்து வீணான பெருமையுடன், கடல் மூழ்கி = துன்பக் கடலில் முழுகி, வரு துயர் மேவி = அதனால் வரும் துன்பத்தை அடைந்து, துக்க சமுசார = துக்கத்துடன் கூடிய குடும்ப வாழ்க்கையான, அலை மீனது என = கடலில் மீன்போல அலைந்தும், கூழில் விழு செத்தைஎன = கூழில் விழுந்த குப்பை போலக் கிடந்தும், மூளும் ஒரு தீயில் மெழுகு ஆன உடல் = மூண்டு எரியும் பெரிய நெருப்பில்பட்ட மெழுகு போல உருகும் உடல், சுத்தம் அறியாத பறி காயம் = தூய்மையே அறியாத பாரம் உடைய உடல், அதில் மேவி வரு பொறியாலே = இத்தகைய உடம்பில் பொருந்தியுள்ள மெய் வாய் கண் நாசி செவி என்னும் இந்திரியங்களால், சற்றும் மதியாத = சிறிதும் மதிக்காத,. கலி காலன் வரும் நேரம் அதில் = வலிய காலன் வருகின்ற நேரத்தில், தத்து அறியாமல் = இந்த ஆபத்து வருவதை அறியாமல், ஓடி ஆடி வரு = ஓடியாடி வருகின்ற, சூதர் ஐவர் = சூதாடிகளான ஐம்புலன்கள் ஐவர்கள், சத்தபரிச ஆன மணம் ரூபம் ரசம் ஆன பொய்மை = சப்தம் ஸ்பரிசம் மணம் ரூபம் ரசம் என்ற பொய் இன்பங்களில், விளையாடி = விளையாடி (அதன் காரணமாக), தக்க மடவார் மனையை நாடி = தகுந்த மாதர்களையும் அவர்களின் வீடுகளையும் தேடிச் சென்று, பல சித்து விளையாடு வினை = பல மாய வித்தைகளை அம்மாதருடன் ஆடுகின்ற தொழில், சீசி இது நாற = சீசீ என்று பலருக்கும் வெறுப்புண்டாக, உடல் தத்தி = என் உடல் வருத்தமடைந்து, முடிவு ஆகி விடுவேனோ = அடியேன் இறந்து படுவேனோ? முடியாத பதம் அருள்வாயே = அழிவில்லாத உமது திருவடியைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

தித்திமித தீதிமித தீதிமித தீமிதத தத்ததன தானதன தானனன தானனன திக்குடுடு டடமட டாடமட டுடுடுடு என்ற தாளங்கள் திசைகளில் திரண்டு ஒலிக்கவும், திருமால் ஆடவும், பிரமன் ஆடவும், சிவபிரான் இசைந்து விளையாடவும், பராசக்தி ஆடவும், முனிவர்கள் ஆடவும், பல திசைகளில் உள்ள அசுரர்கள் வாடவும், தேவர்கள் துதி செய்து பாடவும், வேதங்கள் துதி செய்யவும்; எதிர்த்து வந்த போர்க் களத்திலே எல்லாத் திசைகளிலுந் தேடிச் சென்று, கூற்றுவனார் தசைகளுடன் ஆடவும்,

வலிய நரிகள் ஆடவும், பேய்கள் ஆடவும், காகங்கள் ஆடவும், போரில் மோதி வருகின்ற பூதக் கூட்டங்கள் ஆடவும், ஒளி வீசவும், கூரிய வேலாயுதத்தை விட்டவரே! ஒப்பற்ற மான் போன்றவரும், தினைப்புனத்தைக் காவல் புரிவதில் வல்ல நாகணவாய்ப் பறவை போன்றவரும் ஆன வள்ளி பிராட்டியாரை ஏமாற்றி, அவருடைய உள்ளத்தை அலைத்த காமுகரே! குகமூர்த்தியே! சிவபெருமானுடன் இரத்தினகிரியில் வாழுகின்ற முருகக் கடவுளே! இளம் பூரணரே! தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! சூழ்ந்துள்ள வஞ்சனைகள் பலவும், சூது நிறைந்த செயல்கள் பலவும் கற்ற, களவுடைய பழிகாரரும் கொலைகாரரும் ஆகிய மாதருடன் கூடிச் சலிப்புற்று அலைந்து அலைந்து வீணான பெருமையுடன் துன்பக் கடலில் முழுகி, அதனால் துயரத்தை அடைந்து, கவலை தரும் குடும்பம் என்னும் கடலில் மீன்போல் அலைந்தும், கூழில் விழுந்த குப்பைபோலக் கிடந்தும், மூண்டு எரியும் பெரிய நெருப்பில் இட்ட மெழுகுபோல் உருகும் உடல்—தூய்மையில்லாத சுமையான உடல்—இத்த கைய உடலில் பொருந்திய மெய் வாய் கண் நாசி செவி என்ற ஐம்பொறிகளால், சிறிதும் மதியாமல் வலிமையான காலன் வருங்காலத்தில், இந்த இடர் வருகின்றதே என்று அறியாமல் ஓடியாடி வருகின்ற தூதாடிகளான சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்களால் வரும் பொய் யின்பங்களில் திளைத்து விளையாடி, தகுந்த மாதர்களையும், அவர்களது வீடுகளையும் தேடிச் சென்று, அவர்களுடன் பல மாய வித்தைகளை விளையாடுகின்ற தொழில், சீச்சீ என்று பலர் வெறுக்க, உடல் வருந்தி அடியேன் அழியலாமோ? உமது முடிவில்லாத திருவடியை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

சுற்ற கபடோடு :—

கபடு—வஞ்சனை.

பொருட் பெண்டிகளைச் சுற்றி வஞ்சனையும் சூதும் வாதும் களவும் பழி பாவங்களும் இருக்கும்.

பொறியாலே :—

மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐம்பொறிகளால் மக்கள் அலைப்புண்டு இடர்ப்படுகின்றார்கள்.

"ஓரவொட்டார் ஒன்றை உன்னவொட்டார் மலர் இட்டுனதாள்
சேரவொட்டார் ஐவர் செய்வ தென்யான்"

—கந்தரலங்காரம்.

**சூதனைவர் :—**

இவர்கள் ஐம்புல வேடர்கள்.

"ஐம்புலவேடரின் அயர்ந்தனை" —சிவஞானபோதம்.

**தித்திமிதி......டூடுடு என தாளம் :—**

இது போர்க்களத்தில் ஒலிக்கின்ற தாள வகைகள்.

**திக்குமுகிலாட :—**

திசைகளில் ஒலி திரண்டு ஒலிக்க. முகில்—திரள்.

**அரியாட......பூத கணமாட :—**

அப் போர்க்களத்தில் ஆனந்த மிகுதியால் அரி, அயன், அரன், உமை, முனிவரர், இயமன், பேய், நரி, காகம், பூதம் ஆகிய அனைத்தும் ஆடி மகிழ்ந்தன.

**எத்தி :—**

எத்துதல்—ஏமாற்றுதல்.

முருகவேள் வள்ளியிடம் வேடனாகவும், வேங்கை மரமாகவும்; வளையல்காரனாகவும், தவ முதியோனாகவும் சென்று ஏமாற்றித் திருவிளையாடல் புரிந்தருளினார்.

**சித்தமலை காமுக :—**

சித்தம் அலை காமுக.

வள்ளியின் சித்தத்தை அலைத்த—கலக்கிய காமுகரே!

**நமசிவாயன் :—**

சிவபெருமானுடைய திருநாமங்களில் இது சிறந்தது.

"நக்கர்தம் நாமம் நமச்சிவாயவ் வென்பார் நல்லரே"
"நாதன் நாமம் நமச்சிவாயவே" —சம்பந்தர்.

## கருத்துரை

இரத்தினகிரி மேவும் இளம் பூரணரே! உனது அழியாத அடிமலரை அளித்தருள்வீர்.

## 114

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனு மாறெனைப் பெருவாழ்வின்
முதத்தியே சேர்வதற் கருள்வாயே

உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் தினிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே.

### பதவுரை

உத்தம அதான = உத்தம குணத்தைப் பற்றிக்கொண்டுள்ள சற்குணர் நேயா = நல்லியல்புடையோரது நண்பரே! ஒப்பு இலா = சமானமில்லாத, மா = பெருமைபொருந்திய, மணிக்கிரிவாசா = இரத்தினகிரியில் வாழ்பவரே! வித்தகா = பேரறிவாளரே! ஞானசத்திநிபாதா = திருவருள் ஞானம் பதியச் செய்பவரே! வெற்றிவேல் ஆயுத பெருமாளே = வெற்றியைத் தருகின்ற வேற்படையையுடைய பெருமையின் மிக்கவரே! யான் = அடியேன், பத்தியால் உனைப் பற்றி = அன்பினால் உறுதியாகப்பற்றி, திருப்புகழ் பலகாலும் பாடி = தேவரீருடைய திருப்புகழைப் பலகாலும் பாடி, முத்தனும் ஆறு = ஜீவன் முத்தனாக ஆகுமாறு, எனை = அடியேனை, பெருவாழ்வின் முத்தியே சேர்வதற்கு = இடையறு இன்ப வாழ்வுடன் கூடி சிவகதியில் சேர்ந்து உய்வுபெற, அருள்வாயே = திருவருள் புரிவீர்.

### பொழிப்புரை

உத்தம குணங்கள் பொருந்திய சற்குண சீலர்களுடைய நேயரே! உவமையில்லாத பெருமை மிக்க இரத்தினகிரியில் வாழ்பவரே! பேரறிவாளரே! திருவருள் ஞானத்தைப் பதிய வைப்பவரே! வெற்றி வேற்படையை யுடைய பெருமித முள்ளவரே! அடியேன் தேவரீரை அன்பினால் விடாதுபற்றி, திருப்புகழைப் பலகாலும் பாடி, ஜீவன் முத்தனாக ஆகுமாறு பெருவாழ்வாம் முத்தியைச் சேர்ந்து உய்வுபெற திருஅருள் புரிவீர்.

### விரிவுரை

**பத்தியால்......பற்றி :—**

மூவருந் தேவருங் காணு முழு முதலாகிய முருகவேளைப் பத்தியாலேயே பற்ற வேண்டும். அவன் "பத்திவலையில் படு

வோன் காண்க", "பத்திசெய் யடியவரைப் பரம்பரத் துய்ப்பவன்", பற்றற்ற அப்பரமபதியே ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடாக நிற்பவன்.

**முத்தன் :—**

இம்மையிலேயே முத்தி பெற்றவன்.

**மணிக்கிரி :—**

இரத்தினகிரி; இது வாட்போக்கி என்றும் பெயர் பெறும். தேவாரம் பெற்ற திருத்தலம். திருச்சி ஜில்லா, குளித்தலை இரயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கில் ஐந்து மைல் தொலைவில் விளங்குகின்றது.

**சத்தி நிபாதா :—**

சத்தி—அருள். நி—மிகுதி. பாதம்—பதிதல். திருவருள் ஞானத்தை ஆன்மாக்களுக்குப் பதிய வைப்பவர்.

## கருத்துரை

சற்குணர் நேயரே! வித்தகரே! இரத்தினகிரி வாசரே! சத்திநிபாதரே! வேலாயுதரே! அடியேன் பத்தியால் உம்மைப் பற்றி, திருப்புகழைப் பாடி முத்திபெற அருள்வீர்.

---

## தல விளக்கம்

1. ஸ்ரீசைலம் ஆந்திர நாட்டில் கர்நூல் ஜில்லாவில் உள்ளது. ஓங்கோல், குண்டூர், குண்டக்கல், கர்நூல், திருப்பதி ஆகிய ஊர்களிலிருந்து நேர் பஸ் வசதி உண்டு. எல்லா வசதிகளும் உண்டு. சிவராத்திரியில் தரிசனம் செய்ய ஏராளமான மக்கள் செல்வர்.

2. திருவேங்கடம் என்னும் தலம் திருப்பதி—திருமலை என வழங்கப்படும் பிரபல க்ஷேத்திரம். ஆந்திர நாட்டில் உள்ளது. இப்பொழுது முருகன் கோயில் மறைந்து திருமால் திருப்பதி, யாக விளங்குகின்றது. சென்னையிலிருந்து புகைவண்டி அல்லது பஸ் மூலம் செல்லலாம். எல்லா வசதிகளும் நிறைந் தது.

3. திருத்தணி என்னும் தலம் சென்னையிலிருந்து, பம்பாய் போகும் புகைவண்டி வழியில் அரக்கோணம் புகைவண்டி நிலையத்திற்கடுத்தாற்போல் உள்ளது சென்னையிலிருந்து புகைவண்டி மூலமும் பஸ் மூலமும் செல்லலாம். எல்லா வசதி களும் உள்ள பட்டினம். மற்றும் இத்தலத்தின் விசேடங்கள் எல்லாம் புத்தகத்தில் விரிவுரைப் பகுதியில் கொடுக்கப்பட் டுள்ளது.

